# இளையோர் உளவியல்

கார்ல் சி. காரிசன்

தமிழாக்கம்
தி. இரா. அரங்கராசன்








தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை—45

# இளையோர் உளவியல்-I

## (PSYCHOLOGY OF ADOLESCENCE-I)

ஆசிரியர்

**கார்ல் சி. காரிசன்,**

கல்வித்துறைப் பேராசிரியர், ஜியார்ஜியா பல்கலைக் கழகம்.

தமிழாக்கம்

**தி. இரா. அரங்கராசன், எம்.ஏ.,**

உளவியல் விரிவுரையாளர்,

அரசினர் கலைக் கல்லூரி, கோவை.




**தமிழ் வெளியீட்டுக் கழகம்**

தமிழ்நாடு - அரசாங்கம்

# அணிந்துரை

(திரு. எம். பக்தவத்ஸலம், தமிழக முதலமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி நான்கு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ, வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவருகின்றனர். நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித்தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே திருப்திகரமாக நடைபெற்றுவருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல் தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டுவருகிறது.

இவற்றுள் ஒன்றான **இளையோர் உளவியல்-I** என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 45ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 80 நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலையாசனத்தில் அமர்ந்துள்ளாள். எனவே, இவ்வன்னையை வாழ்த்துவோமாக. உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

**எம். பக்தவத்ஸலம்.**

# இளையோர்

# உளவியல்

'இம்மை உலகத் திசையொடும் விளங்கி
மறுமை யுலகமும் மறுவின்று எய்துப
செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்மலோர்'

—அகம் : 66.

# நூலாசிரியரின் முன்னுரை

இளையோர்களைப்பற்றிய அண்மை ஆய்வுகளிலிருந்து செய்திகள் தேர்ந்தெடுக்கப்பெற்று, அவைகளை இந் நூலில் சேர்க்கவே ஐந்தாவது பதிப்பு எழுதப்பெற்றது. அண்மையில் வெளியிடப்பெற்ற குறிப்புகள் பெரிய அளவில் இருந்ததனால், முன்னைய பதிப்பில் அளிக்கப்பெற்ற செய்திகளை மீண்டும் மதிப்பிடவேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஆசிரியரின் அனுபவத்தின் விளைவினாலும், நான்காவது பதிப்பினைப் பயன்படுத்திய பலரது கருத்துக்களினாலும், நான்காவது பதிப்பில் அளிக்கப்பெற்ற செய்திகள் திருத்தியமைக்கப்பெற்று, திரும்பக் கூறுதல் கூடுமானவரை தவிர்க்கப்பெற்று, இளையோர் பருவத்தின் பல திறப்பட்ட நிலைகளைக் கோவையாகத் திறம்பட ஆய்வு செய்யும் ஏதுவாகவும் அமைக்கப்பெற்றது.

முன்னைய பதிப்புகள் போன்றே, இப் பதிப்பின் குறிக்கோளும் இருதிறப்பட்டதாகும். முதற்கண், என் அனுபவம் காரணமாக நான் கொள்ளும் நம்பிக்கை என்னவெனில், பின்னிளையோர் பருவத்திலுள்ள பல கல்லூரி மாணவர்கள் இந் நூலிலுள்ள பொருளிற்காகவும் கையாளப்பெற்ற முறைக்காகவும் வரவேற்பார்கள் என்பதேயாகும். இப் பதிப்பில், இளையோர்களது வளர்ச்சிக்குரிய பணிகள், இளையோர் பிரச்சினைகள், தன்னைப்பற்றிய கருதுகோள் ஆகியவற்றிற்கு முக்கிய கவனம் அளிக்கப்பெற்றது. இந் நூல் இளையோர்களின் வழிகாட்டலிலும் பராமரித்தலிலும் அக்கறை கொண்டுள்ளவர்களுக்குப் பயன் மதிப்புள்ளதாக இருக்குமாறும் அமைக்கப்பெற்றுள்ளது. வீட்டு வேலைகளில், தொழில் அல்லது பொழுதுபோக்கு வேலைகளில் மூழ்கியுள்ள பெற்றோர்களும் ஆசிரியர்களுங்கூடப் பெரும்பாலும் இளையோர் சந்திக்கும் தொல்லைகளை உணர்வதில்லை. இந் நூல் பெற்றோர்களும் ஆசிரியர்களும் இளையோர்களைப்பற்றி நல்ல கருத்தினைக் கொள்வதற்கும் அவர்கள் குழந்தைப் பருவத்திலிருந்து முதியோர் பருவத்திற்கு நிலைமாறும் முக்கியத்துவத்தினை முழுமையாக உணர்வதற்கும் உதவும் என்று நான் நம்புகின்றேன்.

இளையோர்களைப்பற்றி நடக்கின்ற அடிப்படைப் பரிசோதனை ஆய்வுகள் தேர்ந்தெடுக்கப்பெற்று அளிக்கப்பெற்றதால், தொடர்ச்சியாக வந்துகொண்டிருக்கும் புதிய ஆய்வுகளைத் திறனாய்வு செய்து அறிந்து கொள்வதற்கும் அடிப்படையை உருவாக்குகின்றது. பொது அறிவினையே பெற முயலும் மாணவன், இந் நூலில் அளிக்கப்பெற்ற உண்மைகளையும் அவைகளைப் பெற்ற ஏதுக்களின் பட்டியலையும் காண்பான். முற்போக்கான மாணவன் அல்லது விழிப்பான மாணவன் பக்க இறுதியில் அளிக்கப்பெறுகின்ற ஏதுக்களின் பெயர்கள், அவனது ஆய்விற்குப் புதிய வினைமுறைகளை வளர்த்துக் கொள்வதற்குப் பயனுள்ளதாகவும், இத் துறையில் வந்துள்ள புதிய கருத்துகளையும் முடிவுகளையும் பகுத்தாய்வதற்கு உதவியாகவும் இருப்பதை உணர்வான்.

நான் பீபாடி கல்லூரியில் (Peabody College) பிறப்பு, மரபு, உளவியல் உயர்வுப் படிப்பு மாணவனாக இருந்தபொழுது என் உள்ளத்தில் இவ்வாறு ஒரு நூல் எழுதவேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. இங்குதான் நான் முதலில் ஹால் அவர்களின் எழுத்துக்களை நன்றாக அறியும் வாய்ப்புக் கிடைத்தது. அவருடைய தனியாள் வளர்ச்சியினைப்பற்றிய உயிரியல் கருதுகோளும் வளரும் குழந்தையைப்பற்றிய அறிவியல் ஆய்வும் என்னை மிகவும் கவர்ந்தன. இப் பதிப்பு முழுவதிலும், நான் படித்த நாட்களிலும் இளையோர் உளவியலைக் கற்பித்தபொழுதும் கொண்ட வளர்ச்சி, முதிர்ச்சிபற்றிய சில அடிப்படைக் கொள்கைகளைத் தொடர்ச்சியாகக் கடைப்பிடித்துள்ளேன். புள்ளியியல் திட்டங்களினாலும் ஒரே மாதிரியாக உள்ள தனித்த சோதனைகளினாலும் கருதப்படவியலாத கருத்தான இளையோன் என்பவன், ஒரு முழுமையான ஆளுமையினைக் கொண்டவன் என்று வேறு எந்தக் காலத்திலும் இல்லாத அளவு இன்று கருதப்பெறுகின்றது. இதனால், சோதனைகளும் புள்ளியியல் அளவீடுகளும், இளையோரை ஆய்வு செய்ததில் எந்த இடத்தினையும் கொண்டிருக்கவில்லை என்று பொருள்படவில்லை. அவைகள் மிக முக்கியமான இடத்தை வகிக்கின்றன. ஆனால் வளர்கின்ற, முதிர்ச்சியடைகின்ற தனியனைப்பற்றி அவனுடைய பிறப்பு, மரபு அடிப்படையிலும் அவனைப் பிறப்பிலிருந்து பாதிக்கின்ற சூழ்நிலைப்பகுதிகளின் அடிப்படையிலும் நன்கு அறிந்துகொள்ள வேண்டும்.

அண்மையில் நடைபெற்ற ஆய்வுகளிலிருந்தும் இன்றுள்ள பல பொருள்களை அளிக்கும் ஏதுக்களிலிருந்தும் அதிகமான அளவில் மேற்கோள்கள் எடுத்துள்ளேன். இவ்வாறு இந்நாட்டில் நடைபெறும் இளைஞர்பற்றிய நிகழ்ச்சிகள், இளையோர்களின் வாழ்க்கையைப்பற்றிய

பல்வேறு நிலைகளின் மதிப்பீடுகள், இளையோர்களைப்பற்றிய மருத்துவமனை ஆய்வுகள், நெடுக்குவகை ஆய்வுகள், பிரதி செய்கின்ற ஆராய்ச்சி ஆய்வுகள் ஆகியவை மதிப்பிடப்பெற்று அவைகளைப் பயன்படுத்தியதற்கும் நன்றி தெரிவிக்கப்பெற்றது. ஆனால், இவ்வாறு நான் நன்றி தெரிவிப்பதைத் தவிர, நான் நன்றிக் கடன்பட்டுள்ள இவ்வேதுக்களுக்குப் போதிய அளவு மதிப்பினை அளிப்பது கடினமாகும். கடிதப் போக்குவரத்துமூலமும், நேரடித் தொடர்புகள்மூலமும் வெளியிடப்பெற்ற நூல்கள்மூலமாகவும் நான் பயனுள்ள செய்தியையும் தனித்த உதவியையும் பெற்றுள்ளேன். சில ஆய்வுகளிலிருந்து குறிப்புகளைப் பயன்படுத்தியதற்காகவும் மேற்கோள்களைப் பயன்படுத்தியதற்காகவும், நூலாசிரியர்களுக்கும் வெளியிட்டவர்களுக்கும், பல வகையில் உதவியவர்களுக்கும் என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். இந் நூலினை முதலில் பதிப்பித்த ஆண்டான 1934-ல் இருந்து மீண்டும் 1940, 1946, 1951 ஆகிய ஆண்டுகளில் வெளிவந்த பதிப்புகளுக்குப் பல கருத்துகளை அளித்த பல இளையோர் உளவியல் மாணவர்களுக்கு மிக்க நன்றி.

ஏதன்ஸ்,
ஜியார்ஜியா.

**கார்ல் சி. காரிசன்.**

# தமிழாக்கியோனின் முன்னுரை

கார்ல் சி. காரிசன் ஆங்கிலத்தில் எழுதிய இளையோர் உளவியல் (Psychology of Adolescence) எனும் நூலின் தமிழாக்கமே இந் நூலாகும். அமெரிக்க இளையோர்களுக்காகவே எழுதப்பெற்ற இந் நூல் இன்று ஓர் உளவியல் இலக்கியமாகத் திகழ்கின்றது. அதனை மொழிபெயர்க்கும் பேற்றினை எனக்களித்த தமிழ் வெளியீட்டுக் கழகத்தாருக்கு என் நன்றி இந் நூல் மாணவர்களுக்கு மட்டுமன்றிப் பொது மக்களுக்கும் பயன்படும் வகையில் தமிழாக்கப்பெற்றுள்ளது.

இந் நூலைத் தமிழாக்கம் செய்ய உதவிய என் துணைவியார் திருமதி காந்தாமணி அரங்கராசன், B.A. (Hons.), B.T., அவர்களுக்கும் ஆசிரிய, மாணவ நண்பர்களுக்கும் எனது நன்றி.

**தி. இரா. அரங்கராசன்,**

---

குறிப்பு: இந் நூலுள் காணப்படும் வளர்ச்சியைக் காட்டும் வரைபடங்கள் யாவும் அமெரிக்கத் தரங்களை அடிப்படையாகக் கொண்டவை. மூல நூலுள் காணப்படும் நிழற் படங்கள் விடப்பட்டுள்ளன.

# பொருளடக்கம்

பகுதி I

# 1. இளையோர் பருவம்
## (The Adolescent Age)

### இளையோர் பருவம் : பொருளும் உட்கருத்தும்

**இளையோர் பருவத்தின் பொருள்**

இளையோர் பருவம்பற்றிய பல்வேறு வரையறைகளை நன்காராய்ந்தால், இளையோர் பருவத்தினைப் பொதுவாக ஆய்வதற்குரிய அடிப்படையை உருவாக்குகின்ற உடலைச்சார்ந்த உண்மைகளில், சிறிதேனும் கருத்து வேறுபாடுகள் இல்லை எனப் புலப்படுகின்றது. சாதாரணமாக, இளையோர் பருவத்தைப் 'பருவம்' அடைகின்ற காலம் என்று நினைக்கின்றார்கள். இங்குப் 'பருவம்' என்பது தனியனின் (individual) இனப்பெருக்கச் சக்திகளின் வளர்ச்சியைக் குறிப்பதாயின் அது உண்மையேயாகும். ஒரு தனியனின் வாழ்வில் இப்பகுதியானது அவனைக் குழந்தை என்றோ முதியோன்என்றோ கருத இயலாத வகையில் உள்ள காலமாகும். தனியன்களின் பதின் (teen) காலத்தைப்பற்றிய உற்றுநோக்கல்கள், பட்டறிவுகள் அவனை ஒரு குறிப்பிட்ட காலத்தில் குழந்தையாகக் கருத இயலாது எனக் கூறுகின்றன. அவ்வாறு கருதுவதையும் இளையோன் விரும்புவதில்லை. மேலும், இத்தனியன் முழுமையான முதிர்ச்சியையும் அடையவில்லை யாதலின் அவனை முதியோன் என்று அழைக்கவும் இயலாது. ஆதலின், குழந்தைப் பருவத்திலிருந்து முதியோர் பருவத்திற்கு மாறுகின்ற இப் பருவத்தினனை இளையோர் பருவத்தினன் என்று கூறப்படுகின்றது.

ஜி. ஸ்டான்லி ஹால் (G. Stanley Hall) என்பார் முதன்முதலாக இப் பருவ வாழ்க்கையினைப்பற்றி மனங் கவர்கின்ற வகையில் விளக்கம் தந்தார். அப் பருவத்தின் தனிப்பட்ட குண இயல்புகளையும், படிமானங்களையும், சிறப்புப் பண்புகளையும் விளக்கினார். இப் பருவத்தைப்பற்றி 'குமுறல்களும் அழுத்தங்களும்' கொண்ட பருவம் என்று எழுத்துக்களைப் படித்த அனைவரும் கவரப்பெற்றனர். அமெரிக்க இளையோர்

உளவியல் மாணவர்களில் பெரும்பகுதியினரது எண்ணத்தில் பல ஆண்டுகளாக இவரது கருத்துகள் ஆதிக்கம் செலுத்திவருகின்றன.[1] அவர் இறப்பதற்கு மூன்று ஆண்டுகளுக்கு முன்னர், இத் 'துடிக்கும் பருவத்தினன்' (flapper) தன்மையைத் தெளிவாக விளக்கினார்.[2] இத் துடிக்கும் பருவம் பதின் ஆண்டுகளில் துவங்குவதாகக் கூறினார். இக் கலைச் சொல்லுக்கு வரையறையாக அகராதியிலுள்ள பொருளைக் குறிப்பிடுகின்றார். 'கூண்டில் இருக்கும்பொழுதே, மெல்லிய இறக்கைகளை வைத்துக்கொண்டு பறக்க முயல்வது (பயனற்ற முயற்சியில் ஈடுபடுவது) போலாகும்.' அவரது இளையோர் பருவக் கோட்பாட்டினைப் பல்வேறு இளையோர் உளவியல் மாணவர்கள் தெளிவாகவும் சில சமயங்களில் மிகைபடவும் விளக்கியுள்ளனர்.

மேற்கத்திய நாகரிகத்தில், இளையோர் பருவம் என்பது குழந்தைப் பருவத்தினின்று முதியோர் பருவத்திற்கு மாறுகின்ற பருவம் என்று கருதப்படுகின்றது. இந் நிலைமாற்றம் உடலியல் மாறுதல்கள், மனவெழுச்சி மாறுதல்கள், சமூக—பால் மாறுதல்கள், கல்வி அறிவு மாறுதல்கள் ஆகியவைகளைக் கொண்டதாகும். இது நமது மரபு வழியில் குடும்பப் போராட்டங்களும் பரவலாக இருக்கின்ற சமூக மனவெழுச்சி வெடிப்புகளும் உடன்வருகின்ற உடலியல் நிலையாகும்.

இம்மாறுதல்கள் திடீரென்று தோன்றுபவை எனக் கருதலாகாது. மனவெழுச்சி நிலையிலும் சமூக நிலையிலும் முதிராத தனியன், இவ் இளையோர் ஆண்டுகளில்தான், முதியோர் பருவத்திற்கு ஏற்ற உடல், அறிவு வளர்ச்சிகளை நெருங்குகின்றான். 20ஆம் நூற்றாண்டின் துவக்கத்தில் உயிரியல் வளர்ச்சிக்குத்தான் அதிக முக்கியத்துவம் தரப்பெற்றது. ஆனால், இதற்கு மாறாக இப்பொழுது இளையோரின் வாழ்க்கையிலும் பிரச்சினைகளிலும் பண்பாடு முக்கியப் பங்கு வகிப்பதாகக் கருதப்படுகின்றது. ஆதலின், இளையோர் பருவத்தை, குழந்தைப் பருவத்தினின்று முதியோர் பருவத்திற்கு மாறும்பொழுது ஏற்படுகின்ற உயிரியல் பண்பாட்டு ஏதுக்களின் இடைத் தொடர்புப் பெருக்கமாகக் கருதலாம்.

## துவக்கநிலை இளையோர் பருவத்தின் உடல் அறிகுறிகள்

சிறுவர் சிறுமியர்களின் உடல் வளர்ச்சிபற்றிய ஆய்வுகள், பூப்படையும் காலத்திற்குச் சற்றுமுன் அவர்களது உயரம் தொடர்ந்து வளர்ச்சியடைவதாகக் காட்டுகின்றன. இது அதிகாரம் 3-ல்

[1] G. S. Hall, Adolescence (2 vols.), New York: Appleton-Century-Crofts, Inc., 1904.

[2] G. S. Hall, 'Flapper Americana Novisscina', Atlantic Monthly, 1922, Vol. 129, pp. 771—780.

நன்குக விளக்கப்பட்டிருக்கின்றது. பூப்படைதல் சிறுவர்களைக் காட்டிலும் சிறுமியரிடம் சீக்கிரமே தோன்றுவதால் உயரத்தில் விரைவான வளர்ச்சி அவர்களிடம் சீக்கிரமே ஏற்படுகிறது. பள்ளிகளில் 7-வது 8-வது படிவ மாணவர்குழுவை உற்று நோக்கினால் இவ் வுண்மையை அறியலாம். இச் சிறுமியர் 12, 13, 14-வது வயதுகளில் அவ் வயதுடைய சிறுவர்களுக்குச் சமமான அல்லது அதிகமான உயரமுடையவர்களாக இருப்பார்கள்.

பூப்படைதலுக்கு முன்னர் பருமனின் வளர்ச்சியின் வேகத்தில் குறிப்பிடும்படியான கூடுதல் இருக்கின்றது. சில இளையோர்கள் ஓர் ஆண்டில் 20-லிருந்து 30 பவுண்டுகூட வளர்ச்சி பெறுகின்றார்கள். மேலும், சிறுமியர் தங்கள் வயதுநிலையிலுள்ள சிறுவர்களை, வளர்ச்சியில் இரண்டு மூன்று ஆண்டுக் காலத்தில் கடந்துவிடுகின்றார்கள். இவ் வளர்ச்சிப் பெருக்கத்துடன் உடல் உறுப்புகளின் விகிதங்களிலும் முக்கியமான மாற்றங்கள் ஏற்படுகின்றன. முதலில் கை, கால்கள் விரைவான வளர்ச்சியைப் பெறுகின்றன. அதைத் தொடர்ந்து உடற் பகுதியும் விரைவாக வளர்ச்சி பெறுகின்றது. இளையோர் வளர்ச்சியில் கை, கால், மூக்கு ஆகியவையும் முக்கியப் பங்கு கொள்கின்றன. சிறுவன் 13 அல்லது 14 வயதை அடையும்பொழுது, அவனது கைகளும் கால்களும் முதிர்ச்சியின் முழு வளர்ச்சியில் பெரும் பங்கை அடைந்து விடுகின்றன.

சிறுமியின் வளர்ச்சியைத் துவக்கத்திலேயே அறிவிப்பனவற்றில், முலைகளின் வளர்ச்சியும் ஒன்றாகும். பால்மடிக் காம்பானது (mammary nipple) பிறந்த மூன்று ஆண்டுகள்வரை பொதுவாகச் சுற்றுப்புறமுள்ள தோலின் வடிவத்திற்குமேல் எழும்புவதில்லை. இப் பருவத்திற்குப்பின் காம்பு சுற்றுப்புற வடிவத்தைக் காட்டிலும் சிறிது எழும்பி நிற்கிறது. பொதுவாக, ஒரு சிறுமிக்குப் பத்தாண்டுகள்வரை இதைக் காட்டிலும் குறிப்பிடத்தக்க மாறுதல் ஏற்படுவதில்லை. இதற்குப் பின்புதான் 'மொட்டுநிலை' தோன்றுகிறது. இதைத் தொடர்ந்து 'தொடக்க முலை' (primary breast) வளர்ச்சி ஏற்படுகிறது. இவ்வமயம் காம்பிலும் காம்பைச் சுற்றியுள்ள தோலிலும் கொழுப்பு அதிகமாகித் தொடக்கமுலை தோன்றுகிறது.

## உடல் மாறுதல்களின் காலம்

இளையோர் பருவத் துவக்கத்தில் குறிப்பிடும்படியான உடல் மாறுதல்கள் தோன்றுகின்றன. அதிகாரங்கள் இரண்டிலும் மூன்றிலும் இம் மாறுதல்களின் தன்மையும் வரம்பும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. இளையோர் பருவத்தின் துவக்கத்தைக் குறிக்கின்ற முக்கிய மாறுதல்கள் பால் சுரப்பிகளைப் பொறுத்ததாகும். சிறுமியரின் இளையோர் பருவத் துவக்கத்தைப் 'பூப்புப்போக்கு' எனப்படும் முதல் மாதப்

போக்கு குறிப்பிடுகின்றது. இதுதான் பூப்படையும் பருவமாகும். பூப்படையும் காலம்பற்றி நடந்த ஆய்வுகள், பூப்படையத் துவங்கும் காலம் குறிப்பிடத்தக்க மாறுந்தன்மைகள் கொண்டது என்றும் இரு பாலாருக்கு மிடையே அதிகமான வேறுபாடுகள் இருக்கின்றன என்றும் குறிப்பிடுகின்றன. ஆயினும், நன்கு ஆராய்ந்தால், பால்களைப்பற்றிக் கூறப்படுகின்றவைகள் ஒன்றின்மேல் ஒன்று படிந்தனவாய் இருக்கின்றன. சிறுமியர்களுக்குப் பூப்படைதல் 12-லிருந்து 15 வயதிற்குள் ஏற்படுகின்றது. சிறுவர்களுக்கு அதன்பின் ஒன்று அல்லது இரண்டு ஆண்டுகள் கழித்து ஏற்படுகின்றது. சிறுவர் அல்லது சிறுமியர் குழு, பூப்படையத் துவங்குகின்ற வயதில் அதிகமான வேறுபாடுகள் இருப்பதைக் காட்டும்.




படம் 1-1.

*357 தாயார்களுடையனவும் அவர்கள் புதல்விகளுடையனவுமான சராசரிப் பூப்புப்போக்கு வயதுகளும் சதவீதப் பங்கீடுகளும்.* (F. K. Shuttleworth, 'The Adolescent Period', Monographs of the Society for Research in Child Development, 1938, Vol. 3, No. 3, *என்னும் நூலில் படம் 113-ல் இருந்து எடுக்கப்பட்டுள்ளது.)*

பெண்களுக்குப் பூப்படையும் வரம்பு பத்து அல்லது அதற்கு மேற்பட்ட ஆண்டுகளாகவும் இருக்கலாம். இது வரைபடம் 1—1இல் காணப்படுகின்றது. இவ் வரைபடம் 357 தாயார்கள், அவர்களுடைய 680 பெண் குழந்தைகள் ஆகியவர்களின் பூப்புப் போக்கினை

அடையும் சராசரி வயதையும் வயதின் பங்கீட்டையும் குறிக்கின்றது.[3]

சிறுவர்கள் பூப்படையத் துவங்கும் காலத்தைச் சரிவரக் கூற ஒரு திட்டமிட்ட முறை கிடையாது. ராம்சே (Ramsey) அளிக்கின்ற ஆய்வில் 10-லிருந்து 20 ஆண்டுகள் வரையுள்ள 291 சிறுவர்களுடன் நேரடி உரையாடல்மூலம் முழு வரலாறுகள் பெறப்பட்டன.[4] இச் சிறுவர்கள் அமெரிக்க நாட்டின் நடுமேற்கு நகரத்தைச் சார்ந்த நடுத்தர அல்லது உயர்ந்த சமூகப் பொருளாதாரக் குடும்பங்களைச் சார்ந்தவர்களாவர். அட்டவணை 1-1, இப் பையன்களின் பால் வளர்ச்சியின் வெவ்வேறான நிலைகளைக் குறிக்கின்றது.

## அட்டவணை 1—1

பால் வளர்ச்சியின் வெவ்வேறு இயல்புகளைக் காட்டுகின்ற ஒவ்வொரு வயதுக் குழுச் சிறுவர்களின் சதவீதம்.

| வயதுக் குழு | விந்து வெளியாதல் | குரல் மாற்றம் | இரவில் விந்து வெளியாதல் | பூப்பு மயிர் |
|---|---|---|---|---|
| 10 | 1·8 | 0·3 | 0·3 | 0·3 |
| 11 | 6·9 | 5·6 | 3·7 | 8·4 |
| 12 | 14·1 | 20·5 | 5·3 | 27·1 |
| 13 | 33·6 | 40·0 | 17·4 | 36·1 |
| 14 | 30·9 | 26·0 | 12·9 | 23·8 |
| 15 | 7·8 | 5·5 | 13·9 | 3·3 |
| 16 | 4·9 | 2·0 | 16·0 | 1·0 |

இக் குறிப்புகள் எல்லாப் பால்குண இயல்புகளும் ஒரு சிறுவனிடத்து ஒரே சமயத்தில் தோன்றுவதில்லை என்பதைக் காட்டுகின்றன. ஆயினும், 13ஆவது வயதை ஒவ்வொரு பால்குண இயல்பும்

[3] H. N. Gould and M. R. Gould, 'Age of First Menstruation in Mother and Daughters,' Journal of the American Medical Association, 1932, Vol. 98, pp. 1349-1352.

[4] G. V. Ramsey, 'The Sexual Development of Boys,' American Journal of Psychology, 1943, Vol. 56, pp. 217-233.

தோன்றுகின்ற காலம் எனக் கருதலாம். ஆனால், ஒவ்வொரு குண இயல்பும் பத்திலிருந்து பதினாறுவது வயதுவரைப் பரவியிருக்கின்றது.

### தனித்த பொருத்தப்பாட்டுப் பிரச்சினைகள் தோன்றும் காலம்

மாறுதல்கள் கொண்ட காலம், பிரச்சினைகள் கொண்ட காலமாக இருப்பது பெரும்பாலும் நிகழக்கூடியதே யாகும். இளையோர் பருவம் முதிர்ச்சியும், வளர்ச்சியும், மாறிய அக்கறைகளும், பேரவாக்களும் கொண்ட பருவமாதலின் அத்துடன் உள்ளார்ந்த தன்மையுடைய தொல்லைகளும் இருக்கும். இனிவரும் அதிகாரங்களில் இளையோர் வாழ்க்கையின் பல்வேறு நிலைகளின் வளர்ச்சிகளைப்பற்றி கூறுகின்ற முழு விவரங்களைக் காணலாம். நமது கூடுதலான சிக்கல்வாய்ந்த சமூகப் பொருளாதார அமைப்பு, முன்னைய பருவங்களில் இல்லாத பிரச்சினைகளைப் புகுத்தியுள்ளது. எந்த ஒரு பயிற்சித் திட்டமும் பயனுள்ளதாய் அமைய முதற்கண் யாருக்காக அப் பயிற்சித் திட்டம் ஏற்படுத்தப்பட்டதோ அவர்களது பிரச்சினைகளையும் தேவைகளையும் மனதிற் கொண்டு அணுகுதல்வேண்டும்.

மனித வளர்ச்சியைப்பற்றிக் கடந்த இரண்டு பத்தாண்டுகளாக (decades) நடந்த ஆய்வுகள் எல்லாம், வளர்ச்சி ஒரு தொடர்ச்சியான நிகழ்ச்சி என்றே காட்டுகின்றன. மேலும், ஒரு பருவத்தை அடுத்த பருவத்திலிருந்து அல்லது முந்தைய பருவத்திலிருந்து மாறுபட்டது அல்லது தனித்துள்ள ஒன்று என்று ஒதுக்கிவைக்க முடியாது. இக் கருத்து இதிலும் இன்னும் வரவிருக்கின்ற அதிகாரங்களிலும் வலியுறுத்தப்பெறுகின்றது. இளையோர் பருவத்தில் ஏற்படுகின்ற சில ஆழ்ந்த மாறுதல்கள், இப் பருவத்தை வாழ்க்கையில் தனித்த இயல்புள்ள பருவமாக்குகின்றது என்பது உண்மையே யாகும். மேலும், தனியன் (individual) ஒரு பரந்த உலகிற்குள் புகுந்து மன, சமூக நோக்குகளை விரிவாக்கிக்கொள்கிறான். ஆதலால், இந் நிலைமாறும் காலம், தனியன் பல பிரச்சினைகளை எதிர்த்து நிற்கின்ற பருவமாகக் கருதப்படுகின்றது.

இளையோர் பருவ சிறுவர் சிறுமியர்களுக்குப் பிரச்சினைகள் ஏற்படுவது இளையோர் பருவத்தின் தன்மையினாலா அல்லது அவர்கள் வாழ்ந்து, வளர்கின்ற பண்பாட்டினாலா? மானிடவியலாரான மார்கரெட் மீட் (Margaret Mead), சமோவா (Samoa) எனும் தெற்குக் கடல் தீவில் ஒன்பது மாதங்களைச் செலவிட்டு, ஓர் எளிமையான கலாசாரத்தில் வளர்கின்ற இளையோர்களைப்பற்றிச் செய்த ஆய்வுகள் இப்பிரச்சினைக்கு முக்கியத்துவம் வாய்ந்தனவாகும்.[5] அவர் சமோவான்

[5] Margaret Mead, From the South Seas, New York; William Morrow & Co., 1939, pp. 198-230.

இளையோர் சிறுமியின் வளர்கின்ற பிரச்சினை, ஒரு சிக்கல் வாய்ந்ததாகவோ அல்லது கடினமானதாகவோ அமையவில்லை எனக் கண்டார். இந் நிலைக்குக் கீழ்க்கண்ட காரணங்கள் விளக்கமாகத் தரப்பட்டன.

1. வாழ்க்கையில் துரிதப்படுத்தப்படுவதோ அல்லது வளர்ச்சி மெதுவாக ஏற்படுவதற்காக யாரும் கடுமையாகத் தண் டிக்கப்படுவதோ இல்லை.

2. யாரும் அதிக ஆபத்துள்ள வினைகளைச் செய்வதில்லை. அவர் களுடைய கொள்கையினால் துன்பத்திற்குள்ளாவதும் இல்லை அல்லது தனித்த சில கொள்கைகளுக்காகச் சண் டையிட்டு உயிர் துறப்பதுமில்லை.

3. சொந்த உறவுகளில் அன்பும், வெறுப்பும், பொறுமையும், பழியும், துன்பமும், வருத்தமும் குறைந்த காலத்திற்கே இருக்கின்றன.

4. விருப்பங்கள் குறைந்ததும் எளிமை கொண்டதும் ஆகும். முக்கியமான விருப்பங்களைத் தேர்ந்தெடுக்கும்பொழுது யாருடைய கட்டாயத்துக்கும் ஆளாவதில்லை.

5. தனிப்பட்ட பாசம் குறைவாகவே உள்ளது. எந்த ஒரு தனிப்பட்டவர்மீதும் நெகிழ்வான உணர்ச்சிகளை யாரும் காட்டுவதில்லை.

6. பிறப்பு அல்லது பால்பற்றிய உண்மைகளுக்கு எந்தவித மான இரகசியமும் இல்லை. சமோவாக் குழந்தைக்கு பால், பிறப்பு, இறப்பு ஆகியவை, சமூகம் உயிர்வாழ்தல் ஆகிய அமைப்புகளின் இயற்கையான தவிர்க்கமுடியாத நிகழ்ச்சிகளாகும்.

7. குழந்தைகள் மிகச் சிறுவயதிலிருந்தே அவர்களது திறமைக் கேற்ற வேலையைச் செய்யக் கற்றுக்கொள்கிறார்கள். ஆயினும், சமூகத்தின் முழு அமைப்புக்கு அவ்வேலைகள் பொருளுடையனவாய் இருக்கின்றன.

## பூப்புச் சடங்குகள் (Pubic ceremonies)

இளையோரின் குண இயல்புகளைப்பற்றி விளக்கமாக ஆய்வதற்கு முன், குழந்தைப் பருவத்திலிருந்து இளையோர் பருவத்திற்குச் செல்லும் பொழுது அதைச் சார்ந்துள்ள சமூகப் பழக்க வழக்கங்களைக் காணுதல் சுவையானதாயும் பயன்தரவல்லதாயும் இருக்கும். பூப்புச் சடங்குகள் பாரெங்கும் பரவியுள்ளதும், அச் சடங்குகளுக்கு முக்கியத் துவம் அளிப்பதும், பல்லாண்டுகளுக்கு முன்னிருந்தே வாழ்க்கையின்

முக்கியமான பகுதியாக இதனைக் கருதியதற்குச் சான்றுகளாகின்றன. முழு மனதுடன் நடத்தப்படுகின்ற இப் பூப்புச் சடங்குகள் நடைமுறையில் மரபைச் சார்ந்ததாகவே இருக்கின்றன. இவை எல்லாப் பழங்குடி மக்களாலும் செய்யப்பட்டு வந்துள்ளன. பல சமயங்களில் இவை சித்திரவதைகள், தாழ்வுபடுத்தல், பல்வேறு வகையான அறிவுறுத்தல்கள் கொண்டனவாய் இருக்கும். குறிப்பாக இச் சடங்குகள் மரபுவழியில் அதிகமாக இருப்பதும், இளையோன் அதற்காகத் தயார் செய்துகொள்வதற்கு அதிகமான காலம் எடுத்துக்கொள்வதும், பல்வேறு நாகரிகங்களின் வளர்ச்சியின் தன்மையைக் குறிக்கும் அளவாக அமைகின்றன. நன்குக வளர்ந்த நாகரிகங்களான கிரேக்க, ஹெப்ரு நாகரிகங்களில் இக் கல்வியின் குறிக்கோள்களும், இதைக் கற்றுக்கொடுக்கின்ற முறைகளும், இம்மக்கள் 'ஆண்மை' 'பெண்மை' உள்ள மக்களாகச் சடங்குகள்மூலம் அறிவிக்கப்படுகிறார்கள் என்று காட்டுகின்றன. நாகரிகமற்ற காட்டுமிராண்டிகளிடம் எளிமையான ஒழுங்குபடுத்தப்பட்ட துவக்கக்கல்வி, இச்சடங்குகளுக்குக் குழந்தைகளைத் தயார் செய்யும்பொழுதுதான் காணப்படுகின்றது. இருப்பினும் சமயச்சார்பற்ற, தற்காலப் பொதுத்துறைக் கல்வி, இப் பழங்கால வழக்கங்களிலிருந்து முழுவதும் மாறிவிட்டதால், இப்பொழுது கல்வித் திட்டங்களில் இந்த அடையாளங்களைக் காண இயலாது.

இதுபற்றிக் கூறும் பல ஆசிரியர்களில் ஜி. ஸ்டான்லி ஹால் பழங்குடி மக்களால் நடத்தப்படும் பூப்புச் சடங்குகளைப்பற்றிய முழு விவரமான வர்ணனையைத் தருகின்றார்.[6] வெவ்வேறு சமூகங்கள் இளையோர் பருவத்தை எவ்வாறு கருதின என்று மதிப்பிட்டால், அவர்கள் பல்லாண்டுகள் கொண்டதொரு காலத்தில் தங்களது முழு கவனத்தையும் செலுத்தியிருந்தனர் என்பது புலனாகின்றது.

ரூத் பெனடிக்ட் (Ruth Benedict) பூப்புச் சடங்குகளைப்பற்றிக் கூறும்பொழுது கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகின்றார்:

'பூப்பு நிறுவனங்களை அறிந்துகொள்ள நாம் கடந்து செல்வதற்கான சடங்குகளின் கட்டாயத் தன்மையைப் பகுத்தாராய வேண்டிய அவசியமில்லை; நாம் வெவ்வேறான பண்பாடுகளில் முதியோர் பருவத்தின் துவக்கத்தையும், அப் புது நிலையை அனுமதிக்கக் கையாளும் முறைகளையும் தெரிந்துகொள்ளவேண்டும். அப்பண்பாட்டில் முதியோர் பருவத்தின் பொருளே பூப்புச் சடங்குகளை நிர்ணயிக்கின்றதேயன்றி உடலியல் பூப்பன்று'.[7]

[6] See his account in Adolescence, 1904, Vol. 2, Chapter XIII, pp. 233-249.

[7] R. Benedict, 'Patterns of Culture'. Boston: Houghton Mifflin Co., 1934, p. 24.

இவ்வாருக, இளையோர் பருவத்தின் உடலியல் உண்மைகள் சமூகத் தன்மையில் விளக்கிப் பொருள் கூறப்பட்டுள்ளதை நாம் காணலாம் மேலும், ஆண் பெண்ணின் வாழ்க்கைச் சக்கரத்தில் பூப்பு என்பது வெவ்வேருக விளக்கிப் பொருள் கூறப்பட்டுள்ளது. பல பண்பாடுகளில் ஆண்களின் முதியோர் பருவம் பெண்களுடையதைக்காட்டிலும் தனிச் சிறப்புடையதாகக் கருதப்படுவதால், சமூகங்கள் பெண்களுடைய வாழ்க்கையைக் காட்டிலும் வளர்கின்ற ஆண்களின் வாழ்க்கையைத் தனியாகக் கவனிப்பது இயல்பேயாகும். இருப்பினும், சிறுவர் சிறுமியர்களின் பூப்புச் சடங்குகள் ஒரே பண்படாக் குழுவில் ஒரேவிதமாகக் கொண்டாடப்படலாம். பிரிட்டிஷ் கொலம்பியாவின் உட்பகுதியிலுள்ளோரின் இளையோர் பருவச் சடங்குகளில் இதைக் காணலாம். இங்கு ஆண்மையும் பெண்மையும் பெற்று வேலை செய்வதற்குரிய பயிற்சி அளிப்பதே இதன் நோக்கமாகும். கிழக்கு ஆப்பிரிக்காவிலுள்ள நந்திப் பண்படாக் குழுவில் சிறுவர்களும் சிறுமியர்களும் பங்குகொள்ளும் வேறொரு சடங்கினைக் காணலாம். இதில், குழுவின் முதிர்ந்த உறுப்பினர்கள் தரும் உடல் துன்பங்களும் உள்ளன. இச்சடங்குகள் சிறுவர்களும் சிறுமியர்களும் புதிய பால்நிலையைப் பெறுகின்ற துவக்கத்தைக் குறிக்கின்றன.

பூப்புச் சடங்குகள் சிறுமிக்குப் பூப்படைகின்ற துவக்கத்தைக் குறிக்கின்ற சடங்குகள் ஆதலின் திருமணத்திற்கு உதவுகின்ற வகையில் அமைக்கப்பட்டனவாகும். மத்திய ஆப்பிரிக்காவில் உள்ள பண்படாப் பழங்குடி மக்களிடம் இக் கருத்து காணப்படுகின்றது. இங்குச் சிறுமி, சில சமயங்களில், சில ஆண்டுகள்கூட இனிப்புகளும் கொழுப்புள்ள உணவுகளும் தரப்பட்டு எந்தவிதமான வேலையும் உடலுக்குத் தரப்படாமல் தனித்து வைக்கப்பட்டிருப்பாள். அவள் அக் 'கொழுக்க வைக்கும் அறை'யில் (fatting-house) உள்ளபோது அவளுடைய எதிர்காலக் கடமைகள் சொல்லித் தரப்படும். இந்தக் காலத்திற்குப்பின் அவள் திருமணத்திற்குத் தயாராகிருள். மணமகனுக்கு இவ்வாருன தனித்த விளக்கம் ஏதும் தருவதில்லை. இன்னொரு வகையைச் சார்ந்தவர்களை அடையாளக் குழு (vestigal group) என்று குறிக்கப்படுகின்றது. இங்குச் சடங்குகளை பண்பாடில்லாக் குழுவின் வழக்கங்களுக்கு ஒன்றியிருக்கின்ற வகையில் அமைப்பதே முக்கிய நோக்கமாகும். சில வழக்கங்கள் பண்படாக் குழுவினரது சமயக் குறிப்புகளுடன் கலந்திருந்து அவை வழிவழியாகக் குழுவின் சடங்குகள்மூலம் அறிவுறுத்தப்படும். பெரும்பாலும், இந்நம்பிக்கைகளும் வழக்கங்களும் ஒன்றுடன் ஒன்று தொடர்பில்லாமல் இருக்கும். அவைகள் யாவும் இளையோர்களை முதியோர் பருவத்திற்கு அழைக்கின்றவைகளாகவே இருக்கும். சில சமயங்களில், இப்பழக்கங்கள் எவ்வாறு தோன்றினவென்ருே ஏன் இன்னமும் இருக்கின்றனவென்ருே புரிந்துகொள்ள முடியாத வகையில் இருக்கும்.

### தற்கால நாகரீகம்பற்றி மேலெழுந்தவாறு நோக்கல்

தற்காலப் பழக்கங்களில் குறிப்பிடத்தக்க வழக்கம் இளம் பெண்களைச் 'சமூகத்திற்கு' அறிமுகப்படுத்துவதேயாகும். பொதுவாக, இளையோர் பருவத்தின் பிற்பகுதியில் ஏற்படுகின்ற இந்நிகழ்ச்சியானது, ஒரு மகள் பெண்ணுலகில் புகுகின்ருள் என்பதை உலகத்திற்கும் குறிப்பாக இளைஞர்களுக்கும் அறிவிக்கும் செயலாகும். இவ்வாறு புக இருக்கிறவளுக்குத் 'தனி விருந்து' கொடுப்பதனுலோ அல்லது இளைஞர்களுக்கான நடன நிகழ்ச்சியில் அறிமுகப்படுத்துவதாலோ அல்லது இதைப்போன்ற சடங்குகள்மூலமாகவோ இவள் அறிமுகப்படுத்தப்படுகிருள். ஒரு பெண்ணின் வாழ்வில் இப் பருவத்திற்குப் பின்னர் இதுகாறும் அவளுக்கு மறுக்கப்பட்ட சலுகைகள் தரப்படுகின்றன. இளைஞர்கள் அவளைத் தேடி வருவதும், அவள் அவர்களுடன் நடன நிகழ்ச்சிகளுக்குப் போவதும் அனுமதிக்கப்படுகின்றன. அவள் முறையான சமூக நடவடிக்கைகளில் கலந்துகொள்ளத் துவங்குவதோடல்லாமல் அவளிடம் மற்றவர்கள் ஒரு புதிய மாறிய நோக்கைக் கொள்ளுகின்றனர். இப்பொழுது அவளை அவள் பெயர் சொல்லி அழைக்காது 'குமாரி' என்று அழைக்கத் தொடங்குகின்றனர். அவளுடைய நெருங்கிய நண்பர்கள்மட்டுமே பெயரிட்டு அழைக்கின்றனர். பருவமடைந்த சிறுவன்போன்றே பரந்த வெவ்வேருன முதியோர் பருவத்தினரின் வாழ்க்கையில் அவளும் அனுமதிக்கப்படுகிருள். ஆனுல், இவற்றைமட்டுமே தற்காலச் சமூகத்தின் பருவமடைவதைக் குறிக்கும் பொருட்களாகக் கொள்ளலாகாது. ஒரு கடிகார அன்பளிப்பு, உயர்நிலைப் பள்ளியில் பள்ளி துவங்குவதைக் குறிக்கும் சடங்குகள், பள்ளிப் படிப்பை முடித்தல், கோயிலுடன் தன்னை இணைத்தல் ஆகியவையெல்லாம் 'பருவம்' அடையும்பொழுது நடைபெறுகின்ற இயல்பான சமூகச் செயல்களாகும்.

இவ்வாறு இளையோர் பருவத்தை ஏற்றுக்கொள்ளுதல் முறையில்லாது நடைபெறுகின்ற ஒரு செயல் எனக் கருதப்படுகிறது. உண்மையில், இளைஞர்கள் இப்பருவத்தை அடைந்தவுடன் குழந்தைத்தனமான செயல்களை முழுவதும் கைவிடுவதில்லை. ஆனுல், உலகம் மட்டும் இத்தனியனுக்கு புத்திமதி தருகின்றபொழுது, அவனைப் பொறுத்தவரையில், ஒரு முதிர்ச்சியடைந்த சமூக உறுப்பினன் என்ற கருத்திலேயே தருகின்றது. இங்குக் குறிக்கப்பட்டிருக்கும் பழக்கங்கள் பொருளாதாரத் துறையில் நல்ல நிலைமையில் இருக்கும் குடும்பங்களைப் பொறுத்ததேயாகும் என்ற உண்மையை மறுக்க முடியாது. கீழான பொருளாதார நிலையிலுள்ள குடும்பங்களிலுள்ளோரின் வாழ்க்கைப் பழக்க வழக்கங்களை மதிப்பீடு செய்தால், இங்குக் குறிக்கப்பட்டவை யாவும் இல்லாமலிருப்பதைக் காணலாம். இந்நிலையி இருப்பவர்களது வாழ்வில், ஒரு வளர்கின்ற இளைஞன்

முதியோர் குழுவில் சேர இருக்கிறான் என்றோ, முதியோர் குழுவிற்குச் சலுகைகளையும் பொறுப்புகளையும் அளிக்கவேண்டிய ஒரு புது உறுப்பினன் வருகிறான் என்றோ உலகிற்கு அறிவிப்பவை ஏதும் இல்லை. உண்மையில், இங்குப் 'புகுமுன்' பாடங்கள் அருகதையற்ற தகுதியில்லாத பெரியோர்களால் தரப்படுகின்றன. பெரும்பாலும் பொறுப்புள்ள சமூகக் குடிமகனைத் தோற்றுவிப்பதற்கும் வளர்ப்பதற்கும் இல்லமானது மிகவும் பொருத்தமற்ற ஏதுவாகும். இல்லத்தின் கவனிப்பின்மை, பற்றுக்குறை, பொதுவான நிறைவின்மை ஆகியவற்றினால் இசைவில்லாத உளவியல் குண இயல்புகள் இளமையில் தோன்றும்.

## இளையோரை எதிர்நோக்கியுள்ள சமூக உரிமைக் கோரிக்கைகள்

ஃபிரான்க் (Frank) என்பார் இளையோரின் நடத்தைமீதும் நோக்குகள்மீதுமுள்ள உரிமைக் கோரிக்கைகளின் முக்கியத்துவத்தை உணர்த்துகிறார். இளையோர் பருவத்தினனாக வளர்ச்சியடையும் பொழுது தனியன் ஒரு புதிய தன்முனைப்புக் கொண்டிருப்பான். உடல், மனத்திறன்களின் வளர்ச்சியினால் பால்உந்து, வாழ்க்கையின் திறமைமிக்க சக்தியாக மாறுகின்றது. மேலும், அவன் குழுவில் மாறிய தன்மையுள்ள தன் பங்கினை உணர்ந்து சமூகத்திற்கு ஏற்றவாறு தன்னை மாற்றிக்கொள்ளக் கற்கவேண்டும். அவனிடம் புதிய உரிமைக் கோரிக்கைகள் கேட்கப்படுகின்றன. சில ஆண்டுகளுக்கு முன்னர் அவன் முதிர்ச்சியுடையாத காரணத்தினால் அவனுடைய பல செயல்களிலிருந்து மன்னிக்கப்பட்டான். இப்பொழுது அவன் வாழ்க்கையில் இன்னும் அனுபவம் பெறவில்லையென்றாலும், முதியோர் சமூகத்தில் ஒரு முதியோன் பங்கைப் பெறவில்லையென்றாலும், முதியோர்கள் அவன் முதியோன் பங்கினை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று எதிர்பார்க்கின்றனர். இந்த வயதில் புகுத்தப்பட்டிருக்கும் குறிப்பிடத்தக்க மாறுதல்களைப்பற்றி ஃபிரான்க் கூறுகிறார்.

'பூப்புடன் உள்ளடங்கிய மாறுதல்களும் உடன்வருகின்றன. இதனால், புதிய உணர்ச்சிகளும் தூண்டுகைகளும் உணர்ச்சித் தூண்டலமைந்த எதிர்வினைகளும் ஏற்படுகின்றன. மாற்றுப் பாலாரின் தனிச்சிறப்புள்ள குணவியல்புகளைத் திடீரென்று தனியன் உணரமுற்படுகிறான். அவன் அவற்றைத் தனது அக்கறைகளைக் குவியச் செய்யும் பொருள்களாகவும், தனக்குத் தொல்லை கொடுக்கக் கூடியவையாகவும், ஆபத்து விளைவிக்கவும் வல்ல இயல்புகளாகவும் தன்னறிவுடன் கருதுகின்றான். தனியனிடத்து இம்மாறுதல்கள் அதிகமான அல்லது குறைவான வேகத்தில் ஏற்படுகின்றன. அவனது கடந்தகால வரலாற்றையும் மாறுதல்களைச் செய்யும் அளவையும்

வேகத்தையும்பொறுத்து இதனுடைய முக்கியத்துவம் அமைகின்றது.'[8]

இளையோன், முதியோர்களுக்குக் குறிப்பாகப் பெற்றோர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் ஒரு விந்தை மனிதனாகவும், பற்றார்வத்தை உண்டாக்குபவனாகவும் காணப்படுகிறான். ஆதலின், அவனது ஒப்பாருடன் (peers) கொள்ளும் தொடர்பு, இக்காலத்தில் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இதற்கு, அதிகாரம் பதின்மூன்றில், தனிப்பட்ட ஆய்வும் கவனிப்பும் தரப்படும். அகவயமாகவும் புறவயமாகவும் தனிப்பட்ட நடத்தை வகைகளில் ஒன்றி வாழும்படி அழுத்தப்படுவதனால், அவன் முதியோரது தேவைகளைப் பூர்த்திசெய்ய ஒரு பொருத்தப்பாட்டு நுணுக்க முறையையும், அவனது ஒப்பாருடைய தேவைகளைப் பூர்த்திசெய்ய வேறொரு பொருத்தப்பாட்டு நுணுக்க முறையையும் கைக்கொள்ளுகிறான். இளையோர் பருவத்தைப் போன்று, மற்றவர்கள் தனியன்களைத் தவறாகப் புரிந்துகொள்ளக் கூடிய நிலைமாறும் தன்மையுடைய வாழ்க்கை வேறு எந்தப் பருவத்திலும் இல்லை.

இளையோன் முதியோர்களால் தவறாகப் புரிந்துகொள்ளப்படுவதுமல்லாமல் அவனுக்கே அவன் பல சமயங்களில் ஒரு புதிராகத் தென்படுகிறான். இனிவரும் அதிகாரங்களில் தரப்படும் தனியாள் வரலாறுகளில் இதைக் காணலாம். இந் நூலாசிரியருடன் பல நெருங்கிய தொடர்புகள்கொண்ட டாம் (Tom) என்பவனின் சுருக்கமான தனியாள் வரலாறு இதனை விளக்குகிறது.

டாம் உடல் முதிர்ச்சியடைவதில் சற்றுத் தாமதம் ஏற்பட்டாலும், மனத்திறத்தில் சராசரி நிலைக்கு அதிகமாகவே பெற்றிருந்தான். அவன் பள்ளி வேலையில் சராசரி நிலையினரைக்காட்டிலும் சிறப்பாகச் செய்தான். அவனது பதினைந்தாவது வயதில், அவனது தோற்றம் மோசமாகவே இருந்தது. குடும்பத்திற்கு நெருங்கியவர்களல்லாத மற்ற முதியோர்களுடன் இருக்கும்பொழுது, டாமை இது தொந்தரவு செய்தது. ஆதலின், அவன் வந்து காண்போரைத் தவிர்க்கத் தொடங்கினான். அவனது தாயார் அவனைக் கூடத்திற்கு வந்து விருந்தாளிகளுடன் பேசச்சொல்லிக் கூப்பிட்டபொழுதெல்லாம், தான் வேலையிலாழ்ந்துள்ளதாய்க் கூறுவான். அவன் பெண்களிடத்துச் சிறிதும் அக்கறையின்றி இருந்தான். அவன் வேட்டையாடுவதில் தீவிர அக்கறையை வளர்த்துக்கொண்டான். ஒரு தனிப்பட்ட வகையைச் சார்ந்த துப்பாக்கி வேண்டுமென்ற விருப்பத்தை அடிக்கடி வற்புறுத்தினான். தாயாரின் எதிர்ப்பையும் மீறி, டாமுக்குத் திருப்பிச்

[8] L. K. Frank, 'Introduction: Adolescence as a Period of Transition,' Forty-third Yearbook of the National Society for the Study of Education, Part I, 1944, Chap. I.

சுடுகின்ற துப்பாக்கி கிருஸ்துமஸ் பரிசாக அளிக்கப்பட்டது. அடுத்த பல மாதங்கள் தன்னுடைய ஒத்த வயதினனை ஒரு நண்பனுடன் வேட்டையாடச் செல்லுவதில் பெருமகிழ்வு கொண்டான்.

பெரும்பான்மையான இளையோர்களுக்குரிய பொது குண இயல்புகளும் பழக்கங்களும் டாமிடம் இருந்தன. அவன் சற்று அசிரத்தையாகவே இருந்தான். ஆனால், கெட்ட எண்ணங்களினால் அவ்வாறு இருக்கவில்லை. வேட்டையாடியபின் அவனது துப்பாக்கியைத் துடைத்து வைக்க மறந்துவிடுவான். அவனுடைய தந்தை பல தடவை அவனது கவனத்திற்கு இதைக் கொண்டுவந்தும் அவன் மறந்துவிடுவதுண்டு. டாம் நல்ல சட்டையைப் பள்ளிக்கு அணிந்து செல்வான். அவனது உடையின் தன்மையையும் மறந்து கீழே விழுகின்ற விளையாட்டுச் செயல்களில் ஈடுபடுவான். இதைப்பற்றிப் பலதடவைகள் அவனது தாயார் கண்டித்திருக்கின்றார்கள். நில வறையின் விளக்குகளை அணைக்காமல் விட்டுவிடுவான். இதைக் குறித்தும் பல தடவை அவனிடம் நினைவுறுத்தி இருக்கின்றார்கள். சில சமயங்களில் அவன் தந்தை, தாய், பன்னிரண்டு வயதான தங்கை ஆகிய தனது குடும்பத்துடன் சேர்ந்து இருப்பான். மற்றச் சமயங்களில் அவனது அறையில் இருந்து வானொலி கேட்பதற்கோ அல்லது அவனது நண்பர்களுடன் திரைப்படத்திற்குச் செல்லுவதற்கோ முன்னுரிமை அளிப்பான். இதற்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் டாம் குறிப்பாக அவனது தந்தையிடம் மிகவும் பிரியமாக இருப்பான். அவர்கள் எப்பொழுதுமே சேர்ந்து காணப்பட்டார்கள். அவனது தந்தை, தன்னுடன் டாம் வெளியில் வருவதற்கோ அல்லது பேஸ் பந்து விளையாட்டைப் பார்க்க உடன் வரவோ விரும்பவில்லை என்பதை அறிந்து ஆச்சரியப்பட்டார். டாம், தான் ஏன் பொருள்களை மறந்து விடுகிறோம் என்றும், ஏன் சில அக்கறைகளையும் செயற்பாடுகளையும் சீக்கிரம் மாற்றிக்கொண்டோம் என்றும் புரியாமல் தவித்தான். ஆதலின் டாம் என்னும் ஒரு சாதாரண இளையோன் அவனது குடும்பத்தோராலும் தன்னாலும் அறிந்துகொள்ள முடியாத புதிராக மாறினான்.

## இளையோரை ஆயும் முறைகள்[9]

இளையோர்களைப்பற்றிய அறிவியல் ஆய்வுகளில் ஈடுபட்டுள்ளோரின் அக்கறைகளை மூன்று குழுக்களாக அல்லது ஆய்வுப் பரப்பு

[9] *இளையோரைப்பற்றி ஆயும் பல முறைகளை விரிவாக விவரித்தளிப்பது இவ்வதிகாரத்தின் வரம்புக்கப்பாற்பட்டதாகும். இளையோர்களையும் குழந்தைகளையும் ஆய்வதற்குரிய முறைகளின் முழுமையான மதிப்பீட்டிற்குக் கீழ்க்கண்ட நூல் வாசகர்களுக்குச் சிபாரிசு செய்யப்பட்டுள்ளது.*

J. E. Anderson, 'Methods of Child Psychology,' in L. Carmichael (ed.), 'Manual of Child Psychology' (rev. ed.). New York: John Wiley, 1954, Chapter I.

களாக வகைப்படுத்தலாம். ஆனால், இவை மிகவும் கட்டாயமான வரம்புக்குட்பட்டவாறு பிரிந்தில்லாது ஒன்றோடொன்று கலந்தும் உள்ளன. அம் மூன்று குழுக்களாவன :

1. வளர்ச்சியையும் முதிர்ச்சியையும் பெரிதும் பொறுத்தவை.
2. நடத்தை, அக்கறைகள், இளையோர் ஆளுமைக் குண வியல்புகள் ஆகியவற்றைப் பொறுத்தவை.
3. பல்வேறு நிலையங்கள், சமூக நிறுவனங்கள் ஆகியவை இளையோரின் வாழ்க்கையில் கொண்டுள்ள செல்வாக்கு.

இளையோர்களது ஆய்வில் உண்டான பலவகைப்பட்ட பிரச்சினைகளும், அப்பிரச்சினைகளை ஆய்வதற்கு அடிப்படையாக இருந்த பல்வேறு மாறுபட்ட நிலைமைகளும், வெவ்வேறு வழிகளில் பிரச்சினைகளை அணுகுவதற்கு இடமளிக்கின்றன. பல்வேறு ஆய்வாளர்கள் கையாண்ட வெவ்வேறான ஆய்வு முறைகள், பிரச்சினையின் தன்மை, ஆய்வதற்குள்ள ஆட்படுவோர்கள, பொருள்கள், ஆய்வாளர்களின் பயிற்சி, பட்டறிவு ஆகியவற்றைப் பொறுத்துள்ளன.

கடந்த பல ஆண்டுகளில் இளையோரது வயதில் குறிப்பிடும்படியான அக்கறை காட்டப்பட்டுள்ளது. இந்த அக்கறை பல ஆய்வுகளில் முடிந்திருக்கின்றது. இவ்ஆய்வுகள் பெரும்பாலும் மத்தியதர வகுப்பைச் சார்ந்த இளையோர்களைக் கொண்டுதான் நடத்தப்பட்டுள்ளன என்றும், வரலாறுகளில் பெரும் சதவிதம் பள்ளிகளில் காணப்படுகின்ற பிரச்சினைகளைக் குறித்தும்தான் உள்ளது என்றும் பொதுவாகக் கூறலாம். வெவ்வேறு ஆய்வுகளில் கண்ட இவற்றையும் மற்ற ஏதுக்களையும் பொதுமைகளை உண்டாக்கக் கருதுதல் வேண்டும். மேலும், மாணவன் தன்னுடைய சொந்த உற்று நோக்கல்களிலிருந்தும், பட்டறிவுகளிலிருந்தும் தீவிரமான பொதுமைகளைக் கொள்ளக்கூடாது என்று எச்சரித்தல் வேண்டும். இப்பொதுமைகள் ஆட்படுவோனின் வரம்புக்குட்பட்டதனாலும், அவன் மிக நெருங்கிய தொடர்புகொண்டிருக்கின்ற குழுவைமட்டுமே சார்ந்திருப்பதனாலும் இவை ஒரு புறச்சாய்வு கொண்டவையாக இருப்பது சாத்தியமே.

### இளையோர் நாட்குறிப்புகள்

ஜி. ஸ்டான்லி ஹால் இளையோரின் தன்மை, அக்கறைகள், செயற்பாடுகள் ஆகியவற்றைப்பற்றிய குறிப்புகள் எடுக்க இளையோர் நாட்குறிப்புகளைப் பயன்படுத்தினார். இளையோர் பருவமானது பல்வேறு செயல்களைக் குறிக்கும் நாட்குறிப்புகளில் அக்கறைகொண்ட பருவமாகக் கருதப்படுகிறது. உயர்நிலைப் பள்ளி ஆண்டுச் சஞ்சிகைகளில் உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் அதிக அக்கறை காட்டு

வதும், இச்சஞ்சிகைகளில் இடம்பெற ஒவ்வொரு மாணவரிடமிருந்தும் மாணவர்கள் கட்டுரைகள் பெறத் துடிப்பதும் இதன் காரணமாகவே இருக்கலாம்.

இவ் இளையார் நாட்குறிப்புகளின் ஆய்வுகளிலிருந்து பரவலான பொதுமைகளை அடைவதைக் குறித்துத் தீவிரமான திறனாய்வு செய்யப்பட்டது. முதலாவதாக, அவை மிகுந்த நுண்ணறிவுள்ள இளையோரால் பொதுவாக எழுதப்படுகின்றன. ஆதலின், இவற்றை பெரும்பான்மையோரில் மாதிரியாகக் கொள்ளமுடியாது. இரண்டாவதாக, நாட்குறிப்புகளிலுள்ள பொருள்கள் யாவும் தேர்ந்தெடுக்கப்பட்டவையாகவும் மனவெழுச்சிகள் கொண்டவையாகவும் இருக்கின்றன. மேலும், மனவெழுச்சி நெருக்கடியினால் உண்டாகின்ற இளையோரின் பற்றுகளைக் குறிப்பதாகவும் அந் நாட்குறிப்புகள் அமையலாம்.

## முதியோரின் பின்னோக்குக் குறிப்புகள்

கடந்த பத்தாண்டுகளில் பல மாணவர்கள், முதியோர்கள் தங்களது இளையோர் ஆண்டுகளைப்பற்றிக் குறிப்பிடுகின்றவற்றைச் சேகரித்துப் பயன்படுத்தியுள்ளனர். முதியோனை அவனது இளையோர் ஆண்டுகளைப்பற்றிப் பின்னோக்கிச் சிந்திக்கச்சொல்லி விரும்பும் செய்தியைக் கேட்கப்படுகின்றது. இம்முறையைக் கேள்வி நிரல்முறை என்றும் கொள்ளலாம். ஏனெனில், சில பகுதிகளைப்பற்றியும் பிரச்சினைகளைப்பற்றியும் அறிய கேள்விகளைப் பயன்படுத்துதல் அவசியமாகின்றது. வயதான ஆட்படுவோர்கள் தங்களது இளையோர் ஆண்டுகளைப்பற்றி இளையோர்கள் கூறுவதைக்காட்டிலும் உண்மையான விவரத்தைத் தருகிறார்கள் என்று கூறல் உண்மையேயாகும். அவர்களது தற்போதைய நிலையைப்பற்றியதொரு பிரச்சினையல்ல வாதலின், இது சாத்தியமாகின்றது. ஆயினும், மறதி தவறுகளைத் தரவல்ல ஏதுவாக அமைகின்றது. மேலும், பழைய அனுபவங்கள் ஆண்டுகள் பல ஆனதால் மிகவும் மாறுதலுக்கு உள்ளாகிப் பின்னோக்குக் குறிப்புகள் உண்மையற்றுப் போகின்றன. இருப்பினும், நாட்குறிப்புகள் போன்று இக்குறிப்புகளும் எச்சரிக்கையுடனும் புரிந்துகொண்டும் பயன்படுத்தப்பட்டால் பயன் மதிப்புள்ளதாய் விளங்கும்.

## மீக்கோள் மதிப்பீடு (Normative survey)

இளையோர்களைப்பற்றி உள்ள குறிப்புகளில் பல, 'குறுக்கு வெட்டு' ஆய்வுகளின் அடிப்படையில் ஏற்பட்டதாகும். குழந்தைகளையும் இளையோரையும் அறிவதற்கு வெகுகாலமாகவே இம்முறை பயன்படுத்தப்பட்டது என்பதற்கு ஒரு சான்று இங்குத் தரப்பட்

டுள்ளது. ஒரு குறிப்பிட்ட நகரம் அல்லது ஒரு பகுதியிலுள்ள அரசினர் பள்ளிக் குழந்தைகளின் உயரம், பருமன் இவற்றை அளவிடுவதற்கு இம்முறை பயன்படுத்தப்பட்டுள்ளது. வெவ் வேறான வயதுக் குழுவினரின் சராசரிகளைக் கணக்கிடப்படுகின்றது; ஒரு வரைபடத்தில் இச் சராசரிகளை யெல்லாம் புள்ளியிட்டு, அப் புள்ளிகளை இணைத்தால் ஒரு வளர்ச்சி வளைவு கிட்டும். இவ்வாறு கிடைக்கப்பெற்றதனைச் சராசரி வளர்ச்சி வளைவு எனக் கருதலாம். இதனால், ஒரு தனிக் குழந்தையின் வளர்ச்சியினைச் சராசரி வளர்ச்சி யுடன் ஒப்பிடுதல் சாத்தியமாகின்றது. ஆனால், இம்முறையில் சில குறைகள் ஏற்படுவதும் உண்டு. அதிகாரம் மூன்றிலும் அதைத் தொடர்ந்த அதிகாரங்களிலும் இவற்றில் சில தரப்பட்டுள்ளன.

நுண்ணறிவுச் சோதனைகளின் வளர்ச்சி காரணமாக, பல சோதனையாளர்கள் உயரம், பருமன் தவிர, மற்ற வளர்ச்சிப்பகுதிகளை யும் ஆயத் துவங்கினர். இவ்வகையான ஆய்வுகளில் பொதுவான தன்மையுள்ள நிலைமைகளில் குழந்தைகள், இளையோர்கள் குழு, சில இயல்புகளைப்பொறுத்து ஆய்வு செய்யப்படுகின்றது அல்லது உற்று நோக்கப்படுகின்றது. பின்பு, இக் குழுக்களிடத்துள்ள ஒப்புமைகள், வயதுக்கு வயது, படிவத்துக்குப் படிவம் போன்ற வைகள்மூலமாகப் பார்க்கப்படுகின்றன.

## நெடுக்குவகை ஆய்வுகள் (Longitudinal studies)

குறுக்கு வெட்டு முறையிலுள்ள வெளிப்படையான சில குறை களை நெடுக்குவகை ஆய்வுகள் திருத்தியுள்ளன. இவை அண்மை யில் நடந்த குழந்தை, இளையோர் வளர்ச்சிபற்றிப் பல ஆய்வுகளில் பயன்படுத்தப்பட்டுள்ளன. மீக்கோள் மதிப்பீடுகள் (குறுக்கு வெட்டு ஆய்வுகள் என்றும் கூறுவதுண்டு) பல வளர்ச்சி ஏதுக்களை யும் பணிகளையும்பற்றிய வளர்ச்சி வளைவுகளை வரைவதற்கு வேண்டிய குறிப்புகளைத் தருகின்றன. ஆனால், அவை ஒரு தனிக் குழந்தையின் வளர்ச்சி வகையை அல்லது வளைவைச் சரியாகக் காட்டும் ஏதுவாக அமைவதில்லை. நெடுக்குவகை ஆய்வுகள் பன்னெடுங்காலம் அதே தனியன்களது அடிக்கடி எடுக்கப்படு கின்ற அளவுகள் அல்லது உற்றுநோக்கல்கள் ஆகியவற்றைப் பயன் படுத்திக் கொள்கின்றன. இம்முறை, இளையோரது உயரம், பருமன் பற்றிய வளர்ச்சி வளைவுகள், இளையோர் பருவத்தின் நாடித் துடிப்பு ,குருதியழுத்தம், இளையோர் பருவ அக்கறைகளின் மாறுதல் கள், இளையோர் பருவத்தின் சமூக வளர்ச்சி, இளையோர் பருவ ஆண்டுகளில் வளர்ச்சி, இளையோர் பருவத்தில் நோக்குகளின் வளர்ச்சி, கல்வி வளர்ச்சி, வெவ்வேறான வளர்ச்சி நிலைகளில் நாளிடல் செயல்கள் போன்றவைகளை ஆய்வதற்கு மிக அதிகமாகப் பயன்படுத்தப்படுகின்றது.

நெடுக்குவகைப் படிப்புமுறை தனியன்களது முதிர்ச்சியடைதலையும் வளர்ச்சி யடைதலையும்பற்றிக் குறுக்குவெட்டு முறையைக் காட்டிலும் அநேமாகச் சரியான விளக்கத்தைத் தந்தாலும், இம் முறையில் ஒரு மாணவன் எளிதாக அறியவல்ல குறைகள் இருக்கின்றன. முதலாவதாக, குறிப்புகள் சேகரிப்பதில் குறிப்பிடத்தக்க நேரம் செலவிடப்படுகின்றது. இவ் ஆய்வு முழுவதற்கும் பள்ளியிலிருந்தோ அல்லது வேறு இடங்களிலிருந்தோ குறிப்புகள் கிடைக்காமல் இருக்கலாம். இது அவ்வமயம் தேர்ந்தெடுக்கின்ற பிரச்சினையைத் தருகின்றது. மேலும், ஒரு தனித்த நிகழ்ச்சியோ அல்லது கட்டுப்பாடோ ஆய்வு செய்ய எடுத்துக்கொண்ட குழுவைப் பாதிக்க வல்லதாகும். அதன் காரணமாக அக்குழுவை மாதிரிக் குழுவாகவோ, இளையோர் குழுக்களைப் பிரதி செய்கின்ற குழுவாகவோ கருத இயலாது. ஆதலின், இக்காரியம் ஒரு பண்பாட்டு நடவடிக்கையினுல் நிகழக்கூடியதேயன்றி குழுவில் உள்ள தனியன்களின் தனிப்பட்ட வயதினுல் நிகழக்கூடியதன்று. மேலும், ஒரு சோதனையைத் திரும்பத் திரும்பச் செய்தலும் தனியன்களைப் பாதிக்கும். குழு ஒரு சோதனைக் குழுவாதலின், அதனை அடுத்தடுத்துச் சோதிக்கும்பொழுது முடிவுகளைப் பாதிக்கும்வகையில் அவை அமைந்துவிடுவது சாத்தியமேயாகும். கவனமுள்ள இளையோர் உளவியல் மாணவர்கள் செய்திகளைச் சேகரிக்கப் பயன்படுத்தும்முறையே முடிவுகளைப் பாதிக்கும் வகையில் அமையும் என்பதைத் தெரிந்திருக்கவேண்டும்.

## பரிசோதனை முறை (The experimental method)

உளவியலை ஒரு சரிநுட்பமான அறிவியலாக ஆக்க விரும்பிய காரணத்தால் துவக்கநிலை உளவியல் ஆய்வுகளில் பரிசோதனை முறை புகுத்தப்பட்டது. இம் முறை ஒரு கேள்விக்குப் பதில் அளிக்க முயல்கின்றது அல்லது ஒரு பிரச்சினையை நன்ருகக் கவனத்துடன் சோதித்த பின்பு அதற்குத் தீர்வு காண முற்படுகின்றது. பௌதிகத் துறையில் ஒலியின் ஒளிக் கோட்டத்தைப்பற்றிய பிரச்சினைகளைத் தீர்க்கக் கவனமான அளவிடல்கள் எடுக்க வேண்டும். இம்முறையில் பிரச்சினைகளை ஆய்வதைத் தீர்வுகளைப் பெறுவதற்குரிய சரியான முறை என்று பலராலும் கருதப்படுகின்றது. ஆனல், பலவகையான பிரச்சினைகளுக்கு இம்முறை பயனற்றதாகும். கல்வி, குழந்தை உளவியல் ஆகியவைகளிலுள்ள பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு இரண்டு வகையான சோதனை முறைகள் பயன்படுத்தப்படுகின்றன. அவை தனிக்குழு முறை (single group method), இணைக்குழு முறை (parallel group method) என்பன.

முதல் முறை, ஒரு தனி மனிதனை அல்லது குழுவைச் சோதனைக் கூடத்தில் அல்லது கட்டுப்படுத்தப்பட்ட நிலைகளில் சோதிக்கப் பயன்படுத்தப்படுகின்றது. சான்றாக, இளையோர் குழுவின் வானொலி தொலைக்காட்சி அக்கறைகள் ஆகியவற்றை ஆய்வு செய்ய விரும்பினால் இளையோர் குழுவைப்பற்றிய குறிப்புகளை, உற்று நோக்குதல்கள், சேர்ந்து உரையாடுதல்கள், கேள்வி நிரல் அல்லது ஏதாகிலும் இதுபோன்ற முறையினைக் கைக்கொண்டு சேகரிக்க வேண்டும். இம் முறையினால் ஆய்வு செய்யக்கூடிய இளையோர் பிரச்சினைகள் :

1. பூப்படைவதனால் நாடித் துடிப்பு, குருதியழுத்தம் ஆகியவை பாதிக்கப்படும் அளவு.
2. பள்ளியில் ஏற்பட்ட சில அனுபவங்களின் காரணமாக அக்கறைகளை மாற்றிக் கொள்ளுதல்.
3. இளையோர் குழுக்களின் மனவெழுச்சி நிலையாமைக்கும், வகுப்பறை நடத்தைக்கும் உள்ள தொடர்பு.

இணைக்குழு முறையினால் இரண்டு அல்லது அதற்கும் அதிகமான குழுக்களை ஒரு பிரச்சினையை ஆய்வதன் மூலம் ஒப்பிட்டுப் பார்க்கலாம். இணைக்குழுக்கள் ஆய இருக்கின்ற பொருளைத்தவிர மற்றவற்றில் ஒப்புமை உள்ளவையாய் இருத்தல் வேண்டும். இளையோர் உளவியலில் இம்முறையினால் ஆய்வுசெய்யப்பட்ட மற்ற பிரச்சினைகள் :

1. பூப்படைதலினால் இளையோரின் அக்கறைகள், நடத்தை ஆகியவற்றைப்பற்றிய ஒப்புமைக் குணங்கள்.
2. இளையோரின் நடத்தைச் செயல்களில் சர்வாதிகார, ஜனநாயகத் தலைமையின் செல்வாக்கை ஆய்தல்.
3. வழிகாட்டல் நிகழ்ச்சிகளின்மூலமாக இளையோரது தொழிலைத் தேர்ந்தெடுப்பதிலுள்ள செல்வாக்கு.

சோதனைமுறை, குறுக்குவெட்டுமுறை, நெடுக்குவகை முறைகளைப்போன்று இளையோர் பருவத்தைப்பற்றிய குறிப்புகள் எடுக்கப் பல்வேறு பொருத்தப்பாடு நுணுக்க முறைகளைப் (techniques) பயன்படுத்தப்பட்டுள்ளது. குறிப்புகளைச் சேகரிக்கப் பயன்படுத்தப்படும் பொருத்தப்பாடு நுணுக்க முறைகள் : உற்றுநோக்குதல்கள், எழுத்துவமை, கேள்விநிரல், சேர்ந்துத் தனித்து உரையாடுதல்கள், சோதனைகள், தரமிடும் வகைகள், கதைகள் புறத்தேற்றப் பொருத்தப்பாடு நுணுக்க முறைகள் ஆகியவைகளாகும்,

## மருத்துவமனைச் சோதனை முறை (The clinical method)

மருத்துவமனைச் சோதனைகள் செறிவான தன்மையுடையவை யாகும். இம்முறை ஒரு தனிமகனை மிகவும் ஊன்றி சாத்தியமுள்ள எல்லா வகையிலும் சோதிக்கின்றது. இதைத் தனியாள் வரலாறு என்றும் பொதுவாகக் குறிப்பார்கள். ஒரு தனியாள் வரலாற்றின் முழு நடைமுறை என்னவெனில் :

1. ஆய்வுக்குரிய தனிச்சிறப்புடைய பொருளின் நிலையை நிர்ணயம் செய்தல்.
2. தரப்பட்டுள்ள சிறப்புப் பொருளின் தொடர்புள்ள சூழ்நிலைகளின் குறிப்புகளைச் சேகரித்தல்.
3. காரண ஏதுக்களை அடையாள உறுதி செய்தல்.
4. தீர்வு முறைகளைக் கடைப்பிடித்தல்.
5. திருத்தும் அளவின் வெற்றியடைதலைத் தொடர்ந்து கணக்கிடுதல்.[10]

கீழ்க்கண்ட பிரச்சினைகள், இம்மருத்துவமனை முறையால் ஆய்வதற்குப் பொருந்தும்.

1. பின்வாங்குகின்ற அல்லது கூச்சப்படும் இளையோன்.
2. இளங் குற்றவாளி.
3. கல்வியறிவில் பின்தங்கியுள்ள இளையோன்.
4. சமூகத்தில் தவறான பொருத்தப்பாடுகளை ஏற்படுத்திக் கொண்டிருக்கும் இளையோன்.

ஒவ்வொரு பொருத்தப்பாடு நுணுக்க முறையும் ஆராய்ச்சியில் இடம்பெற்றுள்ளது என்றாலும் அதே சமயத்தில் ஒவ்வொன்றும் வரையறை செய்யப்பட்ட வரம்புகளுக்குள் அடங்கியதாகும். இவ்விவாதத்தின் எல்லைக்குள் இவ்வரம்புகள் வரவில்லையாதலின் இங்குத் தரப்படவில்லை. ஆனால், இதைமட்டும் கூற விரும்புகின்றோம். எந்த ஒரு பொருத்தப்பாடு நுணுக்கமுறையும் அதனைப் பயன்படுத்தத் தெரியாத ஒரு தனியனிடத்தும் அல்லது கிடைக்கப்பெற்ற முடிவுகளை விளக்கிப் பொருள் கூறமுடியாதவனிடத்தும் இருக்குமானால் அதனால் பயனில்லை. ஆதலின், இப்பொருத்தப்பாடு நுணுக்க முறைகள் ஒவ்வொன்றும் பயன்மதிப்பில் வரம்புக்குட்பட்டவை. அங்குப் பயன்படுத்தப்படும் கருவியின் தன்மையினால் மட்டுமன்றி

10 C. V. Good 'Methods of Research and Problem Solving in Education,' Journal of Educational Research, 1940, Vol. 34, pp. 81—89.

அதனைப் பயன்படுத்தும் மாணவனின் முயற்சி, அனுபவம் ஆகியவை களைப்பொறுத்தும் அப் பொருத்தப்பாடு நுணுக்கமுறைகள் வரம்புக்குட்பட்டதா யுள்ளன.

## இளையோர்களது வளர்ச்சிக்குரிய பணிகள்

வளர்ச்சிக்குரிய பணிகள் என்று குறிப்பிடுவது சமூகத்தின் ஒரு குழுவிலோ அல்லது பகுதிக் குழுவிலோ உள்ள எல்லா மக்களையும் எதிர்நோக்கியுள்ள பொதுவான பணியாகும். மனித வளர்ச்சியைப் பற்றிய சிந்தனைக்கு இவ் அணுகும் முறை பயனுடையதாய் காணப் பெற்றது. ஒரு தனிப்பட்ட குழுவினை எதிர்நோக்கியுள்ள வளர்ச்சி, கற்றல் பிரச்சினைகள் ஆகியவற்றைப்பற்றிய நமது சிந்தனையை ஒழுங்குபடுத்தி ஒரு பணிச் சட்டத்திற்குள் அமைக்கின்றது. இவ் வளர்ச்சிக்குரிய பணி எனும் கருத்து, முன்னேற்றக் கல்விக் கழகத்தினரால் (**Progressive Educational Association**) துவக்கப்பட்ட இளையோர் ஆய்வில் துவக்கப்பட்டது என்றாலும், ஹேவிக்கர்ஸ்ட் (**Havighurst**) என்பவரால் நன்குகத் தெளிவாக வரையறை செய்யப்பட்டு விளக்கமாகத் தரப்பெற்றது.[11] ஹேவிக்கர்ஸ்டால் வரிசைப்படுத்தப்பட்டு விளக்கப்பட்ட பத்து வளர்ச்சிக்குரிய பணிகளாவன :

1. மாற்றுப் பாலாருடன் அதிகமான முதிர்ச்சியுள்ள திருப்தியளிக்கும் தொடர்புகளை அடைதல்.
2. சமூகத்தால் ஏற்றுக்கொள்ளப்படுகின்ற முதிர்ந்த பால் பங்கினை அடைதல்.
3. ஒருவரது உடலினை ஏற்றுக்கொண்டு அதனை வெற்றிகரமாகப் பயன்படுத்துதல்.
4. முதியோரிடமிருந்து மனவெழுச்சிச் சுதந்திரத்தைப் பெறுதல்.
5. பொருளாதாரச் சுதந்திரத்தைப் பெறுதல்.
6. ஒரு தொழிலினைத் தேர்ந்தெடுத்து ஆயத்தமாதல்.
7. திருமணத்துக்கும் குடும்ப வாழ்வுக்கும் ஆயத்தம் செய்து கொள்ளல்.

[11] **R. J. Havighurst, 'Developmental Tasks and Education' (rev. ed.). New York: Longmans, Green & Co., 1952, pp. 33—71.**

8. வாழ்க்கைப் போட்டிக்குத் தேவையான அறிவுத்திறன்களையும் கருத்துகளையும் வளர்த்துக் கொள்ளுதல்.
9. சமூகத்தில் பொறுப்பான நடத்தையை விரும்பி அதனைப் பெறல்.
10. நடத்தையின் வழிகாட்டியாகப் பயன்மதிப்புகளைச் சேகரித்துப் பயன்படுத்துதல்.

இளைஞனின் இவ்வளர்ச்சிப் பணிகளை வெற்றிகரமாக அடைவதானது, அவன் முதிர்ந்தவனுகிச் சரியான பொருத்தப்பாடுகளை ஏற்படுத்திக்கொள்ள அவசியமாகும். வர இருக்கின்ற அதிகாரங்களுக்குரிய பொருட்களில் இப் பணிகளை அடைவதற்குரிய பிரச்சினைகள் கையாளப்பெற்றுள்ளன.

**தன் உடலை ஏற்றுக்கொள்ளுதல்**

இளையோர் பருவத்திற்கு முன்னுள்ள பருவம் முழுவதிலும், குழந்தை ஒரு திரைப்பட நட்சத்திரம்போன்றே, தான்போற்றுகின்ற அல்லது அறிந்த ஒருவரது முகம்போன்றே, உடல் போன்றே வடிவம் பெற்றிருப்பதாக எண்ணங்களும் கனவுகளும் கொண்டிருக்கும். இளையோர் பருவத்தில் நாளமில்லாச் சுரப்பிகளின் அமைப்பு உடல் வளர்ச்சியைத் துரிதப்படுத்துகின்றது. உடல் விகிதங்கள் மாறுகின்றன. முகத் தோற்றம் முதியோன் போன்று ஆகின்றது. தோல் மாறுதல்கள் ஏற்படுகின்றன. மற்றும் பல உடல் மாறுதல்கள் ஏற்பட்டுத் தனியனுக்கு வளர்கின்ற உணர்ச்சியைத் தோற்றுவிக்கத் தான் தன்னுடைய வாழ்க்கை முழுவதும் நிலைத்திருக்கப்போகின்ற உடலையும் முகத்தையும் பெறுவதாகவும் உணர்கிறுன்.

இச் சமயத்தில் அவனை எதிர்நோக்கியுள்ள குறிக்கோள் தனது உடலை ஏற்றுக்கொள்ளக் கற்றுக்கொள்வதாகும். அதனை ஆரோக்கியத்துடன் காப்பாற்றித் திறம்படப் பயன்படுத்துதல் முக்கியப் பணியாகின்றது. இளையோர் சிறுவர்கள் எப்பொழுதும் தங்களது உயரம், பருமன், வலிமை, இயக்கவல்லமை ஆகியவற்றைத் தனது ஒத்த வயதினருடன் ஒப்பிட்டுப் பார்த்துக்கொண்டே இருப்பார்கள். இசைவில்லா ஒப்புமை, மன முறிவுக்கும் மனச் சிக்கலுக்கும் ஏதுவாக அமையலாம். சிறுமியர்கள் அவர்களது உடல் வளர்ச்சிமீது குறிப்பாக நாட்டம் கொள்ளத் தொடங்குகின்றனர். அவர்களது ஒத்த வயதினரைப்போன்ற பெண் தோற்றம் அவர்களுக்கு ஏற்படுகின்ற வளர்ச்சி தராவிடில் பெரிதும் கவலை கொள்கின்றனர். பெண்மையும் ஆண்மையும் சமூகப் பண்பாட்டில் ஒரு பகுதியாக இருக்கத் துவங்கிவிட்டதனுல் பல ப்ரச்சினைகள் கிளம்பியுள்ளன. இளையோர்

சிறுவன் அவளை ஆணுக ஏற்றுக்கொள்கின்ற உடற்கட்டுக்காக ஏங்குகிருன். அதே சமயத்தில் இளையோர் சிறுமி ஒரு முதிர்ந்த பெண்ணின் உடற்கட்டை அடைவதற்குத் தேவையான பல முயற்சிகளைச் செய்கிருள்.

**இருபாலாரும் தங்களுடைய ஒத்த வயதினருடன் புதிதான அதிகமான முதிர்ச்சியான தொடர்புகளைப் பெறுதல்**

பால் முதிர்ச்சி இளையோர் பருவத்தில் ஏற்பட்டு சிறுவர் சிறுமியர்களின் வாழ்க்கையில் பால் கவர்ச்சி ஓர் ஆதிக்கம் செலுத்தும் சக்தியாக ஆகிறது. சமூகத் தொடர்புகள் உடல் முதிர்ச்சியடையும் அளவில் பாதிக்கப்படுகின்றன. ஆதலின், மெதுவாக வளர்ச்சியடையும் சிறுவன் அல்லது சிறுமி துரித வளர்ச்சி அல்லது சராசரி வளர்ச்சியடைகின்ற ஓர் இளையோர் குழுவினின்று சமூகத் தொடர்புகளில் ஒதுக்கிவிடப்படுவார்கள். இளையோர் பருவத்தின் ஆர்வமுடைய விருப்பம், குழுவின் அனுமதி பெறுதலே ஆகும். இது இளையோர் பருவத்தின் ஆரம்ப காலத்தில் குழு தோன்றுவதற்குக் காரணமாகிறது. இதைச் சில சமயம் கூட்டாளிக்குழு (gang) என்றும் அழைப்பதுண்டு. பிற்காலத்தில் குழு எண்ணிக்கையின் அளவு குறைந்து சிறு குழுக்கள் (cliques) தோன்றத் துவங்குகின்றன.

இருபாலாரும் சேர்ந்து வாழக் கற்றுக்கொள்ளுதல் மிகவும் முக்கியமான தொன்ருகும். இதனைப்பற்றிய தனி முக்கியத்துவம் அதிகாரங்கள் ஐந்திலும் பதினைன்கிலும் தரப்பட்டுள்ளது. பண்பாடு இளையோரது சமூகத் தொடர்புகளுக்கு வழிவகுக்கின்றது. ஒரு சமூகத்தினின்று மற்ருெரு சமூகம் இவ் வழிவகைகளில் பெரிதும் மாறுபட்டுள்ளது. இது ஒரு சமூகத்தின் வெவ்வேருன குழுக்களிடையேயும் வழிவகைகளில் மாறுபட்டுள்ளது. அமெரிக்கச் சமூகத்தில் நடுத்தர வகுப்பு, தனது குழந்தைகளின் சமூக வெற்றிகளுக்கு அதிகமான முக்கியத்துவம் தருகின்றது. ஆதலின், அவர்கள் தங்களது குழந்தைகளின் நண்பர்கள் அவர்கள் இருக்கின்ற அதே நிலையில் அல்லது மேலும் நல்ல நிலையில் இருப்பவர்களாகவே இருக்க விரும்புகின்றனர். கல்வி மிகவும் முக்கியமாதலின் திருமணம் பெரும்பாலும் காலம்தாழ்த்து செய்யப்படுகிறது. கீழான வகுப்புகளிலிருந்து வரும் இளையோர்களுக்கும் இளைஞர்களுக்கும் திருமணம் சீக்கிரமே நடந்துவிடுகிறது. இதேபோன்று பல கீழான வகுப்புகளிலிருந்து வரும் இளையோர்கள் உயர்நிலைப் பள்ளியில் பட்டம் பெறுவதற்கு முன்பே படிப்பை நிறுத்திவிட்டு ஏதாகிலும் ஒரு வேலையை ஏற்றுக்கொள்கின்றனர்.*

* *அமெரிக்கப் பள்ளியில், பள்ளி இறுதியில் வெற்றிபெற்றவர்களுக்குப் பட்டம் அளிக்கின்றனர்.*

## ஒருவருடைய பால்பங்கினை ஏற்றுக்கொண்டு கற்றுக்கொள்ளுதல்

மற்றொரு இளையோரின் வளர்ச்சிப்பணி சமூகம் அனுமதிக்கும் பால்பங்கினை ஏற்றுக்கொண்டு அதனில் சிறப்பாக வெற்றியடைதலே யாகும்.

ஹேவிக்கர்ஸ்ட் குறிப்பிடுகின்றார் : 'ஆண்களுக்குச் சமூகத்தில் இது மிகவும் எளிதாக இருக்கின்றது. சமூகம் தனது சிறப்பான இடங்களை ஆண்களுக்கே அளிக்கின்றது. பல பெண்கள், மனைவி தாய் என்னும் பங்குகளை ஏற்றுக்கொள்ள ஒரு மனிதனின் தற்காப் புடன் தங்களைக் காப்பாற்றிக்கொள்வது எளிதாக இருப்பதாகவே அறிகின்றார்கள். ஆனால், பல பெண்களுக்கு இது கடினமாகவே இருக்கிறது. அவர்கள் ஒரு தொழிலையே விரும்புகிறார்கள்.'[12]

பூப்படையும்பொழுது பால்களிடையே இருக்கும் மாறுபாடுகள் அதிகமாகின்றன. ஒவ்வொரு பாலும் தனித்த ஆண்மைக்குரிய குண இயல்புகளுடனும் தனித்த பெண்மைக்குரிய குண இயல்புகளுடனும் வளர்கின்றன. இக்குண இயல்புகள் வாழ்க்கையின் அமைப்பில் பால் கொள்ளும் பங்கிற்குமட்டுமே உரியதாகவும் கட்டாயமானதாகவும் உள்ளன. சில சமயங்களில், பெண்கள் அவர்களிடமிருந்து சமூகம் என்ன எதிர்பார்க்கிறது என்றே நிர்ணயிக்க முடியாது திண்டாடு வார்கள். மேலும், அமெரிக்கச் சமூகத்தில் பெண்ணின் பங்கு அடிக்கடி நிலைமாறுகின்ற ஒன்றாகும். அமெரிக்காவில் முதலில் குடியேறிய பெண்கள்போலன்றி, அவர்கள் தொழிற்கல்வியையோ, திருமணம் செய்துகொண்டு குடும்பத்தில் இருப்பதையோ தேர்ந்தெடுக்கலாம். அமெரிக்கச் சமூகத்தில் பெண்களில் பெரும்பாலோர் திருமணத்திற் குப் பின்னும் வேலை செய்கின்றனர். 6,789 உயர்நிலைப்பள்ளி மாணவர் களைக் கொண்டு நடத்திய ஓர் ஆய்வில், பெரும்பாலோர் பெண்கள் திருமணத்திற்கு முன்னர்தான் வேலை செய்யவேண்டும் என்று கூறினார் கள்.[13] ஆனால், அதில் சரிபாதியினர், பெண் திருமணத்திற்குப் பின்னர் தவிர்க்கமுடியாத பொருளாதாரத்தேவை யிருந்தாலொழிய வேலை செய்வது சரியல்ல என்று கருதினார்கள். வரைபடம் 1-2ல் காட்டப்பட்டபடி படித்தவர்களில் குறிப்பிடத்தக்க விகிதமுடைய வர்கள் பெண்கள் ஒரு குறிப்பிட்டகாலம் திருமணத்திற்குப் பின்னர் பணியாற்றுவது விரும்புவதற்குரிய செயலேயாகும் எனக் குறிப்பிட் டனர். திருமணத்திற்குப் பின்னர் பொருளாதாரத் தற்காப்பும், நவீன வசதிகளுடன்கூடிய வீட்டைப்பெற ஆசையும், திருமணமான பெண்

[12] *அதே நூலில் 37ஆம் பக்கத்தில் உள்ளது.*

[13] Youth and the World of Work. East Lansing: Social Research Service, Michigan State College, 1949.

களில் பெரும்பாலோர் சம்பளத்திற்காக வேலைசெய்யும் போக்கினைக் கொள்வதற்கு வழி செய்கின்றது.

## பெற்றோரிடமிருந்தும் முதியோரிடமிருந்தும் மனவெழுச்சிச் சுதந்திரம் பெறுதல்

இளையோர் பருவத்தினர் சந்திக்கின்ற பணிகளுள் முக்கியமான ஒன்று பெற்றோர்களிடமிருந்து குழந்தைத்தனமான சார்ந்திருத்தலை விட்டுப் பிரிதலாகும். இப் பணி வெற்றிகரமாக முடிவது என்பது ஆரம்பக் குழந்தைப் பருவத்தினின்று துவக்கப்பட்டு இருந்தால்தான் எளிதாக முடியும். பெற்றோர்களைத் தொடர்ந்து சார்ந்திராது அவர்கள் மீது பாசத்தை வளர்த்துக்கொள்வதுதான் விரும்புகின்ற குறிக்கோளாகும். இப் பணி அமெரிக்கச் சமூகத்திலுள்ள இரு சக்திகளினாலும், இரு நிலைகளினாலும் மிகவும் கடுமையாகிவிட்டது. முதலாவதாக இளையோன் வீடு அளிக்கும் தற்காப்பை வேண்டுகின்றான்.

பொருளாதார உதவி மிகவும் அவசியமானால்தான் வேலைசெய்தல்.
குழந்தைகள் ஏற்படும் வரை வேலைசெய்தல்.
பொருளாதாரத் தற்காப்பு அடைவதற்காகச் சில ஆண்டுகள் வேலைசெய்தல்.
சம்பளத்திற்காக வேலை எப்பொழுதும் செய்வதில்லை.
குழந்தைகள் இருந்தாலும் இல்லாவிட்டாலும் முடிந்தால் வேலை செய்வது.
துலங்கல் இல்லை.




படம் 1-2

உயர்நிலைப் பள்ளி மாணவர்கள் கீழ்க்கண்ட கேள்விக்குத் தந்த துலங்கல்களின் தன்மை: 'பெண்கள் திருமணத்திற்குப்பின், சம்பளத்திற்காக வீட்டுக்கு வெளியே சென்று வேலை செய்யலாமா' (இளைஞர்களும் அவர்களது தொழில் உலகமும்).

இரண்டாவதாக, இளையோர்கள் குடும்பத்தின் உறவைப் பிரித்துக் கொண்டு வெளியில் சென்றால் ஏற்படும் விளைவுகளைக் குறித்துப் பெற்றோர்கள் அஞ்சுகிறார்கள். சில சமயங்களில் பெற்றோர்கள்

தங்களது மகனையோ மகளையோ இழந்துவிடுவோம் என்ற சுயநலத் தினால் ஊக்குவிக்கப்பட்டும் அஞ்சுகிறார்கள். மற்றும் சில பெற்றோர்கள், சிக்கலான சமூகத்தின் வெவ்வேறான பிரச்சினைகளையும் நிகழ்ச்சிகளையும் தங்களுடன் பொருத்தப்பாடுடையனவாக ஆக்குகின்ற முயற்சியில் தங்களது இளம் மக்கள் சந்திக்கின்ற பிரச்சினைகள் குறித்துக் கவலை கொள்கின்றனர். இளையோர் ஆண்டுகளில் மன வெழுச்சிச் சுதந்திரம் அடைவது மிகவும் முக்கியமாகும். இளையோர் ஆண்டுகளில் இவ்விலையை அடையத் தவறிய முதியோர்கள், முடி வெடுப்பதற்கும், முதிர்ந்த தனியன்களுக்குரிய பொறுப்புகளை ஏற்றுக் கொள்வதற்கும் இயலாதவர்களாகிவிடுகின்றனர்.

## பொருளாதாரச் சுதந்திரத்தைப் பெறுதல்

இளையோர்களுக்கும் இளைஞர்களுக்கும் உரிய மற்றொரு பணி பொருளாதாரச் சுதந்திரம் பெறுவதாகும். இது பொதுவாகச் சிறுவர்களுக்குத்தான் பொருந்துகின்றது என்றாலும், இப்பொழுது சிறுமியர்களுக்கும் இதைக்குறித்து அதிகமான முக்கியத்துவம் தரப்படுகின்றது. அது 'வளரவேண்டும்' எனும் விருப்பத்தினின்று தோன்றிய கிளையாகும். ஒருவருடைய நடத்தைக்கும் பொருளாதாரத் தேவைகளுக்கும் பொறுப்பேற்கும் திறனே முதிர்ச்சியடைந்ததற்கு ஏற்றுக் கொள்ளும் சான்றாகும்.

ஒரு தொழிலைத் தேர்ந்தெடுத்து அதற்குத் தன்னைத் தயாரித்துக் கொள்ளுதல் வளர்ச்சிக்குரிய பணியாகும். தனியன் முதிர்ச்சியடைந்ததும் பள்ளிப்படிப்பை முடிக்குந்தருவாயில் அது முக்கியத்துவம் பெறுகின்றது. அவன் எடுக்கும் முடிவுகள் அவனது எதிர்கால வாழ்வையும் மகிழ்ச்சியையும் தீர்மானிக்கின்றன. அதிகாரம் பதினேழில் தொழில் வழிகாட்டிக் கல்விகுறித்தும் பொருளாதாரச் சுதந்திரம் பெறுவதுகுறித்தும் தனித்துக் கவனிக்கப்பட்டுள்ளது.

இளையோர் பருவத்தில் முதியோர் நிலை பெறத் தோன்றும் ஆசைக்கும் அதனை அடைவதற்குமிடையே சிறிதுகால இடைவெளி உள்ளது. ஆதலின், பல சமயங்களில் இதனால் சக்தியறச் செய்யும் பற்றார்வம் தோன்றுகிறது. தொழில் திட்டமும், அதற்குத் தயார் செய்து கொள்வதும், பெரும்பான்மையான இளையோர்களுக்கு முக்கியக் கவலையாக இருப்பதாய் ஆய்வுகள் குறிக்கின்றன. அமெரிக்கச் சமூகத்தில் தொழில் மிகவும் முக்கியமானதாகும். நடுத்தர இளையோன் அவனது பெற்றோர்களால், பள்ளியில் இருந்து இசைவான சமூக நிலையையும் பொருளாதாரத் தற்காப்பினையும் தரவல்ல தொழிலை ஏற்றுக்கொள்ளும்படி ஊக்குவிக்கப்படுகின்றான். அவனுடைய உள்ளடங்கிய இயல்புகள் அளிக்கும் வரம்பிற்குள் ஒரு தொழிலைத் தேர்ந்

தெடுப்பதில் அவனுக்குச் சுதந்திரம் இருக்கின்றது. அத்தொழிலுக்குத் தயார் செய்துகொள்வதில் உண்டாகும் பொருளாதாரச் செலவுகளை அவனால் ஏற்றுக்கொள்ள முடியுமா என்பதைப்பொறுத்தும் அவன், தொழிலைத் தேர்ந்தெடுத்தல் உள்ளது.

## பயன் மதிப்புகளையும் வாழ்க்கையின் மெய்யுணர்வையும் அடைதல்

இளையோரைப்பற்றிய ஆய்வுகள் பெரும்பான்மையோர் மெய்யுணர்வு, சமயப் பிரச்சினைகளில் செறிவான அக்கறைகொண்டுள்ளதாய்க் கூறுகின்றன. அவர்கள் வாழ்க்கையின் பயன்கள்குறித்தும் குறிக்கோள்கள்குறித்தும் அக்கறையுடையவர்களாய் இருக்கின்றார்கள். அவர்கள் ஒழுக்கங்களின் தரங்கள்பற்றியும் கவலைகொள்கின்றனர். அவர்களது வாழ்வின் மெய்யுணர்வு வளர்ச்சி அவர்களால் கட்டுப்படுத்த முடியாத பல பொருள்களுடன் தொடர்பு கொண்டுள்ளது. குடும்பத்தின் சமயம், பண்பாட்டுப் பின்னணி, கல்விப்பயிற்சி, சமூகநிலை, பொருளாதாரத் தற்காப்பு, வெவ்வேறான சமுதாயச் சக்திகள், குடும்பப் பிணைப்புகள், மற்றச் சமூகச் சக்திகள் ஆகியவை வாழ்க்கைப் பயன் மதிப்புகளை உண்டாக்க உதவுகின்றன.

இளையோன் ஏதோ ஒரு தரத்தையோ அல்லது பயன்மதிப்புகள் கொண்ட அமைப்பையோ வளர்க்கவில்லையெனில், முடிவுகள் எடுப்பதில் அவனுக்கு உதவிசெய்ய நல்ல உறுதியான வழிகாட்டியில்லாது போய்விடும். இளையோன் சுதந்திர உணர்வில் வளர்கின்றபோது பல தேர்ந்தெடுத்தல்களைச் செய்தல்வேண்டும். தேர்ந்தெடுக்கின்ற பொருள்கள் அவனுடைய எதிர்காலப் பொருத்தப்பாடுகளுக்கும் இன்பத்திற்கும் மிகவும் முக்கியமானதாகும். அவன், முதியோனாகவும் ஜனநாயகச் சமூகக் குடிமகனாகவும் செய்கின்றவை அனைத்தும், அவனுடைய இளையோர் ஆண்டுகளில் அவன் வளர்த்துக்கொண்ட வாழ்க்கை மெய்யுணர்வினால் உண்டானவையாகும்.

## அதிகாரத்தின் சுருக்கம்

ஜி. ஸ்டான்லி ஹாலின் முக்கியத்துவம் வாய்ந்த படைப்பு முதன் முதலாகத் தோன்றிய பின்பு, இளையோர் வயதைப்பற்றிப் பலர் எழுதியும் சொல்லியும் வருகின்றனர். இப்பருவத்தினனின் வாழ்க்கை தனித்த வேறான வாழ்க்கைப் பருவம் என்று சிலர் கருதுகின்றனர். இதை ஒரு நாடக மேடையாக்கி அதனைச் சுற்றி அடைமொழிகளாலும் அலங்காரச் சொற்கள் கொண்ட தலைப்புகளாலும் வர்ணிக்கின்றனர். 'அனல் கக்கும் இளைஞன்' என்றும், 'வெளிவரும் விருந்துகள்' என்றும், 'பொறுப்புள்ள வயதினன்' என்றும் கூறப்படும்

இதுபோன்ற அடைமொழிகளை நாம் பார்க்கின்றோம். இந்த அடைமொழிகள் யாவும் ஏற்கெனவே பல்வேறு பூப்புச் சடங்குகள் காரணமாக மனத்தில்கொண்ட கருத்தின் பிரதிபலிப்பாகும். இந்த நிலை மாறும் பருவத்தின் முக்கியத்துவத்தைத் துவக்கப் பண்படாப் பழங்குடிமக்கள் உணர்ந்திருந்தனர். ஆனால், இந் நிலைமாறும் தன்மை இன்றைய இளையோர் உளவியல் மாணவர்கள் கொண்டுள்ள கருத்துகளுடன் ஒன்றியிருப்பதில்லை. இளையோர் வயது, பிரச்சினையான வயது என்பது வினவுதற்குரிய ஒரு தீவிரமான கருத்தாகும். தனிப்பட்ட பண்பாட்டின் சமூகப் பொருளாதாரத் தேவைகள் காரணமாக, தனியன் எதிர்நோக்குகின்ற பல பிரச்சினைகளைக் கொண்ட வயதாக இவ்வயது தோன்றுகிறது.

இளையோர் உளவியல் மாணவர்கள் பல்வேறு முறைகளையும் பொருத்தப்பாட்டு நுணுக்க முறைகளையும் பயன்படுத்தி, பதின் வயதுச் சிறுவர் சிறுமியர்களின் வளர்ச்சி, செயல்கள், பிரச்சினைகள் ஆகியவற்றிற்குக் குறிப்புகள் சேகரிக்கின்றனர். இவ் ஆய்வுகள் வளர்ச்சி, முதிர்ச்சி, இளையோரின் தனி இயல்புகள் ஆகியவற்றைப்பற்றி விளக்கிப் பொருள் கூறுவதற்குத் தேவையான சிறந்த குறிப்புகளைத் தருகின்றன.

சமூக அமைப்பில் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்கள் காரணமாகப் பள்ளிப்படிப்பை நீண்டகால அமைப்பாக மாற்றுவதற்கு அதிகமான தேவை உண்டாகியுள்ளது. இது தொழில் பண்பாட்டின் தொடர்புள்ள பல பொருள்களுடன் சேர்ந்து பள்ளியில் சேர்வோரின் தொகையை அதிகப்படுத்தியுள்ளது. ஆதலின், இன்று உயர்நிலைப் பள்ளி வயதுடையோரில் 70 சதவிதத்தினர் பள்ளிகளில் சேர்ந்துள்ளனர். இந் நூலின் கடைசி அத்தியாயத்தில் இன்றைய இளையோர்கள் நாளைய வாழ்க்கை நாடகத்தில் ஏற்றுக்கொள்ளப்போகும் பங்கைப்பற்றிய சில கருத்துகள் தரப்பட்டுள்ளன. இளையோர்களைத் திறமைமிக்க குடிமக்களாகத் திருப்தியளிக்கும் வகையில் ஆக்குவதையே இளையோர்களது வழிகாட்டல், நடத்துதல் ஆகியவைகளில் அக்கறை கொண்டுள்ளோர் குறிக்கோளாகக் கொள்ள வேண்டும். இதைச் செய்யும்பொழுது, நாம் நடைமுறையிலுள்ள விளைவுகளையும், பயன்மதிப்புகளையும், இன்றைய ஆவலுள்ள சுறுசுறுப்பான வளரும் சிறுவர் சிறுமியர்களின் கனவுகளையும் கவனத்தில் கொள்ளவேண்டும்.

## சிந்தனைக்குரிய பிரச்சினைகள்

1. **இளையோரைப்பற்றிய பல வரையறைகளை நோக்கி அதிலுள்ள ஒற்றுமைக் குணங்களைத் தருக. (நூல்களின் பட்டியலுக்கு அனுபந்தம் 1-ஐக் காணவும்.)**

2. பூப்புச் சடங்குகள் என்றால் என்ன? பல்வேறு சடங்குகளிடையே ஏதாகிலும் ஒப்புமையைக் காண்கிறீர்களா? சடங்குப் பழக்கங்களிலுள்ள மாறுதல்கள் எவ்வாறு பல்வேறு மக்கள் வழிகளைக் குறிக்கின்றன? அல்லது பொதுப் பண்பாட்டு வகைகளைக் குறிக்கின்றன?

3. பூப்படைதலின் துவக்கத்தில் தொடர்புகொண்டுள்ள ஏதுக்கள் எவை? சென்ற தலைமுறையைக்காட்டிலும் அல்லது அதற்கு முன்னுள்ள காலத்தைக்காட்டிலும் இன்று பூப்படைதல் விரைவிலேயே ஆகின்றது என்பதற்கு என்ன விளக்கம் தருவாய்?

4. இளையோர்களின் பகிர்தலைப்பற்றிய குறிப்புகளைக் கவனிக்க என்ன ஏதுக்கள் இவற்றைப் பாதிக்கின்றன?

5. இளையோர்பற்றிய பாமரக் கவர்ச்சியுடைய நூல்களின் பட்டியல் அனுபந்தம் 3ல் தரப்பட்டுள்ளது. இந் நூல்களில் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட நூல்களை இந் நூலுடன் படிக்கவும். இதில் தனியன்களது இயல்புகளை நோக்கி இளையோனை எதிர் நோக்கியுள்ள பிரச்சினைகளை விவரிக்க ஆசிரியர் இளையோனைப்பற்றிய விளக்கத்தைத் தந்துள்ளாரா? இந் நூலில் தந்துள்ள செய்திகளின்படி அவ் விளக்கங்கள் அமைந்துள்ளதா?

6. இவ் அதிகாரத்தில் உள்ள இளையோர்பற்றிய குறிப்புகளைச் சேகரிக்கப் பயன்படுத்தப்படும் முறைகளைப் படிக்கவும். இம் முறைகளைப் பயன்படுத்துவதில் உள்ள பல பிரச்சினைகளைக் கூறவும்.

7. இளையோர் பருவம் 'குமுறல்களும் அழுத்தங்களும் கொண்ட வாழ்க்கைப் பருவம்' எனச் சிலர் கருதுவதற்குக் காரணமாயிருந்தவற்றைக் கூறுக. உம்முடைய இளையோர் ஆண்டுகளை நோக்கும்பொழுது அவ்வாறு குறிப்பிடுவதற்குச் சான்றுகள் உள்ளனவா?

8. சிலர் இளையோர் பருவத் துன்பத்தைக் குறைக்கப் பால் பற்றிய பழங்காலப் பழக்க வழக்கங்களை மாற்றி மார்கரட் மீட் குறிப்பிடுவதுபோன்று சமோவா நாட்டில் கையாளப் படுகின்ற முன்கூட்டிய திருமணங்களை ஆதரிக்கலாம் என்பதில் உள்ள நன்மைகள், தீமைகளைக்காட்டிலும் அதிகமாய் உள்ளனவா? இதில் நீ கூறுவது என்ன?

9. தற்காலச் சமூகம் முதியோருக்கும் இளையோருக்கும் எல்லா உரிமைகளையும் சலுகைகளையும் தரல் வேண்டும் என்று நீங்கள் எண்ணுகிறீர்களா? உங்களுடைய பதிலுக்குக் காரணங்கள் தரவும்.

## தெரிவுசெய் நூற்பட்டியல்


1. Cruze, W. W., 'Adolescent Psychology and Development'. New York: The Ronald Press Co., 1953, Chap. 1.
2. Frank, L. K., 'Introduction: Adolescence as a Period of Transition,' Forty-third Yearbook of the National Society for the Study of Education, Part 1, 1944, Chap. 1.
3. Hall, G. S., Adolescence: Its Psychology and Its Relations to Physiology, Anthropology, Sociology, Sex, Crime, Religion and Education, Vol. 1. New York: Appleton-Century-Crofts, Inc., 1904, Chaps. I, II, XIII.
4. Hollingworth, L. S., 'The Psychology of the Adolescent'. New York: Appleton-Ceutury-Crofts, Inc., 1928, Chaps. I and II.
5. Horrocks, J. E., 'The Psychology of Adolescence'. New York: Houghton Mifflin Co., 1951, Chap. 1.
6. Hurlock, E. B., 'Adolescent Development'. New York: McGraw-Hill Book Co., 1949, Chap. 1.
7. Kuhlen, R. G., 'The Psychology of Development'. New York: Harper & Bros., 1952, Chap. 1.
8. Malm, M, and O. G. Jamison, 'Adolescence'. New York: McGraw-Hill Book Co, 1952, Chap. 1.
9. Mead, M., 'From the South Seas: Studies of Adolescence and Sex in Primitive Societies'. New York: William Morrow and Co., 1939, p 1072. This is a one-volume edition of three anthropological Works: 'Coming of Age in Samoa, Growing Up in New Guinea and Sex and Temperament'.

10. Miller, N., 'The Child in Primitive Society'. New York: Brentano, 1928.

11. Sadler, W. S., 'Adolescent Problems'. St. Louis C. V. Mosby Co., 1948, Chap. 1.

12. Seidman, J. M., 'The Adolescent: A Book of Readings'. New York: The Dryden Press, 1953, Chap. 1.

13. Wattenberg, W. W., 'The Adolescent Years'. New York; Harcourt, Brace and Co., 1955, Chap. 1.

பகுதி II

# உ. உடல் வளர்ச்சியும் முதிர்ச்சியும்

## (Physiological Growth and Development)

### அறிமுகம் : வளர்ச்சியின் தன்மையும் முக்கியத்துவமும்

தனியனின் பிறப்பிலிருந்து முதிர்ச்சிக்குரிய (maturity) வளர்ச்சி அவனது சாதாரண வாழ்க்கையின் அளவில் மூன்றில் ஒன்ருக அமைகின்றது. குழந்தைகளின் வளர்ச்சி, முதிர்ச்சி ஆகியவற்றைப்பற்றிய தோற்ற மரபுநூல் ஆய்வுகள், அவர்களது வளர்ச்சியின் தன்மையைப் பற்றியும் அவர்கள் வளர்வதைப் பாதிக்கக்கூடிய ஏதுக்களைப்பற்றியும் பயனுள்ள செய்திகளைத் தருகின்றன. இனிவரும் அதிகாரத்திலுள்ள செய்திகள் மாணவனுக்கு வளர்ச்சி எவ்வாறு நிகழ்கின்றது என்பதைப்பற்றி நன்ருகப் புரிந்துகொள்ளும் வகையில் அமைக்கப் பட்டுள்ளன. மேலும், இவ்வதிகாரத்திலும் மற்ற அதிகாரங்களிலும் தரப்பட்டுள்ளவை இளையோர்களின் ஆளுமை முதிர்ச்சியையும் வளர்ச்சியையும் பாதிக்கும் பல்வேறு சக்திகளின் விளைவுகளையும் கட்டுப்பாடுகளின் விளைவுகளையும் குறிக்கின்றன.

'வாழ்க்கை மாறும் இயல்பைக்கொண்டது' என்று ஒருவர் குறிப்பிட்டதுபோன்று வாழும் உயிரணுக்கள் மாறிக்கொண்டே இருக்கின்றன. வளரும் குழந்தை இரண்டு தனித்த வகையான, புதிய, வெவ்வேருன சூழ்நிலைச் சக்திகளை எப்பொழுதும் எதிர்நோக்கியுள்ளது. ஒன்று உயிரியைச் சார்ந்ததாகும். சுருங்கக்கூறின், இது எல்லா உயிர் வாழ்வனவற்றிலும் நிகழும் உடலியல் இயக்கமாகும். உயிர்ப் பொருள் மாறுபாட்டினுல் உணவு சேர்க்கப்பட்டுச் சக்தியாக மாறிச் செயல்கள்மூலம் வெளிப்படுத்தப்படுகின்றது. மற்ருெரு சக்தி வெளிப்புறச் சூழ்நிலையினுல் குறிக்கப்படுகின்றது. இது எதிர் வினைக்குத் தொடர்ச்சியாகத் தூண்டுகின்றது. இவை கற்றலுடன்

எவ்வாறு தொடர்பு கொண்டுள்ளன என்று பாஸ்வெல் (Boswell குறிப்பிடுகின்றார் :

'ஒவ்வொரு வாழும் உயிரியும் அகவய, புறவய மாறுதல்களுக்கும் கட்டுப்பாடுகளுக்கும் ஏற்றவாறு இருந்தும், தன்னை ஓர் இணைப்புகள் கொண்ட முழு உருவமாகக் காப்பாற்றிக்கொள்ள முயல்கின்றது. இதுபோன்றே சமூக உயிரிகளும் உயிருள்ள பல பொருட்களும் வெளிப்புற மாறுதல்களைக்கொண்டாலும், இணைப்புகள் கொண்ட தனித் தன்மைபெற்று விளங்குகின்றன. ஒவ்வொன்றும் அப்பொழுது ஏதோ நிகழ்கின்ற செயலாகவன்றி சிக்கலான இணைப்புள்ள முழு அமைப்பின் செயல்பாடாகும். இவ்வாறு வரையறை செய்யப்பட்ட அகவய மாறுதல்கள் ஒவ்வொரு உயிர் வாழ்வனவற்றிலும் அதனுடைய குண இயல்புக்கும் வாழ்க்கையின் அமைப்புக்கும் ஏற்றவாறு நடைபெறுகின்றன. எல்லா இன்றியமையா இயக்கங்களும் எந்த அளவு மாறுபட்டு இருந்தாலும் இணைத்து ஓர் ஒழுங்கான சக்தி வாய்ந்த அமைப்பினைத் தனியனுக்குள் நிலைபெறச் செய்கின்றன. அகவய புறவயத் தூண்டுதல்களினால் மாறுபடுகின்ற நிலையில் தனியனகத்தே இதை நிலைபெறச் செய்யவேண்டும்".[1]

## வளர்ச்சி எவ்வாறு நிகழ்கின்றது ?

முன்னொரு பகுதியில் தனியன் எல்லாச் சமயங்களிலும் சமநிலையுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளதாகக் கூறப்பட்டுள்ளது. முட்டை கருத்தரித்த முதலாக, அதாவது, தனியன் தோன்றிய நிலையிலிருந்து இறக்கும்வரை ஒருவன் தூண்டுதலுக்கு எப்பொழுதும் எதிர்வினை கொண்டுள்ளான் என்று நாம் சொல்லலாம். அவனுடைய வாழ்க்கை முழுவதிலும் சூழ்நிலைத் தூண்டுதல்களுக்குப் பொருத்தப்பாடுகளைத் தொடர்ந்து ஏற்படுத்திக்கொண்டே இருக்கிறான். அவனது நடத்தையைப் பல அடுத்தடுத்த நிகழ்ச்சிகளுக்குத் தருகின்ற வெவ்வேறான எதிர்வினைகளின் கூட்டு என்று கருதலாம்.

எந்த ஏது அல்லது ஏதுக்கள் தனியனுடனும் அவனுடைய சூழ்நிலையுடனும் தொடர்புகொண்டு வளர்ச்சியை உண்டாக்குகின்றன என்ற கேள்வியை நாம் எழுப்பவேண்டும். தற்பொழுது நம்மால் இக்கேள்விக்குரிய முழுமையான பதிலைத் தர இயலாது. உண்மையில் நாம் விரும்புகின்ற வகையில் என்றும் இக்கேள்விக்கு பதில் அளிக்க இயலாது. நாம் தனியன்களையும் அவர்களது வளர்ச்சியை

[1] F. P. Boswell, 'Trial and Error Learning,' Psychological Review, 1947, Vol. 54, p. 290. Reproduced by permission of the journal and of the American Psychological Association.

யும் அறிந்தவரையில் அவை தூண்டுதல்களுக்குள்ள ‘எதிர்வினை களின்மூலமாக அமைக்கப்படுகின்றன என்று புலப்படுகின்றது. நாம் அடிக்கடி, சூழ்நிலை தனியன்மீது கொண்டுள்ள செயல் தன்மையைப்பற்றிப் பேசுகின்றோம். ஆனால், அந்தக் கூற்றுக்கு என்ன பொருள் என்றே அறியாது பேசுகின்றோம். தனியன் எப்பொழுதும் சூழ்நிலைக்கு எதிர்வினை அளிக்கிறான். அவன் சூழ்நிலையுடன் செயல் திறமுடையவனாய் இருக்கிறான். அவனைச் செயலில்லா இயக்கமில்லாப் பொருள் என்றோ சூழ்நிலைகளின் முத்திரைதான் பொறிக்கப்படு கின்றது என்றோ ‘கருத இயலாது. ஒரு நிகழ்ச்சியை நோக்கியுள்ள செயல், அந்நிகழ்ச்சியின் பொருளை மாற்றவல்லது. அத்தனியனுக்குப் பழைய நிகழ்ச்சியே என்றும் இருப்பதில்லை. செயல் நிகழ்ச்சிக்குப் புதுப்பொருள் தருவது அல்லாமல், அது நடத்தையைப் புதுக் குணங்களுள்ள வழிகளில் கொண்டுசென்று பழக்கங்களை (habits) உண்டாக்குகின்றது. இவ்வாறு தனியன் அவனது தூண்டுதல்களுக்குரிய எதிர்வினைகளால் வளர்ச்சி அடைகிறான் அல்லது திட்டமான அமைப்புக் கொள்ளுகின்றான். அவனது சூழ்நிலையின் தன்மையைக் கட்டுப்படுத்துவதனால் தனியனின் எதிர்வினைகளின் தன்மையையும் அதன்மூலம் அவனது வளர்ச்சியையும் கட்டுப்படுத்தலாம்.

மரபுநிலைச் சூழ்நிலைச் சக்திகள் ஒப்புமைகளும் மாறுநிலைகளும் வளர்வதற்கு என்றும் தொழிற்படுகின்றன. ஏதோ ஓர் இனப் பெருக்க முறையினால் உயிரி தோன்றுகிறது என்று பொதுவாக எல்லோரும் அறிவார்கள். இம்முறையைப் பின்பற்றியே மரபுநிலை ஆய்வு செய்யப்படுகின்றது. பொதுவாக, தந்தைக்கும் அவரது குழந்தைகளுக்கும் குறிப்பிடும்படியான ஒப்புமை இருக்கும். எப்பொழுதும் மரபுநிலையானது, ஒரு வரம்புக்குள், சூழ்நிலைக் கட்டுபாடுகள் எப்படியிருந்தாலும் தனியனது வளர்ச்சியை ஓர் எல்லைக்குள் கட்டுப்படுத்துகின்றது.

தனியனைச் சூழ்நிலையுடன் மோதவிடுதல் பழக்கம் என்றாலும், கூர்ந்து நோக்கினால் தனியன் சூழ்நிலையுடன் ஒவ்வொரு பகுதியிலும் நெருங்கிய தொடர்புகொண்டுள்ளான். உண்மையில், ஒரு வரையறையினால்தான் தனியனையும் சூழ்நிலையையும் பிரிக்கமுடியும். தனியன் உயிர் வாழும்வரை தொடர்ச்சியான இடைவினை அவைகளுக்கிடையே இருந்துகொண்டே இருக்கின்றது. தனியனைப் பற்றிய உயிரியல் தன்மையை விளக்கும் எந்த உரையும் ஒருவருக்கொருவர் இடையேயுள்ள உறவை வற்புறுத்த வேண்டும். இதனை இவ்வாறு கூறலாம்: ‘தனியன் மாறுகின்ற சூழ்நிலைக்குரிய எதிர்வினைத் துலங்கல்களைத் தருவதன்மூலம் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளக்கூடிய உயிரணு என்று கொள்ளலாம். வாழ்வின்போது இத்துலங்கல்களில் பல நிலைத்து நிற்கின்றன அல்லது குண இயல்பு

களாக உள்ளன. ஆதலின், தனியனை ஏறத்தாழ வரையறை செய்யப்பட்ட துலங்கல் வகைகள் கொண்ட உயிரணுவாகக் கருதலாம்.' அல்லது அவனைச் செயல் அடிப்படையில்மட்டுமே எண்ண நினைத்தால் நாம் இவ்வாறு கூறலாம். 'தனியன், உயிரணுவினால் சூழ்நிலைக்குரிய துலங்கலினால் வளர்க்கப்பட்ட நடத்தைவகைகளின் தொடர்புள்ள மொத்தக் கூட்டாகும்.' இங்குத் தனியனை உயிர்ச்சத்துவாகவோ அல்லது சூழ்நிலையாகவோ கருதப்படாமல் இவற்றிற்கு இடையே ஏற்படும் எதிர்வினையாகக் கருதப்படுகின்றது.

## உடல் வளர்ச்சியினைப் படிப்பதின் முக்கியத்துவம்

உடல் வளர்ச்சியினைப் பல்வேறு ஆய்வாளர்கள் தொடர்ச்சியான அளவுகள்மூலம் படித்தனர். இம் முறையின்மூலமாகத் தனியனது வளர்ச்சி வளைவுகளையும், வெவ்வேறு இன, பால் வேறுபாடுகள் கொண்ட வெவ்வேறு குழுக்களது வளைவுகளையும் குறிக்க முடியும். இம்முறையின்மூலமாகப் பெறக்கூடிய அளவுகள் அதிக காலத்திற்குத் தேவைப்படுமாயின், இம்முறை சிறந்த முறையாகும். அப்பொழுது அவை நிலையான, புறவயமான நோக்கையும், வளர்ச்சியினால் பல்வேறு ஏதுக்களின் விளைவுகளையும் ஆய்வு செய்ய்முடியும். அவ்வாறான அளவுகள், இளையோர் பருவத்தினரது சிறுவர்கள் சிறுமியர்களின் வளர்ச்சிக் காலத்தின் வேகத்தைப்பற்றிய நம்பத்தகுந்த குறிப்புகளைத் தருகின்றன. குறிப்புகள் வளர்ச்சியைப்பற்றிய அறிவியல் உண்மையை அறியும் பயனை அளிப்பதோடன்றி, வளரும் சிறுவர் சிறுமியர்களைப்பற்றி மேலும் அறிந்து கொள்வதற்கும், வழிகாட்டியாக இருப்பதற்கும் உதவுகின்றன. ஆதலின், பால்கள் வளருகின்ற விகிதத்திலுள்ள உடல் மாறுதல்கள்பற்றிய ஆய்வு ஒருவருக்கு, பெண்களிடத்துக் குழந்தைப் பருவத்தினின்று முதியோர் பருவத்திற்குச் செல்லுகின்றபோது ஏற்படுகின்ற அக்கறை மாற்றங்களைப்பற்றிய நல்ல வர்ணனையைப் பெறுகின்றது. ஒவ்வொரு பாலுக்குள் அதே வயதிலுள்ள மாறுநிலை, அதனுடைய உடல், கல்வித்திட்டத்திற்கு மிகவும் முக்கியமானதாகும். மேலும், மாணவர்களைப் பொதுவாக வகுப்புப் பிரிவுகளாகப் பிரிப்பதற்கும் இம் மாறு நிலையைக் கவனிக்கவேண்டும். ஏனெனில், ஒரே அளவு உடல் முதிர்ச்சி கொண்டுள்ள மாணவர்கள், அவர்களது சமூக அக்கறைகளும் செயல்பாடுகளும் ஒரே மாதிரி இருப்பதனால் ஒன்றாக விளையாட முற்படுவார்கள். மன ஆரோக்கிய சிக்கல்கள், ஒழுங்குமுறைச் சிக்கல்களைப் பொறுத்த நடத்தையில் ஒழுங்கின்மைகள், உடல்நலத் தொந்தரவுகள், மற்றத் தவறான பொருத்தப்பாடுகள் ஆகியவற்றை மாணவனின் உடல் வளர்ச்சியை ஆய்வதின்மூலம் அறிந்துகொள்ளலாம். இவ் உண்மைகளைப்பற்றிய அறிவு, தனியன்களின் தேவைகளுக்கு ஏற்ப அமைகின்ற நிகழ்ச்சியை ஏற்பாடு செய்யும் அடிப்படையாகவும்,

கல்வித் திட்டத்திற்குப் புறத்தே இருக்கின்ற செயல்களுக்கான மாணவர் பிரிவுகளை அமைப்பதற்கும், ஒழுங்கான சமூகத் தொடர்புகளை ஏற்படுத்தவும் உதவும்.

## உடலியல் மாறுதல்கள் (Physiological Changes)

அதிகாரம் 1-ல் குறிப்பிட்டுள்ள ஜி. ஸ்டான்லி ஹாலின் முக்கியத்துவம் வாய்ந்த படைப்பு இளையோர் பருவத்தில் தோன்றுகின்ற உடல் மாறுதல்களுக்கு அதிகக் கவனம் தரவில்லை. இது அவர் காலத்திலிருந்த உடலியலார்கள் குழந்தைகள், இளையோர், முதியோர் ஆகியோரின் உயிரியின் இயக்க முறைகளிலுள்ள மாறுதல்களை உணராததனால் ஏற்பட்டதாகும். பொதுவாக இன்றைய குழந்தை உளவியலார்கள் இளங் குழந்தை, சிறிய உருவில் உள்ள முதியோன் என்று கொள்ளலாகாது என்று ஏற்றுக்கொண்டுள்ளார்கள். அதுபோன்று இளையோன், உடலியல் எதிர்வினைகளில் ஒரு குழந்தையோ அல்லது முதியோனே அன்று. அதிகாரம் 1-ல் இளையோன் பருவத்தை ஒரு நிலைமாறும் பருவமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இது உடலியல் நடத்தை மாறுதல்கள் கொண்ட பருவம் ஆகும். இக்கருத்தினை இவ்வதிகாரத்தில் மீதியுள்ள பகுதியில் உள்ள இளையோர் பருவத்தில் ஏற்படும் வெவ்வேறான உடல் மாறுதல்களைப் பற்றியும், அவை இளையோனின் செயல்களில் உண்டாக்கும் மாறுதல்களும், அதன் விளைவுகள்பற்றியும் உள்ள விவாதங்களில் தெளிவு படுத்தப்பட்டுள்ளது.

### உடலியல் மாறுதல்களை ஆய்தல்

இளையோர் பருவத்தில் தோன்றுகின்ற உடல் மாறுதல்களின் தன்மையையும் அளவையையும் தீர்மானிக்கின்ற பிரச்சினைதான் இவ்வதிகாரத்தின் முக்கிய நோக்கங்களில் ஒன்றாகும். குழந்தைகளும் இளையோரும் அடிக்கடி 'மீக்கோளின் கொடுங்கோன்மை'யால் (tyranny of the norm) அவதியுறுகின்றனர். இவ்வதிகாரத்தில் தரப்பட்டுள்ள செய்திகள் யாவும் தனியனின் உடல் வளர்ச்சியை மதிப்பிடக்கூடிய தரத்தினைத் தருவதற்காகத் தரப்படவில்லை. இவ்வதிகாரத்திலுள்ள சராசரிகளை ஏற்றுக்கொள்வதற்கு, பூப்படையும் சமயத்திலிருக்கும் பரவலான தனியாள் வேற்றுமைகளையும் உடல் உறுப்புகளில் ஏற்படுகின்ற மாறுதல்களின் விகிதங்களையும் ஏற்றுக் கொள்ளவேண்டும். பல சிறுவர்களும் சிறுமியர்களும் சராசரியிலிருந்து மாறுபட்டு இருந்தாலும் இயல்பான வளர்ச்சியின் கோடுகளுக்குள் இருக்கின்ற அளவினையும் வலியுறுத்தல்வேண்டும்.

உயரம், பருமன், நிரந்தரப் பற்கள் தோன்றுதல், உடற்கட்டு அளவுகள் ஆகியவைபோன்று எளிதாக உடலியல் அளவுகளை

மதிப்பிட முடியாது. உடலியல் அளவீடுகளில் மிகவும் எளிதானது நாடித்துடிப்பாகும். அடிப்படை உயிரோடு பொருள் மாறுகின்ற வீதத்தைக் கணக்கிடச் சோதனைமுறை அளவீடு தேவைப்படுகின்றது. குருதி அழுத்தம் இவ்வதிகாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ள இன்னொரு அளவிடக்கூடிய இயல்பாகும். வெவ்வேறு வயது நிலைகளில் சுரக்கின்ற சுரப்பிகள், பால் வளர்ச்சி அந்தஸ்தை நிர்ணயிக்க மிகவும் பயன் உள்ளனவாகும். இதனை அளவிட ஒரு சோதனைக்கூடத் தொழில் வல்லுநர் அவசியமாகின்றார். மேலும், உடலியல் அளவீடுகளின் முடிவுகள் உடலுக்கு உள்ளும் புறமும் உள்ள பல பொருள்களினால் பாதிக்கப்படுகின்றவையாகும். இவ்வாறு ஒரு பருவத்தினனுடைய முடிவுகளோடு ஒப்பிட, முடிவுகள் எடுக்கப்பட ஆட்படுவோனின்மீது அளவெடுத்தலுக்குமுன் மிகவும் கவனம் உள்ள 12 மணி நேரக் காலக் கட்டுப்பாடு அவசியமாகும். வெவ்வேறு வயது நிலைகளில் ஏற்படுகின்ற உடலியல் மாறுதல்களைப்பற்றிய நெடுக்கு வகை ஆய்வுகள் சிறிய எண்ணிக்கையில் இருப்பதின் காரணம், நம்பத்தகுந்ததும் விளக்கிப் பொருள்கூறக் கூடியதுமான குறிப்புகள் கிடைப்பதற்குரிய தொல்லைகள் இருப்பதனாலேயேயாகும்.

### வளர்ச்சியுடன் தொடர்புள்ள உட்சுரப்பி ஏதுக்கள்

வளர்ச்சி மாறுதல்களுக்கும் கபம் சுரக்கின்ற சுரப்பியினின்று வெளிவருகின்ற உட்சுரப்பிச் சத்துகளுக்கும் திட்டமான தொடர்பு இருப்பதாக ஆய்வுகள் கூறுகின்றன. இச்சுரப்பியிலிருந்து வெளிவரும் இரண்டு உட்சுரப்பிச் சத்துகள் இத்தொடர்பில் மிகவும் முக்கியமானதாகும். இவற்றில் ஒன்று வளர்ச்சி உட்சுரப்பிச் சத்து. இது ஆரோக்கியமான நல்ல உடல் சத்துகள் பெறுகின்ற குழந்தையை, இயல்பான உடல் அளவைப் பெறுமாறு செய்கின்றது. இச்சுரப்பியினின்று வெளிப்படும் உட்சுரப்பிச் சத்துகளில் குறைபாடுகள் இருக்குமாயின் இயல்பான வளர்ச்சி தடைப்பட்டு ஒருவகையான பிட்யூட்டரி குள்ளர் உருவம் தோன்றும். இதற்கு மாறாக வளர்ச்சிப் பருவத்தில் உட்சுரப்பிச் சத்து அதிகமாக உண்டானால் பிட்யூட்டரி இராட்சத உருவம் தோன்றும்.

முதிர்ச்சியில் தனித்த முக்கியத்துவம் வாய்ந்த மற்றொரு கபம் சுரக்கின்ற உட்சுரப்பிச் சத்து பால் சுரப்பியைத் தூண்டுகின்ற கோனடு உட்சுரப்பிச் சத்து ஆகும். முன்னிளையோர் பருவத்தில் இவ் உட்சுரப்பிச் சத்தில் குறைவு இருக்குமானால் இயல்பான வளர்ச்சியில் தடை ஏற்பட்டு, கருப் பையும் உயிரினங்களின் விதைகளும் முதிர்ச்சி அடையும் தன்மையில் தடை ஏற்படும். இப் பால் சுரப்பியைத் தூண்டிவிடும் உட்சுரப்பிச் சத்து அதிகமாகச் சுரக்குமாயின் வயதுக்கு மிஞ்சிய (அல்லது பிஞ்சிலே பழுக்கும்) பால் முதிர்ச்சியை ஏற்படுத்தும். கபம் சுரக்கின்ற பால் உட்சுரப்பிகளின் காலத்

திற்கு ஏற்ற வினையின் முக்கியத்துவத்தை கிரியூலிச் (Greulich) கூறுகின்றார் :

'கருப் பையாவது விதைகளாவது வாழ்க்கையில் வெகு சீக்கிரமே தேவையான அளவிற்கு வேலைசெய்யத் துவங்கிவிட்டால் வளர்ச்சி உரிய காலத்திற்கு முன்பே தடை செய்யப்பட்டுக் குழந்தை பிறழ்வு நிலையான குள்ளனாக ஆகின்றான். இதற்கு மாறாக, கருப் பை விதைகள், விந்தின் உட்சுரப்பிச் சத்துகள் சுரக்க மிகவும் அதிகக் காலம் பின்தங்கினால் வளர்ச்சி, குறிப்பாகக் கை கால்களின் வளர்ச்சி பெரிதும் பின்தங்கும். பிறகு அலியின் தனித்தன்மை வாய்ந்த உடல் உறுப்புகளின் விகித இயல்பையும் அடைகின்றது. ஆதலின், இயல்பான வளர்ச்சியும் முதிர்ச்சியும் கபம் சுரக்கின்ற பால் உட்சுரப்பிச் சத்துகள் காலத்திற்கு ஏற்றவாறு வேலை செய்வதைப்பொறுத்தும் உள்ளன. அவ்வாறு இல்லாவிடில் வளர்ச்சி தடைப்பெற்று பல குறைபாடுகளும் ஏற்படுகின்றன.'[2]

பல ஆய்வுகள் குழந்தைகளின் பால்சுரப்பிச் சத்துகள் சுரப்பதைப்பற்றி நடந்திருக்கின்றன. பொதுவாக இவ் ஆய்வுகள், இரு பாலாருக்கும் ஆரம்பக் குழந்தைப் பருவத்தில் சுரக்கின்ற பால் உட்சுரப்பிச் சத்து ஆய்வுகள் கையாளுகின்ற முறைகளின்மூலமாகக் கணக்கிடமுடியாத அளவுக்கு மிகவும் குறைந்தே உள்ளது என்பதைக் காட்டுகின்றன. இளையோர் பருவத்தில் முதன் முதலில் அளக்கக்கூடிய அளவில் சிறு நீரில் வந்ததாக இவ் ஆய்வுகள் கூறுகின்றன. கிரியூலிச்சும் மற்றவர்களும் 64 சிறுவர்களது 120 சிறு நீர் சேகரிப்புகளில் உள்ள பால் உட்சுரப்பிச் சத்தினைத் தெளிவுசெய்து அதன் முடிவுகளிலிருந்து குறிப்புகளைத் தந்திருக்கின்றனர். அவர்கள் பால் உட்சுரப்பிச்சத்து சுரப்பதின் முக்கியத்துவத்தைப்பற்றிக் கூறும்பொழுது :

'வயது அதிகமாகும்பொழுதும், வளர்ச்சியின் அந்தஸ்து முன்னேற்றம் கொள்ளும்போதும் பால் உட்சுரப்பிச் சத்து துவக்கக் குழந்தைப் பருவத்தில் இருந்த அளவிடமுடியாத நிலைகளிலிருந்து முதியோனது இயல்புபோன்று அளவிடக்கூடிய நிலைக்குச் செல்லுவதாக முடிவுகள் கூறுகின்றன., பால் உட்சுரப்பிச் சத்தின் உயிரியல் தன்மைபற்றிய நேரடிச்சான்று இன்னும் கிடைக்கவில்லை. ஆனால், உண்மையில் ஆண் முதியோனின் சிறு நீரில் காணப்படும் உட் சுரப்பிச் சத்தைக் காட்டிலும் மாறுபட்ட தன்மையாய் இவை இருக்கும்

[2] W. W. Greulich, 'Physical Changes in Adolescence,' Forty-third Yearbook of the National Society for the Study of Education, Part, I. 1944, Chap. II, p. 16, (Quoted by permission of the Society).

என்பது சாத்தியமில்லை. இவ்வகையான உட்சுரப்பிச் சத்துகளின் குணங்களைப்பற்றி முன்னரே விளக்கப்பட்டுள்ளது. பூப்படையும்பொழுது ஏற்படும் பொதுவான அடிப்படை மாறுதல்களாக விதை பெரிதாதல், கருத்தரிக்கும் விந்து உண்டாதல் ஆகியவை கருத்தரிக்கின்ற அணுக்கள் கொண்ட சிறு குழாய்கள், பால் உட்சுரப்பிச் சத்துடன் கொள்ளும் செயல் வினைக்குத் தொடர்பு கொண்டுள்ளன. ஸ்ட்ராய்டு (steroid) பால் உட்சுரப்பிச் சத்துகள் சுரப்பதற்குக் காரணமாயுள்ள இரண்டாந்தர பால் மாறுதல்களை விதைகளின் இன்டர்ஸ்டிடியல் (interstitial) சுரப்பியில் உட்சுரப்பிச் சத்து செயல்படுவதற்குக் காரணமாகக் கூறலாம்.'[3]

நதான்சனும் (Nathanson) மற்றவர்களும் இவ்வாறான முடிவுகளையே குறிப்பிடுகின்றனர்.[4] சிறுவர்களுக்கும் சிறுமியர்களுக்கும் உரிய சராசரி வளைவுகள் வரைபடம் 2-1ல் தரப்பட்டுள்ளது. துவக்க ஆண்டுகளில் சிறு நீரில் சுரக்கும் ஆண்ட்ரோஜின்ஸ் (androgens) சிறுவர்களைக் காட்டிலும் சிறுமியர்களுக்கு ஒரு சிறிதளவே குறைவாக இருக்கிறது. இம் மாறுபாடு 11 வயதிற்குப் பின்பு குறிப்பிடும் வகையில் உள்ளது. 10, 11 ஆண்டுகளுக்கு முன்னர் சிறுவர்களுக்கும் சிறுமியர்களுக்கும் கணக்கிடக்கூடிய அளவுகளில் ஆண் பெண் உட்சுரப்பிச் சத்துகள் சுரக்கின்றன. ஆண்களிடமிருந்து சிறிதளவு அதிகமான ஆண் உட்சுரப்பிச் சத்துகளும் இதைக் காட்டிலும் அதிக அளவான பெண் உட்சுரப்பிச் சத்துகள் பெண்களிடமிருந்தும் பெறப்படுகின்றன. ஆனால், இம்மாறுதல்கள் மிகச் சிறிய அளவிலேயே இருக்கின்றன. பத்து வயதிற்குப் பின்னர் பதினொரு வயதுக்குள் பெண்பால் சுரப்பிச் சத்துகள் பெண்களிடம் அதிகமாகக் காணப்படுகின்றன. ஆண்பால் உட்சுரப்பிச் சத்துகளும் இணையாகவே அதிகமாகின்றன என்றாலும் பின்தங்கிய காலத்திலேயே ஏற்படுகின்றன.

ஆயினும் பூப்புப்போக்கு தோன்றும்பொழுதே திடீரென்று இனப் பெருக்க உறுப்புகளின் வேலை தொடங்குவதில்லை. முதன் முதலாக மாதப்போக்கு துவங்கும்போது கருப்பைச் சுரப்பி அதனுடைய முழு வளர்ச்சியில் 30 சதவீதம்தான் பெற்றிருக்கும். அவைகள் திறனுடன் வேலை செய்வது, அதனுடைய வளர்ச்சி நடைபெறுகின்ற முறையில்தானுள்ளது. இதுபோன்று ஓரளவு ஒப்பிட்டுப் பார்க்கக்

[3] W. W. Greulich., et al., 'Somatic Endocrine Studies of Puberal and Adolescent Boys', Monographs of the Society for Research in Child Development, 1942, Vol. 7, No. 3, p. 62.

[4] I. T. Nathanson, L. E. Towne, and J. C. Aub, 'Normal Excretion of Sex Hormones in Childhood,' Endocrinology, 1941, Vol. 28, pp. 851-865.

கூடியதும், ஆனால், அதே சமயத்தில் நீண்டகாலத்திற்கு நீடித்துள்ள பால் வளர்ச்சி சிறுவர்களிடம் ஏற்படுகின்றது. இந்த மாறுதல்களை இணையோன் சுரப்பிச் சத்துகளின் சமநிலைமூலம் பொறுத்துக்கொள்ள வேண்டும். இவ்வாறான பொருத்தப்பாடு தொடர்ந்து ஏற்பட வேண்டும். ஏனெனில், இனவிருத்தி உறுப்புகளின் வளர்ச்சி படிப் படியாகத் தொடர்ந்து இருக்கும்.

## பூப்படையும் காலம் (The Puberscent Period)

அட்டவணை 2-1-ல் அமெரிக்க நாடுகளில் பெண்களுக்கு முதல் பூப்புப் போக்கு ஏற்படுகின்ற காலத்தைப் பற்றிய ஆய்வுகளின் முடிவு களைப் பற்றிக் கூறியுள்ளது.




படம் 2-1

பால் உட்சுரப்பிச் சத்துக்கள் வெளியாதலில் உள்ள வயது மாறுதல்கள். கருப்பையினுள் உண்டாகும் பெண்பால் உட்சுரப்பிச் சத்து முக்கிய எஸ்ட்ரோஜினிக் உட்சுரப்பிச் சத்தாகும். (நதான்சன் தந்தது)

இவ் ஆய்வுகளின் முடிவுகள் ஒவ்வொன்றும் மற்றொன்றிற்கு ஓர் ஆண்டு அல்லது அதற்கு மேலான அளவில் மாறுபட்டுள்ளது. இவ்

வாறான மாறுபாடுகள் மாதிரி எடுப்பதில் தவறு ஏற்பட்ட காரணத்தாலும் அல்லது உயர்ந்த தனித்த மாதிரியாலும் அல்லது ஆய்வாளர்கள் பயன்படுத்திய வெவ்வேறான நுணுக்க முறை அல்லது அளவுக் கருவியினாலும் ஏற்படலாம். இருப்பினும், பெண்களில் பெரும்பான்மையோர் தங்களது 14-வது பிறந்த நாளுக்கு முன்னர் பூப்பு எய்தி விடுகின்றனர்.

## அட்டவணை 2—1

1930-லிருந்து வெவ்வேறான ஆய்வுகள்மூலம் கிடைத்த குறிப்புகள் அமெரிக்க நாடுகளில் பெண்களின் பூப்புப்போக்கின் சராசரி வயதைக் காட்டுகின்றன.

| எண் | ஆய்வின் பெயர் | ஆய்வு செய்யப்பட்ட எண்ணிக்கை | பூப்புப்போக்கு ஏற்படும் சராசரி வயது |
|---|---|---|---|
| 1 | பிரஷ் நிறுவனம் (Brush Foundation) | 200 | 12·6 |
| 2 | ஹார்வார்ட் வளர்ச்சி ஆய்வு | 248 | 13·0 |
| 3 | குழந்தை நல நிலையம் (கலிபோர்னியா பல்கலைக் கழகம்) | 81 | 12·8 |
| 4 | ஹெப்ரு அனாதையர் இல்லம் | 184 | 13·6 |
| 5 | ஹொராசு மேன் (ஹெப்ரு) Horace Mann (Hebrew) | 112 | 13·3 |
| 6 | ஹொராசு மேன் (ஹெப்ரு அல்லாதவர்) | 231 | 13·2 |
| 7 | ரிவர்டேல் அனாதையர் இல்லம் (நீக்ரோக்கள்) | 113 | 13·5 |
| 8 | தெற்கத்திய நீக்ரோக்கள்* | 175 | 13·7 |
| 9 | வடக்கத்திய நீக்ரோக்கள்* | 609 | 13·35 |

அமெரிக்கப் பெண்கள் மற்ற நாடுகள் அல்லது இனக்குழுவினரைக் காட்டிலும் சீக்கிரமே பூப்பெய்திவிடுகின்றனர். மில்ஸ் (Mills) நடத்திய ஓர் ஆய்வில் இது தெளிவாகிறது.[5] இவ் ஆய்வுகள்

* இது அமெரிக்க ஐக்கிய நாடுகளில் வடக்கிலோ அல்லது தெற்கிலோ பிறந்து அதே பகுதிகளில் வாழ்ந்திருக்கும் பொழுதே பூப்பு அடைந்த நீக்ரோக்களைக் குறிக்கின்றது.

[5] C. A. Mills, 'Geographic and Time Variations in the Body Growth and Age at Menarche,' Human Biology, 1937, Vol. 9. pp. 43-56.

மத்திய சீதோஷ்ண நிலை உள்ள நாடுகளில் உள்ள பெண்கள் சிக்கிரமே பூப்படைகின்றனர் என்றும் இவர்கள் குளிரான வடக்கிலுள்ளோர் அல்லது அதைக்காட்டிலும் அதிகச் சூடான தெற்கத்திய நாடுகளைக்காட்டிலும் சிக்கிரமே பூப்பெய்துகின்றனர் என்றும் காட்டுகின்றது. வெவ்வேறான சமூகப் பொருளாதார நிலைகளில் உள்ள குழந்தைகள் பூப்படையும் வயதைப்பற்றிய ஆய்வின் முடிவுகளை மேலும் பகுத்து ஆய்ந்தால், சீதோஷ்ண நிலையைக்காட்டிலும் வாழும் நிலை, தரம் ஆகியவை வெவ்வேறான குழுக்களின் பூப்படையும் வயதிலுள்ள மாறுதல்களுக்குக் காரணமாகின்றன என்று தெரியவருகின்றது. மைக்கில்சன் (Michelson) தரும் நீக்ரோப் பெண்களின் பூப்படையும் வயதுபற்றிய குறிப்புகள் அமெரிக்க நாடுகளின் வடக்குப் பகுதியிலுள்ள நீக்ரோப் பெண்கள், தெற்குப் பகுதியிலுள்ளோரைக்காட்டிலும் சிக்கிரமே பூப்படைவதாகக் கூறுகின்றன.[6] மேற்கிந்தியத் தீவுகளில் நீக்ரோக்களின் பூப்படைதல் அமெரிக்க நாடுகளின் தெற்கத்திய பகுதிகளுக்குப் பின்புதான் ஏற்படுகின்றது. இம் மாறுதல்கள் வெவ்வேறு குழுக்களில் காணப்படும் சராசரி வாழ்க்கைத் தரங்களுடன் நெருங்கிய தொடர்புகொண்டுள்ளன. அமெரிக்க நாடுகளின் பெண்கள் பூப்பு அடையும் சராசரி வயதினை ஐரோப்பாவிலுள்ளவர்களோடு ஒப்பிட்டால் இவ்வுண்மையை அறியலாம். ஜேகப்சன் (Jacobson) 288 நார்வீஜிய பெண்களின் பூப்படையும் சராசரி வயது 14·2 எனக் குறிப்பிடுகின்றார்.[7]

வரைபடம் 1-1-ல் தரப்பட்டுள்ள கூல்ட் கூல்டின் ஆய்வுகள் பூப்படையும் காலம் போன தலைமுறையைக்காட்டிலும் இத் தலைமுறையில் சிக்கிரமே ஏற்படுவதாகக் கூறுகின்றன.[8] நீக்ரோப் பெண்களது முந்திய குறிப்புகளுடன் சமீபத்திய குறிப்புகளை ஒப்பிட்டால், நீக்ரோப் பெண்கள் இன்று சிக்கிரமே பூப்படைகின்றனர் என்பதையும், அமெரிக்க நாடுகளில் நீக்ரோப் பெண்கள், வெள்ளைக்காரப் பெண்கள் பூப்பு அடையும் சராசரி வயதிலேயே பூப்படைகின்றனர் என்பதையும் காணலாம். ஒவ்வொரு தனித்த நிகழ்ச்சியையும் எடுத்துக்கொண்டால் பலத்த மாறுதல்கள் பூப்

[6] N. Michelson, 'Studies in the Physical Development of Negroes, Onset of Puberty,' American Journal of Physical Anthropology, 1944, Vol. 2, pp. 161-166.

[7] L. Jacobson, 'On the Relationship between Menarcheal Age and Adult Body Build Structure,' Human Biology, 1954, Vol. 26, pp. 127-132.

[8] H. N. Gould and M R. Gould, 'Age of First Menstruation in Mother and Daughters,' Journal of the American Medical Association, 1932, Vol. 98, pp. 1349-1352.

படையும் போக்கினைக் குறித்து இருப்பதைக் காணலாம்.[9] அப்பொழுது வாழ்க்கைத் தரத்தில் பிரதிபலித்துள்ள மரபுநிலை ஏதுக்கள், வாழ்க்கை நிலைகள் ஆகியவை பூப்படைதல் தோன்றுவதில் உள்ள பலத்த மாறுதல்களுக்குக் காரணமாகின்றன.

சிறுமியர்களைக்காட்டிலும் சிறுவர்களது பூப்படையும் சரியான காலத்தை நிர்ணயிப்பது மிகவும் கடினமாகும். சிறுமியர்களது முதல் பூப்புப்போக்கு போன்ற பிரித்துணர்கின்ற தனிப்பட்ட ஏது எதுவும் சிறுவர்களின் பூப்படைதலின் சரியான காலத்தை நிர்ணயிக்கவில்லை. எல்லீஸ், நைஜீரியன் பள்ளி மாணவர்களைப் பூப்படைந்த பிரிட்டன் மாணவர்களுடன் ஒப்பிட்டுக் குறிப்புகள் தந்துள்ளார்.[10] நைஜீரியன் பள்ளி மாணவர்கள் ஒரு தேர்ந்தெடுத்த குழுவினைக் குறிப்பதனால் பிரிட்டனிலுள்ள மாணவர்களுடைய வாழ்க்கைத் தரத்திற்குச் சமமான வாழ்க்கைத்தரம் கொண்டவர்கள் என்று கொள்ளலாம். சிறுவர்கள் பூப்படைவதின் அடிப்படையில் பிரிக்கின்ற முறை உள்ளார்ந்த தன்மை உடையதாகும். ஏனெனில், வளர்ச்சியின் ஒரு நிலை மற்றொரு நிலைக்குத் திடீரென்று சென்று, வருகின்றது. எல்லீஸ் உபயோகித்த தரமிடும் முறை பெரும்பான்மையோரை மூன்று குழுக்களாகப் பிரிக்க வழிசெய்தது. 9-லிருந்து 18 வயதுடைய 333 நைஜீரியச் சிறுவர்களைப் பிரிட்டனிலுள்ள 662 சிறுவர்களுள்ள கட்டுப்படுத்தப்பட்ட குழுவுடன் ஒப்பிடப்பட்டது. ஒவ்வொரு ஆண்டு வயதிலும் பூப்படைந்த மாணவர்களாகத் தரப்படுத்தப்பட்டவர்களின் சதவீதம் அட்டவணை 2-2-ல் குறிக்கப்பட்டுள்ளது. இவ்விரு குழுவிலும் பூப்படையும் வயதில் குறிப்பிடும்படியான மாறுதல்கள் இருப்பதாகத் தெரியவில்லை. 50 சதவீத சிறுவர்களுக்கு மேல் பூப்படையும் அல்லது முதிர்ச்சியடையும் சராசரி வயதானது பிரிட்டனிலுள்ள சிறுவர்களுக்கு 13·14 என்றும் நைஜீரியச் சிறுவர்களுக்கு 12·95 என்றும் கூறப்படுகின்றது.

[9] F. Boas, 'Studies in Human Growth,' Human Biology 1932, Vol. 4, pp. 307-350.

[10] R. W. B. Ellis, 'Age of Puberty in the Tropics,' British Medical Journal, 1950, Vol. 1, pp. 85-96. *தரமிடுவதற்குப் பயன்படுத்தப்பட்ட ஒப்பளவுகள். பூப்படையாதவர்கள்: பூப்பு மயிர் தோன்றாத காலமும் இன உறுப்புகளின் வளர்ச்சி குழந்தைப் பருவ நிலையில் இருக்கும் காலமுமாகும். பூப்படையும் காலம்: பூப்பு மயிர் தோன்றியும் ஆரம்ப நிலையானல் முழுவளர்ச்சி அடையாத இன உறுப்புகளின் வளர்ச்சி இருக்கின்ற காலமுமாகும். இளையோர் அல்லது பூப்படைந்த பின்னர் உள்ள காலம்: பூப்பு மயிர் வளர்ச்சியுறுகின்றது. இன உறுப்புகள் முன்னேற்றம் அடைகின்றன.*

### குருதி அழுத்தம், இருதயம், நாடித்துடிப்பு

இருதயத்தின் வளர்ச்சி உடலில் மற்ற உறுப்புகள் போன்றே நன்னிச்சையான ஒரு வழியைப் பின்பற்றுகின்றது. இளையோர் ஆண்டுகளில் அதனுடைய பருமன் இரண்டு மடங்காகின்றது. வரைபடம் 2-2-ல் இருதயத்தின் குறுக்கான விட்டத்தின் வளர்ச்சி குறிக்கப்பட்டுள்ளது.[11] குழந்தைப் பருவத்தில் பெரும்பாலும் சிறுவர்களின் இருதயம் சிறுமியர்களுடையதைக் காட்டிலும் பெரிதாக இருக்கின்றது. ஆனாலும் 9, 10 அல்லது 13, 14 வயதுகளில் சிறுமியர்களுடைய இருதயங்கள் பெரிதாக இருக்கின்றன. சிறுவர்களின் இருதயம் 13 வயதிலிருந்து துரித வளர்ச்சியைப் பெறுகின்றது. ஆனால், சிறுமியர்களின் இருதயங்கள் மெதுவாகவளர்கின்றன.

### அட்டவணை 2—2

நைஜீரியன் பள்ளி மாணவர்கள் பூப்படைதலைப் பிரிட்டன் மாணவர்களுடன் ஒப்பிடுதல்.

| வயதுக் குழு | பூப்படையும் சராசரி வயது* | |
|---|---|---|
| | நைஜீரியா | பிரிட்டன் |
| 9—10 | 6 | 0 |
| 10—11 | 6·5 | 5 |
| 11—12 | 21·2 | 13.5 |
| 12—13 | 40·8 | 35·8 |
| 13—14 | 38·9 | 43·7 |
| 14—15 | 48·5 | 39·2 |
| 15—16 | 18·7 | 29·5 |
| 16—17 | 16·7 | 18·2 |
| 17—18 | 0 | 11·4 |

நரம்புகளும் நாடிகளும் இருதயத்தின் வளர்ச்சி வகையைப் போன்ற வளர்ச்சியைப் பெற்றிருப்பதில்லை. அவை இளையோர்

[11] Based on the data from M. M. Marsh, 'Growth of the Heart Related to Bodily Growth and Adolescence', Journal of Pediatrics, 1953, Vol. 2, pp. 382-404.

*ஒவ்வொரு குழுவிலுள்ள எண்ணிக்கையின் சதவீதமும் 100-க்கு மேற்பட்டதாகும். ஏனெனில், பூப்படையும் காலம் பல சிறுவர்களுக்கு ஓர் ஆண்டுக்குமேல் ஆகின்றது. ஆதலின், பல சிறுவர்கள் ஒன்றுக்கு மேற்பட்ட முறைகள் கணக்கிடப்பட்டார்கள்.

பருவத்திற்கு முன்னர் துரித வளர்ச்சியையும் இளையோர் பருவத்தின் போது மிகக்குறைந்த வளர்ச்சியையும் காட்டுகின்றன. இதற்கு மாறாக, இதே சமயத்தில் இருதயம் துரித முன்னேற்றம் கொண்டுள்ளது.




4 லிருந்து 18 வயதினரது இருதயத்தின் குறுக்கு வெட்டு விட்டத்தின் வளர்ச்சி.

படம் 2-2

இவ்வாறு முன் இளையோன் பெரிய இரத்த நாளங்களையும் சிறிய இருதயத்தையும் கொண்டுள்ளான். இளையோர் பருவத்தில் இருதயத்தின் அளவிற்கும் இரத்த நாளங்களின் அளவிற்கும் உள்ள தொடர்பு விகிதம் மாறுவதற்குக் குருதியழுத்தம் காரணமாகிறது. ரிச்சி (Richey) என்பவர் நடத்திய ஆய்வின் முடிவுகளில் இதைக் காணலாம். வரைபடம் 2-3-ல் இவ் ஆய்வுகளின் முடிவுகள் குறிக்கப்பட்டுள்ளன.[12] துவக்கக் குழந்தைப் பருவத்தில் பால்களுக்கிடையே மிகச்சிறிய அளவு மாறுதலே இருக்கின்றது. ஆனால், 10, 13 வயதுக்குள் குருதி யழுத்தம் சிறுமியர்களிடத்துச் சிறுவர்களைக் காட்டிலும் அதிகமாகவே உள்ளது. இந்த அதிகமான குருதியழுத்தம் வயது ஆக ஆக அதிகமாகின்றது. சிறுமியர்களிடத்துச் சீக்கிரம் முதிர்ச்சி அடைகின்ற போக்குக்கு இது ஒரு சான்றாகும். மற்ற வளர்ச்சி இயல்புகளுடன் ஒப்பிட்டு இப்போக்கு நோக்கப்பட்டுள்

[12] H. G. Richey, 'The Blood Pressure in Boys and Girls Before and After Puberty,' American Journal of Diseases in Children, 1931, Vol. 42, pp. 1281-1330.

ளது. குருதியழுத்தம் சிறுமியர்களிடத்தும் 16 வயதிற்குப் பின்னர் குறைகின்றது. அவர்களுடைய பூப்புத் துவக்கத்திற்கும் குருதியழுத்தத்திற்கும் தொடர்புள்ளது என்பதற்குச் சில சான்றுகள் உள்ளன. ஆனால், குருதியழுத்தத்திற்கும் தனியனின் உயரத்திற்கும் குறைந்த தொடர்பே உள்ளது. பருமனுக்கும் குருதியழுத்தத்திற்கும் ஓரளவு தொடர்பு இருக்கின்றது.

இளையோன் அதிகமாக ஆற்றலைப் பயன்படுத்தியதன் விளைவாக இருதயம் அதிக வேலைக்கு உள்ளாகின்றது என்ற அச்சம் இன்றும் உள்ளது. இது பொதுவாக இருதயத்தின் வளர்ச்சிக்கும் குருதிக் குழாய்களுக்கும் இடையே இசைவு ஏற்படும் அடிப்படையில் விளக்கப்பட்டது. இவ்வெண்ணம் சிறிது காலம் தொடர்ந்து நிலவி வந்தது. பெனிக் (Beneke) என்பவர் 1879-லேயே இக் கருத்தினைக் குறித்துள்ளார்.[13] சேகரிக்கப்பட்ட குறிப்புகளின் அடிப்படையில் இருதயம், உடல் எடைக்கும் குருதிப் பெரு நாடியின் சுற்றளவுக்கும் ஏற்றாற்போல் கன அளவு கொண்டுள்ளதாகக் குறிப்பிட்டார். நுரையீரலுக்குரிய நாடி உடல் நீளத்திற்கு ஏற்றாற்போல் விகிதத்தில் அதிகரிக்கின்றது. இக் குறிப்புகள் அடிப்படையில் உண்மையானவை. ஆனால், இதனை அடிப்படையாகக்கொண்டு விளக்கிப் பொருள் கூறியனவும் பொதுமைகளும் தவறாகக் கருதச்செய்கின்றன. 1931ஆம்




படம் 2-3

பருவமடைதலின் தொடர்பில் அடிப்படை இயக்கங்கள் (ஷாக்)

[13] F. W. Beneke, Uber das Volumen des Herzens und die Weite der Arteria pulmonalis und Aorta ascendens. Marburg V. Theodor Kay, 1879.

ஆண்டிலேயே ஜெர்மன் நூலிலிருந்து மொழி பெயர்க்கப்பட்ட ஒரு உரை கூறியுள்ளது:

'ஒரு முதியோனின் இருதயம் குழந்தையின் இருதய அளவைக் காட்டிலும் மூன்று மடங்கு உள்ளது. இருதயத்திற்கு அருகிலுள்ள குருதிப் பெரு நாடியின் சுற்றளவு விகிதம் ஒன்றாகவே இருக்கின்றது. விவரிக்கப்பட்டுள்ள உடலியல் நிலைகளை அது ஏற்றுக்கொள்ளாத வரையிலும் எவ்வகையான பயிற்சி முறையும் நடைமுறை சுகாதாரத்தின் முதல் நெறிகளுக்கு உகந்ததாகாது என நாம் எளிதில் கண்டு கொள்ளலாம்.' சேகரிக்கப்பட்ட புள்ளி விவரங்களினின்று அவர் குறிப்பிடுவதாவது :

உடல் நிறை இருதயத்தின் கன அளவின் விகிதத்திற்கேற்ப அதிகரிக்கின்றது; மகா தமனியின் (aorta) சுற்றளவும் நுரையீரல் தமனியின் சுற்றளவும் உடல் உயரத்தின் விகிதத்திற்கேற்ப அதிகரிக்கின்றது.

கலிஃபோர்னியா வளர்ச்சி ஆய்வுகள் 1932-ல் துவங்கின.[14] அவை பயன் மதிப்புள்ள குறிப்புகளை இளையோர்களது வளர்ச்சி பற்றியும் இயல்புகள் பற்றியும் தந்துள்ளன. ஆறு ஆரம்பப் பள்ளிகளிலிருந்து எடுக்கப்பட்ட 5, 6-வது படிவ மாணவர்களில் மாதிரியாக எடுக்கப்பட்ட 215 மாணவர்கள் ஆறு மாதங்களுக்கு ஒரு முறை பல்வேறு வகைகளில் அளக்கப்பட்டனர். இவ் ஆய்வுகள், பூப்படையத் துவங்கியதும் சிறுமியர்களது பல உடல் மாறுதல்களைக் குறிக்கும். சராசரி வளர்ச்சி வளைவுகளின் போக்கில் குறிப்பிடும்படியான மாறுதல் ஏற்படுவதாகக் காட்டுகின்றன.[15] மாதப்போக்கு முதலில் தோன்றுகின்ற வயதை எடுத்துக்காட்டான பகுதியாகக்கொண்டு பூப்படைந்த காலத்திலிருந்து ஒவ்வொரு வழியிலும் ஆறுமாத இடைவெளிக்குப் பின்னர் உடலியல் அளவீடுகளும் பயன்மதிப்புகளும் கணக்கிடப்படுகின்றன. 52 மாணவர்களது முடிவுகளைப் பகுத்தாய்ந்த விவரம் வரைபடம் 2-3-ல் தரப்பட்டுள்ளது. இருதயம் சுருங்குவதினால் குருதி யழுத்தம் தொடர்ச்சியாக அதிகமாதல் பூப்படையும்பொழுது நின்றுவிடுகின்றது. இப்பருவத்திற்குப் பின்னர் தொடர்ச்சியான நிலையை இது கைக்கொள்கின்றது. நாடித்துடிப்பும் பூப்படைவதற்கு முன்னர் அதிகமாயிருக்கும். பூப்படைகின்ற ஆண்டிற்கு முன்னால் இது உச்ச கட்டத்தை அடைந்து பூப்படைந்த பின்னர்

[14] H. E. Jones, 'California Adolescent Growth Study,' Journal of Educational Research, 1938, Vol. 31, pp. 561-567.

[15] N. W. Shock, 'Physiological Changes in Adolescence', Forty-third Yearbook of the National Society for the Study of Education, Part 1, 1944, Chapter 4.

நாடித் துடிப்பு தொடர்ச்சியாகக் குறைந்து சாதாரண அளவை அடைகின்றது.

உடற்பயிற்சி, குருதி யழுத்தத்திலும் நாடித் துடிப்பிலும் குறிப்பிடும்படியான விளைவுகளை உண்டாக்கி இருக்கின்றது. ஷாக் (Shock) என்பவர் தேகப்பயிற்சி செய்த ஒரு நிமிடத்திற்குப் பின்னர் 13-லிருந்து 17·5 ஆண்டுகள்வரை உள்ள சிறுவர்கள் சிறுமியர்களின் நாடித் துடிப்புபற்றிய குறிப்புகளைத் தந்துள்ளார்.[16] இது வரைபடம் 2-4-ல் தரப்பட்டுள்ளது. இங்குக் காட்டப்பட்டது போன்றே நாடித் துடிப்பு பெண்களிடத்து ஆண்களைக் காட்டிலும் எல்லா வயது நிலைகளிலும் அதிகமாயுள்ளது. இம் மிகுதிப்பாடு, தனியனுக்கு வயதான பின்பு இரண்டு பாலாரிடத்தும் குறைகின்றது. நாடித் துடிப்பின் மிகுதிப்பாடு வேலை செய்யும் தடைகளுக்கு அதிகமான பிராண வாயுவைத் தரும் முறையாதலின் தனியனின் வயது, முதிர்ச்சி அடைந்த வயதைக் காட்டிலும் மிகுதியாக இருப்பின் உடற்பயிற்சியினின்று மீள்கின்ற விகிதம் குறைந்த அளவாக ஆகிவிடும்.

## அடிப்படை உயிர்ப்பொருள் மாறுபாடுகளின் வயது மாறுதல்கள்

பூப்படையும்பொழுது தோன்றுகின்ற மிகவும் குறிப்பிடும்படியான பால், உடலியல் மாறுதல்கள் உயிர்ப்பொருள் மாறுபாட்டில் தோன்றும் உடனடியான குறைவேயாகும்.[17] வளர்ச்சியின் இந்நிலையில் மூச்சு விடும் அளவின் வளர்ச்சி நின்று விடுகின்றது. இது வயதுக்கேற்ப மாறும் குருதி யழுத்தத்திற்கு முற்றிலும் மாறாக உள்ளது. பூப்புப் போக்கு ஏற்பட்ட பின்பு குருதி அழுத்தத்தில் மிகவும்

[16] *அதே நூலில் 68ஆம் பக்கத்தில் உள்ளது.*

[17] N. W. Shock op. cit., Chapter 4. *ஷாக் மேலும் கூறுகின்றார் : 'அடிப்படை உயிர்ப்பொருள் மாறுபாடு அல்லது அடிப்படை பிராணவாயு பயன்படுத்தலானது தனியனது அடிப்படைத் தேவையான சாதாரண இன்றியமையாத செயல்களுக்கு வேண்டிய சத்தினைக் குறிக்கின்றது. இவ்வடிப்படைச் சத்து தேவை என்பது கபம் சுரக்கின்ற சுரப்பியின் செயலுக்கு நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. கபம் சுரக்கின்ற சுரப்பி செயலில் பின் தங்கியிருந்தால் அடிப்படை உயிர்ப்பொருள் மாறுபாடு குறைந்திருக்கும். அடிப்படை உயிர்ப்பொருள் மாறுபாட்டை அளவிடும் பொழுது ஆட்படுவோன் ஒரு முகமூடிக்குள் மூச்சு இழுக்கின்றான். இவ்வாறு வெளியிடுகின்ற மூச்சு ஒரு நீண்ட ரப்பர் பையில் சேகரிக்கப்படுகின்றது. எட்டு நிமிட காலத்தில் வெளிவிடுகின்ற மூச்சின் கன அளவு அளக்கப்படுகின்றது. ஆட்படுவோன் சுவாசித்த வெளியுலகக் காற்றில் உள்ள பிராணவாயுவின் அளவை நாம் அறிவோமாதலின் வெளியிடும் காற்றிலுள்ள பிராணவாயு ஆட்படுவோன் எட்டு நிமிட காலத்தில் உட்கொண்ட காற்றினைக் குறிக்கின்றது.'*

குறைந்த அளவு மாறுதலே காணப்படுகின்றது. ஆனால், சிறுவர்கள் சிறுமியர்களின் பதின் (teen) ஆண்டுகளில் உயிர்பபொருள் மாறுபாடுகள் தொடர்ச்சியாகக் குறைந்துகொண்டே வருகின்றன. கலிஃபோர்னியன் ஆய்விலிருந்து கிடைத்த செய்திகளின் அடிப்படையில், இது வரைபடம் 2-5ல் காண்பிக்கப்பட்டுள்ளது. ஷாக் (Shock) என்பவரால் தரப்பட்டுள்ள சராசரி வளைவுகளைக்காட்டிலும், தனியனது வளைவுகள், குறைவான ஒரேபடித்தான தன்மை கொண்டுள்ளதைக் குறிப்பிடுகின்றார். வரைபடம் 2-5ல் காணப்படுவதுபோல சரி பாதியினருக்குமேல் குறிப்பிடும்படியான குறைவினைக் கொண்டு இருந்தனர்.




படம் 2-4

*உடற் பயிற்சி செய்த ஒரு நிமிடத்திற்குப் பின்னர் சராசரி நாடித் துடிப்பு.*

தனியனது வளைவுகள், பூப்படையும்பொழுது அல்லது அதற்கு முன் குறிப்பிடும்படியாக அதிகரித்தலைப்போலவே தெளிவான குறைபாடு கொண்டுள்ளதையும் காட்டுகின்றன. தனியாள் வரலாறு C 9ல் இதைக் காணலாம். வரைபடம் 2-6-ல் தரப்பட்டுள்ள ஓர் இளையோர்-பெண்ணினது (adolescent girl) வாழ்விலும் இதைக் காணலாம். இளையோர் பருவத்தில் காணப்படுகின்ற குறைவுகள் முதியோர் பருவத்தில் ஈடு செய்யப்பட்டு, அவை தொடர்ந்து நிலைபெறுகின்றன. அதில் இவ்வகையைச் சாராத தனியன்களும் உண்டு. இவ்வாறு குழுக் குறிப்புகளிலிருந்து தனிப்

பட்டவர்களைப்பற்றி வருமுன் கூறல் அபாயகரமான தன்மையைக் கொண்டவைகள் ஆகும். உயிர்ப்பொருள் மாறுபாடு விகிதத்தில்




*படம் 2-5*

*வயது மாறுதல்களினால் உயிர்ப்பொருள் மாறுபாடுகளில் ஏற்படும் மாற்றங்கள். ஒரே ஆட்படுவோரைத் திரும்பத் திரும்ப சோதிக்கப்பட்டதன் முடிவுகள்: ஒழுங்காக்கப்பட்ட குறிப்புகள்—ஷாக் தந்தவை.*

மந்த நிலை, சிறுவர்கள் சிறுமியர்கள் இருவரிடத்தும் ஏற்படுகின்றது. ஆசிரியரும் மற்றோரும் இளையோர் துணைகொண்டு இதைக் கவனிக்க வேண்டும். தனது செயல்களில் மந்த நிலைமை கொண்டுள்ள இளையோன் உயிர்ப்பொருள் மாறுபாடுகளில் குறைந்த விகிதத்தினால் அவதியுற்றிருந்தாலும் இருக்கலாம்.

## ஜீரணிக்கும் அமைப்பு

இளையோர் பருவத்தில் ஜீரணிக்கும் உறுப்புகளில் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் ஏற்படுகின்றன. வயிறு, அளவிலும் திறனிலும் வளர்ச்சியடைகின்றது. குண மாறுபாடுகள் ஏற்படுகின்றன. இளையோர் பருவத்தில் துரித வளர்ச்சி இருப்பதினால் முன்னைக் காட்டிலும் அதிக உணவு தேவைப்படுகின்றது. இளையோன் உணவுக்காகக் கடுமையான வேட்கை கொள்வது வயிறு பெரிய அளவில் இருக்கின்ற காரணத்தினால் இருக்கலாம். இளையோர் ஆண்டுகளில் இவ்

வேட்கை தொடர்ந்து இருக்கின்றது. இளையோர் சிறுவர்களும் சிறுமியர்களும் அவர்களது வாழ்க்கையில் முன்னைய ஆண்டுகளில் உட்கொண்டதைக்காட்டிலும் அதிகமாக உட்கொள்கின்றனர்.




படம் 2-6

*சிறுமியர்களது உயிர்ப்பொருள் மாறுபாடுகளின் சராசரித் தனியாள் வளர்ச்சி*

கலிஃபோர்னியா பல்கலைக் கழகத்தின் இளையோர்களைப்பற்றிய நெடுக்குவகை ஆய்வுகள், முன்னிளையோர், இளையோர், பின்னிளையோர் ஆகியோர்களது அதிகமான வேட்கைபற்றிக் குறிப்பிடுகின்றன. அட்டவணை 2-3ல் சிறுவர்கள் சிறுமியர்களின் ஆரோக்கியம், வேட்கைபற்றிய கேள்விகளின் துலங்கல்கள் தரப்பட்டுள்ளன.[18] முன்னிளையோரில் சரிபாதிக்கு மேலும், இளையோர் சிறுவர்களும் சிறுமியர்களும் ஒவ்வொரு சமயங்களில் வயிற்றில் கோளாறு ஏற்பட்டு வாந்தி எடுப்பதும் உண்டு எனக் கூறினார்கள். இக் கேள்விக்குரிய துலங்கலில் பால் வேறுபாடுகள் அதிகமாகக் காணப்படவில்லை.

[18] The data from Table 2-3 were taken from the Social and Emotional Adjustment. There are two forms of this: one for boys and one for girls. These present cumulative record of a group by items for a seven-year period. Complete records for the seven-year period were available for 71 boys and 72 girls.

ஆனால், பெண்கள் ஆண்களைக்காட்டிலும் உணவுப் பொருள்களைப் பார்த்தவுடன் வயிற்றுக் கோளாறு பெறுவது அதிகமாக இருந்தது. சிறுவர்களும் சிறுமியர்களும் வெவ்வேறான வயது நிலைகளில் அவர்களது உணவை விரும்பிச் சாப்பிடுபவர்களாகவும், பசி வேட்கை கொள்பவர்களாகவும் காணப்பட்டனர். அவர்கள் சாப்பிடும் பொருள்களைப்பற்றிய கேள்விகளின் துலங்கல்களில் பால் வேறுபாடுகள் காணப்படவில்லை. வாழ்க்கையின் இப்பருவத்தில் இளைஞர்கள் அவர்களது உணவாக விரும்புகின்றவை சூடான இறைச்சி உணவு (சமோசா, பப்ஸ் போன்றவை) (hot dogs), பன்னுக்குள் மாட்டிறைச்சியை வைத்த உணவு (hamburgers), தடித்த தோசைகள் (pancakes).* ஆகியவைகளாகும். ஜீரணிப்பதில் உள்ள தொல்லைகள் இவ்வயதில் பல்வேறு நிலைகளில் தோன்றுகின்றது. இது சிறுவர் சிறுமியர் கைக்கொள்ளும் சாப்பிடும் வழக்கத்தினால் ஏற்படுவதாகும். இதுபோன்று நல்ல சமநிலை இல்லாத உணவு சாப்பிடுவதினால் தோல் குறைபாடுகளும் தோன்றுவதைக் காணலாம்.

## இளையோர்களது ஊட்டத் தேவைகள்

நல்ல ஊட்டம், ஆரோக்கியத்துடனும், உணவு சரியாக ஜீரணிப்பதுடனும் தொடர்பு கொண்டுள்ளது. வளருகின்ற பருவத்தில் தேவையான அளவு ஊட்ட உணவின் முக்கியத்துவத்தை அதிகமாக உணர்த்துவதற்கில்லை. உணவினால் சேகரிக்கப்படுவதும் உணவுப் பொருள்களினால் உண்டாக்கப்படுகின்ற தசைநார்களும் எலும்புகளும் வளர்ச்சி விகிதத்திற்கு இணையாக மாறுதல்களைக் காட்டும்.[19] குழந்தை அவனுடைய உயரத்தில் மூன்று அங்குலம் அதிகமாகின்ற ஆண்டில், அவனுக்குத் தேவையான கால்சியம், பூப்பு அடைந்த காலத்திற்குப்பின் தேவைப்படுகின்ற அளவிற்கு இரண்டு மடங்காகும். அவனுடைய புரட்டீன் தேவைகளும் இக்காலத்தில் வேறு எந்தக் காலத்தையும்விட அதிகமாய் இருக்கும். அட்டவணை 2-4ல் ஒரு மாதிரி இளையோனது ஊட்டத் தேவைகள் தரப்பட்டுள்ளன.[20] ஒரு சாதாரண உயிர்ப்பொருள் மாறுபாட்டினால் தசை நார்களில் அதிக நைட்ரஜன்

* *தடித்த தோசைகள் என்பது மெக்ஸிகோ நாட்டின் உணவாகும். பார்வைக்குப் பெரிய அளவு பன் (Bun) போன்றிருந்தாலும் சுவையில் தோசைபோன்றிருக்கும்.*

[19] J. A. Johnston, 'Nutritional Problems of Adolescence', American Medical Association Journal, 1948, Vol. 137, pp. 1587-1588.

[20] Public Health Reports, 1955, Vol. 70, p. 176.

## அட்டவணை 2—3

இளையோர் சிறுவர் சிறுமியர்கள், சுகாதாரம் வேட்கைபற்றிய கேள்விகளுக்குத் தந்த துலங்கல்கள்.

| கேள்வி | H5L6* | | H8L9 | | H11L12 | |
|---|---|---|---|---|---|---|
| | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| நீ உனது ஆரோக்கியத்தைப் பற்றிக் கவலை கொள்கிருயா? | | | | | | |
| எப்பொழுதும் இல்லை ... | 52 | 62 | 52 | 50 | 59 | 54 |
| எப்பொழுதாவது ... | 38 | 31 | 46 | 47 | 38 | 42 |
| அடிக்கடி ... | 3 | 3 | 1 | 1 | 3 | 4 |
| எல்லா நேரங்களிலும் ... | 7 | 4 | 0 | 1 | 0 | 0 |
| உன்னுடைய வயிற்றில் கோளாறு ஏற்பட்டு இடர்ப் படுகின்ருயா? | | | | | | |
| எப்பொழுதும் இல்லை ... | 21 | 33 | 39 | 37 | 55 | 50 |
| எப்பொழுதாவது ... | 76 | 65 | 61 | 57 | 45 | 46 |
| அடிக்கடி ... | 1 | 1 | 0 | 6 | 0 | 4 |
| எல்லா நேரங்களிலும் ... | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| சில உணவுகளைப் பார்த்த வுடன் வெறுப்பு ஏற்படுகின் றதா? | | | | | | |
| எப்பொழுதும் இல்லை ... | 39 | 46 | 62 | 33 | 56 | 47 |
| எப்பொழுதாவது ... | 61 | 54 | 38 | 64 | 42 | 52 |
| அடிக்கடி ... | 0 | 0 | 0 | 3 | 0 | 0 |
| எல்லா நேரங்களிலும் ... | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| நீ உனது உணவை விரும்பி உட்கொள்ளுகிருயா? | | | | | | |
| எப்பொழுதும் இல்லை ... | 3 | 1 | 3 | 0 | 1 | 1 |
| எப்பொழுதாவது ... | 3 | 1 | 3 | 3 | 0 | 1 |
| அடிக்கடி ... | 32 | 24 | 23 | 21 | 15 | 18 |
| எல்லா நேரங்களிலும் ... | 62 | 74 | 70 | 76 | 83 | 79 |
| உனக்கு நல்ல பசி வேட்கை உள்ளதா? | | | | | | |
| எப்பொழுதும் இல்லை ... | 1 | 7 | 4 | 3 | 0 | 0 |
| எப்பொழுதாவது ... | 7 | 8 | 7 | 11 | 6 | 7 |
| அடிக்கடி ... | 31 | 22 | 17 | 26 | 18 | 31 |
| எல்லா நேரங்களிலும் ... | 61 | 61 | 72 | 60 | 76 | 62 |

* H5 மேல் ஐந்தாவது படிவத்தையும், L6 கீழ் ஆருவது படிவத்தையும் குறிக்கின்றன. இதேபோன்று மற்றவைகளையும் கொள்ளவேண்டும். அட்டவணையில் கொடுக்கப்பட்ட எண்கள் குறிப்பிடப்பட்டமுறையில் வினக்களுக்கு விடையளித்த சிறுவர் சிறுமியர்களுடைய சதவீதத்தைக் குறிக்கின்றன.

சேமித்து வைத்தல் காரணமாக முதியோர் வாழ்க்கையில் தேவைப் படுகின்ற புரட்டீனைக் காட்டிலும் மூன்று மடங்கு அதிகமாகத் தேவைப்படுகின்றது.

உயரம், பருமன், தசை நார்களின் கன அளவு, எலும்பு நாரின் கன அளவு, தனித்த இளையோனின் உயிர்ப்பொருள் மாறுபாட்டு விகிதம் ஆகியவைகளைப்பொறுத்து ஊட்டத் தேவைகள் மாறு படும்.[21] ஒரு சராசரி இளையோனது பசி வேட்கை ஊட்டத் தேவைகளைப்பற்றிப் பொதுவாக அறிந்து கொள்வதற்கு வழிகாட்டி யாக அமைகின்றது. ஆதலின், வளருகின்ற ஓர் இளையோனின் தாயாரது அச்சமான 'ஒரு நல்ல திருப்தியான உணவுக்குப் பின்னர் அவளது மகன் நொருக்குத் தீனிகளான முந்திரிப் பருப்பு, வெண் ணெய் ரொட்டிகளை அதிகமாக உண்கின்ருன்' என்பது உண்மை யில் கவலைப்படுவதற்குரியதன்று. நல்ல பொருத்தப்பாடு உடைய இளையோரது இவ்வாறு உண்கின்ற களியாட்டங்கள் குறிப்பிடும் படியாக அதிக நைட்ரஜன் தங்குவதைச் செய்வதில்லை.

## அட்டவணை 2—4

வயதுக்கு ஏற்றவாறு, மாதிரி இளையோர் சிறுவர்கள் சிறுமியர் களுக்குத் தினசரி தேவையான கலோரிகள் (ஜான்ஸ்டன் தந்தவை).

| வயது (ஆண்டு களில்) | தேவைப்படும் கலோரிகள் | | வயது (ஆண்டு களில்) | தேவைப்படும் கலோரிகள் | |
|---|---|---|---|---|---|
| | சிறுவர் கள் | சிறுமியர்கள் | | சிறுவர் கள் | சிறுமியர்கள் |
| 10 | 2,000 | 2,000 | 15 | 3,000 | 2,500 |
| 11 | 2,200 | 2,100 | 16 | 3,200 | 2,400 |
| 12 | 2,400 | 2,200 | 17 | 3,400 | 2,400 |
| 13 | 2,600 | 2,300 | 18 | 3,600 | 2,400 |
| 14 | 2,800 | 2,400 | 19 | 3,800 | 2,400 |

[21] J. W. Maroney and J. A. Johnston, 'Caloric and Protein Requirements and Basal Metabolism of Children from 4 to 14 Years Old,' American Journal of Diseases of Children, 1937, Vol. 54, p. 29.

## தனித்த வளர்ச்சி குண இயல்புகளும் பிரச்சினைகளும்

### தோல் சுரப்பிகள்

இளையோர் ஆண்டுகளில் தோலின் அமைப்பிலும் தோல் சுரப்பிகளின் செயல்களிலும் குறிப்பிடும்படியான மாறுதல்கள் ஏற்படுகின்றன. மிருதுவான, மென்மையான தோலினைக் கொண்ட குழந்தை, தடித்த கரடு முரடான தோலினைப் பால் முதிர்ச்சி ஏற்பட்டதும் பெறுகின்றது. தோலின் வியர்வைக் கால்கள் பெரிதாகின்றன. இது இளையோர்களது தோல் தொந்தரைகளினாலும் குறைபாடுகளினாலும் ஏற்படுகின்ற பிரச்சினைகளுடன் நெருங்கிய தொடர்புள்ள இயல்பாகும். மூன்றுவகையான தோல் சுரப்பிகள் இருக்கின்றன. ஒவ்வொன்றும் மற்றவைகளினின்று தனித்து இருக்கின்றது. (1) மெரோகிரின் சுரப்பிகள் (merocrine glands): இவை உடலில் தோலின் மேற் பரப்புகளில் பரவி இருக்கின்றன. (2) அபோகிரின் வியர்வைச் சுரப்பிகள் (apocrine sweat glands): இவை அக்குள், பால்மடி, பிறப்பு உறுப்புகள், ஏனல் பகுதிகள் (anal regions) ஆகியவற்றில் இருப்பனவாகும். (3) செபாஷஸ் சுரப்பிகள் (sebaceous glands): இவை எண்ணெய்ப் பொருள்களைத் தரும் சுரப்பிகளாகும்.

***மெரோகிரின், அபோகிரின் வியர்வைச் சுரப்பிகள் :*** அக்குளில் உள்ள மெரோகிரின் அபோகிரின் வியர்வைச் சுரப்பிகள் அக்குளுக்குரிய மயிர் (axillary hair) வளர்வதற்குமுன்னரே இளையோர் பருவத்தில் அதிகமாகச் செயல்படுகின்றன. அபோகிரின் சுரப்பிகள் சுரப்பது கொழுப்புச் சத்துக்கள் கொண்டவையாய் இருப்பதால், குறிப்பிடும்படியான நாற்றம் கொண்டதாயுள்ளன. பொதுவாகப் பூப்படைதலுக்கு முன்னர் அக்குளுக்குள் தோன்றும் வியர்வையின் தனித்த நாற்றத்தைக் கண்டுபிடிக்க முடியாது. ஆரம்ப இளையோர் பருவ ஆண்டுகளில் இது மிகவும் குறிப்பிடும்படியாக உள்ளது. மாதப் போக்குக் காலத்தில் அபோகிரின் வியர்வைச் சுரப்பிகள் பெண்களிடம் முறையாகச் சுரக்கின்ற வேலையில் ஈடுபடுகின்றன.[22] இக்காலத்தில், இளம் பெண்களும் சிறுமியர்களும் அக்குளில் அதிகமாக வியர்க்கும் அனுபவம் பெறுவதற்கு இது மிகவும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது.

[22] J. Klaar, 'Zur Kenntnis des weiblichen Axillarorgans beim Menschen,' Wiener Klinische Wochenschrift, 1926, Vol. 39, pp. 127—131.

*செபாஷஸ் சுரப்பிகள்* : பூப்படையும் காலத்தில் செபாஷஸ் சுரப்பிகளின் அதிகமான அளவும் செயலும் இளையோர் பருவத்தில் காண்கின்ற தோல் தொந்தரைகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன. பூப்படையும்போது இச்சுரப்பிகளின் அளவு செயல் இவற்றிற்கும், சுரப்பிக் குழாயின் அளவிற்கும் இடையே மாறுன விகித அமைப்பு இருக்கிறது. செபாஷஸ் சுரப்பிகளில் இருந்து சுரப்பது சரியாக வெளிவரவில்லை என்றால், சுரப்பிகளின் வாயில் களில் வியர்வைக் கால்கள், கட்டியான முளைகளாகப் படிந்துவிடு கின்றன. இவைகளைப் பொதுவாகத் தோலில் காணப்படும் பரு வகை என்றும் குறிப்பிடுவார்கள். இவைகள் பெரும்பாலும் மூக்கிலும் முகவாய்க் கட்டையிலும் காணப்படும். சுரப்பிகள், வாயில் மூடப் பட்டாலும் வேலை தொடர்ந்து செய்யும். இதனால் தோலின் பரப்பில் பருக்கள் தோன்றுகின்றன.

செபாஷஸ் சுரப்பிகள், மயிர்மூட்டுப்பைகளுடன் தொடர்பு கொண்டுள்ளன. உள்ளங்கைகள்போன்ற மயிர் இல்லாத தோல் பரப்புகளில் இச்சுரப்பிகள் இருப்பதில்லை. பூப்படையும்பொழுது செபாஷஸ் சுரப்பிகள் மாறுன விகித அமைப்புக்கொண்ட சிறு மயிர் களில் தொடர்புகொண்டுள்ளன. இது தற்காலிகமாகத் தவறுனப் பொருத்தப்பாட்டை ஏற்படுத்துகிறது. இதுதான் முகப்பருவிற் கும் முக்கிய காரணம் என்று கருதப்படுகிறது. முகப்பரு ஏற்படு வதற்கு ஆண் உட்சுரப்பிச் சத்துக்கள் அதிகமாகச் சுரப்பது காரண மாகிறது என்று கூறச் சான்றுள்ளது.

## தோலுக்குக் கீழுள்ள கொழுப்பின் பங்கீடு (Distribution of subcutaneous fat)

குழந்தைப் பருவத்தில் மார்பு, வயிறு, முதுகு ஆகியவற்றிலுள்ள கொழுப்பின் அளவு மிகவும் குறைந்து காணப்படுகிறது. ஆனால், சிறுவர்களின் பத்தாவது ஆண்டிலிருந்து தொடர்ச்சியாக அதிக மாகிக்கொண்டு வருகிறது. இக்குறைவு பெண்களிடத்து இவ் வாறு குறிப்பிடும்படியாக இருப்பதில்லை. வயிற்றைச் சுற்றியும் கொழுப்பு குழந்தைப் பருவத்தில் அதிகமாக ஏற்படுகிறது. பிற் கால ஆண்டுகளில் முதுகில் உள்ள கொழுப்பு குறிப்பிடும்படியாக அதிகமாகிறது. மார்பின்மேலும் அதிகமாகிறது. இதைக்காட்டி லும் அதிகமாக வயிற்றில் கொழுப்புச் சத்துக்கள் உண்டாகின்றன.

ரெய்னல்ட்ஸ் (Reynolds) நடத்திய ஓர் ஆய்வு, உடலின் பல்வேறு பாகங்களில் உள்ள தோலுக்குக் கீழ் உள்ள கொழுப்புச்

சத்தின் பங்கிடுபற்றி அளவைத் தன்மையான செய்தியைத் தருகின்றது.[23] வரைபடம் 2-7 சிறுவர் சிறுமியரது வெவ்வேறு வயது நிலைகளின் சராசரிகளையும் மைய எண்களையும் தருகின்றது. இவ் அளவீடுகள் ஆறு தனித்த மூலங்களின் முடிவுகளின் அடிப்படையில் எடுக்கப்பட்டவை ஆகும். வெவ்வேறு பகுதிகளின் வளர்ச்சி வகைகளில் சில மாறுபாடுகள் இருக்கின்றன. பொதுவாக, இவ் ஒப்புமைகள் மாறுதல்களைக்காட்டிலும் மனம் கவரும்வகையில் இருக்கின்றன. இவ் ஆய்வினை இரண்டாம் முறையாக உற்று நோக்கினால் எல்லாப்பகுதிகளிலும் பால் வேறுபாடுகள் இருப்பதையும், பெண்கள் ஆண்களைக்காட்டிலும் தடித்த கொழுப்பைப் பெற்றிருப்பதையும் காணலாம். ரெய்னால்ட்ஸ் ஆய்வு செய்ததில் உள்ள பெண்களின் சராசரிகள் தொடர்ச்சியான ஏற்றமும் சிறுவர்களது இளையோர் பருவக் குறைவும், இப்பிரச்சினைகுறித்து மற்ற ஆய்வாளர்கள் கண்ட முடிவுகளும் ஒத்து இருக்கின்றன. உயர்ந்த




படம் 2·7

சராசரிகள் (சிறுவர்கள்—நேர்கோடுகள், சிறுமியர்கள் - இடைவெளியுள்ள கோடுகள்) இடை எண்கள் (சிறுவர்கள் முழு வட்டங்கள், சிறுமியர்கள் கலப்பு வட்டங்கள்)—முழு கொழுப்பு அகலம் பற்றியது. [ரெய்னால்ட்ஸ்]

[23] E. L. Reynolds, 'The Distribution of Subcutaneous Fat in Childhood and Adolescence', Monographs of the Society or Research in Child Development, 1950, Vol. 15, pp. 1—189.

வயதுநிலைகளில் பெண்கள் வளைவுகளில் தாழ்வைக் கொண்டிருப்பதன் காரணம், இவ் வயதுநிலைகளில் உள்ள சிறிய எண்ணிக்கை கொண்டவர்களை எடுத்துக் கொண்டதனாலோ அல்லது தேர்ந்தெடுப்பதிலுள்ள சிக்கல் காரணமாகவோ இருக்கலாம். இருப்பினும் தோலுக்கடியிலுள்ள கொழுப்புச் சக்திகள் பெண்களுடைய 6—16 வயதுகளில் தொடர்ச்சியான வளர்ச்சியையும், ஆண்களுடைய 13—14 வயதில் குறைவும் கொண்டிருப்பதைக் காணலாம்.

**மயிர்களில் மாறுதல்கள்**

துவக்க இளையோர் பருவத்தில் மயிர்களிலும் தோலிலும் மாறுதல்கள் ஏற்படுகின்றன.

ஒருவருடைய வாழ்க்கைக் காலத்தில் மூன்று வகையான மயிர்கள் ஒன்றையொன்று தொடர்ந்து வருகின்றன.

லனுகோ: நிறமற்ற இம்மயிர் கருப்பைக்குள் உள்ள கடைசி மூன்று மாதங்களில் தோன்றுகின்றது.

வெல்லஸ்: பூனை மயிர் என்று கூறப்படும் இது லனுகோவை மாற்றிக் குழந்தைப் பருவத்தில் தொடர்ந்து இருக்கின்றது.

பெர்மினல்: இது குழந்தைப் பருவ மயிரை மாற்றி முதியோர் பருவத்தில் அதிகமாகக் காணப்படுகின்ற மயிராகும். இம்மாற்றம் பூப்படையும்பொழுது துரித முன்னேற்றம் கொண்டு முதியோர் வாழ்க்கை முழுதும் சிறிது குறைந்த முன்னேற்றத்தில் வளர்கின்றது.

தனியன் முதிர்ச்சி அடையத் துவங்குகையில் முன்மண்டையிலுள்ள மயிர் வரிகளின் அமைப்பு குறிப்பிடத்தக்க மாறுதலை அடைகின்றது இது, இரண்டாந்தரப் பால்குண இயல்பாகக் குறிக்கப்படுகின்றது. முதிராத இளஞ் சிறுவர் சிறுமியரது மயிர்வரி வில் போன்று தடையில்லாத வளைவுகொண்டு உள்ளது. படம் 2-8ல் தரப்பட்டுள்ள படங்களிலுள்ள மேல் வரிசை இதையே குறிக்கின்றது. முதிர்ந்த ஆண்களின் நிலைகளில், வளைவுள்ள மயிர்வரிசை முன்மண்டையின் ஒவ்வொரு பகுதியிலும் உள்ள ஆய்வு அமைப்புள்ள பகுதிகளால் பாதிக்கப்படுகின்றது. கிரிலுச்சும் மற்றவர்களும் இக்குண இயல்பு பின்தங்கி ஏற்படுகின்ற வளர்ச்சிஇயல்பன்று; துவக்க வளர்ச்சிஇயல்பு எனக் குறிப்பிடுகின்றனர்.[24]

[24] W. W. Greulich, R. I. Dorfman, H. R. Catchpole, C. I. Solomon and C. S. Culotta, 'Somatic and Endocrine Studies of Puberal and Adolescent Boys,' Monographs of the Society for Research in Child Development, 1942, Vol. 7, No. 3.

## முகமயிர்கள் (Facial hair)

குழந்தைப் பருவத்தில் மேல் உதடுகளின் வெல்லஸிலும், கன்னங்களிலும், முகவாய்க்கட்டையிலும் குறிப்பிடும்படியான பால் மாறுதல்கள் இல்லை. சிறுவர்களின், மேல் உதடுகளின் மூலைகளில் பூனைமயிர் பூப்படையும் காலத்தில் காணப்படுகின்றது. இவ் வளர்ச்சி ஒவ்வொரு மேல் உதட்டின் மூலையினின்றும் விரிவாகிக் கடைசியில் மெல்லிய மயிர்கள் கொண்ட மீசையாக மாறுகின்றது. பார்ப்பதற்குப் பெரிதாகவும், கரடுமுரடாகவும், கருப்பாகவும் இருக் கின்ற இம்மயிர் பூனைமயிரை ஈடு செய்கின்றது. பூப்படைவதி லிருந்து இம்மாறுதல் துவங்குகின்றது. மீசை கரடு முரடாக வளருகிறது. தனியன் இளையோர் பருவத்தை அடையும்பொழுது செறிவான நிறத்தைக் கொள்கிறது. இக்காலத்தில் மீசை வளர்ச்சி யடைந்து கன்னத்தின் மேல் பகுதியிலுள்ள வெல்லஸ் விட்டத்திலும் நீளத்திலும் அதிகமாகின்றது. இது தொடர்ந்து கரடு முரடாகி இளம் மீசை நன்குக வளர்கிறது. இதற்குப் பின்னர் மெல்லிய நீளமான, கரடு முரடாயுள்ள செறிவான நிறமுள்ள மயிர் முகவாய்க் கட்டையின் பக்கவாட்டிலும் கீழ்ப்பாகத்திலும் தோன்றுகின்றது. காதுகளுக்கு முகப்பிலும் முகத்தின் மேல் பகுதியிலும் இம்மயிர் தோன்றுகிறது. இவைகளும் தொடர்ச்சியாகக் கரடுமுரடாகி நன்குக வளர்ச்சி அடைந்து முடிவில் தாடியாக மாறுகின்றன.

### அக்குள் மயிர்

பூப்புமயிர் முழுவளர்ச்சி அடையும்வரை, பொதுவாக அக்குள் மயிர் தோன்றுவதில்லை. வெல்லஸ் முடியிலிருந்து அக்குளுக்குள் தோன்றும் முடிவுள்ள மயிரின் நிலைமாறுதலை உடலின் மற்றப் பாகங் களில் உள்ள மயிர்களின் மாறுதலுக்கு ஒப்பிடலாம். அக்குளுக்குள் தோன்றும் மயிரும் உடலின் மற்றப் பாகங்களில் வளரும் மயிரும் தொடர்புகொண்டு உள்ளன. சிறுவர்களிடம் கால், அடிப்பாகம் ஆகியவற்றில் தோன்றும் மயிர் இளையோர் பருவ ஆரம்ப காலங் களில் தோன்றி முதலில் துரித முன்னேற்றம் கொள்கிறது. உடல் உறுப்புகளில் தோன்றும் மயிர்களின் வளர்ச்சி முதலில் முன் கையின் மேற்பகுதியில் துவங்கிப் பின்பு கீழ்க்கைகளில் பக்கவாட் டிற்கு வந்து அதன் பின்பு கைகளின் பின்புறங்களில் ஏற்படுகின்றது.

நீளமான பூனை மயிரிலிருந்து, முடிவுள்ள மயிருக்கு நிலைமாறு வதில், ஓரளவு வளர்ச்சி கண்டபின்னர் காலின் நெடிது விலகிய பகுதியில் இம்மாதிரியான செய்முறை தொடங்குகின்றது. அது படிப்படியாகக் காலை நோக்கிப் பரவுகின்றது. மயிரால் மூடப்படும் பகுதிகளின் பெருக்கம் நடுப்பகுதியிலிருந்து துவங்கி அடிப்பாகம்

உடலுறுப்புகள் ஆகியவற்றிற்கு வெவ்வேறான வேகத்தில் வெவ் வேறான சிறுவர்களிடத்து ஏற்படுகின்றது. மயிர் வளர்கின்ற அளவு, தனியனுக்குத் தனியன் மாறுபட்டிருக்கும். வயது 18 அல் லது 19 ஆகின்றபோது பெரும்பான்மையான சிறுவர்களுடைய கைகளில் மயிர் வளர்ச்சி மிகவும் அதிகமாகக் காணப்படுகின்றது. கால்களிலும் தொடைகளிலும் பிட்டத்திலும் முடிவுள்ள மயிரின் சாதாரணமான வளர்ச்சி இருக்கின்றது. வயிற்றின் பக்கமாக உள்ள பகுதியில் மயிர் வளர்ச்சி வேறுபட்ட அளவுகள் கொண்டுள்ளது.

## பூப்பு மயிர்

பூப்பு மயிர் பூப்படையும்பொழுது தோன்றுகின்ற ஓர் இரண் டாந்தரப் பால் குண இயல்பாகும். ஆனால், பிறப்புக்குரிய உறுப்பு களது வளர்ச்சி நன்றாக ஏற்பட்ட பின்பும் வெல்லஸ் முடிவுள்ள



படம் 2-8

மயிர் வரியிலும் முகத்தோற்றத்திலும்
இளையோர் பருவ மாறுதல்.

மயிராக மாறிய பின்புதான் இவ் வளர்ச்சி ஏற்படுகின்றது. முடிவுள்ள மயிரின் பரப்பையும் அளவையும் உடலின் ஆண்மைத்தன்மை அளவுடன் ஒப்பிடுதல் வழக்கமாகும். ஆனால், சிறுவர்களிடத்து உடல் மயிர் இருக்கின்ற அளவிற்கும் பால்சக்தி வாய்ந்தவன் என்று கூறத் தகுந்த ஆண்மை உடையவனுக்கும் நெருங்கிய தொடர்புள்ளதாகக் கூற எந்தவிதமான அறிகுறியும் இல்லை.

## பால் வளர்ச்சித் தொடர்புள்ள எலும்பு வளர்ச்சி

பல ஆண்டுகள் அதே குழந்தைகளை உற்றுநோக்கி, அளவிட்டு, ஆய்வுகள் நடத்தியதில் வளர்ச்சிக்கும் உடல் முதிர்ச்சிக்கும் இடையேயுள்ள இடைத் தொடர்புகள்குறித்துப் பயனுள்ள செய்திகள் கிடைத்துள்ளன. இச்செய்தி, ஒரு தனிக் குழந்தையின் வளர்ச்சி மாறுதல்களின் தன்மையைப்பற்றி வருமுன் உரைக்கத் தேவையான அடிப்படையை ஓரளவு தந்துள்ளது. வளரும் தனியன்களைப்பற்றிய உற்று நோக்கல்கள், அதனை ஆதரிக்கும் மிருகங்களைப்பற்றிய சோதனைகள் ஆகியவை எலும்பு அமைப்பின் வளர்ச்சி இனவிருத்தி அமைப்புடன் நெருங்கிய தொடர்புள்ளதாகக் காட்டுகின்றன. மருத்துவமனை ஆய்வுகள் (Clinical studies) சாதாரண எலும்பு வளர்ச்சி, சரிவர வேலை செய்யாத கோனாடுகள் இருக்குமாயின் ஏற்படாது என்று அறிவிக்கின்றன. விதை எடுக்கப்பட்ட அல்லது குறைபாடுடைய கோனாடுகளைக் கொண்ட தனியன்கள் எலும்பு வளர்ச்சியில் குறிப்பிடும்படியாகப் பின்தங்கி இருப்பார்கள். உடலுறுப்புகளிலுள்ள எலும்புகளின் எபிபிசியல் (epiphyseal) உருகுதலால் குறிப்பிடும்படியான தடங்கலும் ஏற்படுகின்றது.

சோமடி உட்சுரப்பி மாறுதல்கள் இளையோர்கள் பூப்படைதலினால் ஏற்படுவதைப் பற்றிய பல ஆய்வுகள் ஏல் பல்கலைக் கழகத்தில் (Yale University) பல ஆண்டுகளாக நடைபெற்று வருகின்றது.[25] 476 தனியார்துறைப் பள்ளி மாணவர்களின் எலும்பு வளர்ச்சிநிலை அவர்களது அடிப்படையான இரண்டாந்தரப் பால் வளர்ச்சி இயல்புகளுடன் ஒப்பிடப்பட்டது. சிறுவர்கள் ஒவ்வொருவருடைய கை, மணிக்கட்டு, முழங்கை ஆகியவற்றை எக்ஸ்ரே படங்கள் எடுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு சிறுவனுடைய 'எலும்பு வயதும்' எலும்பு வளர்ச்சி எக்ஸ்ரே எடுக்கப்பட்ட பகுதிகளுடைய தரங்களின் அடிப்படையில் கணக்கிடப்பட்டுள்ளது. இச்சிறுவர் முதிர்ச்சி அடிப்படையில் ஐந்து குழுக்களாகப் பிரிக்கப்பட்டனர். பூப்படை

[25] W. W. Greulich, et al., 'Somatic and Endocrine Studies of Puberal and Adolescent Boys,' Monographs of the Society for Research in Child Development, 1942, Vol. 7, No. 3.

தலுக்கு முன்னர் உடல் முதிர்ச்சி ஏற்படாத அளவிலிருந்து, பின்னிளையோர் பருவத்திற்குரிய முதிர்ச்சிவரை, படிப்படியாக மாறுகின்ற நிலைகளைக் குறிக்குமளவில் இக்குழு பிரிக்கப்பட்டுள்ளது. இவ் ஐந்து முதிர்ச்சிக் குழுக்களில், ஒவ்வொன்றின் எலும்பு வளர்ச்சியைப்பற்றிய ஆய்வு, குழு 1-லிருந்து (மிகவும் முதிர்ச்சியடையாத குழு) குழு 5 வரை (மிகவும் முதிர்ச்சி அடைந்த குழு) சராசரி எலும்பு வயதில் படிப்படியாக அதிகரிப்பைக் காட்டுகின்றது. எலும்பு வயது, முதிர்ச்சி அடைகின்றபொழுது அதிகமாகின்ற போக்கினை அதே உண்மை வயது கொண்ட சிறுவர்களிடத்தும் காட்டுகின்றது.

இன விருத்தி உறுப்புகள் முதிர்ச்சியடைந்து, அவைகளுடைய இயக்கத்தில் மாறுதல்கள் உண்டாக்கும் காலம் ஏற்படும்பொழுதே அமைப்பின் வளர்ச்சி விகிதம் வேகந்தணிந்தவாறு இருக்கத் துவங்கிவிடுகின்றது. இவ்வேகக் குறைவு கால்களின் நீண்ட எலும்புகளால் ஏற்படும் மாறுதல்களுக்கு மிகவும் நெருங்கிய தொடர்புகொண்டுள்ளது. பால் முதிர்ச்சிக்கும் எலும்பு அமைப்பில் உள்ள மாறுதல்களுக்கும் இருக்கும் தொடர்பு எவ்வளவு நெருக்கமாக இருக்கிறது என்றால் சிறுமியர்களது நிலைகளில் அவர்களது முன்னிளையோர் பருவத்தின் கை, மணிக்கட்டுகளது எக்ஸ்ரே படத்தைப் பார்த்தே அவர்களது பூப்புப் போக்கு எப்பொழுது ஏற்படும் என்று பெரும்பாலும் வருமுன் கூறச் சாத்தியமாகும் அளவிலுள்ளது.[26]

### உடல் முதிர்ச்சியும் சக்தியும்

கலிஃபோர்னியா இளையோர் வளர்ச்சி ஆய்வினின்று உடல் வலிமை வளர்ச்சி நிலையுடன் தொடர்புகொண்டுள்ளது என்று கூறச் சான்றுள்ளது.[27] வரைபடம் 2-9ல் வெவ்வேறான பூப்புப் போக்குக் காலத்தைக் கொண்டு இரண்டு பெண்கள் குழுவின் வலக் கை வலிமையின் வளர்ச்சி ஒப்பிடப்பட்டுள்ளது. இப் பெண்களில் சீக்கிரமே முதிர்ச்சி அடையும் குழுவில் உள்ளோர் பன்னிரண்டு வயதுக்கு முன்னர்க் கைப்பிடி வலிமையில் துரிதமுன்னேற்றம் காட்டுகின்றனர். பின்னால் முதிர்ச்சியடையும் குழு, வலுவில் பின்தங்கியே உள்ளது. ஆனால் இரண்டு குழுக்களும் முடிவில் அதே நிலையை

[26] W. W. Greulich, 'The Rationale Assessing the Developmental Status of Children from Roentgenograms of the Hand and Wrist,' Child Development, 1950, Vol. 21, pp. 33—44.

[27] H. E. Jones, 'The Development of Physical Abilities,' Forty-third Yearbook of the National Society for the Study of Education, Part I. 1944, Chap VI

அடைகின்றன. ஒவ்வொரு குழுவும் கூடுதல் வளர்ச்சி பெறுகின்ற காலம் பூப்படையும்பொழுது ஏற்படுகின்றது.

ஷட்டில்வொர்த் (Shuttleworth) நடத்திய ஹார்வார்ட் வளர்ச்சி ஆய்வின் முடிவுகள் ஆறுவது வயதிலிருந்தே விரைவில் முதிர்ச்சி அடையும் சிறுவர்களின் தோற்ற அளவு பின்னால் முதிர்ச்சியடையும் சிறுவர்களின் தோற்ற அளவைக்காட்டிலும் உயர்ந்திருப்பதாகக் காட்டுகின்றன.[28] இது பதினெட்டாவது வயது வரை, தொடர்ந்து இருக்கிறது. இதுவே இவ் அளவிடுதல்கள் முடிவடைந்த பகுதியாகும். கைப்பிடி வலுவின் குழுச் சராசரிகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் ஆய்வு செய்யப்பட்ட, விரைவில் முதிர்ச்சி அடையும் ஒவ்வொரு சிறுவனும் 13-லிருந்து 16 வயதுகளில் வலிவின் தர அடிப்படைக்கு மேலிருந்தான். பின்னால் முதிர்ச்சி அடையும் சிறுவர்கள் இவ்வயதுகளின் தர அடிப்படைக்குப் பின்தங்கியே இருந்தனர்.




படம் 2·9

இரு பெண்கள் முதிர்ச்சிக் குழுவினரின் உடல் வலிவு வளர்ச்சி.

[28] See F. K. Shuttleworth, 'Physical and Mental Growth of Boys and Girls Ages Six through Nineteen in Relation to Maximum Growth', Monographs of the Society for Research in Child Development, 1939, No. 3.

அட்டவணை 2-5ல் அச்சிறுவர் சிறுமியரது விரைவு—சராசரி—பின்தங்கிய முதிர்ச்சிகள் வரிசைப்படுத்தித் தரப்பட்டுள்ளன. விரைவில் பின் தங்கி அடைவோர் குழுக்கள், ஒவ்வொரு அரசினர் பள்ளிகளிலுமுள்ள வெவ்வேறு வயது நிலைகளின் தீவிர பங்கீட்டிலும், 20 சதவீதம் இருக்கிறார்கள் என்று பொதுவாகக் கூற முடியும். சராசரிக் குழு அவர்களுடைய வயதுக்கான தர அடிப்படை முதிர்ச்சி பெற்றவர்களைக் கொண்டுள்ளது. ஜோன்ஸ் குறிப்பிடு கிறார்: 'மூன்று வளைவுகளும் ஏறத்தாழ இணைகோடுகளாகவே காணப்படுகின்றன. 13-15 வயதுகளில் விரைவு—பின்தங்கிய—முதிர்ச்சி உள்ள குழுக்கள் மட்டுமே சற்று மாறிய நிலை கொண்டுள்ளன. பின்னால் அவை குவிந்தால் அளவிடும் காலத்திற்குள் அவை ஒன்று சேருவதில்லை.'[29] அட்டவணை 2-2ஐ மேலும் ஆய்வோமானால் விரைவில் முதிர்ச்சி அடைவோர் 13 வயதில் உயர்ந்து காணப்பட்டாலும் பின்னால் வருகின்ற ஆண்டுகளில் அவர்களது உயர்வைத் தொடர்ந்து கைக்கொள்ள முடியவில்லை. உண்மையில் அதற்குப் பின்னர் சராசரி முதிர்ச்சிக் குழுவினின்று கீழே போய் விடுகிறார்கள். இது, உயரம் பருமன் பற்றிய முடிவுகளுடன் தொடர்பு கொண்டுள்ளது. ஆதலின், சிறுமிகளின் துரித பால் வளர்ச்சி, உடல் வளர்ச்சி, இயக்க வளர்ச்சி ஆகியவற்றின் நிறுத்தத்துடன் தொடர்பு கொண்டுள்ளதாகத் தோன்றுகிறது. இது சிறுவர்களைப்பொறுத்தவரை உண்மையன்று.

## உடல் வளர்ச்சியைப்பொறுத்த தனித்த பிரச்சினைகள்

எந்த ஒரு நிலைமாறும் காலமும் நிறைய பிரச்சினைகள் கொண்டதாய் இருக்கும். இளையோர் பருவத்துடன் தொடர்புள்ள உடலியல் மாறுதல்கள், இதுவரை சாதிக்காத கட்டுப்பாடுகளைத் தனியனுக்கு விதிக்கின்றன. பலரது நிலைகளில் அவைகள் தோன்றும் பொழுது, அவைகளைச் சந்திக்கும்வகையில் அவர்கள் தயாராகவும் இருப்பதில்லை. பூப்புப் போக்கு ஏற்படும் காலத்திற்குத் தன்னைத் தயார் செய்துகொள்ளாத பெண்ணுக்கு, அது ஒரு பிரச்சினையாக அமையும் அல்லது அவள் அதற்குத் தயாராக இருந்தாலும் அதற்கு அதிகமான கவனம் செலுத்தவேண்டும். என்றாலும், அது பிரச்சினை ஆகின்றது. இக் காலத்தில் ஏற்படுகின்ற மாறுதல்களுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கும் போக்கும் சில குழுக்களில் காணப்படுகின்றது. இது பெண்ணின் செயல்களுக்கு, இவ்வுடல் மாறுதல்களுக்குத் தேவைப்படுகின்ற அளவுக்கு மேல் வரம்பு விதிக்கிறது.

[29] H. E. Jones, Motor Performance and Growth. Berkeley and Los Angeles: University of California Press, 1949, pp. 56—57.

## அட்டவணை 2—5

சிறுவர் சிறுமியர் விரைவு—சராசரி—பின்தங்கிய முதிர்ச்சி அடைவோரின் சராசரி அளவீடுகள்.* [ஜோன்ஸ் தந்தது]

| வயது | சிறுவர்களின் சதவீதம் | | | சிறுமியர்களின் சதவீதம் | | |
|---|---|---|---|---|---|---|
| | விரைவு N=16 | சராசரி N=28 | பின்தங்கிய N=16 | விரைவு N=16 | சராசரி N=24 | பின்தங்கிய N=16 |
| 11·0 | 27·1 | 24·0 | 22·7 | 21·1 | 20·9 | 20·6 |
| 11·5 | 29·3 | 25·9 | 25·2 | 24·4 | 23·2 | 21·2 |
| 12·0 | 29·3 | 26·9 | 26·0 | 26·1 | 25·8 | 22·5 |
| 12·5 | 31·3 | 28·4 | 27·0 | 29·1 | 26·8 | 23·7 |
| 13.0 | 33·3 | 30·4 | 28·1 | 30·3 | 28·8 | 25·7 |
| 13·5 | 37·6 | 32·5 | 30·0 | 29·3 | 30·3 | 26·8 |
| 14·0 | 44·2 | 34·3 | 30·2 | 29·7 | 30·7 | 26·4 |
| 14·5 | 47·1 | 38·6 | 33·3 | 31·0 | 32·2 | 28·4 |
| 15·0 | 50·0 | 43·0 | 36·3 | 32·5 | 33·3 | 31·4 |
| 15·5 | 52·2 | 47·6 | 41·1 | 33·4 | 35·2 | 32·7 |
| 16·0 | 54·3 | 49·0 | 43·9 | 33·4 | 35·8 | 32·4 |
| 16·5 | 55·9 | 50·9 | 48·4 | 34·7 | 36·1 | 34·4 |
| 17.0 | 57·2 | 53·5 | 51·3 | 34·3 | 36·5 | 34·8 |
| 17·5 | ...... | 55·8 | 54·3 | 33·9 | 37·8 | 35·3 |

பால் முதிர்ச்சி வெவ்வேறுன வயதுகளில் ஏற்படுகிறது. என்றுலும், பதின் வயது சிறுவர்களும் சிறுமியர்களும் காட்டுகின்ற முக்கியத்துவத்தில் மாறுதல்கள் இருக்கின்றன. குறிப்பாகச் சராசரியிலிருந்து மிகவும் அதிகமாகப் பால் வளர்ச்சியில் மாறுபடுவோர்க்கு இவை துன்பமான பொருத்தப்பாட்டுச் சிக்கல்களை ஏற்படுத்துகின்றன. பால் முதிர்ச்சி சிக்கிரமே ஏற்படுகின்ற பெண்ணும் துன்பமான சூழ்நிலை இருப்பதை உணர்கிருள். அவளுடைய வயதுள்ள சிறுமியர்களைக் காட்டிலும் பால் முன்னேற்றம் அடையாவிடினும் அவளுடைய குழுவில் உள்ள சிறுவர்களைக்காட்டிலும் மிகவும் முதிர்ச்சி அடைந்தவளாகின்றுள். சிக்கிரம் முதிர்ச்சி அடையும் சிறுவன் இவ்வாறுன துன்பத்திற்கு ஆளாவதில்லை என்றுலும் அவனுடைய வயது நிலையிலுள்ள சிறுவர்களினின்று வேறுபட்டு இருப்பான். அவனுடைய குரல் மாற்றமும், பெண்களிடத்து அதிகமாகத் தோன்றுகின்ற அக்கறையும், நகைப்புக்கும் கேலிக்கும் அவனது முதிர்ச்சிக் குறைவான உடன் படிப்போரிடமிருந்து பெறுவான். இதுபோன்றே

***சிறுவர்கள் அவர்களது எலும்பு முதிர்ச்சியின் அடிப்படையில் வகைப்படுத்தப்பட்டுள்ளார்கள். சிறுமியர்கள் அவர்களது பூப்புப் போக்கின் அடிப்படையில் வகைப்படுத்தப்பட்டுள்ளார்கள்,**

பின்தங்கிய பால் முதிர்ச்சி கொண்ட சிறுவனே சிறுமியோ சமூகச் செயல்களில் அக்கறை காட்டமாட்டார்கள். ஆனால், குழுவில் உள்ள மற்ற உறுப்பினர்கள் இருபாலாரும் அவ் அக்கறைகளைக் காட்டுவார்கள். குறிப்பாகச் சிறுவன் ஏற்கெனவே சிறுமிகளைக்காட்டிலும் வளர்ச்சியில் மெதுவாக இருப்பதனால் அவனது பால் வளர்ச்சியில் அவனது குழுவிலுள்ள சிறுமிகளைக்காட்டிலும் பல ஆண்டுகள் பின் தங்கி இருப்பான். இந் நிகழ்ச்சி அவ்விளையோர்களுக்கு மனமுறிவு அளிக்கவல்ல ஏதுவாக அமைகின்றது.

தோல் குறைபாடுகளினாலும் முகப் பருக்களினாலும் தோன்றுகின்ற சிக்கல்கள் இவ்வயதின் சிறுவர்களையும் சிறுமியர்களையும் தொந்தரை செய்கின்றன. மேலும், அதனுடன் தொடர்பு கொண்டுள்ள மற்றொரு சிக்கல் உடல் நாற்றமாகும். சில இளையோர்களும் பின் இளையோர்களும் வாசனைப் பொருள்கள், வாசனைக் கரைசல்கள் போன்ற அலங்காரப் பொருள்களை, இப்பருவத்தில் தோன்றுகின்ற தனித்த சிக்கல்களைத் தவிர்ப்பதற்குப் பயன்படுத்துகின்றனர். சில பெண்களுக்கு அக்குள் மயிர் தோன்றுவது சிக்கலை விளைவிக்கும் ஏதுவாகும். ஆனால், இதற்கு மாருக ஆண்களின் கைகளிலும் கால்களிலும் மயிர் தோன்றுவதில்லை என்றால் அவர்களது ஆண்மை வளர்ச்சியில் குறை இருப்பதாகக் கருதுகின்றனர். இப்பருவத்தில் முகவாயிலும் மேல் உதட்டிலும் தோன்றுகின்ற மயிர் இளையோர் சிறுவனுக்கு இன்னுமொரு சிக்கலைத் தோற்றுவிக்கின்றது. இதைத் தவிர்க்க அவன் சவரம் செய்யக் கற்றுக்கொள்ள வேண்டும். உடலியல் மாறுதல்களின் தொடர்புள்ள சிக்கல்கள் பண்பாட்டு சக்திகளினால் பெருகுகின்றன என்பதில் ஐயமில்லை. இம்மாறுதல்கள் இளையோர் சிறுவர்களும் சிறுமியர்களும் பங்குபெறும் பால் உணர்வுகளுடன் பிரிக்க முடியாத தொடர்பு கொண்டுள்ளன. சிறுவர்களது வளர்ச்சியையும் ஆண்மையையும் நிர்ணயிக்கும் செயல்களையும் பாதிக்கும்வகையில் உள்ள எந்த மாறுதலும் அதிகமான துன்பத்தைத் தரவல்ல ஏதுவாகும். இதே போன்று, சிறுமியின் வளர்ச்சியையும் பெண்மைக் கோலம்பூண இருக்கும் பெண்ணினது பங்கைப் பாதிக்கும் எந்த மாறுதலும் துன்பத்தைத் தரவல்ல ஓர் ஏதுவாக இருக்கலாம்.

## அதிகாரச் சுருக்கமும் முடிவுகளும்

சமீப காலத்தில், இளையோர் ஆண்டுகளில் தோன்றுகின்ற உடல் மாறுதல்களைப்பற்றிய அதிகமான கவனத்தை நாம் காண்கிறோம். உயரம், பருமன் வளர்ச்சி மிகத் தெளிவாகக் காணப்படுவதாலும் எளிதாக அளக்கக் கூடியதாலும், இளையோர் உளவியல் மாணவர்களது கவனத்தை முதலில் இவ்வளவைகள் ஈர்த்தன. நாடித் துடிப்பு, குருதி அழுத்தம், உட்சுரப்பிச் சத்துகளின்

சுரத்தல் ஆகியவற்றில் குறிப்பிடும்படியான தனியாள் வேற்றுமைகள் இருக்கின்றன. ஆதலின், தனியனின் வளர்ச்சியைக் கணக்கிட இவ்வளர்ச்சியுறும் ஆண்டுகளில் எடுக்கப்படும் அளவுகள் மூலமாகக் கணக்கிடுதல் பாதுகாப்பானதாகும். வெவ்வேறு வயது நிலைகளில் உள்ள பெரிய குழுக்களைக் கொண்ட தனியன்களது சராசரியையோ தர அடிப்படையையோ நம்புவது சரியல்ல.

இளையோர் பருவத்தில் தோன்றுகின்ற உடல் மாறுதல்களில் உட்சுரப்பிகள் முக்கிய பங்கு வகிக்கின்றன என்பதற்குப் போதிய சான்றுகள் உள. அவை வழியினை வகுத்துப் பால் உந்துக்குத் தொடர்புடைய பல மாறுதல்களையும் உடல் வளர்ச்சிக்குத் தொடர்பான பல மாறுதல்களையும் தோற்றுவிக்கின்றன. கலிஃபோர்னியா நெடுக்குவகை ஆய்வுகள் மற்றும் பல ஆய்வுகள் இவ்வுடல் மாறுதல்களைப்பற்றிய தெளிவான கருத்துக்கு வேண்டிய குறிப்புகளைத் தருகின்றன. இம் மாறுதல்களின் குண இயல்புகள், அகவயப் புறவயச் சக்திகளின் கட்டுப்பாடுகளின் தொடர்பில் தெளிவான கருத்தினைத் தருகின்றது.

நமது சமூகத்தில் பல சிக்கல்கள், பழக்க வழக்கங்கள், மரபு முறைகள் ஆகியவைகளோடு உடல் மாறுதல்கள் தோன்றும் பொழுது உடன் தோன்றுகிறது. இளையோர்கள் சந்திக்கின்ற இம் மாறுதல்களுடன் தொடர்பு உள்ள குறிப்பிட்ட தொல்லைகளில் பலவற்றினை இவ் அதிகாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ் அதிகாரத்தின் சுருக்க உரையாகக் கூறுவதானுல், இச் சிக்கல்கள் உண்மையானதாகும். அவற்றை முதியோர்கள் ஒதுக்கவோ எள்ளி நகையாடவோ அல்லது வெறுப்புக் காட்டவோ கூடாது. இளையோனின் மாறுகின்ற நிலையால், அவன் இம் மாறுதல்களை ஒத்துக்கொள்ளக் கூடிய நிலையிலோ அல்லது அதற்குத் தயாராகவோ இல்லை.

## சிந்தனைக்குரிய பிரச்சினைகள்

1. கபஞ் சுரக்கின்ற சுரப்பி கோனட் தூண்டுதலுக்கு எவ்வாறு தொடர்பு கொண்டுள்ளது?
2. பெண்கள் பூப்படையத் துவங்கும்போது அவர்களகத்தே தோன்றுகின்ற குறிப்பிடத்தக்க உளவியல் மாறுதல்கள் எவை? சிறுவர்களிடத்து இது எவ்வாறு உள்ளது?
3. ஒவ்வொரு வயதிலும் ஏற்படுகின்ற உயிர்ப் பொருள் மாறுபாட்டின் தன்மையையும் மாறுகின்ற அளவினையும் விவரிக்க.
4. வெவ்வேறான தோல் சுரப்பிகள் எவை? இவை இளையோர் பருவத்தில் ஏன் முக்கியத்துவம் வாய்ந்தவை?

5. 8-லிருந்து 17 வயதுடைய பல குழந்தைகளை உற்று நோக்குக. அவர்களது வயது அதிகமாகும்பொழுது முடியில் எவ்வளவு மாறுதல்கள் தோன்றுகின்றன?

6. வரைபடம் 2-7ல் தரப்பட்டுள்ள பெண்களது பூப்புப் போக்குக்குப் பின்னுள்ள, முன்னுள்ள உடல் வலிவுகளைப் பற்றிய குறிப்புகளை விளக்கிக் கூறுக. இக் குறிப்புகளின் பொது முக்கியத்துவம் என்ன?

7. இவ் அதிகாரத்தில் விவாதிக்கப்பட்டவைகளின் அடிப்படையில், இளையோர் பருவப் பெண்களுக்கு நீ என்ன உடற் கல்வி நிகழ்ச்சியைத் தெரிவிப்பாய்?

8. இளையோரது சத்துத் தேவைகளைத் திர்மானிக்கும் ஏதுக்கள் எவை? உமக்குத் தெரிந்த இளையோன் ஒருவன் தேர்ந்தெடுக்கும் உணவுப் பொருள்களை அவ் இளையோனின் தேவைகளின் அடிப்படையில் மதிப்பிடுக.

9. நாடிக் குழாய்கள், இருதயம், நாடித் துடிப்பு ஆகியவற்றுடன் வளர்ச்சி என்ன தொடர்பு கொண்டுள்ளது? இவை குருதி அழுத்தத்துடன் என்ன தொடர்பு கொண்டுள்ளன? நீவிர் கண்ட பால் மாறுபாடுகள் எவை?

10. இளையோர்களது உடல் வளர்ச்சியைப்பற்றி மதிப்பிடுவதற்குப் பயன்படும் அளவுக் கருவியைத் தருக. அம் மதிப்பீடுகளினால் என்ன பயன் விளையும்?

11. குழந்தைப் பருவத்திலும் இளையோர் பருவத்திலும் உள்ள தோலுக்குக் கீழுள்ள கொழுப்பின் வளர்ச்சியில் உள்ள பால் மாறுபாடுகள் எவை? இம் மாறுதல்களின் சமூக, கல்வித் தொடர்புடைய பொருள்கள் எவை?

## தெரிவுசெய் நூற்பட்டியல்

1. Cole, L., 'Psychology of Adolescence' (Fourth Edition). New York: Rinehart & Co., Inc., 1954, Chap. 3.

2. Cruze, W. W., 'Adolescent Psychology and Development'. New York: The Ronald Press Co., 1952, Chap. 4.

3. Frank, L. K., 'Growth, Development and Physiological Functioning of Adolescents,' 'The Child in Health and Disease'. Baltimore; Williams and Wilkins Co., 1952, pp. 902—910.

4. Greulich, W. W.; Dorfman, R. I.; Catchpole, H. R.; Solomon, C. I. and Culotta, C. S., 'Somatic and Endocrine Studies of Puberal and Adolescent Boys,' Monographs of the Society for Research in Child Development, 1942, Vol. 7, No. 3.

5. Hurlock, E. B., 'Adolescent Development'. New York: McGraw-Hill Book Co., 1949, Chap. 2.

6. Jones, H. E., 'Development in Adolescence'. New York: Appleton-Century Crofts, Inc., 1943.

7. Kuhlen, R. G., 'The Psychology of Adolescent Development'. New York: Harper & Bros., 1952, Chap. 2.

8. Malm, M., and O. G. Jamison, 'Adolescence'. New York: McGraw-Hill Book Co., 1952, Chap. 4.

9. Seidman, J. M., 'The Adolescent: A Book of Readings'. New York: The Dryden Press, 1953, Chap. 4.

10. Shock, N. M., 'Physiological Factors in Development,' Review of Educational Research, 1947, Vol. 17, pp. 362-370. The author presents a brief summary of research on dietary and nutritional influences on development and the effects of disease on development.

11. Shuttleworth, F. K., 'Sexual Maturity and Physical Growth of Girls Age Six to Sixteen,' Monographs of the Society for Research in Child Development, 1937, Vol. II, No. 5.

12. Stolz, H. R., and L. M. Stolz, 'Somatic Development of Adolescent Boys'. New York: Macmillan Co., 1951.

# 3. உடல் வளர்ச்சியும் இயக்க வளர்ச்சியும்

இளையோர் பருவத்தில் ஏற்படுகின்ற மாறுதல்களில் தெளிவாகத் தோன்றுவது, பூப்படைவதற்கு முன்னர்த் தோன்றுகின்ற துரித வளர்ச்சியும், பின்னர் இளையோர் பருவத் துவக்க ஆண்டுகளில் குறைந்த வேகத்தில் தொடர்ந்து நடைபெறும் வளர்ச்சியுமேயாகும். முதியோனுக்கு இவ்வளர்ச்சி வேகமும், அதைச் சார்ந்துள்ள சிக்கல்களும் நகைப்புக் கிடமாய் உள்ளன. ஆனால், இளையோனுக்கு அவை மன உறுதியை இழக்கச் செய்பவைகளாகும். இளையோர் சிறுவன் கால்களை நாற்காலியின் கைகளின்மீது வழக்கமாக நீட்டிக்கொண்டு படுத்தவாறு இருப்பான். ஆனால், இப்பொழுது திடீரென்று அவன் பருமன் தாங்காமல் நாற்காலியின் கை உடைவதைக் காண்கின்றான். அவனது கால்களின் இயக்க ஆற்றலை உணர்கின்றான். ஷேக்ரி (Zachry) என்பவர் இளையோனுக்கு வளர்ச்சி எவ்வாறு சிக்கல்களை உண்டாக்குகிறது என்று காட்டுகின்றார். அவர்கள் மாறுகின்ற தங்கள் உடலுக்கு ஏற்றவாறு தங்களைப் பொருத்திக் கொள்வது அவசியமாகின்றது என்பதையும் தோற்ற அளவு அதிகமாவதனால் இயக்கச் செயல்களில் செயல் நயமற்ற தன்மை இருப்பதையும் உணர்வதைக் காட்டுகின்றார்.[1] இவ்வதிகாரம் இவ்வயதினரது உடல் வளர்ச்சி இயல்புகளைப் பற்றியும், இம்மாறுதல்களின் தொடர்பில் இளையோரிடம் தோன்றுகின்ற பிரச்சினைகளைப் பற்றியும் கூறுகின்றது.

## இளையோர் பருவத்தில் உடல் வளர்ச்சி

### உடல் வளர்ச்சி—ஆயும் முறைகள்

பொதுவாகக் குழந்தைகளின் உடல் வளர்ச்சி பற்றிய ஆய்வில் மூன்று முறைகள் பயன்படுத்தப்படுகின்றன. ஒரே பால், வயது,

[1] C. B. Zachry and M. Lighty, Emotions and Conduct in Adolescence. New York: Appleton-Century-Crofts, Inc., 1940.

இனம், சூழ்நிலை ஏதுக்கள் உள்ள குழந்தைகளுக்கிடையே அதிக வேறுபாடுகள் காணப்படுவதால் பருமன், அல்லது உயரம் பற்றிய ஆய்வு மட்டும் குறுகிய அளவுச் செய்தியினையே தருகின்றது. வரலாற்று அக்கறையின் அடிப்படையிலும், அடிக்கடி பயன்படுத்தப்படும் முறை என்று கருதுவதிலும் பருமன்-உயரம்-வயது ஆகிய தொடர்புகள்பற்றிய ஆய்வு முதன்மையானதாகும். ஆனால் தனியனது அளவுகளை மட்டும் எடுத்துக் கொண்டால் இதுதான் பொதுவாகப் பயன்படுத்தப் படுவதாகும். ஒரு குழந்தை கொழுப்புச் சத்துக்கள் சேர்வதனால் மட்டுமே பெரிதாக ஆகி விடலாம்; உயிரணுக்களின் இழை மூலங்களின் எண்ணிக்கையில் உண்மையான வளர்ச்சி இல்லாமல் இருக்கலாம் அல்லது இதற்கு நேர்மாறாகவும் இருக்கலாம். அவன் உயிரணுக் கொழுப்புகளுள்ள இழை மூலங்களை அதிகமாகப் பயன்படுத்தினால் பருமனை இழக்கலாம். அதே சமயத்தில் உயிரணுக்களின் இழை மூலங்களின் எண்ணிக்கை அதிகமாகலாம்.

உயரத்தின் அளவுகள் வளர்ச்சியைத் தெளிவாகச் சுட்டிக் காட்டுகின்றன. ஏனெனில், அவை எலும்புக் கூட்டின் நீள வளர்ச்சியைக் குறிக்கின்றன. இவ்வகையாக அளவிடுதலும் தவறுனதாகும். ஏனெனில், எலும்புகள் பருமனில் வளரலாம். எலும்புக் குழிகள் தோற்ற அளவில் குறையலாம். வேதியல் அமைப்புகளும் பெரும்பாலும் மாறியிருக்கலாம்.

உடல் அளவுகளைக் கணக்கிடுதல் எளிதாதலின் கவனமாக விளக்கிப்பொருள் கண்டால் இவை நிறைய வாய்ப்புகளைத் தருகின்றன. ஆனுல், அவை ஒரு பயிற்சியில்லாத பள்ளித்தாதியிடமோ அல்லது உணவு ஊட்டப்பணியாளரிடமோ இருக்குமானுல் அதனுல் பயன் விளையுமா என்பது ஐயப்பாடேயாகும். எளிதாக இருப்பதிலும் புறவயமாக இருப்பதிலும் தான் அவற்றை அளவிடுதலின் பயன் மதிப்புகள் உள்ளன. இதனுல் மீக்கோளிலிருந்து அதிகமாக மாறுபடுகின்றவர்களைக் கண்டு பிடிப்பதற்கு ஆசிரியருக்கும் பள்ளித்தாதிக்கும் பயன்படும் முறையாக இது உதவுகின்றது. இவ்வாறு மீக்கோளிலிருந்து அதிகமாக மாறுபடுவோரைச் சரியான மருத்துவர்களது கவனத்திற்குக் கொண்டுவர வேண்டும்.

பால்ட்வினும் (Baldwin) மற்றவர்களும் உடல் வளர்ச்சியைத் தொடர்ச்சியான சில துவக்க ஆய்வுகளை நடத்தினர்.[4] இம்முறையினுல் பால்ட்வின் தனியன்களது வளர்ச்சி வளைவுகளையும், பாலுக்

[4] B. T. Baldwin, 'The Physical Growth of Children from Birth to Maturity,' University of Iowa Studies in Child Welfare, 1921, Vol. 1, No. 1.

கேற்ற் வளைவுகளையும், வெவ்வேறு குழுக்களிலுள்ள தனியன்களது வளைவுகளையும் குறிக்க முடிந்தது. வரைபடம் 3-1-ல் உயரம் பற்றிய தனியனது வளர்ச்சி வளைவையும் சராசரி வளைவையும் ஒப்பிட்டுக் காட்டப்பட்டுள்ளது.[3] இம் முறையில் உடல் வளர்ச்




உயர அளவின் வளர்ச்சியினைக் குறிக்கும் தனி மனிதனது வளைவினையும், சராசரி மனிதனது வளைவினையும் ஒப்பிடுதல்.

படம் 3—1

சியை ஆய்வது உடனடியாக நடைமுறைப்பயன் அளிக்கப்போவதில்லை. ஆனால், ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு வைத்துள்ள அளவுகள் ஒரு நிலையான புறமுக வர்ணனையைத் தருகின்றன. அதன்

[3] H. V. Meredith, 'The Rhythm of Physical Growth,' University of Iowa Studies in Child Welfare, 1935, Vol. 11, No. 3, p. 112.

விளைவாக வளர்ச்சி பற்றிய பல ஏதுக்களை ஆய்வு செய்யச் சாத்திய மாகின்றது. இவ்வாருன இவ்விளைவுகள் தனியன்கள் எவ்வாறு வளர்கிருர்கள் என்பதையும், எதிர்கால வளர்ச்சி எவ்வாறு என்று வருமுன் கூற வழி செய்யவும், அறிவியல் அடிப்படையில் தீர்மானிக் கவும் வழி செய்கின்றன. அவை அறிவுக்குப் பொருத்தமான வழி காட்டித் திட்டத்தையும் நடைபெறக்கூடிய தாக்குகின்றன.

வளர்ச்சியை ஆய மூன்ரும் முறை வயதுகளின் அடிப்படையில் விளக்கிப் பொருள் கூறக் கூடிய அளவுகளின் முடிவுகளைக் குறிக் கின்றது. இவ்வயதின் அடிப்படையில் இரண்டு முறைகள் உள்ளன. அவைகளாவன: உடலமைப்பு வயது, உடலியல் வயது. சில ஆய்வாளர்கள் இவ்விரண்டினுக்கும் மாறுபாட்டினைக் காண்கிருர் கள். மற்றவர்கள் அவ்வாறு காண்பதில்லை. உடலமைப்பு வயது ஒரு குழந்தை அடைந்துள்ள உடல் வளர்ச்சியின் அளவினைக் குறிக்கின்றது. முதியோர் பருவத்தினை அடைவதற்கு, அல்லது உடல் முதிர்ச்சியில் அவன் அடைந்துள்ள வளர்ச்சியினை உட லமைப்பு வயது குறிக்கின்றது. இது, தோற்ற உருவம், பருமன், ஆரோக்கியம், வலிவு ஆகியவற்றைப் பற்றிய குறிப்புகளைக் கொண்டிருக்க வில்லை. உடலியல் வயது எனும் சொல், இன விருத்திச் சக்திகளின் வளர்ச்சியைப் பற்றிக் குறிப்பிடுகையில் பெரும் பாலும் பயன்படுத்தப் படுகின்றது. பொதுவாக மூன்று உடலியல் வயதுகள் பேசப்படுகின்றன. பூப்படையும் முன்னுள்ள பருவம், பூப்படையும் பருவம், பூப்படைந்த பின்னுள்ள பருவம்.

**உயரம், பருமன் வளர்ச்சிகள்**

குறிப்பாகக் குழந்தைகளின் வளர்ச்சிகளைக் காட்டும் சராசரி களின் எந்த அட்டவணையும் தவருன வழியைக் காட்டக் கூடும். அதே வயதுடைய குழந்தைகளின் எந்த ஒரு வளர்ச்சிப் பண்பை எடுத்து அளவிட்டாலும் அதிக அளவு மாறுதல்கள் கொண்டவர் களாய் இருக்கின்றனர். அவர்கள் அந்த ஒரு காலத்தில் எடுக்கப்படு கின்ற அளவுகளில் மட்டும் மாறுதல்களைக் கொண்டிருக்கவில்லை. அவர்களது வளர்ச்சியின் வேகத்திலும், விகிதத்திலும் மாறுதல்கள் கொண்டுள்ளனர்.

பூப்படைவதற்கு முன்னர் உயரத்தில் அதிகமான வளர்ச்சி ஏற்படுகின்றது. பூப்படைதல் சிறுவர்களைக் காட்டிலும், சிறுமியர் களுக்கு முன்னர் ஏற்படுவதனுல் இவ்வதிகமான வளர்ச்சி முன்னரே பெண்களுக்கு ஏற்படுகின்றது. நிக்கல்சனும் ஹேன்லியும் (Nichol-son and Hanley) உயர்ந்த வளர்ச்சியின் சராசரி வயது, சிறுமியர் களுக்கு 11·5 ஆண்டுகள் என்றும் சிறுவர்களுக்கு 18·8 ஆண்டுகள்

என்றும் கூறுகின்றனர்.[4] இந்த உண்மை வயதில் தான் உயரத்தில் அதிகமான அளவு கூடுதல் ஏற்படுகின்றது. 10-ல் இருந்து 13 வயது வரை உள்ள சிறுமியரது வளர்ச்சி, அதே வயதுடைய சிறுவர்களைக் காட்டிலும் உடற்பகுதியின் வளர்ச்சியைக் கணக்கிட சரியான அளவிடும் தோற்றத்தைத் தருகின்றது. சிறுமியரிடம் பதின்மூன்று ஆண்டுகளுக்குப் பின்னர் உடல் பகுதி மட்டுமே வளர்ச்சி யுறுகின்றது. அவ்வாண்டுகளில் பருமனின் சராசரிக் கூடுதல் வேறான தோற்றத்தைத் தருகிறது. அட்டவணை 3—1ஐக் கூர்ந்து கவனித்தால் உயரத்தில் துரித வளர்ச்சி கொண்டுள்ள காலம் துவக்கத்தில் ஏற்படுகிறது என்பதை அறியலாம். ஆகவே ஐந்தாவது ஆண்டுத் துவக்கத்திலிருந்து தொடர்ச்சியான கூடுதல் வளர்ச்சி ஏற்படுகிறது.[5]

ஆனால், பருமனை ஒரு சரியான வளர்ச்சி அளவாகப் பயன்படுத்த இயலாது. பருமன் தோலுக்கடியிலுள்ள கொழுப்பு அதிகமானதால் ஏற்பட்டதா அல்லது உறுப்பு மூலங்களின் நீர்ப்பெருக்கம் பெற்றதால் ஏற்பட்டதா என்று ஒருவரால் தெளிவாகப் பிரித்துணர முடிந்தால்தான் இதனால் பயன் விளையும்.

உயரம் பருமன் அதிகமாவதுமல்லாமல் உடல் உறுப்புகளின் விகிதங்களிலும் பொது மாறுதல்கள் ஏற்படுகின்றன. கைகளும், கால்களும் வெவ்வேறு உடல் உறுப்புகளின் வளர்ச்சி விகிதத்துடன் மாறுதலடைகின்றன. வரைபடங்கள் 3—2, 3—3ல் குறிப்பிட்டுள்ளது போன்று சிறுவர்களது தோள்கள் விரிவடைகின்றன.[6] சிறுமியர்களில் விரைவில் முதிர்ச்சியடையும் தனியன்கள் பரந்த இடுப்புகளையும் குறுகிய தோள்களையும் கொண்டிருப்பதாகவும், முதிர்ச்சியடைவதில் பின்தங்குவோர் அகன்ற தோள்களையும் குறுகிய இடையையும் கொண்டிருப்பதாகவும் கூறச் சான்றுகள் உள்ளன. வளர்ச்சி விகிதத்தில் மாறுதல்களும், முதிர்ச்சியடையும் வயதும் உடலமைப்பினைப் பாதிக்கின்றன. இவை தனியனது செயல்களையும், அக்கறையையும் பாதித்து ஆளுமை மாறுதல்களுக்கும் வழிகோலும் என்பதில் ஐயமில்லை. இளையோர் ஆளுமை பற்றிய படிப்பில் இதைப் பற்றி மேலும் கவனிக்கப் பெற்றுள்ளது.

[4] A. Nicholson and C. Hanley, 'Indices of Physiological Maturity; Derivation and Interrelationships,' Child Development, 1953, Vol. 24, pp. 3-38.

[5] K. Simmons, 'The Brush Foundation Study of Child Growth and Development,' Monographs of the Society for Research in Child Development, 1944, Vol. 9, No. 1, p. 57.

[6] N. Bayley and R. D. Tuddenham, 'Adolescent Changes in Body Build,' Forty-thrid Yearbook of the National Society for the Study of Education, Part I, 1944. p. 42.

உயரம்--பருமன் பட்டியல்கள் துவக்கத்திலேயே வளர்ச்சி யடைந்து விட்டன. இவை ஒரு தனிக் குழந்தையின் பருமன் அதனுடைய உயரத்திற்கு ஏற்றாற்போல் உள்ளதா என்று பார்க்க உதவுகின்றன. இப்பட்டியல்கள் உடல் அமைப்பில் இருக்கின்ற மாறுதல்களைக் கவனிக்கத் தவறிவிட்டன. அவைகளது பயன்பற்றிச் சிம்மன்சும் டாடும் (Simmons and Todd) 3 மாதத்திலிருந்து 13 வயதுவரை உள்ளோரின் பருமனையும் தோற்ற அளவினையும் பகுத்தாய்ந்து

## அட்டவணை 3—1

சிறுவர் சிறுமியர்களது 5 வயதில் இருந்து 17 வயதுவரை உள்ள உயரம்—பருமனின் சராசரிகள் (சிம்மன்ஸ் தந்தது).

| உண்மை வயது | சிறுவர்கள் | | சிறுமியர்கள் | |
|---|---|---|---|---|
| | உயரம் அங்குலங்களில் | எடை பவுண்டில் | உயரம் அங்குலங்களில் | எடை பவுண்டில் |
| 5 | 43·38 | 42·79 | 43·39 | 42·16 |
| 6 | 46·15 | 48·22 | 46·09 | 48·26 |
| 7 | 48·53 | 54·24 | 48·51 | 54·46 |
| 8 | 50·91 | 61·65 | 50·89 | 61·90 |
| 9 | 53·07 | 68·43 | 53·05 | 69·57 |
| 10 | 55·27 | 76·84 | 55·29 | 76·09 |
| 11 | 57·21 | 85·60 | 57·92 | 88·40 |
| 12 | 59·38 | 95·17 | 60·46 | 100·44 |
| 13 | 61·73 | 105·66 | 61·54 | 110·45 |
| 14 | 63·17 | 119·06 | 62·84 | 120·16 |
| 15 | 67·09 | 132·26 | 63·60 | 126·60 |
| 16 | 68·39 | 141·91 | 63·87 | 129·83 |
| 17 | 69·24 | 147·57 | 63·99 | 134·85 |

கூறுகின்றனர். 'தோற்ற அளவு—பருமன் தொடர்பு மிகவும் கீழான நிலையில் உள்ளது. ஒன்றை மற்றொன்றாய் உணரும் வகையில் ஒரு அளவாகப் பயன்படுத்த இயலாது.'[7] உடலமைப்பினைக் கவனிப்




படம் 8—2 படம் 8—3

பதற்கான தரத்தை ஏற்படுத்தப் பல முயற்சிகள் நடைபெற்றன. டியர்பான், ரோத்னே (Dearborn and Rothney) இருவரும் உடல் பருமனை வருமுன் கூறுவதற்கு வகையளிக்கும் ஒரு சமன் தொடர்பினைத் தந்தனர்.

14-லிலிருந்து 18 வயதுவரையுள்ள சிறுவர்கள் உடலின் பருமன், தோற்ற அளவினைக் காட்டிலும் 21o/o (சதவீதம்) திறம்வாய்ந்ததாக

[7] K. Simmons and T. W. Todd, 'Stature of Well Children: Analysis of Stature and Weight, 3 Months to 13 Years,' Growth, 1938, Vol. 2, pp. 93-134.

இருந்தது. இதே வயதுடைய சிறுமிகளது நிலைகளில் உயரம், பருமன் பட்டியலைக்கொண்டு பருமனை அளந்து எடுத்ததைக் காட்டி லும் 20o/o (சதவீதம்) அதிகம் என்று கணக்கிடப்பட்டுள்ளது.[8] வெட்சல் (Wetzel) என்பவர் ஏழுவரை உடலமைப்புகளைக் கொண்ட பட்டியலைத்தந்தார். உடல் தகுதியைக் கணக்கிடக்கூடிய உட லமைப்பு வகைகள் வரைபடம் 3-4ல் தரப்பட்டுள்ளன.[9] பருமன், உயரத்திற்கு எதிராக முதலில் குறிக்கப்பட்டிருக்கிறது. இதனுல் குழந்தையின் தோற்ற அளவு அமைப்பு ஆகியவற்றைக் கணக் கிட்டுப் பின்பு வயதுக்கு எதிராகத் தோற்ற அளவினைக் குறிக்க முடிகின்றது. இந்த உருவ வயதுத் தொடர்பு குழந்தை இச்சமயம் வளர்ந்துள்ள உடலமைப்பினைக் காட்டுகின்றது. இவ்வாறுன படம் குழந்தையின் உடல் வளர்ச்சியின் விகிதத்தையும், வழியையும் தீர்மானிக்கத் தொடர்ச்சியான அடிப்படையைத் தருகின்றது. குழந்தை தன்னுடைய வளர்ச்சியில் நிலையாக முன்னேறுமானுல் உயரத்திலும், பருமனிலும் உள்ள வளர்ச்சி சாதாரண வளர்ச்சி என்று கருதப்படுகின்றது.

### வளர்ச்சியில் தனியாள் மாறுதல்கள்

பூப்படைதலுக்குச் சில ஆண்டுகளுக்கு முன்னும் பின்னுமுள்ள தனியாள் வளர்ச்சி வளைவுகளைப் பெறுவதே, வளர்ச்சியில் எப் பொழுது துரித முன்னேற்றம் உள்ளது என்று கண்டுபிடிப்பதற்குச் சரியான வழியாகும். இருபது ஆண்டுகளுக்கு முன்னுல் 60 சிறுமி களைக் கொண்டு நடந்த ஆய்வு இம்முறையில் நடத்தப்பட்டதால் இப்பிரச்சினையை ஓரளவு தெளிவாக்குகின்றது.[10] பூப்படைதலுக்கு முன்னைய ஆண்டில் உயரத்திலும், பருமனிலும் அதிகமான கூடுதல் ஏற்பட்டது. 12 வயதில் அல்லது அதற்குக் குறைவான வயதில் அல்லது 13 வயதில் அல்லது 14 வயதில் அல்லது 15 வயதில்கூடப் பூப்படைகின்ற சிறுமிகள் பூப்படைவதற்கு முன்னைய ஆண்டில் பருமனில் அதிகக் கூடுதல் பெற்றனர். இது பூப்படைதலுக்கு இரண்டு ஆண்டுகளுக்குமுன் ஏற்பட்ட பருமன் கூடுதலைக்காட்டிலும் அதிகமாகும். பூப்படைகின்ற ஆண்டில், பூப்படைந்த மறு ஆண்டைக்

[8] W. F. Dearborn and J. W. M. Rothney, 'Basing Weight Standards upon Linear Bodily Dimensions', Growth, 1938, Vol. 2, pp. 197-212.

[9] N. C. Wetzel, 'Physical Fitness in Terms of Physique, Development and Basal Metabolism', Journal of the American Medical Association, 1941, Vol. 116, pp. 1187-1195.

[10] G. E. Van Dyke, 'The Effect of the Advent of Puberty on the Growth in Height and Weight of Girls', School Review, 1930, Vol. 38, pp. 211-221.

காட்டிலும் அதிகமான பருமன் கூடுதல் பெற்றுள்ளது. உயரத்தைப் பொறுத்த அளவிலும் இதுவே உண்மையாகின்றது. பள்ளிமாணவர் களில் 6-லிருந்து 17 வயதுவரை உள்ள 1,817 சிறுமிகள், 6-லிருந்து 18 வயதுவரை உள்ள 1,884 சிறுவர்கள் ஆகியோருடைய மனித உடல் சார்ந்த அளவைக் குறிப்புகளைப் பகுத்தாய்ந்து அவர்களது வளர்ச்சி, பருமன், உயரம், உயரம்-பருமன் இவற்றிற்கு இடையே யுள்ள தொடர்புகள் ஆகியவற்றை ஒப்பிட்டனர். ஆட்படுவோர் புறமுக ஒப்பளவு அடிப்படையில் மூன்று முதிர்ந்த குழுக்களாகப் பிரிக்கப்பட்டனர். பொது முடிவுகளாவன: (1) உயரம் பருமன் தொடர்பில் உள்ள மாறுதல்கள் மூன்று குழுக்களின் உடற்கட்டின் மாறுதல்களைக் குறிக்கின்றன. (2) அதிகமான பருமன் அல்லது குறைவான பருமன் பற்றிய கூற்றுகள் முதிர்ச்சி ஏதுவின் முக்கியத் துவத்தைப் புறக்கணித் திருக்கக்கூடாது. (3) உயரம் பருமனால் அளவிடப்படுகின்ற வளர்ச்சி பூப்படைவதற்கு முன்னர்ச் சிறிதளவு துரித முன்னேற்றம் கொண்டுள்ளது. (4) வெவ்வேறான 15 ஆண்டு களுக்கு மேலுள்ள, முதிர்ந்த சிறுமிகள் குழுக்களிலும் அல்லது வெவ்வேறான 17 ஆண்டுகளுக்கு மேலுள்ள முதிர்ந்த சிறுவர்கள் குழுக்களிலும் உள்ளோரது உயரங்களில் குறிப்பிடத்தக்க மாறு தல்கள் இல்லை. (5) 13 ஆண்டிற்கு முன்னர்ப் பருவமடைகின்ற சிறுமிகள் அனைவரும் 6-லிருந்து 17 வயதுவரை ஒவ்வொரு வயதி லும் அதிகப் பருமனுடையோராக இருந்தார்கள். இவர்கள் இவ் வயதுக்குப் பின்னர்ப் பருவமடைவோரைக் காட்டிலும் அதிகப் பரும னுடையோராக இருந்தார்கள். 13 வயதில் இருந்து 14 வயதுக்குள் பருவமடைவோர் 14ஆவது வயதுக்குமேல் பருவமடைவோரைக் காட்டிலும் எல்லா வயது நிலைகளிலும் அதிகப் பருமன் உடையவராய் இருந்தனர். (6) 14ஆவது பிறந்த நாளுக்குமுன் பருவமடைகின்ற சிறுவர்கள் அவ்வயதிற்குப்பின் பருவமடைகின்றவரைக் காட்டிலும் அதிகப் பருமனுடையவராய் இருந்தனர். 14-லிலிருந்து 15ஆவது பிறந்த நாளுக்குள் பருவமடைகின்றவர்கள் 15ஆவது பிறந்த நாளுக் குப் பின்னர்ப் பருவமடைகின்றோரைக் காட்டிலும் அதிகப் பருமன் உடையோராய் இருந்தனர்.[11] இக்குறிப்புகள் மற்ற ஆய்வுகளி லிருந்து கிடைக்கப்பெற்ற முடிவுகளுடன் ஒத்து இருந்தன.

288 நார்வீஜிய முதியோர் பெண்களைக் கொண்டு, உடற்கட் டிற்கும் பூப்புப் போக்கு ஏற்படும் வயதுக்கும் உள்ள தொடர்பினைப் பற்றி ஆய்ந்த ஆய்வின் முடிவுகள் விரைவில் பூப்புப்போக்கு

[11] H. G. Richey, 'The Relation of Accelerated, Normal and Retarded Puberty to the Height and Weight of School Children,' Monographs of the Society for Research in Child Development, 1937, No. 8, pp. 1—67.




படம் 3-4

A-கொழுத்தஉடல் B-பருமனுனவர்கள்

C-நல்ல உடற்கட்டு D-சராசரியான நடத்தர உடற்கட்டு

E-ஒல்லியானவர்கள் F-மிக ஒல்லியானவர்கள்

G-மிகவும் ஒல்லியானவர்கள்

உடலமைப்பின் அடிப்படையில் உடல் தகுதியைக் கணக்கிடப் பயன் படுத்தப்பட்ட வெட்சலின் உடற்கட்டு அமைப்புகள். (The Physique Channels used in the Wetzel Chart for Evaluating Physical Fitness in Terms of Body Build.)

வயதினைக்கொண்ட தனியன்கள் குறிப்பிடத்தக்க பெண்மை முதிர்ந்த உடல் அமைப்பைப் பின்னல் பூப்புப்போக்குப் பெறுகின்றோரைக் காட்டிலும் பெற்றிருந்தார்கள் என்று காட்டுகின்றன.[12]

படம் 3-5ஐக் கூர்ந்து கவனித்தால் விரைவில் பருவமடைந்த சிறுமியர்கள் பூப்படைதலுக்கு முன்னர்த் துரிதவளர்ச்சி பெற்றிருந்ததையும் பின்தங்கிப் பருவமடைந்தோரைக் காட்டிலும் துரித வளர்ச்சி கொண்டிருந்த காலத்தில் அதிகக் கூடுதல் வளர்ச்சி பெற்றிருந்ததையும் காணலாம்.[13] சிறுவர்களிடமும் இதே போக்குக் காணப்பட்டது.

[12] L. Jacobson, 'On the Relationship between Menarcheal Age and Adult Body Structure', Human Biology, 1954, Vol. 26, pp. 127—132.

[13] N. Bayley and R. D. Tuddenham, op. cit., pp. 33—35.




*படம் 3-5*

*விரைவில் பின்தங்கிப் பருவமடையும் சிறுவர், சிறுமியர்களது உயரத்தின் வளர்ச்சி வகைகள்.*

ஷட்டல்வொர்த் (Shuttleworth) அளித்த முடிவுகள் விரைவில் பருவமடையும் சிறுவர்கள் சராசரி முதியோனைக் காட்டிலும் சிறிதளவு உயரமாய் இருப்பதாகவும் கூறுகின்றன. விரைவில் பருவமடையும் பெண்களுக்குப் பருவமடையும் சமயத்தில் குள்ளமான தோற்றம் சிறிதளவு காணப்படுகின்றது. பூப்புப்போக்கு ஏற்படும் காலத்தில் உள்ள உயரத்திற்கும் வயதுக்கும் உள்ள உடன் தொடர்பு ·15 ஆகும். இவ்வளவிடுதல் எந்தப் பொதுமையையும் கூறுவதற்கு ஆதாரமாகக்கொள்ளப் போதிய அளவு இல்லை.[14] எல்லிஸ், இங்கிலாந்திலுள்ள இரண்டு விடுதி மாணவர் பள்ளிகளில் உள்ள 11 வயது முதல் 16 வயதுவரை உள்ள 208 சிறுவர்களை வைத்துக்கொண்டு நடத்திய ஆய்வில் 6ஆவது ஆண்டிலிருந்தே விரைவில், பின்தங்கிப்

[14] F. L. Shuttleworth, 'The Physical and Mental Growth of Girls and Boys Age Six to Nineteen in Relation to Age at Maximum Growth,' Monographs of the Society for Research in Child Development, 1939, Vol. 4, No. 3.

பருவமடையும் சிறுவர்களின் வளர்ச்சி வளைவுகளிலுள்ள மாறுதலைக் காட்டலாம் என்று கண்டார்.[15]




படம் 3-6

9 வயதிலிருந்து 18 வயதுவரை சிறுவர்கள் ஒவ்வொரு ஆண்டிலும் பூப்படையும் வளர்ச்சியின் சதவீதம் (எல்லீஸ்).

சிறுவர்களிடையே மாறுபட்ட பால் முதிர்ச்சியை விளக்க வல்ல சிறந்த சான்றுகள் கீழ்க்கண்ட நூலில் தரப்பட்டுள்ளன. அதில் ஐந்து சிறுவர்கள் 14 ஆண்டிலிருந்து 14 ஆண்டு 2 மாதங்கள் வயதுள்ளவர்களது எலும்பு வயது 12 ஆண்டு 4 மாதங்களிலிருந்து 16 ஆண்டு 8 மாதங்கள் வரை இருந்தது. உடல் அமைப்பு, தலைமயிர் வளர்ச்சி, பிறப்புறுப்புகளின் வளர்ச்சி ஆகியவற்றிலும் அதிகமான மாறுபாடுகள் காணப்பட்டன. W W. Greulich, et al., 'Somatic and Endocrine Studies of Puberal and Adolescent Boys,' Monographs of the Society for Research in Child Development, 1942.

[15] See R. W. B. Ellis, 'Growth and Physical Performance of Children in Relation to Maturity,' Proceedings of the Royal Society of Medicine, 1948, Vol. 41, No. 6, pp. 343—348.

பூப்படையும் சிறுவர்களின் பகிர்வு வளைவு 13-லிருந்து 14 ஆண்டுகளில் உயர்வைக் காட்டுகின்றது. இக்குறிப்புகளை மேலும் ஆய்ந்து குறிக்கப்பட்டுள்ள வரைபடம் 3—6, விரைவில் பருவமடைவோர் பின்தங்கிப் பருவமடைவோர் ஆகியோரின் பூப்படையும் காலம், சராசரி வயதில் பூப்படைவோரைக் காட்டிலும் நீண்டகாலமுடையது எனக்கூறுகின்றது.

## உடலமைப்பு வளர்ச்சி (Anatomical development)

உடலமைப்பு வளர்ச்சி, அடிப்படையில் எலும்பு அமைப்பினையே குறிக்கின்றது. குறிப்பாக, எலும்புகளின் அமைப்பில் உள்ள மாறுதல்களைக் குறிக்கின்றது. இளையோர் பருவத் துவக்கத்தில், உயரத்திலும் பருமனிலும் கூடுதல் ஏற்படுகின்றது. தனியன் பருவமடைகின்ற பொழுது எலும்புகளின் கூட்டமைப்பில் (ஓசியஸ், கார்டிலேஜியன் போன்றவை) மேலும் மாறுதல் கொள்கின்றன. எலும்புகள் இருகுதல் மெதுவாக ஏற்படுகின்றது; ஆனால், இளையோர் பருவத் துவக்கத்தில் இது மிகவும் முன்னேற்றம்கொண்டு காணப்படுகின்றது. பால்டுவினும் (Baldwin) மற்றவர்களும் செய்த துவக்க ஆய்வுகள், 5 அல்லது 6 ஆண்டுகளுக்குப் பின்னர் பெண்கள் ஆண்களைக் காட்டிலும் எலும்பு இருகும் தன்மையைப் பெற்றிருப்பதாகக் கூறுகின்றன.[16] மணிக்கட்டிலுள்ள கார்பஸ் எலும்பு உடலமைப்பு வளர்ச்சியை நிர்ணயிக்கும் வழியில் பயன்படுகின்றது. உடலமைப்புச் சுட்டு அளவிடும் அளவாகப் பயன்படுத்தப்பட்டது. 10 எனும் சுட்டு மணிக்கட்டுப் பகுதி பத்து சதவீதம் இருகுதலைக் குறிக்கின்றது. 13 வயதில் பெண்களின் மணிக்கட்டுப் பகுதி 70 சதவீதம் இருகுகின்றது. இப்பருவம் வளர்ச்சி விகிதத்தில் குறிப்பிடும்படியான குறைவான வேகத்தைக் கொண்டுள்ளது. எலும்பு முதிர்ச்சியினை அளவிடுதற்குப் பயன்படுத்தப்படும் அண்மைமுறை, இருகுகின்ற வகையையும் எபிபிசிஸ் (epiphyses) முறையுமேயன்றிக் குறிப்பிட்ட பகுதியில் இருகுகின்ற சதவீதத்தினை எடுத்துக்கொள்வதில்லை.

சிறுவர்களுக்கும், சிறுமியர்களுக்கும் நிரந்தரப் பற்கள் வெளிப்படும் வயது, உடலமைப்பு வளர்ச்சி ஏற்படுவதை அறிவிக்கும் காலமாகவும் பயன்படுத்தப்படுகின்றது. வரைபடம் 3—7-ல் வெவ்வேறு வயதுகளில் முளைக்கின்ற பற்களின் சராசரி குறிக்கப்பட்டுள்ளது.[17]

16 **B. T. Baldwin, L. M. Bresby, and H. V. Garside, 'Anatomic Growth of Children, A Study of Some Bones of the Hand, Wrist and Lower Forearm, by Means of Roentgenograms,' University of Iowa Studies in Child Welfare, 1928, Vol. 4, No. 1.**

17 **C. E. Palmer, H. Klein, and M. Cramer, 'Studies of Dental Caries III. A Method of Determining Post Eruptive Tooth Age,' Growth, 1938, Vol. 2, pp. 149—158,**

இவ்வளவுகள் தெளிவாகப் பால் மாறுபாடுகளைக் காட்டுகின்றன. சிறுவர், சிறுமியர்கள் இருவருக்கும் முன் இளையோர் பருவத்தில் நிரந்தரமான பற்கள் தோன்றுவது துரித முன்னேற்றத்தை அடைகின்றது.




படம் 3·7

*தனிப்பட்ட வயதுகளில் தோன்றுகின்ற நிரந்தரப் பற்களின் சராசரி எண்ணிக்கை*

எலும்பு வயதிற்கும் பூப்புப் போக்குக்கும் உள்ள நெருங்கிய தொடர்பு சிம்மென்சும் கிரிலிச்சும் (Simmons and Greulich) அறிவித்துள்ள ஆய்வில் காட்டப்பட்டுள்ளது.[18] 7-லிருந்து 17 வயதுக்குள் உள்ள ஒரே உண்மை வயதையும் மாறுபட்ட பூப்புப் போக்கு வயதினையும் கொண்ட மூன்று பெண்கள் குழுவின் எலும்பு வளர்ச்சி ஆய்வு செய்யப்பட்டது. இப்பெண்களது எலும்பு வளர்ச்சி

[18] K. Simmons and W. W. Greulich, 'Menarcheal Age and the Height, Weight and Skeletal Age of Girls 7 to 17 years,' Journal of Pediatrics, 1943, Vol. 22, p. 548.

வரைபடம் 3—8-ல் குறிக்கப்பட்டுள்ளது. வளர்ச்சி வளைவுகள் எலும்பு வளர்ச்சிக்கும், பால் வளர்ச்சிக்கும் நெருங்கிய தொடர்புள்ள தாகக் காட்டுகின்றன. 7ஆவது ஆண்டிலேயே இத்தொடர்பினைக் காணலாம். ஆதலின் எலும்பு வயதைப் பெண்ணினது பால் வளர்ச்சியை வருமுன் உரைக்கும் அடிப்படையாகக் கொள்ளலாம். குழந்தையின் எலும்பு வளர்ச்சி குழந்தையின் பொது உடல் வளர்ச்சியையும் அவனது முதிரும் தோற்ற வன்மையையும் தீர்மனிக்க நல்ல அடிப் படையாய்த் திகழ்கின்றது என்று கூறச் சான்றுகள் இருக்கின்றன. பேய்லி (Bayley) கலிஃபோர்னியா பல்கலைக் கழகத்திலுள்ள குழந்தை வளர்ப்பு நிலையத்தில் நடத்தப்பட்ட ஆய்வுகளிலிருந்து கீழ்க்கண்ட வாறு முடிவு கொண்டார்.




*படம் 3-8*

*மூன்று பூப்புப்போக்குக் குழுக்களிலுள்ள 7-லிருந்து 17 வயது வரையுள்ள பெண்களது சராசரி எலும்பு வயது.*

'குழந்தையின் கடைசியில் இருக்கக்கூடிய சாதாரணத் தோற்ற அளவின் சதவீதத்தைக் கூறும்பொழுது, அவனது வளர்ச்சி எலும்புக் கூட்டின் வளர்ச்சியுடனும் முதிர்ச்சியுடனும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது என்பதைக் காணலாம். தோற்ற அளவின் வளர்ச்சி எலும்புக் கூட்டின் முதிர்ச்சியுடன் நெருங்கிய தொடர்புகொண்டுள்ள தாய்த் தோன்றுகின்றது. ஒரு குறிப்பிட்ட எலும்பு வயதில் குழந்தை

கடைசியாக அடையக்கூடிய முதியோர் உடல் அளவுகளை அடைந்து விட்டது என்று கூற இயலும். அதுபோன்றே குழந்தையின் தற்போதைய வயதும், எலும்பு வயதும் தெரிந்திருந்தால் ஓரளவு திருத்தமான அளவில் அவர்களுடைய முதிரும் தோற்ற அளவினை வருமுன் கூற இயலும்.'[19]

## இளையோர் பருவத்தில் இயக்க வளர்ச்சி

### வயதும் இயக்க வினைமுறையும்

வயதான குழந்தைகள் இளங் குழந்தைகளைக் காட்டிலும் இயக்கச் செயல்களில் அதிகமான திறமையுடையவர்களாய் இருப்பதாகப் பொதுவாகக் கருதப்படுகின்றது. வயதுடன், வலிவும் இயக்க இணைப்பும் அதிகரிப்பதாகத் தோன்றினாலும், உடலில் உள்ள எலும்புகளும் இணைப்புப் பகுதிகளும், துவக்க வயதிலேயே எளிதில் வளையக் கூடிய தன்மையின் உச்சகட்டத்தை அடைகின்றன என்று கூறச் சான்றுள்ளது. ஒரு ஆய்வில் உடலிலுள்ள 12 பகுதிகளின் வளையக் கூடிய தன்மைகளை 5½ வயது முதல் 18½ வயதுவரை உள்ள 300 சிறுமியரைக் கொண்டு ஆய்வு நடத்தப்பட்டுக் குறிப்புகள் எடுக்கப் பட்டன.[20] அதே வயதுடைய பெண்கள் குழுவில் எலும்புகள் வளையக்கூடிய தன்மையில் தனியாள் வேற்றுமைகள் காணப்பட்டன. ஆறு வயதில் பெண்கள் தோள், முழங்கால், தொடை ஆகிய பகுதிகளில் அதிகமான வளையும் தன்மையைக் காட்டினர். ஒன்பது வயதில் தான் தலையை நன்கு சுற்றக்கூடிய அளவு அதிகமான வளையும் தன்மை காணப்படுகின்றது. மற்ற 8 ஆய்வுக்குரிய பகுதிகளின் வளையும் தன்மை 12 வயதில் தான் ஏற்பட்டது. இவ்வெட்டுப் பகுதிகளாவன; இடை, நடுஇடை, பக்கவாட்டில் உள்ள உடற்பகுதி, தலையின் குறுக்கம், முழங்கை, மணிக்கட்டு, கணுக்கால், காலைப் பிரிக்கும் பகுதி ஆகியவைகளாகும். இவ்வாய்வின் முடிவுகள், சிறுமிகளிடத்துக் காணப்படுகின்ற அதிகமான வளையும் தன்மை, குழந்தைப் பருவத்திலும் முன்இளையோர் பருவத்திலும் அடைகின்றது என்று கூறுகின்றன. இவைகளிலிருந்து இயக்கத் திறமைகளில் பெற வேண்டிய கல்வியின் முக்கியத்துவம் தெளிவாகக் காணப்படுகின்றது.

உயர்ந்த அளவு வளையும் தன்மையுள்ள திறன்களைப் பள்ளிப் படிப்புக்கு முன்னரே பெற முயற்சி செய்தல் வேண்டும். உயர்ந்த

[19] N. Bayley, 'Skeletal Maturing in Adolescence as a Basis for Determining Percentage of Completed Growth,' Child Development, 1943, Vol. 14, pp. 44—45.

[20] F. L. Hupprich, 'A Study of Flexibility of Girls in Five Age Groups,' Ph. D. Thesis, University of Oregon, 1949.

உள்ளாற்றலுடைய நிலையை அடைய வேண்டுமென்றால் தொடர்ந்து ஆரம்பப்பள்ளி ஆண்டுகளிலும் முயற்சி செய்தல் வேண்டும்.

பிலிப் 165 சிறுமிகளையும், 146 சிறுவர்களையும் சோதித்ததில் 9-லிருந்து 16 வயதுவரை உள்ளவர்களுக்கு எதிர்வினைக்காலம் (reaction time) குறைவாக இருப்பதைக் கண்டார்.[21] ஒளிக்கும் ஒலிக்கும் உள்ள எதிர்வினை வேகத்தில் வயதுடன் குறிப்பிடும்படியான முன்னேற்றம் இருந்தது. இம்முன்னேற்றம் எச்சரிக்கைக் குறிப்புடனும் எச்சரிக்கைக் குறிப்பின்றியும் வரும் எதிர்வினைகளிடமும் தெளிவாகக் காணப்படுகின்றது. சிறுவர், சிறுமியரைக் காட்டிலும் 3-லிருந்து 5 சதவீதம் வரை அதிகவேகம் கொண்ட எதிர்வினைக் காலத்தைக் கொண்டிருந்தனர். இதற்குமுன் நடந்த ஆய்வுகளிலும் சிறுவர்கள் இவ்வதிகமான வேகம் கொண்டிருப்பதைக் கண்டார். பிலிப் இவ்வாறு சிறுவர்கள் துரித எதிர் வினைக்காலம் பெற்றிருப்பது முன்னைய அனுபவங்களின் காரணமாக இருக்கும் என்கிறார்.

ஜோக்ல், க்ளுவர் (Jokl and Cluver) ஆகியோர் 5-லிருந்து 20 வயது உள்ள குழந்தைகள் குழுவினைக்கொண்டு உடல் தகுதியின் வளர்ச்சியைப் பற்றிய ஆய்வினை நடத்தினர்.[22] வினைமுறையில் வெவ்வேறான இனக் குழுக்களிடமும் மாறுதல் காணப்படவில்லை. ஆனால், அமைப்பு ஏதுக்கள் உடல்திறத்தில் சூழ்நிலை ஏதுக்களைக் காட்டிலும் அதிகமான செல்வாக்கினைக் கொண்டிருப்பதாகத் தோன்றுகின்றது. உடல் துன்பத்தைத் தாங்குகின்ற அளவையான 600 கஜ ஓட்டத்தில் சிறுவர், சிறுமியர் இருபாலாருமே 6-லிருந்து 13 ஆண்டுகளில் முன்னேறுகின்றனர். இருபாலாரும் 13 ஆண்டுகள்வரை கொள்ளும் முன்னேற்றம் ஒரே அளவில்தான் இருக்கின்றது. ஆனால், வளர்ச்சியின் இந்நிலைக்குப் பின்னும் சிறுவர்கள் தொடர்ந்து வளர்ச்சியுறுகின்றனர். சிறுமியர் அவர்களது ஆற்றலை இழக்கின்றனர். ஆதலின், 17-லிருந்து 20 வயதுவரை சிறுமியரது திறன் 6-லிருந்து 8 வயதுள்ளோர் போன்றுதான் இருக்கின்றது. திறனில் இக்குறைவு அவர்களது ஓடுகின்ற காலத்தில் மட்டும் பிரதிபலிக்காது ; அவர்களது நாடித் துடிப்பு, மூச்சுவிடுதல், சோர்வு ஆகியவற்றில் வெளிப்படும் உடல் நிலையிலும் காணப்படுகின்றது. இவ்வாறாகச் சிறுமியரிடத்துக் காணப்படும் இயக்கத் திறனில் உள்ள துவக்கக் குறைபாடுகள் அவர்களது பழக்க வழக்கங்களினால் ஏற்படுவதாகும். அதாவது சிறுமியர் ஆரம்

[21] B. R. Philip, 'Reaction Time of Children,' American Journal of Psychology, 1934, Vol. 46, pp. 379—396.

[22] E. Jokl and E. H. Cluver, 'Physical Fitness', Journal of the American Medical Association, 1941, Vol. 116, pp. 2383—2389.

வயதிலேயே சமூகச் செயல்களில் கூடுதலான அக்கறையைக் காட்டுகின்றனர். விளையாட்டிலும் மற்ற தசைநார்ச் செயல்களிலும் பங்கு பெறுவதில் குறைவான அக்கறையே கொண்டுள்ளனர்.

எஸ்பென்ஸ்ஷேட் (Espenschade) நடத்திய ஆய்வில் ஆறு மாதங்கள் இடைவெளியில் அளவுகள் எடுக்கப்பட்டு ஒரு ஆறுமாத வயது நிலைக்குரிய சராசரிகளும் தீர்மானிக்கப்பட்டன.[23] 50 கெஜ ஓட்டம், அகலத்தாண்டல், தூரத்தில் எறிதல் ஆகியவற்றின் முடிவுகள் வரைபடங்கள் 3--9, 3—10, 3—11-ல் தரப்பட்டுள்ளன.




**50 கஜ ஓட்டப்பந்தயத்தின் மூலம் ஆண் பிள்ளையையும், பெண் பிள்ளையையும் ஒப்பிடுதல்.**

படம் **3—9**

13 வயதிலிருந்து 16 வயதுக்குள் உள்ள சிறுவர்களுக்கான 50 கெஜ ஓட்டப்பந்தயத்தில் தொடர்ச்சியான முன்னேற்றம் இருந்தது. சிறுமியரது சிறப்பான வினைமுறை 13·25 வயதில் அடையப் பெற்றது. இவ்வயதிற்குப்பின் படிப்படியாகக் குறைந்தது. அதற்கு இரண்டு ஆண்டுகளில் ஏற்படும் இழப்பு மிகவும் குறைவானதே யாகும். ஆனால், 15ஆவது ஆண்டின் பிற்பகுதியில் வினைமுறை குறைவடையவும் தொடங்கியது. அகலத் தாண்டும் திறனில் 13-லிருந்து 16·5 வயதுடைய சிறுவர்கள் கூடுதலான திறமையைக் காட்டினர். 14, 15 வயதுகளில் இக்கூடுதல் மிகவும் அதிகமாய் இருந்தது.

[23] A. Espenschade, 'Motor Performance in Adolescence,' Monographs of the Society for Research in Child Development, 1940, Vol. 5, No. 1.

சிறுமியரது நிலையில் 13 வயதிலிருந்து 16·5 வயதுவரை அகலத் தாண்டும் திறமை தொடர்ச்சியாகக் குறைந்துகொண்டே வந்தது.




படம் 3·10

*அகலத் தாண்டுதலின் சிறுவர், சிறுமியரது ஒப்புமை (எஸ்பென்ஸ்ஷேட்).*

இவ்விரண்டு செயல்களும் மிகவும் களைப்படையச் செய்யும் தன்மை கொண்டவையாகும். சிறுமியர் ஊக்கமடைவதற்குத் தடையாகப் பிரச்சினைகளைத் தரும் என்பதில் ஐயமில்லை. இளையோர் சிறுமியரிடம் தக்க ஊக்கமின்மையும்; உடலமைப்பு மாறுதல் விகிதங்களும் இணைந்து 13-லிருந்து 16·5 வயதில் தொடர்ச்சியான திறமைக் குறைவுகள் ஏற்படுவதற்குக் காரணமாக அமைகின்றன என்று கூறலாம்.

எறியும் விளையாட்டுகளின் எண்ணிக்கைகள், அதாவது தூர எறிதலும், குறிநோக்கி எறிதலும் 13-லிருந்து 16·5 வயதுள்ள சிறுவர்களிடத்துத் தொடர்ச்சியான வளர்ச்சியினைக் காட்டுகின்றன. சிறுமியரது நிலைகளில் 14·75-லும் 15·25 வயுதிலும் நிலையான வளர்ச்சி இருந்தது. இதற்குப் பின்னர் வளர்ச்சி படிப்படியாக ஆனால் மெதுவாகக் குறைகின்றது. குதித்தலிலும், அடைதல் சோதனையிலும் எஸ்பென்ஷேடின் (Espenschade) அறிவிப்புகள், சிறுமியரது சராசரி எண்ணிக்கைகள் ஒழுங்கற்ற நிலையில் இருப்பதாகவும், ஆனால் 15·25-ல் இருந்து 16·25 வயதில் தொடர்ச்சியாக வளர்ச்சி அடைவதாகவும் கூறுகின்றன.

சிறுவர்கள் பெற்ற எண்ணிக்கை அளவுகளின் மாறுதல்களின் அதிகமான அளவு குறிபார்த்து எறிதலில் 1934 செப்டம்பர் மாதத்திலிருந்து 1937 செப்டம்பர்வரை மிகவும் சிறிய அளவே உள்ளது.

வெவ்வேருன சோதனைகள் சேர்ந்துள்ள பிரேஸ் சோதனை (Brace test) எல்லோரும் தேர்ச்சியுறுகின்ற சோதனைகளின் சதவீதம் 1937 செப்டம்பரில் 1934 செப்டம்பரைக் காட்டிலும் அதிகமாகும்.




படம் 3-11

***தூர எறிதலில் சிறுவர்களுக்கும் சிறுமியர்களுக்கும் உள்ள ஒப்புமை (எஸ்பென்ஸ்ஷேட்)***

சிறுவர்களுக்கும், சிறுமியர்களுக்கும் இப்பருவத்தின் சமநிலையில் குறைந்த முன்னேற்றமே இருந்தது. சிறுமியர் சுறுசுறுப்புள்ளவராய் இருப்பதில் குறைந்த நிலையை அடைந்தனர்.

## வலிவுக்கும் மற்றக் குணங்களுக்கும் உள்ள தொடர்பு

பல்வேறு ஆய்வாளர்களால், இயக்கமிக்க வலிவு, நிலை அமைதியுள்ள வலிவு ஆகியவற்றிற்கும், சில உடல் அளவுகளுக்கும் குறிப்பிடும்படியான தொடர்புகள் இருப்பதாக அறிவிக்கப்பட்டுள்ளன. இயக்கமிக்க வலிமை என்பது ஓட்டப்பந்தயங்கள் போன்றவற்றில் அடையும் செயல்திறன்களைக் குறிக்கின்றது. நிலை அமைதியுள்ள வலிவு என்பது இயக்கமளக்கும் சோதனைகளைக் கொண்டு அளவிடுவதாகும். இவ்விரண்டு வகையான இயக்கவிசை முறை செய்முறைகளில் சில அதிசயிக்கத்தக்க ஒப்புமைகளைப் போவரால் (Bower) நடத்தப்பட்டு ஜோன்சினுல் (Jones) அறிவிக்கப்படும் ஆய்விலிருந்து அறியலாம்.[24] ஒரு சிறுவர் குழுவினின்று இத்தகு

[24] See H. E. Jones, Motor Performance and Growth. Berkeley and Los Angeles: University of California Press, 1949, Chap. II.

வலிவின் இரு பண்புகளுக்கும் வயதிற்குமிடையேயுள்ள உடன் தொடர்பு கணக்கிடப்பட்டது. எலும்பு வயது, கை முழங்கால்களின் எக்ஸ்-ரே படங்களின் மூலமாகவும், உயரம் அளக்கப்பட்டும், நல்ல தோற்றத்தின் மூலமாகவும் கணக்கிடப்பட்டது. நுண்ணறிவு சராசரி மனவயதை அடிப்படையாகக் கொண்ட இரண்டு வகையான குழு நுண்ணறிவுச் சோதனைகளின் மூலமாகக் கணக்கிடப்பட்டது. உடன் தொடர்புகள் அட்டவணை 3—2-ல் தரப்பட்டுள்ளன. அட்டவணை 3—2-ல் உள்ள முடிவுகளின் சிறப்புக்கூறு என்னவென்றால், உண்மை வயதும் உடல் அளவுகளும், வலிவுடன் அதிக உடன் தொடர்பு கொண்டுள்ளன. இளையோர் சிறுவர்களின் இயக்க வினைமுறைகளின் நிலைப் பயன் மதிப்பை உணர்கின்றவர் இம்முடிவுகளை எதிர்பார்த்திருப்பார். இயக்கவினை முறைகளுக்கும் நுண்ணறிவுக்குமிடையே உள்ள குறைவான இடைத் தொடர்பும் குறிப்பிடத்தக்கதாகும்.

மெக்கூர்டியினால் (MacCurdy) இளையோர் சிறுவர்களது வலிவுக்கும், உடல்வளர்ச்சிக்குமிடையே உள்ள தொடர்புகளுக்குரிய சான்றுகள் தரப்பட்டன.[25] வலிவில் 12 வயதுவரை தொடர்ச்சியான

## அட்டவணை 3—2

சிறுவர்களது இயக்கவினைத்திறனுக்கும் மற்ற வளர்ச்சி, குண இயல்புகளுக்குமுள்ள உடன் தொடர்புகள்.

| மாறுந்தன்மையுடையவை | மொத்த வலிவு கைப்பிடி, இழுத்தல் அழுத்துதல்) | மொத்த இயக்க எண்ணிக்கைகள் (ஓட்டப் பந்தயங்கள்) |
|---|---|---|
| உண்மை வயது ... | ·39 ± ·06 | ·18 ± ·07 |
| எலும்பு வயது ... | ·50 ± ·55 | ·36 ± ·06 |
| உயரம் ... ... | ·65 ± ·04 | ·40 ± ·06 |
| புகழ் ... ... | ·30 ± ·07 | ·39 ± ·06 |
| பார்வைக்கு நன்றாக இருத்தல் ... | ·21 ± ·07 | ·38 ± ·06 |
| நுண்ணறிவு ... | —·17 ± ·07 | ·05 ± ·08 |

[25] H. L. MacCurdy, A Test for Measuring the Physical Capacity of Secondary School Boys. Yonkers-on-Hudson: World Book Co., 1933.

வளர்ச்சி உள்ளது. அதற்குப்பின் துரிதமாக அதிகமாகின்றது. அவர்கள் தங்களது 18ஆவது பிறந்தநாளை அடையும் பொழுது மிகுதியான வளர்ச்சியினைப் பெறுகின்றனர். மெக்லாய் (McCloy) நடத்திய ஆய்வு, 13-லிருந்து 16 வயதுள்ள சிறுவர்களது கூடுதலான வலிவை உறுதி செய்தது.[26] 17 வயதில் ஒரு சிறிது கூடுதலே காணப்பட்டது. பெண்களிடத்து அதிகமான கூடுதல் 12-லிருந்து 14 வயதுக்குள் ஏற்படுகின்றது. சராசரிச் சிறுமியருக்கு 15 வயதுக்குமேல் வளர்ச்சி காணப்படவில்லை. பலசிறுமியர்கள் இவ்வயதுக்குப் பின்னர் உண்மையில் குறைந்த நிலையே கொண்டிருந்தனர்.

## பால் வேறுபாடுகள்

எஸ்பென்ஸ்ஷேடால் ஆய்வு செய்யப்பட்ட எல்லா வினைமுறைகளிலும் குறிப்பிடும்படியான பால் வேறுபாடுகள் காணப்பட்டன. ஒவ்வொரு வயது நிலையிலும் இவ்வேறுபாடுகள் அதிகமாகிக்கொண்டே வந்தன. தூர எறிதலில்தான் இவ்வேறுபாடு அதிகமாகக் காணப்படுகின்றது. அகலத் தாண்டுதலிலும் பின்இளையோரிடம் உள்ளது போன்றே அதிக வேறுபாடுகளைக் காணலாம். பிரேஸ் சோதனைகளிலுள்ள பால்மாறுபாடுகள் 1934 செப்டம்பரிலும் 1937 செப்டம்பரிலும் ஆய்வு செய்யப்பட்டன. 20 சோதனைகள் கொண்ட பிரேஸ் சோதனைகளில் 90 சதவிதத்துக்கு அதிகமான சிறுவர் சிறுமியர்கள் தேறினர்கள். ஆறு சோதனைகளில் சிறுமியர்கள் சிறுவர்களைக் காட்டிலும் தேறினர். ஆனல், வேறுபாடுகள் புள்ளியியல் அடிப்படையில் சுறுசுறுப்பு, கட்டுப்படுத்தும் சோதனையைத்தவிர மற்றவைகள் முக்கியம் வாய்ந்தவை அல்ல.

அதிகமான ஒப்புமைப் புள்ளிவிவரங்கள் பெறவும் வயது விகிதத்தை அதிகமாக்கவும் 10·5-லிருந்து 16வயதுள்ள 325 சிறுவர்களும் 285 சிறுமியர்களும் 1943—45-ல் சோதிக்கப்பட்டனர். பள்ளி நாட்களில் பிரேஸ் சோதனை கொண்ட சோதனைகள் பள்ளியில் தரப்பட்டன. பிரேஸ் சோதனைகள் உண்டாகும் பகுதிகள் கீழ்க் கண்டவாறு வகைப்படுத்தப்பட்டது. வகுப்பு I சுறுசுறுப்பு, வகுப்பு II கட்டுப்பாடு, வகுப்பு III வலிவு, வகுப்பு IV நிலைஅமைதி சமநிலை (static balance); இச்சோதனை இருபது பகுதிகள் கொண்டதாயுள்ளது. அவை பல்வேறு விகிதங்கள் கொண்ட அடிக்கடி பழக்கத்தில் இல்லாத இணைப்புப் பொருட்களினின்று தேர்ந்தெடுக்கப் பட்டவையாகும். வெவ்வேறு சோதனைகளில் சிறுவரும் சிறு

[26] C. H. McCloy, 'The Influence of Chronological Age on Motor Performance,' Research Quarterly, Association of Physical Education, 1935, Vol. 6, pp. 61—64.

மியரும் பெற்ற எண்ணிக்கையின் ஒப்புமை, குழு எண்ணிக்கைகளில் சிறு மாறுதல்களைத் தோற்றுவிப்பதாகவும் அல்லது 13·8 வயதுக்கு முன்னர் உள்ள வயதில் பல்வேறு வகுப்புகளின் அளவுகளில் குறைந்த மாறுதல்களே உள்ளன என்று காட்டுவதாகவும் இருக்கின்றது. இவ்வயது நிலைக்குப்பின் சிறுவர்கள் எல்லா நிகழ்ச்சிகளிலும் உயர்ந்து இருந்தனர். ஒவ்வொரு வயது நிலையிலும் அவர்களது உயர்ந்ததன்மை முன்னேற்றம் கொண்டது. சிறுவர்களுக்கும், சிறுமியர்களுக்கும் உள்ள குறிப்பிடும் படியான மாறுதல் 'மேலே தள்ளுகின்ற' (push-up) சோதனையில் தான் இருந்தது. இது வலிவுக்குரிய சோதனைகளில் ஒன்றாக வகைப்படுத்தப்பட்டுள்ளது. அதிக ஒப்புமையிருந்த சோதனை, 'உட்காருதல், எழுந்து மறுபடியும் நிற்றல், கைகளை மடக்குதல், கால்களை மடக்குதல்' ஆகியவைகளாகும். இவைகள் கட்டுப்பாட்டுச் சோதனைகளுக்குக்கீழ் வகைப் படுத்தப்பட்டன. இவ்வகைப் படுத்தலில்தான் சிறுமியர் திறமையுள்ளவர்களாக விளங்குகின்றனர். அவர்களது திறமையற்ற முடிவுகள் சுறுசுறுப்பு வலிவுச் சோதனைகளில் தான் காணப்படுகின்றன. கீழ்க்கண்ட பகுதிகள் அம்முடிவுகளின் சுருக்கமாகத் தரப்பட்டுள்ளன.

1 பிரேஸ் கூட்டுச் சோதனைகளின் மொத்த எண்ணிக்கையில் சிறுவர்கள் கூடுதலாக இருக்கின்ற வகை, உயரத்தில் இளையோரின் வளர்ச்சியைப் போன்று இருக்கின்றது. பெண்களுக்குரிய எண்ணிக்கை அளவுகளில் 13 வயதுக்குப் பின்னர் சிறிய அளவு மாறுதலையே காட்டுகின்றது.

2. பிரேஸ் மொத்தச் சோதனைகளின் தனித்த முயற்சிகள் அவர்களுடைய மேம்பட்டிருக்கின்ற தசைச் செயலுக்கு ஏற்றவாறு நான்கு பொதுவகைகளாகப் பிரிக்கப்பட்டன. வினைமுறைக்குத் தேவையான அதிகமான பொருள்கள் குறிக்கப் பட்டன. பல விளையாட்டுகளில் விசைத்திறச் சமன்பாடு முக்கியமாக இருந்தது.

3. எல்லா வகுப்பினருக்குமுடைய விளையாட்டுகளில் ஈடுபடுவதில் சிறுவர்கள் அதிகமான வினைத்திறத்தைக் காட்டினர். 14 வயதுக்குப் பின்னர் வளர்ச்சி விகிதம் முன்னைக் காட்டிலும் அதிகமாக இருந்தது. சுறுசுறுப்பிலும் கட்டுப்பாட்டிலும் துரித முன்னேற்றம் காணப்பட்டது.

4. 'விசைத்திறன் சமன்பாடு' முக்கியமாக இருந்த எல்லா சிறுவர் சோதனைகளிலும் குறிப்பிடும்படியான 'இளையோர் தாமதம்' காணப்பட்டது.

5. பெண்கள் சுறுசுறுப்பில் 14 ஆண்டுள்வரை முன்னேற்றம் காட்டியபின்பு குறைவடைகின்றனர். கட்டுப்பாட்டிலும், மாறுதலுக்கு இடந்தருவதிலும், சமன்பாட்டிலும் ஆய்வு செய்யப்பட்ட வயதுக் காலத்தில் சிறிய அளவு மாறுதலே காணப்பட்டது.[27]

இளையோர் சிறுமியரது உடல் இயல்புகள் சிறுவர்களினின்று மாறுபட்டு உள்ள தன்மை, சிறுமியரது கைகளும் கால்களும் விகித அமைப்பில் சிறியதாகவும், உடல் பெரிதாகவும், இடுப்பு அகலமாக இருப்பதிலும் காணப்படுகின்றது. இடுப்புடன் இணைக்கப்பட்ட ஃபீமர் சாய்வுக் கோணத்தில் இருப்பது இயக்க நற்பயனை அளிப்பதில்லை. விளையாட்டு வினை முறைகளுக்கு வலிவும், வேகமும், இணைப்பும் முக்கியமான தேவைகள் என்று ஆய்வுகள் காட்டுகின்றன. குள்ளமான கால்களும், மற்ற உடல் அமைப்புகளும் சிறுமியர் பந்தயத் தன்மை




வலது கையை இறுக்க பிடித்து அளப்பது மூலம் ஆண்பிள்ளைகள் பெண்பிள்ளைகளது வலுவின் வளர்ச்சியினை அளத்தல்

படம் 3—12

[27] A. Espenschade, 'Development of Motor Coordination in Boys and Girls,' Research Quarterly, American Physical Education Association, 1947, Vol. 18, pp. 30—43.

யான இயக்கச் செயல்களில் ஈடுபடுவதற்கு முட்டுக்கட்டைகளாக இருக்கின்றன. சிறுவர் சிறுமியரது வலிவு வளர்ச்சி பற்றிய நெடுக்கு வகை ஆய்வுகள், சிறுவர்கள் பத்து வயது நிலையிலேயே அதே வயதுடைய சிறுமியரைக் காட்டிலும் அதிக பலமுள்ளவர்களாக இருப்பதாகக் கூறுகின்றன. வரைபடம் 3—12-ல் கூறப்பட்ட இம்மாறுதல் வலிவிலுள்ள பால் மாறுதல்கள் 14 வயதுக்குப் பின்னர் குறிப்பிடும்படியாக அதிகமாகின்றது என்றும், 16 வயதில் சராசரிச் சிறுவன் அதே வயதுள்ள சராசரிச் சிறுமியைக் காட்டிலும் அதிகப் பலமுள்ளவனாக இருக்கிறான் என்றும் கூறுகின்றது.[28]

## குரல் மாற்றங்கள்

நெருங்கிய தொடர்புகொண்ட தசை வளர்ச்சியுடன் குரல் மாற்றங்கள் இளையோர் பருவத்தின் துவக்கத்தில் சேர்ந்து தோன்றுகின்றன. இவை சிறுவர்களது நிலைகளில் மிகவும் அதிகமாகத் தென்படுகின்றன. சிறுவர்கள் பூப்படைந்ததைக் குறிக்கும் புறவயக் குறிகளில் ஒன்றாக இதனைக் கருதப்படுகின்றது. இது குரல்வளை அல்லது 'ஆதாமின் ஆப்பிள்' என்று வழங்கப்படுகின்ற குரல்வளையின் விளைவேயாகும். அக்குரல்வளையில் இடையே இணையாகத் தொடர்ந்து வளர்ந்துள்ள குரல் நாண்களின் விளைவும் ஆகும். இவை ஏறத்தாழ முன்னைய நீளத்தில் இருமடங்கு வளர்ச்சியைப் பெறுகின்றன. இது புகழ்பெற்ற பௌதிக விதியான 'இழுத்துக் கட்டப்பட்ட நூற்கயிற்றின் நீளத்தை அதிகப் படுத்தும்போது தாழ்ந்த இசை ஒலியையே வெளிப்படுத்தும்' என்ற விதிக்கு ஓர் எடுத்துக்காட்டாக அமைகின்றது. சிறுமியரது குரல் இவ்வாறு மொத்தமான நிலைமாறுதலுக்கு உட்படுவதில்லை. பருவமடைந்ததும் சிறுமியின் குரல் குழந்தைப் பருவத்தில் இருந்ததைக் காட்டிலும் தாழ்வான குரலுக்கு மாறினாலும், அது முழுமையாகவும் செழிப்புள்ளதாகவும் இருக்கும். சிறுவர்களின் குரல் எடுப்பு மாறுவதோடு மட்டுமல்லாமல் ஒலியின் அளவிலும் அதிகமாகின்றது. குணத்தில் கேட்பதற்கு இனிமையாகப் பெரும்பாலும் அமைகின்றது.

இளைஞன் அவனுடைய தாழ்வான குரலைக் கட்டுப்படுத்தும் திறனை அடைவதற்கு இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளாகின்றன. இக்காலத்தில் அவன் தன்னுடைய கரடுமுரடான குரலினால் தன்னுணர்வு உள்ளவனாகவே இருக்கின்றான். அடித்தொண்டையின் கரடுமுரடான குரல்களும் எதிர்பாராத கீச்சுக் குரல்களும் அவனைத் துன்புறுத்துகின்றன. இவ்வாறு திடீரென்று தோன்றுகின்ற 'முறிவுகள்' காரணமாக அவன் தன்னை நகைப்புக்கிடமாக்கிக் கொள்ளுகிறான்

[28] H. E. Jones, op. cit., pp. 35—36.

என்று நினைப்பதற்குக் காரணமாகின்றது. அவனுடைய குரல் கோளாறுகளை மற்றவர்கள் நகைத்துக் கேலி செய்வதனுல் அவனுடைய இவ்வெண்ணம் உறுதியாகின்றது.

உடல் முதிர்ச்சியில் ஏற்படுகின்ற இம்மாறுதல் இளையோனுக்கு பற்றுர்வத்தை அளிக்கின்ற ஏதுவாகலாம். பில்லினுடைய (Bill) நண்பன் ஹென்றி திடீரென்று அவனை உடல் வளர்ச்சியில் கடந்து சென்ருன். அடித்தொண்டைக் குரல் கொண்டான். முகச்சவரம் செய்து கொள்ளத் தொடங்கினுன். பில் இவையெல்லாம் வளர்ச்சியின் சாதாரணநிலை என்று ஆச்சரியப்பட்டான். அவனுடைய தோற்றத்திற்கும் அவனது நண்பனுடையதற்கும் உள்ள மாறுபாடு அதிகமாக இருப்பதன் காரணமாக அவன் வேறு நண்பர்களைக்கூடத் தேடத் துவங்கினுன். தன்னை நிகரானவன் என்று நிரூபிப்பதற்காக ஏற்றுக் கொள்ள முடியாத சமூக நடத்தையைக்கூட கைக்கொண்டான்.

சிறுவரது வளர்ச்சியைக் கணக்கிடும் ஆய்வுகளுக்குச் சரியான சுட்டாகக் குரல் மாற்றத்தைப் பயன்படுத்த இயலாது. பல்வேறு வளர்ச்சி நிலைகளிலுள்ள குரலின் ஆழத்தையும் மற்றக் குணங்களையும் ஆய்வதற்கு ஒலியினைப் பதிவு செய்யும் வழியிருக்குமாறுல் இயலும். இத் தொடர்பில் கலப்பற்ற குரல் எடுப்பைக் காட்டிலும் தொடர்ச்சியாகக் குரல் மாறுதலானது முதிர்ச்சி அடைவதற்குண்டான வளர்ச்சியைக் காட்டுகின்றது என்று சொல்லலாம். இளைஞர்களது குரல் பருவமடையும் பொழுது செறிவுடையதாகவும் மற்றக் குணங்களைப் பெற்றுள்ளதாகவும் பொதுவாகக் கருதப்படுகின்றது. அதே வளர்ச்சி நிலையிலுள்ள இளையோரிடத்துக் குறிப்பிடத்தக்க மாறுதல்களும் காணப்படுகின்றன. இம்மாறுதல்களை விளக்கிப் பொருள்கூறும் பொழுது, குரலின் ஆழத்திற்கும் ஆண்மைத் தன்மை பெறும் அளவிற்கும் எந்தவிதமான சிறப்பான தொடர்புகளும் இல்லை என்று குறிப்பிடவேண்டும்.

## சில வளர்ச்சி இயல்புகளும் சிக்கல்களும்

### உடற்பயிற்சியும் வளர்ச்சியும்

வளர்ச்சிக் காலம், அதிகமான சத்துடனும் வீரியத்துடனும் தொடர்பு கொண்டுள்ளது. நல்ல ஆரோக்கியம், வீரம், வளர்ச்சி ஆகியவை இடைத் தொடர்புகளை நிச்சயமாகக் கொண்டிருக்கின்றன. மேலும், இவைகள் நல்ல ஊட்டத்தின் அடிப்படையில் உள்ளன. ஏனெனில், உணவு ஊட்டமானது வளர்ச்சி, செயல், நல்ல ஆரோக்கியத்தைக் கடைப்பிடித்தல் ஆகியவற்றிற்கு வேண்டிய அடிப்படைத் தேவைகளைத் தருகின்றது. ஆனுல், பதின்மர் தொடர்ந்து உடற்பயிற்சியைச் சோர்வடைகின்ற களைப்பு அடையும்வரை கைக்

கொள்ளக்கூடாது. தீவிர அயர்ச்சி கொள்கின்ற வகையில் உடற் பயிற்சி தொடர்ந்து செய்யக்கூடாது. இது ஆளுமையைச் சோம்பலுடையதாக ஆக்கி, நிற்கும் நிலையை மதிப்பற்றதாக்கும். நல்ல உணவு ஊட்டம் அயர்ச்சிக்கு எதிராயுள்ள உறுதியான மாற்று மருந்தாகும். போதிய அளவு ஓய்வு இதனுடன் சேர்ந்ததும் நன்றாக வேலை செய்கின்றது.

பெரும்பான்மையான இளையோர்களது வாழ்க்கைகளில், அதிலும் குறிப்பாகச் சிறுவரது வாழ்வில் விளையாட்டுகள் முக்கிய பங்கு கொண்டுள்ளது. நமது தற்காலப் பொறியியல் சமூகத்தில் பெரும்பான்மையான இளையோர்களுக்கு உடலுழைப்பு வினைமுறைக்கு இடமில்லை. இளையோர்களது உடற்பயிற்சிக்கும் ஓய்வுக்குமிடையே சமநிலையை உண்டாக்க வேண்டிய தேவையுள்ளது. பெரும்பான்மையான விளையாட்டுகளும் மற்ற ஏதுக்களும் தேவையான உடல் இயக்க வளர்ச்சிக்கு அவசியமான உடற்பயிற்சியை அளிக்கின்றன. ஆனால், பெரும்பான்மையான இளையோர்கள் விளையாட்டுகளிலும் மற்ற இதைப்போன்ற ஏதுக்களிலும் சிறிதளவு அக்கறையையே காட்டுகின்றனர். இளைஞர்களது உடல் தகுதியாக்குவதற்காக அமைக்கப்பட்ட நிகழ்ச்சிகளில், பள்ளிகளும் மற்றச் சமூக நிலையங்களும் அதிக அக்கறை காட்டவேண்டியது முக்கிய தேவையாகிறது.

போட்டி விளையாட்டு நிகழ்ச்சிகள் இதற்கு முற்றிலும் ஈடுசெய்வதாக அமையவில்லை. மேலும், விளையாட்டுப் போட்டிகள் கட்டுப்படுத்தப் படாமலும், பங்கு பெறுவோரது சிறப்பான அக்கறைகளுக்கு ஏற்ற வழிகாட்டியாகவும் அமையாவிட்டால் அவைகளால் கேடு விளையவும் செய்யும். அடிப்படைத் தத்துவமாக உயர்நிலைப்பள்ளி ஜூனியர் சிறுவர்களும் சிறுமியர்களும், உயர்நிலைப்பள்ளி சீனியர் சிறுவர் சிறுமியர் போன்று விளையாட்டு நிகழ்ச்சிகளில் அதிகமான ஈடுபாடு கொண்டிருக்கக் கூடாது என்று கூறலாம். சீனியர் உயர்நிலைப்பள்ளிச் சிறுவர் சிறுமியர்கள், நன்றாக நிர்வகிக்கப்படாத அதிகப் போட்டி மனப்பான்மை கொண்ட விளையாட்டுகளிலும், களைப்பு தருகின்ற விளையாட்டுகளிலும் ஈடுபட்டால், அவர்களது உடல் வளர்ச்சியும் முதிர்ச்சியும், மனத்திறன்களில் சுறுசுறுப்பாய் இருக்கின்ற தன்மையும் ஊறு செய்யப்படலாம். ஜூனியர், சீனியர் உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் ஒரு விளையாட்டில் வெற்றி பெற்றதும் அதிகமான மகிழ்ச்சியுடன் கொண்டாடுவார்கள். ஆனால், தோற்கும் பொழுது வயிற்றுக்கோளாறு நிலையும், பசியில்லாத தன்மையும், வயிற்றுப் போக்கு நிலையும் அடைவதைக் காணலாம். உடற்பயிற்சிக் கல்விக்காகவும், விளையாட்டுக்காகவும் ஒதுக்கப்பட்டுள்ள பணம் வெகுவாக விளையாட்டுப் போட்டிகளுக்குச் செலவிடப்படுகிறது. இதனால், மாணவர் சமூகத்தின் ஒரு குறுகிய சிறுபான்மை-

யினரே உடல் வளர்ச்சி பெறுகின்றனர். பல உயர்நிலைப் பள்ளிகள் விளையாட்டு நிகழ்ச்சிகளின் நன்மைகளை அதிகப்படுத்த முயற்சி எடுக்கின்றன. இதற்காக, வகுப்புகளுக்கிடையே போட்டிகள் அல்லது பங்குபெறுவோனின் சிறந்த அக்கறைகளுக்கு ஏற்ற, நுண்ணறிவுடன் கூடிய விளையாட்டு நிகழ்ச்சிகளில் வழிகாட்டிமூலமும் இதனை வளர்க்க முயல்கின்றனர். இளையோர்களுக்கு முழுமையான பொழுதுபோக்கு நிகழ்ச்சியின் முக்கியத்துவத்தைச் சமூக வளர்ச்சி, ஒழுக்க அமைப்பு, இளங் குற்றவாளிகள் தடுப்பு முதலியவற்றின் தொடர்பில் உணர்த்தப் படுகின்றது.

### வளர்ச்சியில் சமதளமில்லாமை

சில சமயங்களில் 20 ஆண்டுகள் கூட நீடிக்கின்ற வளர்ச்சியின் முக்கியமான தன்மை யாதெனில், உடல் விகித அமைப்பில் உள்ள குறிப்பிடும்படியான மாறுதல்களேயாகும். அப்பக்கத்திலுள்ள படம் இவ்வாறு மாறுகின்ற உடல் விகிதங்கள் முதிர்ச்சியை நோக்கி வளர்கின்ற வகைகளைக் காட்டுகிறது. முடிவில், துவக்கநிலை உடல் விகிதமின்மை யாவும் வளர்ச்சியில் ஒழுங்குபடுத்தப்பட்டுத் தனியன் சாதாரண முதிர்ச்சியை அடைகின்றான்.

பாய்ன்டன் (Boynton) வளர்ச்சியின் உடலளவு இயல்புகளின் வளர்ச்சிக் கூடுதல்களான பதின் மூன்று அளவைகளைத் தருகின்றார்.[29] இது 5·5 வயதிலிருந்து 16·5 வயதுவரை உள்ள மீண்டும் செய்யப்பட்ட சோதனைகளின் அடிப்படையில் கணக்கிடப்பட்டவையாகும். அவரது குறிப்புகள் 5·5 வயதுடைய சிறுவன் 17·5 வயதில் இருக்கக் கூடிய உயரத்தில் 65 சதவீதம் இருக்கின்றான் என்று காட்டுகின்றன. ஆனால், 12 ஆண்டுக்குப் பின்னுள்ள பருமனில் 33 சதவீதம் தான் இருக்கிறான் என்றும் கைப்பிடிவலிவில் 18 சதவீதம் இருக்கிறான் என்றும் காட்டுகின்றன. குழந்தையின் மூளை, பிறக்கும்போது 1 பவுண்டுக்கும் குறைவான எடையையே கொண்டுள்ளது. உயிரணு உறுப்புகளின் எண்ணிக்கை அநேகமாக முடிந்து விடுகின்றது. நியூரான்கள் முதிர்ச்சி அடைகின்ற வரையில் முடிவடைகின்ற பகுதியின் செறிவிலும் அதிகமாகின்றன. நரம்புமண்டல வளர்ச்சியில் சுழிமுனைமையத்தின் நரம்பிழைகளில், ஒருசிறு பகுதி பிறக்கும்பொழுது கொழுப்புச் சத்துள்ள வெள்ளையுரையின்றி காணப்படுகிறது. கார்டிக்கல் நூலிழைகளின் சுழிமுனை மையமாதல் கைக்குழந்தைப் பருவத்திலும், குழந்தைப் பருவத்தில் தொடர்ந்தும், நடு வயதுவரை கூடச் செல்கின்றது. இது சிக்கலான மனப்படி முறைகளின் திறன்கள் வளர்ச்சித் தொடர்பில் முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

[29] P. Boynton and J. Boynton, Psychology of Child Development, Minneapolis; Educational Publishers, Inc., 1938, p. 114.

பருமனுக்கும், கைப்பிடி வலிவின் தொடர்பிலும் சராசரிச் சிறுமி 5·5 வயதில் 17 வயது வளர்ச்சியின் மூன்றில் ஒரு பங்கினை அடைகிறாள். ஆனால், உயரத்திலும், தோள் அகலத்திலும், கணுக்கால் சுற்றளவிலும் சிறுமிகள் கடைசியாக அடையும் வளர்ச்சியின் முக்கால்




விகித அமைப்பு மாறுதல்




விகித அமைப்பும் உருவமும் மாறுதல்

A பிறந்த குழந்தைகள் B-2 ஆண்டுகள்
C.6 ஆண்டுகள் D-12 ஆண்டுகள் E-25 ஆண்டுகள்

பங்கினை ஏறத்தாழப் பெற்று வருகின்றனர். சராசரிச் சிறுமி சில நிலைகளில் 17·5 ஆண்டுகளிலும் முழுவளர்ச்சி பெறவில்லை என்றாலும் சில வளர்ச்சி நிலைகளில் 15·5 ஆண்டுகளில் முழு வளர்ச்சியினை எய்தி விடுகிறாள்.

வளர்ச்சியில் ஒழுங்கற்ற தன்மை உயிர்ப்புப் பைத் திறனின் வளர்ச்சியில் காணப்படுகிறது. பள்ளிக் குழந்தைகள் குழுக்களின் அளவுகள் உயிர்ப்புப் பைத் திறனின் அதிகம், இளையோர் பருவத்தில் குறிப்பிடும்படியாக இருப்பதாகக் கூறுகின்றன. சிறுமிகளுடைய அதிகமானகூடுதல் 10-லிருந்து 11, 14 ஆண்டுகளில் ஏற்படுகிறது. சிறுவர்களது அதிகமான வளர்ச்சி 1, 2 ஆண்டுகளுக்குப் பின்னர் ஏற்படுகிறது. இந்தக் கூடுதல் வளர்ச்சி ஓர் உடற் பயிற்சியில் ஈடுபட்டுள்ள அளவிற்குப் பாதிக்கப்படுகிறது. பால்ட்வினின் ஆய்வுகள் உடல் வளைவுகளில் உயிர்ப்புப் பையின் திறனின் வளர்ச்சி, உயரம் பருமன் ஆகியவைகளின் வளர்ச்சிக்குச் சமமாக இருக்கிறது எனக் காட்டுகிறது. இது துவக்கமுன் இளையோர் பருவப் பின்தங்குதலைத் தொடர்ந்து இளையோர் பருவத்தில் துரித வளர்ச்சியிருந்தது எனக் காட்டுகிறது. உயிர்ப்புப் பைக்கும் இதே வளர்ச்சிப் பொதுவளைவைக் காணலாம்.

கையின் வலிவுக்குரிய சோதனை, முதுகின் வலிவு, தட்டிப் பார்த்தல், நீடித்துத் தாங்குதல் ஆகிய சோதனைகள் யாவும் இளையோர் பருவத் துவக்கத்தில் துரிதமான முன்னேற்றம் இருப்பதைக் காட்டுகின்றன. 8 வயதில் தசைகள் உடலின் நான்கில் ஒருபகுதியை அடைத்துக் கொள்கின்றன. 16 வயதில் ஏறத்தாழ 45 சதவீதத்தினைக் கொண்டிருக்கிறது. 16 வயதில் கைப்பிடியின் வலிவு 11 வயதில் இருந்ததைக் காட்டிலும் இரு மடங்காக ஆகிவிடுகின்றது. எப்படியிருப்பினும் இக்காலத்திற்குப் பின்னர் வளர்ச்சி சிறிதுகாலமே இருக்கின்றது. ஏனெனில், தனியன் முழுமையான முதிர்ச்சியை அடைந்து விடுவதினால் குறைவான விகிதத்திலேயே வளர்ச்சி அதன் பின்னர் ஏற்படுகின்றது.

### இளையோர் பருவத்தில் பருமன் மாறுதல்

இளையோர் பருவத்தில் வளர்ச்சியின் நடைமுறை சமதளத்தில் இல்லாததனால் வெவ்வேறு வளர்ச்சி நிலைகளில் பருமனுக்கும், உயரத்துக்கும் உள்ள தொடர்பிற்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. அதிகமாகக் குண்டாக இருப்பவர்களென்றோ ஒல்லியாய் இருப்பவர்களென்றோ உயரம், பருமன் பட்டியல்களை வைத்துக் கொண்டு தனியன்களைப் பிரிக்க இயலாது. இருப்பினும், இசைவான தரத்திற்கு மேலுள்ளோர், கீழுள்ளோர் என்று அவர்களது உயரத்தைக் கொண்டு கூறலாம். வயது நிலைக்கு ஏற்றவாறு இவ்வித மாறுதல்களையும் சாதாரண எடை மாறுபாடுகளையும் மனத்தில்கொண்டு, பிறப்பு நிலையில் குண்டானவர்கள், அதே நிலையில் ஒல்லியானவர்கள் என்று கூற இயலும். இச்சமயத்தில் மரபுநிலை மாறுதல்கள், உடற்கட்டு, தற்காலிக உட்சுரப்பிச் சமன்பாடின்மை ஆகியவற்றின் செல்

வாக்கைக் கவனித்து அவற்றை எப்பொழுதும் நெஞ்சில் நிலைநிறுத்த வேண்டும்.

ஆரோக்கியத்தின் வளர்ச்சிக்கான எந்த ஆரோக்கிய நிகழ்ச்சியும் தனிக் குழந்தைகளின் பருமனை மனத்தில் கொள்ளவேண்டும். பருமனை மாற்றுவதற்குரிய முயற்சிகளுக்கு ஆரோக்கியத்தைப் பற்றிய கூர்மையான ஆய்வு தேவைப்படுகிறது. சராசரிக் குழுவிலுள்ள இளையோர்களில் பத்துப் பதினைந்து சதவீதத்தினர் பருமனின்மீது கவனத்தைச் செலுத்த வேண்டும் என்பது எதிர்பார்க்கக் கூடியதேயாகும்.

மேலும், இச்சிக்கல் உணவுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. உணவுப் பிரச்சினை சிக்கல் வாய்ந்த தொன்றாகும். ஏனெனில், இளையோர்களது உண்ணும் பழக்கங்களில் பல ஏதுக்கள் தோன்றத் துவங்கிவிட்டன. ஆதலின், இப்பிரச்சினை முதலில் தோன்றுவது போல் அவ்வளவு எளிதானதொன்றல்ல. உணவின் முன்னேற்றத்துக்கான முயற்சிகள் நன்மை பயப்பதாகக் காணப்பட்டன. தனியன் இம்முயற்சிகளைக் குறித்துக்கொண்டும் தனது முன்னேற்றத்தைக் கவனிப்பாலுணல் மேலும் பயனை அடைவான். ஆதலின், இளையோன் முறையான வழிகாட்டலும், அறிவுறுத்தலும், உணவைக் கட்டுப்படுத்தும் முறைகளில் பெறுவானுணல், அவனுல் பருமன் தரத்தையும் உயர்ந்த ஆரோக்கிய நிலையையும் அடைய இயலும்.

### நல்ல நிற்கும் நிலைப் பழக்கங்கள்

அண்மை ஆண்டுகளில் மருத்துவர்கள் உடலின் உறுப்புகளைக் காப்பாற்றுவதற்கும் அவைகள் ஊக்க நிலைத்திறத்துடன் வேலை செய்யவும், நல்ல நிற்கும் நிலைப் பழக்கங்களின் முக்கியத்துவத்தை வலியுறுத்துகின்றனர். நிற்கும் நிலைப் பட்டியல்களை உண்டாக்கியிருக்கின்றனர். நிற்கும் நிலைப் பயிற்சிகள் சிபாரிசு செய்யப்பட்டுள்ளன. நிற்கும்நிலை மருத்துவமனைகள் நடத்தப்படுகின்றன. இவை யாவும் குழந்தைகளிடத்தும், இளையோனிடத்தும், முதியோனிடத்தும் நல்ல நிற்கும் நிலைப் பயிற்சிகளை வளர்க்க முயற்சி செய்கின்றன. துவக்கக் குழந்தைப் பருவ ஆண்டுகளிலேயே நிற்கும் நிலைப் பயிற்சி துவக்கப்படல் வேண்டும். இளையோர் பருவத்தில் நிற்கும் நிலை கெட்ட பழக்கங்கள் தோன்றிவிடுகின்றன. இப்பருவம் தவருன நிற்கும் நிலைப் பழக்கங்களை உடன் ஏற்றுக்கொள்ளும் வயதாக ஆவதற்குப் பல காரணங்கள் தரப்படுகின்றன. முதலாவதாக, துவக்க இளையோர் ஆண்டுகள் துரித வளர்ச்சியுள்ள ஆண்டுகளாகும். உணவிலிருந்து கிடைக்கப்பெறும் சத்தின் பெரும் பகுதி வளர்ச்சிக்கு வழிவகுக்கப் பயன்படுகிறது. ஆதலின், இளையோன் ஒரு களைப்பான உணர்விஞல் மந்தநிலை பெறுவதற்கு மனப்பற்று கொள்கிருன். இரண்டாவதாக,

இளையோர் ஆண்டுகள் செயலுள்ள ஆண்டுகளாகும். இளையோரும் சிறுவரும், சிறுமியரும் தங்களுடைய உரத்தின் பெரும் பகுதியைத் தங்களது சமூக, பொழுதுபோக்கு விளையாட்டுச் செயல்களில் செல வழிக்கின்றனர். இதுவும் ஒரு களைப்பான உணர்வை ஊட்டி உட் காரும் நிலையில் மந்த நிலையை உண்டாக்குகின்றது. மூன்றுவதாகத் தனியன் அவனது நீளமான கால்கள் பற்றியும், பொது உயரத்தைக் குறித்தும் தன்னுணர்வு கொள்ளலாம். இம்மனப்போக்கு, தனியனது உயரத்தை மறைப்பதற்கும் அலங்கோலத்தை மறைப்பதற்கும் உதவுகிறது. இது சிறுமிகளிடத்துச் சிறுவர்களைக் காட்டிலும் அதிக மாகக் காணப்படுகின்றது. வாழ்க்கையின் துவக்க ஆண்டுகளில் இவ்விரும்பத்தக்க பழக்கங்களைப் பெருவிட்டால் அவைகளை இளை யோர் பருவத்தில் கற்றுக்கொள்ள வேண்டும்.

## நிற்கும் நிலையை மதிப்பிடுதல்

நல்ல நிற்கும் நிலையை உண்டாக்குவது எது என்பது ஒவ்வொரு பள்ளியும் கவனிக்கவேண்டிய பிரச்சினையாகும். முன்பு நினைத்தபடி நிற்கும் நிலையைக் கூர்ந்து ஆய்தல் அவ்வளவு எளிதானதொன்றல்ல. முதலாவதாகப் பல ஆசிரியர்கள் நிற்கும் நிலையுடன் சேர்ந்துள்ள ஏதுக்களை உணர்வதில்லை. அவைகளை மிகவும் குறைவான வகையில் கருதுகின்றூர்கள். இரண்டாவதாக, உடல் அமைப்பிலுள்ள தனியாள் வேற்றுமைகளைக் கவனத்தில் கொண்டுவரவேண்டும். ஆசிரியர்கள், குறிப்பாக உடற்பயிற்சிக்கல்வி ஆசிரியர்களும், ஆரோக்கியக் கல்வி ஆசிரியர்களும் இருக்கும்பொழுது அவர்களின் உற்றுநோக்கல் களின் அடிப்படையில் கணக்கிடுகளையும், அளவுகளையும் தயாரிக்க வேண்டும். இவ்வாறுன உதவி இல்லாதபோது மற்ற வழிகளையும் புது நெறிகளையும் கடைப்பிடித்து, மாணவர்களது நிற்கும் நிலையின் சரியான மதிப்பீட்டை அடைதல் வேண்டும்.[30] பொதுவாக இம் மதிப்பீடு நிற்கும் நிலை, உட்காரும் நிலை, நடக்கும் நிலை ஆகியவற்றைச் சேர்த்து இருக்க வேண்டும். நிற்கும் நிலையில் உள்ள முக்கியமான பொருள் என்ன வென்றுல் தனியன் நேராக நிற்கவேண்டும். அப் பொழுது தலை, உடல், இடை, கால்கள் ஆகியவை ஒரே சீராக இருக்கவேண்டும். எல்லாக் குழந்தைகளையும் தொங்கிய தோள் களுக்கும், சரியான நிற்றலுக்கும், சரியான வழியில் நடப்பதற்கும், பக்கவாட்டின் வளைவுகளுக்கும் உற்றுநோக்க வேண்டும்.

[30] See C. H. McCloy, Tests and Measurements in Health and Physical Education. New York: F. S. Crofts and Company, 1939.

## உடல் வளர்ச்சித் தொடர்பிலுள்ள பிரச்சினைகள்

உடலின் பலபாகங்களின் சமதளமில்லாத வளர்ச்சி வெவ்வேறு தனியன்களது வளர்ச்சி விகிதமும், காலமும் பூப்படையும் காலத்தில் மாறுபட்டிருக்கும் என்ற உண்மை, இளையோர் சிறுவர்களுக்கும் சிறுமியர்களுக்கும் துன்பங்களையும், பிரச்சினைகளையும் அளிக்கின்றன. வளர்ச்சிக்கால முரணின் அளவு கால் நீளத்திற்கும், உடல் நீளத்திற்கும் இடையே உள்ள அளவும் அல்லது இடை அகலத்திற்கும் தோள் அகலத்திற்கும் இடையே உள்ள அளவும், இப்பருவத்தில் குறிப்பிடும்படியாகக் காணப்படுகின்றன. இதுவே பலரது நிலைகளில் தொல்லை அளிக்கும் ஏதுவாக அமைகின்றது. தசைகளின் அளவு அதிகமாவதும் பின்தங்குகின்றது. இது பல சிறுவர்களுக்குக் குறிப்பிடத்தக்க சிக்கலாக அமைகின்றது.

ஒரே பாலைச் சேர்ந்த தனியன்கள் பூப்படையத் துவங்கும் உண்மை வயதில் குறிப்பிடும்படியான மாறுதல்கள் உள்ளன என்று முன்பே குறிப்பிடப்பட்டுள்ளது. இது நிகழ்கின்ற வீதமும், உடலியல் முதிர்ச்சி அடைகின்ற மாறுதல்களிலும் தனியாள் வேற்றுமைகள் உள்ளன. இளையோர்களைக் கலக்குகின்ற ஏதுவாக இம்மாறுதல்கள் உள்ளதன் முக்கியத்துவம் கவனத்துக்குரியதாகும். இளையோர் சிறுவன் உயரமில்லாமலிருந்தால் அதனுல் குறிப்பாகத் தன்னுணர்வு கொள்கின்ருன். இளையோர் சிறுமிக்கு உயரமாயிருத்தல் மிக அதிகமாகத் தொந்தரை செய்யக்கூடிய நிலையாகும். பிரேஸியர் (Frazier) லிசென்பீ (Lisonbee) அறிவிக்கும் ஓர் ஆய்வின் முடிவுகளில் இவ்வுண்மை வெளிப்படுத்தப்பட்டு அட்டவணை 3–3-லும் 3—4-லிலும் தரப்பட்டுள்ளது.[81] சிறுமியரில் சரிபாதிக்கும்மேல் அதிகமாக உயரமுடையவராய் இருப்பதற்குக் கவலை கொண்டனர். ஆனுல், சிறுவர்களில் சரிபாதியினருக்குமேல் அதிகக் குள்ளமாய் இருப்பதனுல் கவலை கொள்கின்றனர். இருப்பினும், பெரும்பான்மையான சிறுவர்களும் சிறுமியர்களும் முதிர்ச்சியில் தங்களைச் சராசரியினராக எண்ணிக் கொள்கின்றனர்.

இவ்வாய்வின் மற்றொரு பகுதி பத்தாவது படிவச் சிறுவர்களும் சிறுமியர்களும், முகத்தோற்றம் குறித்துக் கவலை கொள்வது பற்றியதாகும். ஆய்வின் இப்பகுதியின் குறிப்பிடத்தக்க முடிவானது இருபாலாரிலும் 57 சதவீதத்தினர் தோலில் காணும் பரு வகைகளையும் பருக்களையும் கொண்டிருப்பதாகக் கூறுகின்றனர்.

[81] A. Frazier and L. K. Lisonbee, 'Adolescent Concerns with Physique,' The School Review, 1950, Vol. 58, pp. 397-405.

## அட்டவணை 3—3

580 பத்தாவது படிவச் சிறுவர்களும் சிறுமியர்களும், தங்களுடைய உடற்கட்டைப் பற்றித் தருகின்ற விளக்கங்களின் சதவீதமும் விளக்கப்பட்ட இயல்புகளில் கவலைகொள்கின்ற சதவீதமும். (ப்ரேஸியரும் லிசென்பீயும் தந்தவை.)

| விளக்கங்கள் | தங்களை இவ்வாறு விளக்கிக் கொள்கின்ற சதவீதம் | | கவலை கொள்கின்ற சதவீதம் | |
|---|---|---|---|---|
| | சிறுவர்கள் | சிறுமியர்கள் | சிறுவர்கள் | சிறுமியர்கள் |
| ஒல்லியாய் இருத்தல் | 21 | 16 | 22 | 48 |
| குண்டாய் இருத்தல் | 13 | 30 | 3 | 55 |
| குள்ளமாய் இருத்தல் | 26 | 27 | 39 | 22 |
| உயரமாய் இருத்தல் | 28 | 22 | 4 | 49 |
| சீக்கிரம் வளர்ச்சி யடைதல் | 19 | 24 | 6 | 15 |
| மெதுவாக வளர்ச்சி யடைதல் | 17 | 13 | 40 | 36 |

சிறுவர்கள், சிறுமியர்கள் இருவரும் எண்ணெய்ப் பசையுள்ள தோல், வரிசையற்ற பற்கள், கண்ணாடி அணிதல் ஆகியவற்றினால் கவலை கொண்டனர். சிறுவர்களில் மூன்றில் ஒருபகுதியினருக்கு மேல், தாடியின்மையில் இணக்கம் தெரிவித்தற்கறிகுறியாகக் கோடிட்டனர். ஆனால், இதற்காக அவர்கள் அதிகக் கவலை கொள்ளவில்லை. சிறுமியர் தங்களிடம் நீண்ட மூக்கு உள்ளதாகவும், கரடுமுரடான தோல் இருப்பதாகவும் நினைப்பவர்கள் அதிகக் கவலை கொள்கின்றனர்.

'பால்பொருத்தமான உடற்கட்டு' என்னும் சொற்கள், சிறுவர்களுக்குப் பொருந்தும் முறையினின்றும் வேறுபட்ட முறையில் சிறுமி

## அட்டவணை 3—4

580 பத்தாவது படிவச் சிறுவர்கள் சிறுமியர்களில் பத்து சத வீதத்தினர் அல்லது அதற்கு மேலானவர்கள் கவலைப்பட்ட அளவுடன் தந்த தன்னைப் பற்றிய விளக்கங்களின் வகைகள். (பிரேசியர் லிசென்பீ தந்தவை.)

| சிறுவர்கள் | | | சிறுமியர்கள் | | |
|---|---|---|---|---|---|
| விளக்கப்பட்டவற்றின் வகைகள் | குறிப்பிடப்பட்ட சதவீதம் | கவலையுறும் சதவீதம் | விளக்கப்பட்டவற்றின் வகைகள் | குறிப்பிடப்பட்ட சதவீதம் | கவலையுறும் சதவீதம் |
| உடலில் தோன்றும் பரு வகைகள் அல்லது முகப்பருக்கள் ... | 57 | 51 | உடலில் தோன்றும் பரு வகைகள் அல்லது முகப்பருக்கள் ... | 57 | 82 |
| தாடியின்மை ... | 34 | 2 | அடர்ந்த புருவங்கள் | 24 | 11 |
| அடர்ந்த புருவங்கள் | 27 | 1 | தோலில் லேசான தவிட்டுநிறப் புள்ளிகள் | 23 | 24 |
| தழும்பு, பிறப்புக் குறியில் மச்சங்கள் ... | 20 | 13 | தழும்புகள், பிறப்புக்குறி மச்சங்கள் ... | 22 | 30 |
| வரிசையற்ற பற்கள் ... | 17 | 39 | கண்ணாடி அணிதல் ... | 21 | 31 |
| தடித்த உதடுகள் ... | 14 | 5 | உயர்ந்த நெற்றி ... | 19 | 8 |
| நீண்டுள்ள முகவாய் | 13 | 6 | வட்டமான முகம் ... | 19 | 21 |
| காதுகள் பரந்து இருத்தல் ... | 13 | 6 | கவர்ச்சியற்ற பெண்ணாயிருத்தல் ... ... | 18 | 42 |
| எண்ணெய்ப்பசையுள்ள தோல் ... ... | 12 | 27 | மறமறப்பான தோல் | 16 | 43 |
| தோலில் லேசான தவிட்டுநிறப் புள்ளிகள் | 12 | ... | பற்கள் வரிசையாக இல்லாமை ... ... | 16 | 42 |
| அடர்ந்த தாடி ... | 11 | 13 | மெல்லிய உதடுகள் | 15 | 18 |
| கண்ணாடி அணிதல் ... | 11 | 23 | கீழான நெற்றி ... | 13 | 8 |
| கறுத்த தோல் ... | 10 | 4 | நீண்ட மூக்கு ... | 11 | 23 |
| பின்னுக்குச் சென்றுள்ள முகவாய் ... ... | 10 | 4 | பின்னுக்குச் சென்றுள்ள முகவாய் ... ... | 10 | 13 |
| பற்களில் சந்துகள் ... | 10 | 26 | இயல் முரணிய உருவம் கொண்ட மூக்கு ... | 10 | 23 |
| நீண்ட மூக்கு ... | 10 | 8 | | | |
| ஒல்லியான முகம் ... | 10 | 15 | | | |
| மிகவும் பெரிய காதுகள் | 10 | 8 | | | |

யர்களுக்குப் பொருந்தும். ஒருவேளை 'பால் பொருத்தமான முகமும் உருவமும்' என்ற சொற்றொடர் சிறுமியர்களுக்கு ஏற்றதாக இருக்க

லாம். இது சிறுவர்களுக்குரிய ஆரோக்கியம், வலிவு, தசைநார்கள் திறன்களின் அடிப்படையில் பொருள் கொள்கின்ற பொருத்தமான உடற்கட்டுக் கருத்தினின்று தெளிவாகப் பிரித்துணர்த்துகின்றது. சிறுமியருக்கு அதிகமான தசைவலிவு இசைவில்லாததாகக் கருதப் படுகின்றது. ஓர் ஆரோக்கியமான தனியனது முரட்டுத்தோற்றம் ஆண்மையாகக் கருதப்படுகின்றதேயன்றிப் பெண்மையாகக் கருதப் படுவதில்லை. சிறுவர், சிறுமியர் இருவருமே பல நிலைகளில் 'பால் பொருத்தமான உடற்கட்டு' அல்லது உருவம் இல்லாது மனமுறிவு கொள்கின்றனர். மனமுறிவு ஏற்படும்பொழுது சிறுமியர்கள் அந்நிலைக் காகச் சிறுவர்களைக் காட்டிலும் அதிகமாக ஏதாவது செய்வார்கள். இதை நல்ல, பொருத்தமான உருவத்தைத் தரவல்ல உணவை உட்கொள்ளுவதற்குக் காட்டுகின்ற அதிகமான இசைவிலிருந்து தெரிந்து கொள்ளலாம். இருப்பினும், சிறுவர்கள் நல்ல தசை வளர்ச்சி கொண்ட ஆண்மையான உடற்கட்டைப் பெறுவதற்காக அதிகமான முயற்சியையும், உழைப்பாற்றலையும் கொண்ட தொடர்ச்சியான உடற்பயிற்சிகளில் பெரும்பாலும் ஊக்குவிக்கப்படுகின்றனர்.

இளையோர் சிறுவரும், சிறுமியரும் 'பால் பொருத்தமான' வளர்ச்சியிலிருந்து தற்காலிகமாக விலகுதலும், குறிப்பிடத்தக்க பொருத்தப்பாட்டுச் சிக்கல்களை ஏற்படுத்தக்கூடும்.

## அதிகாரச் சுருக்கம்

வளர்ச்சி, முட்டை உயிரணு கருவுற்றதிலிருந்து தொடங்கு கின்றது; பிறப்பு இச்செயலின் வரம்பினை மட்டுமே விரிவாக்கு கின்றது. ஏற்படுகின்ற வளர்ச்சியின் தன்மையையும், போக்கினையும் தீர்மானிக்கும் ஏதுக்கள் பல இருக்கின்றன. சில உயிரியல் விதிகள் வளர்ச்சி சராசரிச் சூழ்நிலை நிலைமைகளில் ஏற்படும்பொழுது அதனைப் பற்றி வருமுன் கூறுவதைச் சாத்தியக் கூறுக்குகின்றன. மாறுபடுகின்ற சூழ்நிலை வளர்ச்சியின் போக்கினையும் அளவினையும் மாற்றலாம் என்றாலும், இன்னமும் அதனுடைய முழுத் தொகுப்பினாலேயே அது உணரப்படுகின்றது. வளரும் குழந்தையை ஒரு முழுமையான இணைப் பிலும், உடலின் ஒரு பகுதியின் வளர்ச்சியின் தன்மையை மற்றப் பகுதி களுடைய தொடர்பிலும் கருதப்படல் வேண்டும். உடலின் வெவ் வேறு பகுதிகளின் வளர்ச்சியில் ஒரே சீரானதன்மை யில்லாவிடினும் தொடர்ச்சியான இடைத்தொடர்புகள் கொண்ட வளர்ச்சி எப் பொழுதும் காணப்படுகின்றது.

உயரம் - பருமன் பட்டியல்கள், உடலமைப்புச்சுட்டு, பல்வயது மீக்கோள்கள் ஆகியவைகளும், மற்ற உடல் அளவுகளும் வளர்ச்சி விளைமுறையின் ஆய்வில் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஆண்டுக்கு

ஆண்டு, சிறுவர் சிறுமியரைத் திரும்ப அளவிடப் பட்டவைகள் பூப்படையும் காலத்தின் வயதில் குறிப்பிடும்படியான பால் மாறுதலையும் துரிதவளர்ச்சியையும் காட்டுகின்றன.

முன் இளையோன் வளர்ச்சி பொது விகிதத்தில் பின்தங்கியிருக்கின்றது. இதைத்தொடர்ந்து இளையோர் பருவத்தில் ஒரு துரித முன்னேற்றம் ஏற்பட்டு, சராசரியில் ஒன்றிலிருந்து ஒன்றரை ஆண்டுகள் சிறுமியர்கள் சிறுவர்களைக் காட்டிலும் விரைவில் வளர்ச்சியுறுகின்றனர். இருப்பினும், தனியாள் வளர்ச்சிகள் ஒரேபாலாரான வெவ்வேறான தனியன்களிடம் குறிப்பிடும்படியான அளவு மாறுதல்களைக் கொண்டிருப்பதாகக் காட்டுகின்றன. பூப்படையும் கால வயதிலும், பொது உடல் அமைப்பு வளர்ச்சியிலும் பல்வேறு அதிகமான மாறுபாடுகள் இருக்கின்றன. வளர்ச்சியிலுள்ள மாறுதல்கள் உடற்பயிற்சி, வாழும் நிலைமைகள், உணவு போன்ற பிறிதின் சார்பான ஏதுக்களால் பாதிக்கப்படுகின்றன. வளர்ச்சி இவ்வாறு பல ஏதுக்களால் பாதிக்கப்படுவதால் ஓர் எளிய சூத்திரத்தை அமைப்பது வெகு கடினமாயுள்ளது. வாழ்க்கையின் வெவ்வேறு நிலைகளில் இருக்கக்கூடிய வளர்ச்சி நிலைகளைப்பற்றி வருமுன் கூறுவதும் கடினமாயுள்ளது.

ஐயோவா (Iowa), ஹார்வார்டு (Harvard), கலிஃபோர்னியா (California) பல்கலைக் கழகங்கள் அறிவிக்கின்ற வளர்ச்சி ஆய்வுகளின் முடிவுகளைக் கீழ்க்கண்டவாறு தொகுத்துக் கூறலாம்.

1. பூப்படைவதற்கு முன்னர் உள்ள வளர்ச்சி முன்னேற்றத்திற்கு முன்னர் குறைவான வளர்ச்சியுடைய பருவம் உள்ளது.
2. பூப்புடைவதற்கு முன்னர் உள்ள துரித வளர்ச்சி 1½-லிருந்து 2 ஆண்டுகள் சிறுவர்களைக் காட்டிலும் சிறுமியர்களுக்கு விரைவிலேயே ஏற்படுகிறது. சிறுமியரது நிலைகளில் பன்னிரண்டாவது ஆண்டுக் காலத்தில்தான் உயரத்தில் ஏற்படும் அதிகமான ஓர் ஆண்டுக் கூடுதல் ஏற்படுகிறது.
3. பூப்படைதலைத் தொடர்ந்து வளர்ச்சி விகிதத்தில் குறைவு ஏற்படுகின்றது.
4. ஆரம்பப்பள்ளி ஆண்டுகளில் 'உயரமானவர்கள்', 'நடுத்தரமான உயரமுடையவர்கள்', 'குள்ளமானவர்கள்' என்று குழுக்களாகப் பிரிந்து இருப்பவர்கள், தொடர்ந்து அக்குழுக்களிலே முதலிரு குழுக்களிலிருப்போர் குறைவான காலத்தில் இருக்கின்றனர். மூன்றாவது

குழுவில் இருப்போர் அதிகமாக அக்குழுவிலேயே இருக்கின்றனர். ஏனெனில், வளர்ச்சி காரணமாக நடுத்தர உயரமுடையவர்கள் உயரமானவர்களாகலாம்.

5. பருமன் அதிகம் பெறுதலில் காலத்திற்கேற்ப மாறுபாடு உள்ளது. பொதுவாகப் பருமன் கூடுதல் குழந்தைகளுக்கு இலையுதிர்காலத்தில் மிக அதிகமாக உள்ளது. கோடைகாலத்தில் இதைவிடக் குறைவாகக் உள்ளது. குளிர்காலத்திலும் இளவேனிற்காலத்திலும் இது மிகக் குறைவாக உள்ளது. உயரத்தில் பருவ காலத்திய மாறுதல்கள் இளவேனிற் காலத்தில் அதிக மாறுதல்களைக் கொள்கின்றன.'

6. தனியாள் வேறுபாடுகள் அதிமாகக் காணப்படுகின்றன. இது முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ஒரு தனியன் மற்றக் குழந்தைகளினிட மிருந்து மட்டும் மாறுபட்டிருக்கவில்லை. அத்தனியன் அவனின்றும் காலத்திற்குக் காலம் மாறுபட்டு இருக்கின்றான். சில முக்கியமான பொதுப் போக்குகள் இருப்பினும், அவனுடைய பல்வேறு குண இயல்புகளிலும் திறன்களிலும் உள்ள வளர்ச்சியிலும் ஒரே சீராக இருக்கின்ற தன்மையைக் காணலாம். வளர்ச்சியிலுள்ள இம்மாறுதலின் முடிவை நடுத்தரப் படிவங்களில் காணலாம். ஐந்து, ஆறு, ஏழாவது படிவங்களில் பொதுவாகச் சிலமாணவர்கள் ஒரே சீரான விகித வளர்ச்சியைக் கொண்டுள்ளனர். பலர் பூப்படைதலுக்கு முன்னர் உள்ள வளர்ச்சித் துரிதத்திலும் இருக்கின்றனர். ஒரு சிறு எண்ணிக்கையினர் துரித வளர்ச்சியைக் கடந்த பின்னர் அவர்களது வளர்ச்சி விகிதத்தில் மெதுவாக இருக்கவும் துவங்கி விட்டனர்.

இளையோர் பருவத்தில் பல்வேறு மாறுபட்ட சிக்கல்கள் உடல் வளர்ச்சியுடன் தொடர்பு கொண்டுள்ளன. இவற்றில் சில வளர்ச்சி விகித மாறுதல்களினின்று கிளையாகப் பிரிகின்றன. மற்றும் சில இளையோர்களது திறன்களிலும் தோற்றத்திலும் உள்ள மாறுதல்களினின்று கிளையாகப் பிரிகின்றன. வேறு சில கலாசார எதிர்பார்த்தல்களினின்று பிரிகின்றன. சான்றாக, மேற்கத்திய நாகரிகத்தில் சிறுவர்களிடம் உடல்வீரமும், தீரமும் எதிர்பார்க்கப் படுகின்றது. இதில் சிறுமியர்க்கு அதிக முக்கியத்துவம் தரப்படவில்லை. உண்மையில் அதிகமான தசைவலிவும், தீரச்செயல் உணர்வும் அதிகமாகக் கொண்டிருத்தலுமே பலகுழுக்களில் சிறுமியருக்கு இசைவான குணமாகக்கருதப்படுவதில்லை.

## சிந்தனைக்குரிய பிரச்சினைகள்

1. உன்னுடைய இளையோர் ஆண்டுகளைப்பற்றிக் கருதி உன்னுடைய வாழ்க்கையின் அப்பருவத்தில் தோன்றிய உடல்வளர்ச்சிச் சிக்கல்களைப்பற்றிக் கூறுக.

2. இவ்வதிகாரத்தில் 13·25 வயதில் இயக்கத்திறனில் தோன்றுகின்ற பால் மாறுதல்களைச் சுருக்கமாகத் தொகுத்துக் கூறவும். இளையோர் பருவ ஆண்டுகளில், பெண்களது இயக்கவளர்ச்சியில், சிலருடைய நிலைகளில் சீக்கிரமாக இடைநிறுத்தம் ஏற்படுவதையும் குறைவடைவதையும் எவ்வாறு விளக்குவாய்?

3. உடல் வளர்ச்சியைப் பற்றிய ஆய்வில் பயன் படுத்தப் பட்ட வெவ்வேறு முறைகள் யாவை? ஒவ்வொன்றிலுமுள்ள நன்மைகளைத் தருக.

4 ஒரு மாணவர் குழுவின் உடல் வளர்ச்சியைப் பற்றிய குறிப்புகள் கிடைக்குமானால் அவைகளை வைத்து ஆய்ந்து இருக்கின்ற மாறுபாடுகளைக் கவனிக்கவும். இம்மாறுதல்கள் எவ்வாறு அக்கறைகளுடன் தொடர்பு கொண்டுள்ளன? ஆளுமைகளுடன் எவ்வாறு தொடர்பு கொண்டுள்ளன?

5. உம்முடைய உற்று நோக்கல்களில் இளையோர் பருவத்தில் துரித வளர்ச்சி இருப்பதனைக் கண்டீரா? மற்றத் துரிதமாக நடைபெறுகின்ற குறிப்பிடும்படியான மாறுதல்கள் ஏன் ஏற்படுகின்றன?

6. பக்கங்கள் 96-97ல் விவாதிக்கப்பட்ட, வளர்ச்சியில் ஒரே சீராக இல்லாத தன்மையின் முக்கியத்துவம் என்ன?

7. உடலமைப்பு வளர்ச்சியை அளவிடக்கூடிய வெவ்வேறான முறைகள் யாவை? இவைகளில் எவற்றைச் சரியானவை என்று நீ கருதுகின்றாய்? பொதுவாக எது அதிகப் பயன் தரவல்லது?

8. சிறுவர்களுக்கும் சிறுமியர்களுக்கும் பொருத்தப்பாட்டுச் சிக்கல்கள் தருகின்ற உடல் வளர்ச்சி இயல்புகள் யாவை?

9. குமாரி குவின் (Miss Queen) வடக்குத்தெருப் பள்ளியில் ஓர் 7ஆவது படிவ ஆசிரியையாவார். அவர் மாணவர்களது உயரம் பருமன் பற்றி ஆய்ந்தார்.

(i) அவர் பால் மாறுபாடுகள் பற்றி என்ன காண்பார் என்று எதிர்பார்க்கிறீர்கள்.

(ii) அவர் 5 சிறுவர்களும் 6 சிறுமியர்களும் உயரத்துக்குரிய மீக்கோளினின்று கிழாகவும், பல பவுண்டுகள் பருமனிலும் இருந்ததைக் கண்டார். அவரது அடுத்த வேலை என்ன? அவர் கவனிக்கவேண்டிய சில ஏதுக்கள் எவை ?

10. உயர்நிலைப்பள்ளியிலுள்ள எல்லா சிறுவர்களுக்கும் சிறுமியர்களுக்கும் பொருத்தமான உடற்கல்வி அல்லது பொழுதுபோக்கு நிகழ்ச்சியைத் தரவும்.

11. போட்டி விளையாட்டுகள், உடற் கல்வி நிகழ்ச்சியாக இருக்கையில் உள்ள நன்மைகளையும் தீமைகளையும் விளக்குக.

## தெரிவுசெய் நூற்பட்டியல்

1. Cole, L., 'Psychology of Adolescence' (Fourth Edition). New York: Rinehart and Co., Inc., 1954, Chap. 2.

2. Cruze, W. W., 'Adolescent Psychology and Development'. New York: The Ronald Press Co., 1953, Chap. 3.

3. Greulich, W. W., and S. I. Pyle, 'Radiographic Atlas of Skeletal Development of the Hand and Wrist.' Stanford, Calif. Stanford University Press, 1950, pp. 1—29.

4. Hurlock, E. B., 'Adolescent Development'. New York: McGraw-Hill Book Co., 1949, Chap. 2.

5. Jersild, A. T., 'Education in Motor Activities', Child Development and the Curriculum, Thirty-eighth Yearbook of the National Society for the Study of Education, Part I, 1939.

6. Jones, H. E., 'Motor Performance and Growth'. Berkeley and Los Angeles: University of California Press, 1949.

7. Kuhlen, R. G., 'The Psychology of Adolescent Development'. New York : Harper & Bros., 1952, Chap. 2.

8. Landis, P. H., 'Adolescence and Youth' (Second Edition). New York : McGraw-Hill Book Co., 1952, Chap. 3.

9. Malm, M., and O. L. Jamison, 'Adolescence'. New York : Macmillan Co., 1952, Chap. 4.

10. Stolz, H. R., and L. M. Stolz, 'Somatic Development of Adolescent Boys', New York : Macmillan Co., 1951.

11. Thompson, H., 'Physical Growth,' in Carmichael, L. (Editor), 'Manual of Child Psychology' (Second Edition). New York : John Wiley and Sons, Inc., 1954, Chap. 5.

12. Zachry, C. B., and M. Lighty, 'Emotions and Conduct in Adolescence'. New York : Appleton-Century-Crofts, Inc., 1940, Chaps. 2—4.

# 4. அறிவு வளர்ச்சி

## நுண்ணறிவு : அதன் பொருளும் அளவிடலும்

கடந்த பல ஆண்டுகளாக மனவளர்ச்சியின் தன்மையைப் பற்றித் தொடர்ந்து மலையத்தனை ஆய்வுகள் நடந்து வந்துள்ளன. இவ்வாய்வுகள் மனவளர்ச்சியைப் பற்றிப் பயனுள்ள செய்தியைத் தருவதோடு மேலும் ஆய்வதற்குப் புதுப் பகுதிகளைத் தந்துள்ளன. இளையோர் பருவ ஆண்டுகளில் மனவளர்ச்சியின் தன்மை பற்றிச் சரியான தெளிவுள்ள கருத்துகளை இவ்வாய்வுகள் தரவில்லை. ஆனால், இவ்வாய்வுகளின் முடிவுகள் மனவளர்ச்சியின் சில இயல்புகளைக் குறிக்கின்றன. இளையோர் பருவத்திலுள்ள மனவளர்ச்சியைப் பற்றி அக்கறை கொள்ளும் சமயத்தில், ஒரு மாணவன் கீழ்க்கண்டவற்றை உணர்வானானால் பயனுறுவான். உடல், மனவெழுச்சி வளர்ச்சிக்குப் பொருத்தமான அடிப்படைக் கருத்துகள், மனவளர்ச்சிக்கும் பொருத்தமானவையாகும். இளையோர் ஆண்டுகளில் ஏற்படும் மனவளர்ச்சியைச் சிறு குழந்தைப் பருவத்திலும், குழந்தைப் பருவத்திலும் உள்ள வளர்ச்சிக் காலங்களினின்று பிரித்துணர முடியாது. மனவளர்ச்சி என்பது தனியனின் முழுவளர்ச்சியின் உள்ளடங்கியுள்ள ஒரு பகுதியாகும்.

இவ்வதிகாரத்தில் கூறப்படும் செய்திகள் இளையோர் பருவ வாழ்க்கைக்கு மட்டும் பொருத்தமாயிருக்கும். இப்பகுதியின் மன இயல்புகளை விளக்கிப் பொருள் கூறுதல், குழந்தைகளின் மனஇயல்புகளைச் சார்ந்தும் நேரடித்தொடர்பு கொண்டும் உள்ளன. மேலும், மனவளர்ச்சியுடன் தொடர்புகொண்டுள்ள பிரச்சினைகள் அதிகமாக முரண்பாடுள்ள கருத்துகளைக் கொண்டுள்ளன. இங்குத் தரப்பட்டுள்ள செய்திகள், அறிவியல் ஆய்வுகள் குறிக்கின்ற உயர்நிலையிலிருந்து தரப்படுவதாகும். இங்கு ஆயப்போகின்ற சில முக்கியமான பிரச்சினைகள்: நுண்ணறிவின் அல்லது மனத்திறத்தின் பொருள்; நுண்ணறிவை அளக்கும் முயற்சியை எதிர்நோக்கியுள்ள பிரச்சினை

கள்; மனவளர்ச்சி பற்றிய கருத்துகள்; தனியனது மனத்திறன்களின் வளர்ச்சி, மனவளர்ச்சியுடன் தொடர்புள்ள ஏதுக்கள்,

## நுண்ணறிவுக் கருதுகோள்கள்

துவக்ககால உளவியல் மாணவர்கள் நுண்ணறிவின் தன்மையைப் பற்றிக் கொண்ட கருதுகோள்கள், மிக எளிமையானவையாகும். கல்வி உளவியல் மாணவர்களில் பலர், நுண்ணறிவினை ஒரு பொது மனத்திறன் அல்லது மனச் சக்திகளின் கூட்டு என்று கருதினர். அவற்றை ஒரு செங்குத்தான அலகினால், தனித்த எண்ணிக்கையினால், அளந்துவிட முடியும் என நம்பினார்கள். இவ்வெண்ணிக்கைகள் வளர்ந்து மனவயதாக உருமாறின.[1] மனவயதுக்கும் உண்மை வயதுக்கும் இடையே உள்ள விகிதம் (IQ) நுண்ணறிவு ஈவினைக் கணக்கிடுவதற்கு அடிப்படையாக அமைகின்றது.




படம் 4—1

படம் 4—1-ல் காட்டியுள்ளபடி சிறந்த, சராசரி, பின்தங்கிய குழந்தைகளின் மனவளர்ச்சி, வளர்ச்சி மதிப்பீடுகளுக்கு ஒத்து இருக்கின்ற போக்கினைக் காணலாம். உண்மை வயது அதிகமாகும் பொழுது இம்மாறுதல்களும் அதிகமாவதைக் காணலாம். பின்தங்கியுள்ள குழந்தை, சராசரிக் குழந்தையுடன் ஒப்பிடும்பொழுது மிகவும்

[1] *துவக்ககால பினே சோதனைகளிலும், அவரது திருத்தி அமைக்கப்பட்ட சோதனைகளிலும் குழந்தையின் மன வயதை, அச்சோதனையைச் செய்ய வல்ல குழந்தைகளின் சராசரி வயதின் அடிப்படையில் கூறின.*

குறைவான தரத்தையடைகின்றது. வயது அதிகமாக ஆக இத்தரக் குறைவு அதிகமாகிக்கொண்டே போகின்றது. அதேபோன்று சிறந்த குழந்தை தரத்தின் உயர்வில் அதிகமாகிக் கொண்டே போகின்றது. அப்பொழுது IQ குழந்தையுடைய மனத்திறன் அல்லது வளர்ச்சி விகிதத்தைக் கணக்கிடுவதாகும். ஒரு தனியனது IQ வில் ஆண்டுக்கு ஆண்டு தோன்றுகின்ற குறிப்பிடும்படியான மாறுதல்கள் விதிவிலக்கு நிலைகளாகக் கருதப்பட்டன. இவ்வாறு 'IQ வின் மாறுத்தன்மை'க் கொள்கை வளர்ச்சியடைந்து பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்டது.

தார்ன்டைக் (Thorndike) நுண்ணறிவை நோக்கும்பொழுது மூன்று நிலைகளான அல்லது வகைகளான நுண்ணறிவுச் செயல்களை நோக்கவேண்டும் எனக் குறிப்பிட்டார்.[2] அவைகளை வெற்றுநிலை, பொறிநிலை, சமூகநிலை எனக் குறிப்பிட்டார். வெற்றுநிலை நுண்ணறிவு என்பது குறிகள் அதாவது வார்த்தைகள் ஆகியவற்றைப் பயன்படுத்துவதற்கும் அறிந்துகொள்வதற்கும் உள்ள திறனாகும். பொறிநிலை நுண்ணறிவு என்பது பொறிப் பொருள்களை, அதாவது துப்பாக்கி, புல்வெளியைச் சமநிலையாக்கும் இயந்திரம் ஆகியவற்றை அறிந்துகொண்டு பயன்படுத்துகின்ற திறனாகும். சமூகநிலை நுண்ணறிவு, சமூக நிகழ்ச்சிகள், குறிப்பாக மனிதத் தொடர்புகளில் எடுத்துக் கொள்ளும் முடிவுகள் ஆகியவற்றை உணர்ந்து வெற்றிகரமாகக் கையாளும் திறனாகும். இதற்குப் பின்னர் ஸ்டோடார்ட் (Stoddard) நுண்ணறிவுக்கு நிகழ்ச்சிமுறையுள்ள சுருக்கமான வரையறையினைத் தந்தார். நுண்ணறிவு என்பது கீழ்க்கண்ட ஏழு செயல்களைத் திறம்படச் செய்யும் திறனாகும் என வரையறுத்தார். அவை: (1) கடினமானவை. (2) சிக்கலானவை. (3) வெற்றுநிலையானவை. (4) துரிதமாகக் காரியம் செய்தல். (5) குறிக்கோளுடன் ஒன்றியிருத்தல். (6) சமூகப்பயன் மதிப்பு. (7) புதிய கண்டுபிடிப்புகளுக்கான திறமை. இச்செயல்களைக் கட்டுப்பாடுகளுக்குள் அடக்கி, உடல்சக்தியை ஒரு நிலைப்படுத்தி, மனவெழுச்சிச் சக்திகளை எதிர்த்து நிற்பதும் நுண்ணறிவு ஆகும்.[3]

கோடார்ட் (Goddard) நுண்ணறிவின் வரையறையைத் தற்பொழுதைய சிக்கல்களுக்குக் கடந்தகாலப் பட்டறிவின் துணைகொண்டும், எதிர்காலத்தைப்பற்றி எதிர் நோக்குகளின் துணைகொண்டும் தீர்வு காணும் அறிவே நுண்ணறிவு என்று குறிப்பிடுகின்றார்.[4]

[2] E. L. Thorndike, 'Intelligence and Its Uses', Harper's Magazine, 1920, Vol. 140, pp. 227-235.

[3] G. D. Stoddard, 'On the Meaning of Intelligence', Psychological Review, 1941, Vol. 48, pp. 250-260.

[4] H. H. Goddard, 'What is Intelligence?', Journal of Social Psychology, 1946, Vol. 24, p. 68.

ஆனால், மரபுவழிப் பெற்ற கரு இயல்புத் திறனை நுண்ணறிவையும் நுண்ணறிவுச் சோதனைகளின் மூலமாக அளக்கப்பட்ட நுண்ணறிவையும் தனித்துப் பிரித்துணர வேண்டும். உண்மையில் நாம் அறிகின்ற நுண்ணறிவு எல்லாம் ஒரு வினாமுறையிலோ, அல்லது மனச் சோதனைகளிலோ வெளிப்படுத்தப்பட்ட நுண்ணறிவேயாகும். கரு இயல்பான திறனுள்ள நுண்ணறிவு என்பதெல்லாம் பெருமளவிற்கு வெற்றுநிலை ஆய்வாகும். தனியானது நுண்ணறிவைச் சுட்டுவதைக் காட்டிலும், அவனது நுண்ணறிவு ஈவின் அளவினைச் சுட்டுவது மிகவும் பொருத்தமுடைய தோன்றுகும். இவ்வதிகாரத்திலும் வர விருக்கின்ற விவரங்களிலும் பயன் படுத்தப்படும் 'நுண்ணறிவு' எனும் சொல் நுண்ணறிவுச் சோதனைகளின் அளவினின்று தீர்மானிக்கப் படுவதையே குறிக்கும்.

## மன வளர்ச்சி

பல ஆண்டுகள் ஒரே தனியனுக்கோ அல்லது தனியன்களின் குழுவுக்கோ தரப்பட்ட நுண்ணறிவுச் சோதனைகளினின்று பெறப் பட்டவையே மன வளர்ச்சியைப் பற்றி இருக்கின்ற விவரங்களாகும். பிரீமேன், ப்லோரி (Freeman and Flory) சிகாகோ வளர்ச்சி ஆய்வின் முடிவுகள் பற்றிக் குறிப்பிட்டனர். இச் சோதனைகள் பல ஆண்டுகளில் நூற்றுக்கணக்கான குழந்தைகளுக்குஅளிக்கப்பட்டவையாகும்.[5] பல தனியன்கள் 17, 18 வயதுகளில் அவர்கள் சிகாகோ சோதனைக்கூடப் பள்ளிகளில் (Chicago Laboratory Schools) பட்டம் பெறும்பொழுது மீண்டும் சோதிக்கப்பட்டனர். அவர்களில் சிலர் கல்லூரியில் மீண்டும் சோதிக்கப் பட்டனர். அவர்களைச் சோதிக்கப் பயன்படுத்தப்பட்ட, நான்கு தரப்படுத்திய சோதனைகளாவன: (1) சொற் சோதனைகள். (2) ஒப்புமைச் சோதனைகள். (3) முடிக்கும் சோதனைகள். (4) எதிர்மறைச் சோதனைகள். கிடைக்கப்பட்ட முடிவுகளினின்று வரையப்பட்ட வளர்ச்சி வளைவுகள் 17, 18 ஆண்டுகளில் தொடர்ந்து இருந்த மன வளர்ச்சியைக் காட்டுகின்றன. ஆதலின், இவ்வாய்வுகள் சராசரி மனத்திறனுள்ள குழந்தைகளின் மனத்திறன் 17, 18 ஆண்டுகளில்கூடத் தொடர்ந்து வளர்ச்சியுறுகின்றது என்று காட்டுகின்றன. இவை சராசரிச் சூழ்நிலையினால் அறிவுத் தூண்டல்களுக்குரிய ஊக்கமளிக்கும் வாய்ப்புகளைத் தரமுடியாமையின் காரணமாக ஏற்படுவதாகும். இதனால்தான் மனச் சோதனைகளில் மனவளர்ச்சி துரிதவேகத்தில் குறிப்பதாகக் காணப் படுகின்றது. 2-லிருந்து 14 வயதுக் குழந்தைகளை வைத்து நடந்த

[5] F. N. Freeman and C. D. Flory, 'Growth in Intellectual Ability as Measured by Repeated Tests,' Monographs of the Society for Research in Child Development, 1937, Vol. 2, p. 116.

மின்னஸ்டோ ஆய்வுகள் இதனுடன் ஒத்துள்ளன.[6] இவ்வாய்வுகளின் படி சொல்வன்மையிலாச் சோதனைகள் சொற்சோதனைகளைக் காட்டிலும் பிற்காலத்தில் எடுக்கப்போகும் அளவினை வருமுன் கூறுவதில் முன்னிற்கின்றன. பொதுவாக நுண்ணறிவுச் சோதனைகளின் அளவிடும் அடிப்படையிலுள்ள வளர்ச்சி விகித வளைவுகள் ஆரம்ப ஆண்டுகளில் துரிதமுன்னேற்றத்தையும், 8-லிருந்து 15 ஆண்டுகளில் குறைந்த விகிதத்தையும், பின்பு குறையும் விகிதம் மிக அதிகமாக இருப்பதையும் காட்டுகின்றன.

ஒரு குழந்தை மெதுவாக வளர்வதனால் மட்டுமே அவன் மனத்தரத்தில் குறைவுபட்டவன் என்று முடிவு செய்யக்கூடாது. இதே போன்று அவன் வேகமாக வளர்வதனால் மட்டுமே மனத்தரத்தில் உயர்ந்தவன் என்றும் எடுத்துக்கொள்ளக் கூடாது. குழந்தைகள் வெவ்வேறான விகிதங்களில் வளர்ந்து முதிர்ச்சியடைகின்றன.

ஒரு சிறந்த குழந்தையின் வளர்ச்சி துவங்குவதற்கு மிகவும் காலமெடுக்கலாம். அதே சமயத்தில் ஒரு மந்தமான குழந்தை உள்ளத்தில் பதியும்படியான துவக்கத்தை ஏற்படுத்தலாம். ஒரே வயதுள்ள குழந்தைகள் அவர்களது பருவமடையும் வயது அல்லது உறுப்புகளின் வளர்ச்சி வயதில் அதிகமான மாறுதல்கள் கொண்டிருக்கலாம்.

## மன வளர்ச்சியின் மாறாத்தன்மை

மனவளர்ச்சி வளைவுகளின் பொதுவான தன்மையைப் பற்றி அதிகமான கருத்து வேறுபாடுகள் உள்ளன. இவை உண்மை வயதுக்கும் மன வயதுக்கும் உள்ள மாறாத் தன்மையின் விகிதத்தைச் சுற்றி அமைந்ததாகும். IQ முன்பே கண்டபடி தனியானது மன வயதை உண்மை வயதால் வகுக்கும்பொழுது கிடைக்கும் எண் கொண்டு தீர்மானிக்கப்படுகிறது. மனவயது அப்பொழுது மன வளர்ச்சியை அளக்கும் அலகாக ஆகின்றது. மனவளர்ச்சி வளைவுகள் மனவயதின் அடிப்படையில் குறிக்கப் படுகின்றன. துவக்க ஆய்வுகளின்படி வளர்ச்சி ஒரே சீராகவும், ஒழுங்காகத் தொடர்வதாகவும் காணப்படுகின்றது. இது மேலும் உடன் தொடர்பு முறையினால் காட்டப்பட்டுள்ளது. அண்மையில் நடந்த ஆய்வுகள் மனவளர்ச்சி பல ஏதுக்களால் பாதிக்கப் படுகின்றது என்பதற்குச் சான்றுகள்

[6] F. L. Goodenough and K. M. Mauer, 'The Mental Growth of Children from Two to Fourteen Years. A Study of the Predictive Value of the Minnesota Preschool Scales,' University of Minnesota Child Welfare Monograph Series, 1942, No. 19.

தருகின்றன. ஆறு வருடகால இடைவெளிக்குப் பின்னர் அறிவு மிக்க குழந்தைகளை டெர்மன் (Terman) மீண்டும் சோதனை செய்து கீழ்க்கண்டவாறு முடிவு கூறுகின்றார்.

'நுண்ணறிவு ஈவின் மாறாத் தன்மையை அளவிடும் பொழுது சிக்கலை உண்டாக்கும் ஏதுக்களுக்கு உரிய இணக்கங்களைத் தந்தால், நமது உயர்ந்த அறிவுடைய குழுக்களில், நுண்ணறிவு ஈவில் குறிப்பிடும்படியான மாறுதல்களைக் கொண்ட தனிக் குழந்தைகள் இருக்கின்றார்கள் என்ற முடிவைத் தவிர்க்க முடியாது. இம்மாறுதல்களில் சில நுண்ணறிவு ஈவு அதிகமாகின்ற வழியில் செல்லுகின்றன. மற்றவை குறைவாகின்ற வழியிலும் செல்லுகின்றன. திட்டவட்டமாக அமைக்கப்பட்ட முக்கியமான உண்மை யாதெனில், அறிவு வளர்ச்சியின் விகிதத்தில் சில சமயங்களில் உண்மையான மாறுதல்கள் ஏற்படுகின்றன. இம்மாறுதல்களைப் பொது ஆரோக்கியம், கல்வி வாய்ப்புகள் அல்லது மற்றச் சூழ்நிலைச் செல்வாக்குகளின் அடிப்படையில் விளக்க முடியாது.'[7]

ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட ஆண்டுகளுக்கிடையே உடன் தொடர்பு காணும்பொழுது அது நிறைவற்று உள்ளது. பெரும்பான்மையான விழுக்காட்டினரின் நிலைகளில் குறிப்பிடத்தக்கவாறு நெகிழ்வுத் தன்மையைக் காணலாம். இம்மாறுதல்களின் அளவு குழந்தையின் வாழ்க்கையில் தோன்றுகின்ற சில இடைக்காலச் சூழ்நிலைகள் போன்ற ஏதுக்களைப் பொறுத்து இருக்கும். (இவ்விடைக் காலச் சூழ்நிலைகளாவன: மனவெழுச்சிச் சிக்கல்கள், நோய், சூழ்நிலையில் மாறுதல், பள்ளிப் படிப்புக்கான வாய்ப்பு இயக்கக் கற்றல் ஆகியவைகளாகும்.) கலிஃபோர்னியா பல்கலைக் கழகத்தில் நடந்த வழிகாட்டி பெற்ற மனச் சோதனை மதிப்பெண்கள் 21 மாதங்களிலிருந்து 18 வயது வரை உள்ள 25 குழந்தைகளிலிருந்து எடுக்கப்பட்டவையாகும்.[8]

இந்த வயதுக் காலத்தில் உள்ள மனச்சோதனை வினைமுறையின் நிலைத்தன்மை அளவினைக் கணக்கெடுப்பதற்காக இவ்வெண்ணிக்கைகள் பகுத்தாயப்பட்டன. இது குழந்தைகளின் மனச்சோதனை வினைமுறைகளின் மாறாத்தன்மை சோதனை செய்யும் வயதையும், சோதனைகளுக்கு இடையேயுள்ள இடைவெளியையும் பொருத்த

[7] L. M. Terman, 'Genetic Studies of Genius', Stanford, Calif. Stanford University Press, 1930, Vol. 3, p. 30.

[8] M. P. Honzig, J. W. Macfarlane and L. Allen, 'The Stability of Mental Test Performance Between Two and Eighteen Years', The Journal of Experimental Education, 1948, Vol. 17, pp. 309-324.

தாகும். அதாவது, குறுகிய வயதுக் காலத்தைப் பற்றிய வருமுன் கூறலே நல்லதாகும். எண்ணிக்கைகளைப் பற்றிய வருமுன் கூறலின் பயன் மதிப்பு, பள்ளிக்குமுன் உள்ள ஆண்டுகளுக்குப் பின்பு அதிகமாகின்றது. தனியாள் நிலைகளைப் பற்றிய ஆய்வு ஒரு குழுவிலுள்ளோரில், 60 சதவீதத்தினருக்கு நுண்ணறிவு ஈவு 15 அல்லது அதற்கு மேலான மாறுதலுக்கு உள்ளாகின்றது. 9 சதவீதத்தினரது நுண்ணறிவு ஈவுகள் 30 அல்லது அதற்கு மேலான அளவு மாறுதலை அடைகின்றன. அதே தனியன்களைத் திருப்பித் திருப்பி ஆய்ந்ததில் கிடைத்த எடுத்துக் காட்டான வரலாறுகளின் முடிவுகள் படம் 4-2ல் தரப்பட்டுள்ளன. இவை, துவக்க ஆண்டுகளில் நுண்ணறிவு ஈவு மிக அதிகமான அளவில் நிலையற்ற தன்மையுடையதாக இருப்பதைக் காட்டுகின்றன. ஆறு ஆண்டு மனச்சோதனையில் கிட்டிய மதிப் பெண்களின் அடிப்படையில் 18 வயதில் இருக்க வேண்டிய நுண்ணறிவு ஈவுபற்றி வருமுன் கூறலை மிக மிக எச்சரிக்கையுடன் கூறுதல் வேண்டும்.

வளர்ப்புக் குழந்தைகள்பற்றிய ஆய்வுகள், பின் அளவு வளர்ப்பு இல்லத்தில் தரப்படுகின்ற சூழ்நிலையின் வகையினால் பெரிதும் பாதிக்கப்படுவதைக் குறிக்கின்றன. ஸ்கோடாக், நுண்ணறிவு வளர்ச்சியுடன் தொடர்பிலுள்ள உண்மைகளை மேலும் அறியக் கீழான சமூகப் பொருளாதார நிலைப் பள்ளிக்குச் செல்லும் பருவத்திற்கு முன் உள்ள குழந்தைகளின் இரு குழுக்களைத் தேர்ந்தெடுத்தார்.[9]




ஒரே தனிப்பிள்ளைகளை திரும்பத் திரும்ப சோதனை செய்வதன் மூலம் நுண்ணறிவு ஈவு மாறுந்தன்மையைக் காணல்.

படம் 4—2

[9] Marie Skodak, 'Children in Foster Homes', University of Iowa Studies in Child Welfare, 1939, Vol. 16, Series No. 364.

முதற்குழு உயர்ந்த வளர்ப்பு இல்லங்களில் குழந்தைப் பருவத்தின் துவக்க காலத்திலேயே வைக்கப்பட்டனர். இரண்டாவது குழுவிலுள்ளோர், வெவ்வேறு காலங்களில், அவர்கள் சொந்த இல்லங்களிலும் கீழான நிலையிலுள்ள இல்லங்களிலும் வைக்கப்பட்ட பின்பு, அவர்கள் இதுகாறும் அறிந்திராத உயர்ந்த இல்லங்களில் வைக்கப்பட்டனர். வெவ்வேறு காலங்களில் இரு குழந்தைகளுக்கு நுண்ணறிவுச் சோதனைகள் தரப்பட்டன. இச் சோதனைகளின் முடிவுகள் சூழ்நிலையின் பின்னணியில் ஆய்வு செய்யப்பட்டன. முதல் ஆண்டுக் காலத்தில் குறிப்பிடும்படியான மாறுதல்கள் காணப்படவில்லை. நுண்ணறிவிற்கும் சூழ்நிலைப் பின்னணிக்கும் இடையே உள்ள காரணத் தொடர்பு இக்காலத்தில் மிகவும் குறைவானதாகும். முதலாண்டுக்குப் பின்னர் உயர்ந்த சூழ்நிலையிலுள்ளோரது சராசரி நுண்ணறிவு ஈவு தொடர்ச்சியாக வளர்ந்து வந்தது. கீழான சூழ்நிலையிலுள்ளோர்களது நுண்ணறிவு ஈவு தொடர்ச்சியாகக் குறைந்து வந்தது. இவ் வாய்விலிருந்து அறிவது என்னவெனில், குழந்தைகளின் மனநிலை அவர்களது உண்மையான தாயார்களுடன் தொடர்பு கொண்டுள்ளதைக் காட்டிலும் சூழ்நிலைப் பின்னணியுடன் அதிகத் தொடர்பு கொண்டுள்ளது என்பதாகும். ஸ்கோடாக் (Skodak) அளிக்கும் முடிவுகள் வளர்கின்ற ஆண்டுகளில் குழந்தைகளின் நுண்ணறிவு ஈவு நிலையை உயர்த்துவதற்குத் தூண்டக்கூடிய சூழ்நிலையின் முக்கியத்தை உணர்த்துகின்றன.[10]

சில அகன்ற பொதுமைகள் இவ்வாய்வுகளின் முடிவுகளைப் பகுத்தாய்வதில் பெறப்படுகின்றன. முதலாவதாக நுண்ணறிவு, சூழ்நிலை மாறுதல்களுக்கு முன்பு கருதியிருந்ததைக் காட்டிலும் அதிகமாகத் துலங்குகிறது. கல்வியினுடைய நடைமுறைத் தேவைகளுக்குச் சூழ்நிலைத் தூண்டல்களும், பலரது வரலாறுகளில் துவக்க நிலைச் சூழ்நிலைத் தூண்டலின்மையுமே, குழந்தையின் மனப்போக்குக்கு வரம்புகளை அமைக்கின்றன.

[10] ஐஓவா (Iowa) ஆய்வுகள், அதன் உண்மையைக் குறித்து மாறுபட்ட கருத்துகளைத் தோற்றுவித்துள்ளன. சிம்சன் இவ்வாய்வுகளின் முடிவுகளைப் பாதித்திருக்கக்கூடியவை என்று சில ஏதுக்களைப் பற்றிச் சுவையான கருத்துகளைத் தெரிவிக்கின்றார். ('The Wandering IQ: Is it Time, to Settle Down?' Journal of Psychology, 1939, Vol. 7, pp. 351-369). மெக்நீமர் (McNemar) இவ்வாய்வுகளைத் திறனாய்வு செய்து அவற்றிலுள்ள முறை அடிப்படையான தவறுகளையும் புள்ளியியல் தவறுகளையும் சுட்டிக் காட்டினார். ஆனால், வெல்மென் (Wellman), ஸ்கீல்ஸ் (Skeels), ஸ்கோடாக் (Skodak) ஆகியோர் இம்முடிவுகளை ஆதரித்து அத்திறனாய்வுகளுக்குப் பதில் கூறியுள்ளனர். (See the Psychological Bulletin for March, 1940, for the critical examination of the studies and the critical review of the examination).

மரபுநிலை அமைப்புப் பெரும்பாலும் அகன்ற வரம்புகளை அமைக்கின்றது. எல்லாக் குழந்தைகளையும் போதிய அளவு தூண்டுகின்ற சூழ்நிலையில் வைத்து, அவர்களுடைய மரபுநிலை வரம்புகளுக்கு அண்மையில் வளரும்போது, அதன் விளைவுகள் மிகவும் குறிப்பிடும்படியாக உள்ளன. திறன்களையும் அறிவுக் கூர்மையையும் வளர்க்கின்ற வகையில் போதிய அளவு தூண்டலில்லாதச் சூழ்நிலையில் இதுவரை வாழ்ந்த குழந்தைகளைக் கவனிக்கும்போது, நாம் சாதாரண நுண்ணறிவுச் சோதனைகளுக்கு அளிக்கப்படும் துலங்கல்களில், சிறந்த சூழ்நிலையின் காரணமாக முன்னேற்றம் ஏற்பட்டுள்ளதைப் பார்க்கலாம்.

## இளையோர் பருவத்தில் அறிவு வளர்ச்சி

பல காலங்களாகவே துவக்கச் சோதனைகளின் மூலமாக நுண்ணறிவு ஈவை வருமுன் கூறல் உறுதியற்றதாயுள்ளது. இத்தொடர்பில் பள்ளிக்கு முன் உள்ள பருவக் குழந்தையின் நுண்ணறிவினை அளவிடத் தகுதியான சோதனைகள் இல்லை என்று (ஆண்டர்ஸன்) குறிப்பிடுகின்றார்.[11] அவர் ஹார்வார்ட் (Harvard) வளர்ச்சிக் குறிப்புகளில், 7ஆவது ஆண்டு நிலையிலிருந்து 16ஆவது ஆண்டு நிலைவரை எடுக்கப்பட்ட மனச்சோதனை அளவுகளிடையே உள்ள இடைத் தொடர்புகள் (correlations) ·50-க்குச் சற்று அதிகமாகவே உள்ளன என்று குறிப்பிடுகின்றார். இவ்வாய்வின் வளர்ச்சி விளைவுகளில் காணப்படுகின்ற சில குறைபாடுகளை வரைபடம் 4—3-ல் உள்ள தனியாள் மனவளர்ச்சி விளைவுகளை ஒப்பிட்டால் காணலாம்.[12]

92 நுண்ணறிவு ஈவுடைய 7 வயதுச் சிறுவர்கள் ஐந்து பேரின் ஹார்வார்ட் வளர்ச்சிக் குறிப்புகளின் அடிப்படையில் இப்படத்தின் மனவயது விளைவுகள் அமைந்துள்ளன. இவ்விளைவுகள் படிப்படியாக விலகுதல் 17 ஆண்டு வயதில் 80-லிருந்து 110 வரை ஏற்படுகின்றது என்பது சரியான வகைப்படுத்துதலைப் பெறவேண்டுமானால், திரும்பத் திரும்ப அளவிடல் அவசியமாகும் எனக் காட்டுகின்றது. வெவ்வேறான சோதனைகள் பயன்படுத்தப்பட்டதென்ற உண்மையும், இச் சோதனைகள் குழுச் சோதனைகள் என்பதும் இம்மாறுதல்களுக்கு ஓரளவு காரணமாகலாம்.

[11] J. E. Anderson, 'The Prediction of Terminal Intelligence from Infant and Preschool Tests,' Intelligence: Its Nature and Nurture. Thirty-ninth Yearbook of the National Society for the Study of Education, Part I, 1940, pp. 385–403.

[12] Harold E. Jones and Herbert S. Conrad, 'Mental Development in Adolescence,' Forty-third Yearbook of the National Society for the Study of Education, Part I, p. 159.

இளையோர் பருவ ஆண்டுகளின் மனவளர்ச்சிக்கான எல்லா வளைவுகளுக்கும், சில ஏதுக்கள் பொதுவாக அமைகின்றன. முதலாவதாக, இவ்வாண்டுகளில் முன்னைய ஆண்டுகளைக் காட்டிலும் அதிகமான மாருத்தன்மை உள்ளது. இவைகளுக்குக் காரணமாயிருக்கின்ற பல ஏதுக்களாவன: (1) முன்னைய ஆண்டுகளைக் காட்டிலும் இக்காலத்தில் ஒவ்வொரு தனியனுக்கும் சூழ்நிலை அதிகமாக மாருமல் இருக்கின்றது; (2) இளையோர் ஆண்டு நிலைகளில் பயன்படுத்தப்பட்ட சோதனைகளின் தன்மை; (3) மிகவும் வளர்ந்த வயது நிலையில் சோதனைகளில் சிக்கலான தன்மையின் வளர்ச்சி; (4) மிக்க முன்னேற்றமுள்ள ஆட்படுவோர்களுக்குத் தரப்படும் சோதனைகளின் அதிகமான மாருத் தன்மை. வெவ்வேறன மனவளர்ச்சி வளைவுகளில் காணப்படுகின்ற மற்ருெரு ஏது, பதின் ஆண்டுகளில் காணப்படுகின்ற வளர்ச்சி விகிதத்தின் குறைவேயாகும். இவ்வதிகாரத்தின் ஆரம்பத்தில் இதற்குத் தனி முக்கியத்துவம் தரப்பட்டுள்ளது.




**தனிப்பிள்ளைகளின் மனவளர்ச்சி வளைவுகள் பிரிந்து செல்லுதல்.**

படம் 4--3

துவக்க ஆய்வுகளில், பூப்படைதலுடன் மன உடல் வளர்ச்சி வளைவுகளில், துரிதவளர்ச்சிக்கான ஏற்றம் முன்போ அல்லது உடனே தோன்றுகின்றது என்று கூறுதற்குச் சான்றுகள் உள்ளன.[13] மிக

[13] Ethel M. Abernethy, 'Correlations in Physical and Mental Growth,' Journal of Education Psychology, 1925, Vol. 16, pp. 438-466 and 539-546.

அண்மையில நடந்த ஆய்வுகள் மன வளர்ச்சியைப்பற்றிய இக்கொள் கையினை ஆதரிக்கவில்லை. அதிகாரம் 2-ல் நல்ல வாழ்க்கைத்தரங் களும், நல்ல உணவு ஊட்டம், மற்ற நல்ல ஆரோக்கியத்தைத் தரும் ஏதுக்களும் உடைய இல்லங்களில் வாழ்வோர், இசைவில்லா வாழ்க் கைத்தரங்கள் கொண்ட இல்லத்தில் வாழ்வோரைக் காட்டிலும் விரைவாக முதிர்ச்சியடைவார்கள் என்று கூறப்பட்டுள்ளது. இதே பொது சூழ்நிலைக் கட்டுப்பாடுகள் நுண்ணறிவுச் சோதனை எண்ணிக் கைகளிலும் முக்கியமான செல்வாக்கினைக் கொண்டுள்ளன.

ஸ்டோனும் (Stone) பார்க்கரும் (Barker) நடத்திய ஆய்வில், 175 பூப்புப் போக்குக்குப் பின்னுள்ளோரும், 175 பூப்புப் போக்குக்கு முன் னுள்ளோருமான பெண்களை வயதின் அடிப்படையில் கூட்டாக இணைத்து, ஓடிஸ் (Otis) நுண்ணறிவுச் சோதனைகளின் மூலமாக ஆளுமை, அவர்களது பெற்றோர்களது சமூகப் பொருளாதார நிலை, ஆகியவற்றின் அளவுகளை ஒப்பிட்டுப்பார்த்தனர்.[14] பூப்புப் போக்குக் குப் பின்னுள்ள பெண்கள் நுண்ணறிவுச் சோதனையில் பூப்புப் போக் குக்கு முன்னுள்ள பெண்களைக்காட்டிலும் சராசரி அளவில் 2·25 புள்ளி அதிகம் பெற்றனர். இம்மாறுதல் புள்ளியியல் அடிப்படையில் நம்பத் தகுந்ததல்ல. பிரெஸ்ஸி—அக்கறை நோக்குச்சோதனை அளவுகளில், ஒரே உண்மை வயதுடைய பூப்புப் போக்குக்குப் பின்னுள்ள பருவப் பெண்கள், பூப்புப் போக்குக்கு முன்னுள்ளோரைக் காட்டிலும் அதிக மான முதிர்ச்சி அடைந்திருந்தனர். பூப்புப் போக்குக்குப் பின்னுள்ள பருவப் பெண்கள் வளர்ச்சி வயதுக்கான சல்லிவன் (Sullivan) சோதனையின் அளவுகளிலும் அதிகமான முதிர்ச்சி அடைந்திருந்தனர். இவ்விரு மாறுதல்களும் புள்ளியியல் அடிப்படையில் நம்பத்தகுந் தவையேயாகும். இவ்விரு குழுவினரும் ஒரே சமூகப் பொருளாதார நிலையிலுள்ள குடும்பங்களினின்று வந்தவர்களாவர். ஆதலின், அவர் களை பெர்ன்ரியூடர் ஆளுமைக் கண்டுபிடிப்புகள் (Bernreuter Personality Inventory) மூலம் ஆளுமைக் குண இயல்புகளை அளவிட்ட போது மாறுதல்களைக் காட்டவில்லை. அப்பொழுது, பூப்படைதல் என் பது பல்வேறு சுரப்பிகளில் சுரப்பனவற்றைப் பாதிக்கின்ற உடலியல் மாறுதல்கள் என்பதில் அதிகமான உட்கருத்து கொண்டுள்ளது. குறிப்பாக, பால் இயல்புகளின் தொடர்பிலும், உயரம், பருமன் மற்ற உடல் அளவுகளின் வளர்ச்சி விகிதத்தில் பூப்படைதல் அதிகத் தொடர்பு கொண்டிருக்கிறதேயன்றி அது ஒரு சாதாரண மனவளர்ச்சி இயல்பன்று. உடல், மனவெழுச்சி மாறுதல்கள் பூப்படையத்

[14] C. P. Stone and R. G. Barker, 'Aspects of Personality and Intelligence in Postmenarcheal and Premenarcheal Girls of Same Chronological age,' Journal of Comparitive Psychology, 1937, Vol. 23, pp. 439-445.

துவங்கும்பொழுது, தனித்த மனத் திறன்களைக் காட்டிலும் மிகவும் நெருங்கிய தொடர்புகள் கொண்டுள்ளன.

**மன வளர்ச்சி நின்றிடும் வயது**

தனியன்களின் அறிவுத்திறன் வளர்ச்சி நின்றிடும் வயதினைப் பற்றி, குழந்தை, இளையோர் வளர்ச்சியை ஆயும் மாணவர்கள் பலர் ஆய்வுகள் நடத்தியுள்ளனர். துவக்க ஆய்வாளர்கள் மனவளர்ச்சியின் வரம்பினை 13-லிருந்து 16 ஆண்டுகளுக்குள் வைத்தனர். பின்னர் வந்த ஆய்வாளர்கள் படிப்படியாக உயர்த்திக் கொண்டே சென்று 20 ஆண்டுகளுக்குக் கொண்டு சென்று விட்டனர். ஜோன்ஸ் (Jones), கோன்ராட் (Conrad) ஆகியோர் நடத்திய ஆய்வுச்சிக்கல் மிகவும் பொருத்தமாயுள்ளது. ஏனெனில், இவ்வாய்வில் தேர்ந்தெடுக்கப்பட்ட மாதிரி ஆட்படுவோர்கள் 18, 19, 20 வயதுடைய பதின்மர்களாகவும், 20, 21, 23 வயதுடையவர்களாகவும் இருந்தனர். இது முதிர்ச்சியடையும் வரையுள்ள மனவளர்ச்சியின் தன்மையைப் பற்றிய முழு விளக்கத்தையும் தருகிறது.[15] அவர்களது துவக்க ஆண்டுகளில் மனவளர்ச்சி விகிதம் மிகவும் துரிதமாக இருந்ததாகக் கூறுகின்றனர். இந்த விகிதம் படிப்படியாக 16 வயது அடையும்வரை குறைகின்றது. அதன்பின்பு தொடர்ச்சியான வளர்ச்சி விகிதக் குறைவு ஏற்பட்டு 19, 20 வயதுகளில் அதிகமான அளவை அடைந்து விடுகிறது.

இச்சிக்கலைப்பற்றிய துவக்க ஆய்வுகளைச் சரிபார்த்தும், ஏறத்தாழ 1,000 தனியன்களிலும் திரும்பச் சோதனை செய்ததன் முடிவுகளைப் பகுத்தாய்ந்தும், நுண்ணறிவின் தரச் சோதனையின் திறன் பெறுவது 20 வயது வரை தொடர்ந்து அதிகமாகின்றது என்று தார்ன்டைக் கூறினார். ஒரு வேளை அவ்வயதிற்கு மேலும் அதிகமாகலாம்.[16] அவரது இம்முடிவு பள்ளியிலுள்ள தனியன்களைப் பற்றிய குறிப்புகளின் அடிப்படையில் தோன்றியதாகும் என்று குறிப்பிடுகின்றார். இளையோர்களில் சிலர் பள்ளிப் படிப்பைப் பாதியிலேயே விட்டு விடுகின்றனர். இவர்களையும் சேர்த்து இம் முடிவுகள் காரணமாகப் பொதுமையாகக் கூறலாகாது. மனவளர்ச்சி நிற்கின்ற வயதினைப் பற்றிய கேள்விக்கு முடிவான பதில் இன்னமும் முழுமை பெறவில்லை என்றாலும், பதின் ஆண்டுகளுக்குப் பின்னும் அதிகரிக்கின்றன என்ற, தரமான காகிதம்-பென்சில் சோதனைகளில் பெறுகின்ற மனச் சோதனைக் கணக்கீடுகளை ஆய்வுகள் ஒத்துக் கொள்கின்றன. அதிகமான

[15] H. E. Jones and H. S. Conrad, 'The Growth and Direction of Intelligence,' Genetic Psychology Monographs, 1933, Vol. 13, pp. 223-298.

[16] R. L. Thorndike, 'Growth in Intelligence during Adolescence,' Journal of Genetic Psychology, 1948, Vol. 72, pp. 11-15.

துன்பமாயுள்ள நிலைகளில், மனத்திறன் பற்றிய குழுச் சோதனைகள் சொல், செய்தி பயிற்சிகளின் மூலமாக அதிகமான சிறப்புடையன வாய்ச் செய்யப்பட்டுள்ளன. ஆதலின், இப் பிற்காலத்தில் தோன்று கின்ற அதிகமான மனவளர்ச்சிக்குச் செய்தி, சொல் ஆகியவற்றை அதிகமாய் உணர்தலே காரணமாகிறது. இது முதிர்ச்சியில் தோன்று கின்ற உட்கருத்துத் திறனது வளர்ச்சியாகாது.

## தனியாள் மனத்திறன்களின் வளர்ச்சி

### நினைவுத் திறனின் வளர்ச்சி

குழந்தைப் பருவத்தை 'நினைவின் பொற்காலம்' என்றும் முதியோர் பருவத்தைப் 'பகுத்தறியும் காலம்' என்றும் விளக்குபவர் சிலருண்டு. வெவ்வேறு மனச் செயல்களின் வளர்ச்சி பற்றிய ஆய்வுகள் நினைவு, பகுத்தறியும் திறன், திறனாய்வுச் சிந்தனை, விளக்கிப் பொருள் கூறும் திறன் ஆகிய மனத்திறன்கள் வரிசைக் கிரமமாக வளர்வதாய்க் கூறுகின்றன. மேலும், இச்செயல்களின் வளர்ச்சி தொடர்ச்சியானதாகும். இவை சிறுவயதில் துவங்கி முதிர்ச் சியடையும்வரை தொடர்ந்து இருக்கின்றன. குழந்தைகளின் நினைவுத்திறன்கள் பற்றித் தவறான கருத்துகள் வளர்ந்ததற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. முதலாவதாக, குழந்தைகள் நினைவு படுத்தும் பலபொருள்கள் இயந்திரம்போன்று பொருள் உணராது நினைவுபடுத்தப் பட்டவைகளாகும். இவைகளில், குழந்தை முதியோர்களுடன் வெற்றிகரமாய்ப் போட்டியிடுகின்றது. மேலும், குழந்தைகள் பரந்த தொடர்புகளையும், அறிந்துகொள்ளும் திறன்களை யும் வளர்த்துக் கொள்ளவில்லை. ஆதலின், அவர்கள் பொறியியல் தன்மையான நினைவு கூறலையே அதிகமாக நம்பும்படிக் கட்டாயப் படுத்தப்படுகின்றனர். அவர்கள் நிகழ்ச்சியில் தோன்றுகின்றபொருள் களிலெல்லாம் கவனத்தைத் திருப்புவதில்லை. மேலும், குழந்தைகளது மனச் செயல்களின்பரப்பு வரம்புக்குள் அமைந்ததாயுள்ளது. சில பொருள்களை உணர்வதற்கு அதிக நேரமும் செலவிடுகின்றனர். நினைவுத்திறன் பற்றிய வளர்ச்சி வளைவு மற்ற மனச்செயல்களின் தன்மைக்கு ஒத்திருக்கின்றது. அவ்வாறான வளைவு, நினைவுத் திறன் வயதுடனும், பட்டறிவுடனும் அதிகமாவதாகக் காட்டுகின்றது.

ஸ்ட்ரவுடும் (Stroud) மாலும் (Maul), கவிதையையும் பொரு ளற்ற அசைகளைப் படிப்பதிலும், வயதின் பங்குபற்றிய பிரச்சினையை ஓர் ஆய்வு மூலம் ஆய்ந்தனர்.[17] 172 படிவப் பள்ளிச் சிறுவர்களும்

[17] J. B. Stroud and P. Maul, 'The Influence of Age upon Learning and Retention of Poetry and Nonsense Syllables,' Journal of Genetic Psychology, 1933, Vol. 42, pp. 242-250.

26 ஒன்பதாம் படிவ மாணவர்களும், 23 கல்லூரி நுழைவாண்டு மாணவர்களும் இவ்வாய்வில் ஆட்படுவோராக இருந்தனர். சராசரி வயதுகள் 7·7 ஆண்டிலிருந்து 18·1 ஆண்டுகள்வரை இருந்தன. வெவ்வேறு குழுவினரும் சராசரி நுண்ணறிவு ஈவில் ஏறத்தாழச் சமமாய் இருந்தனர். வரைபடம் 4-4-ல், கவிதையை நினைவுபடுத்தும் திறன் வயதுடன் அடையும் வளர்ச்சி குறிக்கப்பட்டுள்ளது. பொருளற்ற அசைகளுக்கான நினைவு வளைவு கவிதைக்குக் காட்டியுள்ளதன் தன்மையை ஒத்திருக்கிறது. இவ் வளைவுகள் நினைவுத் திறனின் வயதுடன் தொடர்ச்சியான வளர்ச்சியைக் காட்டுகின்றன. நினைவுத் திறனுக்கும் மன வயதிற்கும் நெருங்கிய உடன் தொடர்பு காணப்பட்டது.




படம் 4-4

செய்யுளை நினைவுபடுத்துவதில் எடுக்கப்பட்ட அளவுகளுக்கும் வயதிற்கும் உள்ள தொடர்பு

## சொல் தொகுதி வளர்ச்சி

டெர்மானும் தார்ன்டைக்கும் மற்றவர்களும் நடத்திய ஆய்வுகள், குழந்தைப் பருவத்திலும் இளையோர் பருவத்திலும் மாருத் தன்மையுள்ள தொடர்ச்சியான வளர்ச்சி, ஒருவரது சொல் தொகுதி வளர்ச்சியில் இருப்பதாகக் காட்டுகின்றன. வெவ்வேறு வயதில் குழந்தை




1. ஒருபொருள் குறிக்கும் சொற்கள்
2. விளக்கம்
3. பயனும் விரிவுரையும்
4. விளக்க செய்து காட்டல்

**வயதின்படி நான்கு குண இயல்பு பதார்த்தங்களைப் பயன்படுத்தியதின் மைய அலகு எண்.**

படம் 4—5

களின் சொல் தொகுதிகளின் பண்பியல்புகளின் ஆய்வுகள் சொற்களது வரையறை வளர்ச்சி ஏற்படுவதாகக் காட்டுகின்றன. குழந்தைகள், வார்த்தை வரையறைகளின் பொதுக் குணத்தையும், முழுத் தன்மையையும் வெவ்வேறு வயதுகளில் தந்ததைப்பற்றி ஃபீஃபில் (Feifel) லார்ஜி (Lorge) ஆகியோர் ஆய்வுகள் நடத்தினர்.[18]

[18] H. Feifel and L. Lorge, 'Qualitative Differences in the Vocabulary Responses of Children,' Journal of Educational Psychology, 1950, Vol. 41, pp. 1-18.

சோதனை செய்யப்பட்ட ஆட்படுவோர்கள், 6 வயதிலிருந்து 14 வயதுள்ள 900 குழந்தைகளாகும். 14 வயதைத் தவிர மற்ற எல்லா வயது நிலைகளிலும் நுண்ணறிவில் குழந்தைகள் சராசரி நிலைக்குச் சிறிது மேலிருந்தனர். இக் குழந்தைகளுக்கு ஸ்டான்ஃபோர்டி னால் திருத்தி அமைக்கப்பட்ட பீனே சோதனைகளின் சொல் தொகுதி சோதனையின் அச்சடித்த தாளான L வகை தரப்பட்டது. தரப்பட்ட வரையறைகள், அவற்றின் முழுமைக்காகவும், பண்புத் தன்மைக் காகவும் ஆய்வு செய்யப்பட்டன.

வரைபடம் 4-5 ல் முடிவுகள் வரைந்து காட்டப்பட்டுள்ளன. குழந்தைகளது 6-7ஆவது ஆண்டு வயது நிலையில் பெரும்பாலும் பயனையும், விளக்கும் வகையைச் சார்ந்த துலங்கலையும் தரும் என்பது தெளிவாகத் தெரிகின்றது. சான்றாக 'ஆரஞ்சு' என்ற சொல்லுக்குத் தரப்படும் துலங்கல் 'உண்பதற்குரிய பொருள்' என்று இருக்கும். இவ் வயதில் விளக்க வகையைச் சார்ந்த துலங்கல் மிகவும் குறைவாக இருக்கும். ஆனால், மெதுவாக வளரத் தொடங்கி 13 ஆண்டு வயது நிலை வரைத் தொடர்ந்து பயன்படுத்தப் படுகின்றது. 14 ஆண்டு வயது நிலையில் காணப்படும் சரிவு, இந்தக் குழுவின் நுண்ணறிவு மற்றக் குழந்தைகளைக் காட்டிலும் கீழான நிலையில் இருப்பதை ஓரளவு காரணமாகச் சொல்லலாம். ஒரு பொருட் பன்மொழி (Synonym) வகையைச் சார்ந்த துலங்கலை 6, 7 வயதினர் மிகவும் குறைவாகவே பயன்படுத்தினர். என்றாலும், 9, 10 வயதைக் கடந்த குழந்தைகள் அடிக்கடிப் பயன்படுத்தினர். பின்வருகின்ற ஆண்டுகளில் தொடர்ந்து இது பயன்படுத்தப்பட்டது. செய்து காட்டல் முறை, மேற்கோளுடன் விளக்கும் முறைத் துலங் கலின் சரிவு இளையோர் ஆண்டுகளில் ஏற்படுவதற்குச் சொல் தொகுதியின் அளவின் வளர்ச்சி காரணமாகின்றது. மேலும், இப் பருவத்தில் பொருள்களையும், நிகழ்ச்சிகளையும் குறியீட்டுக் கூறவும், எதிர்மறை, ஒப்புமை ஆகியவற்றால் விளக்கும் திறன் பெறுகின்ற தாலும் இச்சரிவு ஏற்படலாம்.

## காரணகாரியத் தொடர்புக் கருதுகோள்களின் வளர்ச்சி

அதிகமாக மனவளர்ச்சியினால், காரணகாரியத் தொடர்புகளைப் புரிந்து கொள்ளும் திறனில் வளரும் தனியன், முக்கியமான மாறுதல்களைப் பெறுகின்றது. இக் கூடுதல் பொதுக்கல்வி வளர்ச்சி யுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. இவ்வாறு 5ஆவது 6ஆவது படிவப் பையன்களும், பெண்களும் அவர்களை எதிர்நோக்கி யுள்ள நிகழ்ச்சிகளில் நல்ல உள்ளுணர்வு பெறுகின்றனர்; இளங் குழந்தைகளைக் காட்டிலும் அறிவியல் அடிப்படையில் அவற்றைக் கையாளுகின்றனர்.

டியூட்ஸ்சே (Deutsche) ஆய்வு செய்த குழந்தைகள் கருது கோள்கள், குழந்தைகளின் காரணகாரிய சிந்தனையில் இரண்டு வகையாய்ப் பகுத்தாயப்பட்டன.[19] அவைகள், பண்புக்குரியதும் அளவுக்குரியதுமான பகுத்தாய்வுகளாகும். காரணகாரியத் தொடர்புகள் பற்றிய கேள்விகள் தேர்ந்தெடுக்கப்பட்டுக் குழந்தைகளிடம் அவைகளைப் பற்றிக் கேட்கப்பட்டன. இவ்வகையான முதல் தேர்வு முறைகளுக்குப் பின்னர் முடிவான சோதனை வகைகள் உண்டாக்கப்பட்டன. அச்சடிக்கப்பட்ட தாள் I, வகுப்புறையில் நடந்த செய்துகாட்டல்முறைப் பரிசோதனைகளின் அடிப்படையில் கேள்விகளைக் கொண்டிருந்தன. அச்சடிக்கப்பட்ட தாள் II, பரிசோதனைகள் இல்லாத கேள்விகளைக் கொண்டிருந்தன. ஆட்படுவோர் பன்னிரண்டு கேள்விகளில் ஒவ்வொன்றிற்கும் அவர்களது சிறந்த திறனுக்கு ஏற்றவாறு எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு விரைவில் பதிலளிக்குமாறு வேண்டிக் கொள்ளப்பட்டனர். ஒவ்வொரு கேள்விக்கும் அளவுக் கணக்கீடு-எண்ணிக்கைகள் தயார் செய்யப்பட்டன. இவைகள் ஒரு நிகழ்ச்சியின் விளக்கமாக, ஒரு பதில் எந்த அளவில் பொருத்தமாக உள்ளது என்ற அடிப்படையில் உண்டானவையாகும். இவ்வாய்வின் முடிவுகள், நிகழ்ச்சிமய்மான பதில்கள் (phenomenistic answers) எட்டு வயதில் 30-லிருந்து 40 சதவீத பதில்களைக் கொண்டு இருப்பதாகவும், அவை ஏறத்தாழ 15-16 வயதுகளில் பத்து சதவீதம் இருப்பதாகவும் கூறுகின்றன. அவ்வாறான பதில்கள் நிகழ்ச்சியை மட்டுமே அடிப்படையாகக் கொண்டவைகளாகும். சான்று 'காற்று காற்றடிக்க வைக்கின்றது'. இதற்கு மாறாக 8-லிருந்து 15-16 வயதில் அளவையியல் அடிப்படையில் உய்த்துணர்ந்த பதில்கள் குறிப்பிடும்படியான அளவில் அதிகமாகக் காணப்பட்டன. வயதுடன் மிகக் குறைந்த மாற்றமே, இக்காற்றிலுள்ள காரணகாரியத் தொடர்பிலும், பொறித்தன்மை வாய்ந்த காரணகாரியத் தொடர்பிலும் உள்ள பதில்களில் காணப்பட்டது.

## கற்பனையும் திறனாய்வுச் சிந்தனையும்

நல்ல கருவிகளும் முறைகளும் மனச் செயல்களை அளவிடுவதற்கு இல்லாததனால், குழந்தைப் பருவத்திலும் இளையோர் பருவத்திலும் கற்பனையின் வளர்ச்சிபற்றியும், திறனாய்வுச் சிந்தனையின் வளர்ச்சிகுறித்தும் ஆய்வு நடத்துவது கடினமாகி விட்டது. இருப்பினும், ஆசிரியர்களும் பெற்றோர்களும், வயதுடன் கற்பனைத் திறன்

[19] J. M. Deutsche, 'The Development of Children's Concepts of Causal Relation,' Minneapolis: University of Minnesota Press, 1937.

களிலுள்ள மாறுதல்களை ஏற்றுக் கொள்கின்றனர். இளையோர்களது கற்பனை அவர்களது பாடல்கள், கதைகள், படம் வரைதல், இசை, பயனுள்ள செயல்கள், நடனங்கள் ஆகியவற்றில் பிரதிபலிக்கின்றது. வெர்னன், குழந்தைகளால் 11 வயதுக்கு முன்னர் படங்களின் வரிசையை அறிந்து விளக்கிப் பொருள்கூற இயலாது என்பதற்குச் சான்றுகள் தருகின்றார்.[20] கற்பனை முதிர்ச்சியடைந்து வெற்றிடத்தில் நிகழாது. முன்னிளையோன் ஒரு படத்தை விளக்கிப் பொருள் கூறுதலானது அவனது மனவளர்ச்சியினால் மட்டுமல்லாது, படத்திலுள்ள பொருள்களைப்பற்றிய அவனது பழைய பட்டறிவுகளின் துணைகொண்டும் தீர்மானிக்கப்படுகின்றது.

அறிவியலிலுள்ள திறனாய்வுச் சிந்தனையை அளப்பதற்குரிய சோதனைகள் ஸான்ஃபிரான்ஸிஸ்கோ கடற்கரைப் பகுதிகளிலுள்ள (San Francisco Bay Areas) 10, 11, 12 படிவங்களைச் சார்ந்த 1,000 மாணவர்களுக்குத் தரப்பட்டன.[21] வெவ்வேறு சோதனைகளில் சிறுவர் சிறுமியர் எடுத்த மதிப்பெண்களின் மாறுதல்கள், இச் சோதனைகளால் அளவிடப்பட்ட திறன்களைக் கற்றுத்தர முடியும் என்று காட்டுகின்றன. திறனாய்வுச் சிந்தனை செய்வதற்குரிய திறன் பொதுவாக, பள்ளிகளது சரியான நோக்கமாகக் கருதப்படுகின்றது. மாணவர்களுக்குச் சிந்திக்கக் கற்றுக்கொடுக்க வேண்டுமென்றால், அவர்களுக்குப் பிரச்சினைகளை உணர்வதற்கு முதலில் கற்றுத்தரல் வேண்டும். இரண்டாவதாக, அச்சிக்கல்களைத் தீர்ப்பதற்குரிய நல்ல முறைகளைக் கற்றுத்தரல் வேண்டும். இது திறனாய்வுச் சிந்தனைக்கு அறிவு அல்லது செய்தி மிகவும் அவசியம் என்று பொருள் கொள்கின்றது. மாணவர்கள் சிக்கல்களை அவர்களிடம் தரும்பொழுது திறனாய்வுச் சிந்தனையைப் பயன்படுத்தமாட்டார்கள். இளையோரது திறனாய்வுச் சிந்தனைத் திறனில் வளர்ச்சியின்மையானது கீழ்க்கண்டவற்றில் ஏதாகிலும் ஒன்று அல்லது அதற்கு மேலான முடிவுக்குக் கொண்டு செல்லலாம்.

1. பிரச்சினையைப் புரிந்து கொள்ள முடியாமை.

2. பிரச்சினையைப் பற்றிச் செய்தி இல்லாமை.

3. பிரச்சினையைக் கையாளும்போது செய்தியைச் சேகரிக்கப் பொருத்தமில்லா முறைகொண்டு செய்தல்.

[20] M. D. Vernon, 'The Development of Imaginative Construction in Children,' British Journal of Psychology, 1948, Vol. 39, pp. 102-111.

[21] T. B. Edwards, 'Measurement of Some Aspects of Critical Thinking,' Journal of Experimental Education, 1950, Vol. 18, p. 268.




A ஐந்து இலக்கிய பாடங்களுக்குச் சரியான விளக்கப்பொருள் கூறிய சராசரி மாணவர்களின் சதவீதம்; B ஓர் இலக்கிய பாடத்திற்குச் சரியான விளக்கப்பொருள் கூறிய சராசரி மாணவர்களின் சதவீதம். (பையில் - Pyle)

## உட்காட்சியும் விளக்கிப் பொருள் கூறுதல்களும்

எளிய இலக்கியப் பொருள்களை விளக்கிப் பொருள் கூறும் திறனின் வளர்ச்சி வரைபடம் 4—6-ல் காட்டப்பட்டுள்ளது.[22] இவ் வாய்வின் பொருள்கள் மிக எளிய கவிதைகளினின்று தேர்ந்தெடுக்கப்பட்ட ஐந்து பகுதிகளாகும். மாணவர்களுக்கு இத்தேர்ந்தெடுத்த கவிதைகள் தரப்பட்டன. அவற்றுடன், ஒவ்வொரு தேர்ந்தெடுத்த கவிதைபற்றியும் ஐந்து கூற்றுகள் தரப்பட்டன. அவற்றில் ஒரு கூற்று கேள்விக்கான சரியான விடையைக் கொண்டிருக்கும். கீழ்க்கண்ட கவிதையைச் சோதிக்கப்பட்ட, 6ஆம் படிவ மாணவர்களில் நான்கில் மூன்று பகுதியினர் சரியாக விளக்கிப் பொருள் கூறினர்.

[22] W. H. Pyle, 'An Experimental Study of the Development of Certain Aspects of Reasoning,' Journal of Educational Psychology, 1935, Vol. 26, pp. 539-546.

'ஓ' சிறு பச்சை ஆப்பிளே!

*நான் ஒரு சிறு பச்சை ஆப்பிளை உண்டேன்;*
*அது நன்ருய் ருசித்தது—இருப்பினும்,*
*நான் அச்சிறு பச்சை ஆப்பிளை*
*என்றுமே சந்திக்காமல் இருந்திருக்கலாம்*
*என்று கருதுகின்றேன்.*

கேள்வி: ஏன் அவர் அந்தப் பச்சை ஆப்பிளை என்றும் சந்திக்காமல் இருந்திருக்கலாம் என்று அவாவுகிருர்?

1. பச்சை ஆப்பிள் அவனை நோயாளியாக்கியது.
2. ஆப்பிள் கசப்பாக இருந்தது.
3. ஆப்பிளில் புழுக்கள் இருந்தன.
4. ஏனெனில், அவன் பசியாயிருக்கவில்லை.
5. ஏனெனில், பச்சை ஆப்பிள்கள் குழந்தைகளுக்கு ஏற்ற வையல்ல.




*படம் 4-7*

*1, 2, 5, 6 கேலிப் படங்களை விளக்குவதில் வயதுகளின் சராசரி அளவுகள்.*

படம் 4-6ல் உள்ள படம் A-க்கான விவரம் ஐந்து தேர்ந்தெடுத்த பொருள்களைச் சரியாக விளக்கிப்பொருள் கூறப்பட்டதல்ல. ஒவ்வொரு பருவநிலையில் தந்த சராசரி மாணவர்களின் சதவிதத்தினின்று பெறப் பட்டதாகும். படம் B, மூன்றுவது படிவத்திலிருந்து எட்டாவது படிவத்

திற்குப் பச்சை ஆப்பிள் பற்றிய பாடலைச் சரியாக விளக்கிப் பொருள் கூறும் திறத்தார் வளர்த்த மாணவர்களின் வளர்ச்சி வகையைக் காட்டுகின்றது. இலக்கியத் தேர்வுகளுக்குத் தருகின்ற, சரியாக விளக்கிப்பொருள் கூறுதல்களைத் தருவதற்குரிய திறனின் துரிதவளர்ச்சி மிகவும் குறிப்பிடும்படியாக உள்ளது. இருப்பினும், ஒவ்வொரு படிவ நிலையிலும் திறன்களில் முக்கியமான மாறுதல்கள் இருப்பதைக் கவனிக்கவேண்டும்.

ஷேஃபர் (Shaffer) நடத்தியதொரு ஆய்வில், ஏறத்தாழ 150 குழந்தைகள் 4ஆவது படிவத்திலிருந்து 12ஆவது படிவம் வரையுள்ள ஒவ்வொரு பள்ளிப் படிவத்திலும் கேலிச்சித்திரங்களை விளக்கிப் பொருள்கூறும் திறனுக்காகச் சோதிக்கப்பட்டனர்.[23] வயதுடன் விளக்கிப் பொருள்கூறும் பொதுத்தகுதியில் தொடர்ச்சியான கூடுதல் ஏற்படுகின்றது. இது படம் 4-7ல், 1, 2, 5, 6 கேலிச் சித்திரங்களைப் பற்றிக் காட்டப்பட்டுள்ளது. நான்கு ஓரளவு தனித்தவகைத் துலங்கல்கள் காணப்பட்டன. அவைகளாவன: திரும்பக்கூறல், விவரித்தல், பருப்பொருள் விளக்கிப் பொருள் கூறல், வெற்று நிலையை விளக்கிப் பொருள் கூறல். திரும்பக்கூறல், ஆய்வு செய்யப்பட்ட துவக்க வயது நிலைகளில் விட்டுவிட்டுச் செயலாற்றியது. இவ் வாய்வின் பொருள் தொக்கியுள்ள கருத்து யாதெனில், கேலிச் சித்திரங்கள் மூன்றாவது ஆண்டு உயர்நிலைப் பள்ளி நிலையில் வெற்றிகரமாகப் பயன்படுத்தப்படலாம் என்பதாகும்.

இவ் வாய்வு சிக்கலான தன்மையுடைய கேலிச் சித்திரங்களை விளக்கிப் பொருள் கூறும் திறனைப் பெறுவது, எளிய கேலிச் சித்திரங்களின் பொருள்கூறும் திறன் பெறும் காலத்தைக் காட்டிலும் பின்புதான் ஏற்படுகிறது என்று காட்டுகின்றது. துவக்கநிலைக் குழந்தைப் பருவத்தை முதிர்ச்சியடையாத புலனறிவு என்று இயல்பாகக் கூறுவர். குழந்தை பெரிய அளவில் பொருள்களைக் கவனிக்கின்றது. எச்சரிக்கையான வகைப்படுத்தல் முழுவதுமே இல்லாமலிருக்கின்றது. குதிரை, பெரியநாய் என அழைக்கப்படலாம். கோர்ட் இல்லம் என்பது பெரிய வீட்டினைக் குறிக்கின்றது. விட்டைக் குறிக்க ஓர் ஆரம் வரையப்பட்டு அதில் புகைப்போக்கி அல்லது தொலைக் காட்சி, ஆண்டினாவைக் (Antenna) குறிக்கப்படுகின்றது. அதிகமான முதிர்ச்சி, அதனுடைய பரந்த அளவு அனுபவங்கள், இளையோனுக்கு ஒதுக்கும் தன்மையையும் சரியானதும் உண்மைத் தன்மையான விளக்கப் பொருள்களையும் தருகின்றன.

[23] L. F. Shaffer, 'Children's Interpretations of Cartoons,' Teachers College, Columbia University, Contributions to Education, 1930, No. 429.

## மன வளர்ச்சி உடன் தொடர்புகள்

### மன, உடல் வளர்ச்சிகளுக்கிடையே உள்ள தொடர்பு

திறன்களுக்கிடையே உள்ள தொடர்புகளின் ஆய்வுகளைப் பற்றிய முடிவுகளிலிருந்து, அதிக அறிவாற்றல் உள்ள தனியன்கள் பலர் உடல் வளர்ச்சியில் ஒருதன்மையில் மற்றக் குணங்களைக் காட்டிலும் அதிக உயர்ந்த நிலையில் இருப்பதாகக் கூறுகின்றன. சில குணக்கூறுகளின் இடையே உள்ள உடன் தொடர்புகள் மிகவும் அதிகமாகக் காணப்படவில்லை. அவை ஒரு வழியில் வளர்ச்சியுறும் உடல் வளர்ச்சி மற்றொரு வழியில் செல்லும் வளர்ச்சியுடன் கொள்கின்ற தொடர்பில் பல விதிவிலக்குகள் உள்ளன என்று காட்டுகின்றன. மனவளர்ச்சியின் ஆய்வினைப் பற்றிய சில கேள்விகள் தனிப்பட்ட அக்கறையுடையனவாகும். மனவளர்ச்சிக்கும் உடல் வளர்ச்சிக்கும், இருக்கும் தொடர்பு என்ன? மேலும், உடல் வளர்ச்சியில் உயர்ந்திருக்கின்ற குழந்தை, மனத்திலும் உயர்ந்திருக்க இயலுமா? பொது உடல் வளர்ச்சியில் மெதுவாக இருந்த குழந்தை, மனவளர்ச்சியில் மெதுவாக இருப்பது சாத்தியமா? சில உடல் குணஇயல்புகள் மனவளர்ச்சியுடன் தொடர்பு கொண்டுள்ளனவா? மற்றவைகளில் ஏன் தொடர்பு கொண்டிருக்கவில்லை?

இதுவரை உடல் மனவளர்ச்சியைப் பற்றி வெவ்வேறு நிலைகளை கவனிக்கப்பட்டன. ஒரு துறையில் வளர்ச்சி மற்றொருதுறை வளர்ச்சியைக் குறைப்பதில்லை. மன, உடல் குணங்களின் அளவுகளுக்கிடையே, சில சமயங்களில் குறைவாக இருந்தாலும், உறுதியான உடன்தொடர்புகள் காணப்படுகின்றன. நுண்ணறிவுச் சோதனை முடிவுகளுக்கும் குறிப்பிட்ட சில உடல்வளர்ச்சி அளவிடல்களுக்கும் உள்ள உடன்தொடர்புகளை, 533 பதினாறு வயது பழைய மாணவர்களைக்கொண்டு ஆய்ந்ததை டியர்பார்னும் (Dearborn) ரோத்னியும் (Rothney)[24] கீழ்க்கண்டவாறு கூறுகின்றனர்:

| | | |
|---|---|---|
| நுண்ணறிவும் நிலையான உயரமும் | ... | ·224 |
| நுண்ணறிவும் எடையும் ... | ... | ·187 |
| நுண்ணறிவும் இடுப்பு (iliac) அகலமும் | ... | ·078 |
| நுண்ணறிவும் நெஞ்சின் ஆழமும் | ... | ·060 |
| நுண்ணறிவும் நெஞ்சின் அகலமும் | ... | ·138 |

இருப்பினும், உடல் வளர்ச்சியைப்பற்றிய வெவ்வேறு அளவிடலுக்கும் குழந்தைகளின் மனவளர்ச்சிக்கும் உடன்தொடர்பு குறிப்

[24] W. F. Dearborn and J. W. M. Rothney, Predicting the Child's Development. Cambridge: Science-Art Publishers, 1941.

பீடும்படியாக இருப்பினும், ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குச் சரியான வருமுன் கூறும் அளவிற்கு உயர்ந்ததாக இல்லை. மேலும், சமூகப் பொருளாதார நிலை, உடல் மன வளர்ச்சி எண்ணிக்கைகள் இரண்டையுமே பாதிக்கின்றது. தாழ்ந்த இல்லத்திலிருந்தும், சுற்றுப் புறத்தினின்றும் வரும் குழந்தைகள் பெரும்பாலும் ஊட்டக் குறை வுடனோ அல்லது தவறான ஊட்டத்துடனோதான் இருக்கும். மருத் துவக் கவனிப்போ, பொழுதுபோக்கு வாய்ப்புகளோ, கலாசார முன் வாய்ப்புகளோ பெரும்பாலும் இருந்திருக்காது. மேலும், உயர்ந்த இல்லம் அல்லது சுற்றுப்புறத்தினின்று வரும் குழந்தை களோ, சராசரிக் குழந்தைகளோ, பள்ளிமுன் வாய்ப்புகளில் முன் நிற்க முடியாது. வெல்மன் (Wellman) இப் பிரச்சினையைப்பற்றிப் பல்வேறு ஆய்வுகள் செய்ததைத் தொகுத்துக் கூறும்பொழுது, மன வளர்ச்சிக்கும், உடல் வளர்ச்சியை அளவிடும் அலகுகளான நெஞ்சின் அகலம், உயிர்ப்புப் பையின் கொள்ளும் அளவு, எலும்பு கெட்டிப்படும் விகிதம், எடை, உயரம், கைப்பிடி ஆகியவற்றின் வளர்ச்சிக்கும் நெருங்கிய தொடர்பில்லை எனக் கூறுகின்றார்.[25]

## உடல் தோற்றமும் மனவளர்ச்சியும்

மனவளர்ச்சிக்கும் பொதுத் தோற்றத்திற்கும் இடையே நெருங் கிய தொடர்புள்ளது என்னும் நம்பிக்கை படிப்படியாக மறைகிறது என்றாலும், இன்னும் அது அதிகமாகப் பரவியுள்ளது. இந் நம்பிக்கை யின் வரலாற்றையும் அது தோற்றுவித்த ஆய்வுகளையும் மதிப்புரை செய்தால், நமது தற்பொழுதைய பொது அக்கறையினின்றும் வெகு தூரம் கொண்டு சென்றுவிடும். ஆனால், பீனேயும் சைமனும் நுண் ணறிவினை அளப்பதற்குரிய நம்பிக்கையான முறையைத் தேடி, அவர்களது முயற்சியைப் பெரிதளவு தலையின் தோற்றத்தை அளவிடலில் (cephalometry) செலவிட்டனர். அவர்கள் கண்டவற்றை 1900லிருந்து 1910 வரை எல் ஏனி சைகாலஜிக்யூவில் (L' Anne Psychologique) விவரித்தனர். ஜெர்மனியில் ரோஸும் (Rose),[26] இங்கிலாந்தில் பியர்சனும் (Pearson)[27] துவக்க அறிவியல் ஆய்வுகளை நடத்தினர்.

[25] Beth L. Wellman, 'Physical Growth and Motor Development and Their Relation to Mental Development in Children', A Handbook of Child Psychology, (C. Murchison, Ed.). Worcester, Mass: Clark University Press, 1931, p. 265.

[26] C. Rose, 'Beitrage zur Europaischen Rassenkunde,' Archive fur Rassen und Gesellschafts - Biologie, 1905, Vol. 2, pp. 689-798; 1906, Vol. 5, pp. 42-134.

[27] K. Pearson, 'Relationship of Intelligence to Size and Shape of the Head and Other Mental and Physical Characters,' Biometrika, 1906, Vol. 5, pp. 105-146.

இவர்கள் அதிகமான சிறுவர் சிறுமியர் குழுக்களை உற்றுநோக்கி ஒரு முடிவுக்கு வந்தனர். இம் முடிவு பல அண்மை ஆய்வாளர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. அம் முடிவானது, நுண்ணறிவைப் பற்றிய எந்தவிதமான முடிவு செய்தலிலும் தலை அளவுகளுக்கு முக்கியத்துவம் அளிக்கக்கூடாது என்பதாகும்.

இந்த நூற்றாண்டில் துவக்கப் பகுதியில் நோய்வாய்ப்பட்ட உள்நாக்கு, மூக்கடைச் சதைவளர்ச்சி, சத்தின்மை, தவருன ஊட்டம், மற்றும் பல தனித்த ஏதுக்களே மனக்குறைபாட்டிற்குக் காரணம் என்று பொதுவாகக் கருதப்பட்டது. பிரச்சினைத் தொடர்பில் நடத்தப்பட்ட வெவ்வேறு ஆய்வுகள் இவ்வாருன நேரடி உறவு இல்லை என்று காட்டுகின்றன. ஆய்வுகளின் பொதுவான கருத்து, இம் மனவளர்ச்சிக்கும், சில உடல் வலுக் குறைகளுக்கும் உள்ள தொடர்பு குறித்துக் கூறும்பொழுது, இவ்வேதுக்கள் சிறுதொடர்பு கூட மனவளர்ச்சியுடன் கொண்டிருக்கவில்லை என்று கூறுகிறது.[28] இம் முடிவுகளுக்குப் புறம்பாக, அண்மையில் பல்வேறு ஆய்வாளர்களின் ஆய்வுகள் அதிகமான, சாதாரண நிலைக்குக் கீழான குழந்தைகள் உடற் குறைகளினுலும், அல்லல்களினுலும் துன்புறுவதாகக் காட்டுகின்றன. இதைப்பற்றிய முழுமையான ஆய்வுகளில் ஒன்று சராசரிக்குக் கீழான சிறுவர், சராசரிக் குழந்தைகளைக் காட்டிலும் மெதுவாக வளர்வதாகக் காட்டுகின்றது.[29] மேலும், உடல் பிறழ்வான நிலை அல்லது குறைபாடு மனக்குறையின் அளவுடன் தொடர்பு கொண்டுள்ளது. இவ் வாய்வின் முடிவுகள் லாஸ் ஏன்ஜல்சில் நடத்தப்பட்ட ஓர் ஆய்வுடன் மேலும் ஒத்துள்ளன. இவ்வாய்வு கல்வியில் பின்தங்கிய 900 குழந்தைகளின் உடலியல்புகள், சாதாரண மன இயல்புள்ள 2,700 குழந்தைகளின் உடலியல்புகளுடன் ஒப்பிட்டுப்பார்க்கப்பட்டன.[30] மருத்துவ வசதியும், உழைப்பும் இச் சராசரிக்குக் கீழான குழந்தைகளுக்குத் தந்திருந்தும், அவர்களிடத்தில் பலவகை உடல் குறைபாடுகள், சாதாரண நுண்ணறிவுள்ள குழந்தைகளைக் காட்டிலும் அதிகமாக இருந்தன.

[28] N. W. Shock and Harold E. Jones, 'Mental Development and Performance as Related to Physical and Physiological Factors', Review of Educational Research, 1941, Vol. 11, No. 5, Chap. 3.

[29] C. D. Flory 'The Physical Growth of Mentally Deficient Boys', Monographs of the Society for Research in Child Development, 1936, Vol. 1, No. 6.

[30] M. Goldwasser, 'Physical Defects in Mentally Retarded School Children,' California and Western Medicine, 1937, Vol. 47, pp. 310—315.

## சமூக வகுப்பு அமைப்பு

வெவ்வேறு சமூக வகுப்புக் குழுக்களில் வெவ்வேறு சூழ்நிலைகளுக்கு வெளிக்காட்டுதல் தொடர்ச்சியாகக் காணப்படுகின்றது. இது சில திறமைகளின் வளர்ச்சிக்கு ஆதரவாயும், சில திறமைகளுடைய வளர்ச்சியின் ஊக்கத்தைக் கெடுப்பதாயும் உள்ளது. பள்ளிகளில் கற்கவேண்டிய செயல்களில் பல நடுத்தர வகுப்புக் குழந்தைகளின் பின்னணிக்குத் தொடர்பு கொண்டுள்ளதேயன்றி, கீழான வகுப்புக் குழுக்களின் பின்னணியில் அமையவில்லை. அதனால் நடுத்தர வகுப்புக் குழந்தைகள் இச் செயல்களில் முன்னிற்பார்கள். இது ஜேன்கி (Janke), ஹேவிகியர்ஸ்ட் (Havighurst) நடத்திய ஆய்வில் குறிப்பிடப்பட்டது.[31] நடுமேற்குப் பகுதிச் சமூகத்தினரின் 6 வயதுச் சிறுவர் சிறுமியர்களுக்கு நுண்ணறிவுச் சோதனைகள், வினைமுறைச் சோதனைகள், வாசிக்கும் சோதனைகள், இயந்திர நோக்குச் சோதனைகள் ஆகியவை தரப்பட்டன. கீழ்க்கண்ட முடிவுகள் இச்சோதனைகளின் முடிவுகளைப் பகுத்தாய்ந்ததில் பெறப்பட்டன :

1. உயர்ந்த சமூக அந்தஸ்துக் குடும்பத்தினின்று வரும் சிறுவர்களும் சிறுமிகளும் எல்லாச் சோதனைகளிலும் கீழான சமூக நிலையிலிருந்து வருவோரைக் காட்டிலும் சிறப்பாகச் செய்கின்றனர். பொறித்தன்மை பொருத்து சோதனையில்மட்டும் சிறுவர்களிடம் நம்பத்தகுந்த சமூக வகுப்பு மாறுதல்கள் காணப்படவில்லை.

2. நகரச் சிறுவர்களும் சிறுமியர்களும், கிராமச் சிறுவர் சிறுமியர்களைக் காட்டிலும் சிறப்பாகச் செய்வர் என எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், புள்ளியியல்படி அவ்வாறு இல்லை.

3. குறிப்பிடும்படியான பால் மாறுதல்கள் காணப்படவில்லை.

மிகவும் அதிகமாகப் பயன்படுகின்ற நுண்ணறிவுச் சோதனைகளில் பல நடுத்தர, உயர்ந்த சமூகப் பொருளாதார நிலையுடைய குழந்தைகளின் பட்டறிவுகளின் துணைகொண்டு அமைக்கப்பட்டவையாகும். மேலும், நுண்ணறிவின் வரையறையே நடுத்தர வகுப்புக் குழந்தைக்கு இசைவான வகுப்புப் போன்ற நிகழ்ச்சிகளில் காணப்படும் கற்றல், சிக்கல் தீர்க்கும் பொருள்கள் கொண்டு கூறப்பட்டதாகும். பள்ளித் திட்டம் நடுத்தர வகுப்புப் பயன் மதிப்புகளை மேம்படச் செய்கின்றது. நடுத்தர வகுப்பினரால் உயர்ந்தவை என்று கருதப்படுகின்ற செயல்களில் வெற்றியடையும் குழந்தைகளுக்குப் பரிசுகள்

[31] L. L. Janke and R. J. Havighurst, 'Relation between Ability and Social Status in a Midwestern Community, II: Sixteen-year Old Boys and Girls,' Journal of Educational Psychology, 1945, Vol. 36, pp. 499-509.

அளிக்கப்படுகின்றன. ஆதலின், கீழ்வகுப்புக் குழந்தைக்குப் பொது வாகப் பல பள்ளிச் செயல்களின் வினைமுறைகளில் அதிகமாக முன் வாய்ப்பு இல்லாமல் இருக்கின்றது.

## பள்ளி அடைவிற்கும் நுண்ணறிவிற்கும் உள்ள தொடர்பு (School achievement in relation to intelligence)

ஒருவர் நுண்ணறிவுச் சோதனைகளின் தன்மையையும், மரபுவழி வந்த அடைவுச் சோதனைகளின் தன்மையையும் கருதும்பொழுது, அடைவுக்கும் நுண்ணறிவுக்கும் இடையே, குறிப்பிடும்படியான தொடர்பு இருப்பது இயற்கையே என்று தோன்றுகின்றது. ஓர் ஆய்வில் இப்பிரச்சினையைக் குறித்து 1,608 ஆறும் படிவ மாணவர்கள் முதலில் சோதிக்கப்பட்டனர்.[32] இம் மாணவர்கள் ஆய்வு செய்யப்பட்டதும்,

### அட்டவணை 4—1

உயர்ந்த நுண்ணறிவு ஈவுகளையுடைய மாணவர்கள் பள்ளியில் அதிக நாட்கள் இருக்க முனைகின்றனர்கள்.

| | பள்ளியில் இன்னும் இருக்கும் குழுவின் சதவீதம் | பள்ளியில் இன்னும் இருப்போரின் சராசரி நுண்ணறிவு ஈவு | பள்ளியை விட்டுச் சென்றோரின் சராசரி நுண்ணறிவு ஈவு |
|---|---|---|---|
| ஆறுவது படிவத்தில் (தொடக்கத்தில் இருந்தும் இருக்கும் குழு) ... ... | 100 | 108 | ... |
| உயர்நிலைப் பள்ளிக்கு நுழைதல் ... ... | 84 | 111 | 95 |
| பள்ளியிலிருந்து பட்டம் பெறுதல் ... ... | 49 | 115 | 102 |
| கல்லூரியில் நுழைதல் ... | 18 | 119 | 106 |
| கல்லூரியிலிருந்தும் பட்டம் பெறுதல் ... ... | 8 | 123 | 107 |

[32] V. E. Binson, 'The Intelligence and Later Scholastic Success of Sixth-Grade Pupils', School and Society, 1942, Vol. 55, pp. 163-167.

பல ஆண்டுக் காலத்தில் திரும்பவும் சோதனை செய்யப்பட்டனர். அட்டவணை 4—1ல் தரப்பட்டுள்ள முடிவுகள், ஒவ்வொரு கல்வி அளவிலும் ஆய்வு செய்யப்பட்டபொழுது, வகுப்பில் தங்கியிருக்கின்றவர்களின் நுண்ணறிவு ஈவு, விட்டுச்சென்றவர்களைக் காட்டிலும் அதிகமாய் இருந்தது. இவ்வாறு பள்ளி நிகழ்ச்சிகளில், 90 அல்லது அதற்குக் குறைவான நுண்ணறிவு ஈவுடைய மாணவர்களில் பெரும்பான்மையோர், கட்டாயமான பள்ளி வயதின் வரம்பினைக் கடந்ததும், படிப்பைவிட்டுவிடுகின்றார்கள். இருப்பினும், ஆய்வுகள் தற்காலப் பல்வகைப் பயிற்சிகளுடைய உயர்நிலைப் பள்ளித் திட்டம், அதிகமான மாணவர்களைப் பள்ளியில் வைத்திருக்கிறது எனக் காட்டுகின்றன.

இதன் தொடர்புள்ள சில பொருள்கள் 15, 16ஆம் அதிகாரங்களில் முழுமையாகக் கையாளப்பட்டுள்ளது.

நுண்ணறிவுச் சோதனை எண்ணிக்கைகளுக்கும், கல்வியில் பெறும் தரங்களுக்கும் உள்ள உடன் தொடர்புகள் பல ஏதுக்களினால் மாறுநிலை கொண்டுள்ளன. ஆனால், பொதுவாக இவை ·30 லிருந்து ·75க்குள் இருக்கின்றன. பிராட்லீ (Bradley) 1,500, மூன்றாவது, நான்காவது ஆண்டு உயர்நிலைப் பள்ளி மாணவர்களுடைய நுண்ணறிவிற்கும் ஆசிரியரது மதிப்பெண்களுக்கும் இடையே உள்ள உடன் தொடர்புகள் ·33-லிருந்து ·64 வரை இருப்பதாகக் குறிப்பிட்டார்.[88] இன்னொரு வகையில் இத்தொடர்பினைக் குறிப்பிடும்பொழுது இது மேலும் பதியும் வகையில் உள்ளது. A தரங்களைப் பெற்ற சதவீதத்தினருக்கும் 140க்குமேல் நுண்ணறிவு ஈவு பெற்றிருந்த மாணவர்களது சதவீதத்துக்கும் உள்ள விகிதம் 16க்கு 1 ஆக இருந்தது. இவ்விகிதம் சராசரி நுண்ணறிவு ஈவு பெற்றிருப்போரின் 90—110 உள்ளோருக்கும் 0·4க்கு 1 ஆக இருந்தது. இவ் விவரங்கள் அட்டவணை 4—2ல் தரப்பட்டுள்ளன.

## மனவளர்ச்சியுடன் தொடர்புள்ள சில பிரச்சினைகள்

மனவளர்ச்சியும் முதிர்ச்சியும் பொதுவாக அதிகமான சமூகத் தேவைகளையும், அறிவுத் தேவைகளையும் உடன் கொண்டு வருகின்றன. அதிகமான பொறுப்பும், முடிவு எடுப்பதும் உடன் வருகின்றன. இது சில துன்பமானவையும், கலக்கமானவையுமான சிக்கல்களை இளையோர்களுக்கு அளிக்கின்றது. அவர்கள் வழிகாட்டியில்லாததனால் பொறுப்பு ஏற்பதற்கும், தெரிந்து எடுப்பதற்கும், பட்டறிவு இல்லாததனால் தயாராக இல்லாத சூழ்நிலையில் இருக்கின்றனர். இவ்வாறான சில சிக்கல்கள் பின்னுள்ள அதிகாரங்களில் வழிகாட்டி பற்றிக் குறிப்பிடும்பொழுது விவாதிக்கப்பட்டுள்ளன.

[88] W. A. Bradley, 'Correlates of Vocational Preferences,' Genetic Psychology Monograph, 1943, Vol. 28, pp. 99-169.

## அட்டவணை 4—2

உயர்நிலைப் பள்ளியில் உயர்ந்த, தாழ்ந்த தரங்களுக்கும் மனத் திறனுக்கும் உள்ள தொடர்பு (பிராட்லி தந்தது).

| நுண்ணறிவு ஈவு | மாணவர்களின் சதவீதம் | தரம் A பெற்றோரின் சதவீதம் | A பெற்றோரின் சதவீதத்திற்கும் மாணவர் சதவீதத்திற்கும் உள்ள வீதம் | D பெற்றோரின் சதவீதம் | D பெற்றோரின் சதவீதத்திற்கும் மாணவர் சதவீதத்திற்கும் உள்ள வீதம் |
|---|---|---|---|---|---|
| 140—149 | 0·2 | 3·2 | 16·0 | 0 | 0 |
| 130—139 | 1·3 | 10·6 | 8·1 | 0 | 0 |
| 120—129 | 7·5 | 25·5 | 3·4 | 0 | 0 |
| 110—119 | 22·5 | 35·1 | 1·6 | 0 | 0 |
| 100—109 | 32·5 | 18·1 | 0·6 | 13·7 | 0·5 |
| 90—99 | 25·3 | 4·3 | 0·2 | 36·8 | 1·5 |
| 80—89 | 9·7 | 3·2 | 0·3 | 42·3 | 4·3 |
| 70—79 | 1·0 | 0·0 | 0·0 | 5·3 | 5·3 |

இளையோனது கவலைகளுக்கும் பற்றார்வத்துக்கும் ஒருமித்த பிறப்பிடம் நமது தற்கால சமூகத்தில் அவன் அறிவுத் தேவைகளை வெற்றிகரமாகச் சந்திப்பானா எனும் கேள்வியேயாகும். நமது சமூகத்தின் போட்டித் தன்மை பள்ளிகளில் கையாளப்படும் முறைகளில் பிரதிபலிக்கின்றது. இல்லங்களின் நோக்குகளிலும் இது பிரதிபலிக்கின்றது. தேர்வுகளில் வெற்றியடைதல், பள்ளியில் திருப்தியான மதிப்பெண்கள் பெறுதல், சிறப்புப் பட்டியலில் இடம் பெறுதல், கல்லூரியில் நுழைவு பெறுதல் ஆகியவை நமது பள்ளிகளில் உள்ள உயர்ந்தபடி மாணவர்களது பொதுவான அவாவும், கவனத்தைக் கவர்வதுமாம். இத் தேவைகளின் அவசரத் தன்மை தனியன் தனக்காக அமைத்துக் கொண்ட பயன் மதிப்புகளுக்கும் அவாக்களுக்கும் இடையில் தொடர்பு கொண்டிருக்கவில்லை. இருப்பினும் இளையோன் பெற்றோர்களாலும், ஆசிரியர்களாலும், ஒப்பார்களாலும், தான் ஒரு தோல்வியடைந்தவன் எனக் கருத விரும்பமாட்டான். பள்ளியில் வெற்றி

யடைதல் (குறிப்பாக அறிவாற்றல் பெறுதல்) உண்மையான வெற்றியின் முக்கிய தேவையாகக் கருதப்படுகின்றது. இவ்வாருன பிரச்சினை நடத்தையின் பல வகைகளும், சொந்த சமூகத்தவரான பொருத்தப்பாடுகளும் பள்ளியில் தோல்வியடைவதைக் காணலாம். இளையோர் குழுக்களைப் பற்றிய ஆய்வுகள் நுண்ணறிவு ஒருவருடைய சொந்தப் பொருத்தப்பாட்டைப் பற்றிய வருமுன் கூறலில், சிறு அளவு பயன் மதிப்புதான் கொண்டுள்ளது எனக் கூறுகின்றன. இதற்குக் காரணமாயிருக்கும் ஏதுக்கள் பலவாகும். இவைகளில் சில கீழ்க்கண்ட கூற்றில் குறிப்பாகத் தெரிவிக்கப்படுகின்றன.

குழந்தையின் முழுமையான நுண்ணறிவு நிலைகள், கீழ்க்கண்டவையாகும்: அவனுடைய குடும்பத்தாராலும், நண்பர்களாலும் குறிக்கோள்கள் மூலமாக அவனுக்குக் காட்டப்பட்ட செயல்களைச் செய்வதற்குத் தேவையான நுண்ணறிவு அளவு; அவ்வாருன குறிக்கோள்களினால் எழுகின்ற சமூக அழுத்தங்கள்; அவனது சொந்த விருப்பத் தேவைகளும் அவாவின் நிலையும்; அவனது உண்மையான அடைவு; ஆகிய இவ்வேதுக்கள் பல வகைகளில் இணைத்தொடர்புகள் கொண்டு பல சிக்கலான வகைகளைத் தோற்றுவிக்கக்கூடும்.[34]

## அதிகாரச் சுருக்கம்

நுண்ணறிவின் தன்மை குறித்தும், மனவளர்ச்சி விளைவு குறித்தும் இருந்த துவக்க நிலைக் கொள்கைகளில் பல, இப் பொதுப் பகுதியில் அண்மையில் நடந்த ஆராய்ச்சியின் விளைவாக மாறுதலுக்குள்ளாயின, அல்லது கைவிடப்பட்டன. இப்பொழுது பொதுவாகப் பெரும்பான்மையான நுண்ணறிவுக் குழுச் சோதனைகள் நடுத்தர வகுப்புக் குழந்தையைச் சார்ந்து கலாசாரப் பண்பில் ஒரு பக்கமாக உள்ளன என்று எப்போதும் ஒத்துக்கொள்கின்றனர். இவ்வாறு ஒருவன் இச் சோதனையின் முடிவுகளுக்கும், நடுத்தர வகுப்புக் குழந்தைகளின் வாழ்க்கைச் செயல்களிலுள்ள ஏதுக்களுக்கும், கட்டுப்பாட்டிற்கும் குறிப்பிடும்படியான உடன் தொடர்புகள் இருப்பதாகக் காண்பான். இவ்வதிகாரத்தில் உள்ளாற்றல் நுண்ணறிவிற்கும், நிகழ்ச்சி முறை நுண்ணறிவிற்கும் இடையே மாறுபாடு காணப்படுகின்றது. நுண்ணறிவுச் சோதனை அளவுகள் தனிப்பட்ட, கையாளும்போது ஏற்படுகின்ற வெளிப்படுத்துதலிற் செயல் முறை நுண்ணறிவிற்கும் குறிப்புகள் தருகின்றன. இவ்வாறு இச்சோதனைகளின் குறிப்புகள் தனியன்களது பட்டறிவின் தன்மையையும், அளவையும் பொறுத்துப் பெருமளவு உள்ளன.

[34] H. S. Conrad, F. N. Freeman, and H. E. Jones, 'Differential Mental Growth', Forty-third Yearbook of the National Society for the Study of Education, Part 1, 1944, p. 180.

தனித்த அக்கறை தருகின்ற மன வளர்ச்சி இயல்பு முதிர்ச்சியடையும் வயதுக்கும் அல்லது மன வளர்ச்சி வரம்பிற்கும் தொடர்புடையது; கற்றல், ஊக்கி, சிக்கல்கள் ஆகியன முடிவுகளைப் பாதிக்கின்றன. மேலும் சோதனைப் பொருள்களின் தன்மை காணப்படுகின்ற மாறுதல்களைக் கவனிப்பதற்கு முக்கிய ஏதுவாகின்றது. மேலும் இவ்வதிகாரத்தில் தரப்பட்டுள்ள தனியனது வளர்ச்சி வளைவுகள், மன வளர்ச்சியின் தனித்த இயல்புகள் தனியனுக்குத் தனியன் ஒரே சீராக இருப்பதில்லை எனக் காட்டுகின்றன. நுண்ணறிவுச் சோதனையின் அளவிற்கும் சொல்தொகுதியின் அளவிற்கும் நெருங்கிய தொடர்பு இளையோர் பருவத்தில் இருப்பது, மனத்திறன் பெற்ற நிலையும், குறித்தன்மையும் கொண்ட பொருள்களைக் கற்பதற்குரிய திறனுடன் தொடர்பு கொண்டுள்ளது என்பதைக் காட்டுகின்றது. மன வளர்ச்சி, மற்ற வளர்ச்சி நிலைகளைக் காட்டிலும் தன்மையில் படிப்படியாகவும் தொடர்ச்சியாகவும் இருக்கின்றது என்றாலும், ஆராய்ச்சி ஆய்வுகள் அவை வாழ்க்கையின் துவக்க ஆண்டுகளில் தூரமாகப் போவதாகவும், 14, 15, 16, ஆண்டுகளில்கூட கீழ்த்துரித வளர்ச்சி இருப்பதாகவும் கூறுகின்றன. பின்னால் வருகின்ற மெதுவான வளர்ச்சி, மனத்திறன் வளர்ச்சியில் உண்மையில் ஓர் அனுகூலமா அல்லது மன அமைப்பில் ஒரு வகையா என்பது கருத்து வேறுபாடுகள் கொண்ட ஒரு பொருளாக இருப்பினும், பல வெளி ஏதுக்கள் எந்த ஒரு பருவத்திலும் உய்த்துணரப்பட்ட மன வளர்ச்சியின் வரம்பு விகிதங்களின் நுட்பத்தைக் குறிக்கின்றன.

## சிந்தனைக்குரிய பிரச்சினைகள்

1. நுண்ணறிவுச் சோதனைகளில் நீ கொண்ட பட்டறிவுகள் யாவை? உம்முடைய பட்டறிவின் அடிப்படையில், அவர்கள் உண்மையில் அளப்பது எவற்றை எனக் கருதுகின்றாய்?
2. எந்த அளவிற்கு மனவளர்ச்சி பூப்படையும் காலத்துடன் தொடர்பு கொண்டுள்ளது? உடல் முதிர்ச்சிக்கு எவ்வாறு தொடர்பு கொண்டுள்ளது?
3. வெவ்வேறு பரிசோதனைகள் நுண்ணறிவிற்கு என்ன தொடர்பினைக் காட்டுகின்றன? பெற்ற பல்வேறு உடன் தொடர்புகள் யாவை?
4. கற்றலுடன் மனத்திறன் எவ்வாறு தொடர்பு கொண்டுள்ளது? இத்தொடர்பு எவ்வாறு முன் இளையோர்களது கல்வித் திட்டத்தைப் பாதிக்கும்?

5. மன, உடல் வளர்ச்சிகளுக்கிடையே உள்ள தொடர்பினை எவ்வாறு விளக்குவாய்? இத்தொடர்பில் உள்ள கல்வி முக்கியத்துவம் என்ன?

6. நீவிர் இளையோர் பருவத்தை அடைந்தபொழுது என்ன விதமான மனவிரிவினைப் பெற்றீர்?

7. நினைவு, பகுத்தறிவு வளர்ச்சி வளைவுகளை ஒப்பிடுக. அவ்வொப்புதலைப் பற்றி நீ என்ன முடிவு செய்வாய்?

8. பள்ளி அடைவுக்கும், நுண்ணறிவுக்கும் உள்ள தொடர்பு யாது? இத்தொடர்பினை எவ்வாறு விளக்குவாய்?

9. பின் குழந்தைப் பருவத்திலும் இளையோர் பருவத்திலும் ஏற்படும் மனவளர்ச்சித் தொடர்பில் அளிக்கப்படும் பொருள்களில் கல்வி முக்கியத்துவம் என்ன?

10. உள்ளாற்றல் நுண்ணறிவிற்கும், நிகழ்ச்சிமுறை நுண்ணறிவிற்கும் உள்ள மாறுபாட்டினைக் கூறுக. குழந்தையின் உள்ளாற்றல் நுண்ணறிவை இயக்கவைக்கும் ஏதுக்கள் எவை?

## தெரிவுசெய் நூற்பட்டியல்


1. Anderson, J. E., 'The Psychology of Development and Personal Adjustment.' New York: Henry Holt and Co., 1949, Chaps. 8 and 9.

2. Cole, L., 'Psychology of Adolescence', (Fourth Edition). New York: Rinehart and Co., Inc., 1954, Chap. 15.

3. Garrison, K. C., 'Growth and Development', New York: Longmans, Green and Co., 1952, Chaps. 8 and 10.

4. Garrison, K. C., and J. S. Gray, 'Educational Psychology.' New York: Appleton-Century-Crofts, Inc., 1955, Chaps. 5 and 6.

5. Horrocks, J. E., 'The Psychology of Adolescence: Behaviour and Development'. Boston: Houghton Mifflin Co., 1951, Chap. 7.

6. Jones, H. E., 'The Environment and Mental Development,' Manual of Child Psychology (Second Edition).

L. Carmichael, Editor. New York: John Wiley and Sons, Inc., 1954, Chap. 10.

7. Kublen, G., 'The Psychology of Adolescent Development.' New York : Harper & Bros., 1952, Chap. 3.

8. Segel, D., 'Intellectual Abilities in the Adolescent Period.' Bulletin No. 6, 1948, U. S. Office of Education.

9. Seidman, J. M., 'The Adolescent: A Book of Readings'. New York: The Dryden Press, 1953, Chap. 6.

10. Wechsler, D., 'The Measurement of Adult Intelligence.' Baltimore: Williams and Wilkins Co., 1944, Chap. 7.

# 5. மனவெழுச்சி வளர்ச்சியும், சமூக வளர்ச்சியும்

## மன வெழுச்சி நடத்தையின் தன்மையும் வளர்ச்சியும்

### மனவெழுச்சிகளும் நடத்தையும்

குழந்தை, இளையோர் ஆகியோரது தன்மையைப்பற்றிய மாறிய கருதுகோள்கள், நமது பள்ளிகளிலும் மற்றக் கல்விச் சமூக நிலையங்களின் முறைகளிலும், குறிக்கோள்களிலும் மாறுதல்களைக் கொணர்ந்துள்ளன. குழந்தையின் அறிவாற்றல் ஒழுக்கம் அல்லது குழந்தையின் சமூகநிலையைக் கருதுவதிலிருந்து முழு ஆளுமை வளர்ச்சியைக் கருதும் மாற்றம் ஏற்பட்டுள்ளது. வளருகின்ற சிறுவர்களையும் சிறுமியரையும் வழிகாட்டுகின்ற பணியில் இருப்போருக்கு, வளரும் ஆளுமையில் மனவெழுச்சிகளின் வளர்ச்சியின் முக்கியத்துவத்தைப் பற்றிய ஆழமான உணர்வு அவசியமாகும். பலரிடம், மனவெழுச்சிகளைச் சிலவகையான தூண்டுதல்களுடைய ஒரே தன்மை வாய்ந்த வெளிக்காட்டல் என்று கருதுகின்ற போக்கு காணப்படுகின்றது. இளையோர் பருவத்தினரது எளிதில் அஞ்சுகின்ற தன்மை சில வேளைகளில் தோன்றும் அடிப்படையான நடத்தை வகை என்று கருதப்பட்டது. இக்கருத்திற்கு மாறாக 'இன்றைய போக்கு, மனவெழுச்சிநிலைகள் சில வகையிலும் சில அளவிலும் எல்லா நடத்தையிலும் உள்ளன என்று உணர்வதேயாகும்'[1] என்பது கூறப்பட்டது.

மனவெழுச்சி வளர்ச்சி இவ்வதிகாரத்தில் உடல் வளர்ச்சியினின்று பிரிக்கப்பட்டுத் தனி அதிகாரமாகக் கருதப்படுவதால், இது உடல்

[1] H. E. Jones, H. S. Conrad, and L. B. Murphy, 'Emotional and Social Development and the Educative Process', Thirty-Eighth Yearbook of the National Society for the Study of Education, Part 1, 1939, Chap. 18, p. 363. (Quoted by permission of the Society.)

வளர்ச்சியுடன் தொடர்பற்றது என்று கொள்ளல் கூடாது. ஜோ என்பவரது வரலாறு ஷேக்ரி (Zachry) என்பவரால் தரப்பட்டது. இளையோரைப் பற்றிய இவ்வாய்வு சில பொருள்கள் உடலியல் சார்ந்தவை என்றும், மற்றவை மனவெழுச்சியைச் சார்ந்தவை என்றும் பிரித்துக் கூறுவது இயலாதுஎன்று காட்டுகிறது. இங்கு தரப்பட்டுள்ள வரலாறு, வாழ்க்கையின் எந்த ஒரு தனிப்பட்ட காலத்திலும் தனியனது செயல்களின் தன்மையையும் வகையையும் தன்னகத்தே கொண்டுள்ள ஏதுக்களைக் கருதவேண்டிய அவசியத்தை உணர்த்துகின்றது.[2]

ஜோ பன்னிரண்டு வயது பையன். அவன் குடும்பத்துடன் ஒன்றி இருக்க முடியவில்லை. அவன் குடும்பத்தின் கடைசிக் குழந்தையாவான். அவனது சகோதரிக்கு விரைவில் திருமணம் நடக்க இருக்கின்றது. அவனது சகோதரன் அண்மையில்தான் வேலைக்குச் செல்லத் துவங்கினான். ஜோ, குடும்பத்திலுள்ள எவரும் அவன்மீது அக்கறை கொள்ளத்தக்க பருவத்தில் இல்லை. அவனது பள்ளி வேலைகளில் அவன் மிக்க நாட்டமின்றி இருந்தான். அவனுடைய கணக்குப் பாடத்தைப் புறக்கணித்தான்.

ஒரு நாள் காலையில் காலை உணவு உண்ணும்போது வயிறு புடைக்க உண்டான். உண்டது பாலேட்டுடன் கூடிய ஓட்ஸ் கஞ்சியும், முட்டையும், பன்றி இறைச்சியும், பழச்சத்தும் ஆகும். உண்ணும் போது அன்று காலையில் கணக்குத் தேர்வு இருந்ததை நினைவுகூர்ந்தான். அந்நினைவுக் கிளர்ச்சி அவனது வயிற்றைக் கலக்கியது. பள்ளியை நோக்கி மெதுவாக நடந்து சென்றான். அவனது சிந்தனை தேர்வைப் பற்றியே சுழன்று கொண்டிருந்தது. அதனால் அவனது வயிற்றை மேலும் கலக்கியது. ஓட்ஸ் கஞ்சி வயிற்றில் கனத்து இருந்தது. அவன் ஒரு மாதிரியான உணவு கொண்டான். அவன் உணவை வாந்தி எடுத்திடின் பள்ளிக்குச் செல்லவேண்டி இருக்காது என எண்ணினான். கணக்குத் தேர்வு அவன் நினைவை மீண்டும் பற்றியது. திடீரென்று அவன் காலை உணவை வயிற்றில் தங்க வைக்க முடியாது எனக் கண்டான். பள்ளி அடைந்ததும் அவன் வாந்தி எடுத்துவிட்டான். பள்ளி முதல்வர் அவன்மீது எந்தத் தவறான கருத்தும் கொள்ளாது ஒரு நாள ஓய்வெடுக்கும்படி அனுப்பினார். முதல்வர் அவனது தாய்க்குத் தொலைபேசிமூலம் செய்தி அனுப்பினார். இதனால் அவர்கள் கவலையுற்றனர். விருந்தாளி அறையில் ஜோவை அவனது தாயார் படுக்க வைத்தார். அவன் சிறு பையனாக இருந்ததிலிருந்து அவன் கண்டறியாத வீண் சந்தடி அவனுக்காகச் செய்யப்பட்டது. அவனது சகோதரி அவனிடம் வந்து அவளுடைய திருமண அன்பளிப்பு

[2] C. B. Zachry and M. Lighty, 'Emotions and Conduct in Adolescence', New York: Appleton-Century-Crofts, Inc., 1940, pp. 69-70.

களைக் காட்டினுள். அவனது சகோதரன் மாலை வெளியே செல்வதற்குமுன் இவனிடம் வந்து பேசினுன். இம்மாதிரியான நிகழ்ச்சி, பல மாதங்களாக நிகழவில்லை. அன்று அவனது தந்தை மாலை நேரத்தில் படித்துக்காட்டி நேரத்தைப் போக்கினுர்.

வயிற்றுக் கலக்கம் அதிகமானதன் பயன் மதிப்பைத் தந்தது. கணக்குத் தேர்வு இல்லை. வீட்டில் அனைவரும் அக்கறை காட்டினர். இக்கவனத்தை அவன் கொஞ்ச காலமாக வேண்டி நின்ருன். ஜோ அடுத்த முறை ஒரு சிக்கலான சூழ்நிலையில் இருக்கும்பொழுது, வயிற்றைக் கலக்கும் பொழுது, அவன் எல்லாப் பீடிகையான வழிகளையும் கைக்கொள்ள வேண்டிய அவசியமில்லை. அவன் மேலும் அதைப் பற்றிச் சிந்திக்காதபொழுது உணவு தானுக வெளிவந்துவிடுகிறது.

### மனவெழுச்சிகளின் வளர்ச்சி

பிரிட்ஜஸ் (Bridges) கருத்துப்படி குழந்தையின் மனவெழுச்சித் தொடர்வினைகள் அதிகமான வேறுபாடுகள் கொண்டிருக்கவில்லை என்பதாகும்.[8] மனவெழுச்சித் தூண்டலுக்குப் பெரும்பாலும் தரப்படுகின்ற துலங்கல் உடல் கலக்கம் அல்லது கிளர்ச்சியாகும். இப்பொழுது கிளர்ச்சியிலிருந்து முதல் சில மாதங்களில் வெவ்வேறு துலங்கல்களான துன்பமும் இன்பமும் வளர்கின்றன. இங்கு மனவெழுச்சித் துலங்கல்களின் நேர்நிலை எதிர்மறை உருவங்களைக் கண்டோம். இத்துலங்கல்களை ஏற்றுக்கொண்டு பல்வேறு வகைப்படுத்தல்களும் தரப்பட்டுள்ளன. கோபம், வெறுப்பு, அச்சம், பொருமை ஆகியவை துன்பத்தினின்று துவக்க வயதிலேயே தோன்றுகின்றன. வெற்றிச் செருக்கு, மற்றவர்பால் அன்பு, மகிழ்ச்சி ஆகியவை இன்பத்தினின்று தோன்றுகின்றன. மனவெழுச்சி நிகழ்ச்சிகளின் மேலும் வேறுபட்ட நடத்தை வகைகள் வெவ்வேறு வயதுகளில் தோன்றுகின்றன. அழுதல், கத்துதல், அமைதியின்மை, போராடுதல் ஆகியவை முதல் நான்கு மாத வாழ்க்கையில் தோன்றுகின்றன. இது துவக்க காலத்தில் அதிகமான தூண்டுதலினுல் ஏற்படுகின்ற பொதுவான உடற் கலக்கம் என்று கொள்ளலாம். குழந்தை, இச்சிறு குழவிப் பருவத்தைத் தொடர்ந்து வளர்ச்சிக் காலத்தை அடைகின்றது. இங்கு அக்குழந்தை முன்பு கடந்த பருவங்களையெல்லாம் இணைத்து ஒன்ருகப் பிணைக்கிறது. தானியங்கு நரம்பு மண்டலத்தினுல் கட்டுப்படுத்தப்படுகின்ற உடலிலுள்ள உள்ளுறுப்புகள் மெதுவாக வளர்ச்சி பெறு

[8] K. M. B. Bridges, 'Emotional Development in Early Infancy', Child Development, 1932, Vol. 3, pp. 324–341, also see W. E. Blatz and D. A. Millichamp, 'The Development of Emotion in the Infant', University of Toronto Studies in Child Development Series, 1935, No. 4.

வதனால் மனவெழுச்சி வளர்ச்சி அதிகமாக ஏற்படுவதில்லை. இவ்வாறு இவை மனவெழுச்சி வாழ்க்கையுடன் ஒன்றி இருக்கின்றன.

நமது அச்சங்கள் அல்லது கோபங்களில் பல, பல்வேறு தூண்டுதல்களுக்கும் துலங்குதலுக்கும் கையாளப்பெற்ற வழிகளாகும். முதியோர்களுக்குக் கோபம் அல்லது அச்சத்தை உண்டாக்குகின்ற தூண்டல்களில் சில, குழந்தைகளைப் பயமுறுத்தாது நம்முடைய மற்ற மனவெழுச்சி வகைகளான கற்றல், முதிர்ச்சி ஆகியவற்றின் விளைவுகள் என்பதும், குறிப்பாகக் கற்றலின் விளைவு என்பதும் உண்மையாகும். மனவெழுச்சிகள் கற்றலினால் ஏற்படுவதால் ஒருவரால் கற்றதை மறக்கவும் முடியும். இதனால் கட்டுப்பாடில்லா மனவெழுச்சிகள் உண்டாக்கும் தகுதியற்ற நிலை, திக்குமுக்காடச் செய்தல் தொந்தரவு செய்தல் ஆகியவற்றினால் ஏற்படும் தடைகளைத் தவிர்க்கவும் இயலும். இருப்பினும், 'மனவெழுச்சி' என்னும் சொல்லினை மனவெழுச்சி நடத்தைக்கு முற்றும் மாறுபட்ட ஒரு துலங்கலின் பெயர் என்று கொள்ளலாகாது. நடத்தை என்பது உடலின் பல பாகங்களில் தொடர்ச்சியான சிக்கலான வழிகளினால் ஒரே சமயத்தில் நிகழும் செயல்களைக் கொண்டதாகும். மனிதன் ஒரு சமயத்தில் மனவெழுச்சியுடனும், பிறிதொரு சமயம் இயல்பூக்கத்துடனும், வேறொரு சமயத்தில் பழக்கத்துடனும் துலங்கலைத் தருவதில்லை. இப்பெயர்கள் திட்டமான வெவ்வேறு வகை நடத்தைகளை வெவ்வேறாகக் குறிப்பதற்காகப் பயன்படுத்தப்படவில்லை. அவைகள் ஆய்வு நடத்துதற்குத் தேவையான அளவில் விரித்துரைக்கப்பட்டவைகளேயாகும். மனவெழுச்சியான நடத்தை என்று பொதுவாகக் கூறப்படுகின்ற 'மனவெழுச்சி' என்ற தூய வடிவினைப் பாடநூல்களில்மட்டுமே காணலாம். இது ஆக்கநிலை நிறுத்தம் பற்றியும், பழக்கம் பற்றியும் உண்மையேயாகும். மனவெழுச்சி நடத்தையின் சில இயல்புகள் அன்றாட வாழ்க்கையின் எல்லா நேரங்களிலும் காணப்படுகின்றன. இதைத்தான் சில சமயங்களில் மனவெழுச்சியின் குரல் (emotional tone) என்று அழைக்கின்றார்கள். இம்மனவெழுச்சிப் பொருள்கள் எந்த ஒரு காலத்திலும் செயலிலுள்ள சூழ்நிலையைச் செறிவாக்குகின்றன, கட்டுப்படுத்துகின்றன அல்லது மாற்றியமைக்கின்றன. அவைகள்தாம் நடத்தையின் முழு வகையினை இணைக்கும் பகுதிகளாகும். இளையோன் தன்னுடைய உந்துகளின் அமைப்பினாலும், ஒடுக்குதலினாலும் மனவெழுச்சி மிக்க (hyper emotional) நிலையை அடைகின்றான். வாழ்க்கையின் இப்பகுதியில் அவனிடம் இயங்கும் கல்விச் சக்திகளும், கட்டுப்பாடுகளும் மனவெழுச்சி மிக்க நிலையை உண்டாக்கலாம்.

மனவெழுச்சி என்ற சொல்லுக்கு நேர் ஆங்கிலச் சொல்லான 'எமோஷன்' (emotion) என்பது எமோவிரி (emovere) என்ற இலத்தீன் சொல்லிலிருந்து பிறந்ததாகும். அதன் பொருள் 'வெளிக்

கொணர்தல்' என்பதாகும். பொதுவாக அது தூண்டிவிடப்பட்ட நிலை அல்லது சூழ்நிலை என்று வரையறுக்கப்படுகிறது. முன்னரே ஜேம்ஸ், லேன்ங் (Lange), கேனன் (Cannon) ஆகியோரும், மற்ற வரும் மனவெழுச்சித் துலங்கல்களின் உடலியல் தொடர்பினைப் பற்றிக் கருதினர். இன்று உளவியலார் உள்ளூறுப்புத் துலங்கல்களை மனவெழுச்சியின் முக்கியப் பகுதிகளாக ஒப்புக்கொள்கின்றனர். அண்மையில் மனவெழுச்சித் தூண்டல்களின் தன்மையை விளக்க லிண்ட்சே (Lindsey) 'செயற்பட முனைதல்' (activation) என்னும் சொல்லினைப் பயன்படுத்தினர்.[4] இச்செயற்பட முனைதல், இச்சிக்கலினை ஆய்ந்த துவக்கநிலை மாணவர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆனால், லிண்ட்சேயினுல் இது தெளிவாக விளக்கப்பட்டோ வரையறுக்கப்பட்டோ இருக்கவில்லை. அவருக்குச் செறிவான மனவெழுச்சி நிலை தொடர்ச்சியான செயல்களைக் குறிக்கும் ஒரு பகுதியாகவும், தூங்குகின்ற நிலை குறைவான செயல் முனைப்புள்ள ஒரு பகுதியாகவும் தென்பட்டது.

### அகவய, புறவயமான மனவெழுச்சித் துலங்கல்கள்

துவக்கக் குழந்தைப் பருவத்திலுள்ள மனவெழுச்சிகளைப் பற்றிய எச்சரிக்கையான ஆய்வு, இச்செயற்பட முனைதலானது அகவயமானதும் புறவயமானதும் ஆன செயல்கள் என்று காட்டுகின்றது. இருப்பினும், வளர்ச்சியுடன் தோற்றுவிக்கின்ற அகவய-புறவய முனைப்பில் ஒப்பீட்டடிப்படையில் மாறுதல்கள் காணப்படுகின்றன. மனவெழுச்சிகளின் வரைவு இயக்கத்தின் முக்கியமான சிக்கல்களில் ஒன்று அகவய-புறவயத் துலங்கல்களுக்கிடையே உள்ள உறவு பற்றியதாகும். தோலின் மின்னாற்றலுக்குள்ள துலங்கல் (GSR) சில சமயங்களில் அகவயமான மனவெழுச்சித் துலங்கல்களை அளவிடுவதற்குப் பயன்படுத்தப்படுகின்றது. உற்றுநோக்கப்படும் வெளிநடத்தை, புறவயமான மனவெழுச்சி எதிர்வினைகளை மதிப்பிடப் பயன்படுத்தப்படுகின்றது. ஜோன்ஸ் (Jones), சில குழந்தைகள் வெளிப்புற நடத்தையில் மிகவும் கிளர்ச்சியடைபவர்களாக இருந்தாலும், மின்னாற்றல் சோதனையில் குறைவான எதிர்வினையே கொண்டிருப்பதாக அறிவிக்கின்றார்.[5] வயதுடன் காணப்படுகின்ற மன்வெழுச்சிக் கட்டுப்பாட்டின் கூடுதல் புறவயத் துலங்கலிலிருந்து அகவயத் துலங்கலுக்கு மாறுவது இவ்வாறு

[4] D. B. Lindsey, 'Emotion', Handbook of Experimental Psychology, S. S. Stevens (ed.), New York: John Wiley and Sons, 1951.

[5] H. E. Jones, 'The Study of Patterns of Emotional Expression' in Reymert, E. L., (ed.), Feelings and Emotions, New York: McGraw-Hill Book Co., 1950, Chap. 13.

உணர்த்தப்படுகின்றது. வெளிமனவெழுச்சி நடத்தையைப் பெருமளவு கட்டுப்படுத்துவதனுல் இம்முடிவு ஏற்படுகின்றது. இது சமூகக் கண்டனத்திற்கும் தண்டனைக்கும் கொண்டுசெல்கிறது.

கலிஃபோர்னியா பல்கலைக் கழகத்தில் நடத்தப்பட்ட இளையோர் வளர்ச்சி ஆய்வில் 12 வயது முதல் 18 வயதுவரையுள்ள குழுக்கள் உற்றுநோக்கப்பட்டன.[6] இக்குறிப்புகள் பல்வேறு சமூகப் பண்புகளைப் பற்றித் தரப்பட்ட சொந்த, தனிக் கருத்துகளின் தரமிடல்களைக் கொண்டு இருந்தன. இப்பருவத்தில் 11 பரிசோதனைத் தேர்வுகள் நடத்தப்பட்டன. உள்ளங்கையிலிருந்து முன்கை வரையிலுள்ள தோலின் தாங்கும் சக்தியிலுள்ள மாறுதல்கள், நாடித்துடிப்புகள், குறைந்த அளவு அழுத்தமுள்ள நிகழ்ச்சியில் ஏற்படும் மூச்சுவிடுதலிலுள்ள மாறுதல்கள் ஆகியவற்றைக் கட்டற்ற இயைபுச் சோதனை மூலமாகப் பல்செயல் வரைவுக் குறிப்புகள் எடுக்கப்பட்டன. இவ் வரலாறுகள் உயர்ந்த எதிர்வினை, தாழ்ந்த எதிர்வினை கொண்ட இரு திறக் கோடிகளாகப் பிரித்து, சராசரி GSR அளவின் துணைகொண்டு வரிசையாக வைக்கப்பட்டன. இது இளையோர் பருவத்தில் ஏற்படும் அகவய-புறவயத் துலங்கல்களுக்கிடையே உள்ள உறவினைப்பற்றிய குறிப்புகளைத் தருகின்றது.

விளையாட்டு அரங்கங்களில் மற்ற, கட்டற்ற இயைபுத் தொடர்புகளில், சமூக நடத்தைத் தரங்கள் GSR சோதனைகளின் மூலமாக கணக்கிடப்பட்டு, அதிலுள்ள உயர்ந்த தாழ்ந்த எதிர்வினைகள், வரைபடம் 5—1-ல் ஒப்பிட்டுப் பார்க்கப்படுகின்றன.[7] முதலாவதாகக் குறிப்பிடத்தக்கவாறு காணப்பட்ட உண்மை, இக்குறிப்புகளிலிருந்து காணப்படுவது யாதெனின், உயர்ந்த எதிர்வினைக் குழு தாழ்ந்த எதிர்வினைக் குழுவைக் காட்டிலும் குறிப்பிடும்படியாக வெளிமனவெழுச்சி நடத்தையில் தாழ்வாகக் காட்டுகின்றது என்பதே. அவர்கள் சமூக நடத்தையில் அதிகமாகப் பேசாமலும், குறைவான எழுச்சியுடனும், அதிகமாகக் கவனத்தை ஈர்க்காமலும், நடத்தையை அதிகமாக வற்புறுத்தும் தன்மை இல்லாமலும் இருந்தார்கள். அதிகமான எதிர்வினை கொண்டோரில் 85-லிருந்து 95 விழுக்காட்டினர்வரை, சராசரி குறைந்த எதிர்வினையுடையோரைக் காட்டிலும் அதிகமான அமைதியானவராகவும், மிகுதியான கூட்டுறவு உடையவராகவும், அமைந்து

[6] H. E. Jones, 'Principles and Methods of the Adolescent Growth Study', Journal of Consulting Psychology, 1939, Vol. 3, pp. 172-180.

[7] H. E. Jones, 'The Study of Patterns of Emotional Expression,' p. 165. By permission from Feelings and Emotions, by E. L. Reymert (Editor). Copyright 1950 by McGraw-Hill Book Co.

இருப்பவராகவும், மிகுதியான நல்ல தன்மை உடையவராகவும், மிகுதியான பொறுப்புடையவராகவும் தரமிடப்பட்டனர்.

## இளையோருடைய மனவெழுச்சி வெளிக்காட்டுதல்கள்

தனியன் சூழ்நிலைக்குப் புதுமுகப்படுத்திக் கொள்ளுதலினால் பூப்படையும் காலத்தில் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் தோன்றுகின்றன. குழந்தை, இளையோர் பருவத்தை அடைந்து பால்முதிர்ச்சியை நோக்கிச் செல்லும்போது இம்மாறுதல் ஏற்படுகின்றது. இம்மாறுதல் இவ்வயதில் தோன்றுகின்ற அக்கறைகளின் மாறுதல்களில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. அது அதிகாரம் எட்டில் விவரமாக விளக்கப்பட்டுள்ளது. இக்காலத்தில் மனவெழுச்சிகளின் வெளிக்காட்டுதல்களின் செறிவு குறைவாயுள்ளது. குழந்தை, திரைப்படங்களில் வருகின்ற அபாயங்களுக்கும் திடுக்கிடுதல்களுக்கும் காட்டுகின்ற எதிர்வினைகள், அதிகமாகச் செறிவின்றிக் காணப்படுகின்றன. இதற்கு மாறாகக் குழந்தைகளும் முன் இளையோர்களும், திரைப்படங்களிலும் அல்லது

திட்ட அளவுகள்

35 40 45 50 55 60 65

கவனத்தைத் தேடுவது

ஓயாமல் பேசிக்கொண்டிருத்தல்

கிளர்ச்சி

தன்முனைப்பு

அதிகமான எதிர் வினைகள்

குறைவான எதிர் வினைகள்

*படம் 6-1*

*சமூக நடத்தையிலுள்ள அதிகமான, குறைவான எதிர்வினைகளை ஒப்பிடுதல் (ஜோன்ஸ் அளித்தது).*

தொலைக்காட்சிகளிலும் வருகின்ற திடுக்கிடுதல்களுக்கும் அபாயங்களுக்கும் தீவிரமாக எதிர்வினை தருவார்கள். ஆனால், ஒப்பீட்டடிப்படையில் காதல் புரியும் காட்சிகளுக்குக் குறைவான துலக்கங்களையே தருகின்றனர். இது ஓர் 9 வயதுச் சிறுவனது எதிர்வினையின் மூலமாகத் தெளிவாகத் தெரிகின்றது. அவனுடைய தந்தை அவனிடம் சனிக்

கிழமை மாலையில் பார்க்கும் திரைப்படத்தைப் பற்றிய கேள்வியினைக் கேட்டார். 'நீ எந்தத் திரைப்படத்தைப் பார்க்க விரும்புகிறாய்?' என்று வினவினார். மகன் அதற்கு, 'நாம் அதிகமான குதிரைச் சவாரியும் துப்பாக்கி சுடும் நிகழ்ச்சிகளுமுள்ள திரைப்படத்திற்குச் செல்வோம். எமக்கு இந்தக் காதல் கதைகளே பிடிப்பதில்லை' என்று பதில் தருவான். ஆனால், நான்கு அல்லது ஐந்து ஆண்டுகளுக்குப் பின்னர், பாலியல்பூக்கம் முதிர்ச்சியடைவதற்கு முன்னால் கதை முற்றிலும் மாறியிருக்கும்.

**இளையோர் அச்சங்கள்**

மிருகங்கள் பற்றிய அச்சங்களும், மற்ற உடனடியாக உள்ள சூழ நிலையில் புலனாகும் பொருள்கள் பற்றிய அச்சங்களும் குழந்தை 5-லிருந்து 12 வயதுவரை வளரும்பொழுது குறைவாகவே தோன்றுகின்றன. ஆனால், இருட்டு, இரவில் தனியாக இருத்தல் ஆகியவை பற்றிய அச்சங்கள் அதிகமாகின்றன. இளையோர் பருவத்திற்கு முதிர்ச்சியடையும்போது சமூகத் தனிமையான அச்சங்கள் முதன்மை பெறுகின்றன. ஹிக்ஸ், ஹேயூங் நடத்திய ஆய்வில் 250 ஜூனியர் உயர்நிலைப் பள்ளி மாணவர்களில் 50 விழுக்காட்டினர் ஏதாவது சில வற்றின்மீது அச்சங் கொள்வதாகக் கூறினர்.[8] இவ்வாறான அச்சங்களை அவர்களுக்கு அடிக்கடி தோன்றுகின்ற அளவு வரிசையில் கூறினால் பாம்புகள், நாய்கள், இருட்டு, புயல், எதிர்பாராது நிகழ்பவை, உயர்ந்த இடங்கள் கேட்டறியாத ஒலிகள், வீட்டில் தனித்திருத்தல் முதலியவை எனலாம். இது குழந்தைப் பருவத்தில் உள்ள சில அச்சங்கள் இளையோர் பருவத்திலும் தொடர்கின்றதென்பதைக் குறிக்கின்றது. மேலும், அவ்வச்சங்கள் வாழ்க்கை முழுதும் தங்கிவிடுகின்றன என்பதற்குச் சான்றுகள் உள. மூதத இளையோர்கள் சமூக அனுமதி, பள்ளியில் தோல்வி, மற்றவர்கள் விரும்பமாட்டார்கள் என்ற அச்சம், ஒப்பாருடைய தொடர்புகள் பற்றிய அச்சங்கள் ஆகியவை களைப் பற்றிக் கவலை கொள்ளுகின்றனர். இளையோர்களது அச்சங்களைப் பொதுவாக மூன்று பொதுக் குழுக்களாக வகைப்படுத்தலாம்.

(1) ***சடப்பொருள்களைப் பற்றிய அச்சங்கள் :*** இவை துவக்கக் குழந்தைப் பருவ அச்சங்களான நாய்கள், பாம்புகள், புயல் போன்றனவாகும்.

(2) ***தன்னைப் பற்றிய அச்சங்கள் :*** இவை இறப்பு, பள்ளியில் தோல்வி, போதிய தகுதிக் குறைவு, புகழுடைதல் போன்றனவாம்.

[8] J. A. Hicks and M. Hayes, 'Study of the Characteristics of 250 Junior-High School Children,' Child Development, 1938, Vol. 9, pp. 219-242.

(3) *சமூகத் தொடர்புகள் பற்றிய அச்சங்கள் :* இவை மலைக்கச் செய்தல், சமூக நிகழ்வுகள், மக்களைச் சந்தித்தல், தன்னைக் காட்டிலும் முதிர்ச்சியடைந்த குழுவினைச் சந்தித்தல், விருந்துகள், நாளிடல்கள் போன்றனவாகும்.

### மனமுறிவு—தாக்கும் மனப்பான்மைக் கருதுகோள்

கோப மனவெழுச்சி, குறிக்கோளை நாடும் செயலில் மனமுறிவின் விளைவாக ஏற்படுகின்றது என்ற கருத்தினைக் கிடைத்துள்ள சான்றுகள் சார்ந்திருக்கின்றன. சான்ருக, ஒருவர் பசியுடனுள்ள குழந்தை முன்பு பால் புட்டியைக் காட்டிவிட்டுத் தராமலிருந்தால், குழந்தையின் கோபம் தாக்கும் நடத்தை வகையைக் கைக்கொள்கின்றது. மாணவன், குழுவிலிருந்து வெளியேற்றப்படும்பொழுது கோபமுறுகின்ருன். கல்லூரி மாணவி அவளுடைய சிறப்பு விருந்து நாளிடல் (Dinner Date) தோன்ருவிடில் கோபமுறுகின்ருள். கார் விற்பவர் எவராகிலும் தனது பொருளை மிகவும் குறை கண்டு அதனுல் விற்பனையை இழப்பாராயின் கோபமுறுகின்ருர்.

மெல்ட்செர் (Meltzer), கல்லூரி மாணவர்களிடமிருந்து ஒரு வார காலத்தில் கோபத்தை உண்டாக்குகின்ற நிகழ்வுகள் அல்லது நிலைகளைப் பற்றிய முக்கியமான குறிப்புகளைச் சேகரித்தார்.[9] வரிசைப் படுத்தப்பட்ட நிகழ்வுகளில் 86 விழுக்காட்டினர் மன முறிவுகள் தொடர்புடன் இருந்தனர். அட்டவணை 5—1-ல் தரப்பட்டுள்ளவாறு மிகச் சிறிய அளவு விழுக்காடே உடலுறுப்புத் தேவைகளினுல் மன முறிவுகள் ஏற்பட்டன. கல்லூரி மாணவர்களில் பெரும்பான்மையோரின் மனமுறிவுகள் பொருள்களைப் பற்றியனவாய் இருந்தன. கல்லூரி மாணவிகளில் 64 விழுக்காட்டினருக்கு மேலுள்ளவரது மன முறிவுகள் மக்களைப் பற்றியனவாய் இருந்தன.

### மனவெழுச்சி நடத்தையில் மாறுதல்கள்

குழந்தைப் பருவத்தின் துவக்கத்தில், கோபம் அச்சம் ஆகியவை உண்டாக்குகின்ற நிகழ்வுகள் அல்லது நிலைகள், சூழ்நிலை முதிர்ச்சியடையும்பொழுதும் புது அனுபவங்களைக் கற்கும்பொழுதும் தங்களது சக்திகளை இழந்துவிடுகின்றனர்.

[9] H. Meltzer, 'Students Adjustments in Anger', Journal of Social Psychology, 1933, Vol. 4, pp. 285-309.

அட்டவணை 5—1

கல்லூரி மாணவர்கள் ஆண், பெண்பாலாரிடத்துத் தோன்றுகின்ற மனமுறிவுகளும் கோபமும்.

| | ஆண்கள் (விழுக்காடு) | பெண்கள் (விழுக்காடு) |
|---|---|---|
| தன்னிலை வலியுறுத்தலின் குலைத்தல் (Thwarting): | | |
| மக்களிடத்துக் காட்டும் தற்காப்பு எதிர்வினைகள் ... ... | 29 | 45 |
| மற்றவர்களிடத்துச் சண்டைக்குச் செல்லும் எதிர்வினைகள் ... | 7 | 19 |
| பொருள்களிலிருந்து காட்டும் தற்காப்பு எதிர்வினைகள் ... | 47 | 26 |
| உடலுறுப்புத் தேவைகளின் குலைத்தல் ... ... ... | 6 | 5 |
| சிக்கலான நிகழ்ச்சியினால் குலைத்தல் | 12 | 5 |

மேலும், இம்முதிர்ச்சியும் கல்வி வளர்ச்சியும் புது அச்சங்களைக் கொணர்வதற்கும், சில முன்னைய நடத்தை வகைகளை விரிவாக்குவதற்கும் காரணமாகின்றன. இளங்குழந்தைகள் விரைவில் பிடிவாதப் போக்கு (Temper Tantrum) எனும் மனவெழுச்சியினை வெளிக்காட்டும் தன்மையைப் பெறுவதாக உற்றுநோக்கல்கள் காட்டுகின்றன. பல சமயங்களில் அவை கடுமையான வகையில் துலங்காமல் நுட்பமாகவும் துலங்குகின்றன. சில ஆய்வாளர்களால் இம்மாறுதல்கள் உற்று நோக்கப்பட்டுக் குறிக்கப்பட்டுள்ளன. வரைபடம் 5—2, நான்கு வகையான நடத்தைகளிலுள்ள மாறுதல்களைக் குறிக்கின்றது.[10] இங்குத் தரப்பட்டுள்ள கண்டுபிடித்தலின்படி 7, 8 வயதுகளில் சண்டையிடல் உச்சநிலையை அடைவதாகவும், அதற்குப் பின்னர் துரிதமான சரிவு ஏற்படுவதாகவும் தெரியவருகின்றது. 13, 14 வயதுகளுக்குப் பின்னர் நாணமடைதலும் குறிப்பிடும்படியான சரிவைப் பெறுகின்றது. இதற்கு மாருகக் குழந்தைப் பருவ முழுவதிலுமே துடுக்குத்தனமும் உம்மென்று இருத்தலும் தொடர்ச்சியான உயர்

[10] W. E. Blatz, S. N. F. Chant, and M. D. Salter, Emotional Episodes in the Child of School Age. University of Toronto Studies, Child Development Series, No. 9, 1937.

வைப் பெறுகின்றன. நாணமடைதலின் உயர்வு முன்னிளையோர் பருவத்திலும் இளையோர் பருவத் துவக்கத்திலும் அதிகமாய் இருத்தல், இளையோர் பருவம் தோன்றும்பொழுது உடன் ஏற்படுகின்ற சமூக உணர்வின் வளர்ச்சிக்கும் சமூக அனுமதிக்கு ஆசைப்படுவதற்குமான நிலையோடு நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது.




பள்ளி மாணவர்களின் உண்மை வயதுடன் நடத்தையில் ஏற்படும் மாறுதல்கள்.

(பிளேட்ஸ் தந்தது)

படம் 5—2

இளையோர் பருவத்தினரிடம் வகுப்பில் ஒப்பிப்பதற்கு அச்சங் கொள்வது பொதுவாகக் காணப்படுகின்றது. இது சிறுமியர்களைக் காட்டிலும் சிறுவர்களிடம் மிகவும் குறிப்பிடும்படியாகக் காணப்படுகிறது. இப்பருவத்தில் சிறுவர்களின் பெரும்பான்மையான விழுக்காட்டினரிடம் காணப்படும் குரல் மாற்றங்கள் ஒருவேளை இதற்குக் காரணமா

யிருக்கலாம். வகுப்பு வேலை இயங்குகின்ற முறை ஒழுக்கமே இளையோரிடத்து அச்சத்தை ஊட்டுகின்றது. மாணவர்களை நிற்கும்படி கூறி ஒப்புவிக்கவும், கிளிப்பிள்ளை போன்று பதில் சொல்லும் வகையைக் கைக்கொள்ளச் சொல்லும்பொழுது கூச்சமும் நாணமும் பெருமளவில் காணப்படுகின்றன. வகுப்பறைச் சூழ்நிலையில் அச்சங்களைத் தோற்றுவிக்கின்ற மற்றேர் ஏது தேர்வாகும். பெற்றேர், ஆசிரியர் அளித்திடும் அழுத்தங்களும், ஒப்பார் அதிக மதிப்பெண்களைப் பெறுவதற்கு முயல்வதும், அவ்வச்சங்களை உண்டாக்கவல்ல முக்கிய ஏதுக்களாகும். அச்சம் போதிய அளவு செறிவுடன் இருக்கும்பொழுது, கற்றலும் ஒப்புவித்தலும் மிகவும் தீங்கான வகையில் பாழாக்கப்படுகின்றன. நல்ல தரங்களையும் மதிப்பெண்களையும் பெறுவதன் மூலம் தேர்வில் அதிக எண்ணிக்கைகள் பெறுவதற்கு அளிக்கப்படும் முக்கியத்துவத்தின் அழுத்தம் முனைப்பினை உண்டாக்குகின்றது. ஓரளவு பற்றுர்வத்தையும் முனைப்பையும் தடுக்க முடியாது. ஒருவேளை உண்மையில் அதனால் பயனும் விளையலாம். இருப்பினும், ஆசிரியர்களும் பெற்றேர்களும் தேர்வுகளைப் பற்றிய செயலிலும் தன்மையிலும் மாணவர்களின் நோக்குகளின் வளர்ச்சிக்குப் பெருமளவு உதவிசெய்யலாம். இது பற்றுர்வத்தையும் முனைப்பையும் குறைத்துச் சிறந்த, சொந்த, சமூகப் பொருத்தப்பாடுகளை ஏற்படுத்துவதற்கும் உதவும்.

### இளையோர்களின் கவலைகள்

முன்னிளையோர், இளையோர், பின்னிளையோர் ஆகியோரது கவலைகளைப்பற்றிப் பல ஆய்வுகள் நடந்திருக்கின்றன. நியூயார்க் நகரத்தில் 5, 6ஆவது படிவத்திலுள்ள 540 குழந்தைகளுக்கு ஓர் ஆய்வில் 'கவலைகளைக் கண்டுபிடித்தல்' முறை (worries inventory) கொடுக்கப்பட்டது. இக்கண்டுபிடிக்கும் முறை 58 பொருள்களைக் கொண்டிருந்தது.[11] இவைகளை எட்டுப் பதார்த்தங்களாகப் பிரித்தபொழுது, இருபாலாரும் குடும்ப, பள்ளி நிலைகளையும் நிகழ்ச்சிகளையும் பற்றிக் கவலைப்படுவதாகக் காணப்பட்டது. அடுத்து, கவலைப்படும் ஏதுக்கள் தனியன் போதிய தகுதி பெற்றிருத்தல், பொருளாதாரப் பிரச்சினைகள், ஆரோக்கியப் பிரச்சினைகள் என்று குழுக்களாகப் பிரிக்கப்பட்டன. கற்பனை, அலங்காரம், பொருள் பற்றிய கவலை ஆகியவை சிறிதளவே காணப்பட்டன. அட்டவணை 5—2-ல் சிறுவர்வர்களுக்கும் சிறுமிகளுக்கும் அதிகமான தரமுடைய கவலைகள், அவைகள் தோன்றும் அளவின்படி வரிசையாகத் தரப்பட்டுள்ளன.

[11] R. Pintner and J. Levy, 'Worries of School Children', Journal of Genetic Psychology, 1940, Vol. 56, pp. 67-76.

## அட்டவணை 5—2

கவலைகளின் கண்டுபிடிப்பில், சிறுவரும் சிறுமியரும் அதிகமாக அடிக்கடி கவலையுறும் ஏதுக்கள் என்று கூறியவற்றை, அவைகள் தோன்றும் அளவின் வரிசைப்படி தரப்பட்டுள்ளது. (பின்ட்னர், லெவி தந்தவை.)

| சிறுவர்கள் | சிறுமியர்கள் |
|---|---|
| சோதனையில் தோல்வியடைதல். | சோதனையில் தோல்வியடைதல். |
| தாயார் அதிகமாக வேலை செய்தல். | தாயார் அதிகமாக வேலை செய்தல். |
| செய்யாத ஒன்றிற்காகக் குற்றச் சாட்டுக்கு உள்ளாதல். | தாயார் உடல்நலமின்றி இருத்தல். |
| தந்தை கடினமாக உழைத்தல். | பள்ளிக்கு நேரங்கழித்து வருதல் |
| மோசமான தகுதி அறிக்கை அட்டையை வைத்திருத்தல். | உடல்நலமின்மை. |
| மற்றவர்கள் திட்டுகிருர்கள். | தந்தை கடினமாக உழைத்தல். |
| நல்ல துணிகள் அழுக்கடைதல். | மற்றவர்கள் திட்டுகிருர்கள். |
| தன்னைப்பற்றி மற்றவர்கள் பொய்யானவற்றைச் சொல்கிருர்கள். | செய்யாத ஒன்றிற்காகக் குற்றச் சாட்டிற்குள்ளாதல். |
| உடல்நலமின்மை. | தவறிழைத்தல். |
| தவறு செய்தல். | தந்தை உடல்நலமின்றி இருத்தல். |

அச்சம் கவலையின் அடிப்படையென்று கவலையைப்பற்றிய ஏதுக்களின் தீவிரமான ஆய்வு காட்டுகிறது. குழந்தை, பள்ளிக்கு முன் உள்ள வயதிலிருந்து ஆரம்பப் பள்ளி வயதிற்குச் செல்லும் பொழுது தோல்வியைப் பற்றிப் பெருமளவு பற்ருர்வம் தோன்றுகிறது. துவக்க அச்சங்கள் உடற்காயங்களால் ஏற்படுகின்றன என்று முன்னரே கூறப்பட்டது. ஆனல், குழந்தை புரிந்துகொள்வதிலும், வெவ்வேருன சமூக நிகழ்ச்சிகளுக்கு எதிர்வினை தருவதிலும் வளர்ச்சியடைவதினால், அவன் குழுவில் தனது அந்தஸ்து பற்றிய பற்ருர்வுங்களையும்

அச்சங்களையும் வளர்த்துக் கொள்கிறான். இது உடற் காயங்களைப் பற்றிய துவக்க அச்சங்களைத் திடீரென்று தள்ளிவிட்டதென்று பொருள்படக் கூறவில்லை. ஜீலிக்ஸ் (Zeligs), 6ஆவது படிவத்தினர் உடற் காயங்கள், ஆரோக்கியம், தரம், பள்ளியில் மேல் வகுப்புத் தேர்தல் ஆகியவற்றைப்பற்றி அடிக்கடி கவலையுற்றதாகக் கண்டார்.[12] இளையோர் பருவத்திற்கு வளர்ச்சியடையும் பொழுது சிறுவர் சிறுமியர் தோற்றம், புகழ் பெறுதல், பால் தன்மை பற்றிப் போதிய தகுதியின்மை ஆகியவற்றைப் பற்றிய பற்றுர்வங்கள் உடன் வருகின்றன. லுன்ஜர் (Lunger), பேஜ் (Page) நடத்திய ஆய்வு பின்னிளையோரின் கவலையைப் பற்றி அக்கறை கொண்டது.[13] இருபாலாரிலும் 100 கல்லூரி நுழைவு ஆண்டு மாணவர்களுக்கு 78 உறுப்புகள் கொண்ட கவலைக் கண்டுபிடிப்பு தயார் செய்து தரப் பட்டது. உறுப்புகள் கீழ்க்கண்ட மூன்று வழிகளில் ஒன்றின் மூலம் பதிலளிக்கும் வகையில் அமைக்கப்பட்டன. அவ்வழிகள் : மிக அதிகமாக ; சில சமயங்களில் ; எப்பொழுதும் இல்லை. கவலைகள் தோன்றுவதிலும், செறிவைக் குறிப்பதிலும் பால் மாறுபாடுகள் கவ னத்தை ஈர்க்கின்ற அளவில் இல்லை. அவர்கள் குறிப்பிடுவது ஏறத் தாழ சரிபாதியினர் கீழ்க்கண்ட உறுப்புகளில் கவலை தெரிவித்தனர். பொதுச் சமயச் சிக்கல்கள், உடற்குறைகள், சந்திப்புக்கு நேரங் கழித்து வருதல், குடும்பக் கட்டுப்பாடுகள், நண்பர்களைப் பெற இய லாமை, தொழில் வெற்றி என்பனவாகும். இங்கு நாம் பொறுப்பு களைப் பற்றியும், தொழில் வெற்றி பற்றியும் 5ஆவது 6ஆவது குழந் தைகளைக் காட்டிலும் அதிகக் கவலையிருப்பதைக் காண்கிறோம். இது சமூக முயற்சியைப் பற்றிய தெளிவான சான்றாகும். அட்டவணை 5—3-ல் அதிகமாக அடிக்கடி கவலைப்பட்ட உறுப்புகளைப் பற்றியும், குறைந்த அளவில் கவலைப்பட்ட உறுப்புகள் பற்றியும் குறிப்பிடப் பட்டுள்ளன. இவ்வாய்வு 5, 6ஆவது படிவ மாணவர்களது கவலை களின் தன்மையையும் ஒப்பிட்டுப் பார்ப்பதற்குரிய அடிப்படையைத் தருகின்றது. ஆனால், இளைஞர்களது கவலைகளைப் பற்றிய கணித்த பொதுமைகளைத் தயாரிப்பதற்குரிய நம்பகமான அடிப்படையைத் தருவதில்லை. ஒரு கல்லூரிக் குழு ஒரு தேர்ந்தெடுக்கப்பட்ட குழுவா கும். கீழான சமூகப் பொருளாதார நிலையிலிருந்து வரும் மாணவர்கள் மிகவும் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாதலின், அக்குழுவின் மாதிரி இளைஞர்களைக் குறிப்பதாக இல்லை. பணக்கவலைகளும், குடும்ப நிலை பற்றிய கவலைகளும், பெற்றோர்களது தொல்லைகளும் கீழான பொருளா தாரக் குழுக்களிலிருந்து வரும் இளைஞர்களிடம், நடுத்தர உயர்ந்த

[12] R. Zeligs, 'Children's Worries', Sociological and Social Research, 1939, Vol. 24, pp. 22-32.

[13] R. Lunger and J. D. Page, 'Worries of College Freshmen,' Journal of Genetic Psychology, 1939, Vol. 54, pp. 454-460.

பொருளாதாரக் குழுக்களிலிருந்து வரும் இளைஞர்களைக் காட்டிலும் அதிகமாகக் காணப்படும் என்று எதிர்பார்க்கலாம்.

## பரிவுகாட்டல் (Expression of Sympathy)

பரிதல் அல்லது பரிவு காட்டுதலுக்கான திறனின் வளர்ச்சி, முதிர்ச்சியினாலும் பட்டறிவினாலும் விளைகின்ற ஒன்றாகும். சிறு குழந்தை அதன் தாயார் அழுகின்றபோது அழலாம். ஆனால், பல நிகழ்ச்சிகளி

### அட்டவணை 5—3

அதிகமான, குறைவான கவலைகளின் விழுக்காட்டினை உண்டாக்கும் உறுப்புகள்.

| | தனிப்பட்ட கவலைகளைக் குறிப்பிடும் விழுக்காடு | |
|---|---|---|
| அதிகமான அளவு நுழைவு ஆண்டுக் கல்லூரி மாணவர்கள் கவலையுற்றவை : | ஆண் | பெண் |
| 1. அவர்கள் விரும்புகின்ற அளவில் அவர்களது வேலையில் வெற்றி பெறவில்லை ... | 94 | 89 |
| 2. மற்றவர்களது உணர்வுகளைத் துன்புறுத்தல் | 85 | 85 |
| 3. அவர்களுள் மற்றவர்களிடம் தங்களைப் பற்றிய எண்ணத்தை உண்டாக்குதல் ... | 76 | 84 |
| 4. போதிய அளவு கடினமாக உழைக்காமை | 80 | 76 |
| குறைவான அளவு நுழைவு ஆண்டினர் கவலையுற்றவை : | | |
| 1. அவர்கள் வளர்ப்புப் பிள்ளைகளாக இருக்கக் கூடுமென்பது ... ... ... | 3 | 0 |
| 2. பிறழ்வு நிலையை அடைவோம் ... ... | 2 | 4 |
| 3. இறப்பு ... ... ... ... | 9 | 9 |
| 4. வயதானவர்களாக ஆகுதல் ... ... | 14 | 6 |
| 5. அவர்களுடைய இல்லங்கள் நண்பர்களை அழைத்து விருந்தளிக்க முடியாத அளவுக்கு அருவருப்பாயிருத்தல் ... ... | 51 | 4 |

லும் பிரச்சினைகளிலும் அவனுடன் பரிவைக் காட்டுகின்ற திறனில் பின்தங்கி இருக்கலாம். இளையோர் சிறுவர்களைப் பற்றியதோர் ஆய்வில் கீழான சமூகப் பொருளாதார நிலையிலிருந்து வருகின்ற சிறுவர், நல்ல சமூகப் பொருளாதார நிலையிலிருந்து வருவோரைக் காட்டிலும் மற்றேரது உணர்ச்சிகளுக்கு மிகவும் குறைவான கூருணர்ச்சியே கொண்டுள்ளதாகக் கூறுகின்றது.[14] இருப்பினும், இளையோர் சிறுமிகளிடத்து அதிகமான மாறுதல்கள் காணப்படவில்லை. கீழான அந்தஸ்திலிருந்து வளர்கின்ற சிறுவர்களிடத்துக் காணப்படுகின்ற பரிவின்மை, இவர்களை எதிர்த்து நிற்கின்ற பொருளாதாரப் போராட்டத்திலிருந்தும் கடும் போட்டியிலிருந்தும் கிளையாகப் பிரிந்து, இவர்களைப் பரிவுகாட்டா வண்ணம் அமுக்கிவைத்திருந்து, 'ஒவ்வொரு மனிதனும் தனக்காக வாழ்கின்ற' நோக்கினை மேற்கொள்ளச் செய்கின்றது. அதிகக் கூருணர்ச்சி உடைய இளையோர்கள், அவர்களுடைய ஒப்பாரிடம், குறைவான கூருணர்ச்சியுடையோரைக் காட்டிலும் மிகவும் புகழ் வாய்ந்தவர்களாக விளங்கினர். அவர்கள் கருத்துநிலை, அழகியல், பரிவு ஆகிய தலைப்புகளுள்ள நூல்களில் அதிகமான அக்கறைகள் காட்டினர்.

## பழக்கங்களும் கட்டுப்பாடும் (Habits and Control)

மனவெழுச்சி நலத்தின் முக்கியத்துவத்திற்கும், ஆளுமைப் பொருத்தப்பாடுகளுக்கும், மனநலத்திற்கும் உள்ள தொடர்பு குறித்துப் பின்னுல் வருகின்ற அதிகாரங்களில் தனி முக்கியத்துவம் தரப்படும். வளர்ச்சியின் எல்லா நிலைகளும் இடைத் தொடர்பு கொண்டிருப்பதனுல், குழந்தையின் மனவெழுச்சி வளர்ச்சி, அவனது உடல், மன, சமூக வளர்ச்சியைப் பாதித்தும் பாதிக்கப்பட்டும் வந்துள்ளது. இவ்வாறு தனியனது மனவெழுச்சி வாழ்க்கையும் நடத்தையும் உடலியல் மாறுதல்களினுலும், சமூகத் தொடர்பினுலும், கட்டுப்பாடுகளினுலும் பாதிக்கப்படுகின்றது என்று கண்டுள்ளோம்.

### மனவெழுச்சி வளர்ச்சியும் சமூக வளர்ச்சியும்

குழந்தையில், உடல் சமூக சூழ்நிலையிலுள்ள பல ஏதுக்கள், அவனது மனவெழுச்சி சமூக வளர்ச்சியினைப் பாதிக்கின்றன. அதிகாரம் எட்டில் சமூக வளர்ச்சிப் பயனைப் பாதிக்கின்ற வகுப்பு அந்தஸ்தின் முக்கியத்துவத்தைப் பற்றி விவாதிக்கப்படும். எல்லாத் தனியன்களிடத்தும் ஒரே மாதிரியான மனவெழுச்சிப் பிரதியை வகுப்பு அந்தஸ்து

[14] W. Loran, 'A Study of Social Sensitivity (Sympathy) among Adolescents,' Journal of Educational Psychology, 1953, Vol. 44, pp. 102-112.

உண்டாக்குவதில்லை. ஒரு வகுப்புக் குழுவிலுள்ள வெவ்வேறு உறுப்பினர்களாலும் சில பட்டறிவுகள் பொதுவாகக் கவனத்தை ஈர்க்கின்ற தன்மையில் அமைகின்றன. டேவிசும் (Davis), டோலார்டும் (Dollard) தெற்குக் கோடியிலுள்ள 100 நீக்ரோ இளைஞர்களைக் கொண்டு பகுத்தாய்ந்ததில், கீழான வகுப்புக் குழுவின் பெற்றோர்கள் உடல் தண்டனையில் உயர்ந்த வகுப்புக் குழுவின் பெற்றோர்களைக் காட்டிலும் அதிகமாக நம்பினர்.[15] மேலும் பல ஆய்வாளர்கள், சேரிகளிலிருந்து வருகின்ற குழந்தைகள் நல்ல நிலையிலிருந்து வருவோரைக் காட்டிலும் அதிகமாகச் சண்டைகளில் ஈடுபடுவதாகக் கண்டனர்.

கீழான வகுப்பிலிருந்து வரும் குழந்தைகள் அனைத்துமே மனவெழுச்சிக் கட்டுப்பாட்டில் பின்தங்கி இருப்பதாகக் கொள்ளலாகாது. இது குறித்து டேவிஸ், டோலார்டு சமூக வகுப்புகளில் ஒவ்வொன்றிலும் உள்ள குழந்தைகள் வெவ்வேறு வகுப்புகளில் இருப்போரைக் காட்டிலும் அதிகமான மாறுதல்களைக் கொண்டிருந்தனர் என்று குறிப்பிடுகின்றனர். இவ்வாறு குடும்ப நிலைகளும் உடலியல் ஏதுக்களும் ஒவ்வொரு வகுப்பிலுள்ளோரும் கொள்ளும் மனவெழுச்சி வெளிக்காட்டல்களிலும் குறிப்பிடும்படியான மாறுதல்களை உண்டாக்குகின்றன. எல்லா வகுப்புக் குழுக்களிலும் சிறிதளவு மனவெழுச்சி முனைப்பும் இல்லாது இன்பமாய் இருக்கின்ற குழந்தைகள் உள்ளன என்பதில் ஐயமில்லை. இன்பமிலாக் குடும்பங்கள் இருப்பதுபோன்று எல்லா வகுப்புக் குழுக்களிலும் முனைப்புடன் கூடிய சண்டையிடும் இல்லங்களும் உள்ளன. இருப்பினும், ஹைடும் (Hyde), கிங்ஸ்லியும் (Kingsley), தாழ்வான நிலையிலுள்ளோர் உயர்ந்த நிலைகளில் வாழ்வோரைக் காட்டிலும் குறிப்பிடும்படி கூடுதலான மனக்குறைபாடு உடையவர்களாகவும், சமூகத்திலுள்ளோரிடம் உளநோய் ஆளுமையுள்ளவர்களாகவும் உள்ளதைக் காட்டும் குறிப்புகளைத் தருகின்றனர்.[16] இளையோரது மனவெழுச்சிப் பழக்கங்கள் பல ஏதுக்களால் பாதிக்கப்படுகின்றன. குறைபாடுடைய இல்லமும் சமூக நிலைமைகளும், நல்ல ஆரோக்கியமான மனவெழுச்சி வளர்ச்சியில் உடல்நலனுக்குக் கேடான விளைவுகளை உண்டாக்கி, மனவெழுச்சி நிலையாமைக்கும் ஆளுமைத் தொந்தரைகளுக்கும் காரணமாகலாம்.

[15] A. Davis and J. Dollard, Children of Bondage: The Personal Development of Negro Youth in the Urban South. Washington: American Council on Education, 1940.

[16] R. W. Hyde and L. V. Kingsley, 'Studies in Medical Sociology. 1. The Relation of Mental Disorders to the Community Socio-economic Level', 'New England Journal of Medicine, 1944, Vol. 231, pp. 543-548.

## செயற்படுதற்கு உந்துகளாகப் பழக்கங்கள் அமைதல்

இளையோரது ஆய்வில் இத்தலைப்பின் முக்கியத்துவத்தை அதிகமாக வலியுறுத்த முடியாது. சமூகத் தன்மையான பழக்கங்கள் பின்னிளையோர் பருவத்தில் உருவாகின்ற நிலையிலுள்ளன. தனியனது மனவெழுச்சிநிலை செயற்படுவதற்குரிய உந்துவாகக் கருதும் பொழுது, மனவெழுச்சிப் பழக்கங்களின் பொது வளர்ச்சியையும் மனவாழ்வின் தொடர்பையும் பெருமளவில் எளிதாக்கக் கூடாது. மேலும், மனவெழுச்சிப் பழக்கங்களை வளர்ச்சிக் கண்ணோட்டத்தில் பார்க்க வேண்டும். இளையோர் பருவத்தில் அவர்கள் இன்றும் ஒரு நிலையில்லாமல் இருக்கிறார்கள். பல விநோதமான நடத்தைப் பழக்கங்கள் (Mannerisms) தோன்றுகின்றன. இவை தனியனது பொதுப் பழக்கங்களிலிருந்து பெரிதும் தனித்திருக்கின்றன. இவைகளில் பெரும்பான்மை உண்மையில் மாறுந்தன்மை உடையனவாகவும் முரண்பாடு உடையனவாகவும் உள்ளன. ஒரு பழக்க வகை ஒரு தடவை உருவாகியதும் செயற்படுவதற்கு எந்த வகையில் உந்துவாக அமைகிறது என்பது தனியனது பழக்க வகைகளில் இருக்கின்ற அளவையும், முடிவில் தானாக இயங்குவதையும் பெருமளவு பொறுத்துள்ளது. திரும்பத் திரும்ப ஒரு செயலில் கவனம் செலுத்தினால் அச்செயல் தன்னியக்கமுள்ள செயலாக ஆகிவிடுகின்றது என்று கண்டுள்ளனர். பழக்கங்கள் தொடர்ந்து நிகழ்வனவேயன்றி விட்டுவிட்டு நிகழ்வனவல்ல. ஒரு தடவை உருவாகிய பழக்கம் மனிதனது நரம்பமைப்பிலிருந்து முழுவதும் அகன்றுவிடுவதில்லை. அவ்வமயம் தனியனகத்தே உள்ள அமைப்பு வகைகளின்மேல்தான் எல்லா மாறுதல்களும் கட்டப்படுதல் வேண்டும். ஜேம்ஸ் அவருடைய சிறப்பான கூற்றில் இதை உணர்ந்து எழுதினார்.

"ஒவ்வொரு சிறு நற்குணமும் அல்லது நேர்மைக்கேடும் ஒரு சிறு வடுவையாவது விட்டுச் செல்கிறது. ஜெபர்சன் நாடகத்தில் வரும் குடிகார ரிப் வான் வின்கிள் (Rip Van Winkle) ஒவ்வொரு தவறின்பொழுதும் 'நான் இம்முறை எண்ணமாட்டேன்' என்று கூறிக்கொண்டே தன்னை மன்னித்துக்கொள்கின்றான். அவன் எதை எண்ணமாட்டான்? அன்புள்ள மோட்ச உலகும் அதனை எண்ணாது. இருப்பினும் அது எண்ணப்படுகிறது என்பதில் ஐயமில்லை. அவனுடைய நரம்பு உயிரணுக்களும், நாரிழைகளும், அணுத்திரள்களும் அவற்றை எண்ணுகின்றன; குறித்துக்கொள்கின்றன; சேகரித்து வைக்கின்றன. அடுத்து, ஆசைகாட்டுதல் தோன்றுகின்றபொழுது அவை அவனுக்கு எதிராகப் பயன்படுத்தப்படும். நாம் எப்பொழுது செய்தாலும் தீவிர அறிவியல் பொருள்படி முழுமையாக அழிக்கப்படுவதில்லை. இதற்கு நல்ல பக்கமும் கெட்ட பக்கமும் இருக்கின்றன. நாம் பல தனிப்பட்ட பானங்களினால் நிரந்தரமான குடியர்களாக ஆவதைப் போலவே நாம்

அற வழியில் சந்நியாசிகளாக ஆகிறோம். செயல்முறை அறிவியல் துறைகளில் அதிகாரிகளாகவும் விற்பன்னர்களாகவும் நமது தலிப்பட்ட செயல்களினாலும் வேலை செய்கின்ற காலத்தினாலும் ஆகின்றோம்".[17]

இவ்வாறான மாறுதல்கள் செய்யப்படுவதனால் தன்மையில் தன்னியக்கமுள்ளவைகளாக ஆகலாம். ஆனால், பழைய பழக்க முறைகள் தனித்த மனவெழுச்சி நிலைகளில் வேலை செய்கின்றன. அப்பொழுது பகுத்தறிவுள்ள நடத்தை அதிகமாகக் காணப்படுவதில்லை. துணிவாற்றலும் கற்றலின் அடிப்படையில் ஆய்வு செய்தல் வேண்டும். அதனைச் சிறப்பாக மனிதனது பழக்க அமைப்பின் அடிப்படையில் எண்ணலாம். இவ்வெல்லாப் பழக்க வகைகளும் மனித இயக்க அமைப்பின் திறமைக்கு வழிவிடுப்பதனால் செயலின் வழிகாட்டுதலுக்கும், தொடங்கி வைத்தலுக்கும்" உள்ளடங்கிய உந்துகளாக மாறுகின்றன. (நாம் இப்பொருள் குறித்துச் சமூக நடத்தையின் வளர்ச்சி பற்றிய தொடர்பில் நோக்குவோம்.)

## மனவெழுச்சிக் கட்டுப்பாடு (Emotional Control)

மனவெழுச்சிச் செயல் அதிக சக்தி வாய்ந்த செயற் போக்குகளை விளைவித்தால் மனவெழுச்சிகளையும், அவைகளின் வெளிக் காட்டுதல்களையும் கட்டுப்படுத்தல் மிகவும் அவசியமான ஒன்றாகிறது. ஆனால், இங்கு மனவெழுச்சிக் கட்டுப்பாட்டிற்கும், மனவெழுச்சி நசுக்குதல் அல்லது தள்ளுதலுக்கும் இடையே யுள்ள தெளிவான மாறுபாட்டினைக் கவனிக்க வேண்டும். ஏனெனில், ஒரு மனிதன் மனவெழுச்சிகளினாலேயே உன்னத நிலைமை அடைவானேயானால், அதற்குப் பின்னர் சாதாரண மனிதனாகக் கருதப்படுவதில்லை. அவன் பின்பு உளவியல் அல்லது உளப்பகுப்பியல் மருத்துவ உதவிக்குரிய ஆட்படுபவனாகவோ, அல்லது நோயாளியாகவோதான் கருதப்படுவான். வாழ்க்கை என்பது சில மனவெழுச்சி உணர்வுகளில்லாவிடின், சரியானதொன்றாகிவிடும். உண்மையில் பால் உட்பட எல்லா மனவெழுச்சிகளும் இல்லாதிருக்குமானால் வாழ்க்கை தொடர்ந்து இருக்குமென்பதே மிகவும் ஐயத்திற்குரியதாகும். மனவெழுச்சிகள் இல்லாவிடில் எல்லாக் குடும்ப உறவுகளும் மறைந்துவிடும். மனைவியிடம் அன்பு, கணவனிடம் அன்பு, குழந்தைகளிடம் அன்பு, பெற்றோர்களிடம் அன்பு ஆகிய அனைத்தும் மறைந்துவிடும். சமயம் மறைந்துவிடும். ஏனெனில், கடவுளைப் பற்றிய அச்சம் இருக்காது. அரசாங்கங்கள்

[17] W. James, Psychology (Briefer Course), New York; Henry Holt and Co., 1892, p. 150.

நாட்டுப் பற்றின்மையாலும், பாதுகாப்புணர்வின்மையாலும், காப்புணர்வின்மையாலும் அழிந்துவிடும். உண்மையில் மனவெழுச்சிகள் வாழ்க்கையிலுள்ள கசப்புகளைத் தருவது மட்டுமன்றி இனிப்புகளையும் தருகின்றன. டெனிசன் கூறிய சொற்கள் இச் சிந்தனையையேதான் குறிக்கின்றன. 'மனிதனது இவ்வாழ்க்கையின் இன்பம் மனவெழுச்சிகள் இல்லாமல் இருப்பதில்லை, ஆனால் அவைகளை வெற்றியுடைவதிலேயே இருக்கிறது.'

இப்பொழுது நாம், மனவெழுச்சிகள் உடல் மாறுதல்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பதாகக் கண்டோம். அதனால்தான் களைப்பேற்பட்டு அதிலிருந்து மீள்வதற்குப் போதிய அளவு வாய்ப்பளிக்காவிடில் மனவெழுச்சி நிலை குலைவுகள், தனியனுக்கு ஊறு நிகழ்தல் ஆகியவை தவிர்க்க முடியாத விளைவுகளாகிவிடும். மேலும், ஒவ்வொரு தனியனும் மவவெழுச்சிப் பழக்கங்களை வளர்த்துக் கொள்கிறான். இவ்வளர்ச்சி, ஒரு மனவெழுச்சித் துலங்கல் என்று ஒரு நிலைக்குத் தரப்படுவதேதான் நாளை அவன் அதே அல்லது அதற்கொப்பான நிலையைச் சந்திப்பானானால் அதே துலங்கலைத் திரும்பவும் தரும் அளவிற்கு ஏற்படுகின்றது. சரியான துணிவாற்றல், கவனம் நிலைத்திருத்தல், பின்பற்றல், வகைகளைக் கொண்ட பழக்கங்கள் நன்றாக இணைக்கப்பட்ட பழக்க அமைப்பில் இருக்குமானால் அவை தனியனது உள்ளார்ந்த உடல் மனத் திறன்களுக்கு ஏற்ப வளர்ந்திருக்குமானால், சிறுவர் சிறுமியர்களுக்குப் பொறுப்பினை ஏற்றுக் கொள்வதற்கும், அதனுடைய முடிவுகளுக்குப் பொறுப்பாகவும் இருப்பார்களேயானால் சாத்தியக் கூறாகும். இதற்குப் பொருள் தன்னடக்கமாகும். பருவமடையும் காலத்தைக் கடந்த பின்னர் அவர்களால் பார்க்கவும், புரிந்துகொள்ளவும், பள்ளி, வீட்டு அனுபவங்களின்மேல் பொதுமைகளை அமைக்கவும், மனவெழுச்சிக் கட்டுப்பாடு வளர்க்க வேண்டியும், அவர்களுக்குப் பொறுப்பேற்றுக்கொள்ளும் வழியில் செயல்களில் பங்கு பெறுவதற்கும் வாய்ப்பளித்தல் அவசியமாகிறது. பங்கு பெறுதலானது பாரபட்சமற்ற நடத்தைக் கூட்டுறவு, நம்பிக்கைக்கான பழக்கங்கள், மற்றவர்களது உரிமைபற்றிப் பெரிதளவு எண்ணுதல் போன்ற உணர்வுகளை உண்டாக்கும். இவைகள் யாவும் மனவெழுச்சிக் கட்டுப்பாட்டிற்கு அவசியமான முன் தேவைகளாகும்.

## இளையோர் பருவத்தில் சமூக வளர்ச்சி

## (Social Development during Adolescence)

**சமூக - பால் வளர்ச்சி**

ஜி. ஸ்டான்லி ஹாலின் துவக்க ஆய்வு நாட்குறிப்புகளைப் பயன்படுத்தி இளையோர் பருவத்தில் வளர்ச்சியுடன் தோன்றுகின்ற சமூக

வளர்ச்சிகள் அக்கறைகளின் மாறுதல்கள் ஆகியவற்றை ஆய்ந்தது. மிக அண்மையில் நடந்த ஆய்வு இளையோர்களது ஓய்வு நேரச் செயல்கள்பற்றிக் கூறியது. இது நாட்குறிப்புகளைப் பகுத்து ஆய்வதன் அடிப்படையில் செய்யப்பட்டதில் மிகவும் அக்கறையுள்ள மாறுதல்களும், கட்டுப்பாடுகளும் வெளிவந்தன. 535 இளையோர்களது ஓய்வு நேரச் செயல்களைப் பற்றிய ஆய்வு நடந்தது. 12—21 வயதுள்ள இளையோர்களின் வயது அதிகமாக ஆக, பாலுணர்வுகளில் மாற்றுப் பாலுணர்வு ஆழமாகக் காணப்பட்டது.[18] பின்னால் வந்த இச்செயல்களில் நடனம், பேசுதல் போன்றவைகள் சேர்ந்துள்ளன. ஆனால், துவக்கச் செயல்கள் படித்தல், வானொலியைக் கேட்டல், தனிச் சிறுவர் சிறுமிக்குக் கழகக்குழு ஈடுபாடுகள் ஆகியவைகளாகும். மீக் (Meek) தந்துள்ள அறிக்கையில் இக்குறிப்புகள் ஒன்றுகச் சேகரிக்கப்பட்டுத் தரப்பட்டுள்ளன.[19] சிறுவர் சிறுமியர் பூப்படையும் பொழுதும் இளையோர் பருவத்திற்கு முன்னும் பின்னுமுள்ள சொந்த, சமூக வளர்ச்சி பற்றிய அக்கறைகள் காட்டப்பட்டுள்ளன. இளையோர் பருவக் குழுவின் அக்கறைகள் இக் காலத்தில் ஒதுக்கப்பட்டு நெருங்கிய தொடர்பும், முதியோர் கலாசார அக்கறைகளில் விருப்பமும் ஏற்படும். ஒப்பார்களது சமூகத்தின் அனுமதியும் அந்தஸ்தையும் என்றும் விரும்புதலும், குடும்ப அந்தஸ்தைப் பற்றிக் கீழான அக்கறையும் அவனுடைய முன்னிளையோன் பருவத்தில் வெளிக்காட்டியதெல்லாம் படிப்படியாக மாறி, குடும்பத்தின் சமூகப் பொருளாதார அந்தஸ்தை உணர்வதற்கு வழி வகுக்கப்படுகிறது. இந்தப் பருவத்தில் துவக்க ஜனநாயகத் தன்மை மறைந்து, அவன் தேர்ந்தெடுத்த குழுவின் உறுப்பினர்களது அனுமதியையும் நட்பையும் நாடுகின்றான்.

### முதிர்ச்சி அடையும் பால் உந்து

முழுதும் வளர்ந்துள்ள உந்தான பாலுந்து பூப்படையும் வரை முதிர்ச்சி அடைவதில்லை. இவ்வுந்துவின் விரைவியக்கச் சக்தி பெரும்பாலும் கோனடால், கோனட்ஸ் சுரப்பனவற்றிலிருந்து வருகின்றது.

[18] H. E. O. James and F. T. Moore, 'Adolescent Leisure in a Working Class District', Occupational Psychology, 1940, Vol. 14, pp. 132-145.

[19] L. H. Meek (Chairman), 'The Personal Social Development of Boys and Girls with Implications for Secondary Education. Committee on Workshops, Progressive Education Association, 1940, p. 121.

## அட்டவணை 5—4

சிறுவர் சிறுமியர் பூப்படையும் காலத்திலிருந்து இளையோர் பருவத்திற்கு அடைந்து அதிலும் வளர்ச்சி அடைதல் (மீக் தந்தது).

| இதிலிருந்து | இதற்கு |
|---|---|
| 1. பலவகைப்பட்ட நிலையில்லா அக்கறைகள். | குறைந்ததும் ஆழமானதுமான அக்கறைகள். |
| 2. அதிகம் பேசும் தன்மையுள்ள உரத்த குரலையுடைய தீரமான நடத்தை, எந்தச் செயலையும் அதிகமான அளவில் செய்யுந் தன்மை. | அதிகமான மதிப்புடைய கட்டுப்படுத்தப்பட்ட ஆண் பெண் முதிர்ந்த நடத்தை. |
| 3. ஒப்பார் அந்தஸ்தை நாடுதல், ஒப்பார் தரங்களுக்கு அதிக மதிப்பளித்தல். | முதிர்ந்த கலாசார வகைகளை உருநிழல் காட்டுதல். |
| 4. பையன்கள், பெண்கள் கூட்டத்தில் ஒன்றி இருக்க ஆவல். | சிறிய தேர்ந்தெடுக்கப்பட்ட குழுவில் ஒன்றியிருத்தல். |
| 5. கூட்டாளிகளைத்தேர்ந்தெடுப்பதில் குடும்ப அந்தஸ்தை ஒப்பீட்டடிப்படையில் முக்கியமற்ற ஏதுவாகக் கருதுதல். | கூட்டாளிகளைத் தேர்ந்தெடுப்பதில் குடும்ப சமூகப் பொருளாதார அந்தஸ்தை அதிகமான முக்கியத்துவம் வாய்ந்த ஏதுவாக ஆக்குதல். |
| 6. முறைப்படி இல்லாத விருந்துகள் போன்ற சமூகச்செயல்கள். | நடனங்கள் போன்ற முறைத்தன்மையுள்ள சமூகச் செயல்கள். |
| 7. அரிதான நாளிடல்கள். | நாளிடல்களும் ஒருவரையே நாளிடல்களும் வழக்கமான செயலாகும். |
| 8. பையன்களிடமும் பெண்களிடமும் தொடர்பேற்படுத்திக் கொள்ள அக்கறை. | தன் குடும்ப வாழ்விற்காகத் தயார் செய்து கொள்வதில் அக்கறை. |
| 9. நட்பு குறுகிய காலமே இருத்தல். | நட்பு நீண்டநாள் தொடர்ந்து இருத்தல். |
| 10. அதிகமான நண்பர்கள். | குறைந்த ஆழ்ந்த நண்பர்கள். |

அட்டவணை 5—4 (தொடர்ச்சி)

| இதிலிருந்து | இதற்கு |
| --- | --- |
| 11. சமூகத் தொடர்புகளை ஏற்படுத்திக்கொள்ள அடிகோலும் நடவடிக்கைகளில் விருப்பம் கொள்ளுதல். | தனக்குத் திருப்தி அளிக்கும் நடவடிக்கைகளில் விருப்பம் (நடிப்பு, இசை, ஓவியம் ஆகியவற்றில் தங்களுடைய திறமைகளை வெளிக்காட்ட விருப்பம்); பாட நூல்களை நன்கு கற்றறிய ஆர்வம்; பயனுள்ள பொழுது போக்குகளில் நாட்டம் கொள்ளல்; பிற்கால வாழ்வில் தான் பணி செய்ய விரும்பும் துறையில் அறிவார்வம்; பழக்கம் கொள்வதில் ஆர்வம். |
| 12. தன் நடத்தையும் பிறர் நடத்தையும் குறித்து நல்ல திறனாய்வு இல்லாமை. | மனிதத் தொடர்புகளில் வளரும் வகையில் திறனாய்வு கொள்ளல். |
| 13. ஒத்துக் கொள்ளக் கூடிய விதிகளுக்கு முக்கியத்துவம் தருதல். | முதியோரிடம் சுதந்திரம் பெற்றுத் தானாக முடிவுகள் கொள்வதில் நாட்டம். |
| 14. முதியோர் கட்டளையை ஏற்றுக்கொள்ளும் தன்மை. | முதியோரிடத்துச் சம அந்தஸ்துடன் பழகுதல். |

இச்சுரப்பிகள் பெரும்பாலும் 11-லிருந்து 15 ஆண்டுகளுக்குள் திறம்பட வேலை செய்கின்றன. பொதுவாக, சிறுமிகளிடம் சிறுவர்களைக் காட்டிலும் விரைவில் தோன்றுகின்றன. இருப்பினும், பல உதவியாய் இருக்கும் இயக்க அமைப்புகள், பின்னால் பால் வேட்கையைத் தணிப்பவைகள், துவக்க காலத்திலேயே அமைக்கப்பட்டவைகளாகும். அவர்களது வளர்ச்சி உயிரியல் சமூக சக்திகளின் விளைவு ஆகும். உயிரியல் காரணம் உடலின் சில பகுதிகளில் வெளித்துலங்கல்களுக்கான வளர்ச்சிக்குரிய தூண்டுதல்களை அளிக்கும் தோல் உணர்வு உறுப்புகள் சரிவர அளிக்கப்பட்டிருக்கிறதா என்பதைப் பற்றி நாட்டம் கொள்கிறது. மேலும், பாலுறுப்புகளின் வளர்ச்சி வளைவுகள் தொடர்ச்சியானதும் நிலையானதுமான வளர்ச்சியைக் காட்டுகின்றன. இத்துவக்க காலத்தில் இசைவான நிலைகளில் சரியான வழியில் தரப்படும் செறிவான தூண்டுசல் பால் உந்துவைப் பாதிக்கலாம். முன்னிளையோரை இளையோர் மாறுதல்களுக்குத் தயார்

செய்வதற்கு என்டோக்ரின் ஏதுக்கள் உதவுவதாகக் கூறப்பட்டுள்ளது. இதைக் குறித்து ஷாக் கூறுகிறார்: 'பால் சுரப்பிகள் முதிர்ச்சி அடையும்பொழுது அதிகமான அளவு ஆண் பெண் பால் உட்சுரப்பிச் சத்துக்கள் குருதி ஓட்டத்தில் சேர்கின்றன. இவை வளர்ச்சியைத் தூண்டிவிட்டு துணைப் பாலுறுப்புகளை வளர்த்து இரண்டாந்தர பால்குண இயல்புகளைத் தோற்றுவிக்கின்றன.'[20]

முன்னிளையோர் பாலுணர்வுள்ள ஒரு நிகழ்ச்சியில் அல்லது பிரச்சினையில் எந்த வகையில் எதிர்வினையளிக்கின்றனர் என்பது துவக்க ஆண்டுகளில் உருவாகின்ற பால்நோக்குகளைப் பெரிதும் பொறுத்து இருக்கின்றது. ஒரே குழுவில் உள்ள வெவ்வேறு உறுப்பினர்களுடையதும், வெவ்வேறு குழுவில் உள்ளோர்களுடையதுமான சமூக - பால் அமைப்பில் முக்கிய மாறுதல்கள் இருக்கும். பல சகோதரிகள் இருக்கின்ற குடும்பங்களில் வளரும் சிறுவர்கள், சகோதரிகள் இல்லாத இல்லங்களில் வளரும் சிறுவர்களைக் காட்டிலும் மாறுபட்ட கவனிப்பினைப் பாலுக்கு அளிப்பர். சிறுவர் சிறுமியரின் சமூக - பால் அமைப்பின் வளர்ச்சிபற்றிச் சிறப்பாகத் தெரிந்து கொள்ள முயல்வதற்கு, கேம்ப்பெல் (Campbell) மெர்ரில்-பால்மெர் பொழுதுபோக்குச் சங்கங்களில் (Merrill-Palmer Recreational Clubs) உள்ள சிறுவர் சிறுமியர் நடத்தை, சமூக - பால் நோக்குகள் பற்றியதொரு கவனமான ஆய்வினை நடத்தினர்.[21] வெவ்வேறான உற்றுநோக்கல்களை அளவிடுவதற்கு சமூக - பால் அளவு பயன்பட்டது. அட்டவணை 5—5ல் 11-லிருந்து 17 வயது வரையுள்ள ஆண் பெண்களின் நடத்தை தரப்பட்டுள்ளது.

இம் முடிவுகள் தன்னுணர்வுப் பருவமான 11 அல்லது 12 வயதிலிருந்து படிப்படியாகத் தொடர்ந்து 16 அல்லது 17 வயதில் தோன்றுகின்ற மாற்றுப்பாலார் மீதுள்ள செறிவான விருப்பத்திற்கு வளர்ச்சியடைவதைக் காட்டுகின்றது. எல்லா வயது நிலைகளிலும் சிறுமிகளது பால் அமைப்பு, அதே வயதுள்ள சிறுவர்களைக்காட்டிலும் அதிகமான முதிர்ச்சியை வெளிப்படுத்துகின்றது.

### சொந்தத் தோற்றத்தில் மாறுபட்ட அக்கறை

சொந்தத் தோற்றத்தில் இளையோர் பருவத்தில் தோன்றுகின்ற மாறுபட்ட அக்கறை, இளையோர் பருவ மாணவர்களால் கருதப்பட்டு

[20] N. W. Shock, 'Physiological Changes in Adolescence', Forty-third Yearbook of The National Society for the Study of Education, Part I, Chicago: Department of Education, University of Chicago, 1944, p. 76.

[21] E. H. Campbell, 'The Social and Sex Development of Children', Genetic Psychology Monographs, 1939, Vol. 21, pp. 461-552.

பல்வேறு வழிகளில் விளக்கப்பட்டுள்ளது. இவற்றில் பல மிகவும் எளிமையாக்குவதில் நாட்டம் காட்டியுள்ளன. சில இப்பகுதியை வளர்க்கின்ற வழியாகக் கருதுகின்றன. அதாவது, ஒருவகையான இயற்கைப் போக்குகளை வெளிப்படுத்துகின்ற தன்மை என்று கருதப் பட்டது. மற்றவர்கள் இதனைச் சமூக அனுமதியைப் பெறும் வழியாகக் கருதினர். மேலும், மற்றவர்கள் எழுச்சியுற்றுள்ள சமூக உணர்வின் விளைவு என்றும், பால்பங்கினை உணர்வதென்றும் கருதுகின்றனர்.

## அட்டவணை 5—5

வளர்ச்சியிலுள்ள சமூக - பால் மாறுபாடுகள்
(கேம்ப்பெல் தந்ததிலிருந்து தழுவியது)

| வயது | சிறுவன் | சிறுமி |
|---|---|---|
| 11 | ... | பையன்களை வழக்கமாகப் பின் பற்றும் நிலைகளைத் தவிர மற்ற நிலைகளில் தொடும் பொழுது தன்னுணர்வு காட்டப்படுகின்றது. |
| 12 | பெண்களை வழக்கமாகப் பின் பற்றும் நிலைகளைத் தவிர மற்ற நிலைகளில் தொடும் பொழுது தன்னுணர்வு காட்டப்படுகின்றது. விளையாட்டில் பெண்களைக் காட்டிலும் பையன்களை விரும்புதல். | அவளுடைய பெண் நண்பர்களுடன் விடாது குசுகுசுவென்று பேசத் தொடங்குகின்றாள். வாய்ப்புக் கிடைக்கும்பொழுது ஒரு பெண்ணின் அருகில் உட்காருவாள். |
| 13 | அவன் பெண்கள் குழுவில் இருப்பானானால் உடனே அவ்விடத்தை விட்டுப் போவான். | பையன்கள் குழுவில் நாணம் கொள்கிறாள். |
| 13·5 | பால் அடக்கம் தோன்றுகிறது. | எந்த ஒரு கவர்ச்சியுடைய பையனையும் ஏற்றுக்கொள்ள மாட்டாள். ஆனால், அவளது நடத்தை பையன்களிடத்து அக்கறை காட்டுகின்றது. |

அட்டவணை 5—5 (தொடர்ச்சி)

| வயது | சிறுவன் | சிறுமி |
|---|---|---|
| 14 | பால் பற்றிய உடல் தன்மைகளில் மிக அதிகமான தன்னுணர்வும் அடக்கமும் கொள்கின்ருன். | பால் அடக்கத்திலும், உடலை வெளிக் காட்டுவதிலும், உள்ளணிகளை வெளிக் காட்டுவதிலும் அதிகக் கவனம் செலுத்துகின்ருள். பால் கவர்ச்சி உடைகளைப் பற்றிய உணர்வு கொண்டுள்ளாள். |
| 14·5 | எந்த ஒரு கவர்ச்சியுடைய பெண்ணையும் ஏற்றுக் கொள்ளமாட்டான். ஆனால் அவனது நடத்தை பெண்களிடத்து அக்கறையைக் காட்டுகிறது. சொந்தத் தோற்றத்தில் அதிகமான கவனத்தைக் காட்டுகிருன். | வெளிப்படையாக நடனத்தைக் கண்டு மகிழத் தொடங்குகிருள். பையன்கள் கவனத்தை ஈர்ப்பதில் அதிகமாக ஆர்வம் காட்டுகின்ருள். |
| 15 | குழுவிலுள்ள பெண்களைக் கண்டு நாணமடைந்து போகிருன். ஆனால், ஒரு பெண்ணை மட்டும் சந்திக்கும் பொழுது குறைவான கூச்சமும் சிறு அக்கறையும் கொள்கிருன். | பையன்களிடத்து அக்கறை ஏற்படுகின்றது. ஒரு பையனிடம் அக்கறை ஏற்படுவதில்லை. வேலையைப் பால் தொடர்பில் வகைப்படுத்துகிருள். சமூக-பால் கலாசார வகையினையும் ஏற்றுக் கொள்கின்ருள். |
| 15·5 | பெண்களோடு நடனமாடும் பொழுது ஏற்படும் உடல் தொடர்பில் மகிழ்ச்சியைக் காட்டுகின்ருன். | பையன்களை விரும்புவதில் வெளிப்படையாக இருக்கின்ருள். குறிப்பாக உடன் நடனமாடுவதற்காக பையன்களை விரும்புகிருள். |
| | பெண்களிடத்து அக்கறை இருந்தாலும் ஒரு தனிப் பெண்ணிடத்து அக்கறை இல்லை. வேலையைப் பால் தொடர்பில் வகைப்படுத்துகிருன். சமூக-பால் கலாசார வகையினையும் பங்கினையும் ஏற்றுக்கொள்ளுதல். | பையன்களின் கவனத்தை ஈர்ப்பதற்குப் பலவகைப்பட்ட முறைகளைக் கையாளுகின்ருள். பையன்கள் என்ன செய்கின்றனர் என்பதால் பெண்கள் என்ன செய்கின்றனர் என்பதைக் காட்டிலும் அதிக ஆர்வம் காட்டுகின்ருள். முதியோர் வெளித் தோற்றங்களை ஏற்றுக் கொள்கின்ருள். |

அட்டவணை 5—5 (தொடர்ச்சி)

| வயது | சிறுவன் | சிறுமி |
|---|---|---|
| 16 | அவனுடைய பெண்தோழி அருகே அவனைப் பிறர் கிண்டல்செய்தாலும் உட்காருவான். | ஆண்களிடத்து நடனமாடும் பொழுது ஏற்படும் உடல் தொடர்பில் மகிழ்ச்சியைக் காட்டுகின்றாள். |
| | நடனமாடுதல் போன்ற மாற்றுப்பால் ஈடுபாடுகளில் அதிக ஆர்வம் காட்டப்படுகின்றது. முதியோர் வெளித்தோற்றங்களை ஏற்றுக் கொள்கின்றான். | நாளிடல்கள் பெறத்தொடங்குகின்றாள். வெளி நடத்தையில் மாற்றுப் பாலாரிடம் அக்கறை காட்டுகின்றாள். சில பையன்களது கவர்ச்சியைத் தன் தோழியிடம் பேசுகின்றாள். |
| 16.5-17 | ஆண்மைப் பங்கை அதிகமான அளவில் ஏற்றுக் கொண்டு, பெண்களை ஆளுதல் ஆண்களின் உரிமை என்றும் கொள்கிறான். | ... |

நடத்தையின் மற்ற நோக்குகளின் விளக்கங்களிலிருந்து இவ்வதிகமான எளிமையாக்குதல், இப்பிள்ளைகள் பற்றிய ஆய்வுகளின் தன்மையிலிருந்தும் பயனிலிருந்தும் விளைந்திருக்கின்றன. 1897-லேயே ஹால் கேள்வி நிரல் முறையைப் பயன்படுத்தி உடை உடுத்தலும், தன்னைப் பற்றிய உணர்வின் வளர்ச்சிக்கும் இடையே உள்ள உறவினைப் பற்றி ஆய்ந்துள்ளார்.[22] அண்மையில் பல ஆய்வாளர்கள் பதின் வயதுச் சிறுவர்களையும் சிறுமிகளையும் அவர்களது சொந்தத் தோற்றத்தில் அதிகமான ஈடுபாடு கொள்வதற்கான ஏதுக்களைப்பற்றி ஆய்ந்துள்ளனர். சில மாணவர்கள் இப் பிரச்சினையை உளப் பகுப்பாட்டியல் நோக்கிலிருந்து அணுகியுள்ளனர். அவர்களது உடைகளும சொந்தத் தோற்றமும் தனியன்களது இயல்புகளை வெளிப்படுத்துகின்றன என்று காட்டுவதற்குரிய சான்றுகளைக் கண்டனர்.

பல்வேறு ஆய்வுகளிடையே, இளையோர் பருவம் ஒப்பார் அனுமதியில் அதிகமான அக்கறையினை உடன் கொண்டுள்ளது

[22] G. S. Hall, 'Early Sense of Self', American Journal of Psychology, 1897, Vol. 9, pp. 351-395.

என்ற கருத்தினைப் பற்றிய ஒரு பொது உடன்பாடு காணப்படுகின்றது. இவ்வக்கறையின் தன்மை துவக்கக் குழந்தைப் பருவத்திலும், குழந்தைப் பருவத்திலும், முன்னிளையோர் பருவத்திலும், சிறுவர் சிறுமியர் கொண்டுள்ள பட்டறிவுகளாலும் சமூகத் தொடர்புகளாலும், குறிப்பிடும்படியாகப் பாதிக்கப்படுகின்றது. குழந்தைகள் மிக்க துவக்க வயதிலேயே அவர்களது பால் பங்கினை நோக்கி வழிகாட்டப்படுகின்றனர். அதனால் அவர்கள் பள்ளிக்கு நுழையுமுன்னரே பால் மாறுபாடுகளைப் பற்றிய உணர்வு ஏற்படத் துவங்குகின்றது. இருப்பினும், மாற்றுப் பாலார் பற்றிய அவர்களது நோக்கு அவர்களது பயிற்சிக்கும் பட்டறிவிற்கும் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கும்.

சில்வர்மேனால் (Silverman) இப்பிரச்சினை பற்றிய ஓர் இயல்பு ஆய்வு செய்யப்பட்டது.[23] இளையோர் சிறுமிகளுடைய உண்மையான உடையும், கூந்தல் முடிக்கின்ற பழக்கங்களைப் பற்றியும் ஓர் ஆய்வு நடத்தப்பட்டது. இது, மிகவும் கவனத்துடன் நறுமணப் பொருள்களைப் பயன்படுத்தல், ஆபரணங்கள் அணிதல், உடுத்துகின்ற ஆடை வகைகள் போன்றவைகளைக் கணக்குச் சரிபார்க்கும் முறையினாலும், புறவயமான கேள்விகளினாலும் தயார் செய்யப்பட்டதாகும். மேலும், கீழ்க்கண்ட தலைப்புடைய கேள்விநிரல் தரப்பட்டது. 'நீ உடை உடுத்துதல் பற்றியும் தோற்றத்தைப் பற்றியும் என்ன நினைக்கிறாய்?' சொந்தக் குறிப்புத் தாளும் சிறுமியருக்குத் தரப்பட்டது (**Personal Data Sheet**). சுற்றுப் புறத்திலுள்ள நியூ ஜெர்சி உயர்நிலைப் பள்ளியிலுள்ள 1,100 மாணவர்களைக் கொண்டு நடத்தப்பட்ட ஆய்வில், மக்கள் தொகையின் நல்ல குறுக்கு வெட்டுப் பிரதிநிதித்துவம் கிட்டியது. இக்குறிப்புகள் வயது மாறுபாடு பொருளாதார சூழ்நிலைகளின் மாறுபாடு ஆகிய அடிப்படைகளில் இருந்தன. முடிவுகள் கீழ்க்கண்ட உண்மைகளை வெளிப்படுத்தின:

1. தினசரி உடுத்துகின்ற ஆடை பொதுவாக நாகரிக உடை என்று கருதப்படுகின்ற உடைக்கு நெருங்கிய உடன்பாட்டுடன் இருக்க விரும்புதல், வயதுக் குழுக்களினுள் இருப்பதுமட்டுமல்லாமல் குழுக்களிடையேயும் காணப்பட்டது. 12 வயதுச் சிறுமிகளும், 18 வயது வரும்வரை எல்லா வயதுச் சிறுமிகளும் பொதுவாக நாகரிக உடையை ஒத்து உடை உடுத்துகின்றனர். வயதுக் குழுக்களிடம் உடைமாறுபாடுகள் அவர்களுடைய வார இறுதி நாட்களின் உடைகளில் காணப்பட்டன. வயதான பெண்கள் உயரமான குதியடிகளையுடைய மிதியடிகளையும், சிறு காலுறைகளைக் கைவிட்டு முழுக்

[23] S. S. Silverman, 'Clothing and Appearance, Their Implications for Teen-Age Girls', Teachers College, Columbia University, Contributions to Education, No. 912, 1945.

காலுறைகளையும், பாவாடை குளிரணிகளைத் தவிர்த்து முழு உடைகளையும் அணிகிறார்கள்.

2. சிறுமிகள் மிக அதிகமான ஒப்பனையைப் பயன்படுத்துவதில்லை என்றாலும் சில பொருள்களைப் பெரும்பாலும் பயன்படுத்துகின்றனர். அழகு சாதனங்களைப் பயன்படுத்துவதில் ஒரு வகையினைச் சார்ந்து இருப்பதைவிட வயது மாறுதல்கள் ஆதிக்கம் செலுத்துகின்றன.

பொருளாதாரக் குழுக்களின் எதிர்க்கோடிகளிலுள்ள சிறுமிகள் அணியும் உடையின் வகைகளிலும் பழக்கங்களிலும் சிறு மாறுதலே காணப்பட்டது, பெருமளவு மாறுதல்கள் அதிகமான விலையுடைய உடைகளில்தான் காணப்பட்டன. சிறந்த பொருளாதாரச் சூழ்நிலையில் வாழ்ந்தோர், அதிகமான அளவில் ஆடம்பரப் பொருள்களை அணிந்தனர். இருப்பினும், எல்லாப் பொருளாதார நிலைகளினின்றும் வருகின்ற சிறுமிகள் குழுவினுடைய உடை ஒப்பனை நாகரிகப் பாணியில் ஒன்றியிருக்கவே முயல்கின்றனர். ஆதலின், வளர்ச்சியும் முதிர்ச்சியும் பதின் ஆண்டுகளில் ஏற்படுவது தன்னைப் பற்றிய நோக்கிலும், ஒப்பாரைப் பற்றிய நோக்கிலும் மாறுபட்ட எண்ணத்தை உடன்கொண்டு வருகின்றன. இம்மாறுபட்ட நோக்கினை ஆதரிக்கின்ற விரைவியக்கம் கொண்ட சக்தியை மாறுகின்ற உயிரியல் தனியனிடத்தும் தனியனைப் பாதிக்கின்ற சூழ்நிலைச் சக்திகளிடத்தும் தேடுதல் வேண்டும். சொந்தத் தோற்றத்தைப் பற்றிய அக்கறைகள், நோக்குகளின் மாறுதல்களில் உள்ள சில சிக்கல்கள், வீட்டுச் சச்சரவுகள், இளையோர் பொருத்தப்பாடுகள், மனநலம், வழிகாட்டுதல் பற்றிய அதிகாரங்களில் விவாதிக்கப்பட்டுள்ளன.

## இளையோர் பருவத்தில் சமூக உணர்வு

கூலி (Cooley), மனிதனது சிந்தனை, மனவெழுச்சிகள், நடத்தை வகைகள் அவனது கூட்டாளிகளைப் பொருத்துத்தான் பெருமளவு இருக்கின்றன என்று உணர்த்திய தற்கால சமூகவியல் எழுத்தாளர்களில் ஒருவராவர்.[24] இவ்வுணர்வு 'சமூக உணர்வு' என்னும் சொல்லால் உருவாக்கப்பட்டது. கூலியின் கருத்துப்படியும், மற்றச் சமூக உளவியலாரின் கருத்துப்படியும், எந்த ஒரு தனியனதுஉணர்வும் அவன் தொடர்பு கொள்கின்ற பல சமூகக் குழுக்களின் இயல்பேயாகும். நாம் உயர்நிலைப் பள்ளி ஜூனியர் வகுப்பிலுள்ள

[24] C. H. Cooley, 'Human Nature and The Social Order', New York: Charles Scribner's Sons, 1902.

சராசரி இளையோர் சிறுமியைக் கருதினால், அவள் சில குழுத்தரங்களையும், கருத்து நிலைகளையும், பொது நோக்குகளையும் கொண்ட ஒரு தனியளுகக் காணலாம். இல்லமும் உடன் விளையாடுவோரும், பற்றுறுதி, சேவை, கூட்டுறவு, மற்றவர்களது அக்கறை ஆகியவைகளைப் பற்றிய பாடங்களை அவளுக்குத் தந்திருப்பார்கள். பள்ளிப் படிப்பு அவளது கற்பனை மூலமும், மக்கள், நாடுகள் தொடர்பிலும் பழங்கால ஆண் பெண்களின் சொற்கள் மூலமும் அவளை வளர்த்துள்ளது. நேரடிப் பட்டறிவைப் பற்றி அவளுக்குப் பரந்த ஆழமான மதிப்பீடு கிடைக்கப்பெறுகின்றது. அவளது சமயம், அரசியல் தத்துவம், குடும்பப் பெருமை, நாட்டுப் பெருமை, மற்றவர்களுக்குத் தரும் மதிப்பு ஆகியவை அவளது சமூகக் குழுவினால் உருவாக்கப்பட்டவையாகும். ஆயினும், புதுப்புது சமூகக் குழுக்களை அடிக்கடி இளையோன் சந்தித்தித்துக் கொண்டே இருக்கிறான். அவைகளில் பலவற்றின் குறிக்கோள்களும் நோக்குகளும் முன்பு சந்தித்தவையினின்று ஓரளவு மாறுபட்டே உள்ளன. கூலி இதைப்பற்றிக் குறிப்பிடும்போது தனியன் வெவ்வேறான தன்மைகளை அடிப்படையாகக் கொண்ட குழுக்களை அடிக்கடி தொடர்பு கொள்வதன் மூலம் தரங்களை ஏற்படுத்தியிருப்பதனால் சிக்கல்கள் ஏற்படுவது சாத்தியமே என்று கூறுகின்றார். இவ்வாறான நிகழ்ச்சியைச் சந்திக்கின்ற இளையோனைக் கோழை, அனுபவமற்றவன் ('Green' or 'Nutty') அல்லது அவனது புது சமூகக் குழுவின் நடத்தைக்குள் புகுவதற்கும் புரிந்துகொள்வதற்கும் முடியாது தோல்வி கண்டவன் என்பதைக் குறிக்கும் வேறொரு சொல்லால் அழைக்கின்றனர்.

## சமூக வளர்ச்சித் தொடர்பான பிரச்சினைகள்

### பொதுத் தன்மையுடன் ஒன்றியிருக்க ஆவல்

ஒரு சாதாரண இளையோன் அவனது நோக்குகளில் கருத்துநிலையில் இருந்தாலும், குழுவுடன் ஒன்றியிருக்க விரும்புவதில் அடிமையாகின்றான். அவனது தினசரி நடவடிக்கைகள் அவனது சிறப்பான கவிதை அக்கறைகள், சமய அக்கறைகளது அடிப்படையில் இல்லை, அவனது குழு அவனது சிறப்பான குறிக்கோள்களை வெறுக்குமாயின், அவனும் அவ்வாறான குறிக்கோள்களை வெறுக்கத் துவங்குகிறான். அவனது குழு வெளியில் வெகு நேரம் தங்கினால், அவனும் வீட்டுக்கு வெளியே வெகு நேரம் தங்குகிறான். அவனது குழு சத்தியம் செய்தாலோ அல்லது கொச்சை மொழியைக் கைக்கொண்டலோ, இவனும் அவைகளைக் கைக்கொள்கின்றான். இப்பருவத்தில் மந்தையைப் பின்பற்றும் மனப்போக்கு இருப்பதைக் காணலாம். அவர்களை மற்றவர்கள் 'பிறழ்வானவர்கள்' என்று கருதாமல் இருக்க வேண்டும்

என்று மிகவும் எச்சரிக்கையுடன் இருக்கிறார்கள். வாழ்க்கையின் இந்தப் பருவத்தில் குழுவில் ஒன்றுயிருக்கும் மனப்போக்கு எல்லாப் பொருள்களைக் காட்டிலும் மேலெழுந்தவாறு நிகழ்கின்றது.

குறைவான முதிர்ச்சி பெறும் தனியனுக்கு வளர்ச்சி விகிதத்தி லுள்ள குறைபாடுகள் உளவியல் முனைப்பினை ஏற்படுத்தும் ஏதுவாக அமையும் என்று முன்பே கூறப்பட்டுள்ளது. இம் முனைப்பின் எதி ரொலியை அவனது சமூக மனப்போக்கிலும் பொதுநோக்கிலும் காண லாம். மேலும், விரைவில் முதிர்ச்சியடையும் தனியனும் பல்வேறு சமூகச் சிக்கல்களைச் சந்திக்கலாம். அவனது ஒப்பார்கள் அவனது தோற்றத்தின்காரணமாக அவனிடமிருந்து சிலவற்றை எதிர்பார்ப்பார் கள். அவனது உடல் வளர்ச்சிக்கு ஏற்றவாறு அவனது சமூகப் புட் டறிவு இல்லையாயின் அல்லது அவனது உடலியல் முதிர்ச்சி, எலும்பு வளர்ச்சிக்குப் பின்தங்கி யிருக்குமாகுல், அவர்களது தொடர்புகளுக்கு ஏற்றவாறு அவன் இருப்பதில்லை. இத்தோல்வி உளவியல் முனைப்பின் முக்கியமான ஏதுவாகலாம். விரைவில் முதிர்ச்சியடையும் பெண் களும், பின்தங்கி முதிர்ச்சி அடையும் ஆண்களும் அவர்களது கூட் டாளிகளது வளர்ச்சி நிலைகளிலிருந்து மாறுபட்டு இருப்பார்கள். இவ்வாறன 'பொருந்தாதவரிடம்' சமூகத்தில் ஒன்றி யிருக்க முடி யாததனுல் ஏற்படுகின்ற சிக்கல்கள் மிக்குக் காணப்படுகின்றன. அவைகள் முனைப்பை உண்டாக்கும் ஏதுவாகவும், தனியனைத் தொல்லைகளுக்கு உள்ளாக்குபவையாகவும் ஆகலாம்.

**இளையோர்களுக்குள் தலைமை**

தலைமை பற்றிய ஆய்வில் தனியாள் மாறுபாடுகளின் முக்கியத் துவத்தை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். இயற்கையான நுண்ண றிவு மட்டுமல்லாது ஈட்டிய நுண்ணறிவிலும் உள்ள மாறுதல்களோடு, உடல் மனவெழுச்சி சமூக மாறுபாடுகளையும் ஏற்றுக்கொள்ளுதல் வேண்டும். சமூகத் தலைமைக்குரிய வாய்ப்பு தயாராக இல்லாத பொழுது நடைமுறையில் இருக்கும் சமூக அந்தஸ்து அதற்கு வாய்ப் பினை அளிக்கலாம். இன்னொரு சமூக அமைப்பில் உடற் சக்தி முக் கியமானதாக இருக்கலாம். சில வகையான செயல்களில் விலங்குத் தனமான உடல் வலிவே மற்றவர்களைக் கட்டுப்படுத்தத் தேவையாக இருக்கலாம். சான்றாக, விளையாட்டுகளின் சில வகைகளில் தலைமை வலிவு, இயக்க இணைப்பு, எதிர்வினையின் வேகம் ஆகியவற் றில் உயர்ந்தவர்களுக்குள்ளேயே இருப்பதைக் காணலாம். 13—14 வயதுள்ள 447 சிறுவர்கள் குழுவைப் பற்றிய ஆய்வு நடத்தியதில் தலைமை தாங்குவதற்கான குணங்கள் அறியப்பட்டன.[25] இச்

[25] A. J. Latham, 'The Relationship between Pubertal Status and Leadership in Junior High School Boys', Journal of Genetic Psychology, 1951, Vol. 78, pp. 185-194.

சிறுவர்கள் பால் முதிர்ச்சி, தலைமை ஆகிய குணங்களின் அடிப்படையில் வகைப்படுத்தப்பட்டனர். முதிர்ந்த, முதிராத சிறுவர்களிடையே உள்ள தலைவர்களின் விகிதம் ஒப்பிட்டுப் பார்க்கப்பட்டது. மூன்று வகையான தலைமைகள் காணப்பட்டன: தேர்ந்தெடுக்கப்பட்டவை, நியமனம் செய்யப்பட்டவை, விளையாட்டுத் திறத்தினால் பெற்றவை. விளையாட்டுத் திறத்தினால் தலைமை பெற்றவர்கள் மட்டுமே முதிர்ந்த, முதிராத சிறுவர்களைக் காட்டிலும் தொடர்ச்சியாக மேம்பட்டவர்களாயிருந்தனர். உடல் முதிர்ச்சி தேர்ந்தெடுக்கப்பட நியமனம் செய்யப்பட்ட தலைமையில் 13, 14 வயது நிலையில் குறிப்பிடும்படியான செல்வாக்குக் கொண்டிருக்கவில்லை.

மக்கள் நேரடித் தொடர்பு கொள்ளுகையில் மற்றவர்களிடத்து நற்குணத்தைப் பதிவு செய்யத் தோற்ற அளவையும் வலிவையும் கொண்டே அந்தஸ்தையும் கட்டுப்பாட்டையும் உண்டாக்க நம்புகின்றனர் என்ற உண்மையைக் கண்டனர். சமூக மனவெழுச்சி குணவியல்புகள் சமூக அமைப்புக்களில் இளையோர் பருவத் தலைவர்கள் உண்டாவதற்கு மிகவும் முக்கியம் என்பது தெளிவாகத் தெரிகின்றது. வாழ்க்கைச் செயல்களில் இருக்கின்ற பிரிவுகளாலும், வாழ்க்கை அமைப்புகளிலுள்ள தனியாள் வேறுபாடுகளாலும் தலைவர்களது ஆளுமை அவர்கள் கற்றிருக்கின்ற நிகழ்ச்சிக்கேற்றவாறு மாறுபடலாம். எந்தத் துறையிலுமுள்ள தலைமை வலிவு, தன்னம்பிக்கை, முன்னிற்றல், பொறுப்பு ஏற்க விருப்பம் போன்ற உறுதியான குணஇயல்புகளால் குறிக்கப்படுகின்றது. தலைமை உருவாக்கப்படும்பொழுதும் இயக்க ஆற்றல் உடையதாகும். அது பல பெரிய குழுக்களுடன் தொடர்பு கொண்டிருப்பது சாத்தியமாதலின் தலைமை இயற்றல் உடையதாகும். இருப்பினும் தலைமை தனியானது முழு வாழ்க்கை அமைப்பில் ஒரு பகுதியே ஆதலின், இதனைத் தனிப்பட்ட பழக்கங்கள் அல்லது செயல்திறங்களின் அடிப்படையில் விளக்க முடியாது.

குடும்பச் செல்வாக்குகள் ஒவ்வொரு சமயம் ஆட்படுத்துகின்ற போக்குகளையும், மற்ற சமயங்களில் ஏற்றுக்கொள்கின்ற போக்குகளையும் உண்டாக்குகின்றன. ஆனால், இவை யாவும் தலைமைக் குணஇயல்புகளின் வளர்ச்சியில் முக்கியப் பங்குகொள்ளும். இருப்பினும், ஒருவன் நசுக்கும் தன்மையுள்ள செல்வாக்கினைத் தரும் குடும்பச் சூழ்நிலையில் இருக்கலாம். ஆனால், அச்சிறுவனோ சிறுமியோ இந்நசுக்குதலின் காரணமாகத் தோன்றுகின்ற தாழ்வு மனப்பான்மையை அகற்றவோ அல்லது ஈடு செய்யவோ வல்ல இயற்கைத் தூண்டுதல்கள் பெற்றிருந்தால், அங்கும் அச்சூழ்நிலையிலிருந்தும் தலைமை வளரமுடியும். எல்லாத் தலைமையும் ஈடுசெய்யும் செயலின் விளைவாகத் தோன்றுவதில்லை. இயற்கையாக அல்லது 'உள்ளாற்றலுடைய தலைமை தண இயல்புகள் கொண்ட ஆளுமை வளர்ச்சிக்கு வழிகோலுகின்ற

பட்டறிவுகளையும், நிலைமைகளையும் அளிக்கும் வகையில் குடும்பங்கள் உருவாக்கப்பட்டிருக்கலாம்.

நியூயார்க் நகரத்தின் ஹொராசி மேன் பெண்கள் உயர்நிலைப் பள்ளியைச் சேர்ந்த ஜூனியர் சீனியர் வகுப்புகளிலுள்ள 71 சிறுமியர்களை ஓர் ஆய்வில் ஆட்படுவோர்களாக எடுத்துக்கொண்டனர். இவ்வாய்வு தலைமை ஏற்பதற்குத் துணை செய்யும் திறன்களான ஆளுமையைச் சார்ந்துள்ள, எண்ணிக்கையுடைய உளவியல் குணக்கூறுகளைத் தீர்மானிப்பதற்காக உருவாக்கப்பட்டது.[26] இச்சிறுமியர்களின் ஆசிரியர்களிடம் 46 குணக்கூறுகள் கொண்ட பட்டியல்கள் தரப்பட்டு, அவர்களை ஒவ்வொரு தனிப்பட்ட சிறுமிக்கும் உரிய குணக்கூறு எதுவென்று பட்டியலில் அடையாளக் குறியிடுமாறு கேட்கப்பட்டது. இத்துடன் ஒவ்வொரு சிறுமியும் அவளது வகுப்பிலுள்ள மற்றச் சிறுமியர்கள் ஒவ்வொருவரையும் எண்ணும்பொழுது தனது மனத்திற்குள் ஏற்படும் விருப்பமான உணர்வுகளை 10 வகைகளாகப் பிரிக்கப்பட்டதில் குறியிட்டுத் தங்களது எண்ணங்களைக் காட்டினர். ஒவ்வோர் ஆசிரியரும், ஒவ்வொரு சிறுமியும் பெற்றிருக்கின்ற ஆளுமை மற்றச் சிறுமிகளுடன் ஒப்பிடும்பொழுது எந்த அளவில் உள்ளது என்றும் குறித்தனர். ஆளுமைக்கும் தலைமைக்கும் இடையே திட்டமான உறவு இருப்பதாகக் காணப்பெறுகின்றது. இளையோர் சிறுமிகளின் தலைவர்கள் அவர்களுடைய உடன் வாழ்நரிடம் மிகவும் இனிமையாக இருக்கின்றனர். சிறுமியரிடையே உள்ள தலைமையுடன் உறுதியாகவும் குறிப்பிடும்படியாகவும் தொடர்பு கொண்டுள்ள குணக்கூறுகள் அவைகளின் ஒப்பீட்டடிப்படையில் கூறினால், சுறுசுறுப்பான தன்மை, பரந்த அக்கறைகள், நுண்ணறிவு, நல்ல பெருந்தன்மை, பிறிதின் சார்பற்ற தன்மை, விளையாட்டில் தீரம், மதி நுட்பம், நகைச்சுவை உணர்வு, கலாசாரம், தனித்தன்மை ஆகியவைகளாகும்.

## சமூகமயமாக்குவதில் உள்ள பிரச்சினைகள்

சமூகப் பிரச்சினைகளை இளையோர் சிறுமியர் இளையோர் சிறுவர்களைக் காட்டிலும் அடிக்கடி நுகர்கின்றனர். இப்பிரச்சினைகளில் சில நாம் பின்னர் இளையோர்களையும் அவர்களது ஒப்பார்களையும் பற்றித் தொடர்பு கொள்ளும் பொழுது மேலும் விவாதிக்கப்படும். மிகக் குறைந்த சமூக வாழ்வு, நண்பர்களின்மை, நடனம் ஆடுவதற்குக் கற்றுக்கொள்ள ஆவல், சமூகச் செயல்களுக்குச் செலவிடப் போதிய பணமின்மை, புதிய உடைக்கு ஆசை போன்ற பல பிரச்சினைகளைப்

[26] E. G. Fleming, 'A Factor Analysis of the Personality of High School Leaders', Journal of Applied Psychology, 1935, Vol. 19, pp. 596-605.

பல்வேறு இளைஞர்கள் நுகர்கின்றனர். முன்னிளையோர் பருவத்தில் எழுகின்ற சமூகவுணர்வு, இக்காலத்திலுள்ள சமூகத் தன்மையான பிரச்சினைகளின் வளர்ச்சிக்கு முக்கிய ஏதுவாகிறது. எளிதில் அஞ்சுகின்ற தன்மை, மாறும் மனப்போக்கு உடைய தன்மை, மனநிலை வெடிப்புகள், பகற்கனவு காணும் போக்குகள் அடிக்கடி விளைவுகளாகின்றன. லூசியின் வரலாறு இவ்வேதுக்களின் சேர்க்கை எவ்வாறு ஓர் இளையோர் சிறுமி சமூகமயமாதலைப் பாதித்தது எனக் காட்டுகின்றது.[27]

லூசி என்னும் 12 வயதுச் சிறுமி அவளுடைய வயதினரையும் படிவத்தினரையும் காட்டிலும் அதிக உயரமாயிருந்தாள். அவளது நுண்ணறிவு ஈவு 90 ஆதலின் அவளது பள்ளி வேலையைத் திருப்தி அளிக்கும் முறையில் செய்வது கடினமாக இருந்தது. ஆதலின் அவள் தனது பள்ளி வேலையில் மிகவும் பின்தங்கி இருந்தாள். அவள், தன்னைக் காட்டிலும் பெரும்பான்மையான சிறுமியர் வயதில் ஓர் ஆண்டு குறைந்தவராய் இருக்கும் படிவத்தில் இருந்தாள். எனினும், அவளால் பள்ளி வேலையில், குறிப்பாக வாசிப்பதில் திருப்திகரமான அளவு செய்ய இயலவில்லை. அவளது கீழான கலாசாரக் குடும்பப் பின்னணியும் இதற்கு ஓரளவு காரணமாய் இருந்தது. வீட்டின் ஏழ்மை நிலை அவளது மகிழ்ச்சியற்ற சூழலை வெல்லுதற்கு ஒரு சிறிய அளவு முயற்சியும் செய்யவில்லை. அவள் பொதுவாக மோசமான, தாறுமாறான உடையை உடுத்தியிருந்ததனால், மற்றவர்கள் அவள்மீது கவர்ச்சி கொள்ளாமல் இருந்தனர்.

ஆசிரியர் அவளது பிரச்சினைகளை உணர்ந்து அவள்மீது இரக்க நோக்கு கொண்டிருந்தார். லூசி அவளுடைய இடத்திலிருந்தே பாடம் ஒப்புவிக்க அனுமதிக்கப்பட்டாள். அவள் என்றும் கரும்பலகை அருகே போகும்படி கூறப்படவில்லை. இச் செய்கை அவளைத் தடுமாற்றத்திற்குள்ளாக்கும் என்று கருதப்பட்டதாலேயே தவிர்க்கப்பட்டது. மேலும், லூசி மற்ற வகுப்பு உறுப்பினர்களுடன் ஒரே சீராக நடந்து செல்வதில் சேர்ந்து செல்லவும் விரும்பவில்லை. ஆசிரியர் வகுப்பு வேலையைச் செய்வதில் முறையான தன்மையையே கடைப்பிடித்தாரென்றாலும், மற்றவர்கள் ஒரே சீராக வகுப்புக்கு வெளியே நடந்து செல்லும் பொழுது, லூசியைச் சில வேலைகளைச் செய்து முடிக்க வகுப்பறையில் தங்க வைத்ததில், அவர் அவளிடம் கண்டிப்பைத் தளர்த்தியே நடந்துகொண்டார் என்று தெரிகின்றது. இருப்பினும், ஆசிரியர் கொண்ட இந்நோக்கு லூசியின் பிரச்சினைகளைத் தீர்க்க

[27] *இவ் வரலாற்றினை இந் நூலாசிரியர்*, **'The Psychology of Exceptional Children'** *எனும் நூலில் குறிப்பிட்டுள்ளார்*. **Revised Edition. Copyright 1950 by The Ronald Press Company.**

வில்லை. ஏனெனில், உண்மையில் இப்பிரச்சினையானது தன் உணர்வைக் காட்டிலும் அதிகமான பிரச்சினையாகும். இத் தன்னுணர்வு குழுச் செயல்களுடன் சேர்வதற்குரிய சில பழக்கங்களுடனும் நோக்குகளுடனும் சேர்ந்துகொண்டு முடிவில் 'எதிர்க்கின்ற நோக்கு' என்று வழங்கும் நிலைக்கு வளர்ச்சியடைகின்றது. இதனால், லூசி தான் செய்ய விரும்பிய சில செயல்களை அவள் அவ்வாறு செய்யாமலிருப்பதை மற்றவர்கள் பொறுத்துக்கொள்ள வேண்டும் என்ற உணர்வினைப் பெற்றாள்.

பள்ளி ஆண்டு முடிந்த பொழுது லூசிக்கு வயது பதின்மூன்று. ஏழாவது படிவத்திற்குத் தேறினாள். ஏழாவது படிவ ஆசிரியருக்கு லூசியின் பிரச்சினைகள் அறிவிக்கப்பட்டன. லூசி அவளுடைய முன்னைய ஆசிரியரின் நல்லெண்ணத்தினால் விளைந்த தவறுகளின் காரணமாகப் பயன் அடையத் துவங்கினாள். ஆசிரியர், லூசி சிறப்பான சமூகப் பொருத்தப்பாட்டை ஏற்படுத்திக்கொள்ள வைப்பதையே தனது குறிக்கோளாகக் கொண்டு பணியாற்றத் துவங்கினார். அவளது இல்லத்திற்குச் சென்று காண்பதன்மூலம் அவளுடைய பெற்றோர்களிடமிருந்து ஒத்துழைப்பைப் பெற்றார். லூசிக்கு அதிர்ஷ்டவசமாக அவளது சுற்றுப்புறத்திலுள்ள ஒருத்தி அவளைத் தன் குழந்தைகளைப் பார்த்துக்கொள்ளும் தாதியாக (sitter) வேலைக்கமர்த்திக் கொண்டாள். இது அவளுக்குச் செலவிடுதற்குத் தேவையான பணத்தைத் தந்தது. அவளுடைய திறமையிலும் தகுதியிலும் தேவையான நம்பிக்கையை அளித்தது. ஆண்டு இறுதியில் அவளது சமூகத் தன்மைபெறும் முயற்சியில் குறிப்பிடும்படியான முன்னேற்றம் காணப்பட்டது. இருப்பினும், பெருமளவு வழிகாட்டுதலும் நடத்துதலும் இன்னும் தேவைப்படுகின்றன.

சிறுவர்களும் சிறுமியர்களும் ஒரே வயதினராக இருப்பினும் ஒரே சீரான வளர்ச்சியை அடைவதில்லை. அவர்களது சமூக உணர்வுகளைப் பற்றிய ஆவல்களில் மாறுபாடுகள் இருக்கும். நல்ல சமூக வளர்ச்சிக்குச் சமூக ஈடுபாடு அவசியம் என்றாலும், சிறுவர்களும் சிறுமியர்களும் சமூக வளர்ச்சியைப் பெறுமளவிற்குத் தயாராகுமுன் அவ்வுணர்வுகளைப் பெறுமாறு பலவந்தமாகத் தள்ளுதல் கூடாது. இவ்வுரைக்குத் துணையுரையும் உண்டு. அதாவது இளையோர்கள் சில செயல்களில் ஈடுபட விரும்பும்போது அவ்வீடுபாட்டுக்குரிய வளர்ச்சியைப் பெற்ற பிறகும் அது அவர்களுக்கு மூடப்பட்டிருக்கலாகாது. சமூக நிகழ்ச்சிகளில் ஈடுபாடு கொள்ள இல்லம், கோயில், பள்ளி போன்ற சமூக வாய்ப்புகளை அளிக்கும் நிறுவனங்கள் சிறுவர் சிறுமியருக்கு வாய்ப்பினை ஒழுங்காகத் தருமானால், சிறுவர் சிறுமியர் அவைகளில் ஈடுபாடு கொள்ள இயலும். சில நிகழ்ச்சிகளின்போது சில வயதுக் குழுவின் உறுப்பினர்கள் பார்த்துக்கொண்டிருப்பவர்களாக்

மட்டுமே இருப்பார்கள். படிப்படியாக ஒரு செயலிலுள்ள பங்கினைக் கொள்ளுவதற்குரிய ஆவல் உருவாகும். அதற்குப் பின்னர் அவர்கள் சமூகச் செயல்களில் பங்கு கொள்ளத் துவங்குவார்கள். அதற்கும் பின்னரே முழு உருவம் கொண்ட ஒருமித்த ஈடுபாடு அநேகமாகத் தோன்றும்.

## பண்பாட்டு எதிர்பார்ப்புகள்

ஒரு பண்பாட்டில் சாதாரணமான நிகழ்ச்சியாகக் கருதப்படுகின்ற ஒன்று மற்றொரு பண்பாட்டில் வெறுக்கப்படும். இதைச் சில சமயம் பண்பாட்டுத் தொடர்பில் காணலாம். வெவ்வேறான தேசிய, அரசியல், பின்னணியில் வாழும் மக்களிடமும் இதைக் காணலாம். அமெரிக்கப் பண்பாடு இளையோர் பருவ காலத்தை நீடிக்க விரும்பும் போக்கினைக் காட்டுகிறது. ஆனால், பல பண்படாக் குழுவினரின் பண்பாட்டில் குழந்தை சீக்கிரம் துரித வளர்ச்சி பெற்று இளையோர் பருவத்தினைக் கடந்து முதியோர் பருவத்தை அடைந்து அதற்கான பொறுப்புகளை ஏற்க வேண்டுமென்று எதிர்பார்க்கின்றனர். ஒவ்வொரு பண்பாட்டிலும் அவைகளுக்குச் சொந்தமான விலக்குதல்களும், சட்டங்களும், அறமுறைகளும் உள்ளன. ஒரு தனிப்பட்ட பண்பாட்டில் வெற்றிகரமாகத் தனியன் அப்பண்பாட்டின் நடத்தை வகைகளை ஏற்றுக்கொள்ளும் தன்மையினைப் பெறுகின்றான். ஒவ்வொரு சமூகமும் அதனுடைய உறுப்பினரிடமிருந்து சில வகையான நடத்தைகளை எதிர்பார்க்கின்றது. இருப்பினும் அதனுடைய எதிர்பார்ப்புகள், வயது, பால், சமூக பொருளாதாரச் சூழ்நிலைக்குத் தகுந்தவாறு பிரித்துணர்கின்றது. 7 வயதுச் சிறுமியைப் போன்று 13 வயதுச் சிறுமி ஒருத்தி பொம்மைகள்மீது விருப்பம் காட்டுவாள் என்று நினைப்பதிற்கில்லை. மேலும், 13 வயதுச் சிறுவனைப் போன்ற நடத்தையையே 13 வயதுச் சிறுமியும் கொள்வாள் என்று எதிர்பார்த்தல் தவறாகும். தனியனது சமூக வளர்ச்சியின் பங்காக அவன் தனது வயதுக்குரிய, பாலுக்குரிய பங்கினை செய்யக் கற்றுக்கொள்ள வேண்டும். அமெரிக்கப் பண்பாடு இளையோர் சிறுவனிடமிருந்தும் சிறுமியிடமிருந்தும் எதிர்பார்ப்பது என்ன? எனக் கேள்வி எழலாம். இதைப் பற்றிய செய்திகள் வரவிருக்கின்ற அதிகாரங்களில் தரப்படும்.

## சமூகப் பொருத்தப்பாடும் வகுப்பு அந்தஸ்தும் (Social adjustments and class status)

எங்கெல்லாம் பெரிய குழுக்களைக் கொண்ட தனியன்கள் ஒன்று சேர்கின்றனரோ, அங்கெல்லாம் ஒரு வகையான வகுப்பு அமைப்பு தோன்றுகின்றது. பல்வேறு சமூகங்களிலுள்ள வகுப்பு அமைப்புகளிடையே உள்ள மாறுபாடு, இவ்வகுப்புக் குழுக்களை உண்டாக்கு

கின்ற ஏதுக்களைப் பொறுத்து இருக்கின்றது. (அமெரிக்காவிலுள்ள வகுப்பு அந்தஸ்தினைக் கணக்கிடுவதற்குக் கவனத்துடன் தயாரிக்கப் பட்ட சில முறைகள் தோற்றுவிக்கப் பெற்றுள்ளன.)[28] மேலும், தெளிவாகத் தெரிகின்ற சமூக மாறுபாடுகள் சமூகக் குறிக்கோள் களிலும், வழக்கடிப்பாடுகளிலும், நோக்குகளிலும், வெவ்வேறு சமூக-வகுப்புக்குழுக்களிலுள்ள குழந்தைகள் இளையோரது நடத்தை வகை களிலும், வகுப்பு நடத்தைகள் இருப்பதாகக் காணப்பெறுகின்றது. நடுத்தர வகுப்பிலும் கீழான வகுப்பிலும் உள்ளோரது எதிர்பார்த்தல் களிலுள்ள சில மாறுபாடுகள் அட்டவணை 5—6-ல் தரப்பட்டுள்ளன. நடுத்தர வகுப்பில் கீழான வகுப்புப் பெற்றோர்களிடம் இருப்பதைக் காட்டிலும் குறிப்பிடும்படியான பற்றார்வம் காணப்படுகின்றது. கல்வி, பணத்தைச் சேமித்தல் , பால்நடத்தை, நடத்தைப் பழக்கங் கள், சட்டத்திற்குத் தரும் மதிப்பு ஆகியவற்றின் தொடர்பில், தொடர் பிலுள்ள நடத்தைகளில் இப்பற்றார்வத்தின் சான்றுகளைக் காணலாம். நேர்மையும், சமூக நிகழ்ச்சிகளிலுள்ள வெளிப்படையாகச் சொல்லும் தன்மையும் கீழான வகுப்பின் நடத்தையின் குண இயல்பாக இருக் கின்றது. நடுத்தர வகுப்பினர் பெரும்பாலும் செயல்நயத்தைக் (tact) கடைப்பிடிக்கின்றனர்.

பல்வேறு ஆய்வாளர்களால், தனியன் வளர்கின்ற வகுப்பு அந் தஸ்தினுல் ஏற்படும் சொந்த, சமூக விளைவுகளைப்பற்றி ஆய்வுகள் நடத்தப்பட்டிருக்கின்றன. நியூகார்டன் (Neugarten) ஆய்வின்படி. சமூக அந்தஸ்து 5, 6ஆவது படிவங்களிலும், உயர்நிலைப் பள்ளி நிலையி லும் நற்பெயர் மதிப்பீடுகளைப் பழிப்பதில் வேறுகச் செயற்படுவதாகக் காணப்பட்டது.[29] 5ஆவது 6ஆவது படிவநிலையில் உயர்ந்த வகுப்பு அந்தஸ்து அதனுடன் உடன் நிகழ்கின்றதொன்ருக இசைவான நற் பெயர் மதிப்பீட்டினைக்கொண்டு செல்கின்றது. ஆனுல், கீழான அந் தஸ்துள்ள உறுப்பினன் அவனுடன் இசைவில்லா நற்பெயர் மதிப்பீட் டையே விளைவாகப் பெறுகின்ருன். உயர்நிலைப்பள்ளி நிலையில் உயர் வகுப்பு அந்தஸ்து அவனுக்குக் கவனத்தையும், அனுதாபத்துடன் கவனிக்கப்படும் உறுதியையும் அளிக்கிறது. அவனது நற்பெயர் இசைவுடனே இசைவில்லாமலோ இருந்தாலும், இவ்வுறுதி அவனுக் குக் கிடைக்கின்றது. இவ் வயது நிலையில் கீழ்வகுப்புக் குழந்தை பள்ளியைவிட்டு நின்றுவிடுகிருன் அல்லது அவனது நடுத்தர வகுப்

[28] See W. L. Warner, M. Meeker, K. S. Eells, Social Class in America: A Manual of Procedure for the Measurement of Social Status: Chicago: Science Research Associates, 1949.

[29] B. L. Neugarten, 'Social Class and Friendship Among Children', American Journal of Sociology, 1946, Vol. 51, pp. 305-313,

புக் கூட்டாளிகளின் நடத்தையையும், பயன் மதிப்பையும் ஏற்றுக் கொள்கிறான். இதனால் அவன் அவனது கீழ்வகுப்புக் குண இயல்பு களை இழக்கும் போக்கினைக் காட்டுகிறான்.

## அட்டவணை 5—6

நடுத்தர, கீழ்த்தர வகுப்பைச் சார்ந்த குழந்தைகள், இளையோர்கள் பற்றிய எதிர்பார்ப்புகளை ஒப்பிடுதல்.

| நடுத்தர வகுப்பு | கீழான வகுப்பு |
|---|---|
| குழந்தைகள் உயர்நிலைப் பள்ளியை முடிக்கவேண்டும் எனும் பற்றார்வம். | பெற்றோர்கள் தங்களது குழந்தைகள் உயர்நிலைப் பள்ளியை முடிப்பதில் ஆர்வமின்றி இருத்தல். |
| கல்வியைப் பெறுவதற்காகத் திருமணத்தைத் தள்ளிப் போடுவதற்கு வலியுறுத்தல். | சீக்கிரமே திருமணம் ஆவதும், குடும்பப்பொறுப்பை ஏற்பதும் சாத்தியமே. |
| பால் அக்கறைகளில் துவக்க விலக்கல்கள் பொழுதுபோக்குத் திறம்பட அமைக்கப்பட்டு மேற்பார்வையிடப்படுகின்றது. | ஒப்புமையில் பால் அக்கறை பற்றிய விலக்கல்கள் இல்லை. குழந்தைகளின்பொழுதுபோக்குகளை அதிகமாக மேற்பார்வையிடுவதில்லை. |
| குழந்தைகளுக்குப் பணம் தரப்பட்டு, சேமித்து வைக்கும் பண்பை வளர்க்க ஆர்வமூட்டப் படுகின்றது. | அவர்கள்விருப்பப்படி அவர்களிடமுள்ள பணத்தைச் செலவிட அனுமதியளிக்கப்படுதல். |
| பள்ளித் தரங்களிலும், உயர்நிலைப் பள்ளிப் பட்டத்தைப் பெறுவதிலும் அக்கறை ஊட்டப்படுகின்றது. | நல்ல தரங்களைப் பற்றிக் கவலையும், உயர்நிலைப் பள்ளிப் பட்டம் பெறுதல் பற்றிய கவலையும் கொள்வதில்லை. |
| பலாத்காரத்தைக் கட்டுப்படுத்தல் வேண்டும். குழந்தைகள் சண்டையிடுதலில் ஆர்வத்தைக் குறைக்கின்றார்கள். | குழந்தைகள், குறிப்பாகச் சிறுவர்கள் தங்களது உரிமைக்காகப் போராடும்வழக்கத்திற்கு ஆர்வமூட்டப்படுகின்றனர். |
| சட்டத்திற்கும் போலீஸ்காரருக்கும் மதிப்பளிக்கக் கற்றுத் தரப்படுகின்றது. | சட்டத்திற்கும் போலீஸ்காரருக்கும் அச்சம்ஊட்டப்படுகின்றது. |

அட்டவணை 5—6 (தொடர்ச்சி)

| நடுத்தர வகுப்பு | கீழான வகுப்பு |
|---|---|
| சமூக நிகழ்ச்சிகளில் செயல் நயம். | சமூக நிலைகளில், நேர்மையும் வெளிப்படையாகப் பேசுவதும் பழக்கப்படுத்தப்படுகின்றன. |
| கல்வியும், மேல்சமூக வகுப்புக்குப் போகும் தன்மையும் வலியுறுத் தப்படுகின்றன. | வேலைபெறுவதும் பணப் பொறுப்பு ஏற்றுக்கொள்வதும் வலியுறுத் தப்படுகின்றன. |
| குழந்தை சரியான நடத்தை வகை யினைக் கைக்கொள்கிறான். சமூக இடைவினைக்குத் தேவையான நன்னடத்தை முறையில் கவ னம் அளிக்கப்படுகின்றது. | சரியான நடத்தை முறைக்கு அதிக முக்கியத்துவம் தரப்பட வில்லை. |

**சமூகமயமாக்குவதில் தோல்வி**

போனியால் (Bonney) நடத்தப்பட்ட ஆய்வு சமூகத்தில் பொது வாக ஏற்றுக்கொள்ளப்படுகின்ற தனியனையும், சமூகத்தில் தோல்வி யடைந்தவனையும் ஒப்பிட்டு, வெற்றியடையும் தனியனது வகை யைத் தீர்மானிக்கவே அமைக்கப்பட்டதாகும்.[80] இவ்வாய்வின் குறிப்புகளைச் சேகரிக்க இரண்டு முறைகள் பயன்படுத்தப்பட்டன. அவைகளாவன: (1) குணக்கூறு தரமிடுதல் — ஆசிரியர்களும் மாணவர்களும் கலந்துகொள்ளுதல்; (2) மாணவர்கள் நண்பர்களைத் தேர்ந்தெடுக்கும் வகை-சமூக அளவையியல் முறையாக இது கருதப் படுகின்றது. இவ்வாய்வில் உருவாகின்ற ஓர் உண்மை என்னவெ னில், நல்ல புகழுடன் விளங்கிய மாணவர்கள் வலுத்தாக்கும் தன்மை யுடையவர்களாகவும், துலங்கலில் அதிகமான வெளிநடத்தைகள் கொண்டவர்களாகவும் இருந்தனர். அடங்கிய குழந்தைகளுக்கோ, பணிவணக்கமுள்ளோர் குழந்தைகளுக்கோ உயர்ந்த சமூக அனுமதி யுடைய குழந்தைகள் என்ற அனுமதி கிடைப்பதில்லை என்றும்

[80] M. E. Bonney, 'Personality Traits of Socially Successful and Unsuccessful Children', Journal of Educational Psychology, 1943, Vol. 34, pp. 449-472.

கண்டனர். நன்கு ஏற்றுக்கொள்ளக்கூடிய குழந்தையாகவோ அல்லது இளையோனாகவோ இருக்க, குழுவில் நன்றாக மதிப்புப் பெற உறுதியான பண்புகளை உடைமையாக வைத்திருத்தல் தேவை என்பதையும் அறிந்தனர். குழந்தைகளிடத்தும் இளையோரிடத்தும் புகழ் பெற நல்ல பலமுள்ள ஆளுமைகளையும், ஆர்வத்தையும், நட்புத்தன்மையையும், திறன்களில் வல்லமையையும் கொண்டிருக்க வேண்டும். முன்னைய அதிகாரத்தில் குறிப்பிட்டபடி வயதுடன் மாறுதல்கள் இருந்தாலும், தனியன் எல்லா வயது நிலைகளிலும் அவனது இசைவான செயல்திறம் மிக்க செயல்களால்தாம் புகழ் பெறுகிறானேயன்றி அவனது கட்டுப்பாடுகளாலோ அடக்கிவைத்தலாலோ அல்ல என்று கூறுவதற்குப் போதிய சான்றுள்ளது.

சமூகத் தொடர்புகளின் பலவாம் தன்மை (variety) வயதுடன் அதிகமாகின்றது. இளையோன் அதிகமான சமூகத் தேவைகளையும், புது சமூகத் திறன்களையும் பெறத் தூண்டப்படும்பொழுது, சமூகத் தொடர்புகள் அதிகமாகின்றன. குழந்தை சுற்றுப்புறத்திலுள்ள துவக்கப் பள்ளியிலிருந்து பல சுற்றுப்புறங்களுக்குப் பயனளிக்கும் வகையிலுள்ள ஜூனியர் உயர்நிலைப் பள்ளிக்குப் போகும்பொழுது, அவன் இல்லத்தினுடைய தற்காப்பையும் சுற்றுப்புறங்களையும் வெகுவாக இழக்கின்றான். அவனுடன் படிப்போரில் பலர் அவனுக்கு அயலாராகத் தோன்றுகின்றனர். வெவ்வேறான இல்லப் பின்னணியில் இருந்து வருகின்ற சிறுவர்களுடனும், சிறுமியர்களுடனும் சமூகத் தொடர்புகள் செய்து கொள்ளல் வேண்டும். பல பள்ளி நிகழ்ச்சிகளில் அவனது உடன்படிப்போருடன் அவன் ஒத்துழைக்கவும், உடன் இணைந்து வேலை செய்யவும் கற்றுக்கொள்ள வேண்டும். ஆதலின், அவன் அதிகமான எண்ணிக்கையுடைய ஆசிரியர்களுடனும், பல சிக்கலான அமைப்புகளுள்ள கல்வித் தேவைகளுடனும், சமூகத் திறன்களில் எளிதில் வளையக்கூடியவைகளுடனும் நல்ல பொருத்தப்பாடுகளை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். சமூக மயமாகின்ற வழியில் தோல்வி ஏற்படுமாயின் தீவிரமான அகமுகம் கொள்வது, பகற்கனவு காண்பது அல்லது சமூகத்துக்கு எதிரான போக்குகள் கொள்வது ஆகியவை ஏற்படும்.

இளையோர் பருவத்தில் தடையற்ற சமூகப் புணர்ச்சி ஏற்படுவதற்கு அதிகமான தடைகள் தோன்றலாம். இவ்வதிகாரத்தின் துவக்கத்தில் குறிப்பிட்டது போன்று சமூக உணர்வு வளர்ச்சியடையும் பொழுது நிற, சமய, தேசியப் பின்னணிகளும், சமூக வகுப்பு மாறுபாடுகளும் மிக அதிகமாக வளர்கின்றன. இவை நண்பர்களைத் தேர்ந்தெடுப்பதிலும், நாளிடல்களைத் தேர்ந்தெடுப்பதிலும், சிறு குழுக்களில் உறுப்பினராக இருப்பதிலும் அதிகமான முக்கியத்துவம் வாய்ந்த ஏதுக்களாக ஆகின்றன. நெறிமாறிய ஆளுமைகள், தனியன்

அதிகமான பலவாம் தன்மையுடைய சமூகத் தொடர்புகளை ஏற்படுத்தும்பொழுது தெள்ளெனத் தெரிகின்றன. இளையோனின் உடலியல் வளர்ச்சி, புதுத் தொடர்புகள், செறிவான மனவெழுச்சிகள், விரிவடைந்த மனவாழ்வு ஆகியவை விரிவடைந்த ஒரு புதிய தனியனை உருவாக்குகின்றன. இப்புதுத் தனியன் இசைவான வழிகளில் வளர வேண்டுமானால் அனுதாபத்துடன் வழிகாட்டுதல் தேவைப்படுகின்றது.

## அதிகாரச் சுருக்க உரையும் பொதுமைகளும்

குழந்தை இளையோர் பருவத்துக்கு முதிர்ச்சியடைவதும் வளர்ச்சியடைவதும், மனவெழுச்சி வாழ்க்கைக்கு நெருங்கிய தொடர்புள்ள சுரப்பி மாறுதல்களுடன் தோன்றுகின்றன. வாழ்க்கையின் இப்பருவத்தில் உள்ள செறிவான மனவெழுச்சி நிலை, இளையோர் பருவத்தினது இயற்கையான பகுதி என்று ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. இருப்பினும், இக்காலத்தில் உள்ள செறிவான மனவெழுச்சி நிலையுடன் மனவெழுச்சிகள் சமூக அமைப்பில் விரிவடைதலும் காணப்படுகின்றது. சமூக நிகழ்ச்சிகளினால் ஏற்படுகின்ற அச்சங்களும் கோபங்களும் அதிக முக்கியத்துவம் வாய்ந்தவையாக ஆகின்றன. தன்னுணர்வு உள்ள உணர்ச்சிகள் ஒருவனுடைய பொருத்தமான தன்மையைப்பற்றி ஏற்படுகின்றன. இளையோன் குறிப்பாக அவனது ஒப்பாரின் அனுமதியைப் பற்றி வெகுவாகக் கருதுகின்றான். இவ்வதிகமான அச்சம் வகுப்பறை நிகழ்ச்சிகளின் உற்று நோக்குதலில் காணப்பட்டது. வகுப்பில் ஒப்புவிக்க அச்சம், தோல்வி பற்றிய அச்சம், மற்றவர்கள் எள்ளி நகையாடுவர் எனும் அச்சம் ஆகியவை இவ்வயது நிலையில் மிகவும் குறிப்பிடும்படியாக இருக்கின்றன.

மனவெழுச்சி வளர்ச்சியும் இயக்கத்திறன் எனும் முக்கிய வளர்ச்சியும், முதிர்ச்சி யடைதலையும் கற்றலையும் சார்ந்துள்ளன. சமூக வளர்ச்சியின் உறவை கைக்குழந்தை தாயிடம் காட்டும் துவக்க மனவெழுச்சி சமூகத் துலங்கல்களில் காணலாம். மனவெழுச்சி வளர்ச்சியும், சமூக வளர்ச்சியும் ஒவ்வொரு நிலையிலும் ஏற்படும் குழந்தையின் சமூகத் துலங்கல்களுடன் மிகத் தெளிவாக இணைந்துள்ளன. சமூக வளர்ச்சியின் பொதுத்தன்மைபற்றி கான்ரேடி (Conradi) குறிப்பிடுகிறார்: வளர்ச்சி அடிப்படையில் குழந்தை பல்வேறு நிலைகளின் தொடர்ச்சியில் வளர்கின்றது. மனிதர்களது அருகில் இருப்பதற்கு விரும்புவதிலிருந்து மனிதர்களது எதிர்வினைகளையும் பண்புகளையும் சோதனை செய்யும் வரையிலும்; ஒருவர் என்ன செய்கிறார் என்று பார்ப்பதிலிருந்து அதே செயலைச் செய்ய முயற்சிப்பது வரையிலும்; மற்றோர் ஆள்போன்று அதே சமயத்தில் அதைச் செய்வதிலிருந்து ஒரே பொருளைப் பலர் செய்வதில் பொது

வான நோக்கு மக்கள் கொண்டிருப்பார்கள் என்று புரிந்து கொள்ளும் வரையிலும்; இதிலிருந்து வெவ்வேறு செயல்களைச் செய்வதிலும் பொதுவான நோக்கு கொண்டிருக்கலாம் என்று முடிவில் மக்கள் உணரும் வரையிலும்--அதாவது முயற்சியில் பங்கு கொள்வதும், உழைப்பினுல் தனிச்சிறப்புடையவையாக ஆக்குவதுமேயாகும்.

குழந்தை கடைசியில் குழு நோக்குத் தனியனுக்கும், குழுவிற்கும் திருப்தியளிக்கும் வகையில் இருக்க வேண்டுமென்று உணரத் தொடங்கினர். ஆனால், அவன் திறமைக்கேற்பவும், அவனது உட்காட்சிக்கேற்பவும் நர்சரி பள்ளி ஆசிரியரின் துணையாலோ, துவக்கப் பள்ளி .உயர்நிலைப்பள்ளி ஆசிரியர்களின் துணையாலோ வழிகாட்டப் பெற்று, அவனது திறமைக்கும் உட்காட்சிக்கும் ஏற்ப வேலை செய்ய வேண்டும்.[31]

இவ்வதிகாரம் முழுவதிலும் இளையோர் பருவத்திற்கு வளர்ச்சியடைதலுடன் சொந்தத் தோற்றத்திலும், ஒருவனது ஒப்பாரிலும், மாற்றுப் பாலார் ஈடுபடும் சமூகச் செயல்களில் உறுப்பினர் பங்கு கொள்வதும் உடன் நிகழ்வதாகும் எனக் கூறப்பட்டுள்ளது. இளையோன் திருப்திகரமான சமூகப் பொருத்தப்பாடுகள் ஏற்படுத்தும் அளவு பல ஏதுக்களைப் பொறுத்ததாகும். அது துவக்க ஆண்டுகளிலுள்ள வளர்ச்சி வகைகளையும் சேர்ந்துள்ளதாகும். இது கான்ரேடி (Conradi) சொன்ன கருத்துடன் ஒன்றி இருக்கிறது. அது வளர்ச்சியும் முதிர்ச்சியும் இயற்கையில் மெதுவாக அமையும் என்னும் கருத்தை வலியுறுத்துகின்றது. ஆதலின், சிறுவர்களும் சிறுமியர்களும் வாழ்க்கையின் வெவ்வேறு நிலைகளில் சமூகத்தில் பங்கு பெறுதலினுல் வளர்ச்சியடைவதற்கு வாய்ப்புகள் பெறுவது கட்டாயத் தேவையாகும். இவ்வாருகப் பங்கு பெறுதல் குழந்தையின் முதிர்ச்சி நிலையிலேயும் பழைய அனுபவங்களில் மட்டுமே நிற்பார்களானுல், அது சிறப்பானதாயிருக்கும்.

இளையோர் பருவத் துவக்கத்திலிருந்தே சங்கங்கள், குழு விளையாட்டுகள் போன்றவைகளில் பங்குபெற அதிகமான அக்கறை கொள்கின்றனர். இசைவான வழிகாட்டுதல் மூலம் சாதாரண வளர்ச்சி ஏற்பட இளையோர்கள் வாய்ப்புப் பெறுவார்களானுல், அவர்கள் தொடர்ந்து தங்கள் பாலார், மாற்றுப்பாலார் ஆகியோருடைய நட்பையும் நாடுவார்கள். சமூகக் குணங்கள் அவர்களது பேச்சு,

[31] C. Conradi, 'Participating in Shared Child-Adult Activities', Fostering Mental Health in Our Schools. 1950 Yearbook of the Association for Supervision and Curriculum Development, pp. 161-162.

நடத்தை, பொதுவான இயக்க வெளிப்பாடு ஆகியவைகளில் அதிகமாகத் தெரிகின்ற அளவில் உள்ளன. சமூக மனிதன் தன் வளர்ச்சியில் மற்றவர்களுடன் தொடர்பு கொள்ள வேண்டும். ஆனால், வேறு சில பொருள்களும் மிகவும் தேவையானவையாகும். அவை யாவன :

1. சில முக்கியமான நடத்தை. சான்றாக ஒரு மொழி, குறி, இனம் அல்லது குறிக்கோள்.

2. மற்றவர்களது செயல்களில் கருத்தேற்றத்தின் விளைவு.

3. குறைந்த அறிமுகம், இணைப்பு அல்லது பொதுவான இடையுணர்வு அல்லது இடைப்போக்குவரத்து.

## சிந்தனைக்குரிய பிரச்சினைகள்

1. சமூக வளர்ச்சி என்ற சொல்லுக்கு என்ன பொருள் கொள்ளுவாய்? குழந்தையின் சமூக வளர்ச்சியினைப் பாதிக்கும் மிகவும் முக்கியமான ஏதுக்கள் எவை?

2. பத்து வயது சிறுவர்களின் விளையாட்டு, பொழுதுபோக்கு வாழ்க்கையினை எவ்வகையான செயல்கள் குறிக்கின்றன? பத்து வயது சிறுமியர்கள் எவ்வாறு இருப்பர்? 13 வயது சிறுவர்கள் எவ்வாறு இருப்பார்கள்? 13 வயது சிறுமியர் எவ்வாறு இருப்பர்?

3. உன்னுடைய பதின் ஆண்டுகளின் துவக்க காலத்தில் உற்ற நண்பனாய் இருந்தவனைப் பற்றிக் கருதவும். அந் நண்பனைத் தேர்ந்தெடுக்கத் தூண்டிய ஏதுக்கள் யாவை? அவை அவ்வதிகாரத்தில் இப்பிரச்சினைபற்றிக் கூறப்பட்டவையுடன் ஒத்தமைகின்றனவா?

4. மொழி எவ்வாறு சமூக வளர்ச்சியுடன் தொடர்பு கொண்டுள்ளது? மொழிப்பயிற்சி சமூக வளர்ச்சியைத் துரிதப் படுத்துமா? அல்லது சமூக மையமாக இயல்பினைத் துரிதப்படுத்துமா? விளக்குக.

5. இவ்வதிகாரத்தில் தரப்பட்டுள்ள மனவெழுச்சி வெளிப் படுத்தல்களில் ஏற்படுகின்ற மாறுதல்களின் முக்கியத் துவம் யாது?

6. ஜேம்ஸ் லாங்கின் (James Lange) மனவெழுச்சிக் கொள் கையைக் கருதவும். அக் கொள்கையை ஆதரிக்க நீ தரும் சான்றுகள் யாவை?

7. மனவெழுச்சிக் கட்டுப்பாடு பற்றிய சில கொள்கைகளை வரிசைப்படுத்துக. இவைகளில் எவையெல்லாம் உன்னுடைய வாழ்க்கையில் மிகவும் பயனுள்ளனவாய்த் தோன்றின?

8. இளையோர்களின் சமூக வளர்ச்சி பற்றிக் கருதுகின்ற முக்கிய நிறுவனங்கள் யாவை? உன்னுடைய சொந்த அனுபவத்தின் அடிப்படையில் அவற்றின் பயன் பற்றி மதிப்பிடுக.

9. சமூக, பால் வளர்ச்சி பற்றிக் கருதுகின்ற அட்டவணை 5-5ல் உள்ள பொருள்களை மிக நன்றாக ஆய்வு செய்யவும். இம் முடிவுகளில் காணப்படுகின்ற முக்கியப் பால் மாறுபாடுகள் யாவை? இம்மாறுதல்களுக்குரிய காரணங்கள் யாவை?

10. இளையோர்களிடத்துக் கூட்டுறவு, சமூக உணர்வு, தன் கட்டுப்பாடு ஆகியவைகள் வளர்வதற்கு ஆக்கமளிக்கக் கூடிய வழிகள் யாவை?

## தெரிவுசெய் நூற்பட்டியல்

1. Anderson, J. E., 'Changes in Emotional Response with Age', Feelings and Emotions (M. L. Reymert, Editor). New York: McGraw-Hill Book Co., 1950, Chap. 34.

2. Cole, L., 'Psychology of Adolescence' (Fourth Edition). New York: Rinehart and Co., Inc., 1954, Chaps. 4 and 9.

3. Cruze, W. W., 'Adolescent Psychology and Development',' New York: The Ronald Press Co., Chaps. 7 and 8.

4. Hurlock, E. B., 'Adolescent Development', New York: McGraw-Hill Book Co., 1949, Chap. 4.

5. Kuhlen, R. G., 'The Psychology of Adolescent Development'. New York: Harper & Bros., 1952, Chaps. 6 and 7.

6. Malm, M., and O. G. Jamison, 'Adolescence'. New York: McGraw-Hill Book Co., 1952, Chap. 5.

7. Olson, W. C., 'Child Development', Boston : D. C. Heath and Co., 1949, Chap. 10.

8. Sadler, W. S., 'Adolescence Problems', St. Louis : C. V. Mosby Co., 1948, Chap. 5.

9. Seidman, J. M., 'The Adolescent: A Book of Readings', New York : The Dryden Press, 1953, Chap. 5.

10. Zachry, C. B., and M. Lighty, 'Emotions and Conduct in Adolescence', New York : Appleton - Century - Crofts. Inc., 1940, Chap. 11.

## பகுதி III

# 6. வயதுடன் அக்கறைகளில் ஏற்படும் மாறுதல்கள்

## அக்கறைகள் : அவற்றின் தன்மையும் வளர்ச்சியும்

### அக்கறைகளின் பொருள்

இளையோன் மாறுத சூழ்நிலையில் செயலற்றவன் என்று எந்தப் பொருளிலும் கூற இயலாது என ஏற்கெனவே கூறப்பட்டுள்ளது. இளையோன் கைக்கொள்ளும் எதிர்வினையின் தன்மை சூழ்நிலையினுல் தீர்மானிக்கப்படுவதுடன் உயிரியின் சத்துகளாலும், துவக்க ஆண்டுகளில் கிடைத்த பட்டறிவுகளினுலும், நரம்பு மண்டலத்தில் ஏற்படுத்தப்பட்ட மாற்றங்கள் செல்லுகின்ற தனித்த வழியாலும் தீர்மானிக்கப்படுகின்றது. அக்கறை என்பது அப்பொழுது தனியனிடத்து அவனது ஆடைகளும் அவாக்களும் அடைகின்ற வழியை நோக்கிச் செல்வதற்கான எதிர்வினையை அளிக்கின்ற பயன் கருதி நிகழ்கின்ற நிகழ்ச்சி எனக் கொள்ளலாம்.

அக்கறை எனும் சொல்லுக்கு ஆங்கில இணைச் சொல்லான 'இன்டெரஸ்ட்' (interest) எனும் சொல் இலத்தீன் மொழியிலுள்ள 'இன்டரஸ்ஸி' (interesse) எனும் சொல்லிலிருந்து பெறப்பட்டுள்ளது. அதன் பொருள், 'இரண்டிற்கும் இடையே உள்ள' 'மாற்றத்தை உண்டாக்குகின்ற', 'கவலையுறுகின்ற' 'பயனுடையதாயுள்ள' என்பதாகும். அக்கறை என்பது விரும்புகின்ற குறிக்கோளை அடைய 'இடையேயுள்ள ஒன்ருக' விளக்கப்படுகின்றது. அல்லது அது தனியனின் இயக்கவுவிளுலும், பயனுலும், இன்பத்திளுலும் அல்லது பொது சமூகத் தொழில் முக்கியத்துவத்திளுலும் பயனுள்ளதாய் இருக்கும்

குறிக்கோளை அடையக் கடைப் பிடிக்கப்படும் வழியாகவும் கருதப்படுகின்றது. அக்கறை என்பது தனியனின் வாழ்வில் கொள்ளும் ஒரு மனவெழுச்சி நிலையாகும். அது பழக்க அமைப்புகளுடன் இடைத் தொடர்புகள் கொண்டிருக்கின்றது. மேலும், அக்கறை கொண்டுள்ள நிலையில், சூழ்நிலையில் சில பகுதிகள் தனித்து இருக்கின்றன. அது கவனத்தை ஈர்க்கின்ற புறக்காரணங்களால் செறிவு, பரப்பு, காலம், இயக்கம் ஆகியவற்றினால் மட்டுமல்லாது அகத்தே நரம்பு, தசை மண்டலங்களில் தோன்றுகின்ற மாற்றங்களினாலும் ஏற்படுகின்றது. உயிரி சில எதிர்வினைகளை ஏற்றுக்கொண்டு மற்ற வகைகளைத் தவிர்க்கின்ற வகையில், அக்கறை எனும் சொல் பொதுவாக, உயிரி ஏன் சில நிகழ்ச்சிகளை மட்டும் விரும்பி அதனுடன் தேர்ந்தெடுத்த வகையில் எதிர்வினை கொண்டிருக்கின்றது என்பதை விளக்கப் பயன்படுத்தப்படுகின்றது. அக்கறை தன்னிச்சையான கவனத்துடன் நேரடித் தொடர்பு கொண்டுள்ளது. அக்கறையில்லாதபோது, கவனம் உடனடியாக நெகழ்வுத் தன்மை பெறுகின்றது.

உயிரியை, அறிந்த உடலியல் சமூக உந்துகவின் அடிப்படையில் அணுக வேண்டும். ஆதலின், அறிவின் வளர்ச்சியினாலும், பட்டறிவுகளின் முதிர்ச்சியினாலும், குறிப்பிட்ட பழக்க அமைப்புகளின் இணைப்பினாலும், தனியன் இளையோர் பருவத்தை அடையும் பொழுது அகவய (intrinsic) புறவய (extrinsic) அக்கறைகளைப் பெறுகிறான். இவ்வக்கறைகளுக்கிடையே ஒரு சமநிலை இருப்பது நலமாகும்.

உளவியல் அறிஞர்கள் இளையோர் பருவத்தைப் பரந்த, வினோதமான அக்கறைகளைக் கொண்ட பருவம் என்று குறிக்கின்றனர். எல்லா அக்கறைகளும் பட்டறிவினால் தோன்றுகின்றன. உயிரியின் வாழ்க்கை அனுபவங்கள் மேலும் அக்கறைகள் வளர்ச்சியடைய வழிகாட்டியாக அமைகின்றன. குழந்தையின் வாழ்க்கையில் அக்கறையைத் தோற்றுவிக்க முயலும்போது, ஒன்றை மனத்தில் கொள்ள வேண்டும். கற்றல் விதிகளின் அடிப்படையில் அக்கறைகளை அமைக்க வேண்டும். மற்றப் பழக்கங்கள் எவ்வாறு அமைகின்றனவோ அவ்வாறே இதுவும் அமையவேண்டும். நன்றாகப் பல காலம் உற்று நோக்கியதில், வெவ்வேறு தனியன்கள் குறிப்பிட்ட சூழ்நிலையில், தாங்கள் இயங்குகின்ற வழிகளைத் தங்களுக்கு இசைந்தவாறு அமைத்துக் கொண்டதைக் கண்டார்கள். இவை ஒவ்வோர் உயிரியின் தனித்த தன்மையையும் ஒத்திருக்கின்றதைக் காணலாம். ஓர் இளையோன் விளையாடச் செல்லாது நூல் ஒன்றினைப் படிக்கிறான் என்றால், அதில் அவனுக்குத் தனித்த அக்கறை இருக்கின்றது என்று நாம் கொள்ளலாம். அவ்வக்கறையே தனித்த செயலினைச் செய்ய

உந்துவாக (drive) அமைகின்றது. ஒரு சிறுவன் ஒரு விளையாட்டில், அவ்விளையாட்டின் காரணமாகவோ அல்லது பொழுது போக்குக் காரணமாகவோ அல்லது உடற்பயிற்சி பெறவேண்டியோ ஈடுபடுகிருன் என்ருல், அவனது அக்கறையை அகவயமான அக்கறை எனக் கொள்ளலாம். அல்லது அவ்வக்கறை தன்னுள் முடிவடையும் தன்மை கொண்டதாகும் (an end unto itself). ஆனல், அதற்கு மாருக விளையாட்டில் கவனம் செலுத்தும் ஒருவன் தன்னைப் பொருந்தியவனுக ஆக்குவதற்கோ அல்லது சில தேவையான குண இயல்புகளைப் பெறுவதற்கோ ஈடுபடுகிருன் என்ருல், அவ்வக்கறை புறவய அக்கறைக்கு இலக்கணமாக அமைகின்றது, அல்லது தேவையான ஒன்றினைப் பெறுவதற்குரிய சிறந்த வழியாக அமைகின்றது. விளையாட்டு, நூலைப் படித்தல், காரை ஓட்டுதல் அல்லது எந்தச் செயலில் ஈடுபட்டாலும் அதில் அகவயமான அல்லது புறவயமான அக்கறை இருக்கின்றது. அகவய அக்கறை புறவய அக்கறையைக் காட்டிலும் தானுக ஆற்றெழுக்காகத் தோன்றுகின்ற ஒன்ருகும்.

இளைஞர்களிடத்தும், இளையோர்களிடத்தும் அதிகமாகக் காணப்படுகின்ற அமைதியின்மையைக் கட்டுப்படுத்த விரும்பும் பெற்ருேர்கள், ஆசிரியர்கள், இளையோர் நலம் நாடுவோர் ஆகியோருக்கும் அக்கறைகளின் தன்மையிலுள்ள இம்மாறுபாடு முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ஒரு தனியன் தனக்கு இன்பம் தரவல்ல அகவய அக்கறைகளுக்கு உடன் செயலுறுகிருன். எடுத்துக்காட்டாக, ஒருவன் உடல் ஆரோக்கியத்துக்கு உகந்த ஒரு சாதாரண உணவைக் காட்டிலும் நல்ல அருமையான விருந்துணவையே விரும்புவான். அதே சமயத்தில் இளையோர் பருவத்தைத் தனியன்கள் அன்ருட வாழ்க்கை அனுபவங்களின் அடிப்படையில் விரும்புகின்ற குறிக்கோளை அடையப் பயன்படுத்தும் முறைகள் பற்றிய பரந்த நோக்கைப் பெறும் பருவம் எனக் கொள்ளலாம். அறிவுள்ள இளைஞர்கள் ஒரு செயலினுல் கிடைக்கப்பெறும் உடனடித் திருப்தியைக் காட்டிலும் அதனுடைய பயன் மதிப்புகளை அறியக் கற்பிக்கப் படுவார்கள்.[1]

### அக்கறைகளின் வளர்ச்சி

குழந்தையின் ஆரம்ப அக்கறைகள் தனிப்பட்ட சொந்த உறவுகளின் காரணமாகத் தோன்றுவதாகும். ஒருவன் தான் முன்பு பார்த்திராத மிருகத்தைக் கண்டதும், 'அது என்ன?', 'அது கடிக்குமா?' என்று வினவுவான். இக்கேள்விகள் அறிவியல் தன்மை

[1] டபிள்யூ. ஆர். பூர்மென், (W. R. Boorman), 'சிறுவர்களிடத்தே வளரும் ஆண்மை', பக்கம் 41. (Developing Personality in Boys.)

யற்றவை. அறிவியல் ஆராய்ச்சியின் தூண்டலினால் தோன்றியவை யும் அல்ல. ஆனாலும், இச்சிறு வயதிலும் குழந்தையின் அறிவு

படிவம்.




- - - - - தபால் பில்லைகளின் சேகரிப்பை வைத்திருக்க அக்கரை.

—— — — மந்திரவாதியின் உடையை வைத் திருக்க ஆர்வம்.

—— - - - ‘குழந்தை வாழ்க்கை’ எனும் சஞ்சிகையைப் படிகக ஆர்வம்

——— குண்டு விளையாட ஆர்வம்.

வகுப்புநிலை அந்தஸ்து மாறும்பொழுது நான்கு குழந்தைப்பருவ அக்கரையின் ஏற்படும் மாறுதல் கள்.

(ஜோன்ஸ் தந்தது)

படம் 6—1

வளர்ச்சிக்கான அறிகுறிகள் இக்கேள்விகளில் தென்படுகின்றன. இவை மிருகத்தின் அமைப்பு, நடத்தை, வாழ்க்கை வரலாறு பற்றிய கேள்விகள் ஆதலின், தனிப்பட்ட அக்கறை கொண்ட கேள்விகளாக அமைகின்றன. இதை வாழ்க்கையின், குறிப்பாக மிருகங்கள் பற்றிய அறிவியல் அக்கறையின் துவக்கமாகக் கொள்ளலாம். அக்கறை பட்டறிவினைச் சார்ந்ததாகும். ஆனால், அக்கறையின் வளர்ச்சியில் தனிப்பட்ட திறமையின் பங்கும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். உயிரியின் உடல் வளர்ச்சி அக்கறைகளின் வளர்ச்சியின் முக்கிய ஏதுவாக அமைகின்றது. உள்ளுறுப்பு, சுரப்பி இவைகளின் செயல்கள்கூட ஒருவனது அக்கறைகளைப் பாதிக்கும் தன்மையுடையன.

ஜோன்ஸ் (Jones) நடத்திய ஆய்வில் கலிஃபோர்னியா பல்கலைக் கழக அக்கறைக் குறிப்பேட்டினைப் பயன்படுத்தினர்.[a] வரைபடம் 6—1-ல் சிறுவர்களின் விளையாட்டு அக்கறைகள் குறிப்பாக வீழ்ச்சியடையும் ஒரு செயல் தொகுதியாகக் காட்டப்பட்டுள்ளன. இவ் விளைவுகள் 7ஆவது படிவ மாணவர்கள் தங்களது குழந்தைப் பருவ அக்கறைகளான குண்டு விளையாடுதல், தபால் தலைகளைச் சேகரித்தல், மந்திரவாதியின் உடையை அணிதல், 'குழந்தை வாழ்க்கை' எனும் நூலைப் படித்தல் ஆகிய இளங்குழந்தைப் பருவ அக்கறைகள் தொடர்ச்சியான வீழ்ச்சியை அடைவதைக் காணலாம். இவ்வக்கறைகளுக்குப் பதிலாக முதிர்ந்த அக்கறைகளான நாளிடல், நடனமாடுதல், விருந்துகளுக்குச் செல்லுதல் போன்றவைகளைப் பெண்களும், குழு நடவடிக்கைகள், நாளிடல், நடனமாடுதல், விருந்துகளுக்குச் செல்லுதல் போன்றவைகளை ஆண்களும் கைக்கொள்ளுவதானது இளையோர் ஆண்பெண்களின் சமூக வளர்ச்சியின் முதிர்ச்சியை அளக்கச் சிறந்ததோர் அளவு கோலாகும்.

சிறுவர்களும் சிறுமியர்களும் இளையோர் பருவத்தை அடையும் போதும், உயர்நிலைப் பள்ளி வேலையைத் துவங்கும்போதும், பல்வேறு அக்கறைகள் கொண்டவர்களாகவும், குறிப்பிடத்தக்க பால் மாறுபாடுகள் கொண்டவர்களாகவும் இருக்கின்றனர். உளவியலார் கவனத்துடன் கட்டுப்படுத்தப்பட்ட சூழ்நிலையில் உற்றுநோக்கி ஆராய்ந்ததன் காரணமாக அக்கறைகளில் பால் இன வேறுபாடுகளை

[a] H. E. Jones, 'Development in Adolescence', New York; Appleton - Century - Crofts, Inc., 1948, p. 104.

[a] P. M. Symonds, 'Comparison of the Problems and Interests of Young Adolescents Living in City and Country', Journal of Educational Sociology, 1936, Vol. 10, pp. 231-236.; also, 'Life Problems and Interests of Adolescents', The School Review, 1936, Vol. 44, pp. 506-518.

அறிவதற்குப் பட்டறிவின் துணையை உணர முற்பட்டனர். சைமன்ட்ஸ் (Symonds), ஆண்கள் ஆரோக்கியம், பாதுகாப்பு, பணம், பால் ஆகியவற்றில் பெண்களைக் காட்டிலும் அதிக அக்கறையுடையவர்களாக இருப்பதாகக் குறிப்பிடுகின்றார்.[3] கேள்வி நிரல்களின் வாயிலாகப் பெண்கள் அதிக அக்கறை கொண்டிருப்பவர்களாக உடற்கவர்ச்சி, சொந்த மெய்யுணர்வு, தினசரி வாழ்வு, மனநலம், குடும்ப உறவு ஆகியவைகளால் அறியமுடிகின்றது. ஏற்கெனவே எதிர் நோக்கியது போன்றே நகர மாணவர்கள் சமூகத் திறன்களில் கிராம ஆண் பெண்களைக் காட்டிலும் அதிக அக்கறை கொண்டவர்களாக இருப்பது தெரியவருகின்றது. சூழ்நிலை ஏதுக்கள், நுண்ணறிவு, பால் வேறுபாடுகள், முதிர்ச்சி, பயிற்சி ஆகியவை ஒன்றுசேர்ந்து இணைந்து, ஆண் பெண்களின் குழந்தைப் பருவத்திலிருந்து இளையோர் பருவம்—அதனின்று காளைப்பருவம் அடையும்பொழுது உள்ள அக்கறை வளர்ச்சியைப் பாதிக்கும் சிக்கலான ஏதுக்களாக அமைகின்றன.

ஓர் இளையோன் தன் முடியை வாரிக்கொள்வதிலும் பல் துலக்குவதிலும் அதிக நேரம் செலவிடுவானாயின் அல்லது அவன் சுத்தமான ஆடையையும் கழுத்துப்பட்டையையும் (neck tie) நாடுவானேயானால், அவன் பால் - சமூக உணர்வைப் பெறத் துவங்கிவிட்டான் என்று அறுதியிட்டுக் கூறலாம். இளையோன் சிறுவனாக இருக்கும் வரை தன் சொந்தத் தோற்றத்தில் அக்கறை இல்லாதவனாக இருக்கிறான். அவனது பெற்றோர்களும் நண்பர்களுமே, தொடர்ந்த முயற்சியின் காரணமாக அவனது தோற்றத்தினை மாற்றியமைக்கின்றனர். இதைத் தலைமுடி வாராமல், முகம், கை, கால், கழுத்து ஆகியவை சுத்தமாக இல்லாமலிருப்பதிலிருந்தே கண்டுகொள்ளலாம். மற்றச் சிறுவர்களது வாழ்க்கை மிகவும் கவர்ச்சிகரமாக இருப்பதாலும், தீரச் செயல்கள் நிறைந்திருப்பதாலும், சுத்தமாக வைத்துக்கொள்ள அவர்கள் கவலைப்படுவதில்லை. அழுக்கடைந்த கசங்கிய உடை உடுத்துவது, சுத்தமான கசங்காத உடையைக் காட்டிலும் அதிகமாக விரும்பப்படுகின்றது.

முன்னைய அதிகாரத்தில், பூப்பு அடையும்பொழுது மாற்றுப் பாலார்மீது காட்டப்படுகின்ற அக்கறையில் குறிப்பிடும்படியான மாறுதல் இருக்கின்றது என்று கூறப்பட்டது. இவையெல்லாம் உடல் தோற்றத்தில் கொள்ளும் உணர்வுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கின்றன. இந்தக் காலத்திற்கு முன், பெண் தனது சகோதரனைக் காட்டிலும் குறைவான அக்கறையின்மையையே உடல் தோற்றத்தில் கொண்டிருந்தாலும், நாகரிகமான வடிவத்திலும் தோற்றத்திலும் பின்பற்றல் காரணமாக ஒருசிறு அக்கறையே கொண்டவளாக இருக்கின்றாள். பூப்பு அடைந்ததும், பெண், உடை

விளம்பரக் காட்சிகளில் அதிக அக்கறை கொண்டு தன் உடைகள் யாவற்றையும் காளைப்பருவத்தினர் விரும்பும் வகையில் நன்ருகத் தைத்து இறுக்கமாக அணிய விரும்புகின்ருள். விளையாட்டு அணி, குளிக்கும் அணி, குளிர்கால விளையாட்டு அணி, விளையாட்டு மேலங்கி ஆகியவைகளின் தேவைகள் இப்பருவத்தில் அதிகமாக இருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இளையோர் சிறுமியைப் போன்று பரவலான விதவிதமான உடைகளை அணிவதற்கு இளையோர் ஆணுக்கு வாய்ப்பு இல்லாவிடினும், அவன் பயன்படுத்துகின்ற பல பொருள்களிலும் அதிக அக்கறை உடையவனாய் விளங்குகின்ருன். நன்ருக மடிப்புக் கலையாத சூட்டும், சுத்தமான சட்டையும் அவனது உடைகளாகின்றன. அவன் சுத்தத்திலும், நன்ருக வாரி விடப்படும் முடி அலங்காரத்திலும், நகங்களிலும், அவன் தாயார் நினைவூட்ட வேண்டிய அவசியம் இல்லாத அளவில் அக்கறை கொண்டவனாக இருக்கிருன். இப்பொருள்களைப் பற்றிய விருப்பம் வெவ்வேருன சுற்றுப் புறங்களில் வெவ்வேருக இருக்கும். ஆனால், பெரும்பான்மையான ஆண்கள் விரும்புகின்ற உடையானது மாற்றுப் பாலார் விரும்பி ஏற்றுக்கொள்கின்ற உடையேயாகும்.

பூப்படைந்த பின்னர் இவ்வக்கறையானது ஆண்பெண் இரு பாலாரிடத்தும் அதிகச் செறிவுடன் விளங்கி, அதனுடைய ஆரம்ப காலத்தில் இளையோர்கள் பெற்ருேர்களிடத்துப் போராட்டங்கள் கொள்ளுகின்ற வகையில் அமைந்துவிடும். இச்சிக்கலில் சிலவற்றைப் பற்றி முழு விரிவாக 13ஆம் அதிகாரத்தில் கூறியுள்ளோம். 'பத்துசதக் கடைகள்' என்று வழங்கப்படும் கடைகள் ஆண்பெண் பாலார் மலிவான பின்பற்றல்களைப் பெற வழி கோலுகின்றன. தங்களைக் காட்டிலும் நல்ல பொருளாதார வசதியுடைவர்களது நடையுடைகளைப் பின்பற்ற இக்கடைகள் பெரிதும் உதவுகின்றன. இவ்வக்கறைகளை ஆய்ந்துபார்ப்பதாலும், அவற்றின் தன்மையைப் பற்றி அறிவதாலும் இளையோர் ஆண்டுகளைப் பற்றியும், வளரும் சமூக உணர்வு பற்றியும் வேறு எந்த ஓர் ஏதுவாலும் அறிய முடியாத அளவில் அவற்றின் முக்கியத்துவத்தை நாம் அறிந்து கொள்ளலாம்.

## பள்ளித் தொடர்புள்ள அக்கறைகள்

### வாசிப்பதில் அக்கறைகள்

பெரும்பான்மையான இளையோர் வாசிக்க விரும்பும் நூல்கள் சித்திரக் கதைகளும், சஞ்சிகைகளும் ஆகும். சித்திரக் கதைகள் இளையோர் பருவத்தில் கொண்டுள்ள செல்வாக்கு குழந்தைப் பருவத்தைக் காட்டிலும் குறைந்தது என்ருலும், இவ் வேட்கை இளையோர்

பருவம் முழுவதும் இருந்து காளைப்பருவத்திற்கும் தொடர்கின்றது. இளையோர் வாசிப்பதன் மூலம் தீரச்செயல் மீதுள்ள அவாவினைப் பூர்த்தி செய்து கொள்கின்றனர். பிரின்க் (Brink) ஆயிரக்கணக்கான உயர்நிலைப் பள்ளிச் சிறுவர் சிறுமியர்களின் படிப்பு அக்கறைகளைப் பற்றி நடத்திய அளவெடுப்பில், 7-லிருந்து 12ஆவது படிவம் வரை படிக்கும் சிறுவர்சிறுமியர்களது விருப்பத் தேர்வில் வீரச்செயல் முதல் வரிசையில் அமைவதாகக் கண்டுள்ளார்.[4] பொதுவாக, இளையோர் சிறுமியர் சீக்கிரம் பூப்படையும் காரணத்தினால் தீரச்செயல்கள் கொண்ட மர்ம நூல்களிலிருந்து, சிறுவர்களைக் காட்டிலும் சீக்கிரமாகக் காதல், பற்று ஆகிய நூல்களுக்குச் சென்றுவிடுகின்றனர். ஆனால், இளையோர் பருவம் முழுவதிலும் சிறுமியர் தீரச்செயல் கொண்ட மர்ம நூல்களில் வேட்கை கொண்டிருக்கின்றனர். பல ஆய்வுகள் இளையோர் முதிர்ச்சியடையும் பொழுது வாழ்க்கை வரலாறு, சுற்றுலா பற்றிய நூல்களில் அக்கறை காட்டுவதாகவும் குறிக்கின்றன.

இளையோர் சிறுவர்சிறுமியர்கள் தேர்ந்தெடுக்கும் நூல்கள் எனத் தரப்பட்டிருக்கும் அட்டவணைகளான 6—1, 6—2 ஆகியவைகளை ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது சில சுவையான குறிப்பிடத்தக்க மாறுபாடுகளைக் காணலாம்.[5] சிறுவர்கள் தீரச்செயல்கள் பற்றிய நூல்களுக்கு முதலிடம் தருகின்றனர். பொது நவீனத்திற்கு இரண்டாமிடமும், மிருகங்கள் பற்றிய கதைகளுக்கு மூன்றாமிடமும் தருகின்றனர். சிறுவர் சிறுமியரைக்காட்டிலும் படிக்கத் தேர்ந்தெடுக்கும் நூல்களில் பல துறைப்பட்டவைகளைத் தேர்ந்தெடுக்கின்றனர். சிறுமியர் வாசிக்கும் நூல்களில் சரிபாதிக்குமேல் பொது நவீன நூல்களாகும். மற்றத் துறை நூல்கள் அதிகமாகக் கவனத்தை ஈர்ப்பதில்லை. ஜூனியர் உயர்நிலைப் பள்ளிப் படிவத்திலுள்ள சிறுவர் சிறுமியர்கள் தாங்கள் படிக்கும் நூல்களில் முதிர்ச்சியை ஒருங்கே காட்டுகின்றனர். சீனியர் உயர்நிலைப் பள்ளிப் படிவங்களில் சிறுவர் சிறுமியர்கள் ஒருங்கே காட்டுகின்ற முதிர்ச்சியான அக்கறைகள் பற்றித் தெளிவான சான்றுகள் உள்ளன.

உயர்நிலைப் பள்ளிச் சிறுவர் சிறுமியர்கள் வாசிக்கும் சஞ்சிகைகள், பத்திரிகைகள், நூல்கள் ஆகியவைகளைப் பற்றி விட்டி, கூமர்,

[4] W. G. Brink, 'Reading Interests of High School Pupils' School Review, 1939, Vol. 47, pp. 613-621.

[5] P. S. McCarty, 'Reading Interests Shown by Choices of Books in School Libraries', School Review, 1950, Vol. 58, pp. 90-96.

## அட்டவணை 6—1

### 7-லிருந்து 12ஆவது படிவச் சிறுவர்கள் வாசிக்கும் நூல் வகைகளின் விகிதாசாரப் பகிர்வு

| நூல்களின் வகை | படிவம் 7 | படிவம் 8 | படிவம் 9 | படிவம் 10 | படிவம் 11 | படிவம் 12 | எல்லாப் படிவத்திலும் |
|---|---|---|---|---|---|---|---|
| தீரச்செயல்கள் | 29·4 | 32·4 | 29·4 | 28·4 | 20·8 | 16·6 | 27·8 |
| பொது நவீனங்கள் ... | 23·0 | 20·1 | 24·0 | 25·2 | 34·1 | 34·5 | 25·2 |
| மிருகங்கள் ... | 13·9 | 12·7 | 12·6 | 9·5 | 4·7 | 2·7 | 10·6 |
| வாழ்க்கை வரலாறும், சுயசரிதையும் ... | 6·4 | 6·0 | 7·9 | 7·6 | 9·0 | 7·4 | 7·2 |
| பழக்கங்களும், விளையாட்டுகளும் ... | 5·5 | 7·7 | 7·8 | 6·6 | 4·5 | 4·5 | 6·4 |
| போரும், தற்காப்பும் ... | 5·0 | 6·0 | 7·2 | 6·0 | 5·8 | 7·3 | 6·1 |
| மர்மம், துப்பறிதல் ... | 8·1 | 6·1 | 4·2 | 3·7 | 2·5 | 2·1 | 5·0 |
| பலவகை நூல்கள் ... | 2·7 | 3·0 | 2·3 | 4·7 | 6·3 | 9·8 | 4·0 |
| விஞ்ஞானம் ... | 2·0 | 2·2 | 1·6 | 2·2 | 2·5 | 2·8 | 2·1 |
| கலைகள் ... | 0·7 | 0·8 | 0·4 | 2·3 | 4·5 | 7·1 | 1·9 |
| வரலாறும், புவியியலும் ... | 1·2 | 0·9 | 0·7 | 1·3 | 2·2 | 2·3 | 1·3 |
| நகைச்சுவை ... | 0·4 | 0·7 | 0·9 | 0·9 | 2·0 | 0·9 | 0·9 |
| புனைகதைகள் | 1·1 | 0·7 | 0·4 | 0·4 | 0·5 | 0·3 | 0·6 |
| தொழில் ... | 0·2 | 0·3 | 0·1 | 0·9 | 0·7 | 1·1 | 0·5 |
| தொழில் நவீனங்கள் ... | 0·4 | 0·3 | 0·5 | 0·3 | 0·4 | 0·6 | 0·4 |
| மொத்தம் ... | | | | | | | 100 |

### அட்டவணை 6—2

7-லிருந்து 12ஆவது படிவப் பெண்கள் வாசிக்கும் நூல்வகைகளின் விகிதாசாரப் பகிர்வு (மெகர்த் தந்தது).

| நூலின் வகைகள் | படிவம் 7 | படிவம் 8 | படிவம் 9 | படிவம் 10 | படிவம் 11 | படிவம் 12 | எல்லாப் படிவத்திலும் |
|---|---|---|---|---|---|---|---|
| பொது நவீனங்கள் ... | 47·0 | 50·8 | 53·0 | 54·4 | 58·0 | 57·2 | 52·5 |
| தீரச் செயல்கள் | 12·0 | 9·7 | 10·6 | 8·0 | 6·3 | 8·5 | 9·1 |
| மிருகங்கள் ... | 10·8 | 9·1 | 6·2 | 4·4 | 1·6 | 1·9 | 6·5 |
| வாழ்க்கை வரலாறும், சுயசரிதையும் ... | 5·3 | 5·2 | 6·8 | 6·7 | 8·8 | 6·0 | 6·3 |
| மர்மமும் துப்பறிதலும் ... | 11·0 | 7·2 | 5·9 | 3·5 | 1·4 | 1·4 | 5·8 |
| தொழில் நவீனங்கள் ... | 5·2 | 7·7 | 6·5 | 5·4 | 2·8 | 1·7 | 5·4 |
| பலவகை நூல்கள் ... | 3·3 | 3·3 | 4·3 | 6·8 | 7·2 | 12·4 | 5·4 |
| கலைகள் ... | 0·7 | 0·7 | 0·8 | 2·7 | 6·4 | 9·2 | 2·5 |
| விஞ்ஞானம் ... | 1·2 | 2·1 | 1·0 | 1·6 | 1·4 | 0·7 | 1·4 |
| போரும், தற்காப்பும் ... | 0·6 | 0·9 | 1·3 | 2·0 | 1·2 | 1·5 | 1·2 |
| பழக்கங்களும் விளையாட்டுகளும் ... | 0·7 | 1·1 | 1·2 | 1·4 | 0·5 | 1·1 | 1·0 |
| வரலாறும் புவியியலும் ... | 0·7 | 0·6 | 0·8 | 1·1 | 2·0 | 0·8 | 0·9 |
| நகைச்சுவை ... | 0·5 | 0·4 | 0·8 | 0·8 | 1·3 | 1·2 | 0·8 |
| புனைகதைகள் ... | 0·9 | 1·0 | 0·3 | 0·5 | 0·3 | 0·7 | 0.7 |
| தொழில்கள் ... | 0·1 | 0·2 | 0·5 | 0·7 | 0·8 | 0·7 | 0·5 |
| மொத்தம் ... | | | | | | | 100· |

(Witty and Coomer) ஆய்வு நடத்தினர்.[6] இவ்வாய்வில் கண்ட முடிவுகள் வெவ்வேறான வயது நிலைகளில் சஞ்சிகைகள், நூல்கள் தேர்ந்தெடுப்பதில் பால் வேறுபாடுகள் இருப்பதாகக் குறிப்பிடுகின்றன. அதிலும் மற்ற ஆய்வுகளிலும் வளர்ச்சி பற்றிய மாறுதல்கள் இருப்பதைக் காணலாம். மேலும், சில ஆய்வாளர்கள் சிறுவர் சிறுமியர்கள் விரும்பி வாசிக்கும் நூல்களைப் பற்றிய ஆய்வுகள் நடத்தினர். சிறுவர்கள் தீரச்செயல்களை விரும்புவதாகக் கண்டனர். அதாவது குறும்புத்தனமான செயல்கள், சண்டைகள், ஓட்டப் பந்தயங்கள், சுற்றுதல், தீரச்செயல்கள் ஆகியவற்றை நாடுகின்றனர். சிறுவர்களைக் காட்டிலும் சிறுமியர்கள் அதிகமான மர்ம நூல்களை விரும்புகின்றனர். இறப்பு, விபத்துகள், அன்புச் செய்கைகள், சமூகக் காதல் உணர்வுகள் கொண்ட நிகழ்ச்சிகள் ஆகியவைகளில் சிறுமியர்கள் அதிக நாட்டம் கொள்கின்றனர்.

சிறுவர் சிறுமியர்கள் நூல்களைத் தேர்ந்தெடுப்பதில் காட்டுகின்ற பால் மாறுபாடுகளை, சஞ்சிகைகளைத் தேர்ந்தெடுப்பதிலும் பிரதிபலிக்கின்றனர். ஆதலின், பள்ளி இல்லம் ஆகியவற்றிற்காக நூல்களைத் தேர்ந்தெடுக்கும் பொழுது இப்பிரிவினையை உணர்தல் வேண்டும். பள்ளி நூல்நிலையங்களிலுள்ள சஞ்சிகைகள் பெரும்பாலும், சிறுமியர்கள் உலகத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவை என்று கூற ஆதாரம் இருக்கின்றது. இது சாதாரணமாக ஒரு பெண்ணால் தேர்ந்தெடுக்கப்பட்டதாலோ அல்லது பள்ளி ஆசிரியர்களைக் கொண்ட குழுவால் (பெரும்பாலும் இக்குழுவில் பெண்கள் அதிகமாக இருப்பார்கள்) தேர்ந்தெடுக்கப்பட்டதாலோ இருக்கலாம். அமெரிக்க சஞ்சிகைகளில் மூன்று போக்குகளை ஜேண்டர் (Zander) காண்கின்றார்.[7] சிறுவர் சிறுமியர் கதம்பக் கட்டுரைகள் (நானாவித நூல்களிலிருந்து எடுக்கப்பட்ட சிறப்பான கட்டுரைகள்), செய்திப் பத்திரிகைகள், படங்களைக் கொண்ட சஞ்சிகைகள் ஆகியவற்றைப் படிக்கின்ற பழக்கமே அம் மூன்று போக்குகளாகும். இது, ஸ்டெர்னர் (Sterner) என்பவர் கொண்ட கருத்துகளுக்கு ஏற்பவும் உள்ளது.[8]

வடநியூயார்க் (North Newark) உயர்நிலைப் பள்ளி மாணவர்கள் விரும்பிப் படிக்கும் பதினைந்து சஞ்சிகைகளை வரிசைக் கிரமமாகக்

[6] P. Witty, A. Coomer, and D. McBean, 'Children's Choices of Favorite Books', Journal of Educational Psychology, 1946, Vol. 37, pp. 266-278.

[7] J. Zander, 'Modern Magazine Trends', Chicago School Journal, 1940, Vol. 22, pp. 63-67.

[8] A. P. Sterner, 'Radio, Motion Picture and Reading Interest', Teacher's College, Columbia University, Contributions to Education, No. 932, 1947.

குறிப்பிடும்பொழுது: லைஃப் (Life), ரீடர்ஸ் டைஜஸ்ட் (Readers Digest), மூவி மிரர் (Movie Mirror), சாட்டர்டே ஈவனிங் போஸ்ட் (Saturday Evening Post), மூவி ஸ்டோரி (Movie Story), மாடர்ன் ஸ்கிரீன் (Modern Screen), லேடிஸ் ஹோம் ஜர்னல் (Ladies Home Journal), லிபர்டி (Liberty), பாபுலர் மெக்கானிக்ஸ் (Popular Mechanics), பாபுலர் சைன்ஸ் (Popular Science), மூவி ரேடியோ கைடு (Movie Radio Guide), சில்வர் ஸ்கிரீன் (Silver Screen), குட் ஹவுஸ்-கீப்பிங் (Good House-keeping), உமன்ஸ் ஹோம் கம்பானியன் (Woman's Home Companion) என்று கூறுகின்றனர். இவ்வரிசை சூழ்நிலைக்குச் சூழ்நிலை மாறுபாடுகளுடன் இருக்கும். கான்சாஸ் கோதுமை நிலங்கள் அல்லது பிடக்ஸாஸ் பருத்தி நிலங்கள் ஆகியவற்றில் வாழும் சிறுவர் சிறுமியர்கள் நியூயார்க் (Newark), நியூ ஜெர்சி (New Jersey) ஆகிய இடங்களில் வாழ்பவர்களினின்று வாசிக்கும் அக்கறையில் கட்டாயமாக மாறுபட்டுத்தான் இருப்பார்கள். பல ஏதுக்கள் அதனை மாற்றியமைக்க முற்பட்டாலும், ஜனநாயக நாட்டில் இளையோர் அக்கறைகளில் பொதுத்தன்மையான குணங்களை நாம் காண இயலும்.

முன்னிளையோரும் தங்களது ஓய்வு நேரத்தைப் பெரும்பாலும் சித்திர நூல்களைப் படிப்பதிலேயே செலவிடுகின்றனர். இன்று சித்திரக் கதைகள் வரும் வடிவமானது சமீப காலத்தில் தோன்றிய ஒன்ருகும். இதுவும் மிகவும் பரவலாக இளையோர் மனத்தைக் கவர்ந்துள்ளது. இச்சித்திர நூல்களின் வரலாறு குறுகியதுதான் என்ருலும், அவற்றைப் பலரும் குறைகூறி யிருக்கிருர்கள். கெட்ட செயல்களைத் தூண்ட வல்ல நூல்கள் என்று அவற்றை இகழ்ந்துள்ளனர். அக்கலை இசைவில்லா நிறங்களையும் மேலும் கீழுமாக இழுக்கப்பட்ட கோடுகளையும் கொண்டது என்றும் கூறியுள்ளார்கள். அந்நூல்களைப் படிப்போர் சாடிஸம் (sadism) எனும் ஒரு தன்மையை அடைவார்கள் என்றும் எச்சரித்திருக்கின்ருர்கள். ஆனல், சில கல்வி இயலார் அதனை அனுமதித்து அம்முறையைப் பயன்படுத்திச் சித்திரக் கதைகள்மூலம் நல்ல கொள்கைகளையும், குறிக்கோள்களையும் பரப்ப முயலுகின்றனர். அதனைப் பற்றிய தனியாள் ஆய்வுகள் புத்தி கூர்மையுள்ள குழந்தைகளும், புத்தி கூர்மை மழுங்கிய குழந்தைகளும் ஒருங்கே இந்நூல்களைப் படிப்பதாகக் கூறுகின்றன. வசதியுள்ளோரும், வசதியற்ற குடும்பங்களிலிருந்துவரும் குழந்தைகளும் இவற்றைப் படிப்பதாகக் கூறுகின்றன. ஆனல், படிவங்கள் உயரும்போது தொடர்ச்சியான அக்கறைக் குறைவு இச்சித்திரக் கதைகளின்மீது ஏற்படுவதாகவும் அவை குறிப்பிடுகின்றன. தனியன், இளையோன் பருவத்தை அடைந்தபின்பு குறிப்பிடும்படியான பால் வேறுபாடுகள் கொண்டவனுய் இருக்கிருன். ஆனல், இந்தப் பருவத்திலும் சிறுவர்

களும் சிறுமியர்களும் சித்திர, திரைப்படங்களில் ஓரளவு அக்கறை கொள்கின்றனர். இது கார்ல் (Karl) என்பவனின் வளர்ச்சியில் நன்ருகத் தெரிகின்றது.

கார்ல் அவனது ஏழாவது வயதில் மிருகங்கள், குழந்தைகள் பற்றிய கேலிச்சித்திரங்களில் அதிக அக்கறை கொண்டவனுய் இருந்தான். வயது அதிகமாகியதும், அக்கறையில் தொடர்ச்சியான மாற்றம் காணப்பட்டது. தனது பத்தாவது வயதில் வெகு தீரமான செயல்களினுல் வீரர்களாகக் கருதப்பட்டவர்களின்மீது அவனுக்கு அக்கறை ஏற்பட்டது. இரண்டாவது உலக யுத்தம் தோன்றியபோது அவன் சொந்தமாகச் சித்திர நூல்கள் எழுத முற்பட்டான். தனது பதிஞேருவது வயதில் பறக்கும் டாமி (Flying Tommy) எனும் சித்திர நூல் வரிசையைச் சொந்தமாகத் தயாரித்தான்.

கார்ல் தனது பள்ளி வேலையில் எப்பொழுதும் அதிக வெற்றி பெற்ருன். அவன் தனது வயதைவிட இரண்டு வயது மேலுள்ளவர்களது வாசிக்கும் திறனைப் பெற்றிருந்தான். தனது பன்னிரண்டாவது வயதில் சித்திர நூல்களில் இருந்த அக்கறையை விடுத்துக் கேலிச் சித்திரத் திரைப்படங்களில் அக்கறை காட்டத் துவங்கினுன். சித்திர நூல்களில் உள்ள அக்கறை மாற்றத்திற்கும், ரேடியோ, திரைப்பட, விளையாட்டு ஈடுபாடுகள் ஆகியவற்றில் அக்கறை வளர்ச்சி ஏற்பட்டதற்கும் ஒரு குறிப்பிடும்படியான தொடர்பு இருக்கிறது.

## பள்ளிப் பாடங்களில் அக்கறைகள்

அக்கறை, திறன் ஆகியவற்றைப் பற்றிய ஆய்வுகளின் பொது முடிவுகள், மற்றவர்களுடன் தனியனின் திறனை ஒப்பிட்டுச் சொல்லக் கூடியவாறு இல்லை. தனியனின் திறமைகள் வரிசைப்படுத்தப்பட்டுச் சொல்லப்பட்டிருக்கின்றனவேயன்றி அவற்றையெல்லாம் மற்றவர்களுடன் ஒப்பிட்டுப்பார்க்கையில் அவை எவ்வாறு சிறந்தன என்று கூறுவதற்கு இல்லை. ஆதலின், தனியன் தன்வரையில் சிறப்பாகச் செய்யக்கூடிய ஒன்றில் அக்கறை கொள்கிருன். ஆனுல், இந்தச் சிறப்பான ஒன்று மற்றவர்கள் அச்செயலைச் செய்யும்போது அதனின்றும் மேம்பட்டிருக்கும் என்று கூறுவதற்கில்லை.

பார்ச்சூன் (Fortune) பத்திரிகை நடத்திய ஆய்வினின்று அதிகம் விரும்பப்படுகின்ற பள்ளிப் பாடமாகவும் குறைவாக விரும்பப்படுகின்ற பள்ளிப் பாடமாகவும் கணிதமும் ஆங்கிலமும் முதல் இரண்டு

இடங்களைப் பெறுகின்றன.[9] இவ்விரு இயல்களும் எல்லாப் பள்ளிகளிலும் நடத்தப்படுகின்றன. மேலும், உயர்நிலைப் பள்ளிப் படிப்பு முழுவதிலும் அவ்விரு இயல்களும் பங்கு பெறுகின்றன. கணிதத்தில் அதிகமான படிப்பு மட்டும் விரும்புகின்றவர்கள் எடுத்துக்கொள்கின்ற வகையில் இருப்பதையும் காணலாம்.

ஆய்வின் குறுக்கு வரிசைப்படுத்தல் முறை மூலமாக சிலவகையான விருப்பங்களுக்கு முன்னுரிமை அளித்திருப்பதைக் காணலாம். மொழியியல், வரலாறு ஆகியவற்றை விரும்பாத மாணவர்கள் கணி

அட்டவணை 6—3

சீனியர் உயர்நிலைப் பள்ளி மாணவர்கள் அதிகமாக விரும்புகின்ற, குறைவாக விரும்புகின்ற உயர்நிலைப் பள்ளிப் பாடங்கள்

| பாடங்கள் | அதிகமான விருப்பம் | குறைவான விருப்பம் |
|---|---|---|
| கணிதம்—எழுத்துக் கணக்கு, வடிவ கணிதம், முக்கோண கணிதம் ... | 20% | 26·7% |
| ஆங்கிலம்—இலக்கணம், கட்டுரை, இலக்கியம் ... ... ... | 17·7% | 22·2% |
| விஞ்ஞானங்கள்—பொது விஞ்ஞானம், உயிரியல், வேதியியல் முதலியன ... | 14·8% | 18·7% |
| வரலாறு ... ... ... | 11% | 12·4% |
| தொழிற் பாடங்கள்—குடும்பப் பொருளியல், தட்டெழுத்து, மற்ற வணிக இயல்கள் ... ... ... | 10·8% | 8·9% |
| மொழிகள்-பிரஞ்சு, ஸ்பானிஷ் முதலியன | 6·8% | 18·4% |
| குடிமை நூல், அரசியல், சமூக விஞ்ஞானம் முதலியன ... ... | 1·8% | 8·2% |
| எதில் விருப்பம் அதிகம், குறைவு என்றே அறியாத நிலை ... ... | 2·4% | 5·3% |

[9] 'Fortune Survey', Fortune, December, 1942, p. 14. The materials of Table 6-4 are based upon answers to the questions: 'Of all the subjects you have taken so far in High School, which one have you liked least? which best?'

தம், பரிசோதனை விஞ்ஞானங்கள் ஆகியவற்றை விரும்புவதையும், கணிதம், பரிசோதனை விஞ்ஞானங்கள் ஆகியவற்றை விரும்பாதவர்கள் ஆங்கிலம், மொழியியல், வரலாறு ஆகியவற்றை விரும்புவதையும் காணலாம்.

ஜெர்சில்ட் (Jersield), டாஸ்ச் (Tasch) ஆகியோர் குழந்தைகளின் அக்கறைகளைப் பற்றிக் கூறும்பொழுதெல்லாம் எல்லாப் படிவ மாணவர்களும் பள்ளிகளில் தாங்கள் சிறப்பாக விரும்பியவற்றைக் குறிப்பிடும்போது பெரும்பாலும் பள்ளிப் பாடங்களைச் சேர்த்தே குறிப்பிடுவதாகக் கூறினர்.[10] இயற்கைக் கல்வி, இயற்கை விஞ்ஞானம் ஆகியவற்றை ஆரம்பப் படிவங்களில் அதிகமாகக் குறிப்பிடாவிடினும் ஜூனியர் (7—9), சீனியர் (10—12) உயர்நிலைப் பள்ளிப் படிவங்களில் அவை இடம் பெற்று வருகின்றன. இவ்வாய்வின் முடிவுகள் கல்வி, பாட சம்பந்தமான நூல்கள் ஆகியவற்றில் உள்ள அக்கறை படிப்படியாகக் குறைகின்றது என்றும், விளையாட்டு, ஓட்டப் பந்தயங்கள், விவாத மன்றங்கள், மாணவர் கழகம், மக்கட் பிரிவு ஆகியவற்றில் படிப்படியாக அக்கறை வளர்கின்றது என்றும் குறிப்பிடுகின்றன. காபட் (Kabat) என்பவர் ஓர் ஆய்வில் கலந்து கொண்ட உயர்நிலைப் பள்ளி மாணவர்களில் ஐந்தில் மூன்று பங்கினர் பள்ளிப் படிப்பில் சுவையான பகுதி விளையாட்டும், சமூக நடவடிக்கைகளுமேயன்றி வேறொன்றுமில்லை என்று குறிப்பிட்டனர் என்று கூறுகிறார்.[11] இந்நடவடிக்கைகள் யாவும் முன்னிளையோரைக் காட்டிலும் இளையோனுக்கு அதிகப் பொருளுடையதாய் உள்ளன. அவை அந்தப் பருவத்தில் தோன்றும் உள சமூக மாற்றங்களுக்கு ஏற்றவாறு இருக்கின்றன.

**அக்கறைகளும் திறன்களும்**

வாழ்க்கையில் பல்வேறு பருவங்களில் அக்கறைகளுக்கும், திறன்களுக்கும் உள்ள தொடர்பினைப் பற்றிப் பல ஆய்வுகள் நடந்திருக்கின்றன. இப்பொருள் பற்றி முதன்முதலில் ஆய்வு நடத்தியவர்களில் தார்ன்டைக் (Thorndike) என்பவர் ஒருவராவர்.[12] 344 கல்லூரி மாணவர்களை ஏழு உயர்நிலைப் பள்ளித் திறன்களில் ஆரம்பப்

[10] A. T. Jersild and R. J. Tasch, 'Children's Interests' New York: Bureau of Publications, Teacher's College, Columbia University, 1949, p. 138.

[11] G. J. Kabat, 'Continuous Education for Varying Needs and Abilities', Junior College Journal, 1952, Vol. 23, pp. 154-163.

[12] E. L. Thorndike, 'Early Interests: Their Permanence and Relation to Abilities', School and Society, 1917, Vol. 5,

### அட்டவணை 6—4

நான் பள்ளியில் சிறப்பாக விரும்புவன :

| பொருள் | வயது 9-12 | | வயது 12-15 | | வயது 15-18 | |
|---|---|---|---|---|---|---|
| | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| 1. விளையாட்டு, ஓட்டப் பந்தயங்கள், உடலியற் கல்வி ... | 13·3 | 9·5 | 30·6 | 33·2 | 34·8 | 34·4 |
| 2. பாட சம்பந்தமான பொருள் ... | 69·7 | 76·3 | 44·4 | 60·1 | 41·3 | 45·5 |
| 3. கலை ஈடுபாடுகள் : இசை, ஓவியம், வரைபடம் ஆகியவற்றை அனுபவித்தல் ... | 11·1 | 14·8 | 10·0 | 15·9 | 16·2 | 13·8 |
| 4 கைத்தொழில், இயந்திரக்கலை ... | 0·3 | 0 | 19·8 | 0 | 15·5 | 0·4 |
| 5. விவாத மன்றம், மாணவர் மன்றம் ... | 1·3 | 0·8 | 1·0 | 0·5 | 3·6 | 6·4 |
| 6 மக்கள் : மாணவர்களும் ஆசிரியர்களும் ... | 2·5 | 6·1 | 4·1 | 5·6 | 6·0 | 11·4 |

பள்ளி, உயர் நிலைப்பள்ளி, கல்லூரி நாட்களில் கொண்ட அக்கறைகளைத் தரமிடும்படி கேட்கப்பட்டது. தனியனது அக்கறைக்கும் திறனுக்கும் இடையேயுள்ள இடைத் தொடர்புகள் கணக்கிடப்பட்டன. அது ஆரம்பப் பள்ளி, உயர்நிலைப் பள்ளி, கல்லூரி ஆகியவற்றில் 0·89 ஆக உள்ளது எனக் கணக்கிடப்பட்டது. பெர்னார்டு ஓ நெமாய்டின் (Bernard O. Nemoitin) அக்கறைக்கும் சாதனைக்குமுள்ள தொடர்பினைப் பற்றி ஆராய்ந்தார்.[13] பள்ளிப் பதிவேடுகள், கேள்வி நிரல் முறை ஆகியவற்றினைக் கொண்டு விவரங்கள் சேகரிக்கப்பட்டன. அவர் 150 மாணவர்களைக் கொண்டு ஆய்வு நடத்தியதில் உயர்நிலைப் பள்ளிப் பாடங்களுக்கும், உயர்நிலைப் பள்ளிப் பாடங்

[13] B. O. Nemoitin, 'Relation between Interest and Achievement', Journal of Applied Psychology, 1932, Vol. 16, pp. 59-73.

களுக்குரிய சராசரித் திறன்களுக்கும் இருக்கின்ற உடன் தொடர்புகள் கணக்கிடப்பட்டன. முதன்மையாக விரும்புகின்ற பாடத்திற்கும் திறனுக்கும் உள்ள இடைத்தொடர்பு 0·60 ± 0·04 என்றும், இரண்டாவதாக விரும்புகின்ற பாடத்திற்கும் திறனுக்கும் உள்ள உடன் தொடர்பு 0·49 + 0·04 என்றும், அதிகமாக விருப்பமில்லாத பாடத்திற்கும் திறனுக்கும் உள்ள உடன் தொடர்பு 0·58 ± 0·04 என்றும், இரண்டாவதாக விருப்பமில்லாத பாடத்திற்கும் திறனுக்கும் உள்ள உடன் தொடர்பு 0·57 + 0·04 என்றும் கூறப்பட்டன. அக்கறைக்கும் திறனுக்கும் உள்ள தொடர்பானது அடிக்கடி மாறுகின்ற தன்மை பெற்றுள்ளது. அக்கறையின் அளவு ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடிக்கு மாறுகின்ற அளவில் மாறுந்தன்மை பெற்றுள்ளதால், நம்பகமாகக் கொள்ளுவதற்கில்லை.

பள்ளிகளில் பெறப்பட்ட பட்டறிவின் தன்மையைச் சிறப்பாக அளக்கக்கூடிய அளவை, இப்பட்டறிவு எந்த அளவில் இசைவான அக்கறைகளையும் பழக்கங்களையும் உண்டாக்கி முதிர்ச்சிக்கு ஆளாயிருக்கிறது என்று பார்ப்பது ஆகும். அக்கறையும் ஊக்கியும் மிகவும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன. வேலையை நன்றாக ஊக்குவித்தாலும், அக்கறையுள்ள பாடங்களின் அடிப்படையில் ஒரு வேலையை வைத்தாலும், அது மாணவனுக்கு எளிதாக இருக்கின்றது என்று தொழிற் சிறப்புடைய ஆசிரியர்கள் ஏற்றுக்கொள்கின்றனர். ஒரு வேலையில் ஒருவனுக்கு அக்கறை இருக்குமாயின் இவனது கவனம் எடுத்துக் கொண்ட வேலையின் வரையறைக்குள்ளேயே இருந்து கொண்டு அவன் மேற்கொண்ட சிந்தனைக்கு அப்பால் போகாமல் இருக்கும். அக்கறை, கவனத்தை வரையறைக்குள் ஒருமுகப்படுத்துகின்றது. ஆதலின், அக்கறையை உந்துகின்ற சக்தியாகவும், இயற்கையில் தேர்ந்தெடுக்கின்ற குணம் கொண்டதாகவும் கொள்ளலாம். கற்றல் தனியனின் கவன எதிர்வினையைப் பெரும்பாலும் பொறுத்திருக்கின்றதாதலின் அக்கறைக்கும் கற்றலின் அளவிற்கும் நேரடித் தொடர்பு இருக்கின்றதைக் காணலாம். மனப்பான்மை (attitude) கற்றலுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. ஆதலின், பல்வேறு ஆய்வாளர்கள் கற்றலின் அளவிற்கும், காலத்திற்கும், நோக்குக்கும் உள்ள தொடர்பினைப் பற்றி ஆய்வுகள் நடத்தினர். வெவ்வேறான பயன்களுக்காக வெவ்வேறான மனப்பான்மைகளைத் தனியன் கொண்டிருப்பதால், கற்றலின் அளவில் குறிப்பிடும்படியான மாற்றங்கள் உள்ளதை ஆய்வாளர்கள் கண்டார்கள். ஆதலின், நாம் அடிப்படை உரையாக 'அக்கறை திறனை வளர்க்கின்றது ; திறன் அக்கறையை வளர்க்கின்றது' என்று கூறலாம். ஒருவன் ஒரு வேலையைப் பற்றி அறியாமலிருக்கும்போது, அதில் அவன் அக்கறை கொண்டிருக்கலாம் என்று கூற இயலாது.

அக்கறை திறனுடன் தொடர்பு கொண்டிருக்கிறது என்ருலும், ஒரு குறிப்பிட்ட துறையில் அதிக அக்கறை கொண்டிருப்பதனுல் அதிகத் திறன் உள்ளவனுக இருப்பான் என்று கூற இயலாது. முதலாவதாகத் தனியாள் மாறுபாடுகள் இருக்கின்றன. மாணவன் அக்குறிப்பிட்ட துறையில் மற்றச் செயல்களைக் காட்டிலும் அதிக அக்கறையுடையவனுக இருக்கலாம். மற்றத் துறைகளைக் காட்டிலும் அத்துறையில் அதிகத் திறன் உடையவனுய் இருக்கலாம். இருப்பினும், அவனுடைய பொதுவான குறைபாடுகள் காரணமாகத் திறமை குறைந்தவனுக இருப்பான். ஒரு பையன் பேஸ்பால் (Baseball) விளையாட்டில் நுண்ணிய அக்கறை கொண்டவனுய் இருக்கலாம், இதனுல் அவனது உயர்நிலைப் பள்ளியின் பேஸ்பால் ஆட்டக் குழுவில் இடம் பெறுவான் என்று கூற இயலாது. அவன் மற்ற விளையாட்டுகளைக் காட்டிலும் பேஸ்பால் விளையாட்டில் திறமைசாலியாக விளங்குவான் என்று வருமுன் கூறுவதே பொருத்தமாக இருக்கும். அதாவது மற்ற விளையாட்டுகளைக் காட்டிலும் இவ்விளையாட்டில் குறிப்பிடும்படியான வெற்றியடையும் வகையில் பங்கு கொள்வான் என்று கூறலாம். உண்மையில் அக்கறைக்கும் திறனுக்கும் உள்ள தொடர்பினைப் பற்றி எடுத்துக்கொண்ட முடிவுகள் குழப்பங்கள் உள்ளனவாக இருக்கின்றன. குறைவான அக்கறையுடைய பொருளில் உள்ள திறனுக்கும், மற்றப் பொருள்களில் உள்ள திறனுக்கும் உள்ள தொடர்பினைக் காண்பதைக் காட்டிலும், அதிக தீவிரமான அக்கறையுள்ள செயலில் உள்ள திறனுக்கும் மற்றச் சார்பான செயல்களில் உள்ள திறனுக்கும் உள்ள தொடர்பினைக் காண்பதே பொருத்தமாயிருக்கும்.

பெற்ருேர்களும் ஆசிரியர்களும் தங்களிடமுள்ள குழந்தைகளின் விரும்பத்தக்க குணங்களையும், மறைந்துள்ள திறன்களையும், திறமைகளையும் பாராட்டுவதன்மூலம் சிறந்த பயனை அடைய முடியும். இருப்பினும், அவர்கள் தங்கள் குழந்தைகளின் வரம்புகளை அறிந்து அவர்களது சக்திக்கு அப்பாற்பட்ட செயல்களை எதிர்பார்க்கக் கூடாது. கிப்பி (Gibby), கல்வியில் பின்தங்கியுள்ள ஒரு விவரமான தனியாள் வரலாற்றைத் தருகின்ருர். இவ்வரலாருனது இவ்வகையைச் சார்ந்தவைகளுக்கு மாதிரியாக அமைந்துள்ளது.

14 ஆண்டுகள் 7 மாதங்களான ஜேம்ஸ் ஏழ்மையான உடை உடுத்துவான். அவனுடைய முகம், கைகள் அழுக்குப் படிந்து இருந்தன. தலைமுடி என்றும் வெட்டவேண்டிய அளவில் வளர்ந்திருக்கும். அவனது உயரம் 5 அடி 2 அங்குலம். அவனுடைய எடை 128 பவுண்டு. அவனுடைய தசை இணைப்புகள் சரிவர அமையவில்லை. அவன் இடக்கையைப் பயன்படுத்துபவன். இந்

நிலையை அவன் மாற்றிக்கொள்ள விரும்பவில்லை. அவனிடம் பேச்சுக் குறைகள் இல்லை. அவனது பார்வை மோசமாக இருந்தது. கண்ணுடி அணிந்திருந்தான். ஸான்போர்டால் புதுப்பிக்கப்பட்ட பினே சோதனையின் (Stanford Revision of Binet Test) வாயிலாக மனவயது 7 ஆண்டுகள் 4 மாதங்கள் என்று கணக்கிடப்பட்டது. அப்பொழுது அவனது நுண்ணறிவு ஈவு 52 ஆகின்றது. ஒஹியோ கல்வியறிவு சோதனையில் (Ohio Literacy Test) குறைந்த அளவு மதிப்பெண்கள் பெற்ருன். அப்பொழுது அவனது மனவயது 5-க்குக் குறைவாக ஆகின்றது. மற்றச் சோதனைகளுக்கு அவன் தந்த எதிர் வினைகளிலிருந்து அவன் போதிய அளவு பிறழ்வு நிலையில் உள்ளான் என்பது தெளிவாகத் தெரிகின்றது. வாசிக்கும் திறன்களில் அவன் வளர்ச்சியடைவில்லை என்பதும், கட்டளைகளைப் புரிந்துகொள்வதில் தொல்லைகள் இருப்பதும் தெளிவாகின்றது.

ஜேம்ஸ் தான் புத்தியுடையவன் என்று எண்ணிக்கொண்டான். அவன் தனக்குத் தெரியாத கேள்விகளுக்கு விடையளிக்கும்போது, 'நான் இன்னும் அதைப் பள்ளியில் கற்கவில்லை' என்று கூறுவான். பல சமயங்களில் அவன் கேள்வி கேட்பவரை நோக்கிக் கேள்விகளுக்குப் பதிலாக அவர் முகத்தைப் பார்த்துச் சிரிப்பான். அவன், ஹேகார்டி-ஓல்சன்-விக்மென் நடத்தை தரமிடும் அட்டவணை (Haggerty-Olson-Wickman Behaviour Rating Schedule), 'ஆ' பகுதித் தரமிடலில் 99·9% வருவதாக இருந்தான். இவையெல்லாம், அவன் மிகவும் தவறான பொருத்தப்பாடுகளைக் கொண்டிருக்கின்ருன் என்பதைக் காட்டுகின்றன. ஜேம்ஸ் பள்ளிப் படிப்புக்கு வந்ததிலிருந்து, பள்ளி அலுவலகத்தாருக்கு, ஒரு பிரச்சினைக் (problem) குழந்தையாகவே இருந்துவந்தான். அதாவது, பள்ளி அலுவலகத்தார் அவனை வைத்துக்கொண்டு என்ன செய்வது என்று புரியாத அளவில் பிரச்சினையாக இருந்தான். அவன் மோசமான நடத்தைச் சிக்கல்களை வெளிப்படுத்தவில்லை. இந்தப் படிப்பு நடந்தபோது அவன் ஆருவது படிவத்திற்குத் தரமிடப்பட்டான். அவன் என்றும் முதல் படிவத்திற்குத் தேவையான அளவு வேலை கூடச் செய்யவில்லை. பெரும்பாலும் அமைதியாக அமர்ந்திருப்பான். ஆனால், ஒரு நாளில் இரண்டு மூன்று தடவைகள் கட்டுப்படுத்த முடியாத அளவு பலமாகச் சிரித்துக் கைகளைப் பலமாகப் பல தடவை தட்டுவான். பள்ளிக்கு ஒழுங்காக வருவான். அவன் பள்ளிக்குத் தவருமல் வந்ததைக் கவுரவிக்க ஒரு நற்சான்றிதழ் தரப்பட்டது.

அவனுடைய கணக்கியல் வயது (arithmetic age) 7 ஆண்டுகளாக இருந்தது. ஆனல் அவன் வாசிப்பதற்குரிய திறமையைக்

காட்டவில்லை. இது கீழ்க்கண்ட நிகழ்ச்சியினால் வெளியாயிற்று. 'A, B, C, D, E' என்ற எழுத்துகள் கரும்பலகையில் தரப்பட்டன. ஜேம்ஸிடம் ஒவ்வோர் எழுத்தும் சொல்லப்பட்டு, அவனைத் திருப்பிச் சொல்லும்படி பயிற்சி திரும்பத் திரும்ப அளிக்கப்பட்டது. இந்த எழுத்துகள் அவ்வரிசையில் சரியாக இருக்கும்வரை அவனால் எழுத்தைக் காட்டிச் சொல்ல முடிந்தது. ஆனால், இந்த வரிசையை மாற்றியமைத்துக் கூறினாலோ, முதல் எழுத்தை விட்டு வேறு எழுத்தில் துவங்கினாலோ, அவனால் ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரித்துணர முடியவில்லை. கதைகள் கொண்ட தொடக்கப் பள்ளி ஆயத்த நூல்களில் (Pre-primer Reader) அவனது பட்டறிவு வாசிப்பதில் அவனுடைய தன்மையைப் பற்றி மேலும் விவரிக்கின்றது. அந்த நூல் கிட்டியதும் மகிழ்ச்சி யடைந்தான். ஒவ்வொரு வரியையும் தான் வாசிக்கக் கற்றுக்கொள்ளப்போவதாகக் கூறினான். அவன் பள்ளிக்கு மறுநாள் வந்து அப்புத்தகத்தைப் படித்து முடித்துவிட்டதாகவும், வேறு ஒரு நூல் வேண்டுமென்றும் கூறினான். முதல் கதையைப் படிக்கச் சொல்லியபோது, ஜேம்ஸ் சரியாகக் கடகடவென்று ஒப்பித்துவிட்டான். இதற்காக அவன் பாராட்டப்பட்டு, அடுத்த இரண்டு கதைகளையும் வாசிக்கும்படி கேட்கப்பட்டான். ஜேம்ஸ் அதையும் சரியாகச் செய்தான். ஆனால், அவனிடம் 'ஒரு' என்ற சொல்லுக்கு என்ன பொருள் என்று கேட்கப்பட்டதற்கு, அவன் 'குழந்தை' என்ற சொல்லுக்குரிய பொருளினைக் கூறினான்; மேலும் கேள்விகள் கேட்கப்பட்டதில், அவனுக்காக அவனது பாட்டியார் கதைகளைப் படித்துச் சொன்னார்கள் என்ற செய்தி வெளிவந்தது. முன்னைய நாள் மாலையில் அவனது பாட்டியார் அவனுக்குக் கதைகளைத் திரும்பத் திரும்பப் படித்துக் காட்டியதனால், ஒவ்வொரு வார்த்தையையும் அவனால் நினைவில் இருத்த முடிந்தது.

ஜேம்ஸ் ஒரு மனவெழுச்சிக் குறையுடைய தனியன் என்பது தெளிவாகின்றது. அவன் தீவிரமான நடத்தைச் சிக்கல்களைத் தரவில்லை. ஆனால், எல்லா விதிகளையும் அதிகாரத்தையும் கண்மூடித்தனமாக ஏற்றுக்கொள்கின்றான். அவனுடைய தசை இணைப்புகள் சரிவர இல்லையாதலின், அவனைப் பல உடல் உழைப்புச் செயல்களுக்குப் பயனுள்ள வகையில் பயிற்சியளிப்பது சாத்தியமில்லாமல் ஆகிவிட்டது. அவன் செய்யக்கூடிய எந்த வேலைக்கான செயல்களையும் அவனுக்காகத் திட்டமிட வேண்டும். ஒவ்வொரு நிலையிலும் மேற்பார்வை செய்ய வேண்டும். ஒன்பது ஆண்டுகள் அவன் ஒழுங்காகப் பள்ளிக்குச் சென்றும், அதனால் அவன் பயனடையவில்லை. வாசித்தலையோ அல்லது கல்வியறிவுக்கு வழியமைந்த பாடங்களையோ அவனால் கற்றுக்கொள்ள முடியவில்லை. இவ்வாறு அவன் அரசாங்கத்தினால் காப்பாற்றப்படும் ஒருவகை

(மனக்குறையுள்ளோர் பள்ளியில்) இருக்க வேண்டியவன், அங்குக் கொண்டுபோகப்படாமல் வைக்கப்பட்டான். இதனால் பள்ளிக்கு அவனைக் காக்க வேண்டிய பொறுப்பும் தொல்லையும் ஏற்பட்டன. அவன் பள்ளியை விட்டதும் அவனது குடும்பச் சூழ்நிலைகள் மிகவும் கீழான நிலையில் இருந்ததால், மனக்குறையுள்ளோர் பள்ளி ஒன்றில் அரசாங்கத்தினால் காப்பாற்றப்பட வேண்டியவனானான்.[14]

**பள்ளியும் அக்கறை வளர்ச்சியும்**

பள்ளிகள், இளையோருக்கு அவர்களது சமூகத் தொடர்புகளைப் பெருக்குவதற்கும், அந்தஸ்தை அடைவதற்கும், முதியோர் பருவ வாழ்க்கைக்கு ஆயத்தம் செய்துகொள்வதற்கும் மற்றவைகளைவிட அதிகமான வாய்ப்புகளைத் தருகின்றன. எல்லா இளையோரும் பாடத் திட்டப் பாடங்களில் சிறப்பாக இருக்க இயலாது. பெரும்பான்மையோர், பள்ளி அவர்களிடத்து ஏற்படுத்தும் பயிற்சிக்கும், செல்வாக்குக்கும் ஏற்ப அமைதியான ஒரு விரும்பத்தக்க வாழ்வை நடத்தக் கற்றுக்கொள்ளலாம்.

இந்தப் பகுதியில் பள்ளியில் உண்டாகும் நட்புகள் நல்ல ஆளுமை, குண இயல்புகள் உருவாவதற்கும், காளைப் பருவம் நிலையாவதற்கும் பெருமளவு காரணமாய் உள்ளன. குறிப்பேடுகளும், விவர அட்டவணைகளும் (charts) நட்புகள் பொதுவான அக்கறைகளினால் ஏற்படுவதாகக் குறிக்கின்றன. நமக்குத் தெரிந்த எந்த ஓர் இளையோனின் செயல்களை எடுத்துக்கொண்டாலும், இவ்வுண்மையை அறியலாம். ஓர் இளையோன், உடன் விளையாடும் ஒருவனையோ, கைத்திறம் உள்ளவனையோ, ஓர் இசைக் கலைஞனையோதான் நண்பனாக நாடுவான். மேலும், இத் தொடர்புகள் எவ்வளவு அடிக்கடி ஏற்படுகின்றனவோ, அது அக்கறைகளின் இருப்புக் காலத்தைக் குறிக்கும். பள்ளி, பாடத் திட்டத்திற்கு அப்பாற்பட்ட புறச்செயல்களின் மூலமாக வெவ்வேறான அக்கறைகளை வளர்க்கின்ற பல்வேறு வாய்ப்புகளைத் தந்து இத் தொடர்புகளைத் தொடர்ச்சியாக வைத்துக்கொள்ள வழிவகுக்கின்றது.

பற்றுறுதியும் (loyalty) பள்ளியில்தான் தோன்றுகின்றது. முதலில் இளையோனுக்கு இக்குணம் உடன் படிக்கும் தோழர்கள் மீதும், ஆசிரியர்கள்மீதும் ஏற்படுகிறது. ஆனால், சீக்கிரமே அது விரிவாகிப் பள்ளியுணர்வு என்று ஏற்பட்டுப் பள்ளி முழுவதின்மீதும் பொது

[14] R. G. Gibby, 'A Clinical Study of Thirty-Two Scholastically Retarded Special-Class Boys', Master's Thesis, Ohio State University, 1939.

வாகப் பற்றுறுதி கொள்ளச்செய்கிறது. பள்ளிப் பற்றுறுதி, நேர்மை, ஜனநாயகம் ஆகியவற்றைச் சொல்லிக்கொடுப்பதில்மட்டும் அதனுடைய வேலை பூர்த்தியடையவில்லை. இப்பாடங்களின் உண்மை மதிப்பு, அவற்றைப் பள்ளியிலுள்ள பல்வேறு அமைப்புகளில் பழக்கத்திற்குக் கொண்டுவருவதில்தான் உள்ளது. இது நல்ல குடிமகனை ஆக்குகின்ற பணியில் துவக்க நிலையாக அமைகின்றது. பள்ளிப் பற்றுறுதி சமூகப் பற்றுறுதியை உண்டாக்கிக் கடைசியில் நாட்டுப் பற்றுறுதி யினை உண்டாக்குகின்றது. அதில்தான் வகுப்பறைக்கு வெளியே நடைபெறும் பல செயல்கள் பயனுள்ளவையாய்ச் செயற்படுகின்றன. இச் செயல்கள் யாவும் தன்மையில் வகுப்பறைப் புறச்செயல்கள் என்று குறிப்பிடப்படுகின்றன. ஆனால், இவற்றையெல்லாம் ஒரு பள்ளியின் திட்டத்தில் முக்கியப் பங்கு உள்ளதாகக் கருதுகின்ற உணர்வை இப்பொழுது காணலாம். அவ்வாறான செயல்கள் பல வழிகளில் வகைப்படுத்தப்படுகின்றன. ஹாசில (Hausle) கீழ்க் கண்டவாறு நான்கு பிரிவுகள் கொண்ட வகைபாடு ஒன்றைத் தருகின்றார்: (1) ஒற்றையர் விளையாட்டுகள்—பள்ளிகளுக்கிடையே-பள்ளிகளுக்குள்ளே விளையாட்டுகள். (2) குழுக்கள்—பாடம், பொழுதுபோக்கு, நலம், மதிப்பியலான காரணங்களால் தோன்றியவை. (3) பாடத்திட்டத்தை ஓரளவு சார்ந்துள்ள செயல்கள்: சில பள்ளிகள் இச் செயல்களில் ஈடுபடுவதனால் பாடத்தகுதி தரலாம். (4) குடிமைச் செயல்கள்—சேவை செய்ய ஆர்வம்.[15]

பல மாணவர்கள் கல்வியிலும் மனவெழுச்சியிலும் தொடர்ச்சியான தோல்விகள் அடைவதற்கு முக்கியக் காரணம் நமது பள்ளித் திட்டத்தில் தனியாள் மாறுபாடுகளைப் பற்றிக் கவலை கொள்ளுவதே யாகும். சமூகப் பள்ளித் தர அளவுகளின்படி மனநிலையிலும் உடல் நிலையிலும் போதிய வளர்ச்சி பெறாதவர்கள் அவர்களது குறிக்கோள்களை அடைய முயலுவதில் எப்பொழுதும் தோல்வியே காண்கிறார்கள். ஓர் இளையோன் முதியோன் பருவத்தினனைவிட அவனுடைய செயல்களில் ஓரளவு வெற்றியடையாவிடில், அதிகமாக உணர்ச்சி வசப்படுகிறான். ஒரு முதியோன் போலிங் (Bowling) விளையாட்டிலோ, கால்ப் (Golf) விளையாட்டிலோ அதிகத் தேர்ச்சி இல்லாவிடினும், பங்கு பெறுவதனாலேயே மகிழ்ச்சியடைகிறான். அவன் வெகு சீக்கிரம் அவனது ஆற்றலின் எல்லையை அறிந்து கொள்கிறான். ஆனால் இதற்கு மாறாக, இளையோன், ஒரு தலைவனாகவோ அல்லது விளையாட்டு வீரனாகவோ ஆவோம் என்ற ஓரளவு தீவிரமான

[15] E. C. Hausle, 'Objectives of a Program of Extracurricular Activities in High School', Recreation, 1940, Vol. 34, p. 361.

நம்பிக்கை வைத்திருக்கிருன். ஆதலின், அவனுக்குச் சமூகத்தில் தனது அந்தஸ்தையும் பணியையும் ஏற்றுக்கொள்வது கடினமாகும். போட்டியும், அதில் ஓரளவு வெற்றிபெற வாய்ப்பு இருப்பதும் இளை யோனைத் தூண்டுகின்றன. இவை அவனுடைய பணியைப் பற்றியும் அதை ஏற்றுக்கொள்ள அதனைப் பற்றிய உண்மைகளையும் பொருளை யும் தருகின்றன.

## குழுச்செயல்கள்

இளையோர் பருவத்தில் விளையாட்டு ஈடுபாடுகளில் காணப்படும் திடீர் மாறுதல்கள் அவனது ஏதோ ஓர் உணர்வோ தூண்டுதலோ திடீரென்று முதிர்ச்சியடைந்ததால் அல்லது அவன் திடீரென்று வளர்ச்சி யடைந்துவிட்டதால் ஏற்பட்டவை என்று கருதக்கூடாது. வளரும் குழந்தை சக்தியிலும் தீரத்திலும் முதிர்ச்சியடைகின்றது. அதி கப்படியான சக்தி ஓர் உயிரியல் உந்தாக வேலை செய்கின்றது. புது சமூகத் தொடர்பு எல்லைகள் எப்பொழுதும் பரவிக்கொண்டே இருக் கின்றன. குழுவில் உள்ள மற்ற உறுப்பினர்களுடன் கொள்கின்ற இடைவிடாத் தொடர்புகள் குழு விளையாட்டின் வளர்ச்சிக்கு உதவு கின்றன. தனியன் தனது தேவைகளில் சிலவற்றைக் கூட்டுறவு வழிகளில்தாம் பூர்த்தி செய்துகொள்ள முடியும். தனித்த விளை யாட்டினுல் பூர்த்தி செய்துகொள்ள முடியாது என்பதைச் சீக்கிரமே உணர்கின்ருன். ஆதலின், சில அவசியமான தேவைகள் பூர்த்தியாவ தனுல், குழுச் செயல்கள் வளர்ச்சி யடைகின்றன. இத்தேவைகள் யாவும் உயிரியல் அடிப்படை கொண்டவை. ஆனுல், தனியன் வளருகின்ற சமூக வாழ்க்கையின் அடிப்படையில் இவையெல்லாம் சமூகத் தேவைகளாக மாறுகின்றன. குழு விளையாட்டுகளில் உள்ள அக்கறையின் வளர்ச்சியானது, தொடக்கத்தில் இருந்த தனியன் விளையாட்டு அக்கறைகளுடன் சேர்ந்து வளர்கின்றதேயன்றி அதற்குப் போட்டியாக வரவில்லை. பால்சுரப்பிகள் முதிர்ச்சி யடை வதும், மாற்றுப் பாலாரிடத்துத் தோன்றுகின்ற அக்கறையும் ஓரளவு இளையோர் பருவத்தில் குழுச் செயல்களில் அக்கறை காட்டுவதற் குக் காரணமாக அமைகின்றன. இப் பருவத்தில் பல விளையாட்டு கள் மற்றெந்தக் காலத்தைக் காட்டிலும் சமூக உணர்வுடன் கூடியதாய் விளங்குகின்றன. இருபாலாரும் பழகத் தொடங்கி, பால் சமூகத் தன்மையான அக்கறைகள் வளர்ச்சி யடை கின்றன. இப்பொழுது சிறுமி சிறுவர்கள் குழுக்களில் பற்றுக் கொள்கின்றனர். சிறுவர்களும் சிறுமியர் குழுக்களில் பற்றுக் கொள்கின்றனர். இப்பகுதி வாழ்வில் சிறுவர் சிறுமியரது விளை யாட்டுகளும் தன்மையில் முறையமைந்த வையாய் (formal) இருக்கின்றன. வரையறுக்கப்பட்ட விதிகள் தரப்பட்டு விளையாட்

14

டின் தரத்தைச் சிறப்பாக்குகின்ற வேலையும் செய்யப்படுகின்றது. இளையோர் பருவச் சிறுமிகளின் விளையாட்டு பொதுவாகச் சிறுவர் களின் விளையாட்டுகள்போன்றே இருக்கின்றன. அவை சிறுமிகளுக்கு மிகவும் சிரமம் தரும் வகையில் சில மாற்றங்களை கொண்டிருக் கின்றன.

பெரிய, சிறிய உயர்நிலைப் பள்ளிகள் இரண்டிலுமே சில செயல் கள் முதன்மையாக இருக்கும். சாதாரண உயர்நிலைப் பள்ளியில் ஓட்டப் பந்தயங்கள் மிகவும் புகழ் வாய்ந்திருக்கும்; பேஸ்பால் **(Base ball)**, கூடைப் பந்து **(Basket ball)**, மற்றும் சில அதிகச் செல வில்லாத, தொடர்ச்சியான, பயிற்சி தேவையில்லாத விளையாட்டு களைச் சிறு பள்ளிகளில் பொதுவாகக் காணலாம். சிறு உயர்நிலைப் பள்ளிகள் அதிகமான எண்ணிக்கையுடைய குழுச் செயல்களைவிட அறைக்குள் விளையாடும் விளையாட்டுகளுக்கே நிரம்ப இடமளிக்கின் றன. குழுக்கூட்டுறவும் குழுப்போட்டிகளும் குழுச்செயல்களின் கார ணமாக ஓட்டப் பந்தயங்களின் இடத்தைப் பிடித்துக்கொள்ளும். மேலும், சிறு உயர்நிலைப் பள்ளிகள் தங்களுடைய பள்ளிக்குள் நடத் தும் போட்டிகளைவிட பள்ளிகளுக்கிடையே நடத்தப்படும் போட்டி களில் ஈடுபடுவதிலேயே அக்கறை காட்டுகின்றன.

ஓட்டப் பந்தயங்கள் இளைஞர்களின் கல்வியறிவு, தேகநலம் ஆகியவற்றை எந்த அளவில் பாதிக்கின்றன என்பதைக் குறித்து மாறுபட்ட கருத்துகள் கொண்ட விவாதம் நடந்து வருகின்றது. இவ்விவாதம் உண்மையில், எந்த அளவில் ஒத்துக்கொள்ளக்கூடிய உண்மைகளின் அடிப்படையில் நடக்கின்றது என்று நிர்ணயிப்பது கடினமாகும். ஏனெனில், எந்த ஓர் ஓட்டப் பந்தயத்தின் முடிவும் அந்தப் பந்தயத்தின் தன்மையையும், அது நடத்தப்பட்ட விதத்தை யும் பொறுத்து இருக்கின்றது. விளையாட்டுகளில் பங்குபெறுதல் ஒரு நலந்தருகின்ற காரியமாக அமைகின்றது. பல மாணவர்களைப் பள்ளியில் இருக்கவைக்க பாடத்திட்டத்திலுள்ள மற்றப் பாடங்களால் முடியாத பொழுது, அவர்களைப் பள்ளியில் இருக்க வைக்க ஓர் ஊக்கியாக இப்பந்தயங்கள் அமைகின்றன.

இளையோர் பருவத்தாரும், இளையோர் பருவத்தைக் கடந்தவர் களும் போட்டிக் குழுச் செயல்களில் அக்கறையை வளர்ப்பதற்குக் காரணம் உயர்நிலைப் பள்ளிப் போட்டிகள் மட்டுமல்ல; அமெரிக்க லிஜியன் **(American Legion)** சார்பிலும், மற்ற அமைப்புகளின் சார்பிலும் நடத்தப்படுகின்ற நிகழ்ச்சிகளின் காரணமாகவும் இவ் வக்கறை வளர்கின்றது. இவ்வமைப்புகள் பேஸ்பால் **(Base ball)** போன்ற பல விளையாட்டு வகைகளில் தேசியப் பற்றுள்ள அக்கறை

தோன்றுவதற்குக் காரணமாக இருந்தன. விளையாட்டுகளில் பங்கு பெறுவதில் அடையப்பெறும் பயன் மதிப்புகள் பல்வேறு வகைப் பட்டனவாகும். பிற்கால வாழ்வு முழுவதிலும் பொழுதுபோக்காகவும், மனநலம் தரவல்லதாகவும் இவ்வக்கறை வளர்ச்சி நிலைநின்று உதவுகின்றது.

விளையாட்டுகளில் பங்கு பெறுவதனல் தசைநார்களின் வளர்ச்சி ஏற்படுகின்றது. தசைநார்களின் வளர்ச்சியை இன்றைய சமூகக் குழுக்கள் பெண்மைத் தன்மை வாய்ந்தது அல்ல என்று கருது வதனல், சிறுமிகள் விளையாட்டுகளில் அக்கறை காட்டுவதில்லை. குறிப்பாக அவர்கள் இளையோர் பருவத்தை அடையும்பொழுது பெண்தன்மை கொண்டவர்களாகவும், பெண்ணினுடைய பங்கைச் செய்ய விரும்புபவர்களாகவும் இருப்பார்கள். இது பெண்களுக்குரிய விளையாட்டுத் திட்டங்களை வகுப்போர் கவனிக்கவேண்டிய ஒரு பிரச்சினையாகும். பெண்தன்மையான குணங்கள் என்று இதுகாறும் வரையறை செய்யப்பட்டவைகளை மாற்றியமைக்கவேண்டும். இப் பிரச்சினையின் அடிப்படையில் மனிதத் தேவைகள், பய்ன் மதிப்புகள் ஆகியவற்றைப் பற்றியும் நாம் மீண்டும் வரையறுக்க வேண்டும்.

## பள்ளிக்கு வெளியே அக்கறைகள்
## (Out of School Interests)

பள்ளிக்கு வெளியே குழந்தைகளின் அக்கறைகள் பற்றிய குறிப்புகளைப் பார்க்கும்பொழுது, எல்லா வயது நிலைகளிலும் விளை யாட்டுகள், பந்தயங்கள் ஆகியவற்றிலேயே அவர்கள் அதிக அக் கறை கொண்டுள்ளார்கள் என்று தெரியவருகின்றது.

இதை ஜெர்சில்ட், டாஸ்ச் ஆகியோர் நடத்திய ஆய்வின் முடிவு கள் வலியுறுத்துகின்றன. அதில் சில முடிவுகள் அட்டவணை 6-5ல் தரப்பட்டுள்ளன.[16] இளையோர் பருவத்தில் உள்ள சமூக வளர்ச் சிக்கு ஏற்பப் பொழுதுபோக்குள்ள இடங்களுக்குச் செல்வதிலும், நாடகத்திற்குச் செல்வதிலும், சமூகத் தொடர்புள்ள செயல்களைச் செய்வதிலும் அதிக அக்கறை காட்டப்பெறுகின்றது. ஜெர்சில்ட், டாஸ்ச் நடத்திய ஆய்வில் பொதுக்கலாசார ஈடுபாடுகளை—அதாவது கலைக் கண்காட்சி, கச்சேரி ஆகியவைகளுக்குச் செல்லுதல் போன்ற வைகளை மற்றவைகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, குறை வான அக்கறையையே உடையனவாய் இருக்கின்றன. அவை

[16] Op. cit., p. 158.

## அட்டவணை 6—5

நான் பள்ளிக்கு வெளியே சிறப்பாக விரும்புவன
(ஜெர்சில்ட், டாஸ்ச் தந்தவை)

| வகையினம் | வயது 9-12 | | வயது 12-15 | | வயது 15-18 | |
|---|---|---|---|---|---|---|
| | ஆண்கள் | பெண்கள் | ஆண்கள் | பெண்கள் | ஆண்கள் | பெண்கள் |
| உலகியல் பொருள்கள், குறிப்பிட்ட பொருள்கள், பொம்மைகள், உணவு, தங்குமிடம் செல்வமானவைகள், உடை ... | 1·9 | 3·4 | 3·1 | 3·2 | 3·6 | 2·3 |
| விளையாட்டுகள், பந்தயங்கள், திறந்தவெளி செயற்பாடுகள், கார் ஓட்டுதல் ... ... | 73·5 | 68·0 | 56·4 | 51·9 | 56.9 | 41·3 |
| பல்வகைப் பொழுதுபோக்குகள், பூங்கா, சுற்றுலா, முகாம், ஓய்விடம் ... | 2·4 | 5·7 | 5·2 | 8·5 | 7·4 | 9·4 |
| வானொலி, திரைப்படம், நாடகங்கள், சித்திர நூல்கள் ... ... | 5·5 | 9·5 | 9·8 | 16·7 | 8·9 | 18·7 |
| சமூக செயற்பாடுகள், அமைப்புகள், விருந்துகள், சாரணர் இயக்கம், டிமோலே (Demolay)... | 1·5 | 1·0 | 1·3 | 8·0 | 3·2 | 13·0 |
| படிக்கின்ற அளவு, வாசித்தல், பள்ளிப் பாடங்கள். | 4·3 | 3·9 | 5·3 | 13·3 | 8·5 | 13·3 |
| கலை ஈடுபாடுகள், சுவைத்தல், இசை, சித்திரம் ... | 0·6 | 3·1 | 2·4 | 5·5 | 4·6 | 8·7 |
| கைத்தொழில்கள், இயந்திரக் கலைகள் ... | 3·5 | 1·7 | 4·5 | 0·7 | 11·3 | 0 |
| தன்முன்னேற்றம், அறிதல், தொழிலில் இடம் பெறுதல், தகுதி ... | 3·3 | 3·6 | 0·8 | 5·0 | 13·1 | 6·0 |
| இடைக்கால வேலை, கடமைகள், தினசரிக் கடமைகள் ... ... | 1·2 | 5·0 | 2·2 | 3·9 | 0·6 | 0·8 |
| மக்கள்: உறவினர்களும் மற்றவர்களும் ... | 3·9 | 4·8 | 3·7 | 3·9 | 9·3 | 20·9 |

போன்றே விருப்பத் தொழில்களைப் (hobbies) பற்றியும் குறைவான அளவே குறிப்பிடப்பட்டுள்ளது. குழந்தைகள் பள்ளிக்கு வெளியே எவற்றை அதிகமாக விரும்பவில்லை என்று விவரிக்கும்போது, பெரும் பகுதியினர் இடைக்கால வேலைகள், கடமைகள், தினசரிக் கடமைகள் ஆகியவற்றைப் பற்றிய செயல்களையே குறிப்பிட்டனர். குழந்தைகள், இளையோர் ஆகியோரின் சமூக அக்கறைகளில் நகர்ப்புறக் கலாசாரத்தின் சாயல் தெளிவாகத் தெரிகின்றது. இளையோரின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் வகையில் அமைந்துள்ள நிறுவனங்களே அவர்களைப் பெரிதும் கவருகின்றன. திருச்சபையுடன் தொடர்பு கொண்ட ஓர் இளையோர் அமைப்பு இத்தேவையினை ஓர் அறைகூவலாக ஏற்றுக் கொண்டு, இளையோரின் தேவைகளையும், அவரது நிலைகளையும் உணர்ந்து, அதற்கேற்ப ஒரு திட்டத்தினைத் தந்தால், அவ்வமைப்பின் வேலைகளில் இளைஞர்கள் பெரிதும் அக்கறை காட்டுவார்கள். அமெரிக்காவில் உள்ள ஒவ்வொரு சமூகக் குழுவிலும் பல்வேறு சக்திகள் இயங்கும் நல்ல அமைப்பு உள்ள, அமைப்பு இல்லாத நிறுவனங்கள் யாவும் ஒருங்குகூடி இளையோரின் தேவைகளுக்குத் தகுந்த போக்கிடங்களைத் தருகின்ற முயற்சியில் ஈடுபடுகின்றன. ஆனால், பல சமயங்களில் இவ்வாறு அமைகின்ற போக்கிடங்கள் அதிக விரும்பத்தக்க வகையில் ஏற்படுவதில்லை.

## விளையாட்டில் அக்கறை (Interest in play)

தன்னியல்பான அக்கறைகளும், புறவியல்பான அக்கறைகளும் பிரித்துணரப்படுகின்றன. நல்ல சமநிலைப்பட்ட ஆளுமை வளர்ச்சியில் அவ்வக்கறைகள் இரண்டுமே இடம்பெற வேண்டும் என்று கூறல் அவசியமில்லை. மக்கள் தங்களது ஓய்வு நேரத்தை நல்ல வழிகளில் பயன்படுத்தக் கற்றுத் தரல் வேண்டும் என்பதைக் கல்வித் துறையினர் மிகமிகத் தீவிரமாக உணரத் தொடங்கி விட்டனர். ஒரு சாதாரணக் குடிமகனுக்கு நாகரிகத்தின் பல்வேறு பட்ட தன்மை அதிகமாக ஆக, தொழிலாளர் வேலைநேரம் குறைவாக ஆக, பயன்படுத்தப்படாத நேரம் அதிகமாக இருக்கின்றது. ஆனால், கல்வியறிவு ஒரு குடிமகனை இவ்வோய்வு நேரத்தை முழுவதும் பயனுள்ள வகையில் செலவு செய்யும் விதத்தில் தயார் செய்யவில்லை.

இளையோனுக்கு விளையாட்டு தன்னியல்பான பயன் மதிப்பையும் கொண்டுள்ளது. ஆனால், மேலும் வளர்ச்சி யடைவதனாலும் முதிர்ச்சி யடைவதனாலும் புறவியல்பான பயன் மதிப்புகள் அதிகமாக நாடப் படுகின்றன. விளையாட்டுச் செயல்கள் இளையோனுக்கு உடற்கட்டையும், ஆரோக்கியத்தையும், நரம்புத் தசைத் திறன்களையும்,

பொழுதுபோக்கு ஆளுமையையும் தருகின்றன. விளையாட்டில் மாணவனது அக்கறைகள் இளையோர் பருவத்தில் பெரும்பாலும் ஆக்கநிலையிருத்தத்திற்கு (conditioning) ஆளாயிருக்கின்றன. சூழ்நிலை, வயது, பால், இனம், பழக்கம், நுண்ணறிவு போன்ற சில சக்திகள் வெவ்வேறான மாறுபாடுகளை உண்டாக்குவதில் இயங்குகின்றன. சில சக்திகளை இங்கு நாம் புறஆய்வு செய்வோம்.

லெஹ்மன், விட்டி ஆகியோர் நடத்திய ஆரம்ப ஆய்வுகள், விளையாட்டில் உள்ள அக்கறைகள் ஆரம்பக் குழந்தைப் பருவத்தை மட்டும் சார்ந்தன என்று கூற இயலாது என்று காட்டுகின்றன. 6,881 குழந்தைகளை எடுத்துக்கொண்டு அவர்கள் முன்னைய வாரத்தில் ஈடுபாடு கொண்ட செயல்களையும், தாங்கள் தனியாகப் பங்கு கொண்ட செயல்களின் அளவினையும் குறிப்பெடுத்துக் கொண்டார்கள். இவ்வாறு குறிக்கப்பட்ட குறிப்புகளின் மூலம் சோதனையாளர்கள் கீழ்க்கண்ட முடிவுகளைக் கண்டார்கள்:

1. குழந்தைகள் பல்வேறு விளையாட்டுச் செயல்களில் ஈடுபடும்பொழுது கொள்கின்ற மாறுதல்களை வைத்துக்கொண்டு குறிப்பிட்ட சில உண்மை வயதுகளில் ஏற்படும் மாறுதல்களை உணரமுற்படுவது தவறானதாகும்.

2. விளையாட்டு நடவடிக்கைகள் ஒரு குறிப்பிட்ட வயதினைக் குறிப்பிடுவது வளர்ச்சிக் காலத்தில் ஏற்பட்ட தொடர்ச்சியான வளர்ச்சிகளின் காரணமாக ஏற்படுவதாகும். இம்மாற்றங்கள் திடீரென்று ஏற்பட்டவை அல்ல. ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஏற்பட்டவை என்றாலும், அவை தொடர்ச்சியாக, ஆனால் முழுவதுமாக ஏற்பட்ட மாறுதல்கள் ஆகும்.

3. 8-லிருந்து 19 வயதுவரை உள்ளவர்கள் உட்பட்ட எந்த ஒரு வயதைச் சார்ந்தவராக இருந்தாலும், அவரது விளையாட்டு நடத்தையைச் சமூக அடிப்படையிலோ அல்லது தம்மிச்சையான நடவடிக்கைகளின் அடிப்படையிலோ விளக்க முடியாது. அம்மாதிரி விளக்குகின்ற வழக்கம் வேண்டாத ஒன்றாகும்.[17]

இன்று எந்த ஒரு விளையாட்டுச் செயலும் வாழ்க்கையின் எல்லா நிலைகளிலும் பயன்தரவல்ல ஒன்றாக ஒத்துக்கொள்ளப்பட்டிருக்கின்

[17] H. C. Lehman and P. A. Witty, 'Periodicity and Growth', Journal of Applied Psychology, 1927, Vol 11, pp. 106-116.

[18] D. B. Van Dalen. 'A Differential Analysis of the Play of Adolescent Boys', Journal of Educational Psychology, 1947, Vol. 41, pp. 204-213.

றது. பியூரிட்டன் பாதிரியார்கள் (**Puritan Fathers**) போன்று, நாம் விளையாட்டுச் செயல்களில் ஈடுபடுதல் முழுமையான நேரக்கழிவு என்று கூறும் காலம் போய்விட்டது. சோம்பேறிகளும், விளையாடாது கற்பனை உலகிலேயே சஞ்சரிக்கின்ற, பகற்கனவு காணுகின்ற குழந்தைகளுமே விளையாட்டினைக் காலக்கழிவு என்று குறிப்பிடுகின்றனர். விளையாட்டுச் செயல்களைப் பொறுத்த ஆய்வுகள், இரண்டு குறிப்பிடும்படியான உண்மைகள் அல்லது முடிவுகளை அளிக்கின்றன. (1) விளையாட்டு குழந்தைப் பருவத்தைச் சார்ந்த ஒரு செயல் எனக் கருதுவதைக் காட்டிலும் அதனை ஒரு தொடர்ச்சியான நிகழ்ச்சி என்றே கருதவேண்டும். (2) ஒரே வயதினையுடைய, ஆனால் மாறிய பால், மாறிய இனக்குழுக்கள், மாறிய நுண்ணறிவுநிலைகள் உள்ள இளையோர்களது விளையாட்டு அக்கறைகள் பரந்த அளவில் உள்ளதால் ஒன்றின்மீது ஒன்று படிந்த அக்கறைகளாயிருக்கின்றன.

(அ) *சக்தியும் விளையாட்டில் ஈடுபாடுகளும்* : வேன் டேலன் (**Van Dalen**) என்பவர் இளையோர் சிறுவர் விளையாட்டுச் செயல்களில் பங்கு பெறுகின்றதைப் பற்றி ஓர் ஆய்வு நடத்தினர்.[18] 7, 8, 9ஆம் படிவங்களில் உள்ள 348 மாணவர்களுக்குச் சக்திச் சோதனைகள் தரப்பட்டன. 12-லிருந்து 16 வயதுவரை இருந்த அச் சிறுவர்களின் சராசரி வயது 13·4 ஆண்டுகளாகும். சிறுவர்களின் சக்தி பற்றிய அட்டவணை சக்திச் சோதனைகளின் முடிவுகளிலிருந்து தீர்மானிக்கப் பட்டது. உடல் தகுதி அட்டவணையானது, அடைந்த தகுதி அட்டவணையையும், தனியாளின் எடை, உயரத்தையும் பொறுத்து நிர்ணயிக்கப்பட்டதாகும். ஆதாரத் தகுதி ஒரு தனியாளின் உடற்செயல்களில் உள்ள உடனடித் திறமையைப் பற்றி அறிவதற்கு ஒரு சிறந்த அளவாகும்.

உயர்ந்த, தாழ்வான உடல் தகுதியுள்ள குழுக்களில் உள்ளோர் பங்கு பெறுகின்ற அளவும் விரைவும் பற்றிப் பார்க்கும்பொழுது, உயர் குழுக்களில் உள்ள சிறுவர்கள் அதிகமான விளையாட்டுச் செயல்களில் ஈடுபடுவதாகவும், அதிகமான நேரத்தைக் கீழான குழுக்களைக் காட்டிலும் விளையாட்டுச் செயல்களில் செலவிடுவதாகவும் தெரிய வருகின்றது. இது வாசித்தல், பயனுள்ளவற்றைச் செய்தல் ஆகியவற்றைத் தவிர மற்ற எல்லாச் செயல்களையும் பொறுத்தமட்டில் உண்மையாகும். இதில் பங்கு பெறுவதில் உள்ள பெரிய மாறுபாடு உயர்ந்த, கீழான உடல் தகுதிகளைக் கொண்ட குழுக்களினிடையே ஏற்படுவதாகும். இதை ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, கீழான உடல் தகுதிச் சுட்டுக் கொண்டுள்ள குழு உயர்ந்த சிறுவர்களைவிடக் குறைந்த அளவு 10 மடங்கு அதிகமாக இருக்கின்றது.

வேன் டேலன் நடத்திய மற்றோர் ஆய்வில் தசைநார் வளர்ச்சியில் இருமடங்கு நிலைகளில் இருக்கும் ஜூனியர் உயர்நிலைப் பள்ளி

மாணவியர் விளையாட்டுச் செயல்களில் ஈடுபடும்பொழுது உள்ள வேறுபாடுகள் குறித்து ஆராய்ந்தார்.[19] சக்திச் சுட்டும், உடல் தகுதிச் சுட்டும் சிறுமிகளின் சக்தியை நிர்ணயிக்கும் அடிப்படையாகப் பயன்படுத்தப்படுகின்றன. உயர்ந்த சக்தியுள்ள குழுவில் உள்ள சிறுமியர் பங்கு கொள்கின்ற விரைவானது கீழான சக்தியுள்ளோரைக் காட்டிலும் 6 மடங்கு அதிகமாகும். விளையாட்டுச் செயல்களில் ஈடுபட்ட எண்ணிக்கையானது தாழ்ந்த உடற் சக்தியைக் காட்டிலும் 8 மடங்கு அதிகமாகும். தாழ்ந்த சக்திக் குழுவைச் சேர்ந்த சிறுமிகள் விளையாட்டில் பங்கு பெறும்பொழுது தனிப்பட்ட தன்மை உடையவராய்க் (**individualistic**) காணப்பட்டனர். அவர்கள் பங்குபெறும் அமைப்பானது கட்டாயமாக உயர்ந்த சக்திக் குழுக்களைக் காட்டிலும் கீழான நிலையில்தான் இருக்கின்றது.

(ஆ) *பால் வேறுபாடுகள்* (**Sex differences**): ஸிம்ப்ஸன் (**Simpson**) என்பவர் சிறுவர் சிறுமியர்கள் வயதில் முன்னேற்றம் அடையும்பொழுதே சில குழு விளையாட்டுகளில் தங்களுக்கு உள்ள அக்கறைகளைக் காட்டினார்கள் என அறிவித்தார்.[20] இவை அட்டவணை 6—ல் தரப்பட்டிருக்கின்றன. பால் வேறுபாடுகளை நோக்கும்பொழுது சிறுவர்களின் ஆட்டங்கள் சற்று அதிகமான துரிதத்தினைப் பெற்றும், சிறப்பாக அமைக்கப்பட்டும் இருந்தன என்று காணலாம். பல்வேறு குழுக்களில் இருக்கும் பலவகையான மாறுதல்கள் விளையாட்டிலும் உள. அக்கறைகள், தன்மைகள் ஆகியவற்றைப் பற்றிய மாறுதல்களுக்குப் 'பால்' மட்டுமே காரணமன்று. ஆனல், பழக்க வழக்கங்கள், சூழ்நிலை வரையறைகள், குழுவின் அளவு, சிறுவர் சிறுமியர்களின் நல்வித்தரம் ஆகியவற்றைப் பொறுத்து விளையாட்டுச் செயல்களின் தன்மையும் பரப்பும் இருக்கின்றன.

(இ) *நுண்ணறிவும் விளையாட்டும்*: உயர்ந்த மனத்திறன் கொண்ட குழந்தைகள் விளையாட்டு அக்கறைகளில் பின்தங்கி இருப்பார்கள் என்பதற்கு எந்தவிதமான அறிகுறியும் இல்லை. இச்சிக்கலைக் குறித்து லெக்மன், வில்கர்சனின் (**Lehman and Wilkerson**) ஆய்வு தனிப்பட்ட அக்கறை கொண்டது ஆகும்.[21]

[19] D. B. Van Dalen, 'A Differential Analysis of the Play of Junior High School Girls', Journal of Educational Research, 1949-50, Vol. 43, pp. 22-31.

[20] R. G. Simpson, 'Fundamentals of Educational Psychology', Chicago, J. P. Lippincott Co., 1949, Chap. 3.

[21] H. C. Lehman and D. A. Wilkerson, 'The Influence of Chronological Age Versus Mental Age on Play Behaviour', Pedagogical Seminar and Journal of Genetic Psychology, 1928, Vol. 35, pp. 312-321.

## அட்டவணை 6—6

வயதுக் குழுக்கள் தேர்ந்தெடுக்கும் விளையாட்டுகள்
(ஸிம்ப்சனால் தரப்பட்டவை)

| ஆண்கள் | வயது | பெண்கள் |
|---|---|---|
| குண்டு விளையாடுதல், ரயில் ஓட்டுதல், மாட்டுச் சிறுவனாக இருத்தல் ... | 6-லிருந்து 8 வரை | விட்டு விளையாட்டு, பொம்மையுடன் விளையாடுதல், பள்ளி போன்ற விளையாட்டு. |
| உருளையில் சறுக்குதல், பந்து விளையாடுதல், சைக்கிள் ஓட்டுதல் ... | 9-லிருந்து 10 வரை | உருளையில் சறுக்குதல், முதியோர்கள் போன்று உடுத்துதல், ஜேக்ஸ் விளையாட்டு. |
| கூடைப் பந்து, சைக்கிள் ஓட்டுதல், சாரணர் இயக்கம், பேஸ்பால் ... | 11-லிருந்து 12 வரை | உருளையில் சறுக்குதல், காரில் சவாரி, கேட்டல், நீந்துதல், வாசித்தல். |
| பேஸ்பால், கூடைப் பந்து, திரைப்படங்களுக்குச் செல்லுதல், வேட்டையாடுதல், விளையாட்டுப் பந்தயங்களைக் காணல்... | 13-லிருந்து 15 வரை | நூல்கள் வாசித்தல், சமூக நடனம், விருந்துகள், திரைப்படங்களுக்குச் செல்லல், நாளிடல் நிகழ்ச்சிகளைக் கைக்கொள்ளல், விளையாட்டுப் பந்தயங்களுக்குச் செல்லல். |

லெஹ்மன் குவிஸ் பிளான்க்கைப் (Lehman Quiz Blank) பயன்படுத்தி 6,000 குழந்தைகளின் விளையாட்டு நடத்தையைப் பற்றிக் குறிப்புகள் எடுக்கப்பட்டன. இவ்வாய்வின் பிரச்சினை குழந்தைகளின் விளையாட்டு நடத்தை மனவயதினால் பாதிக்கப்படுகிறதா அல்லது உண்மை வயதினால் பாதிக்கப்படுகிறதா என்று பார்ப்பதாகும். இக்குறிப்புகளை ஆராய்ந்து பார்த்ததில், உண்மை வயதில் ஓர் ஆண்டு மாறினால் தனியனின் விளையாட்டு நடத்தையின் மனவயதில் ஓர் ஆண்டு மாற்றத்தைவிட அதிகமான செல்வாக்குக் கொண்டிருப்பதைக் காணலாம். மீத்திற மிக்க (gifted) குழந்தைகளின் விளையாட்டுச் செயற்பாடுகளை ஆய்ந்த பல்வேறு ஆய்வுகள் இக்குழந்தைகள் தனித்து விளையாடும் விளையாட்டுகளில் ஆர்வங் கொண்டவர்களாக இருப்பதாய்க் கூறுகின்றன. அவர்கள் விதிகள் உள்ளவையும் முறைப்படி உள்ளவையுமான விளையாட்டுகளுக்கே

முன்னுரிமை அளிக்கின்றனர். அவர்கள் தசைச்சக்தி தேவைப்படுகின்ற, அதிக நேரம் தொடர்ந்து விளையாடும் விளையாட்டுகளில் மிகவும் குறைவாகவே பங்கு கொள்கின்றனர். மீத்திற மிக்க குழந்தைகள், மற்ற மனிதர்களைப் போலவே, வெற்றியையே விரும்புகின்றனர். தாங்கள் வெற்றி யடையக்கூடிய செயற்பாடுகளுக்கே முன்னுரிமை அளிக்கின்றனர். இதுவே அவர்கள் நிலையாதலின், தற்செயலாக வெற்றி யளிக்கக்கூடிய விளையாட்டுகளைக் காட்டிலும் மனத்திறம் தேவை யான விளையாட்டுகளையே நாடுகின்றனர்.

அறிவுக் கூர்மையுள்ள சிறுவர் சிறுமியரின் பால் வேறுபாடுகள் குறித்து லெஹ்மன், விட்டி (Lehman and Witty) சேகரித்த குறிப்பு களைப் பகுத்தாராயும்போது, அவர்களது செயற்பாடுகளில் பெரிதும் ஒற்றுமை இருப்பதைக் காணலாம்.[22] ஆழ்ந்து பகுத்தாராயும் பொழுது மந்தமான சிறுவர்கள் சமூகத் தொடர்புகளில் பங்குபெறுதல் மிகவும் அதிகமாக இருப்பதையும், இயக்கம் உள்ள பொருள்களுக்கு முன்னுரிமை அளிப்பதையும் காணலாம். ஆனால், இவைகளெல்லாம் மேற்கவிந்து இருப்பதையும் காணலாம். வெற்றிகரமாகப் போட்டி யிடுதல் முடிவில் மனத்திருப்தியை அளிக்கின்றதால், அக்கறைகளில் மாறுபாடுகள் இருக்கின்றன எனக் கூறுவதுதான் சாத்தியங் கூறுன விளக்கமாகும். உயிரி ஓரளவு வெற்றி யடையும்வரை பல்வேறு நடத்தை வகைகளை முயற்சிசெய்து பார்க்கின்றது. அறிவுக் கூர்மை யான மாணவன் வாசிப்பதனாலேயே மனத்திருப்தி அடைகிறான். அவன் சிந்திக்கவேண்டிய, சிக்கல் தீர்க்கும் வகையில் உள்ள செயற்பாடுகளில் வெற்றி யடையும் வகையில் பங்குகொள்கிறான். அறிவுக் கூர்மையான மாணவனுக்கும், மந்தமான மாணவனுக்கும் பொருத்தமான வாய்பாடு (formula) ஒன்றுதான். இளையோன் விருப்பமான, தேவையைத் திருப்திசெய்யும் செயற்பாட்டையே தேர்ந்தெடுப்பான் என்று மேற்கொள்வதே பொருத்தமானது ஆகும்.

## திரைப்படங்களில் அக்கறை (Interest in movies)

உயர்நிலைப் பள்ளி வயதுடைய சிறுவர்களும் சிறுமியர்களும் திரைப்படங்களுக்கு 5, 6, 7ஆவது படிவக் குழந்தைகளைவிடக் குறை வாகவே செல்லுகின்றனர் என்று ஆய்வுகள் குறிப்பிடுகின்றன. இதன் காரணம் உயர்நிலைப் பள்ளிகளிலும், பொழுதுபோக்கு சங்கங் களிலும், குழுக்களிலும் மிகுதியான சமூக நடவடிக்கைகள் இருப்ப தும், குறைந்த அளவே ஓய்வு இருப்பதும் ஆகும். படிவப்

[22] H. G. Lehman and P. A. Witty, 'The Play Behaviour of Fifty Gifted Children', Journal of Educational Psychology, 1927, Vol. 18, pp. 529-565.

பள்ளியினரும், உயர்நிலைப்பள்ளிக் குழந்தைகளும் வார இறுதி நாட்க ளான சனிக்கிழமை, ஞாயிற்றுக் கிழமைகளில் திரைப்படங்களுக்கு வருகின்றார்கள். இளையோர் ஆண்டுகளில் இன்பக் கவர்ச்சி ஏற்பட்டு 'நாளிடல்' நிகழ்ச்சிகள் வளர்கின்றன. இதனால் வெள்ளிக் கிழமை மாலையில் திரைப்படங்களுக்குச் செல்லுதல் அதிகமாகின்றது. குழந் தைகள் எல்லா வயதிலும் மாலையிலேயே பெரும்பாலும் வருகின்றார் கள். சிறுவர்கள் விளையாட்டுகளைத் திரைப்படங்களுக்கு மேலாக மதிக்கின்றார்கள். ஆனால், சிறுமியர்கள் அவ்வாறு கருதுவதில்லை. பின்னர் சிறுமியர்கள் நடனமாடுதலுக்கும், நாளிடலுக்கும் திரைப் படங்களுக்குச் செல்லுதலைவிட முன்னுரிமை அளிக்கின்றனர். படம் 6-2ல் தந்துள்ள செய்திகளின்படி எட்டு வயதான சிறுவர்களில் சுமார் 45 சதவீதத்தினரும், சிறுமியர்களில் 60 சதவீதத்தினரும் திரைப்படங்களுக்குத் தந்தையுடனோ தாயுடனோ செல்லுகின்றனர்.[23] வயது அதிகமாகும்போது தங்களுடைய சொந்த நண்பர்களுடனும் மற்றவர்களுடனும் திரைப்படங்களுக்குச் செல்லுதல் தொடர்ச்சியான வளர்ச்சி பெறுகின்றது. ராக்ஃபோர்ட் (Rockford), இல்லியனாய்ஸ் (Illionois) எனுமிடங்களில் பல்வேறு சமூக, வகுப்பு நிலைகளின் ஊக்கி களைப் பற்றி நடந்த ஆய்வானது சமூகத் தன்மை பெறும் செய்முறை இருப்பதைக் காட்டுகின்றது.[24] இவ்வாய்வில் சனிக்கிழமைத் திரைப் படங்களுக்கு 11-லிருந்து 12 வயதுள்ள குழந்தைகளுக்கு 1,248 இலவச அனுமதிச் சீட்டுகள் வழங்கப்பட்டன. தேர்ந்தெடுக்கப்பட்ட திரைப்படங்களில் குறிப்பிடத்தக்க சமூக வகுப்பு மாறுபாடுகள் காணப்பட்டன. உயர்ந்த நடுத்தர வகுப்புக் குழந்தைகள் டிஸ்னே (Disney) சித்திரப் படங்களுக்கும், தெற்கத்திய பாடல் (Songs of South) எனும் திரைப்படத்திற்கும், வாழ்க்கைக்குத் திரும்பி வருவது பற்றிய 'இது ஓர் ஆச்சரியமான வாழ்க்கை' (It is a Wonderful Life) எனும் திரைப் படத்திற்கும் முன்னுரிமை அளித்தனர். சிலிர்ப்பு உள்ள மர்மப் படங்கள் (Mystery Thrillers), உளவியல் பிரச்சினை கொண்டவை, டிக் டிரேஸி (Dick Tracy) வகையைச் சார்ந்த நகைச்சுவைப் படங்கள் ஆகியவற்றிற்குக் கீழ்த்தர வகுப்பைச் சார்ந்த குழந்தைகள் முன்னுரிமை அளிக்கின்றனர். மேலும் பகுத்து ஆய்ந்ததில், உயர்ந்த நடுத்தர வகுப்பு இலவச அனுமதிச் சீட்டு களில் 19 சதவீதத்தினர் மட்டுமே வயது வந்தோர்க்குரிய படத்திற் காகப் பயன்படுத்தினர். ஆனால், கீழ்த்தரமான வகுப்பைச் சார்ந்தவர் களில் 48 சதவிதத்தினர் இவ்வகையான திரைப்படங்களுக்குப் பயன்

[23] From E. Dale, Children's Attendance at Motion Pictures. New York: The Macmillan Company, 1935. (Reproduced by permission of the publishers).

[24] L. H. Jacobs, 'Social Class Differences in Children's Choice of Movies', M. A. Thesis, University of Chicago, 1948.

படுத்தினர். இம்மாறுபாடு உயர்ந்த நடுத்தர வருப்புச் சிறுவர்களுக்கும் சிறுமியர்களுக்கும் தரப்படுகின்ற அதிகமான குழந்தைப் பருவ அரவணைப்பின் காரணமாக இருக்கலாம்.

வளர்ச்சி இளையோர் பருவத்தை அடையும்பொழுது, அவர்களுடைய முன்னுரிமைகளில் மாற்றம் இருக்கிறது. படிவப் பள்ளிச் சிறுவர்கள் மேற்கத்திய படங்களை (Western Pictures) முதன்மையாக விரும்புகின்றனர். ஆனால், இதை உயர்நிலைப் பள்ளி மாணவர்கள் 6ஆவது தரத்தில்தான் வைத்துள்ளனர். படிவப் பள்ளி மாணவர்களுக்கு வரலாற்றுப்படங்கள் ஒன்பதாவது இடமும், உயர்நிலைப் பள்ளி மாணவர்களுக்கு மூன்ருவது இடமும் கொண்டுள்ளன. மதகுரு ஆட்சிக்குட்பட்ட பள்ளிக்கூடங்களில் படிக்கும் 2,000 கத்தோலிக்க மாணவர்களின் திரைப்பட அக்கறைகளைப் பற்றிய ஆய்வு, உயர்நிலைப் பள்ளியில் புதிதாகச் சேர்ந்திருக்கின்ற மாணவர்கள் மர்மக் கதைத் திரைப் படங்களை வெகுவாக விரும்புவதாகக் காட்டியது.[25] ஆனால், இசையுடன் கூடிய நகைச்சுவைப் படங்கள்தாம் உயர்நிலைப் பள்ளி மேல் வகுப்பு மாணவர்களால் விரும்பப்படுகின்றன. நான்கு உயர்நிலைப் பள்ளி வகுப்புகளில் உள்ளோர் அக்கறை கொள்கின்றவற்றைத் தரப்படுத்தியபொழுது அவை கீழ்க்கண்டவாறு உள்ளன: மர்மம், இசையுடன் கூடிய நகைச்சுவை, பழக்கங்களைப் பற்றிய நகைச்சுவை, வரலாறு, கொள்ளைக் கூட்டத்தார் - G - மனிதர்கள், மேற்கத்திய படங்கள், செய்தி, காதல் கதை, கல்வி, சுற்றுலா.

இளையோர் பருவத்தில் திரைப்படங்களும் வானொலியும் அதிகச் செல்வாக்குக் கொண்டுள்ளன. இளையோர் பருவத் துவக்க ஆண்டுகளில், காதல், போர், மர்மம், தீரச்செயல்கள், நகைச்சுவை ஆகிய படங்களை விரும்பினர். பொதுவாகச் சிறுவர்கள் சிறுமியர்களைக் காட்டிலும் அதிகமாகத் திரைப்படங்களுக்குச் செல்லுகின்றனர். விளையாட்டு அக்கறைகள் திரைப்படத்திற்குப் போகாமல் தடுப்பதும் உண்டு. நாடகம், திரைப்படம் ஆகியவற்றில் உள்ள காதல் கதைகளின்மீதுள்ள அக்கறை படிவங்களில் அதிகமாகின்றது. இது சிறுமியர்களிடத்து சிறுவர்களைக் காட்டிலும் அதிகமாகக் காணப்படுகின்றது. 9ஆவது, 10ஆவது படிவக் குழந்தைகள் மர்ம நாடகங்களை விரும்புகின்றனர். சிறுவர்கள் பெரும்பாலும் விஞ்ஞானப் படங்களையே விரும்புகின்றனர்; அதாவது அணுக்குண்டைப் பற்றிய படங்களாகும். சிறுமியர்களுக்கு ஒரு திரைப்பட 'வீரனையோ', 'கற்பனை வீரனையோ' கொள்வது இயற்கையாகும்.

[25] U. H. Fleege, 'Self-Revelation of the Adolescent Boy', Milwaukee : The Bruce Publishing Co., 1945, p. 251.




படம் 6-2

*உடன் செல்பவர்களைப் பொறுத்துத் திரைப்படங்களுக்குச் செல்பவர்களின் சதவீதப் பரவல்.*

## வானொலியிலும் தொலைக்காட்சியிலும் அக்கறை (Interest in Radio and Television)

பல்வேறு வயது நிலைச் சிறுவர்களும் சிறுமியர்களும் முன்னுரிமை அளிக்கின்ற வானொலி, தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் பற்றி நடந்த ஆய்வுகள்: வாசிக்கும் செயற்பாடுகளிலும், பார்க்கும் திரைப்படங்களுக்கும் முன்னுரிமை அளிக்கின்றவைகளுக்கும் ஏற்ப இருப்பதைக் காட்டுகின்றன. பூப்படைகின்ற பொழுது குழந்தைகளுக்கான நிகழ்ச்சிகளில் அக்கறை மிகவும் குறைவாக இருக்கின்றது. இதே சமயத்தில் குற்றம், மர்மக் கதைகள், துப்பறிதல், நாடகம், காதல், நடன இசை ஆகியவற்றில் அக்கறை அதிகமாகவும் இருக்கின்றது. மேல்வகுப்பு உயர்நிலைப் பள்ளி மாணவர்களிடத்து நடனத்திலும், மக்களால் விரும்பப்படுகின்ற இசையிலும் அக்கறை வளர்ச்சி இருப்பதைக் காணலாம். இளையோர் சிறுவர்களையும் சிறுமியர்களையும், அவர்கள் முன்னுரிமை அளிக்கின்ற வானொலி நிகழ்ச்சி எவை என்று வரிசைப்படுத்தி அளிக்கும்படி கேட்ட ஓர் ஆய்வின் முடிவுகள் குறிப்

பிடத்தக்க பால் வேறுபாடுகள் இருப்பதைக் காட்டுகின்றன. இம் முடிவுகள் அட்டவணை 6—7ல் தரப்பட்டிருக்கின்றன.[26]

உயர்நிலைப் பள்ளி மாணவர்கள் TV (டெலிவிஷன்)க்காக செலவிடும் நேரத்தின் அளவு பல்வேறு மாறும் இயல்புள்ளவற்றைப் (variables)பொறுத்து இருக்கின்றது. ஒரு மாதிரி உயர்நிலைப் பள்ளி மாணவர்களின் காலத்தைத் தொலைக்காட்சி பார்ப்பதானது அதிகம் எடுத்துக் கொள்கின்றது என்று எல்லா ஆய்வுகளும் ஒத்துக்கொள்கின்றன. விட்டி (Witty), ஓக் பார்க் (Oak Park), ரிவர்பாரஸ்ட் (River Forest) உயர்நிலைப் பள்ளி மாணவர்களின் முழு-நிறை மாதிரிகளை (cross section) எடுத்துக்கொண்டு ஆய்வுகள் நடத்திக் குறிப்புகள் தந்துள்ளார்.[27] இவ்வாய்வு நடந்தபொழுது இவ்விள மக்களில் 64-சதவிதத்தினர் அவர்கள் வீட்டில் தொலைக்காட்சிப் பெட்டிகளைக் கொண்டிருந்தனர். வீட்டில் இப்பெட்டி இல்லாதவர்கள் நண்பர், உறவினர் இல்லங்களில் எப்பொழுதாவது தொலைக்காட்சியைப் பார்ப்பது துவக்க இளையோர் பருவத்தில் உள்ள பொதுவான பழக்கமாகும். TV பெட்டிகள் வைத்திருப்பவர் சராசரி ஒரு வாரத்தில் செலவிடுவது 15 மணி நேரம் என்றும், மேல்வகுப்பு மாணவர்கள் சிறுவர்களைக் காட்டிலும் குறைவான நேரமே இதில் செலவிடுகிறார்கள் என்றும் கூறுகின்றார். இப்பெட்டி வைத்திருப்பவர்களில் மூன்றில் ஒரு பகுதியினருக்குமேல் அவர்களது குழந்தைகளும் இளையோர்களும் தொலைக்காட்சிப் பெட்டி வாங்கியபின் குறைவாகவே பாடங்களைப் படிக்கின்றனர் என்று குறிப்பிட்டார்கள். சிறுவர்களின் அக்கறைகளில் விளையாட்டுகள் மற்ற அக்கறைகளைக் காட்டிலும் மிக உயர்ந்த நிலையைக் கொண்டுள்ளதால் விளையாட்டுகளுக்கு முதலிடத்தை அளிக்கலாம்.

கீயா (Kea) நடத்திய ஆய்வு, கிளார்க் கொன்டி, ஜியார்ஜியா (Clarke County, Georgia)வைச் சார்ந்த நகர, கிராம உயர்நிலைப் பள்ளி மாணவர்களின் வானொலி, தொலைக்காட்சியிலுள்ள அக்கறைகள் பழக்கங்கள் பற்றியதாகும்.[28] நகர கிராம இளையோர்களின் வானொலி கேட்கின்ற, தொலைக்காட்சி பார்க்கின்ற பழக்கங்கள் அக்கறைகள் பற்றிய இவ்வாய்வின் முடிவுகள் பயனுள்ள செய்திகளைத்

[26] W. R. Clark, 'Radio Listening Habits of Children,' Journal of Social Psychology, 1940, Vol. 12, pp. 131–149.

[27] P. Witty, 'Television and Educative Process', Schoor and Society, 1951, Vol. 74, pp. 369-372.

[28] P. R. Kea, 'Radio Listening and Television Looking Interests and Habits of the High School Students of Athens and Clark Country, Georgia', M. Ed. Project in Applied Education, University of Georgia, 1954.

### அட்டவணை 6—7

வாஷிங்டன் குழந்தைகளும் இளையோரும் கேட்கின்ற வானொலி நிகழ்ச்சிகளின் தொடர்பு (கிளார்க் தந்தது)

| நிகழ்ச்சிகளின் வகை | ஒவ்வொரு வகை நிகழ்ச்சிகளிலும் குறிக்கப்பட்டுள்ள அலைவெண் சதவீதம் — வயதுக் குழு 9—12 | 12—15 | 15—18 |
|---|---|---|---|
| கருநாடக, கருநாடகத்தைச் சேர்ந்த இசை ... ... | 1·8 | 2·8 | 3·4 |
| சமயச் சார்புடையவை ... | 0·4 | 0·5 | 0·7 |
| மக்கட் செல்வாக்குள்ள, புதிய நடனம் ... ... ... | 12·9 | 14·9 | 28·5 |
| நகைச்சுவை, பல்வேறு வகையானவை ... ... | 25·8 | 36·4 | 39·5 |
| துப்பறிதல், குற்றம், மர்ம நிகழ்ச்சிகள் ... ... ... | 3·7 | 6·5 | 2·6 |
| நாடகம் : பொது, வரலாறு, காதல் | 24·5 | 20·2 | 15·6 |
| சுற்றுலா, தீரச்செயல் ... | 1·2 | 0·7 | 0·4 |
| குழந்தைகள் நிகழ்ச்சி (மற்ற வகைகளில் சேராதவை) ... | 25·8 | 12·8 | 6·9 |
| தேசிய, மக்கள், குடிமை நிகழ்ச்சிகள் ... ... ... | 0·1 | 0·1 | 0·8 |
| செய்தி ... ... ... | 1·2 | 2·4 | 4·8 |
| விளையாட்டுகள் ... | 0·4 | 0·9 | 1·1 |
| முதியோர் நிகழ்ச்சிகள் (கல்வி, விவசாயம், தொழில் முதலியனவும்) ... ... ... | 2·2 | 1·8 | 1·7 |

தருகின்றன. இம்முடிவுகள் நகர, கிராமப் பகுதிகளில் உள்ளோரின் மாதிரியாக அமைந்துள்ளன. சில முக்கிய முடிவுகளாவன:

1. நகரப் பெண்கள் நகர ஆண்களைக் காட்டிலும் வானொலி கேட்பதிலும், தொலைக்காட்சி பார்ப்பதிலும் குறிப்பிடும்படியாக அதிக நேரம் செலவிடுகின்றனர்,

2. கிராம உயர்நிலைப் பள்ளி மாணவர்கள் நகர மாணவர்களைக் காட்டிலும் அதிக நேரம் தொலைக்காட்சி பார்ப்பதில் செலவிடுகின்றனர்.

3. அனேகமாகக் கிராம நகர்ப்புற மாணவர்களில் நூறு சதவீதத்தினர் தங்கள் வீடுகளில் ஐந்து ஆண்டுகளுக்கு முன்னிருந்தே வானொலி இருப்பதாகக் குறிப்பிட்டனர். பெரும்பான்மையினர் வீட்டில் தொலைக்காட்சிப் பெட்டி இருப்பதாகவும் குறிப்பிட்டனர்.

4. மாணவர்கள் முக்கியமாகப் பொழுது போக்காகவே வானொலியிலும் தொலைக்காட்சியிலும் அக்கறை கொண்டுள்ளனர். வானொலியில் மக்கள் விரும்புகின்ற இசையையும், தொலைக்காட்சியில் நாடகத்தையும் விரும்புகின்றனர்.

## இளையோர் அக்கறைகளின் பெருக்கமும் உட்கருத்தும் (The Expansion and Significance of Adolescent Interests)

### அக்கறைகளின் பெருக்கம்

தன்னைப் பற்றியும், தனது சுற்றத்தைப் பற்றியும் குழந்தை பொதுவாகத் திருப்திகொள்ளுதல் இளையோர் பருவத்தின் பல்வேறு சிக்கல்களினாலும், தொல்லைகளினாலும், தவறான பொருத்தப்பாடுகளினாலும் நிகழ்கிறது. குழந்தை ஒரு சமயத்தில் இன்பம் துன்பம் பற்றிய நேரடித் தொடர்பு இல்லாத செய்திகளைப் பற்றிக் கவலைப்படாமல் இருந்தான். ஆனால், இப்பொழுது செறிவான அறிவார்வமும், தன்னைப் பற்றிய நினைப்பும், முதியோரது சமூக அற வரையளவுகளைப் பற்றிய அக்கறையும் கொண்டுள்ளான். அறிவார்வம் மட்டுமே பல்வேறு வழிகளில் அதனைக் காட்டலாம்; ஆனால் முறை தவறிய சூழ்நிலை இருக்குமானால் அதுவே தவறான வழியில் போகக்கூடிய பொருளாகி விடும். இது இளையோனின் முதிர்ச்சி அடைந்து வருகின்ற, மேலும் மேலும் அவனது வாழ்க்கையில் முக்கியத்துவம் உள்ள அக்கறைகளையும் உணர்வுகளையும் பொறுத்த உண்மையாகும். தினசரி வாழ்வில் மனத் திருப்தியும் தன்னிறைவும் போய் கருத்துநிலை நடத்தை வகைகளுக்கும் ஒரு சமயம் சமூகத்திற்கு எதிரான செயற்பாடுகளுக்கும் இழுத்துச் செல்ல வல்ல அமைதியின்மையை திடீரென்று கைக்கொள்கிறான். தன்முனைப்புள்ள அக்கறைகளிலும் செயற்பாடுகளிலுமே இத்தனை ஆண்டுகளாக ஈடுபட்டு வந்த இளையோன் மற்றவர்களிடம் தொடர்பு கொள்ளும்படி உந்தப்படுகிறான். புது அக்கறைகளும் தொடர்புகளும் ஏற்பட்டு புதிய கருத்துகளும் அக்கறைகளும் தோன்றுகின்றன. அவனது விளையாட்டிலோ அல்லது வேலையிலோ

திட்டமான முடிவுகளைத் தரவல்ல தனித்த செயற்பாடுகளில் புதுக் கருத்துகளும் அக்கறைகளும் கொள்ளுகிறான். இவ்வக்கறைகளின் பெருக்கத்தை அடைந்த பின்பும், அவன் மீண்டும் தூண்டுதல், ஊக்கம், செய்தி, வழிகாட்டுதல் வேண்டி நிற்கின்றான்.

இவ்வாறு பெருகுகின்ற, முதிர்ச்சியடைகின்ற அக்கறைகள் துவக்க ஆண்டிலிருந்து மேல்வகுப்புக்குச் செல்லும் உயர்நிலைப் பள்ளி மாணவனின் பேச்சுத் தலைப்புகளிலுள்ள மாற்றங்களில் தெளிவாகக் காணப்படுகின்றன.[29] அட்டவணை 6—8-ன் முடிவுகள் 2,000 சிறுவர்கள் குறிப்பிட்ட, தங்களுக்குள்ளேயே அடிக்கடி பேசிக் கொண்ட 6000 பேச்சுத் தலைப்புகளின் அடிப்படையில் ஏற்பட்டனவாகும்.

சிறுமியர், நாளிடல்கள், பால்பற்றிய செய்திகள் ஆகியவற்றைப் பற்றி மிகவும் அதிகமான அக்கறை கொண்டு இருப்பதே மிகவும் குறிப்பிடத்தக்க மாற்றமாகும். ஆனாலும், தற்கால நிகழ்ச்சிகள் குறித்தும், தொழில் முயற்சிகளிலும் அதிகமான அக்கறை இருந்தது.

## பால் வேறுபாடுகள் (Sex differences)

உயர்நிலைப் பள்ளிச் சிறுவர் சிறுமியரது அக்கறைகள் பிரச்சினைகள் பற்றி ஒப்பிட்டதில், பிரச்சினைகளைக் காட்டிலும் அக்கறைகளில் அதிக பால் வேறுபாடுகள் இருப்பதாக அறிகிறோம்.[30] இம் மாறுபாடுகள் கடைநிலை இளையோர் பருவத்தில் தலைசிறந்து இருக்கின்றன. அக்கறைகளில் உள்ள பால் வேறுபாடுகள் குறித்துப் பகுத்து ஆய்ந்ததில், பால் வேறுபாடுகள் பற்றி வழக்கிலுள்ள கருத்து சரியான்தாகத் தோன்றுகின்றது. சிறுவர்களின் உடல்நலம், காப்பீடு, பணம் முதலியவற்றில் அதிக அக்கறை காட்டுகின்றனர். சிறுமியர்களைக் காட்டிலும் சிறுவர்கள், அதிகமாக வெற்றிகரமான வாழ்வுத் தொழிலினால் ஊக்குவிக்கப்படுகின்றார்கள். ஆனால், சிறுமியர்கள் முனைப்பற்றவர்களாகவும், எளிதில் ஏற்றுக்கொள்பவர்களாகவும் இருக்கிறார்கள். அவர்கள் உடை, அழகுபடுத்திக்கொள்ளுதல், சொந்தக் கவர்ச்சி ஆகியவற்றில் பொதுவாகப் பெரிதும் அக்கறை கொள்கின்றனர். அவர்களுடைய அதிகமான முனைப்பற்ற தன்மையும், எளிதில் ஏற்றுக் கொள்ளும் தன்மையும் அதிகமான அகமுனைப்புடையவர்களாக ஆக்கி விடுகின்றன. அவர்கள் சமயம், சொந்த மெய்யுணர்வு, விவரமான அட்டவணையைத் திட்டமிடல், மனநலம் ஆகியவற்றில் அதிகமான அக்

[29] U. H. Fleege, op. cit., p. 234.

[30] P. M. Symonds, 'Changes in Sex Differences in Problems and Interests of Adolescents with Increasing Age,' Journal of Genetic Psychology, 1937, Vol. 50, pp. 83-89.

## அட்டவணை 6—8

உயர்நிலைப் பள்ளிச் சிறுவர்கள் தங்களுக்குள்ளாக அடிக்கடி பேசிக்கொண்ட பேச்சுத் தலைப்புகள் (பிளிஜ் தந்தது)

| தரம் (Rank) | பேச்சுத் தலைப்பு (Topics) | நுழைவு ஆண்டு (Fresh-men) | 2ஆம் ஆண்டு | 3ஆம் ஆண்டு (Junior) | 4ஆம் ஆண்டு (Senior) | எல்லா வகுப்பினரும் (All Classes) |
|---|---|---|---|---|---|---|
| 1. | விளையாட்டுகள் ... | 62·0% | 80·2% | 75·0% | 75·1% | 73·3% |
| 2. | பெண்கள் ... | 53·6 | 67·6 | 70·6 | 80.0 | 68·0 |
| 3. | பள்ளி, படிப்பு, ஆசிரியர்கள் ... | 27·0 | 27·2 | 29·0 | 27·3 | 27·6 |
| 4. | சமூகச் செயற்பாடுகள், நாளிடல், நன்ருக நேரத்தைச் செலவிடல் ... | 9·6 | 16·0 | 20·1 | 24·2 | 17·5 |
| 5. | பால், பால் தொடர்புகள், ஆபாசக்கேலிக் கதைகள் ... | 11·2 | 12·4 | 16·4 | 20·1 | 15·0 |
| 6. | திரைப்படங்கள் ... | 16·4 | 10·4 | 9·0 | 7·6 | 10·9 |
| 7. | தற்பொழுதைய நிகழ்ச்சிகள் ... | 7·6 | 7·9 | 7·1 | 10·6 | 8·4 |
| 8. | கார்கள், ஆகாய விமானங்கள், இயந்திரங்கள் ... | 5·4 | 8·2 | 7·4 | 7·0 | 7·0 |
| 9. | பொதுமைகள் ... | 7·4 | 5·0 | 4·1 | 6·4 | 5·7 |
| 10. | மற்றப் பையன்கள் ... | 5·4 | 4·2 | 3·3 | 3·4 | 4·1 |
| 11. | ஒருவருடைய பட்டறிவு ... | 6·0 | 3·2 | 2·0 | 1·6 | 3·2 |
| 12. | விருப்பச் செயல்கள் | 2·5 | 3·2 | 4·4 | 2·0 | 3·0 |
| 13. | தொழில் அல்லது வேலை ... | 1·0 | 1·8 | 2·0 | 6·1 | 2·7 |
| 14. | பணம் ... | 1·2 | 2·8 | 3·0 | 3·1 | 2·5 |
| 15. | ஒருவன் செய்யப் போகின்றவைகள் | 1·9 | 2·0 | 3·4 | 2·2 | 2·4 |
| 16. | எதிர்காலத் தொழில் | 1·2 | 1·4 | 1·6 | 4·7 | 2·2 |
| 17. | பல் பொருள்கள்: சமயம், உடை, விடுகள், உணவு ... | 4·0 | 2·2 | 3·2 | 4·3 | 3·4 |
| 18. | பதில் தராதவர்கள் ... | 3·4 | 1·6 | 0·8 | 0·4 | 1·6 |

கறை கொண்டுள்ளார்கள். மேலும், மரபுநிலை வழக்கில் அவர்கள் மக்கள், பழக்க வழக்கங்கள், குடும்பத் தொடர்புகள் ஆகியவற்றில் அதிகமான அக்கறையைக் காட்டி வருகின்றார்கள். சிறுவர்கள் பரந்த வெளிப்புறத்திலும், குழுக்குறிகள் குறித்தும், அதனைச் சார்ந்த பொருள்கள் பற்றியும் அதிகமாக அக்கறை கொண்டுள்ளனர்.

கலிஃபோர்னியா பல்கலைக் கழகப் பட்டியல்—I 'சமூக மன வெழுச்சிப் பொருத்தப்பாடுகள்' ஒவ்வோர் ஆண்டிலும் ஏப்ரல் அல்லது மே மாதத்தில் இளையோர் பருவ சிறுவர் சிறுமியர்கள் கொண்ட ஒரு குழுவிடம் ஏழு முறை தரப்பட்டது. இது 1932ல் துவக்கப்பட்டு ஒவ்வோர் ஆண்டும் மே அல்லது ஏப்ரலில் மேல் ஐந்தாவது, கீழ் ஆறாவது படிவத்தில் உள்ளோருக்கும் தரப்பட்டது.[31] சில இனங்கள் அச்சம், விருப்பம் ஆகியவற்றைப் பற்றித் தொடர்பு கொண்டிருந்தன.

அட்டவணை 6—9 சிறுவர் சிறுமியர்கள் 18 பொருள்கள் கொண்ட வரிசையில் விரும்பிய பொருள்களின் சதவீதத்தினைத் தருகின்றது. வளர்வதற்குரிய ஆசையையும், வீட்டைவிட்டுச் செல்லும் விருப்பத்தையும் பல சிறுவர்களும் சிறுமியர்களும் வெளிக்காட்டவில்லை. இதில் வயதுக்குரிய மாற்றம் சிறிதளவே காணப்பட்டது. ஒவ்வொரு வயதிலும் உள்ள பெரும்பான்மையான சிறுமியர்கள் புத்தி கூர்மையுடையவர்களாக ஆக விரும்புகின்ற ஆசையைக் கூறினார்கள். 'பார்ப்பதற்கு நன்றாக இருக்கவேண்டும்' எனும் ஆவல் சிறுவர்களிடத்து முன்னணியில் இருக்கவில்லை. ஆனால், இது ஒவ்வொரு வயதிலும் மிக அதிகமான சதவீதத்தைக் கொண்ட பெண்களால் குறிக்கப்பட்டது. வயது அதிகமாக ஆக இவ்வரிசையும் அதிக அளவில் இருக்கின்றது. பெரியவர்களாகவும், வலிவுள்ளவர்களாகவும் இருக்க விரும்புகின்ற தன்மை வளர்கின்ற ஆண்டுகளில் இருக்கின்ற பேரார்வத்துடன் மிகவும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. 5ஆவது 6ஆவது படிவ நிலைகளுக்குப் பின்னர், மிகக் குறைந்த அளவு பெண்களே வலிவுள்ளவர்களாகவும், பெரிய அளவிலும் இருக்க விரும்புகிறார்கள். ஒரு சிறுமியின் வாழ்வில் முன்னிளையோர் பருவத்திற்குப் பின்னர், 'பெண்பாகம்' தொடர்ச்சியாக முக்கியத்துவம் பெறுகின்றது. இப் பெண்பாகம் குறித்துத் தெளிவான எண்ணம் இல்லாவிடினும், இப்பருவத்தில் இது முக்கிய அங்கம் வகிக்கின்றது. பணத்திற்குரிய தேவையை எல்லாப் படிவச் சிறுவரும் சிறுமியரும்

[31] U. C. Inventory I: Social and Emotional Adjustment. Revised form for presentation of the cumulative record of an individual with group norms by items for a seven-year period. University of California. (This consists of two forms, one for girls and one for boys.)

உணர்கிறார்கள் என்பதை அவர்களுடைய ஆசைகளை வெளிப்படுத்துவதிலிருந்து அறிந்துகொள்ளலாம். ஆனால், இது இக்குழுவைச் சார்ந்த சிறுவர் சிறுமியரின் தலையாய ஆசையாய் அமையவில்லை.

### அக்கறைகளும் நுண்ணறிவும்

மிக உயர்ந்த மனத்திறனுள்ள குழந்தைகளும், தாழ்ந்த மனத்திறனுள்ள குழந்தைகளும் அக்கறையில் எவ்விதத்தில் மாறுபாடுகள் கொண்டுள்ளன என்பது பற்றிச் செய்திகள் தர பல சோதனைகள் இருக்கின்றன. பாய்ன்டன் (**Boynton**) குழந்தைகளின் சோதிக்கப் பட்ட நுண்ணறிவிற்கும், விருப்பச் செயல்களில் பங்கு கொள்வதற்கு

**அட்டவணை 6—9**

மேல் 5ஆவதும், கீழ் 6ஆவதிலிருந்து மேல் 11ஆவதும், கீழ 12ஆவதுமான பள்ளிப் படிவங்களில் உள்ள சிறுவர் - சிறுமியரின் குறிப்பிட்ட சில விருப்பங்களின் சதவிதம்

| ஆசைகள் | பால் | ஆண்டுகள் | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | 32 | 33 | 34 | 35 | 36 | 37 | 38 |
| வளர்ச்சி அடைந்து வீட்டுக்கு வெளியே செல்ல ஆசை | ஆண் | 6 | 4 | 0 | 3 | 1 | 3 | 3 |
| | பெண் | 0 | 1 | 1 | 3 | 6 | 4 | 6 |
| நான் இப்பொழுது இருப்பதைக் காட்டிலும் புத்தி கூர்மை உடையவனாய் இருக்க ஆசை | ஆண் | 46 | 61 | 59 | 51 | 58 | 63 | 68 |
| | பெண் | 61 | 69 | 68 | 53 | 57 | 61 | 56 |
| நான், இப்பொழுது இருப்பதைக் காட்டிலும் பெரியவனாக இருக்க ஆசை | ஆண் | 23 | 20 | 18 | 27 | 31 | 25 | 25 |
| | பெண் | 18 | 15 | 18 | 12 | 8 | 11 | 7 |
| பார்ப்பதற்கு நன்றாக இருக்கவேண்டும் | ஆண் | 10 | 18 | 13 | 11 | 13 | 18 | 11 |
| | பெண் | 41 | 37 | 50 | 54 | 49 | 58 | 54 |
| செலவிட அதிகமாகப் பணம் பெற ஆசை | ஆண் | 24 | 17 | 15 | 20 | 28 | 34 | 32 |
| | பெண் | 18 | 18 | 18 | 31 | 32 | 34 | 49 |
| இப்பொழுது இருப்பதை விட வலிவுள்ளவனாக இருக்க ஆசை | ஆண் | 80 | 75 | 76 | 66 | 4 | 54 | 55 |
| | பெண் | 39 | 25 | 12 | 6 | 15 | 8 | 10 |

முள்ள தொடர்பினைக் குறித்து ஆய்வு நடத்தியுள்ளார்[82]. அவருடைய ஆய்வில் பங்கு கொண்டோர் 258 பள்ளிகளில் 6ஆவது படிவத்தில் உள்ள 4,779 சிறுவர் சிறுமியர்களாவார்கள்.

குழந்தைகளுக்குக் குஹ்ல்மேன் ஆன்டர்சன் நுண்ணறிவுச் சோதனைகள் (Kuhlmann Anderson Intelligence Tests) தரப்பட்டன. ஒவ்வொரு குழந்தையிடத்தும் நடத்திய சேர்ந்து உரையாடல் மூலம் ஆசிரியர் அவர்களது விருப்பச் செயல்களை அறிந்தார். பெரும்பான்மையான குழந்தைகள் மூன்றிலிருந்து ஆறு விருப்பச் செயல்களைக் கொண்டிருந்தனர். 'சில விருப்பச் செயல்களில் உயர்ந்த சோதிக்கப்பட்ட நுண்ணறிவுடைய குழந்தைகள் மற்ற விருப்பச் செயல்களைக் காட்டிலும் அதிகமாய்ப் பங்கு கொள்கின்றனர்' என்ற முடிவுக்குப் பாய்ன்டன் வந்தார். குழந்தைகள், குறிப்பாகப் பெண் குழந்தைகள், விருப்பச் செயல்கள் கொண்டிருக்காவிடில், அனேகமாக அவர்களுடைய பொது நுண்ணறிவில் சராசரி தரத்திற்குக் கீழான நிலையிலிருப்பார்கள் என்று கொள்ளலாம். இருபாலாரையும் ஒன்றுகக் கவனிக்கும்போது, சேகரித்தல், இசைக் கருவிகளில் பயிற்சி, வாசித்தல் போன்ற விருப்பச் செயல்களில் உயர்ந்த திறன் கொண்டோரே பங்கு கொள்கின்றதைக் காணலாம். சராசரி நுண்ணறிவுக்கும் கீழான நிலையில் உள்ளோர் எந்த ஒரு விருப்பச் செயலிலும் ஈடுபாடு கொள்வதில்லை. அறிவுமிக்க குழந்தைகள் விருப்பச் செயல் அக்கறைகளில் அறிவில் குறைந்த குழந்தைகளைக் காட்டிலும் பல்வகைப்பட்ட விருப்பச் செயல்களைக் கொண்டிருப்பதைக் காணலாம். இம்முடிவு பேயார்ட் (Bayard), உயர்ந்த தாழ்ந்த திறன்களுடைய உயர்நிலைப் பள்ளி மாணவர்களது அக்கறைகள் பற்றிய ஆய்வின் முடிவுகளுக்கு ஒத்து இருக்கின்றது; அவர் கீழ்க்கண்டவாறு முடிவு கட்டினார்:

1. இரண்டு குழுக்களுக்கும் விருப்பு வெறுப்புகளின் சராசரி எண்ணிக்கை ஒன்றேயாகும். ஆனால், உயர்ந்த திறனுடைய குழு விரும்புகின்றவற்றிற்கு இரண்டு மடங்கு அளவுள்ள செயற்பாடுகளை வெறுக்கின்றது. தாழ்ந்த திறனுடைய குழு விரும்புகின்ற அளவிற்கு மேல் சிறிதளவு அதிகமாக வெறுக்கின்றது.

7. வடிவுருவங்களை ஒப்பிட்டதில், பொதுவாக இரண்டு குழுக்களில் உள்ளோரும் ஒரே செயற்பாடுகள்மீதுதான் விருப்புவெறுப்புக் கொண்டிருக்கின்றனர் என்று அறியவந்தது. ஒரு பகுதியின்மீதுள்ள விருப்பத்தினையும், மற்றொரு பகுதியின்மீது இருக்கின்ற விருப்பத்தினை

[82] P. L. Boynton, 'The Relationship Between Children's Tested Intelligence and Their Hobby Participation', Journal of Genetic Psychology, 1941, Vol. 58, pp. 353-362.

யும் ஒப்பிட்டுப் பார்த்ததில், அவ்வளவு மாறுபட்டதாய் இருந்தது. இதில் குறிப்பிடத்தக்க விதிவிலக்கு கணக்கியலாகும்.[33]

பாய்ண்டனின் வழிகாட்டலில் பீபாடி கல்லூரியில் (Peabody College) நடத்தப்பட்ட ஆய்வு, வாசிக்கும் அக்கறைகளும் நுண்ணறிவும் ஒருங்கே செல்வதாகக் காட்டியது. இந்த ஆய்வில் லீயிஸும், மெக்கீஹியும்(Lewis and Mc Gehee) 36 நாடுகளிலுள்ள 310 சமூகக் குழுவில் உள்ள 455 பள்ளிகளில் உள்ள குழந்தைகளைக் கண்டு குறிப்புகள் எடுத்தார்கள்.[34] குஹ்ல்மான் ஆன்டர்சன் நுண்ணறிவுச் சோதனைகளில் (Kuhlmann and Anderson Intelleigence Test) அதிகமாகக் கணக்கெடுத்த பத்து சதவிதத்தினரையும், குறைவாகக் கணக்கெடுத்த பத்து சதவீதத்தினரையும் ஒப்பிட்டுப் பார்த்தனர். அவர்களின் ஆய்வின்படி நாடகம், சமயச் செயற்பாடு, படித்தல், சாரணர், கூடாரமிட்டு வசிக்கும் செயற்பாடுகள் ஆகியவை உயர்ந்த மனத்திறன் உடையவர்களது மனத்தை மிகவும் கவர்கின்றன. உயர்ந்த மனத்திறன் கொண்ட குழந்தையைக் காட்டிலும் பன்னிரண்டு மடங்கு அதிகமான குறைந்த மனத்திறன் கொண்ட குழந்தைகளிடம் விருப்பச் செயல்கள் இல்லை என்று கூறினர். உயர்ந்த அறிவு கொண்ட குழந்தைகள் செயலுள்ள, அமைதியான விளையாட்டுகள் இரண்டிலுமே குறைந்த அறிவுடையோரைக் காட்டிலும் அதிகமாக அக்கறை கொண்டிருந்தார்கள்.

## அக்கறைகளின் சமநிலை (Stability of Interest)

இளையோர் பருவத்தின் தலைசிறந்த குணவியல்பு மிகக் குறுகிய காலத்தில் ஏற்படுகின்ற நிலையற்ற தன்மை அல்லது மாற்றமேயாகும். இளையோர் பருவத்தினரைக் கொண்டு மெக்கே (Mackaye) நடத்திய அக்கறைகளின் தோற்றத்தைப் பற்றிய ஆய்வானது, குறைவான நுண்ணறிவு உள்ளோரிடத்து உடன் தேர்ந்தெடுத்தலும் (early fixation), நிலைத்திருக்கின்ற அக்கறைகளைக் கொண்டிருத்தலும் பொதுவாகக் காணப்படுவதாகக் கூறுகின்றது.[35] உயர்வான நுண்ணறிவு படைத்த தனியன்களது அக்கறைகள் தன்மையில் மிகவும் நிலையில்லாதவையாகும். தொழில் அக்கறைகளின் அடிப்படை

[33] B. Bayard, 'A Comparison of the Interests of Students of Low Ability Enrolled in Physical Science and of Students of High Ability Enrolled in Physics,' University High School Journal, 1941, Vol. 20, pp. 15-19.

[34] W. D. Lewis and McGehee, 'A Comparison of the Interests of the Mentally Superior and Retarded Children', School and Society, 1940, Vol. 52, pp. 597-600.

[35] D. L. Mackaye, 'The Fixation of Vocational Interest,' American Journal of Sociology, 1927, Vol. 33, pp. 353-370.

பெரும்பாலும் விருப்பக் கற்பனையேயாகும். ஆதலின், அக்கறைகள் உண்மைத் திறனுக்கு மிகச் சிறிய தொடர்பே காட்டும். பட்டறிவின் பின்னணியில் உண்டாகாத அக்கறைகளுக்கு அது மிகவும் பொருந்தும். வாழ்க்கைத் தொழில் வழிகாட்டி (vocational guidance), கல்வி ஆகிய துறைகளில் பயன்பட அக்கறைகள் பற்றிய பட்டியல் வளர்ச்சிக்காக நிறைய படிப்புகள் செய்யப்பட்டிருக்கின்றன. கியூடர் முன்னுரிமைக் குறிப்புதான் (Kuder Preference Record) மாணவர்களின் அக்கறையை அறிவதற்கு இப்பொழுது வெகுவாகப் பயன்படுகின்றது.[36] இச்சோதனைகளின் முடிவுகளின் வாயிலாகப் பல அக்கறைகளைக் கணக்கிட வடிவுருவங்களைப் பத்துப் பரந்த பரப்பில் தயார் செய்யலாம். அவை வெளிப்புற செயற்பாடுகள், பொறியியல், கணக்கிடுதல், அறிவியல், இசைவிப்பு, கலைத்திறம், இலக்கியம், இசை, சமூக சேவை, கணக்குவேலை என்பன. இப்பதார்த்தத்தில் மற்றப் புகழ் வாய்ந்த பயனுடைய சோதனைகள் : ஸ்டிராங்கின் ஆண் பெண் பாலாரின் தொழில் அக்கறைப் பட்டியல்[37] (Strong Vocational Interest Blanks for Men and Women), லீதார்ப் தொழில் அக்கறைக் கணக்கீடு (Leethorpe Occupational Interest Inventory) ஆகும்.[38] மற்றக் கருவிகளைக் காட்டிலும் ஸ்டிராங் சோதனைகள் பெரும்பாலும் பயன்படுத்தப்பட்டன. தொழிற் செயல்களில் அவைகள் பரவலாகப் பயன்படுத்தப்படுகின்றன.

குருமரைன் (Crumrine) நடத்திய ஆய்வில் 250 உயர்நிலைப் பள்ளி மாணவர்களைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. அவர்கள் முன்னுரிமைப் பட்டியலை (Kuder Preference Record) 9ஆவது படிவத்திலும், பின்பு 12ஆவது படிவத்திலும் முடித்தவர்கள்.[39] அட்டவணை 6—10ல் 9ஆவது படிவத்தில் மேல்நிலையில் உள்ள அக்கறைகளும், 12ஆவது படிவத்தில் மேல்நிலையில் இருக்கின்ற அக்கறைகளும் சதவிதக் கணக்கில் தரப்பட்டிருக்கின்றன.

இம் முடிவுகளிலிருந்து 9ஆவது படிவத்தில் மேல்தரத்தில் உள்ள அக்கறைகள் 12ஆவது படிவத்திலும் மேல்தரத்தில் இருக்கும் என்பதற்கு நல்ல சான்று இருக்கின்றது. ஆனால், பெரும்பான்மையான மாணவர்களுக்குக் குறிப்பிட்ட அக்கறைப் பகுதிகளைத் தரமிடுதலில் மாற்றங்கள் இருப்பதும் காணப்படுகின்றது.

[36] Published by Science Research Associates, Chicago, Illinois.

[37] Published by Stanford University Press, Stanford, California.

[38] Published by California Test Bureau, Los Angeles, California.

[39] W. M. Crumrine, 'An Investigation of the Stability of Interests of High School Students,' Master's Thesis, University of Michigan, 1949.

## அட்டவணை 6—10

9ஆவதிலிருந்து 12ஆவது படிவம்வரை உள்ள மூன்று உயர்ந்த, குறைந்த அக்கறைகளின் மாறுத்தன்மை (குருமரைன் தந்தது)

| | | சதவிகிதம் |
|---|---|---|
| உயர்ந்த நிலையில் இருந்த அக்கறையின் அதிகமான அளவு | | 52 |
| உயர்ந்த மூன்றில் அதிகமாயிருந்தது ... | ... | 80 |
| உயர்ந்த மூன்றில் இரண்டாவதாய் அதிகமாயிருந்தது | ... | 71 |
| உயர்ந்த மூன்றில் மூன்றாவதாய் அதிகமாயிருந்தது | ... | 51 |
| குறைந்த பகுதி அக்கறை தாழ்ந்த அளவு ... | ... | 43 |
| குறைந்த மூன்றில் தாழ்ந்த அளவு ... ... | ... | 76 |
| குறைந்த மூன்றில் தாழ்ந்த இரண்டாவது அளவு | ... | 65 |
| குறைந்த மூன்றில் தாழ்ந்த மூன்றாவது அளவு ... | ... | 50 |

இம்மாற்றங்கள் கடந்த நிலையில் இரா என்பதற்குச் சான்றாக உயர்ந்த தரமுடைய 9ஆவது படிவத்தினரில் எண்பது சதவிதத்தினர் 12ஆவது படிவத்தில் மூன்று உயர்ந்த தரமுள்ள பகுதியில் இருந்தனர். ஒன்பதாவது படிவ நிலையில் மிகக் குறைந்த அக்கறையுடைவர்களாக இருந்தவர்களை 12ஆவது படிவ நிலையில் கீழான மூன்று பரப்பில் இருந்தவர்களுடன் ஒப்பிட்டுப் பார்த்ததில், அவர்கள் சமமானவர்களாக இருப்பதாக முடிவுகள் அறிவித்தன. சான்றாக, 9ஆவது படிவத்தில் மூன்று கீழான பரப்புடையவர்கள் 12ஆவது படிவத்தில் கீழான பரப்புடையவர்களில் இருந்தார்கள்.

இவ்வாய்வுகளின் முடிவுகள் உயர்நிலைப் பள்ளிப் பருவத்தில் தனிப்பட்ட அக்கறைகள் கட்டாயம் நிலைத்திருக்க வேண்டும் என்பது அவசியமில்லை எனக் காட்டுகின்றது. ஆனால், பல நிலைகளில் உயர் நிலைப் பள்ளியில் ஒரு காலத்தில் உயர்ந்த அக்கறையாக இருந்தது பிற்காலத்தில் ஏற்படுகின்ற அக்கறைகளில் உயர்ந்தன மூன்றில் ஒன்றாக இடம் பெறும். அக்கறைகள் தொடர்ந்திருப்பது இளையோர் பருவத்தில் பட்டறிவும், செயல்களும் உள்ள அளவைப் பொறுத்ததாகும். லூஸியின் வாழ்க்கையில் இதைக் காணலாம். லூஸி இசையில் பயிற்சி உள்ளவளாகவும், நுண்ணறிவில் சராசரி நிலைக்கு மேலும் இருந்தாள். அவள் ஞாயிற்றுக் கிழமைப் பள்ளி அனுபவங்களை மிகவும் விரும்பியதால், அவளது 16ஆவது வயதில் ஒரு ஞாயிற்றுப் பள்ளியில் இளஞ் சிறுமிகளுக்குப் பொறுப்பாக இருந்தாள்.

லூஸியின் தாயார், அவள் இசைத் துறையில் புக வேண்டும் என்ற பேரவாக் கொண்டிருந்தாள். லூஸிக்கு ஒரு நர்ஸ் பட்டதாரி

சகோதரியாக இருந்தாள். அவள் லூஸிமீது பிரியமாக இருந்தாள். லூஸியினுடைய உயர்நிலைப் பள்ளி நுழைவு ஆண்டில் உயர்ந்த தரம் பெற்ற மூன்று அக்கறைகளை அவைகளின் தரவரிசைப்படி கூறினால், இசை, நோயாளியைப் பேணுதல், ஒரு வகையான கோயில் சேவை என்றாகும். லூஸி சீனியர் ஆண்டை அடைந்த பொழுது, நோயாளிகளைப் பேணும் அக்கறை மறைந்து விட்டது. உயர்நிலைப் பள்ளியிலுள்ள பல்வேறு இசை நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டாள். இசைக் குழுவில் முக்கியப் பங்கும் ஏற்றுக்கொண்டாள். அவளது இசையிலுள்ள அக்கறை கோயில் வேலைகளிலுள்ள பொது அக்கறைகளுடன் இருந்தது. லூஸி கல்லூரிக்குப் போவதில், அவளுடைய சொந்த விருப்பங்களுக்கும் திட்டங்களுக்குமே பெற்றோர் அனுமதி அளித்தனர். அவளுடைய வீட்டிலிருந்து 40 மைல் தூரத்திலுள்ள இருபாலார் கல்வி நிலையம் ஒன்றில் சேர்ந்தாள். அவளுடைய நுழைவு ஆண்டு முடிவில், ஆரம்பப்பள்ளியில் இசையைத் துணைப்பாடமாகப் பயிற்றும் ஆசிரியையாகப் பயிற்சிபெற, அதற்கான வகுப்புகளுக்குச் செல்ல முடிவு செய்தாள். இங்கு அவளிடத்துக் காணப்படுகின்ற அக்கறைகள் மிகச் சிறு வயதிலேயே தொடங்கி, அவளது பட்டறிவுத் திறனிலும் ஆழமாக வேரூன்றிவிட்டது.

### மாறுகின்ற அக்கறைகளின் காரணமாகப் பொருத்தப்பாட்டுப் பிரச்சினைகள்

சிறுவர்களும் சிறுமியர்களும் அவர்களுடன் பள்ளியிலும், விளையாட்டு மைதானத்திலும் உடன் விளையாடுபவர்கள், வேலை செய்பவர்கள் ஆகியோருடைய அக்கறைகளுக்கும், பயன் மதிப்புகளுக்கும் ஏற்றவாறு தங்களது அக்கறைகளை மாற்றிக் கொள்வதில் எந்த விதமான துன்பங்களையும் அனுபவிப்பதில்லை. இருப்பினும், சில குழந்தைகளின் உடல் வளர்ச்சி துரித முன்னேற்றம் கொள்கின்றது. இந்தச் சிறுவர்களும் சிறுயமிர்களும் முதிர்ச்சிக் குறைவான சமூகத் தன்மையில், குறைவான விளையாட்டுகளில் அக்கறை கொள்ளுதல் பழைய வாழ்க்கையில் இடம்பெறுமேயன்றி தற்பொழுது இல்லை. இவ்வாறான சிறுவர்களும் சிறுமியர்களும் கோயிலிலோ அல்லது தனிப்பட்ட சுற்றுப்புற நிகழ்ச்சிகளிலோ, தங்களைப் போன்றே முதிர்ச்சியான அக்கறைக்ள் கொண்ட சிறுவர் சிறுமியர்கள் கலந்து கொள்கின்ற ஈடுபாடுகளில் அக்கறை காட்டுவார்கள். இக்காலத்தில் இத் தனியனுக்கு நட்புரிமையுள்ள நற்பயனை விளைவிக்கின்ற குடும்ப உறவு பயனளிக்கும். அவனது பள்ளிப் படிவத்தில் முதிர்ச்சியான அக்கறை கொண்டோர் பலர் இருந்தால், இப்பொருத்தப்பாடு நெருங்கிய நண்பர்கள் உண்டாவதற்கோ, சிறு குழுக்கள் தோன்றுவதற்கோ காரணமாகலாம்.

அப்பொழுது ஒருவன் அல்லது ஒருத்தி குழுவிலுள்ள மற்றச் சிறுவர் சிறுமியரைக் காட்டிலும் முதிர்ச்சிக்குறைவான அக்கறை கொண்டிருப்பவராக இருந்தால், அவர் பல சமயங்களில் குழு நம்பிக்கைகளில் ஓர் அக்கறையில்லாத தன்மையை வெளிப்படுத்தலாம். ஆனால், அவர் தேவையான நட்பையும் மனச் சாந்தியையும் தன்னைப்போன்றே குழுவில் முதிர்ச்சிக் குறைவான அக்கறை கொண்டுள்ளவர்களிடமிருந்து பெறலாம். அப்படியிருந்தாலும், இக் குழந்தைகள் முதிர்ச்சியடைவதில் பின்தங்கி இருப்பதனால் வெகுவாகப் பாதிக்கப்படமாட்டார்கள். இவ்வாறான நட்புகளை அந் நிலையில் ஆதரிக்க வேண்டும். ஆனால், உடல் வளர்ச்சியில் சராசரி தனியனைப்போன்றே அதே வேகத்தில் வளர்ச்சி அடைந்துள்ள ஒரு தனியன், ஏதோ ஒருசில சமூக, கலாசாரக் காரணங்களினால் குழுவினுடைய நடவடிக்கைகளில் பங்கு பெற முடியவில்லையெனில், அது கேடு விளைவிக்கும் சிக்கல் ஆகும். வீட்டின் குறிக்கோள்கள், பழக்கங்கள் ஆகியவற்றிற்கும் குழுவினுடைய பழக்கங்களுக்குமிடையே ஏற்படும் இன, சமய, சமூகப் பிரச்சினைகள் இந் நிலைக்கு ஒருவேளை காரணமாயிருக்கலாம். இவ்வாறான நிலைகளினால் தனது அக்கறை வகைகள் வளர்கின்ற சிறுவர் சிறுமியர்களின் அக்கறைகளுடன் பொருந்தியில்லாத தனியன் தீவிரப் பொருத்தப்பாடுகளுக்குள்ளாவான். பள்ளிக்குள்ளேயும், வெளியேயும் இவர்களுடன் பழக வேண்டிய இத்தனியன், இதன் காரணமாகப் பள்ளி வேலை பாதிக்கப்பட்டு, வீடு, மற்றச் சொந்த சமூக வாழ்வின் நிலைகள் மீதுள்ள மனப்பான்மையிலும் பாதிக்கப்படுவான்.

## அதிகாரச் சுருக்கம்

வளர்ச்சி பற்றிய பல பிரச்சினைகள் அக்கறையில் உள்ள மாறுதல்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன. இளையோர்களின் துவக்கநிலை அக்கறைகள் தன்மையில் சொந்த நிலையில் உள்ளவை. ஆனால், இந்நிலையில் தோன்றுகின்ற சமூக மனவெழுச்சி மாறுதல்கள் மற்றவர்கள் மேலுள்ள அக்கறை வளர்ச்சிகளில் பிரதிபலிக்கின்றன. குறிப்பாக மாற்றுப் பாலார் மீதுள்ள உணர்வும், நோக்கும் மாறுதலுக்கு உட்படுகின்றன. பின்வரும் அதிகாரங்களில் இந்த மாறிய நோக்கு விவரமாக விவாதிக்கப்பட்டிருக்கின்றது.

இளையோர் பருவத்தினரின் விளையாட்டு வாழ்க்கை இளையோர் பருவத்திற்கு முன்னுள்ள பருவத்தினரைக் காட்டிலும் அதிகமான குழு உணர்வும், குழுச் செயற்பாடும் கொண்டதாய் இருக்கிறது. இளையோர் சிறுவர் தீரச்செயல்களில் தொடர்ச்சியாக அக்கறை காட்டுகின்றனர். ஆனால், இத்தீரச்செயல்கள் கற்பனை நிலையில் இல்லாது அன்றாட வாழ்வின் நிலைகளுடனும், பிரச்சினைகளுடனும் நெருங்கிய

தொடர்பு கொண்டுள்ளனவாய் இருக்கின்றன. இவ்வக்கறைகளின் மாறுதல்கள் இளையோரின் திரைப்பட, வானொலி, தொலைக்காட்சி நிகழ்ச்சிகளின் மீதுள்ள நோக்குகளில் பிரதிபலிக்கின்றன. ஆனால், இம்மாறுதல்கள் திடீரென்று உண்டான முழு மாறுதல்கள் என்று கொள்ளலாகாது. இளையோர் சிறுவர் சிறுமியரின் நடத்தையிலும் அக்கறைகளிலும் தொடர்பில்லாத நிலையைக் காணலாம். அவர்கள் காதல், தீரச்செயல் கொண்ட ஒரு திரைப்படத்திலுள்ள அக்கறைக்குப்பின் 10, 11 வயதுடைவர்களைப் போன்று பாவனைச் செயல்கள் கொண்ட திரைப்படத்தில் அக்கறை கொள்ளலாம். சிறுவர் சிறுமியர்களது அக்கறைகளில் மாறுபாடுகளைக் காணலாம். சிறுமியர் முதிர்ச்சியான அக்கறைகள் கொண்டிருக்கலாம். இது அவர்களது உடல் வளர்ச்சிக்கு ஏற்ப அமைகின்றது. வெவ்வேறான சமூக - வகுப்பு அமைப்புகளில் உள்ள இளையோர் பருவத்தினரின் அக்கறைகள், செயல்கள் ஆகியவற்றில் மாறுதல்களைக் காணலாம். சமூக வகுப்பு அமைப்பில் உள்ள மாறுதல்கள் குழந்தைப் பருவத்திலும், இளையோர் பருவத்திலும் உள்ள அக்கறைகளைப் பாதிப்பதில் பெருமுக்கியத்துவம் கொண்டுள்ளன என்பதற்குப் போதிய சான்றுள்ளது.

இளையோரின் அக்கறைகள் பல்வேறு பழிகளுக்குக் கொண்டு சென்று மிகக் குறுகிய காலத்தில் மாறவும் செய்யலாம். அவைகள் உண்மை வாழ்வில் வெளிப்படாவிட்டால், அவைகள் பொதுவாகப் பகற்கனவு, ஆசை, கற்பனை ஆகியவற்றில் தோன்றலாம். ஆசிரியர்களும் பெற்றோர்களும் இளையோர் அக்கறைகளைப் பற்றி நன்றாக அறிந்திருத்தல் அவசியமாகின்றது. அப்பொழுதுதான் இளையோன் தன்னைப் பற்றி அறிந்து கொள்ளவும், தனது பேரவாக்களும் சாத்திய நிலைமையும் ஒரு முழு நிறைவு பெறுவதற்கு வழியாகவும் துணையாகவும் அமைய உதவி செய்யவும் முடியும்.

## சிந்தனைக்குரிய பிரச்சினைகள்

1. சஞ்சிகைகளில் இளையோர்கள் கொள்ளும் அக்கறையின் முக்கியத்துவத்தைக் குறிப்பிடு.

2. இளையோனுடைய அக்கறைகளின் அளவை எட்டு வயதுக் குழந்தையின் அக்கறைகளின் அளவுடன் ஒப்பிட்டு ஆய்வு செய்.

3. உன்னுடைய சொந்த வாழ்க்கையில் என்னென்ன அக்கறைகள் நிலையாக இருந்திருக்கின்றன? ஏன்?

4. இளையோருடைய அக்கறைகளின் போக்கை அறிந்து கொள்வது பள்ளி ஆசிரியருக்கும், சாரணத் தலைவருக்கும் எவ்வாறு சிறப்புப் பயனுடையதாயிருக்கிறது என்பதைக் கூறு.

5. முன்னிளையோர் பருவத்தினர் நகைச்சுவைப் புத்தகங் களில் ஆழ்ந்த அக்கறை கொள்வதற்கு நீ கூறும் காரண மென்ன ? இவை எந்த அளவுக்கு இளையோர் பருவத்தி லும், பின்னிளையோர் பருவத்திலும் தொடர்ந்து காணப்படு கின்றன என்பதைக் குறிப்பிடு.

6. அட்டவணை 6 – 5-ஐ ஆய்ந்து வயது ஏறஏறப் பள்ளி அக் கறைகளில் ஏற்படும் முக்கிய மாறுதல்களைக் குறிப்பிடு. இம்மாறுதல்களில் ஆசிரியருக்கு முக்கியமான பொருள் கள் எவை ?

7. இந்த அதிகாரத்திலுள்ள லூசியின் வரலாற்றை நன்கு ஆய்ந்து, இசையில் அவள் காட்டிய ஆரம்ப அக்கறை எவ்வழிகளில் நிலைத்திருந்தது, லூசி வாழ்க்கைப் பணி யைத் தேர்ந்தெடுக்க இது எவ்வாறு பயன்பட்டது ஆகிய வற்றைக் கூறு.

8. 10—12, 14—16, 18 – 20 ஆகிய வயதுகளில் நீ அக்கறை காட்டிய விளையாட்டுகளையும், செயல்களையும் கூறு. அக்கறையில் ஏற்பட்ட மாறுதல்களைக் குறிப்பிடு. இம் மாறுதல்கள் திடீரென ஏற்பட்டனவா? அல்லது படிப்படி யாக ஏற்பட்டனவா ? இம்மாறுதல்களுக்கு நீ கூறும் காரணம் என்ன ?

9. வளரும் சிறுவர் சிறுமியர்களுடைய அக்கறைகளைப் பூப் படைதல் எவ்வாறு பாதிக்கின்றது ? பள்ளியிலோ, சமூகத் திலோ ஒரு நல்ல பொழுதுபோக்குத் திட்டத்தின் வளர்ச் சிக்கு இது எவ்வாறு முக்கியத்துவமுடையதாயிருக் கிறது ?

10. சிறுமியரில், அதிக வலிமையுள்ள குழுவையும், குறைந்த வலிமையுள்ள குழுவையும் விளையாட்டுகளில் ஒப்பிடு. இந்த ஒப்பீட்டிலிருந்து நீ பொதுவாகப் பெறுபவை எவை ?

## தெரிவுசெய் நூற்பட்டியல்

1. Briggs, T. H., J. P. Leonard, and J. Justman, Secondary Education. New York: Macmillan Co., 1950, Chaps. 16 and 17.

2. Cole, L., Psychology of Adolescence (Fourth Edition). New York : Rinehart and Co., Inc, 1954, Chap. 16.

3. Cruze, W. W., Adolescent Psychology and Development. New York : The Ronald Press Co., 1953, Chap. 6.

4. Fleege, U. H., Self-Revelation of the Adolescent Boy. Milwaukee: The Bruce Publishing Co., 1944. Chaps. 13 and 14.

5. Hollingshead, A. B., Elmtown's Youth. New York: John Wiley and Sons, 1949, Chaps. 12 and 15.

6. Hurrocks, J. E., The Psychology of Adolescent Behavior and Development. Boston : Houghton Mifflin Co., 1951, Chaps. 11 and 12.

7. Hurlock, E. B., Adolescent Development. New York : McGraw-Hill Book Co., 1949, Chaps, 7, 8, and 9.

8. Malm, M., and O. G. Jamison, Adolescence. New York : McGraw-Hill Book Co., 1952, Chap. 5.

9. Seidman, J. M., The Adolescent: A Book of Readings. New York : The Dryden Press, 1953, Chap. 8.

10. Sterner, A. P., 'Radio, Motion Picture, and Reading Interests', Teachers College, Columbia University, Contribution to Education, No. 932, 1947.

# 7. நம்பிக்கைகளிலும் மனப்பான்மை களிலும் வளர்ச்சி

## மனப்பான்மை வளர்ச்சியும் மாற்றி அமைத்தலும்

மனப்பான்மை என்னும் சொல் வளர்ச்சி பெற்ற நிலையைக் குறிப் பதற்காக எடுத்துக் கொள்ளப்பட்டதாகும். இவ்வளர்ச்சியானது உண்மைகளைக் கற்றலைக் காட்டிலும் உயர்ந்த இணைக்கும் தன்மை வாய்ந்த தொன்றாகும். நாம் ஒருவருடைய இன அல்லது சமயக் குழுக்களைப் பற்றிய மனப்பான்மைகளைப் பற்றிப் பேசுகின்றோம்; அல்லது சமூகப் பொருளாதார அடிப்படைப் பிரச்சினைகளான விலைக் கட்டுப்பாடு, பரிமாற்ற வியாபார உடன்படிக்கைகள், உரிமை வளர்ச்சியில் தனியார்துறைக்கும் பொதுத்துறைக்கும் இடையேயுள்ள போட்டி ஆகியவைகளைப் பற்றிய மனப்பான்மைகளைக் கொண் டுள்ளோம். அக்கறைகளைக் காட்டிலும் மனப்பான்மைகளின் தன்மை மிகவும் செயலற்றதாய் உள்ளது என்றாலும், அவைகள் அவன் எதிர் நோக்குகின்ற பல்வேறு நிகழ்ச்சிகளின் அல்லது பிரச்சினைகளின் செயலைத் தீர்மானிப்பதில் மிக அதிகமான முக்கியத்துவம் கொண்டுள் ளன. ஆதலின், மனப்பான்மைகள், மனப்பற்றுகள், சார்பெண்ணங் கள், பொருள்கள், ஆட்கள், நிகழ்ச்சிகள், பிரிவினைகள் ஆகியவற் றைப் பற்றிய முன்னரே முடிவு செய்யப்பட்ட கருத்துகள் அல்லது உணர்வுகள் என்று குறிக்கப்பட்டுள்ளன.[1] நியூகோம்ப் (Newcomb) தந்துள்ள கருதுகோள் மனப்பான்மையினுடைய அடிப்படை வரை யறையாக அமைகின்றது. இவ்வதிகாரத்தில் தரப்பட்டுள்ள பல விவாதங்களுக்கு இது அடிப்படையாகவும் உள்ளது.

'ஒரு மனப்பான்மை என்பது துலங்கல் அன்று. ஆனால், இந்தப் பொருளுக்கும் நிகழ்ச்சிக்கும் உள்ள எதிர்வினை ஒரு குறிப்பிட்ட

[1] L. L. Thurstone, 'Attitudes: Their Nature and Development', Journal of General Psychology, 1939, Vol. 21, pp. 367-399.

வழியில் ஓரளவு நிரந்தரமாய் இருக்கும் அமைப்பாகும். தனியனது மனப்பான்மைபற்றிய கருதுகோள் அவனுக்கு நேர்நிலையான அல்லது எதிர்மறையான பயனைத் தருகின்ற சூழ்நிலையின் எல்லா நிலைகளுக்கும் தொடர்பினை உண்டாக்குகின்றது'.[2]

## மனப்பான்மைகளின் வளர்ச்சி

மனப்பான்மைகள் நிகழ்ச்சிகளின் தொடர்பில் உள்ளன. நாம் அதைச் சுற்றிலும் பல்வேறு பழக்க வகைகளை உருவாக்கியுள்ளோம். வெவ்வேறான பிம்பங்களையும், கருதுகோள்களையும் அமைத்துள்ளோம். உடல் தொடர்புகளும், சமூகத் தொடர்புகளும் தன்னுணர்வுள்ள பொருத்தப்பாடுகளை அமைப்பதிலும், எதிர்வினை மனப்போக்குகளை உண்டாக்குவதிலும் முடிகின்றன எனத் தொடர்ந்து கண்டுள்ளனர். சமூக உலகத்தில் பிறந்து வளர்கின்ற குழந்தை எப்பொழுதும் மாறுகின்ற சமூகத் தூண்டலுக்குத் தொடர்ந்து ஆட்படுகின்றது. சமூக அடிப்படையில் அவன் சூழ்நிலை அவனை எவ்வாறு ஆக்குகின்றதோ அவ்வாறு ஆகின்றான். ஜி. எச். மீட் நம்மைப்பற்றி மற்றவர்கள் கொள்ளும் எதிர்வினையிலிருந்து நாம் எந்த வகையைச் சார்ந்த மனிதன் என்று அறிகிறோம் எனக் குறிப்பிடுகின்றார்.[3] இக்கற்றல் மிகுந்த துவக்கப் பருவத்திலேயே தொடங்குகின்றது. ஆதலின், பூப்படையும் நிலையை அடையும்பொழுதே, தனியன் தன்னைப் பற்றியும், தன்னிடமிருந்து மாறுபட்டுள்ள மற்றவர்களைப் பற்றியும் கருத்துகளைக் கொள்ளத் துவங்கிவிடுகின்றான். இன - சமய மனப்பான்மைகள், தன்னைப்பற்றிக் கொள்ளுகின்ற தனியனது மனப்பான்மையினின்று ஓரளவு பெறப்பட்டன என்பது தெரிகின்றது. மேலும், இம் மனப்பான்மைகள், தனியன் மற்றவர்களுடன் கொள்ளுகின்ற உறவுகளுக்கும் வரையறைகளை அமைக்கின்றன. மற்றவர்கள் தம்மைப் பற்றிக் கொள்ளுகின்ற எதிர்வினைகளும், மனப்பான்மைகளும் நமது எதிர்காலப் பங்கினை ஏற்றுக்கொள்ளுவதற்கு வழிகாட்டியாகவும், நம்முடைய மிக முக்கியப் பங்காகவும் ஆகிவிடுகின்றன.

மனப்பான்மைகளும் நம்பிக்கைகளும் குழந்தை வளர்கின்ற சூழ்நிலையில் ஊறியிருக்கின்றன. அவன் சந்தித்துள்ள உடல், சமூகத் தூண்டுதல்களின் விளைவுகளாலேயே அவைகள் தோன்றியுள்ளன. சிறுவர்களும் சிறுமியரும் முதிர்ச்சியடையும் பொழுது, அவர்களது

[2] T. M. Newcomb, 'Studying Social Behavior', in Methods of Psychology, (T. G. Andrews, ed.). New York: John Wiley and Sons, 1948.

[3] G. H. Mead, 'Mind, Self, and Society'. Chicago: The University of Chicago Press, 1934.

மனப்பான்மைகளும் நம்பிக்கைகளும் வளர்ச்சியடைந்து மாறுகின்றன. இம்மாற்றம் அவர்களது குடும்பங்கள், சமுதாயப் பழக்கங்கள், சமயம், ஒப்பார் பண்பாடு ஆகிய செல்வாக்குகளினால் ஏற்படுகின்றது. எச். எச். ரெம்மர்ஸின் தலைமையில் நடந்த இளைஞர்களின் பர்டு பல்கலைக்கழகத் தேர்வுகளின் முடிவுகள் (Purdue University Polls) மாணவர்கள் முதிர்ச்சியடையும் பொழுது, அவர்களது மனப்பான்மைகள் அதிக உண்மைநிலையின் அடிப்படையிலும் குறைந்த கருத்துநிலையின் அடைப்படையிலும் இருப்பதாகக் கூறுகின்றன.[4] இதைக் கீழேயுள்ள கேள்விகளுக்குத் தந்துள்ள துலங்கல்களில் காணலாம். நீ எந்த அளவிற்குச் சமூக வகுப்புகள் அமெரிக்காவில் இருக்கின்றன என்று நம்புகின்றாய்? இதற்கு அவர்கள் தந்த துலங்கல்கள் அட்டவணை 7—1ல் தரப்பட்டுள்ளன. மாணவர்கள் 9ஆவது படிவத்திலிருந்து 12ஆவது படிவத்திற்கு முன்னேறிய பொழுது, சமூகப் பிரிவு இருப்பதாக அவர்கள் ஏற்றுக்கொண்டதாகத் தெரிகின்றது. மேலும், சமூகப் பிரிவுகளையும், உட்குழுக்களையும் தனியன் பொதுவாக ஏற்றுக்கொள்கின்ற தன்மை அவர்கள் உயர்நிலைப் பள்ளியில் 4ஆவது ஆண்டை அடையும்பொழுது காணலாம்.

### அட்டவணை 7—1

உயர்நிலைப் பள்ளி மாணவர்கள், 'நீ எந்த அளவிற்கு அமெரிக்காவில் சமூகப் பிரிவுகள் இருக்கின்றன என்று நம்புகிறாய்?' என்ற கேள்விக்குத் தந்த துலங்கல்கள் (ரெம்மெர்ஸ் தந்தது).

| | படிவங்கள் (சதவிகிதம்) | | | |
|---|---|---|---|---|
| | 9 | 10 | 11 | 12 |
| அவைகள் இல்லை ... ... | 10 | 7 | 5 | 2 |
| அவைகள் இருக்கின்றன. ஆனால், அவைகளுக்கிடையே இருக்கின்ற மாறுபாடுகள் மிகவும் குறைந்த அளவாகும் ... | 55 | 54 | 58 | 61 |
| அவைகள் இருக்கின்றன. அவைகளுக்கிடையே இருக்கின்ற மாறுபாடுகள் மிகவும் அதிகமாகும் ... ... | 35 | 39 | 37 | 37 |

[4] H. H. Remmers, R. E. Horton, and S. Lysgaard, 'Teen-Age Personality in our Culture', The Purdue Opinion Poll, Report No. 32, Purdue University, 1952.

## குழந்தைகளும் இளையோர்களும் கொள்ளும் சார்பெண்ணங்கள்

ஒரு தனிப்பட்ட சமுதாயத்தில் உள்ள சமூக, சமய, இசை சார் பெண்ணங்கள் மிகவும் ஆரம்ப ஆண்டுகளிலேயே அடையப்பெறுகின் றன. ஆதலின், குழந்தை பள்ளியின் முதல் படிவத்தை அடையும் பொழுது, இவைகள் யாவும் அவனிடத்துச் செயற்படத் துவங்கிவிடு கின்றன. இச்சார்பெண்ணங்கள் 'நான்' எனும் கருதுகோள் வளர்வ தற்குக் காரணமாகின்றன. ஆரம்பப் பள்ளிக் குழந்தை அதற்குள் ளேயே 'நான்' எனும் கருதுகோளைப் பெற்றுவிடுகின்றது. இது ஓரளவு அவனிடத்து மற்றவர்கள் கொள்ளுகின்ற கருத்திற்கு ஏற்பவும், குறிப்பாக இவன் சந்திக்கின்ற முதியோர்கள் கொள்ளும் கருத்திற்கு ஏற்பவும் அமைகின்றது.

குழந்தைகள் வாழ்க்கையின் துவக்க நிலையிலேயே 'அமெரிக் கன்' எனும் சொல்லைக் கேட்டு, அவர்கள் அமெரிக்கர்களாகத் தங்களை இனவுறுதி செய்து கொள்கின்றனர். ராட்கே - யர்ரோவும், மில்லரும் (Radke - Yarrow and Miller) நடத்திய ஆய்வில் 5ஆவதிலிருந்து 12ஆவது படிவம்வரை உள்ள 275 குழந்தைகளிடமும், இளையோர் களிடமும் அமெரிக்கன் என்ற சொல்லின் பொருள் கேட்கப்பட்டது.[6] இந்த ஆய்வில் ஆட்பட்டோர் பெரும்பாலும் அமெரிக்க நாட்டில் ஒரு சிறு நடுமேற்கு மாகாணத்தைச் சார்ந்தவர்களாவர். (பிராட்டஸ்டன்டு மதத்தைப் பின்பற்றுபவர்களுமாவர்). இக்குழுவில் நீக்ரோக்களோ, யூத சமய நம்பிக்கை கொண்டவர்களோ இல்லை.

மாணவர்கள் அமெரிக்கன் என்ற பொருள்பற்றித் தந்த துலங் கல்கள் அட்டவணை 7—2-ல் தரப்பட்டுள்ளன. அமெரிக்கனைப் பேர வாக் கொண்டவனாகவும், அதிக சக்தி கொண்டவனாகவும், பல சுதந் திரங்கள் பெற்றவனாகவும் வலியுறுத்தினர். அமெரிக்க மக்கள் மற்றவர் களுடன் ஒப்பிடப்படும்பொழுது, உயர்ந்தவர்கள் எனும் மனப்பான்மை 5ஆவது படிவத்திலிருந்து 12 ஆவது படிவம்வரை வளர்ச்சியுறுகின் றது. இழிவான விளக்கங்கள் இல்லை என்றாலும், சொந்த விளக்கங் களின் எண்ணிக்கை வயதுடன் அதிகமாகிறது. இவை இசைவான, இசைவில்லாத, சொந்தக் குணவியல்புகளை அறிந்துள்ளனர் என்பதைக் காட்டுகின்றன. பெரும்பாலான குழந்தைகள் சொந்த அல்லது குழுப் பண்புகளை ஆய்வில் சேர்த்துக்கொள்ளப்பட்ட சிறுபான்மைக் குழுக் களிடம் காட்டினார்கள். அம்முடிவுகள் அட்டவணை 7—3-ல் தொகுக் கப்பட்டுள்ளன. அது கீழான பண்புகள் கொண்டோர் நீக்ரோக்கள் என்றும், கெட்ட அல்லது இசைவிலாப் பண்புகள் கொண்டோர்

[6] M. Radke - Yarrow and J. Miller, 'Children's Concepts and Attitudes about Minority and Majority American Groups', Journal of Educational Psychology, 1949, Vol. 40, pp. 449-468.

## அட்டவணை 7—2

ஒவ்வொரு படிவத்திலுள்ளோரும் 'அமெரிக்கர்கள் எப்படி இருக்கிறார்கள்' என்ற கேள்விக்குத் தந்த துலங்கல்கள் (ராட்கே - யர்ரோ, மில்லர் தந்தவை.)

| துலங்கல்கள் | குழந்தைகளின் (படிவ) சதவீதம் | | | |
|---|---|---|---|---|
| | 5—6 (50 பேர்) | 7—8 (68 பேர்) | 9—10 (95 பேர்) | 11—12 (62 பேர்) |
| ஜனநாயகக் கருத்து, நாட்டுப் பற்று : | | | | |
| பல சுதந்திரங்கள் பெற்றிருக்கின்றனர் ... | 12 | 22 | 24 | 10 |
| மக்களால் நடத்தப்படும் அரசு ... ... | 4 | 8 | 1 | 8 |
| மக்கள் அரசிடம் பற்றுறுதி கொண்டுள்ளனர் ... | 14 | 36 | 18 | 11 |
| மக்களின் வகை : | | | | |
| பல தேசிய இனங்களின் கலவை ... ... | 2 | 7 | 8 | 8 |
| வெள்ளைக்காரர்கள் ... | 6 | 2 | 1 | 0 |
| செல்வந்தர்களும், ஏழை மக்களும் ... ... | 4 | 3 | 1 | 3 |
| மற்றவர்களுடன் ஒப்பிடுதல் : | | | | |
| மற்றவர்கள் போன்றே உள்ளனர் ... ... | 28 | 25 | 7 | 18 |
| மற்றவர்களினின்று மாறியுள்ளனர் ... ... | 0 | 2 | 1 | 2 |
| மற்றவர்களைக் காட்டிலும் சிறந்தவர்கள் ... | 4 | 12 | 12 | 16 |
| ஒரு சக்தி வாய்ந்த நாடு ... | 2 | 3 | 3 | 8 |
| சொந்த குண இயல்புகள் : | | | | |
| பேரவா, சத்து, அடைவு கொண்டவர்கள் ... | 20 | 19 | 31 | 46 |
| அன்பு, நேர்மை, நட்புக் கொண்டவர்கள் ... | 64 | 65 | 41 | 31 |
| சுத்தமானவர்கள் ... | 4 | 4 | 5 | 0 |
| கல்வியறிவும் நுண்ணறிவும் உள்ளவர்கள் ... | 4 | 12 | 14 | 19 |
| கவலையில்லாதவர்கள் ... | 0 | 2 | 4 | 16 |
| சமய நோக்குக் கொண்டவர்கள் ... ... | 0 | 6 | 1 | 0 |
| பணத்திற்கும், சடப்பொருள் சுவைக்கும் பயன் மதிப்பு அளிப்பவர்கள் ... | 4 | 6 | 11 | 12 |
| சொந்த குண இயல்புகளைத் திறனாய்வு செய்பவர்கள் ... ... | 6 | 16 | 15 | 21 |

யூதர் என்றும் குறித்ததைக் காட்டுகின்றது. வயதுடன் சார் பெண்ணமும் அதிகமாகின்றது என்று கூறுவதற்கு இவ்வாய்வில் சான்று உள்ளது. இவ்வுற்று நோக்கல் உண்மை என்றால், குழந்தைகள் இளையோர் ஆகியோரிடம் வழிகாட்டுவோரும் கல்வியில் தொடர்பு கொண்டோரும் அக்கறை காட்ட வேண்டியது அவசியமாகின்றது.

## சார்பு எண்ணம் : 'பலி ஆட்கள்' இருத்தல்

நாம் எதிர்பார்க்கின்ற அல்லது ஆர்வத்துடன் எதிர்நோக்குகின்ற பொருள்கள் நாம் எதிர்பார்க்கும் வகையில் இல்லாதபொழுது, நாம் சில தனியன்களையோ அல்லது தனியன்களின் குழுவையோ குற்றஞ் சாட்டுவது இயல்பேயாகும். இவர்கள் 'பலி ஆட்களாக்கப்' படுகின்றனர். அமெரிக்கப் பண்பாட்டில் போட்டியில் வெற்றிபெறுவதற்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்படுகின்றது. இதனால் பற்றார்வம் உண்டாக்கப்பட்டு வெற்றிகரமாகப் போட்டியிடும் மனப்பான்மை அதிக ஆதிக்கம் செலுத்தும் குறிக்கோளாகின்றது. இதை ஒரு சிறுமி வகுப்பு நாடகத்தில் தலைமைப் பாத்திரத்தைப் பெறுவதற்கு முனைவதிலிருந்து அறிந்து கொள்ளலாம். இப்பாத்திரத்தை அடைய முடியாவிடில், வெறுப்பு, பற்றார்வம், பொறாமை ஆகிய உணர்வுகள் உடன் வருகின்றன. டோலார்டும் (Dollard), மற்றவர்களும் இம் முனைப்பைச் சரிகட்ட ஏதோ ஒரு தனியன்மீதோ அல்லது குழுவின்மீதோ குற்றத்தைச் சாட்டுகின்றனர். இதுதான் 'பலி ஆள்' கொள்கையாகும்.[6] இந்த வகையில் வெறுப்பு உண்மைக் காரணத்தினின்று விலக்கப்பட்டு, ஒரு எளிதான தற்காப்பற்ற இலக்கிடம் தரப்படுகின்றது. பொதுவாக இது ஒரு சிறுபான்மையரிடமோ அல்லது கீழான அந்தஸ்துக் குழுவிடமோ தரப்படுகின்றது. காரணம் கற்பிக்கின்ற முறையின் மூலமாக இவ்வாறு வெறுப்பு இடம் பெற்றுள்ளதைத் தனியன் சரியானது என்று காட்டி வலிவுள்ளதாக்குகின்றான்.

வெவ்வேறான குழுக்களிடம், தனியன்களிடத்து வெறுப்பும் பற்றார்வமும் மாறுபட்ட அளவில் இருக்கும். டேவிஸ் (Davis) என்பவரின் கருத்துப்படி தனியனது சமூக அந்தஸ்தும், சமூக இயல்பினருக்குதலும் ஒருவனது துணைப் பண்பாட்டின் விளைவுகளாகும்.[7] வெவ்வேறு சமூக அந்தஸ்து வகுப்புகளில் இருந்துவரும் தனியன்கள் சமூகப் பிரச்சினைகளையும், சமூக உண்மையையும், தன்னைப்பற்றியும்

[6] J. Dollard, et al., Frustration and Conflict. New Haven: Yale University Press, 1939.

[7] A. Davis, 'Socialization and Adolescent Personality,' in G. E. Swanson, et al. (eds.), Readings in Social Psychology (rev. ed.). New York: Henry Holt and Co., 1952.

முற்றிலும் மாறுபட்ட நிலையில் கருதுவார்கள். பொதுவாக நடுத்தர வகுப்பினர் நடப்பு நிலைமையில் அதிக அக்கறை காட்டுவார்கள். ஆனால், கீழ்வகுப்பினர் பல பகுதிகளில் பழைமை விரும்பிகளாக இருப்பினும், அதிகமான தீவிரவாதிகளாகவும் இருந்தனர். சமூக இயல்பினருக்குதலுக்கும், சமூகக் கட்டுப்பாட்டினால் விளையும் பற்றுார் வத்திற்கும் நெருங்கிய உறவு உள்ளது. குழுவிடம் ஒன்றியிருத்தல் இப்பற்றுர்வங்களைக் குறைத்து, மாறுபட்ட நிலையினதைப் பொறுத்துக்கொள்ள முடியாத மனப்பான்மைக்குக் கொண்டு செல்கின்றது. இவ்வகையான பொருந்தாத அல்லது சர்வாதிகாரமான மனப்பான்மை தற்காப்பு இல்லாத உணர்வைக் கொள்வோர்க்கு ஆதரவாகவும் உள்ளது. ஆதலின் குழுவிடம் ஒன்றியிருக்கும் கட்டாயப் போக்கும், சிறுபான்மையினர்மீது கொள்ளும் சார்பெண்ணமும் தற்காப்பின்மையை உணர்கின்ற இளையோரிடத்து அதிகமாகக் காணப்படும். தற்காப்புடையவராக உணர்கின்றவர்கள் அதிகமான பொறுத்துக் கொள்ளும் நட்பு மனப்பான்மையைச் சிறுபான்மையோரிடமும், வசதிக் குறைவுள்ள தனியன்களிடமும் கொள்கின்றனர்.

### இளையோர் மனப்பான்மைகள்

இளையோர் அவர்களுடைய மனப்பான்மைகள் பலவற்றில் உயரிய குறிக்கோள் கொண்டிருந்தாலும், பொருளாதாரப் பிரச்சினைகளில், அவர்களுடைய பெற்றோர்களின் மனப்பான்மையையே ஏற்றுக்கொள்கின்றனர். அதாவது அரசு, தனித்த முதலாளித்துவம்

## அட்டவணை 7—3

நீக்ரோக்களையும், யூதர்களையும்பற்றி அரசினர் பள்ளிக் குழந்தைகள் குறிப்பிடும் குணவியல்புகள் (ராட்கே-யர்ரோ, மில்லர் தந்தவை.)

| குணவியல்பு | நீக்ரோக்களைப் பற்றிய சதவீதம் | | | | யூதர்களைப் பற்றிய சதவீதம் | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | 5-6 | 7-8 | 9-10 | 11-12 | 5 6 | 7-8 | 9 10 | 11-12 |
| இசைவானது ... | 34 | 36 | 27 | 21 | 20 | 13 | 13 | 16 |
| கீழானது ... ... | 26 | 41 | 39 | 67 | 4 | 4 | 3 | 8 |
| கெட்டது ... ... | 0 | 18 | 23 | 27 | 50 | 45 | 69 | 80 |
| தனித்த தன்மை வாய்ந்தது, சிறப்பானது ... | 22 | 10 | 12 | 25 | 22 | 21 | 7 | 5 |

ஆகியவற்றிற்கிடையே உள்ள மோதல்பற்றி அவர்கள் கொள்கின்ற மனப்பான்மை ஒருசில சமயங்களில் தனியார் துறையை ஆதரிக்கும் வண்ணமும், மற்றச் சமயங்களில் பொதுத் துறையை ஆதரிக்கும் வண்ணமும் இருக்கின்றது. பொதுவாக இளையோர்கள் அவர்களுடைய பெற்றோர்களுடன் மாறுபட்ட மனப்பான்மைகள் கொண்டிருக்கும்பொழுது, அவர்கள் மரபு நிலையையும் நடப்பு முறையையும் மீறிச் செல்லவே விரும்புகின்றனர்என்பது குறிப்பிடத்தக்கது. இந்தக் கருத்தில்தான் அவர்களது கருத்துநிலையையும், தன்மையையும், ஆழ்ந்து இருக்கின்ற சார்பு எண்ணங்களையும் உற்றுநோக்க முடியும். அதிகாரம் 18-ல் விளக்கப்பட்டுள்ள குடிமைப் பயிற்சிக்கு இது மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த கருத்துகள் கொண்டுள்ளது. சுகாதாரம் பற்றிய செய்திகளில் பர்டு கருத்து அமைப்பு (Purdue Opinion Panel) முடிவுகள் உயர்நிலைப் பள்ளி மாணவர்கள் நோய்களைப் பற்றியும், தொத்து நோய்களைப் பற்றியும் அவர்களது சுகாதாரம், பற்பாதுகாப்பு, மனநலம் ஆகியவற்றைக் காட்டிலும் அதிகமாக அறிந்திருக்கின்றார்கள் என்று கூறுகின்றது.[8] சுகாதாரம் பற்றிய மூடநம்பிக்கைகள், பல மாணவர்களுடைய உயர்நிலைப் பள்ளிப் பயிற்சிக்குப் பின்னரும், அவர்களால் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. ரெம்மெர்ஸ் (Remmers), இவ்வாறு தவறான கருத்துகள், இன்றைய நாளின் பண்பாட்டில் உள்ள அதிகமான ஆட்கள் மூலமாகச் செய்தி பரிமாறுவதனால் உண்டாகின்றது என்று குறிப்பிடுகின்றார். இவ்வாறான நிலைமையில் இல்லமும் பள்ளியும் இளையோர்களுக்கு இச் செய்திகளைத் தற்கால விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளின் அடிப்படையில் விளக்கிப் பொருள் கூறுகின்ற பொறுப்பைக் கொண்டுள்ளன.

## பூப்படைதலும் மாறுபட்ட மனப்பான்மை பெறுதலும்

இளையோர் பருவம் வினைமுறைகளில் நிலையற்ற தன்மை பெற்றிருப்பதாக வரையறுக்கப்படுகின்றது. தன்னைப் பற்றியும், மாற்றுப் பால் உறுப்பினரிடமும் மாறுபட்ட மனப்பான்மைகள் கொண்டிருப்பதாகவும் கூறப்படுகின்றது. அதிகாரம் 5-ல் குறிக்கப்படுகின்ற உயர்ந்த பால் உணர்வு, மாற்றுப் பால் உறுப்பினர்களிடத்துக் காட்டப்படுகின்ற அதிகமான அக்கறையுடன் தோன்றுகிறது. சோல்லன்பெர்ஜர் (Sollenberger) சிறுமியரிடத்து முன்னிளையோர் பருவச் சிறுவர்கள் கொள்ளும் மனப்பான்மை பற்றி ஆய்வு செய்தார். 9 வயதிலிருந்து 18 வயது வரை உள்ள 700 சிறுவர்களின் எதிர்வினைகள் சிறுமியர்

[8] H. H. Remmers, 'Youth Attitudes: A Mid-Century Appraisal', Presidential Address, Denver Regional Meeting, American Educational Research Association, March 14, 1955.

களிடத்து அவர்கள் கொண்டுள்ள மனப்பான்மை பற்றிக் கேள்விக்குத் தந்த பதில்கள் படம் 7—1 ல் தரப்பட்டுள்ளன.[9] சிறுவர்களில் 40 சதவிதத்தினருக்குமேல் ஒன்பதாவது வயதில் சிறுமியரை ஒரு தொந்தரையாகக் கருதுவதாகவும், மேலும் 20 சதவிதத்தினர் விருப்போ வெறுப்போ இல்லாத நிலையில் இருப்பதாகவும் கூறினர்.

பூப்படையத் துவங்கும்பொழுது பால் உட்சுரப்பிச் சத்துகள் அதிகம் ஆவதனால், பால் முனைப்பு அதிகமாகின்றது. முதிர்ச்சியடை-




படம் 7-1

சிறுமியர்கள்மீது கொள்ளும் மனப்பான்மைபற்றிய கேள்விக்கு 700 சிறுவர்கள் தந்த எதிர்வினைகள். (ஆர். டி. சோல்லன் பெர்ஜரும், எப். கே. ஷட்டில்வொர்த்தும் தயாரித்த வெளியிடப்படாத பட்டியலை அடிப்படையாகக் கொண்டது. 'Adolescence' (Monographs of the Society for Research in Child Development, 1949, Vol. 14, No. 1.)

[9] R. T. Sollenberger, 'Some Relationships between the Urinary Excretion of Male Hormone by Maturing Boys and Their Expressed Interests and Attitudes,' Journal of Psychology, 1940, Vol. 9, pp. 179-189.

யும் தனியன் மாற்றுப் பால் உறுப்பினர்களுடன் கொள்கின்ற நட்பு பால் முனைப்பினை உண்டாக்கி, அதனைப் போக்கவும் செய்கின்றது என்று உணர்கின்றான். இருப்பினும், நமது சமூகத்தில் இவ்விளையோர் உந்துகள் சாதாரண நேரடிச் சமூக நடத்தையினால் தணிவதில்லை. ஆனால், இவை மாற்று நடத்தையின் மூலமாகத்தான் தணிகின்றன. இவ்வாறு மாற்று நடத்தை வகைகள் பூப்படையும்பொழுது தோன்றுகின்றன. இது உடலியல் முதிர்ச்சி அதிகமாகப் பெற்றிருப்போரிடமிருந்து குறைவான உடலியல் முதிர்ச்சி பெற்றோரின் துலங்கல்கள் பிரித்துணரும் வகையில் அமைகின்றது.

இக்காலத்தில் காணப்படுகின்ற மாறுபட்ட மனப்பான்மை ஜோன்ஸ், பெய்லி (**Jones, Bayley**) என்பாரின் ஆய்வில் வலியுறுத்தப்படுகின்றது.[10] இவ்வாய்வில் இருகுழுச் சிறுவர்கள் ஒப்பிட்டுப் பார்க்கப்பட்டனர். இச்சிறுவர்கள் ஏறக்குறைய ஒரே உண்மை வயதினையும், எலும்பு வளர்ச்சியில் இரண்டு ஆண்டு மாறுபாடும் பெற்றிருந்தனர். இவ்வாறான குழுக்களை ஒப்பிட்டதில், சீக்கிரமே முதிர்ச்சியடையும் சிறுவர்கள் 12-லிருந்து 17 வயதுக்குள் இருப்பதாகக் கண்டனர். ஏறக்குறைய இயற்கையாக எதைப் பற்றியும் கவலை கொள்ளாத தன்மையை எல்லோரும் பெற்றிருந்தனர். எதிர்பார்த்தவாறே, விரைவில் முதிர்ச்சியடையும் சிறுவர்கள் தலைவாருவதில் அதிக அக்கறை காட்டினர். இவர்கள் பின்தங்கி முதிர்ச்சியடையும் சிறுவர்களைக் காட்டிலும் சொந்தத் தோற்றத்தில் உயர்ந்த தரத்தை அடைந்திருந்தனர். இவ்வாய்வின் முடிவுகள், மற்றப் பல ஆய்வுகள் இப்பிரச்சினைகளைப் பற்றி ஆய்வு செய்து கண்ட முடிவுகளுடன் ஒத்திருந்தன. சோல்லன்பெர்ஜரின் (**Sollenberger**) ஆய்வின்படி இளையோர் சிறுவர்களது அக்கறைகள், மனப்பான்மைகள் ஆகியவை முதிர்ந்துள்ள அளவு உண்மை வயதினைக் காட்டிலும் உட்சுரப்பிச் சத்தின் செயலுக்கு நெருங்கிய உடன் தொடர்பு கொண்டுள்ளன. உயர்ந்த, கீழான உட்சுரப்பிச் சத்துகள் கொண்டிருந்த சிறுவர் குழுக்கள் 'அவர்கள் விரும்பும் பொருள்கள்' என்ற தூண்டலுக்குத் தந்த துலங்கல்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கப்பட்டன. உயர்ந்த உட்சுரப்பிச் சத்துள்ள குழு கீழான உட்சுரப்பிச் சத்துக் குழுவைக் காட்டிலும் அதிகமாக உண்மை நிலையை உணர்ந்தது என்று அது காட்டுகின்றது. இரண்டு உட்சுரப்பிச் சத்துக் குழுக்களும் 'செய்ய விரும்புவன' என்பதற்குத் தந்த துலங்கலை ஒப்பிட்டுப் பார்த்து அட்டவணை 7—4-ல் தந்துள்ளனர்.[11] இவ்வொப்பிடுதலைக் கவனத்துடன்

[10] **M. C. Jones and N. Bayley, 'Physical Maturity Among Boys as Related to Behavior', Journal of Educational Psychology, 1950, Vol. 41, p. 137.**

[11] **Op. cit.**

ஆய்ந்தால், உட்சுரப்பிச் சத்து அதிகமாக வேலை செய்யும்பொழுது நாளிடல், நடனமாடுதல் போன்ற பெண்கள் கலந்துகொள்ளும் சமூகச் செயற்களில் அதிகமாக அக்கறை இருப்பதைக் காட்டுகின்றது.

### அட்டவணை 7—4

உயர்ந்த கிழான உட்சுரப்பிச் சத்துக் குழுக்கள் 'செய்ய விரும்புவன' என்பதற்குத் தந்த துலங்கல்களின் ஒப்பீடு (ஜோன்ஸ்-பெய்லி தந்தவை.)

| செய்ய விரும்புவன | C.R. |
|---|---|
| பந்து உருட்டுதல் அல்லது பட்டம் விடுதல் ... ... | 1·0 |
| நாவல்கள் படித்தல் அல்லது 'தலைவனைப் பின்பற்று' என்னும் விளையாட்டு ... ... ... ... | 1·6 |
| வாசிக்கும் ஓர் இசைக்குழுவின் இசையைக்கேட்டல் அல்லது கடலை பர்பி செய்தல் ... ... ... ... | 2·5 |
| பர்சேசி (Parchesi) விளையாடல் அல்லது 'நான் உளவாளி' விளையாடுதல் ... ... ... ... | 1·2 |
| பெண்ணுடன் வெளியே செல்லுதல் அல்லது மெக்கேனோ (Meccano) விளையாட்டு விளையாடல் ... ... | 1·2 |
| விளையாட்டுப் பற்றிய செய்திகளைப் படித்தல் அல்லது செக்கர்ஸ் (Checkers) விளையாடுதல் ... ... | 3·8 |
| கால்பந்து விளையாடுதல் அல்லது எலெக்ட்ரிக் புகைவண்டி பொம்மைகளுடன் விளையாடுதல் ... ... | 1·1 |
| ஒரு சிறுமியுடன் வெளியே உலாவச் செல்லுதல் அல்லது கரும்பலகைகளை அழித்தல் ... ... ... | 1·3 |
| கார் ஓட்டுதல் அல்லது சாரணர் கூட்டத்திற்குச் செல்லுதல் ... | 1·8 |
| ஒரு சிறுமியுடன் வெளியே செல்லுதல் அல்லது சூயிங்கம் (Chewing gum) சுவைத்தல் ... ... ... | 1·6 |
| பெண்ணைச் சந்திக்கச் செல்லுதல் அல்லது நீரில் நடத்தல் ... | 1·8 |
| நடனமாடச் செல்லுதல் அல்லது புல்வெளி மரப்பந்தாட்டம் ஆடுதல் ... ... ... ... | 2·0 |

*C.R.—இது உயர்ந்த உட்சுரப்பிச் சத்துக் குழு, அட்டவணையில் முதல் பகுதியிலுள்ள பொருள்களை அடிக்கடி தேர்ந்தெடுப்பதில் உள்ள மாறுதல்களின் சார்புண்மைகளைத் தருகின்றது.*

இங்குக் குறிக்கப்பட்டுள்ள ஆய்வுகள், சிறுவர்களிடத்து இருக்கும் அக்கறைகள் மனப்பான்மைகள் ஆகியவற்றிலுள்ள மாறுதல்களைக் குறிக்கின்றன என்றாலும், பூப்படையத் துவங்கியவுடன் சிறுமியர்களிடத்தும் அக்கறைகளிலும் மனப்பான்மைகளிலும் குறிப்பிடும்படியான மாறுதல்கள் இருக்கின்றன. இம்மாறுதல்கள் சிறுவர்களைக் காட்டிலும் சிறுமியர்களிடத்து மிகுந்த ஆரம்ப வயதிலேயே தோன்றுகின்றன. இவை 7ஆவது, 8ஆவது, 9ஆவது படிவங்களில் சமூக இயல்புப் பிரச்சினையை மேலும் கடினமாக்குகின்றன. வாசிக்கும் பொருள்களில், சிறுமியர்கள் காதல் பற்றிய நூல்களையே தேர்ந்தெடுக்கின்றனர். சமூகச் செயல்களில் அவர்கள், இருபாலாரும் கலந்துகொள்ளும் செயல்களுக்கே முன்னுரிமை அளிக்கின்றனர். இக்காலத்தில் அவர்கள் விளையாட்டை வெறுத்துப் பெண்மைப் பங்கினைக் கொள்ள விழைகின்றனர்.

பூப்புப் போக்கின் விளைவைத் தீர்மானிக்க[12] ஸ்டோன், பார்கர் **(Stone and Barker)** எனும் இருவர் கலிஃபோர்னியாவைச் சார்ந்த பெர்கிலி என்னும் ஊரில் உள்ள இரு பெரும் ஜூனியர் உயர்நிலைப் பள்ளிகளில் உள்ள 1,000 சிறுமியர்களது அக்கறைகளையும் மனப்பான்மைகளையும் பற்றி ஆய்வு செய்தனர்.[13] பூப்புப் போக்கு தோன்றுவதில் ஒன்றிலிருந்து ஒன்றரை ஆண்டுகள் கூட வயது மாறுதல்கள் கொண்ட சிறுமியரையும் சேர்த்துக் கொள்வது கட்டாயமானது. இச் சிறுமியர் உண்மை வயதிலும், சமூக அந்தஸ்திலும் இணையாக இருந்தனர். ஆனால், உடல் வளர்ச்சியில் குறிப்பிடும்படியான மாறுதல்கள் கொண்டிருந்தனர். ஒரு குழு பூப்புப் போக்குக்குப் பின்னுள்ளோராகவும்; மற்றொரு குழு பூப்புப் போக்கு அடையாதவர்களாகவும் பிரிக்கப்பட்டன. இவ் வாய்விலிருந்து பூப்புப் போக்குக்குப் பின்னுள்ளோரில் பெருவிகிதத்தினர் மற்றக் குழுவைச் சார்ந்த பெண்களைக் காட்டிலும் அதிகமாக மாற்றுப் பாலாரிடம் அக்கறையுள்ள துலங்கல்களையும், இசைவான மனப்பான்மையும் கொண்டுள்ளனர். பூப்புப் போக்குக்குப் பின்னுள்ள சிறுமியர்கள் அழகுபடுத்துவதில் அதிக அக்கறை காட்டுகின்றனர். பூப்புப் போக்குக்கு முன்னுள்ளோரைக் காட்டிலும் அதிகமாகத் தங்களை அலங்கரித்துக் கொள்வதில் அதிக அக்கறை காட்டுகின்றனர். பூப்புப் போக்குக்குப் பின்னுள்ள சிறுமியர்கள் அவர்களுடைய எதிர்வினைகளுக்கேற்றவாறு பகற் கனவு

[12] *பூப்புப் போக்குக் காலம் தோன்றுவது பூப்புப் பருவத்தின் துவக்கத்தையோ அல்லது முடிவையோ குறிப்பிடவில்லை. பூப்படைகின்ற காலத்திற்கு முன்னர்கூடப் பெண்ணின் மாறுதல்கள் சில தெளிவாகத் தோன்றுகின்றன.*

[13] **C. P. Stone and R. G. Barker, 'The Attitudes and Interests of Premenarcheal and Postmenarcheal Girls', Journal of Genetic Psychology, 1939, Vol. 54, pp. 27-72.**

காண்பதிலும், சிலவகையான கற்பனைச் செயல்களிலும் பூப்புப் போக்குக்கு முன்னுள்ளோரைக் காட்டிலும் அதிகமாக ஈடுபடுகின்றனர். குடும்ப மேலாண்மையுடன் போரிடுவதிலோ, எதிர்த்து நிற்பதிலோ இவ்விரு குழுக்களில் குறிப்பிடும்படியான மாறுதல் காணப்படவில்லை. பூப்புப் போக்கு ஏற்பட்ட பின்னர், சிறுமிகள் விளையாட்டுகளிலும், கடுமையான செயல்திறம் கொண்ட செயல்களிலும் பங்கு பெறுவதில் குறைவான அக்கறையையே காட்டினர். இவ்வொப்புமைகள், முதியோர் செயல்களில் வளர்ச்சியடையும் அக்கறையைக் காட்டுகின்றன. அதிகமான சுதந்திரமும், மாற்றுப் பாலாரிடத்து அதிகமான அக்கறையும் கொள்வது பூப்புப் போக்கு ஏற்பட்டதனால் உண்டான விளைவுகள் என்றும் இவ்வொப்புமைகள் குறிப்பிடுகின்றன.

இப் பருவத்தில் ஏற்படும் வளர்ச்சியின் சிறப்பான தன்மை என்னவெனில், பால்களிடையே இருக்கும் உளவியல் மாறுதல்களே யாகும். ஸ்டோல்ஸ் (Stolez), ஜோன்ஸ் (Jones), சேபி (Chaffey) ஆகியோர் இதனைக் கீழ்க்கண்டவாறு விளக்கியுள்ளனர்.

பெண், தான் அடிப்படையில் ஒரு பெண்மைக் குணம் கொண்டவள் எனத் தனக்கும், உலகிற்கும் மெய்யெனக் காட்ட வேண்டிய கட்டாயத்தை உணர்கின்றாள். சிறுவனும், மற்றவர்கள் அவனை மனிதன் என்று ஏற்றுக்கொள்ளத் தக்க ஆண்மைக் குணங்கள் பெற்றுள்ளான் என்று காட்டவேண்டிய தேவையுள்ளது. இக் குணவியல்பு, சிறுமியர்கள் தங்களது ஓய்வு நேரத்தின் பெரும் பகுதியினை கடைக்குச் சென்று சாமான்கள் வாங்குவதற்கும், தங்களை அழகு படுத்திக் கொள்வதற்கும் காரணமாகின்றது. கைவிரல் நகங்களை அழகுபடுத்துவதும், அவர்களின் உதட்டின் நிறத்திற்கு ஏற்றவாறு சிவப்புச் சாயத்தைப் பூசுவதும் இதன் காரணத்தினாலேயேயாகும். இதன் காரணமாகத்தான் அவர்கள் தங்களது தலைமுடி அலை அலையாகச் சுருட்டை முடியாக இருக்க வேண்டுமென விரும்புகின்றனர். இவ்வகையான தலைமுடியை ஒழுங்குபடுத்திய பின்னர், அதை ஒரு நாடா வைத்துக் கட்டியோ அல்லது பூ முடித்தோ அழகுபடுத்துகின்றனர். இதன் காரணமாகத்தான் சிறுவன் கார் ஓட்டுவதற்குக் கற்றுக் கொள்ள விரும்புகின்றான். ஆதலின், ஒரு காரைச் சொந்தமாக வைத்துக் கொள்ளவோ அல்லது இரவல் வாங்கவோ அதிகமாக முயற்சி செய்கின்றான். இந்த வளர்ச்சியுடன் ஒரு பெண் எல்லோரும் விரும்புமாறு இருப்பதற்கு அவள் ஓரளவு அழகுடனும், தன்னைச் சுத்தமாகவும், ஒழுங்காகவும் வைத்துக்கொண்டு நன்கு பழகும் தன்மையைப் பெற வேண்டுமென்றும் குழு கூறுகின்றது. ஒரு சிறுவன், இதற்கு மாறாக வலுத்தாக்குதல் மிக்கவனாகவும், விளையாட்டில் சிறந்தவனாகவும் இருக்க வேண்டும். அவன் நடனமாடுவதற்கு உரிய திறன் பெற்றிருக்க வேண்டும். பெண்களுடன் கூச்சமின்றிப் பேச

வதற்கும், மற்றச் சிறுவர்களுடன் போட்டியிடத் தயார் என்று காட்டு வதற்கும் திறன் பெற்றிருக்க வேண்டும். அவன் பொருள்களை அடைய முடியும் என்றும், அவற்றில் திறமை மிக்கவன் என்றும் காட்ட வேண் டும். இளையோர் வளர்ச்சியில் இந்நிலையானது முதியோர்களுக்கு அடிக்

## அட்டவணை 7—5

20 கத்தோலிக்க உயர்நிலைப் பள்ளிகளிலிருந்து எடுக்கப்பட்ட 2,000 சிறுவர்கள் முதல் பால் செய்தியை அறிந்த ஏதுக்கள் (*ஃப்ளீஜ் தந்தவை.*)

| ஏதுக்கள் | முதல் செய்தி (சதவிதம்) | பின்னர் பெற்ற செய்தி (சதவிதம்) |
|---|---|---|
| 1. கூட்டாளிகள் ... ... | 54·9 | 49·8 |
| 2. தெருவில் ... ... | 34·6 | 22·9 |
| 3. நூல்கள் ... ... | 33·4 | 38·9 |
| 4. சஞ்சிகைகள் ... ... | 24·9 | 32·3 |
| 5. மதகுருமார் ... ... | 18·2 | 26·3 |
| 6. தந்தை ... ... | 17·4 | 17·3 |
| 7. தாயார் ... ... | 15·4 | 15·7 |
| 8. ஆசிரியர்கள் ... ... | 14·9 | 22·2 |
| 9. திரைப்படங்கள் ... ... | 14·8 | 17·4 |
| 10. செய்தித் தாள்கள் ... ... | 14·5 | 18·8 |
| 11. பெரியவர்கள் ... ... | 9·8 | 14·7 |
| 12. சகோதரர்கள் ... ... | 5·0 | 7·5 |
| 13. உறவினர்கள் ... ... | 5·0 | 6·8 |
| 14. டாக்டர் ... ... | 3·4 | 6·5 |
| 15. சகோதரிகள் ... ... | 2·0 | 2·3 |

கூடி தொல்லையைத் தருவதாக இருக்கின்றது. சிறுமி தான் ஆசைப் பட்ட அந்தஸ்தினை அடையும்பொழுது அல்லது உலகப் பெண்மை இயல்புக்குத் தன்னைத் தன் சொந்த ஆளுமைக்கு ஏற்றவாறு பொருத் திக் கொள்ளக் கறகும் பொழுது, அவள் மகிழ்ச்சி யுள்ளவளாகவும், கற்றுக் கொடுக்கத்தக்க அல்லது வீட்டில் வைத்துக் கொள்ளத்தக்க ஓர் இனிமையான பெண்ணாகவும் திகழ்வாள். இதைப் போன்றே சிறுவன், தான் ஒரு மனிதனாக ஏற்றுக் கொள்ளப்பட்டதும், அவனால் கல்லூரிப் படிப்புக்கோ அல்லது ஒரு வேலைக்கோ தயார் செய்து கொள்ளக்கூடிய முக்கிய வேலையில் இறங்க முடிகின்றது. தங்களது தொடர்புகளைப் பற்றிய நல்லறிவு அடைந்திருக்கின்ற சிறுவர் சிறுமியர் களும், கலந்த இருபாலும் கலக்கின்ற குழுவில் தங்களுக்கென நல்ல இடம் வகிக்கின்றவர்களாகவும், நிலைத்திருக்கின்ற தன்மையுடையவர் களாகவும், அவர்களைப் பற்றி முன்னறிந்து கூறுகின்ற தன்மை உடை யவர்களாகவும் இருக்கின்றார்கள் என்பதாக நாம் தொடர்ந்து கண் டிருக்கின்றோம்.[14]

## பால் பற்றிய செய்தியும் மனப்பான்மைகளும்

இளையோர்கள்பால் பற்றிய செய்திகளை அறிந்து கொள்ளும் ஏதுக்களைப் பற்றி அறிந்து கொள்வதற்குப் பல ஆய்வுகள் நடத்தப் பட்டிருக்கின்றன. கத்தோலிக்க உயர்நிலைப் பள்ளிகளில் படிக்கும் 2,000 சிறுவர்களை ஆராய்ந்து பால் பற்றிய முதல் செய்தியை எங்கிருந்து பெற்றனர் என்றும், மேலும் இப்பொருள் பற்றிய செய்தி களை எந்த ஏதுக்களிலிருந்து அவர்கள் பெற்றார்கள் என்பதற்கான விவரங்களும் ஃப்ளீஜ் (Fleege) என்பவரால் சேகரிக்கப்பட்டன.[15] அட்டவணை 7—5-ல் தரப்பட்டுள்ள முடிவுகளிலிருந்து, தாய் தந்தை யர்கள் இவ்வாறான விவரங்களை முதலில் அளிப்பதில் 5ஆவது அல்லது 6ஆவது இடத்தைத்தான் பெற்றனர் என்று தெரிகின்றது. பாதிக்கு மேற்பட்ட சிறுவர்கள் தங்கள் தோழர்களிடமிருந்தும் 34 சதவீதம் வீதிகளிலிருந்தும் அறிந்தார்கள்.

வாஷிங்டனைச் சார்ந்த ஏறக்குறைய 5,000 சிறுவர் சிறுமியர்களை மதிப்பீடு செய்ததில் இவைகளைப் போன்ற முடிவுகளே அக் கண்டு பிடிப்புகளிலும் இருந்தன. அட்டவணை 7—6-ல் கொடுக்கப்பட் டுள்ள முடிவுகளிலிருந்து மூன்றில் இரண்டு பங்கு சிறுமியர்கள் பாலைப்

[14] H. R. Stolz, M. C. Jones and J. Chaffey, 'The Junior-High-School Age', University High School Journal, 1937, Vol. 15, pp. 63-72.

[15] U. H. Fleege, Self-Revelation of the Adolescent Boy., Milwaukee: The Bruce Publishing Company, 1946, p. 272.

பற்றிய விவரங்களை வீட்டிலிருக்கும் பெற்றோர்களிடமிருந்தும் முதியோர்களிடமிருந்தும் அறிந்ததாகத் தெரிகின்றது. ஆனால், 38·6 சதவீதம் மாணவர்கள்தாம் அப்பொருள் பற்றிய செய்தியையே அறிந்த ஏதுக்களைப் பட்டியலாகத் தந்தனர்.[16] பெண்களின் குடும்ப சஞ்சிகை (**Ladies Home Journal**) பதின் வயதினரை மதிப்பிட்டதில் அடைந்த முடிவுகள், கூட்டாளிகள், மக்கள் விரும்பும் நாவல், இழிவான, காமச் சிறு நூல்கள், சித்திரக் கதைகள், திரைப்படம் இவைகள் பெரும்பான்மையான இளையோர்களின் பால் பொருள் பற்றிய செய்தியினை அறிவிக்கும் ஏதுவாக அமைந்ததாகக் குறிப்பிடுகின்றன.[17]

## அட்டவணை 7—6

பால் பற்றிய செய்தி தரும் ஏதுக்கள் (*எலியாஸ் தந்தவை*).

| | சிறுவன் | சிறுமி | மொத்தம் |
|---|---|---|---|
| வீட்டிலுள்ள முதியோர்களும் பெற்றோர்களும் ... ... | 38·2 | 64·6 | 52·6 |
| கோயில், ஞாயிற்றுக் கிழமைப் பள்ளி, பாதிரியார் ... ... | 3·2 | 2·5 | 2·8 |
| அதிக வயதான நண்பர்கள், சஞ்சிகைகள், திரைப்படங்கள்... ... | 52·3 | 26·7 | 38·3 |
| வகுப்பு அல்லது மேற்பார்வையில் விவாதம் ... ... | 10·5 | 20·8 | 16·1 |
| புத்திகூறும் முதியோன் ... ... | 8·7 | 6·4 | 2·5 |

பாலைப் பற்றிய மனப்பான்மைகள் பால் பற்றிய செய்தியுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன. இம் மனப்பான்மைகளின் இயல்பு இளையோன் இச்செய்தியை அறிந்த வழியின்மீதும் ஏதுக்களின் மீதும் ஆதாரப்பட்டிருக்கும் என்றஒரு கருத்துக்குப் பல ஆய்வுகள் பக்கபலமாக உள்ளன. ஃப்ளீஜால் (**Fleege**) ஆய்வு செய்யப்பட்ட சிறுவர்கள், கூட்டாளிகள், வீதிகள் இவைகளிலிருந்து பால் பற்றிய

[16] L. J. Elias, 'High School Youth Look at Their Problems' Pullman, Washington: The State College of Washington, 1949.

[17] 'Where do Teen-agers Get Their Sex Education', Ladies Home Journal, 1949, Vol. 54, pp. 234-237.

அட்டவணை 7—7

பால் பற்றிச் சிறுவர் கொள்ளும் மனப்பான்மை (ஃப்ளீஜ் தந்தவை)

| என் மனத்தில் பால் பற்றிய சிந்தனை எழும்போதெல்லாம் நான் அதனைப் பொதுவாகக் கீழ்க்கண்டவாறு கருதுகின்றேன் : | சதவீதம் |
| --- | --- |
| என்னைத் திணறடிக்கும் ஏதோ ஒன்று ... ... | 31·0 |
| கடவுளுடன் நாம் பகிர்ந்து கொள்ளும் உயிர்ப்பிக்கும் சக்தி (Power of Creation) ... ... ... | 22·5 |
| புனிதமான ஒன்று ... ... ... | 21·2 |
| கீழான, கெட்ட பொருள் ... ... ... | 20·3 |
| எழுச்சியூட்டும் ஏது ... ... ... | 16·6 |
| வெறுப்படையச் செய்பவை ... ... ... | 12·5 |
| எப்பொழுதும் இன்பத்தைத் தரவல்ல வாய்ப்பு .. | 12·3 |
| மறைபொருள் கொண்டது ... ... ... | 12·0 |
| மகிழ்ச்சிக்குரியது ... ... ... | 11·5 |
| அச்சத்திற்குரியது ... ... ... | 6·1 |

செய்தியினை அறிந்தவர்களில் 53·5 சதவீதத்தினர், இவை கேடுகளை விளைவிக்கும் என்று எண்ணினர். ஆனால், நன்மை விளைவிக்கக்கூடிய ஏதுக்களிலிருந்து இச்செய்தியை அறிந்த சிறுவர்களில் 80 சதவீதத்தினர் இதன் விளைவுகள் நல்ல விளைவுகள் என்று எண்ணினர். 2,000 சிறுவர்கள் பால்பற்றிய மனப்பான்மைகள் பரந்த பரப்பினைக்கொண்டு இருப்பதாகக் கண்டுபிடிக்கப்பட்டது.[18] ஃப்ளீஜ் (Fleege) 2,000 கத்தோலிக்க உயர்நிலைப் பள்ளிச் சிறுவர்களின்மீது நடத்திய ஆய்வினையும் முன்னர் பெண் துறவி க்னோபர் (Knobber) 3,000 கத்தோலிக்க உயர்நிலைப் பள்ளிச் சிறுமிகளை வைத்து நடத்திய ஆய்வினையும் ஒத்திட்டால், காதல் அணைப்புப் (Petting) போன்ற செய்கைகளில் ஈடுபடுதலைச் சிறுமியர் கருதுவது போன்று முக்கியத்துவம் உள்ளவைகளாகச் சிறுவர்கள் கருதுவதில்லை என்று அறியலாம்.[19]

[18] Op. cit., p. 284.

[19] Sister M. Knobber, 'The Self Revelation of the Adolescent Girl', Milwaukee, Bruce Publishing Company, 1936.

## பள்ளி மனப்பான்மைகள்

இல்லம், விளையாட்டு மைதானம், பள்ளி, கோயில் மற்ற இடங்கள், இவ்விடங்களில் நிகழும் செயல்கள், அனுபவங்கள் ஆகியவற்றின் விளைவாக ஏற்பட்ட மனப்பான்மைகள் அக்கறைகள் ஆகியவற்றை இளையோன் வகுப்பறைக்கு வரும்பொழுது தன்னுடன் கொண்டு வருகின்றான். ஒரு குறிப்பிட்ட குழந்தையின் மனப்பான்மை, அக்கறை இவைகளின் வளர்ச்சிக்குக் காரணமாக இயங்கிய பல பண்பாட்டுச் சக்திகளை ஓர் ஆசிரியர் தன் கவனத்திற்குக் கொண்டு வராவிட்டால், அவனையும், அவன் சந்திக்கும் பிரச்சினைகளையும் புரிந்துகொள்ளவோ, பாராட்டவோ முடியாது.

### உடன் படிப்பவர்கள்மீது கொள்ளும் மனப்பான்மைகள்

உயர்நிலைப் பள்ளியில் ஜூனியர், சீனியர் வகுப்புகளில் படிக்கும் உயர்நிலைப் பள்ளி மாணவர்களால் ஏற்படுத்தப்பட்ட சில மனப்பான்மைகளில், உடன் படிப்பவர்களின் செயல்களைப் பற்றிய கருத்துகள் சில உள்ளன. ஒருவருக்கொருவர் தங்கள் தனித்த குணவியல்பு அல்லது திறன்மீது ஆதாரப்பட்ட பல தனித்த புங்குகள் கொள்ளும் வலுவுள்ள நோக்கம் இச்சிறுவர் சிறுமியரிடம் உள்ளது. கலிஃபோர்னியா ஆய்வின் முடிவுகள் இத்தொடர்பில் இளையோர்களிடம் ஏற்படும் சில தனித்த விருப்பு வெறுப்புகளைக் காட்டுகின்றன. உடன் படிப்பவர்கள்மீது கொள்ளும் மனப்பான்மைகளைப் பற்றிய கலிஃபோர்னியா வளர்ச்சி ஆய்வு பயன்படுத்திய கண்டுபிடிப்பு இனங்கள் அடிக்கடி கோடிட்டுச் சரிபார்க்கப்பட்டு அட்டவணை 7—8-ல் தரப்பட்டுள்ளன. இத்துடன் மூன்று வயது நிலைகளிலும் சிறுவர் சிறுமியர் ஒவ்வொரு இனத்தையும் கோடிட்டுச் சரிபார்த்த சதவீதமும் கொடுக்கப்பட்டுள்ளது.[20] முன்னிளையோர் பருவத்திலிருந்து இளையோர் பருவத்திற்கு அவர்கள் வளரும்பொழுதும், பின்னர் இளையோர் பருவத்திலிருந்து பின்னிளையோர் பருவத்திற்கு வளரும்பொழுதும், ஏற்படுகின்ற உட்குழுவினை அமைப்பதற்கான இளையோனின் மனப்பான்மையுடன் தொடர்பு கொண்ட இனங்களைக் கோடிட்டுச் சரிபார்த்த சிறுவர் சிறுமியரின் சதவீதம் தொடர்ச்சியாகக் குறை

[20] *இவ்வினங்களைப் பற்றி மேலும் அறிந்து கொள்ளவும், இளையோர் ஆண்டுகளில் தனியனின் வளர்ச்சியை ஆய்வு செய்வதற்குப் பயன்படுத்துகின்ற கண்டுபிடிப்பின் முறையை அறிந்துகொள்ளவும் கீழ்க்கண்ட நூலைப் பார்க்கவும்:*

**H. E. Jones, Development in Adolescence, New York: Appleton-Century-Crofts, Inc., 1948.**

## அட்டவணை 7—8

### இளையோர் பள்ளி வாழ்வில் வெறுக்கின்ற தன்மைகள் : உடன் படிப்போரிடம் கொள்ளும் மனப்பான்மைகள்

| தன்மை | H5 L6 | | H8 L9 | | H11 L12 | |
|---|---|---|---|---|---|---|
| | சிறுவர் | சிறுமியர் | சிறுவர் | சிறுமியர் | சிறுவர் | சிறுமியர் |
| தாங்களே விளையாட்டுகளையும் அல்லது வெளியில் செல்லுதலையும் அல்லது விருந்துகளைத் திட்டமிட்டு ஏற்பாடு செய்து அவற்றில் மற்றவர்கள் கலக்க அனுமதியளிக்காத உடன் படிப்போர்கள் ... ... | 45 | 32 | 20 | 25 | 15 | 7 |
| குழுக்கள் அல்லது சிறு குழுக்கள் அல்லது கூட்டங்கள் சில அவற்றிற்கு வெளியே உள்ளோருடன் எந்தவிதமான தொடர்பும் வைத்துக்கொள்ள விரும்பாதவர்கள் ... ... | 42 | 31 | 21 | 26 | 11 | 26 |
| சில மாணவர்கள் ஒரு குழுவினைத் தோற்றுவித்து அதில் மற்றவர்களைச் சேர்க்காமல் இருத்தல்... ... | 39 | 31 | 17 | 14 | 8 | 6 |
| தாங்கள் விரும்புகின்ற சில உடன்படிப்போர் பழகத் தெரியாதவர்களாய் இருத்தல் ... ... | 46 | 44 | 24 | 22 | 30 | 11 |
| உடன்படிப்போர் பழகத் தெரியாதவர்களாகவும் வெளித் தோற்றத்தில் பசப்புபவர்களாகவும் இருத்தல் ... | 39 | 44 | 27 | 37 | 30 | 21 |
| சில மாணவர்கள் மட்டுமே பள்ளியிலுள்ள எல்லாச் செய்கைகளுக்கும் முன்னிற்றல் ... ... | 61 | 49 | 38 | 43 | 27 | 46 |
| உடன்படிப்போர் குசுகுசுவென்று பேசிக்கொண்டு ஒருவனது புறத்தே வதந்தியைப் பரப்புதல் ... | 55 | 47 | 20 | 26 | 23 | 10 |
| பள்ளியிலுள்ள சில மாணவர்கள் மற்றவர்களை நையாண்டி செய்தல் ... | 46 | 42 | 18 | 25 | 10 | 15 |
| வகுப்பில் ஒருவர் ஒப்புவித்தால் அதனைக் கண்டு மற்றவர்கள் சிரித்தல்... | 39 | 35 | 35 | 35 | 23 | 21 |
| புனைபெயர்கள் இட்டு அழைத்தல்... | 18 | 11 | 8 | 8 | 0 | 0 |

கின்றது. உயர்ந்த ஐந்தாவது படிவக் குழுவினரும், கீழான ஆறுவது படிவக் குழுவினரும், உயர்ந்த பதினொன்றாவது கீழான பன்னிரண்டாவது படிவக் குழுவினரைக் காட்டிலும் குறிப்பிடும்படியான உயர்ந்த

சதவிதத்தினர் இனங்களைக் கோடிட்டுச் சரிபார்த்தனர். இவ்வினங்களுக்குத் துலங்கல்களாகக் குறிப்பிடும்படியான பால் மாறுதல்கள் காணப்படவில்லை.

உடன் படிக்கும் மாணவர்களின்மீது கொள்ளும் மனப்பான்மை இக்குழுவினைச் சார்ந்த அங்கத்தினர்கள் ஏற்றுக்கொள்வதிலும் அல்லது புறக்கணிப்பதிலும்கூடப் பிரதிபலிக்கின்றது. மாணவர்கள் பல பள்ளிக் குழுக்களைச் சார்ந்தவர்களாக இருப்பின், உடன்படிக்கும் குழுவினரால் அதிகமாக ஏற்கப்படுபவர்களாக இருப்பதற்கான அதிக வாய்ப்புகள் உள்ளன என்று பிரௌன் (Brown) குறிப்பிடுகின்றார்.[21] அதிகமாக ஏற்கப்பட்ட 200 மாணவர்களுக்கும், குறைவாக ஏற்கப்பட்ட 200 மாணவர்களுக்கும் ஒவ்வொருவருக்குமான 32 இனங்கள் சேர்க்கப்பட்டன. இம்மாணவர்கள் ஆண்டர்ஸன் (Anderson) உயர் நிலைப் பள்ளியைச் சார்ந்தவர்கள். அவர் ஆராய்ச்சியில் மிகக் குறைவாகச் சேர்க்கப்பட்ட குழுவில் 40 சதவீதம் எந்தப் பள்ளி அமைப்புகளிலும் பங்குகொள்ளாதவர்கள். சமூகப் பொருளாதாரக் கீழ் வகுப்பினைச் சேர்ந்த மாணவர்கள் சங்கச் செயல்களிலும், மற்றப் பெரும்பான்மையான வகுப்பிற்கப்பாற்பட்ட செயல்களிலும் மற்ற மாணவர்களைவிடக் குறைந்த அளவே செயல்படுகின்றனர். இவ்வாறு இம்மாணவர்கள் பல பள்ளி நிகழ்ச்சிகளில் ஒதுக்கப்படுகின்றனர். இவர்கள் அடிக்கடி குறைவானவற்றை ஏற்றுக்கொள்ளும் குழுவிலும் காணப்படுகின்றனர்.

**ஆசிரியரைப்பற்றிக் கொள்ளும் மனப்பான்மைகள்**

இளையோர்கள் ஆசிரியர்பற்றிக் கொள்ளும் மனப்பான்மை, பெரும்பாலும் குழுவையும், சில சமயங்களில் சமுதாய மனப்பான்மையையும் பிரதிபலிக்கின்றது. சில சிறு குழுக்கள் அல்லது உட்குழுக்களின் தலைவர்கள் ஓர் ஆசிரியர்மீது தனித்த மனப்பான்மையைக் கைக்கொண்டு அவருக்குத் தனிச் சிறப்பான ஒரு பங்கினைத் தருவார்கள் என்றால், இது மற்ற இளையோர்களால் பின்பற்றுவதற்குரிய மாதிரியாக அமையும். சில சமயங்களில் ஒரு சமுதாயம் ஓர் ஆசிரியரை ஓர் இசைவுள்ள அல்லது இசைவில்லா நிலையில் வைக்கலாம். இது இளையோர்களது செயல்களில் மிகுந்த செல்வாக்குக் கொண்டிருக்கும். இருப்பினும், இளையோர்கள் அவர்களது பெற்றோர்களைப்பற்றி எடுக்கும் முடிவுகள் நேர்மையாகவும், ஒளிவு மறைவு இன்றியும் இருக்கின்றன என்று கூறச் சான்றுள்ளது. இளையோர்கள் நன்றாக நடத்தப்பட்டால், நல்ல எதிர்வினையையே தருகின்றனர். சில

[21] D. Brown, 'Factors Affecting Social Acceptance of High School Students', The School Review, 1954, Vol. 42, pp. 151-156.

சமயங்களில் சமுதாயத்திலுள்ள முதன்மையான உறுப்பினர்கள் கொண்டுள்ளனவும் பழக்கத்தில் கைக்கொள்ளுவனவுமான செயல்களுக்கு மாருக இருக்கின்ற நம்பிக்கையோ, பழக்கமோ கொண்டுள்ள ஆசிரியர்மீது சமுதாயத்தின் உறுப்பினர்கள் வெறுப்பைக் காட்டலாம். ஆனல், இவ்வாசிரியர்கள்மீது மாணவர்கள் நல்ல மனப்பான்மையையே கொண்டிருக்கின்றனர்.

## அட்டவணை 7—9

### இளையோர் பள்ளி நிகழ்ச்சியிலுள்ள சில தன்மைகளை வெறுத்தல்

| தன்மை | H5 L6 | | 8 L9 | | H11 L12 | |
|---|---|---|---|---|---|---|
| | சிறுவர் | சிறுமியர் | சிறுவர் | சிறுமியர் | சிறுவர் | சிறுமியர் |
| தான் செய்யாத குற்றத்திற்காகத் தண்டனை அனுபவித்தல் ... ... | 69 | 58 | 69 | 56 | 59 | 36 |
| மாணவர்களிடத்து அக்கறை யில்லாத ஆசிரியர்கள் ... ... | 30 | 26 | 38 | 33 | 34 | 44 |
| வகுப்பில் சிலரைத் திக்குமுக்காடச் செய்வதில் நாட்டங்கொள்ளும் ஆசிரியர்கள் ... ... ... | 51 | 46 | 54 | 67 | 46 | 60 |
| மாணவர்கள் சிலரை வெறுப்பின் காரணமாகப் பின்னணியில் வைக்கும் ஆசிரியர்கள் ... ... | 49 | 39 | 68 | 65 | 58 | 54 |
| நேர்மையற்ற தேர்வுகள் .. | 35 | 25 | 65 | 51 | 62 | 49 |
| ஆசிரியர்களது விருப்புக்குகந்த மாணவர்கள் அதிகமாய் இருத்தல் ... | 61 | 42 | 49 | 39 | 38 | 22 |
| ஆசிரியர்கள் சிலர்மீது தப்பெண்ணம் கொண்டிருத்தல் ... ... | 30 | 28 | 52 | 51 | 51 | 36 |

கலிஃபோர்னியா வளர்ச்சி ஆய்வில், 71 சிறுவர்களுக்கும் 71 சிறுமியர்களுக்கும் 50 இனங்கள்கொண்ட 'பள்ளியில் நீ விரும்பாதவை' என்ற காரணிக் கண்டுபிடிப்பு தரப்பட்டது.[22] இக்காரணிக் கண்டு

[22] U. C. Inventory I: Social and Emotional Adjustment. *தனியனது திரட்சிப் பட்டியலைப்* (cumulative record) *பெறுவதற்*

பிடிப்பு ஆண்டுக்கு ஒருமுறை சிறுவர்களாலும், சிறுமியர்களாலும் ஏழாண்டு தொடர்ந்து பயன்படுத்தப்பட்டது. பள்ளிநிலையிலிருந்து இனங்கள் தரப்பட்டன. அவை பெரும்பாலும் ஆசிரியர், மாணவர் தொடர்புகள் பற்றியே இருந்தன. அவைகள் யாவும் அட்டவணை 7—9ல் தரப்பட்டுள்ளன. இவ்வினங்களைக் கோடிட்டுச் சரிபார்த்ததில் முதல் செயலிலும் (H5 L6), நான்காவது செயலிலும் (H8 L9), ஏழாவது செயலிலும் (H11 L12) உள்ள மாணவர்களின் எண்ணிக்கை, இச்சிறுவர் சிறுமிகளை முன்னிளையோர் அல்லது துவக்க இளையோர் ஆண்டுகள், அல்லது இளையோர் பருவம், அல்லது பின்னிளையோர் பருவம் ஆகியவற்றை ஒப்பிடுவதற்கு அடிப்படையாக அமைகின்றது. வளர்ச்சியின் இவ்வெல்லா நிலைகளிலும் சிறுவர், சிறுமியர், ஆசிரியர்கள் இசைவில்லாத பழக்கங்களைக் கைக்கொள்வதைப் பெரிதும் வெறுத்தனர். சிறுவர், சிறுமியரைக் காட்டிலும் இனங்களைச் சரிபார்த்ததில் அதிக ஆர்வம் காட்டினர். ஆனால், வகுப்புக்குமுன் ஆசிரியர் மாணவர்களை இக்கட்டான நிலையில் வைப்பதில் சிறுவர்கள், சிறுமியரைக் காட்டிலும் குறைவாகவே கோடிட்டனர்.

இவ்வாய்வுகள் பல இளையோர்கள் பள்ளியை வெறுப்பதாகக் கூறுகின்றன. அதிகாரம் 15ல் பள்ளியிலிருந்து நின்றுவிடுவோர்கள் பற்றிய செய்திகள் தரப்படும். இருப்பினும், பெரும்பான்மையான இளையோர்கள் தற்காலப் பள்ளி நிகழ்ச்சி அளிக்கின்ற பரந்த செயற்பாடுகள்மூலம் வெற்றியையும் திருப்தியையும் அடைவர். இவ்வாய்வுகள், இளையோர்களின் பள்ளியைப்பற்றிய இசைவில்லா மனப்பான்மைகள், இளையோர்களைப் பற்றிப் புரிந்துகொள்ளாத ஆசிரியர்களினால் தோன்றுவதாகக் கூறுகின்றன. இது பல இளையோர்களது அக்கறைகளையும், குறிக்கோள்களையும் கவனிக்காத பள்ளித் திட்டத்தினாலும் ஏற்படலாம். பள்ளித் திட்டம் சர்வாதிகாரத் தன்மையுடன் இருக்குமாயின், மாணவர்களுக்கு ஆன்மாவை வளர்ப்பதற்கும், நிலை நிறுத்துவதற்கும் வாய்ப்புகளை அளிக்காது.

## சமய மனப்பான்மைகளும் நம்பிக்கைகளும்

சமய ஈடுபாடுகள் மனிதனது இயல்பூக்க மனப்போக்குகளின் தொடர்பில் உள்ளன என்று இணைக்கப் பல முயற்சிகள் நடந்தன. உலகம் முழுதும் காணப்படுகின்ற சமய ஈடுபாடுகள் குழப்பமான உள்தூண்டல்களினால் வளர்ச்சியடைந்தவைகளாகும். தனியனது

---

குரிய திருத்தியமைக்கப்பட்ட வடிவம். இத்துடன் ஏழாண்டுக் காலத்தில் இனங்களின் குழுத் தரங்களும் அளிக்கப்பட்டுள்ளன, University of California.

வளர்ச்சியுற்ற அக்கறைகளினுலும், நம்பிக்கைகளினுலும், அச்சம், ஆதிக்கம், பால் போன்ற உள்தூண்டல்களினுலும் சமய ஈடுபாடுகள் உருவாகின்றன. இவ்வுள் தூண்டல்கள், குறிப்பாக அவற்றில் இயற்கையான உள்தூண்டல்கள் மனிதனது அறிவு, சமூகப் பழக்கங்களில் உந்துகளாக இணைந்துள்ளன.

இன்றைய ஒரு சராசரி இளையோனிடம் 'சமயம் என்ருல் என்ன?' எனும் பொதுவான கேள்வியைக் கேட்டால், அவன் வேடிக்கையான பல தொடர்பில்லாப் பதில்களைத் தருவான். ஈரிஞர்கள் ஒரே மாதிரியான வரையறையைத் தருவது அனேகமாகச் சாத்தியமாய் இருக்காது. இது விந்தையாக இருப்பினும், எதிர்பார்த்தற்குரியதேயாகும். சமயம் இயந்திரம்போன்று கற்றுக் கொள்ளக்கூடிய சாதாரண வரையறையைக் காட்டிலும் பரந்து செல்கின்றது. இது தலைமுறை தலைமுறையாகக் கைக்கொள்ளப் பட்டுவந்ததாகும். இருப்பினும், நாம் சில அடிப்படைக் கொள்கைகளையும், கருதுகோள்களையும் காண்கிரேம். இவற்றின் அடிப்படையில்தான் இளையோனுடைய சமய அனுபவம் தோன்றியுள்ளது.

இளையோரின் சமய வளர்ச்சியைப் பற்றி அவர்களது நாட்குறிப்புகள், கடிதங்கள், பாடல்கள் துணைகொண்டு ஆய்வுகளை நடத்தியுள்ளனர். இவை கேள்வி நிரல்களிலிருந்து பெற்ற முடிவுகளுடன் சேர்ந்து சமய ஆன்மாவின் வளர்ச்சிக்குரிய சிறப்பான பொருள்களைத் தந்துள்ளன.[23] குழந்தையின் சமயத்தைப் பற்றிய ஆய்விலிருந்து கற்றுக்கொள்வது மிகச் சிறிய அளவேயாகும். ஏனெனில், உணர்ந்து புரிந்துகொண்ட சமய அனுபவங்கள் பூப்படையும்வரை பொதுவாகத் தோன்றுவதில்லை. சமயச் சமுதாயமும் தனியானது மனப்போக்கும், வளர்ச்சி தொடர்ச்சியாக உள்ளதா அல்லது அழிவுள்ள தன்மைலிருந்து நிலைமாறுதலுக்குச் செல்லுகின்றதா என்று தீர்மானிக்கின்றன. பால், இயற்கை, காதல் ஆகிய ஏதுக்கள் சமய வளர்ச்சியினைப் பாதிக்கின்றன. ஆஞல், இவ்வளர்ச்சி முழுதும் இவைகளால் தீர்மானிக்கப்படுகின்றன என்று சொல்ல முடியாது. இளையோர்களது சமயத் தன்மையைப் பாதிப்பவைகளுக்கு இவ்வதிகாரத்தில் தனித்த முக்கியத்துவம் தரப்பட்டுள்ளது.

ஓர் ஆய்வில் 15லிருந்து 17 வயதுள்ள சிறுமியர் குழுவினர், தங்களுக்கு முதன் முதலில் எப்பொழுது, எங்கு, வழிபாட்டு

[23] *நாட் குறிப்புகள், கடிதங்கள் முதலியவற்றில் சமய வளர்ச்சி ஏற்பட்டதைப் பற்றிய ஆய்விற்குக் கீழ்க்கண்ட நூலைப் பார்க்கவும்:* **O. Kupky, The Religious Development of Adolescents (Tr. William Clark Trow). New York; Macmillan Company, 1928.**

உணர்ச்சி அனுபவம் ஏற்பட்டது என்று கேட்கப்பட்டனர்.[24] வழிபாட்டு உணர்ச்சியின் பொருளை அவர்களுக்கு இவ்வினுவினைத் தருவதற்கு முன்னர் தெளிவாக்கினர்கள். இக்காலத்தில் இம்முயற்சியானது மிகவும் வளர்ச்சியுற்றதனுல் சிறுமியர்கள் ஒளிவு மறைவின்றி இச்செய்திபற்றிக் கூறினர். இவ்வாருன அனுபவங்கள் ஒரு தனிப்பட்ட சமய நெறியையோ, திட்டத்தையோ சார்ந்திருக்கவேண்டும் என்பது அவசியமில்லை என்பதையும் உணர்ந்தனர். கேள்வி கேட்கப்பட்ட 148 சிறுமியர்களில் 22 பேர், 'வழிபாட்டு உணர்ச்சி' என்று கூறுவதற்குகந்தவாறு எந்த ஒரு மனவெழுச்சி அனுபவமும் ஏற்படவில்லை என்று கூறினர். 68 சிறுமியர்கள் தாங்கள் இயற்கையின் அழகையும் விந்தையையும் உணர்ந்தவுடன், திடீரென்று இவ்வாருன உணர்ச்சிகள் தோன்றியதாகக் குறிப்பிட்டனர். 31 சிறுமியர் மட்டும், அதாவது 21 சதவீதத்தினர் மட்டுமே தங்களுடைய முதல் வழிபாட்டுணர்வு அல்லது பயபக்தி, சில சமயச் சடங்குகளிலிருந்து தோன்றியதாகக் குறிப்பிட்டனர். சில சிறுமியர் தாங்கள் அறிந்த யாராவது ஒருவர்மீது வழிபாட்டு உணர்ச்சி கொண்டிருந்தனர். சில நிலைகளில் இது பரிதாப உணர்ச்சியினுல் ஏற்படுவதுமுண்டு. மற்றும் சிலர் சில வகையான இசையிலும், சில சிறந்த கலைப்படைப்புகளிடத்தும் வழிபாட்டுணர்ச்சி தோன்றுவதாகக் குறிப்பிட்டனர். இவ்வாய்வின் முடிவுகள் வழிபாட்டுணர்ச்சி உள்ளக் கிளர்ச்சி வாய்ந்தவைகளினுலும், அழகியவைகளினுலும், சிந்தனையையும் மனவெழுச்சியையும் கிளர்ச்சியடையச் செய்பவைகளினுலும் தோன்றுகின்றது என்று கூறுகின்றன.

## கருத்து மாற்றம் ஏற்படும் காலம்

குழந்தைப் பருவத்திலிருந்து இளையோர் பருவத்திற்கு நிலைமாறுகின்ற காலத்தில்; சில முக்கியமான சமய உட்கருத்துகளை நாம் காணலாம். குழந்தையின் பொது வளர்ச்சி, மிகுந்த சிக்கல் வாய்ந்த தன்மை கொண்டதாகும். இவ்வளர்ச்சி பல ஏதுக்களால் கட்டுப்படுத்தப்படுகின்றது. இவ்வேதுக்களில் ஒழுங்கற்ற சத்துகளைக் கொண்ட அடிப்படை மனப்போக்குகளின் வளர்ச்சி உள்ளது. மேலும், வெளிச்செல்லுகின்ற தன்மை கொண்ட, இடைவிடா வளர்ச்சியுறுகின்ற சக்தியும் ஏதுவாக இருக்கின்றது. இளையோர் பருவகாலம் பல உடல் மாறுதல்களினுல் பண்பு விரித்துரை செய்யப் பெறுகின்றது. இவை தனியனது உளவளர்ச்சியில் சிறப்பான செல்வாக்குகள் கொண்டுள்ளன. இப்பருவகாலம் குறிப்பாக வெளிப்படுத்துகின்ற தன்னுணர்வுத் தோற்றம் உள்ள காலம் என்று

[24] O. Kupky, op. cit.

முன்னரே விளக்கப்பட்டுள்ளது. அத்துடன் குறிப்பிடும்படியான சமூக உணர்வும் இப்பருவ காலத்தில் தோன்றுகின்றது. இச்சமூக உணர்வின் வளர்ச்சியில் குழந்தை ஒரு சமூகத் தனியனாகக் கருதப் படுகின்றானேயன்றி ஒரு தன்முனைப்புள்ள தனியனாகக் கருதப்படுவதில்லை. இக்காலத்தில் வாழ்க்கையின் பயன்களை உணர முற்படுகின்றான். உடல், மனச்சக்திகளை ஒழுங்குள்ளவைகளாக அமைத்துக்கொண்டு அவற்றின் உணர்வினையும் பெறுகின்றான். 'சாதாரண வளர்ச்சி நிலையில் குழந்தையின் சமயக் கல்வியும், பதிகின்றவையும் இச்சமயத்தில் தலைதூக்கி, அவர்களுக்கு முன்னர்த் தேவைப்பட்ட முக்கியத்துவத்திலும் உண்மையை உணர்வதிலும் பயன்படுகின்றன.'[25]

கருத்து மாற்றம் என்பது ஒருவரது வாழ்க்கையின் குறிக்கோள்களிலும், பின்பற்றும் வழிகளிலும் ஏற்படும் மாறுதல் ஆகும். கருத்து மாற்றப் பட்டறிவின் தன்மையானது வாழ்க்கை போன்றே பலதரப்பட்டதாய் அமையலாம். ஏனெனில், ஒருவனது வாழ்க்கையின் சத்துகள் பலவழிகளில் மீண்டும் ஒழுங்காக அமைக்கப்படலாம். கருத்து மாற்றத்தின் வகையானது நமது சமய நிறுவனங்கள், சமய மெய்யுணர்வு ஆகியவற்றின் தன்மையினால் பெரிதும் பாதிக்கப்படுகின்றது. திருப்புமையச் சமய மெய்யுணர்வு திருப்புமைய அனுபவங்களை உண்டாக்கலாம் அல்லது ஓர் எழுச்சியை ஊட்டலாம். இவ்வகையான கருத்து மாற்றம் அடிக்கடி சில விவிலிய மறைக்கோட்பாட்டுக்குரிய குழுக்களில் (evangelical groups) தோன்றுகின்றது. மற்றக் குழுக்கள் வேறு வழிகளை நாடுகின்றன. அதாவது திருக்கோயில் ஒருவருக்குச் செய்கின்ற தீக்கைச் சடங்கு (confirmation) போன்ற வழிகளினாலும் ஏற்படலாம். இவை யாவும் படிப்படியாகச் சமய எழுச்சியையும், வளர்ச்சியையும் உண்டாக்குகின்றன. கிளார்க் (Clark) என்பவரால் மூன்று வகையான சமயக் கருத்து மாற்றங்களைக் காணமுடிந்தது. (1) திட்டவட்டமான திருப்புமையம் (மனவெழுச்சிகளிலும் மனப்பான்மைகளிலும்). (2) மனவெழுச்சித் தூண்டல் (செறிவு குறைந்தது. எந்தத் தனித்த மாறுதலும் கொண்டில்லை அல்லது உருவமாற்றத்தை நினைவு கூர்கின்றது). (3) படிப்படியாக எழுச்சியுறுதல்.[26]

அடிப்படையையே மாற்றியமைக்கத்தக்க எழுச்சி அல்லது திருப்புமையம் 15லிருந்து 17 வயதிற்குள் ஏற்படுகின்றது. படிப்படி

[25] W. H. Selbie, The Psychology of Religion. London: Oxford University Press, 1926, p. 176.

[26] E. T. Clark, The Psychology of Religious Awakening. New York: Macmillan Company, 1929.

யாக எழுச்சியடைதல் இதைக் காட்டிலும் முன்னரே ஏற்பட்டு விடுகின்றது. திருப்புமையத்தினல் ஏற்படும் கருத்து மாற்றம் தடுக்கப்படும்பொழுது, அதன் தன்மை புரட்சிகரமானதாகவும் ஆகலாம். இன்றைய இளையோர்களிடத்து, விவிலிய மறைக்கோட்பாட்டுக் குழுக்களிலுங்கூடக் கருத்து மாற்றம் ஏற்படும் அளவு வலுக்கட்டாயமாகச் செயலாற்றும் திருப்புமையமே இராது. திருச்சபையின் படிப்பினைகளை ஏற்றுக்கொள்ளும் வகையிலும், வாழ்க்கை மெய்யுணர்வு வளர்ச்சியுறும் வகையிலும் அது சீரான முடிவுகளைக் கொண்டு இருக்கும். தனியன் எழுச்சியுறும்பொழுதும், மேலும் சிந்திக்கத் தூண்டும்பொழுதும், புதுப் பற்றுறுதிகள், குழுநலம், நடத்தையின் நல்ல பழக்கங்கள் ஆகியவைகளுக்கு முக்கியத்துவம் அளித்து செயற்படும்பொழுதும், சமூக, கல்வி, சமயவாழ்வில் ஆரோக்கியமான சமநிலை கொண்ட வளர்ச்சி ஏற்படும். பழைய பாவங்களைத் திரும்பக் கணக்கிடுவதற்கு எதிர்மறை முக்கியத்துவம் அளிக்கப்படும்பொழுதும், இயற்கையான பால், சமூக மனப்பான்மைகளில் கடுமையான குற்றங்காணும் பொழுதும் தோன்றுகின்ற அச்சங்கள், மனவெழுச்சி நிலையாமை, முறை தவறிய நிலை ஆகியவை முக்கியமான ஏதுக்களாக வளர்ச்சியடைகின்றன. இளையோர் பருவச் சிறுவர்களும் சிறுமியர்களும் சமய வேண்டுகோள்களை ஏற்றுக்கொள்பவர்களாக இருக்கின்றனர். கருத்து மாற்றத்தைப்பற்றிய புள்ளிவிவரங்களும் பல்வேறு சான்றுகளும், சிறுமியர் சமய வாழ்வில் உள்ள மனவெழுச்சி வேண்டுகோளினல் பெரிதும் பாதிக்கப்படுகின்றனர் என்று காட்டுகின்றன. ஆனல், சிறுவர்கள் நன்மதிப்பு நெறிகளாலும், அறஇசைவினலும் குழுச்செயல்களாலும் பெரிதும் கவரப்படுகின்றனர்.

## இளையோர் பருவத்தில் சமய நம்பிக்கைகளில் மாறுதல்

வளர்ச்சி என்பது படிப்படியாகவும், தொடர்ச்சியாகவும் ஏற்படுகின்ற ஒரு செயல்முறை என்று முன்னைய அதிகாரங்களில் விளக்கப்பட்டுள்ளன. புது அனுபவங்களும் முதிர்ச்சியும், பழைய கருதுகோள்களை விரிவாக்குதலையும் திருத்தியமைத்தலையும் செய்கின்றன. இவ்வாறு குழந்தை வளரும்பொழுது, அது கடவுள் பற்றிக் கொண்டுள்ள கருதுகோள் விரிவடைந்தும், ஓரளவு மாறுபட்ட பொருள் கொண்டும் உள்ளது. அவன் கடவுளிடம் கொள்ளக்கூடிய உறவு பற்றிய அறிவு, தன்மையில் பலவற்றைத் தன்னகத்தே கொண்டுள்ளதாக இருக்கின்றதேயன்றிப் பருப்பொருளான தன்மை கொண்டிருக்கவில்லை. அவனது 'மனிதனின் சகோதரத்துவம்' என்னும் கருதுகோள் வரம்பில் விரிவடைகின்றது. இவ்வாறு மாறுதலுற்ற கருதுகோள்கள் தனியனின் முழு வளர்ச்சியில் ஒரு பகுதியாகும். அவைகள் மனவெழுச்சி, சொந்த நடத்தை வகைகளில் மாறுதல்களை உண்டாக்குகின்றன. இந்நடத்தைகள் ஒருவரது வாழ்க்கை மெய்யுணர்வோடும்,

குணஇயல்புகளையும் ஒழுக்கத்தையும் அளவிடக்கூடிய தரங்களை உருவாக்குவதோடும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன.

குஹ்லென், ஆர்னல்ட் (Kuhlen and Arnold) நடத்திய இளையோர்களது சமய நம்பிக்கைப் பிரச்சினைகள் பற்றிய ஆய்வில், வெவ்வேறு சமய நம்பிக்கைகளைப் பற்றிய 52 கூற்றுகள் கொண்ட பட்டியல்கள் தயாரிக்கப்பட்டு, அவைபற்றிய கேள்வி நிரல் ஒன்று தரப்பட்டது.[27] ஆட்படுவோன் கேள்வி நிரலைப் பூர்த்திசெய்யும் பொழுது, ஒவ்வொரு கூற்றுக்கும் எதிராக அவன் நம்புகிருனு, நம்ப வில்லையா அல்லது அதைப்பற்றி ஆச்சரியப்பட்டானு என்று குறிப் பிடும்படி அறிவிக்கப்பட்டது. 547 (257 சிறுவர், 290 சிறுமியர்) 6, 9, 12ஆம் படிவ மாணவர்களிடமிருந்து துலங்கல்கள் பெற்றனர். இம் மூன்று குழுக்களைத் தேர்ந்தெடுக்கக் காரணம் என்னவெனில், ஆருவது குழுவினர் பெரும்பாலும் பூப்படைவதற்கு முன்னுள்ள பருவத்தில் இருந்தனர். (சிறுவர் குறிப்பாக இப்பருவத்தில் இருந் தனர். சிறுமியரில் பெரும்பாலோர் பூப்படைந்தவர்களாகவோ அல்லது பூப்படையும் காலத்திற்கு அண்மையிலோ இருந்தனர்.) 9ஆவது படிவக் குழுவினர் பூப்படைந்தவர்களாகவும், 12ஆவது படிவக் குழுவினர் பூப்படைந்த பின்னுள்ள பருவத்தினராகவும் இருந்தனர். மாணவர்களில் முக்கால் பங்கினர் பிராட்டஸ்டன்டுகளாகவும், 22·85 சதவிதத்தினர் கத்தோலிக்கர்களாகவும், சிலர் யூதநம்பிக்கை கொண்டிருப்பவர்களாகவும் அல்லது சிலர் மாதாகோவிலுக்குப் போகாதவர்களாகவும் இருந்தனர்.

ஒவ்வொரு குழுவும் எந்த அளவு கூற்றுகளுக்குக் கோடிட்டு, அக்கூற்றுகளுக்குத் தங்களது நம்பிக்கையின் தன்மைபற்றிக் குறிப்பிட்டுள்ளனர் என்று அறிந்து, அதன் உதவியில் இக்கண்டுபிடிப் புகள் பகுத்தாயப்பட்டன. அட்டவணை 7-10ல் பகுத்தாய்வு செய் ததன் முடிவுகள் தரப்பட்டுள்ளன. தரப்பட்டுள்ள முடிவுகளிலிருந்து சிறுவர்களும் சிறுமியரும் இளையோர் பருவத்தை அடைந்து, முதிர்ச்சிப் பருவத்துக்குச் செல்லுகையில், அவர்களது சமய நம்பிக்கைகளில் குறிப்பிடும்படியான மாறுதல்கள் இருப்பதாக நன்கு புலப்படுகின்றது. இவ்வாய்வில் உள்ள 52 கூற்றுகளில் 36பேரிடம் புள்ளியியல் முக்கியத்துவம் வாய்ந்த மாறுதல்கள் ஏற்பட்டன. வேதங்களைப்பற்றி அவர்கள் கொண்ட துலங்கல்களில் அவர்களது மனப்பான்மையின் மாறுதல் காணப்பட்டது. இதை 'விவிலிய நூலில் சொல்லப்பட்ட ஒவ்வொரு வார்த்தையும் உண்மையாகும்' எனும் கூற்றிற்குத்

[27] R. G. Kuhlen and M. Arnold, 'Age Differences in Religious Beliefs and Problems during Adolescence', Pedagogical Seminar and Journal of Genetic Psychology, 1944, Vol. 65, pp. 291-300.

தரப்பட்ட துலங்கல்களிலிருந்து அறிந்துகொள்ளலாம். 'விவிலிய நூலைச் சந்தேகிப்பது பாவச் செயலாகும்' என்ற கூற்றிற்குத் தரப்பட்ட துலங்கல்களிலிருந்தும் அறியலாம். பல கூற்றுகளுக்குத் தரப்பட்ட துலங்கல்கள், வெவ்வேறான சமய நம்பிக்கைகளையும், பழக்கங்களையும் அதிகமான சகிப்புத்தன்மையோடு வளரும் தனியன் முதிர்ச்சியடைகின்ற காலத்தில் காண்கிறான் என்பதற்குச் சான்றுகளாக உள.

## இளையோர் நம்பிக்கைகளுக்குத் தொடர்புள்ள ஏதுக்கள்

முன்னிளையோன் அவனுக்கு இல்லத்திலும், சமய ஆசிரியர்களிலும் போதிக்கப்பட்ட நம்பிக்கைகளை முழுமையாக ஏற்றுக் கொள்கிறான் என்று முன்னரே கூறியுள்ளோம். இருப்பினும், 12 அல்லது 13 வயதிலேயே ஓரளவு எதிர்ப்பும் சந்தேக மனப்பான்மையும் வெளிக்காட்டப்படுகின்றன என்பதை அட்டவணை 7—11 லிருந்து அறிந்துகொள்கிறோம். சில ஆய்வாளர்கள் சமய நம்பிக்கைகளில் தான் வளர்ச்சிக்குக் காரணமாயுள்ள ஏதுக்களைத் திர்மானிக்க முற்பட்டனர். மெக்லீன் (MacLean), உண்மை வயதுக்கும் ஒத்துக்கொள்ளப்பட்ட நம்பிக்கைகளுக்குமிடையே எதிர்மறை உடன்தொடர்பு இருப்பதாகக் கண்டார்.[28] ஏற்றுக்கொள்ளப்பட்ட நம்பிக்கைகளை எதிர்த்து நிற்றல் சிறுமியர்களுக்குச் சிறுவர்களைக் காட்டிலும் பின்னர் ஏற்படுகின்றது. சிறுமியர் அடிக்கடி இவ்வெதிர்த்து நிற்றலில் பங்கு கொள்வதோ அல்லது சேருவதோ இல்லை. இல்லத்தின் கல்வி, பொருளாதார நிலைகளுக்கும், திட்டவட்டமான சமய நம்பிக்கைகளுக்கும் உள்ள பொது உறவு எதிர்மறையாக உள்ளது. நுண்ணறிவிற்கும், நம்பிக்கைகளை ஒத்துக்கொள்வதற்கும் இடையே உள்ள பொது உறவும் எதிர்மறைத் தன்மையிலேயே உள்ளது.

யாவருக்கும் மேலான ஒரு பொருள் இருப்பதில் நம்பிக்கை எல்லாச் சமயங்களுக்கும் பொதுவான எண்ணமாக இருக்கின்றது. சான்றாக, அமெரிக்கர்கள் பொதுவாகச் சார்ந்துள்ள அல்லது பழக்கப்பட்ட சமயமான கிறிஸ்துவ சமயம், மனிதர்களின் மோட்ச உலகத் தந்தையான கடவுள்மீது நம்பிக்கை கொள்ளவேண்டும் எனப் போதிக்கின்றது. சமயத் தலைவர்கள், பல ஆண்டுகளாக, சில அற அல்லது ஒழுக்கப் பயன்மதிப்புகள் ஒருவரது கடவுள் பற்றிய கருதுகோளி

[28] A. H. MacLean, 'The Idea of God in Protestant Religious Education', Teachers College, Columbia University, Contributions to Education, No. 410, 1930. Also see Luella Cole: Psychology of Adolescence. New York: Farrar and Rinehart, 1936, pp. 171-173. *இச் செய்தி கொலம்பியா பல்கலைக்கழகத்தைச் சார்ந்த ஆசிரியர் கல்லூரி வெளியீட்டுக் கழகத்தின் அனுமதியுடன் பயன்படுத்தப்பட்டுள்ளது.*

## அட்டவணை 7—10

இளையோர் பருவத்தில் தோன்றுகின்ற சமய நம்பிக்கைகளிலுள்ள தனித்த மாற்றங்கள். 12, 15, 18 வயது குழந்தைகள், (1) நம்பிக்கை, (2) நம்பிக்கை இன்மை, (3) தெளிவாக அறிய இயலாது (ஆச்சரியம்) ஆகிய கூற்றுகளைக் கோடிட்டுச் சரிபார்த்த சதவீதத்தினர்.

| கூற்று | நம்பிக்கை | | | நம்பிக்கையின்மை | | | ஆச்சரியம் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 12 | 15 | 18 | 12 | 15 | 18 | 12 | 15 | 18 |
| கடவுள் என்பது நன்மைக்காக இயங்குகின்ற விளங்காத பொருளேயன்றி ஓர் உருவம் அன்று ... ... ... | 46 | 49 | 57 | 31 | 33 | 21 | 20 | 14 | 15 |
| கடவுள் என்பவர் 'நீ நன்றாக நடக்கின்றாயா' என்று கண்காணிப்பவரும் நீ தவறு இழைக்கும்போது தண்டிப்பவருமாவர் ... ... ... | 70 | 49 | 33 | 18 | 37 | 48 | 11 | 13 | 18 |
| கடவுள் உள்ளார் என்று அறிவேன் ... ... ... | 94 | 80 | 79 | 3 | 5 | 2 | 2 | 14 | 16 |
| கத்தோலிக்கர், யூதர், பிராட்டஸ்டன்டுகள் ஆகியோர் அனைவரும் நல்லவர்களே ... | 67 | 79 | 86 | 9 | 9 | 7 | 24 | 11 | 7 |
| மோட்சம் என்பது உண்டு ... | 72 | 45 | 33 | 15 | 27 | 32 | 13 | 27 | 34 |
| நரகம் எனும் இடத்திற்குத்தான் பூமியில் பாவம் செய்பவர்கள் தண்டனை பெற்றுச் செல்வர் | 70 | 49 | 35 | 16 | 21 | 30 | 13 | 27 | 34 |
| பூமியில் மோட்ச உலகம் உண்டு | 12 | 13 | 14 | 69 | 57 | 52 | 18 | 28 | 32 |
| கோயிலுக்குச் செல்பவர்கள் கோயிலுக்குச் செல்லாதவர்களைக் காட்டிலும் நல்லவர்கள் | 46 | 26 | 15 | 37 | 53 | 74 | 17 | 21 | 7 |
| இளைஞர்கள் அவர்கள் பெற்றோர்கள் சார்ந்துள்ள திருச்சபையையே சார்ந்திருக்க வேண்டும் ... ... ... | 77 | 56 | 48 | 18 | 33 | 46 | 10 | 11 | 11 |

அட்டவணை 7—10 (தொடர்ச்சி)

| கூற்று | நம்பிக்கை | | | நம்பிக்கையின்மை | | | ஆச்சரியம் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 12 | 15 | 18 | 12 | 15 | 18 | 12 | 15 | 18 |
| கோயிலுக்குப் போவதற்குரிய முதன்மையான காரணம் கடவுளை வணங்குவதற்காகத் தான் ... ... ... | 88 | 80 | 79 | 6 | 12 | 15 | 4 | 7 | 6 |
| கிறிஸ்தவனாக இருக்கக் கோயிலுக்குத் தவறாமல் செல்ல வேண்டும் என்பது அவசியமன்று ... ... ... | 42 | 62 | 67 | 38 | 23 | 24 | 18 | 15 | 8 |
| இறப்பிற்குப் பின்னர் நமது ஆன்மா மட்டுமே வாழ்கின்றது ... ... ... ... | 72 | 63 | 61 | 9 | 11 | 6 | 18 | 25 | 31 |
| நல்லவர்கள் பிரார்த்தனைகளை ஒழுங்காகச் செய்வார்கள் ... | 78 | 57 | 47 | 9 | 29 | 26 | 13 | 13 | 27 |
| பிரார்த்தனைகள் பலனளிக்கும் | 76 | 69 | 65 | 3 | 5 | 8 | 21 | 25 | 27 |
| தொல்லைகளினின்று விடுதலை பெற பிரார்த்தனைகள் ஏதுக்களாகும் ... ... ... | 74 | 80 | 83 | 11 | 8 | 7 | 15 | 10 | 9 |
| பிரார்த்தனைகள் தவறு செய்ததைச் சரி செய்வதற்காகவே இருக்கின்றன ... ... | 47 | 24 | 21 | 35 | 58 | 69 | 18 | 17 | 9 |
| விவிலிய நூலிலுள்ள ஒவ்வொரு சொல்லும் உண்மையானது | 79 | 51 | 34 | 6 | 16 | 23 | 15 | 31 | 43 |
| விவிலிய நூலைச் சந்தேகிப்பது தவறாகும் ... ... ... | 62 | 42 | 27 | 18 | 31 | 44 | 20 | 26 | 38 |

லிருந்து பெறப்படுகின்றன என்று கருதினர். கீழ்க்கண்டவாறு இக் கேள்வி எழுகின்றது: 'ஒருவருடைய கடவுள்பற்றிய கருதுகோளுக்கும் ஒருவருடைய நடத்தைக்குமிடையே என்ன உறவு உள்ளது? இப் பிரச்சினையைப்பற்றி அறிய விரும்புவதற்காக மத்தயாஸ் (Mathias) கடவுள் எண்ணம் பற்றிய சோதனையைத் தயாரித்தார். இச்சோதனையின் நோக்கம் என்னவென்று மத்தயாஸ் குறிப்பிடுகையில், (1) தனியனது கடவுள்பற்றிய சமூக மனப்பான்மைகளைக் கண்டறிதலும், (2) ஒருவனது, உலகத்தைப்பற்றியதும் அவனது தெய்வீக மறை உண்மையைப்பற்றியதுமான நமக்குக் கிடைக்கக்கூடிய விவரங்களிலிருந்து அவனுடைய கடவுளைப்பற்றிய கொள்கையினைக் குறிப்பிட்டு அறியவும்' என்று கூறுகின்றார்.[29]

[29] W. D. Mathias, 'Ideas of God and Conduct', Teachers College, Columbia University, Contributions to Education, No. 874, 1943, p. 43.

## அட்டவணை 7—11

**உண்மை எனும் கூற்றைக் கோடிட்ட 13 வயது குழந்தைகளது சதவீதம் (மெக்லீயன் அளித்தது).**

| | சதவீதம் |
|---|---|
| 1. சமயம் கடவுளது விதிகளுக்குக் கீழ்ப்படிதலில் உள்ளது | 70 |
| 2. கடவுள் என்பது கற்பனையே ... ... ... | 21 |
| 3. கடவுளைப்பற்றி நாம் கனவுகளின் மூலமாகவும் கற்பனையின் மூலமாகவுமே கற்கிறோம் ... ... | 28 |
| 4. கடவுள் நம்மையும், மிருகங்களையும், நட்சத்திரங்களையும், பூக்களையும், உலகிலுள்ள அனைத்தையும் உண்டாக்கினார் | 82 |
| 5. நாம் கூறுவது அனைத்தையும், செய்வதனைத்தையும் அறிவார் ... ... ... ... | 78 |
| 6. நாம் செய்வதைப்பற்றிக் கவலையும் அக்கறையும் கொள்கிறார் ... ... ... ... | 89 |
| 7. நமக்கு நடப்பதைப் பற்றிக் கடவுள் காரணம் கொண்டிருக்கிறார்; நாம் அதைப் புரிந்துகொள்ளாமல் இருக்கலாம் ... ... ... ... | 92 |
| 8. கடவுள், அவரை நம்புவோருக்குத் தீங்கு வராது பாதுகாக்கின்றார் ... ... ... ... | 70 |
| 9. நாம் நமது பாவங்களுக்காக வருந்துகின்றோமா இல்லையா எனக் கவலையுறுகின்றார் ... ... ... | 82 |
| 10. நமது பிரார்த்தனைகளைக் கேட்டுப் பலன்களை அளிக்கின்றார் | 85 |
| 11. கடவுள் உலகில் இருக்கின்ற விந்தையை நினைத்துப் பிரார்த்தனை செய்வதே உண்மையான பிரார்த்தனையாகும் ... ... ... ... | 66 |
| 12. பிரார்த்தனைகள்மூலம் விரும்பியனவற்றைப் பெறலாம் | 31 |
| 13. உடல் இறந்த பின்பு ஆன்மா வாழ்கின்றது ... | 71 |

பதினாறு ஏதுக்களின் இடையேயுள்ள உடன்தொடர்புகள் பெறப்பட்டன. பின்னணி ஏதுக்கள் என்று கூறப்படும் இவைதான் கடவுள் பற்றிய எண்ணங்களின் அளவீடுகளைச் சேர்க்கின்றன. உடன்தொடர்புகள் குறைவாக இருந்தாலும் நேர்நிலையான தன்மை கொண்டிருந்தன. உடன்தொடர்புகளில் அதிக அளவுகளைப் பெற்

றவை உயர்ந்த ஊக்கிகள் (·28), தானியங்குபவை (·25), பள்ளித் துறை (·21) ஆகியவை. ஆதலின் சில பின்னணி ஏதுக்களும் சொந்த ஏதுக்களும் கடவுளைப்பற்றி உயர்ந்த கருதுகோள்கள் ஏற்படக் காரண மாகின்றன. இருப்பினும் ஒன்று மற்றொன்றுக்குக் காரணம் என்று பொருள் கொள்ளக்கூடாது. ஆனல், உண்மையில் 'மாணவர்களில் கடவுள்பற்றிய இசைவான கருதுகோள்கள் கொண்டிருப்பவர்கள், கோயில் இணைப்புக் குடும்பங்களிலிருந்து வருபவர்களாகவும், நல்ல பண்பாட்டுப் பின்னணியுள்ள குடும்பங்களிலிருந்து வருபவர்களாகவும், உயர்ந்த நுண்ணறிவு, அற அறிவு, சமூக மனப்பான்மைகள் கொண் டவர்களாகவும் காணப்படுகின்றனர்.'[30] இம்முடிவுகள் ஒழுக்கத் திலும், சுதந்திரமான செயல்களிலும், கோயில் சங்கம் ஆகியவற்றில் பங்கு பெறுதலிலும் உயர்ந்த ஊக்கிகள் கொண்டிருப்பவர்கள், கடவுள் பற்றிய இசைவான கருதுகோள்கள் கொண்டிருப்பார்கள் என்ற கருத்தினை ஆதரிக்கின்றன.

### இளையோர் ஐயங்கள்

பல இளையோர்களது துவக்கப் பயிற்சி, கோட்பாட்டுறுதிமிக்க தன்மையாக இருக்குமாயின், திட்டமாயில்லாத பிரச்சினைகளிலும் தன்மையில் தனித்தவையாக இல்லாத பிரச்சினைகளிலும் ஐயமுடை யவர்களாக இருப்பார்கள். வளர்ச்சி அடையும்பொழுது, முதிர்ச்சி யடையும் இளைஞன், தனது அறிவின் பரப்பை அதிகப்படுத்திக் கொள்வதால் சிந்தனையில் சிறப்பான பழக்கங்களைக் கொள்கிறான். வாழ்க்கையின் உண்மைகளுடன் இளைஞன் அதிகமாகத் தொடர்பு கொள்வதனல் மன, அறச் சுதந்திரத்தை ஏற்றுக்கொள்கிறான். அவன் தனது சொந்த முயற்சிக்கு உந்தப்பட்டு அவனுக்காக அவனே முடிவுகள் கொள்ளத் தேவையும் ஏற்படுகின்றது. ஆதலின், அவன் சிந்திக்கும் பழக்கங்களை ஏற்படுத்திக் கொள்கின்றான். உண்மையின் அடிப்படையில் பகுத்தாய்வு செய்யவும் தலைப்படுகின்றான். அவன், முன்னர் அவனுக்குப் போதிக்கப்பட்ட பொருள்களில் பலவற்றைத் திருனய்வு செய்யாமல் ஒத்துக்கொண்டவை, அவனது பள்ளியில் தரப்படுகின்ற உண்மைகளுடனே அல்லது அவனது தினசரி வாசிப்பு களுடனே ஒத்தமைவதில்லை. துவக்க நம்பிக்கை அகழிபோன்று ஆழ்ந் திருப்பினும், இவ்வாறு மிகவும் கடுமையான பின்னடைவு பெறுகின்றது. குழந்தை அவனது கேள்விகளுக்குரிய பல விடைகள் தெளிவான உண்மைகளின் அடிப்படையில் எழவில்லை என்று கற்றுக்கொள்ளும் பொழுது இதனை உணர்கின்றான்.

[30] W. D. Mathias *அவர்களின் முன்னர்க் குறிப்பிட்ட நூலில் இருந்து எடுக்கப்பட்டது, பக்கம் 75.*

இவ்வாறான திருநய்வு செய்யும் மனப்பான்மை இவ்வாய்வு முழுவதிலும் கூறியதுபோன்று, கருத்துகள் வளர்ச்சியடைவதற்கு ஏற்றவாறு திருநய்வு மனப்பான்மை வளர்ச்சியடைகின்றது. குழந்தையின் முதல் உற்றுநோக்கல்களான, தான் இதுகாறும் கற்றவை வாழ்க்கையில் காணப்படும் உண்மைகளுக்கு முழுதும் ஒத்திருப்பதில்லை என்பதிலிருந்து, திறநய்வு மனப்பான்மையின் துவக்கம் ஏற்படுகின்றது. புதியனவும் பரந்த அனுபவங்களும் பெரும்பாலும் துவக்க போதனைகளிலுள்ள நம்பிக்கைகளை அழிக்கின்றன. இந்தத் துவக்க போதனையை அழித்தல் தொடர்ந்து நடைபெறுகின்றது. சில அறிவியல் உண்மைகள் துவக்கக் கற்றலுடன் ஒத்தமையாதபொழுது இந்த அழிக்கும் வேலை நடைபெறுகின்றது. இவ்வாறு ஐயத்தின் வளர்ச்சி தொடர்ந்து ஏற்பட்டு, ஆட்படுவோனின் வாழ்க்கையில், சக்திவாய்ந்த கருத்தைத் தோற்றுவிக்கும் செல்வாக்குள்ளவர்கள் ஏற்றுக்கொள்கின்ற மனப்பான்மையிலும் நடத்தையிலும் அழிக்கும்வேலை ஆதரவு பெறுகின்றது.

நம்பிக்கைகளிலும் மனப்பான்மைகளிலும் வழக்கத்திற்குமாறான தன்மைகள் வாழ்க்கையின் இப்பருவத்தில் காணப்படுகின்றன. இளையோன் சில சமூகக் காரணங்களினால் கோயிலுக்குச் செல்லாமல் இருக்க விரும்புவான். ஆதலின், அவன் கோயிலின் பயன்மதிப்பை ஐயமுறத்துவங்கி அதன் தலைவர்களின் நேர்மையிலும் ஐயமுறுவான். இவ்வாறு ஐயமுறல் அவனிடத்துத் தோன்றியுள்ள ஆசையைத் திருப்தி செய்யும் விளைவாக இருக்கலாம்; அல்லது ஏற்கெனவே இருக்கும் தேவையை உண்மையாக்கலாம். இளையோர் பருவத்தில் ஐயங்கள் அதிகமாகத் தோன்றுவதற்குப் பலபொருள்கள் ஒரு நிகழ்ச்சியில் ஒன்றுசேர்ந்து இணைவது அதற்குக் காரணமாகலாம்.

ஐயங்களை எவ்வாறு நடத்த வேண்டும்? முதலில் வாழ்க்கையின் சமயப் பகுதிக்குமட்டுமே இது சார்ந்துள்ளதன்று என்று உணர வேண்டும். யாரையும் ஐயுறுதல் உலகெங்கும் பரவியுள்ள ஒரு குணஇயல்பு என்று நம்புமாறு தவறான முடிவுக்குக் கொண்டுசெல்லலாகாது. மேலும், இது ஒரு இயல்பூக்கமான நடத்தை என்றும் கொள்ளலாகாது. இளையோன் ஒன்றைச் சார்ந்திருக்க ஒரு மூட நம்பிக்கையைக் கைக்கொள்ள வேண்டிய அவசியமில்லை. அவனை அவன் உணருவதுதான் முக்கியத் தேவையாகின்றது. அவனது சிந்தனையை உலகத் திட்டத்துடனும் வாழ்க்கையின் பொதுத்திட்டத்துடனும் இணைக்கவேண்டும். பரந்த கடலில் புயல் தோன்றும்பொழுது நங்கூரமிட்டு நிற்றல் என்ற உவமையை இப்பருவத்திலுள்ள இளையோனுக்குத் தரும் பொதுவான நடத்தைவகைக்குக் கூறல் பொருத்தமாகும். முதலாவதாக, இளையோனுக்குத் தேவையான உதவி என்னவெனில், அவனது அறிவியல் நேர்மையை உணர

உதவி செய்வதேயாகும். இருப்பினும், தனியனது அக்கறைகள், தேவைகள் ஆகியவற்றிற்கு ஒத்தமையும் விதத்தில் உண்மைகளையும் அறிவினையும் சேகரித்தல் வேண்டும்.

## இளையோர்களைப் பாதிக்கும் சமூகச் சக்திகள்

### இல்லமும் மனப்பான்மைகளும்

ஒவ்வொரு தலைமுறையின் இளைஞர்களும் அவர்களது பெற்றோர்களின் எண்ணங்களுக்கு எதிராகவும் அவர்களது பெற்றோர்களின் தலைமுறையின் எண்ணங்களுக்கு எதிராகவும் கிளர்ச்சி செய்கின்றனர் என்று பரவலாக ஒரு கருத்து நம்பப்பெறுகின்றது. இவ்வாறான கற்பிதம்பற்றிக் குறிப்புகள் சேகரிக்க ஓர் ஆய்வு ரெம்மர்ஸ், வெல்ட்மேன் (Remmers and Weltman) என்பவர்களால் நடத்தப் பட்டது.[31] இவ்வாய்வில் குறிப்புகளைச் சேர்க்கப் பர்டு இளைஞர் கருத்தறியும் முறை (Purdue Opinion Poll for Young People) பயன்படுத்தப்பட்டது. இவ்வாய்வில், இந்தியானு, இல்லியனுய்ஸ் (Indiana and Illionois) ஆகிய மாநிலங்களில் உள்ள பத்துப் பள்ளிச் சமுதாயங்களின் பிரதிநிதித்துவ மாதிரியாக 88 ஆண்மக்களையும், 119 பெண்மக்களையும், 207 தந்தையரையும், 207 தாயார்களையும் 89 ஆசிரியர்களையும் எடுத்துக்கொண்டனர். பெற்றோர்களுக்கும் குழந்தைகளுக்கும், ஆண்மக்களுக்கும் பெண்மக்களுக்கும், ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் இடையேயுள்ள துலங்கல்களின் ஒப்புமைகளும் உடன் தொடர்புகளும் சேகரிக்கப்பட்டன. இவ்வொப்புமைகள் பெற்றோர்களுக்கும் குழந்தைகளுக்குமிடையே மனப்பான்மைகள் உயர்ந்த அளவு ஒத்திருப்பதாகக் காட்டின. மனப்பான்மை கொள்ளும் பொருளின் பொதுத்தன்மையைப் பொறுத்து இவ்வுறவின் செறிவு மாறுதலுக்குட்பட்டது. அட்டவணை 7—12 ல் தரப்பட்டுள்ள உடன் தொடர்புகள் தாயாருக்கும் தந்தைக்கும், பெற்றோர்களுக்கும் குழந்தைகளுக்கும் இடையேயுள்ள நெருங்கிய உறவைக் காட்டுகின்றன. இதுபோன்றே, மகளுக்கும் மகனுக்கும் இடையேயுள்ள மனப்பான்மைகள் பெற்றோர்களுக்கும் குழந்தைகளுக்குமிடையேயுள்ள மனப்பான்மைகளைக் காட்டிலும் நெருங்கிய அளவில் ஒத்திருக்கின்றது. இது ஒரு தலைமுறையிலுள்ளோர் அவர்களுக்குள் ஒத்திருப்பதைவிட வயதில் ஒருதலைமுறை மாறுபாடு உள்ளோர் அதிகமாக நெருங்கிய அளவில் ஒத்திருக்கும் மனப்பான்மையைக் காட்டுகின்றது. இருப்பினும், பெற்றோர்களது மனப்பான்மைக்கும் இளையோர் மனப்

[31] H. H. Remmers and N. Weltman, 'Attitude Inter-Relationship of youth, Their Parents and Teachers', Journal of Social Psychology, 1947, Vol. 26, pp. 61-67.

பான்மைக்கும் இடையேயுள்ள நெருங்கிய உடன் தொடர்புகளும், ஆசிரியர்களது மனப்பான்மைக்கும் மாணவர்களது மனப்பான்மைக்கும் இடையேயுள்ள குறைவான உடன் தொடர்புகளும், இல்லச் செல்வாக்குகள் இளையோர் சிறுவர் சிறுமியரது மனப்பான்மைகளைப் பாதிக்கும் முக்கிய ஏதுக்களாக இருக்கின்றன என்று காட்டுகின்றது. கொலம்பியா பல்கலைக்கழக ஆசிரியர் கல்லூரியில் நடந்த ஒரு முழுமையான ஆய்வு, மனப்பான்மைகள் உருவாவதில் இல்லத்தின் முக்கியத்துவத்தை உணர்த்துகின்றது.[32] 6,000 பதினேருவது படிவ மாணவர்களது அரசியல் விருப்பங்கள், மனப்பான்மைகள்பற்றிக் குடிமைக் கல்வித்திட்டத்தின் பகுதியாக ஆய்வு செய்யப்பெற்றது. இவ்வாய்வின் முடிவுகள் முன்னர் நடந்த ஆய்வுகளின் முடிவுகளை ஒத்திருந்தன. இவைகள் யாவும் மாணவர்கள் மனப்பான்மைக்கும் பெற்றோர் மனப்பான்மைக்கும் இடையே நெருங்கிய உறவு இருப்பதாகக் கூறின. இளையோர்களில் 83 சதவீதத்தினர் அவர்களது தந்தையர்களது அரசியல் கட்சிக்கே முன்னுரிமை அளித்தனர். கிராமியப் பகுதிகளில் இந்த சதவீதம் இன்னும் அதிகமாக இருக்கும். மரபுவழி அமைந்த பள்ளித்திட்டம்கொண்ட பகுதிகளில் சுய சிந்தனையை வளர்க்கின்ற வகையில் நிலைமைகள் இல்லையாதலின், இவர்களும் பெற்றோர்களது அரசியல் கட்சியையே விரும்புகின்றனர்.

### வகுப்பு அமைப்பின் முக்கியத்துவம்

அதிகாரம் 5-ல், வகுப்பு அந்தஸ்து, இளையோர்களைச் சமூக இயல்பினராக ஆக்குவதன் தொடர்பில் மிகவும் முக்கியம் வாய்ந்தது எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும், இளையோர்களின் அறநம்பிக்கைகள்பற்றி ஹேவிகர்ஸ்ட், டபா (Havighurst and Taba) ஆகியோரால் பிரேயரி நகரத்தில் (Prairie) நடத்தப்பட்ட ஆய்வில் இதனை அறியலாம்.[33] அவர்கள், வகுப்பு அந்தஸ்து இளையோர்களின் நேர்மை யுணர்வையும் பொறுப்புணர்வையும் பாதிப்பதாய்க் கூறுகின்றனர். ஆனால், வகுப்பு அந்தஸ்து அவர்களின் பற்றுறுதி, அறத்துணிவு, நட்பு ஆகியவற்றைக் குறைந்த அளவே பாதிக்கின்றது எனக் குறிப்பிடுகின்றனர். இளையோர் பருவத்தில் இளையோனது பழக்கங்களிலும், சமூகச் செயல்களிலும், சார்பு எண்ணங்களிலும், ஒப்பாரிடம் கொள்ளும் மனப்பான்மைகளிலும் அவனது வகுப்புப் பங்கினைக் கற்

[32] N. Young, F. Mayans, Jr., and B. R. Corman, 'The Political Preferences of Adolescents,' Teachers College Record, 1952-53, Vol. 54, pp. 340-344.

[33] R. J. Havighurst and H. Taba, Adolescent Character and Personality, New York: John Wiley and Sons, 1949, p. 95.

## அட்டவணை 7—12

பர்டு கருத்துத் தேர்விலுள்ள (Purdue Opinion Poll) பதினுறு இனங்களுக்குத் தரப்பட்ட ஒத்துக்கொண்ட துலங்கல் விகிதங்களின் உடன் தொடர்புகள். (ரெம்மெர்ஸ், வெல்ட்மேன் அளித்தது.)

| | இடைத் தொடர்புகள் |
|---|---|
| பெற்ரேர்களும் குழந்தைகளும் ... ... | ·86 ± ·01 |
| தாய்மார்களும் தந்தையர்களும் ... ... | ·96 ± ·03 |
| பெண்மக்களும் ஆண்மக்களும் ... ... | ·98 ± ·05 |
| பெண்மக்களும் தாயார்களும் ... ... | ·87 ± ·05 |
| பெண்மக்களும் தந்தையர்களும் ... ... | ·80 ± ·07 |
| ஆண்மக்களும் தாயார்களும் ... ... | ·80 ± ·07 |
| ஆண்மக்களும் தந்தையர்களும் ... ... | ·82 ± ·06 |
| ஆசிரியர்களும் மாணவர்களும் ... ... | ·65 ± ·11 |
| ஆசிரியர்களும் பெற்ரேர்களும் ... ... | ·65 ± ·11 |
| 9, 10ஆவது படிவங்களிலுள்ள குழந்தைகளும் பெற்ரேர்களும் ... ... ... | ·90 ± ·04 |
| 11, 12ஆவது படிவங்களிலுள்ள குழந்தைகளும் பெற்ரேர்களும் ... ... ... | ·79 ± ·07 |
| 9, 10ஆவது படிவங்களிலுள்ள குழந்தைகளும், 11, 12ஆவது படிவங்களிலுள்ள குழந்தைகளும். | ·96 ± ·01 |

றறிகின்ருன். பள்ளியில் கீழ்வகுப்பு அந்தஸ்துடைய குழந்தை, அவனது வயது நிலையிலுள்ளவர்கள் அவனை முழுதும் ஏற்றுக்கொள்வதில்லை என்ற உண்மையை அறிகின்ருன். அவ்வாறே ஏற்றுக் கொண்டாலும் அவனுக்குப் பல்வேறு நடவடிக்கைகளில் சிறு பங்கே அளிக்கப்படுகின்றது என்பதையும் உணர்கின்ருன். அவன் மற்றவர்களால் ஏற்றுக்கொள்ளப்படுவதற்கு நடுத்தர வகுப்பின் பண்பாட்டையும், மனப்பான்மைகளையும், பயன் மதிப்புகளையும் ஏற்றுக்கொள்ள வேண்டும். அப்பண்பாடு பெருக உயர்நிலைப்பள்ளி உதவி செய்கின்றது.

பர்டு கருத்துக்குழுப் பட்டியலின் (Purdue Opinion Panel) முடிவுகள்படி தள்ளிவைக்கப்பட்ட மனநிறைவுள்ள செயல்களில் குறிப்பிடும்படியான வகுப்பு மாறுதல்கள் உள்ளன. மாணவர்களிடம்

சுமார் 2,000 டாலர்கள் பரிசாகப் பெற்றால் என்ன செய்வீர்கள் என்னும் கேள்விக்குப் பதிலாக, உயர்ந்த தொழில் வகுப்பைச் சார்ந்த (குழு I) 28 சதவீதத்தினரும் கீழான தொழிற்குழுவைச் சார்ந்த (குழு IV) 84 சதவீதத்தினரும் உடனடியாக அதைச் செலவிடுவேன் என்று கூறினர். நடுத்தர வகுப்பு மாணவர்கள் நண்பர்களைத் தேர்ந்தெடுப்பதில் 'தெரிந்தெடுக்கும் உணர்வு' உடையவர்களாக இருந்தனர். அவர்கள் சங்கங்களிலும் அமைப்புகளிலும் சேர்வதற்கு மிகுந்த அக்கறை காட்டினர். பள்ளியில் சிறப்புப் பெறவும் நல்ல தரங்களை அடையவும் பெரிதும் விரும்பினர். பழக்கங்களிலும் நடத்தையிலும் உள்ள மனப்பான்மைகளில் சில சமூக வகுப்பு மாறுதல்கள் இருப்பதைக் கண்டனர். நடுத்தர வகுப்பு மாணவர்களில் பலர், குடிப்பழக்கம் இருப்பவர்களையோ, உரக்கப் பேசுபவர்களையோ, கெட்ட நடத்தைப் பழக்கங்கள் கொண்டவரையோ, அல்லது மற்றவர் கருத்துகளுக்கு மதிப்புக் கொடுக்காதவர்களையோ விரும்புவதில்லை.

மேலும், பர்டு கருத்துக்குழுப் பட்டியலின் முடிவுகள், கீழான தொழில், அந்தஸ்து இல்லங்களினின்று வரும் இளையோர்கள் உயர்ந்த அந்தஸ்தினரைக் காட்டிலும் குறைவான விழைவு நிலையையே கொண்டுள்ளனர் என்று பொதுவாக உள்ள கருத்தினை ஒத்துக்கொண்டன. உயர்நிலைப்பள்ளி மாணவர்களிடம் 12 தொழில் வகைப் பட்டியல் தரப்பட்டது. உயர்ந்த ஊதிய அந்தஸ்தில் இருந்து குறைவான ஊதிய அந்தஸ்துவரை அவை பல்வேறு நிலைகளைக் கொண்டிருந்தன. மாணவர்களை அவர்களது சொந்த வாழ்க்கைத் தொழிலாகக் கொள்வதற்குப் 'போதிய அளவு பொருந்தி இல்லாத' தொழில்களைக் கோடிடும்படி அறிவிக்கப்பட்டது. இது அவர்களது விழைவின் நிலையைக் கணக்கிடுவதற்கு அடிப்படையாக அமைந்தது. முடிவுகள், உயர்ந்த விழைவு எண்ணிக்கையைப் பெற்றவர்கள் உயர்ந்த வகுப்பு அந்தஸ்தினராக இருந்தனர் எனக் காட்டியது. மேலும், மாணவர்களது வியாபாரம், தொழிலாளர் பற்றிய மனப்பான்மைகள், அவர்களது வகுப்பு அந்தஸ்தைப் பிரதிபலிப்பவையாக அமைந்தன. கீழான தொழிற் பின்னணியிலிருந்து வரும் மாணவர்களில் பலர், அமெரிக்கத் தொழிற்சங்கக் கருத்துகளுக்கு இசைவாக இருந்தனர். அமெரிக்கத் தொழிற்சங்கக் கருத்தான வியாபாரம் என்பது மக்கள் நலத்தைப் பணயம் வைத்து இலாபம் சம்பாதிக்கும் துறை என்ற கருத்தையே நம்பினர்.

பர்டு கருத்துக்குழுப் பட்டியலின் முடிவுகளை மேலும் ஆய்வு செய்ததில் பள்ளியைப்பற்றிக் கொள்ளும் மனப்பான்மை வெவ்வேறு சமூக வகுப்பு உறுப்பினருக்கு வெவ்வேறாக இருக்கும் எனக் காட்டுகின்றது. உயர்ந்த சமூக அந்தஸ்துள்ள மாணவர்களில் பெரும்

சதவிதத்தினர் தங்களைப்பற்றியும் தேர்தல் முடிவுகள்பற்றியும் கவலை கொண்டனர். கீழான சமூகக் குழுவில் இருந்துவரும் மாண வர்கள் இவ்வாறு கவலையுறுவதில்லை. நடுத்தர வகுப்பு அந்தஸ்தி லுள்ள மாணவர்களின் பெற்றோர்களது அதிகமான பற்றார்வத்திற்கு இது நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது என்பதில் ஐயமில்லை. பதின்வயதினர் சமூகத்தில் சமூகப் பிரிவுகள் இருப்பது உண்மை என்று உணர்கின்றனர். இது அவர்களின் மனப்பான்மைகளையும் நடத்தையையும் பல்வேறு வழிகளில் பாதிக்கின்றது. நண்பர்களைத் தேர்ந்தெடுத்தல், தொழில்துறைக் குறிக்கோள்கள், குற்றத்தைப் பற்றியும் சட்டங்களைப் பற்றியும் கொள்ளும் மனப்பான்மைகள் ஆகியவை யாவும் சமூக, வகுப்பு, இன உறுதிகளால் பாதிக்கப்படு கின்றன. நடுத்தர வகுப்பு நடத்தை, கல்வியிலும் தள்ளிவைக்கப் பட்ட மனநிறைவுச் செயல்களிலும் அதிக முக்கியத்துவம் கொள் கின்றது. இவ்வாறு நடுத்தரப் பண்பாட்டிலிருந்து வரும் மாணவர்கள் கீழான சமூக வகுப்புப் பண்பாட்டிலிருந்து வரும் மாணவர்களைக் காட்டிலும் நீண்டகாலக் குறிக்கோள்களைக் கொண்டிருக்கலாம். வெவ்வேறு வகுப்புகளில், குறிப்பிடும்படியாக ஒன்றின்மேல் ஒன்று படர்தல் ஏற்படுகின்றது எனக் குறிக்கின்றனர். இருப்பினும், மனப் பான்மைகளிலுள்ள மாறுதல்கள் ஓரளவு இடைவிடாது இருந்தாலும் உண்மையில் அதிக அளவில் இல்லை. அவை விழைவுகளிலும், மனப் பான்மைகளிலும், குறிக்கோள்களிலும் குறிப்பிடும்படியாக ஒன்றின் மேல் ஒன்று படர்ந்துள்ள நிலையைக் குறிக்கின்றன.

## இளைஞர்களும் கோயிலும்

கோயில், இளைஞர்களுடைய வாழ்க்கையில் கொள்ளும் பங் கினைப்பற்றிச் சரியான முடிவுகளைப் பெறுதல் ஓர் எளிதான வேலை யன்று. இளைஞனுடைய பட்டறிவிலிருந்தும் பின்னணியிலிருந்தும் கோவிலை ஒரு தனித்த ஏதுவாகப் பிரித்து உணரமுடியாத நிலை, ஏற்கெனவே உள்ள துன்பங்களை அதிகமாக்குகின்றது. வெவ்வேறு கோயில் குழுக்களைச் சார்ந்த இளைஞர்கள் எந்த நிலைமையில் வாழ் கின்றனர் என்று அறிவது சாத்தியமே யாகும். அன்றாடப் பிரச்சினை களை அவர்கள் அணுகுவதற்குக் கையாளும் வழிகளில் பல மாறுபாடு கள் இருப்பினும் அவற்றை அறிவது சாத்தியமே யாகும். இருப்பினும், இம்மாறுதல்கள் இருக்கின்ற அளவு அவர்களது சமயப் பின்னணி களிலும் சார்புகளிலும் உள்ள மாறுபட்ட ஒப்புமைகளின் காரண மாகத்தான் என்று ஏற்றுக்கொள்வது அறிவியல் முறைக்கு புறம் பானது மட்டுமன்றி ஆபத்தையும் விளைவிக்கவல்ல ஏதுவாகும்.

பிராட்டஸ்டன்டுகள், கத்தோலிக்கர்கள், யூதர்கள் என்று சமயக் குழுவிலுள்ளோர் கருதுகோள்களிலும் மனப்பான்மைகளிலும் சில

மாறுபாடுகள் கொண்டுள்ளனர் என்று கூறுவது சரியேயாகும். ஆனால், இம்மாறுபட்ட ஒப்புமைகள் அவர்களது வெவ்வேறான கோயில் இணைப்புகளின் விளைவுகள் எனக் கூறுதல் தவறாகும். சான்றாக, அமெரிக்க இளைஞர் குழு (American Youth Commission) நடத்திய மேரிலாண்ட் ஆய்வில் (Maryland study) பிராட்டடஸ்டன்ட் இல்லத்தைச்சார்ந்த இளைஞர்களில் 20 சதவீதத்தினர் நீக்ரோக்க ளாவர்.[34] இவ்வாறு மேலெழுந்தவாறு நோக்கினால் தனித்த சமய ஏதுவாகத் தோன்றுகின்ற ஒருபொருள், இன ஏதுவினால் பாதிக்கப் படும் ஏதுவாக மாறுகின்றது. கத்தோலிக்க இல்லங்களிலிருந்து வருகின்ற இளைஞர்களில் 85 சதவீதத்தினரது தாயோ, தந்தையோ, அல்லது இருவருமே அயல்நாட்டில் பிறந்தவர்களாக இருந்தனர். இது இனப்பின்னணியுடன் சமயப்பின்னணிகளும், கத்தோலிக்கக்குழு, கத்தோலிக்கக் குழுவில் இல்லாதவர் ஆகியோர்களிடம் தோன்று கின்ற மாறுதல்களுக்குப் பெரிதும் காரணமாகின்றது. இதுபோன்றே, யூத இளைஞர்களது மனப்பான்மைகளிலும் நிலைமைகளிலும் சந்தேகத் திற்கிடமின்றி, அவர்களது பெற்றோர்களில் 84 சதவீதத்தினர் அயல் நாட்டில் பிறந்தவர்கள் என்ற உண்மை, மிகுந்த செல்வாக்கு கொண் டுள்ளது (அதில் சரிபாதியினருக்குமேல் ரஷ்யாவிலிருந்து வந்த வர்கள்). அவர்கள் பெறுகின்ற சராசரி தர அளவு, மற்றச் சமயக் குழுவிலிருந்த இளைஞர்களைக் காட்டிலும் இரண்டு தரங்கள் அதிக மாகப் பெற்றிருந்தனர்.

இவ்வாறு மேலெழுந்தவாறு பார்க்கும்பொழுது, மாறுதல்கள் சமய அடிப்படையில் உண்டாகின்றன என்று தோன்றலாம். ஆனால் உண்மையில் இவை இனம், தேசிய இனம், வாழும் சுற்றுப்புறம், கல்வி பெறுதல் போன்ற பல ஏதுக்களினால் பாதிக்கப்படுகின்றன.

வெவ்வேறு சமயப் பின்னணியிலிருந்து வரும் இளைஞர்கள் அவர்களது பெற்றோரது சமயங்களை எந்த அளவு ஏற்றுக்கொள்ளு கின்றனர் என்று பார்ப்பது மிகவும் சுவையுள்ளதாய் இருக்கின்றது. மேரிலாண்ட் ஆய்வு ஐந்தில் நான்கு பகுதியினருக்குமேல் (81·1 சத

[34] H. M. Bell, Youth Tell Their Story.

*இளைஞர்களது ஆய்வுக்குரிய இடமாக மேரிலாண்ட் தேர்ந் தெடுக்கப்பட்டதன் காரணம், அவ்வூர் அமெரிக்க நாட்டின் பொரு ளாதாரச் சமூகக் குணவியல்புகளைப் பிரதிபலிக்கின்ற மாதிரியாகக் கருதப்படுவதாலேயாகும். 16-லிருந்து 24 வயது வரையுள்ள 13,500 இளைஞர்களிடம் நேரடி உரையாடல்மூலம் அவர்கள் என்ன செய் கின்றனர், என்ன சிந்திக்கின்றனர் என்று பகுத்தாயப்பட்டது. மேற் கண்ட நூலின் 63ஆம் அதிகாரத்தில் இளைஞர்களைப்பற்றியும் கோயி லைப்பற்றியும் பயன் மதிப்புள்ளதும் சுவையானதுமான செய்திகளைக் காணலாம்.*

விதம்) கோயில் இணைப்புள்ள இளைஞர்கள் அவர்களது பெற்றோர்களின் சமய நம்பிக்கையை ஏற்றுக்கொண்டனர் என்று கூறுகின்றது. இரு பெற்றோர்களும் சமய இணைப்புகள் கொண்டு, ஆனால், சமயக் கருத்துகளில் தாய்க்கும் தந்தைக்குமிடையே கருத்துவேறுபாடு இருக்குமானால் தாயாரின் நம்பிக்கையை ஏற்றுக்கொள்வதில் இரண்டு மடங்கு வலிவுள்ள மனப்போக்கு உள்ளது. பெற்றோரின் சமய நம்பிக்கைக்கு மாறான சமய நம்பிக்கையை ஏற்றுக்கொண்டோரின் சதவீதம் மிகவும் குறைந்த அளவே உள்ளது. கத்தோலிக்க இளைஞர்களில் 4·2 சதவீதமும், பிராட்டஸ்டன்டுகளில் 2 சதவீதமும் பெற்றோரின் சமய நம்பிக்கைக்கு மாறுபட்ட சமய நம்பிக்கையைக் கைக்கொண்டனர். யூதர்களில் யாரும் சமய நம்பிக்கையில் அவ்வாறு மாறுபட்டிருக்கவில்லை.

சி. டி. ஓ'ரில்லியும், ஈ. ஜே. ஓ'ரில்லியும் (C. T. O'Reilly and E. J. O'Reilly) கத்தோலிக்கக் கோவிலில் உறுப்பினர்களான கல்லூரி மாணவர்களின் சமய நம்பிக்கைகளில் குறிப்பிடும்படியான நிரூதலைக் கண்டனர்.[85] இவர்கள் சிறுபான்மையினர்மீது கொள்ளும் நம்பிக்கையிலும் மனப்பான்மையிலும் சில சுவையான உறவுகள் இருப்பதாகக் கண்டனர். இவ்வாய்வில் அமெரிக்க நாட்டில் தென் கத்திய நகரத்தைச் சார்ந்த கத்தோலிக்க லிபரல் ஆண்கள் கல்லூரியிலிருந்து 92 வெள்ளைக்கார ஆண்களையும், அதே நகரத்தைச் சேர்ந்த கத்தோலிக்க லிபரல் பெண்கள் கல்லூரியிலிருந்து 120 வெள்ளைக்காரப் பெண்களையும் ஆட்படுவோர்களாக எடுத்துக் கொண்டனர். முடிவுகள், சிறுபான்மையர்மீது கொண்டுள்ள சார்பெண்ணம் ஒன்றாகச் சேர்ந்து சில தனியன்கள் மற்றவர்களைக்காட்டிலும் அதிகமான சார்பெண்ணம் கொள்கின்ற நிலைமையை உருவாக்குகின்றது எனும் கற்பிதத்தை ஆதரிக்கின்றன. சமய மனப்பான்மைக்கும் சார்பு எண்ணத்திற்கும் இடையே உள்ள உறவிற்குச் சான்றாக இம் மாறுந்தன்மையுடைய பொருள்களிடையே உள்ள உடன் தொடர்புகள் அமைகின்றன.

| | உடன் தொடர்புகள் ஆண்கள் | பெண்கள் |
|---|---|---|
| யூதருக்கு எதிராகவும் நீக்ரோக்களுக்கு எதிராகவும் இருக்கும் அளவுகள் ... ... | ·69 | ·68 |
| யூதருக்கு எதிராகவுள்ள தன்மையும் சமயமும் | ·39 | ·31 |

[85] C. T. O'Reilly and E. J. O'Reilly, 'Religious Beliefs of College Students and Their Attitudes towards Minorities', Journal of Abnormal and Social Psychology, 1954, Vol. 49, pp. 378-380.

இந்த முடிவுகளை வைத்துக்கொண்டு உடனே பொதுமைப் படுத்துதல் தவறாகும். மனித இனநோக்கை அளிக்கும் சமய மனப் பான்மைக்கும் வரம்பில் குறுகியதாய் இருக்கும் சமய மனப்பான்மைக் கும் இடையேயுள்ள மாறுபாட்டை உணரவேண்டும். இதைப்பற்றிய செய்திகள் அதிகாரம் 12-ல் தரப்பட்டுள்ளன.

ஓர் ஆய்வில் கல்லூரி மாணவர்களை அவர்களது சமயக்கருத்து களைப் பாதிக்கின்ற பல்வேறு செல்வாக்குகளைக் குறிக்கச் சொன் ஞர்கள். அம்முடிவுகள் அட்டவணை 7—13 ல் தரப்பட்டுள்ளன.** அவை பெற்றோர் செல்வாக்கு, மற்றவர்களது சொந்தச் செல்வாக்கு, அச்சம், தற்காப்பின்மை, மரபுடன் ஒழுகுதல் ஆகியவைகளின் முக்கியத்துவத்தை குறிக்கின்றன. சிறுமியர் நன்றியறிதல், மறை மெய்ம்மை அனுபவங்கள், அழகுக்கவர்ச்சி யுடையவை ஆகியவை

## அட்டவணை 7—13

இளையோரது சமயவாழ்வின்மீது கொள்கின்ற பல்வேறு வகைக ளான செல்வாக்குகளின் சதவீதம் (ஆல்போர்ட், கில்லஸ்பை, யங் ஆகியோர் தந்தவை).

| | ஹார்வார்ட் பல்கலைக்கழகச் சிறுவர்கள் | ராட்கிளிப் பல்கலைக்கழகச் சிறுமியர் |
|---|---|---|
| பெற்றோர் செல்வாக்கு ... ... | 51 | 84 |
| தற்காப்பின்மைபற்றிய அச்சம் ... | 43 | 46 |
| மற்றவர்களது சொந்தச் செல்வாக்கு | 36 | 43 |
| மரபுடன் ஒன்றி நிற்றல் ... ... | 35 | 27 |
| அழகியல் கவர்ச்சி ... ... | 25 | 41 |
| கோயில் போதனைகள் ... ... | 24 | 84 |
| நன்றியுணர்வு ... ... ... | 28 | 42 |
| வாசித்தல் ... ... ... | 20 | 24 |
| படிப்புகள் ... ... ... ... | 17 | 19 |
| துயரம் அல்லது இழப்பு ... ... | 17 | 26 |
| மறைமெய்ம்மை அனுபவம் (mystical experience) ... ... ... | 10 | 21 |
| பால் குழப்பம் ... ... ... | 8 | 8 |

** G. W. Allport, J. M. Gillespie and J. Young, 'The Religion of the Post-War College Student', Journal of Psychology, 1948, Vol. 26, pp. 3-33.

களுக்கு அதிகச் செல்வாக்குத் தருவதே முக்கிய பால் மாறுபாடு களாகும். இவ்வாறு பெண்களது பங்கினை வரையறுக்கப் பண்பாடு கொள்ளும் செல்வாக்கு, அவர்கள் நம்பிக்கைகளையும் செயல்முறை களையும் கொள்ளுவதற்கு முக்கிய காரணமாகின்றது.

**அறிவு வளர்ச்சியும் மனப்பான்மையும்**

அறிவு முதிர்ச்சி, குழந்தையின் முழுவளர்ச்சியில் ஒருபகுதியாக இருப்பது மனப்பான்மைகளில் முக்கிய மாறுதல்கள் ஏற்படுவதற்குக் காரணமாகின்றது. குழந்தை, இளையோர் பருவத்திற்கு வளர்ச்சி யடையும்பொழுது அவன் நண்பர்களைத் தேர்ந்தெடுப்பதில் நன்கு பிரித்துணரக்கூடிய ஒருநிலையைக் கைக்கொள்கிறான். இக்காலத்தில், இல்லச் சுற்றுப்புறத் தொடர்புகளினால் முன்னர் உண்டான சார்பு எண்ணங்கள் யாவும் அதிகமாகப் பொதுமை பெறுகின்றன. மனப் பான்மைகள் முழுப்பொருளுடன் இயங்குகின்றன. அவை அதிகமான சிக்கல் வாய்ந்தவையாகக் காட்டுகின்றன. பல வெற்றுநிலைப் பொருள்களும் சொந்தத் தன்மையற்றவைகளும், குறிப்பிடத்தக்கவை யாகவும் சொந்தத் தன்மையுடையனவாகவும் மாறுகின்றன. நுண் ணறிவிற்கும் சமூக மனப்பான்மைகளின் வளர்ச்சிக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்படுவதற்கு நிரூபணம் உள்ளது.[37] இப்பிரச்சினையைப் பற்றிய ஆய்வுகளில் பழக்கங்களும் விளக்கிக் கூறப்பட்டுள்ளன. ஃபர்ஃபே வளர்ச்சி வயதுசோதனை (Furfey Developmental Age Test) சராசரி 11 வயது உடைய 26 சிறுவர்களுக்கும், சிறுமியர்களுக் கும் தரப்பட்டது. இவர்கள் அதிக நுண்ணறிவு உடையவர்களாய் இருந்தனர். வெவ்வேறு இனங்களில் காணப்பட்ட முதிர்ச்சியில் முக்கிய மாறுபாடுகள் இருந்தன. வாசிப்பதற்குத் தேர்ந்தெடுக்கப் படும் நூல்கள், வருங்காலத் தொழில்கள், சிந்திப்பதற்குரிய பொருள்கள் ஆகிய இனங்களில் உயர்ந்த முதிர்ச்சி காணப்பெற்றது.

எப்ஸ்டீன் (Epstein) நடத்திய ஆய்வு ஒன்றில் உயர்நிலைப்பள்ளி ஜூனியர், சீனியர் மாணவர்களை ஆட்படுவோராக எடுத்துக்கொள்ளப் பெற்றது.[38] அது சமூக, அரசியல் மானப்பான்மைகள் சில தனித்த சமூக அரசியல் பிரச்சினைகளைப்பற்றிய அனுபவங்களின் வினைவினால் மாறுபடுகின்றது எனக் காட்டுகின்றது. மாணவர்களிடம் 45 இனங்

[37] R. L. Thorndike, 'Performance of Gifted Children on Tests of Developmental Age', Journal of Psychology, 1940, Vol. 9, pp. 337-343.

[38] L. J. Epstein, 'Attitudinal Changes Attendant upon Variations in Experience', Journal of Educational Research, 1941, Vol. 34, pp. 453-457.

கள் கொண்ட சமூக அரசியல் மனப்பான்மைகள்பற்றிய கேள்விநிரல் தரப்பட்டது. சீனியர் வகுப்பை விரிவான களப்பயணத்துக்குக் (field trip) கொண்டு செல்லப்பட்டது. இவர்கள் சில அரசியல் அமைப்புகளுக்கும் நிறுவனங்களுக்கும் அழைத்துச் செல்லப்பட்டனர். ஜூனியர் வகுப்பினரை இப்பயணத்தில் அழைத்துச் செல்லவில்லை. மூன்றுவார இடைவெளிக்குப் பின்னர் ஜூனியர், சீனியர் வகுப்பிலுள்ளோருக்கு இரண்டாவது முறையாகக் கேள்விநிரல் தரப்பட்டது. சீனியர் வகுப்பு உறுப்பினர்களின் துலங்கல்களில் குறிப்பிடும்படியான மாறுதல்கள் காணப்பட்டன. ஜூனியர் வகுப்பு மாணவர்களது துலங்கல்களில் குறிப்பிடும்படியான மாறுதல்கள் காணப்படவில்லை. இவ்வாய்வின் முடிவுகள், பொருளுள்ள பட்டறிவுகள், உயர்நிலைப் பள்ளி மாணவர்களின் மனப்பான்மைகளில் முக்கிய மாறுதல்களை உண்டாக்கலாம் என்பதைக் காட்டுகின்றன.

உயர்நிலைப்பள்ளி மாணவர்களிடம் நடத்தப்பட்ட மற்றொரு மதிப்பீடு மாணவர்கள் பல வழிகளில் ஒரே மாதிரியாக உள்ளனர் என்று காட்டுகின்றது. ஆனால், அவர்கள் உலக நடவடிக்கைகள் பற்றி அறிந்திருந்த செய்திகளின் அளவில் வேறாக இருந்தனர். அனைத்துலகப் பிரச்சினைகளில் குறிப்பிடும்படியான மாறுபட்ட கருத்துகள் கொண்டிருந்தனர்.[39] ஆய்வு செய்யப்பட்ட பதினாறு கொள்கைக் கேள்விகளில், நன்றாகவும் குறைவாகவும் அறிந்துள்ள மாணவர்களிடையே ஒரு கேள்வியைத்தவிர மற்றக் கேள்விகள் எல்லாம் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் கொண்டிருந்தன. நன்றாக அறிந்திருந்த குழுவினர் அவர்களது கேள்விக்குரிய பதில்களிலிருந்து, அதிகமான நல்ல முடிவுகளைக் கொண்டோராகவும், அனைத்துலக மனப்பான்மை கொண்டோராகவும், கேள்விகளுக்கு நல்ல முடிவுகள் எடுக்கக் கூடியவராகவும், சிறு நிகழ்ச்சிகளுக்காகச் சண்டைக்குப் போகும் ஆர்வம் இல்லாதவர்களாகவும், அனைத்துலகப் பிரச்சினைகளுக்கு மனவெழுச்சித் தீர்வுகளைக் குறைவாகத் தருபவராகவும் இருப்பதாகக் காணப்பட்டனர்.

மனப்பான்மைகள் உருவாவதற்கும் வழிகாட்டப்படுவதற்கும், கல்விகொள்ளும் செல்வாக்கு, கற்றல் நடக்கின்ற மனவெழுச்சி நிலைமையைப் பெரிதும் பொறுத்து உள்ளது.[40] உயர்நிலைப்பள்ளி

[39] B. Shimberg, 'The Relationship between Information and Attitudes of High School Students on Certain International Issues', Purdue University, Studies in Higher Education, No. 68, 1947-50.

[40] See T. M. Newcomb, 'The Influence of Attitude Climate upon Some Determinants of Information', Journal of Abnormal and Social Psychology, 1946, Vol. 41, pp. 291-362.

மாணவர்கள் வியந்து பாராட்டுகின்ற ஓர் ஆசிரியர், மாணவரிடத்து அதிகமான செல்வாக்குக் கொண்டிருப்பாரேயன்றி, அவர்கள் வெறுக்கின்ற அல்லது விருப்பு வெறுப்பு கொள்ளாத ஒரு நடுத்தர மனப்பான்மை கொண்டிருக்கின்ற ஆசிரியரால் அதிகச் செல்வாக்குப் பெற இயலாது. ஒரு பிரச்சினை அல்லது சிக்கலிலுள்ள உண்மைகளை அப்படியே ஒப்பிக்கும் ஆசிரியரைக் காட்டிலும், மாணவர்களையே அப்பிரச்சினையைத் திறனாய்வுடன் சிந்திக்க ஊக்குவிக்கும் ஆசிரியர் மாணவர்களின் மனப்பான்மைகளில் பெருமளவு செல்வாக்குக் கொண்டிருப்பார். இவ்வாறு பள்ளிகள் மாணவர்களின் மனப்பான்மைகளில் கொண்டுள்ள செல்வாக்கு, பெருமளவு ஆசிரியரின் ஆளுமையையும் அவர் மாணவரிடம் கொள்ளும் மனம் ஒன்றலின் (rapport) அளவையும் பொறுத்து உள்ளது.

## திரைப்படங்கள், வானொலி, தொலைக்காட்சி ஆகியவைகளின் விளைவுகள்

குழந்தைகளின் மனப்பான்மைகளில் திரைப்படங்கள் கொள்கின்ற செல்வாக்குபற்றி ஆராய்கின்ற பல்வேறு ஆய்வுகள், இவ்வாறான பொழுதுபோக்குகள் சில மனப்பான்மைகளை உறுதி செய்யவோ அல்லது மீண்டும் உறுதி செய்யவோ சக்தி வாய்ந்த ஏதுவாக உள்ளன என்று கூறுகின்றன. தொலைக்காட்சிப்பெட்டி, இல்லங்களின் பெருஞ் சதவீதத்தினருக்குத் தங்களது தரத்துக்கு ஏற்ற தேவைப் பொருள்களின் பகுதி என்று கருதப்படுவதுடன், ஏற்கெனவேயுள்ள மனப்பான்மைகளை மாற்றுவதற்கும் உருவாக்குவதற்கும் ஏற்ற பொழுதுபோக்குகளையும் அளிக்கிறது. மேலும், இவ்வாறு புகுத்தப்பட்ட மாறுதல்கள் தற்காலிகமான தன்மையிலிருப்பதற்குரிய வாய்ப்பில்லை. உண்மைப் பண்பும் அவை தரப்படுகின்ற முறையும், இச்சாதனங்களை மனப்பான்மைகளையும் பயன் மதிப்புகளையும், உருவாக்குவதற்கும் மாற்றுவதற்கும் உரிய முக்கிய வழிகளாகச் செய்கின்றன.

முதலாவது உலகப் போருக்குப்பின் திரைப்படங்களின் விளைவுகளைப்பற்றிய ஆய்வுகள், சில திரைப்படங்கள் ஜெர்மானிய மக்களிடம், ஜெர்மானியர்கள் இசைவான மனப்பான்மைகளை உருவாக்குவதற்கு மிகவும் உதவியாக இருந்ததாகக் கூறுகின்றன. அண்மையில் நடந்த ஆய்வில் 'பண்பாளரின் உடன்பாடு', (Gentleman's Agreement) எனும் திரைப்படத்தின் விளைவுகளையும், யூதர்கள்மேல் கொள்ளும் மனப்பான்மைபற்றியும் ஆய்வு செய்யப்பட்டது.[41]

[41] I. C. Rosen, "Effect of the Motion Picture 'Gentleman's Agreement' on Attitudes Toward Jews," Journal of Psychology, 1948, Vol. 26, pp. 525-536.

சோதிக்கத்தக்க கட்டுப்பாடான கல்லூரி மாணவர்கள் குழுவினை இவ்வாய்வில் ஆட்படுவோர்களாகப் பயன்படுத்தப் பெற்றது. ஐந்து இனங்கள் கொண்ட கட்டுரைவகைக் கேள்விநிரல் தரப்பட்டது. சராசரி மனப்பான்மைகளில் மாறுதல் இருந்தது. அது இப்படத்தைப் பார்த்த குழுவினர் யூதரிடம் அதிகமான சகிப்புத்தன்மை கொண்டவர்களாக இருந்ததைக் காட்டியது. இருப்பினும், இக்குழுவைச் சார்ந்த எல்லா மாணவர்களும் அம்மாறுதலுக்குட்படவில்லை. இப் படத்தைப் பார்த்த பின்னர் ஒரு சிலர் அதிகமான சார்பு எண்ணமும் சகிப்புத் தன்மையும் கைக்கொண்டனர். இப் பருவகாலத்தில் சோதனை அளவீடுகளில் இப்படம் பார்க்காத, கட்டுப்படுத்திய குழுவினரிடம் குறிப்பிடும்படியான மாறுதல் காணப்படவில்லை. இளையோன் கல்லூரி மாணவனைக் காட்டிலும் எண்ணங்களை எளிதில் ஏற்றுக்கொள்பவனாக இருப்பதால், திரைப்படம் தொலைக்காட்சி ஆகியவைகளைக் கண்ட பின்னர், இப் பருவகாலத்தில் மனப்பான்மையில் அதிக மாறுதலை எதிர்பார்க்கலாம்.

இவ்வாய்வுகளிலும் இதைப்போன்ற மற்ற ஆய்வுகளிலும் ஆழ்ந்த கல்விப் பொருளுள்ள செய்திகள் உள்ளன. பல இளையோர்கள் வானொலி கேட்கின்ற அல்லது தொலைக்காட்சி பார்க்கின்ற முறையினால், சில சமயங்களில் இம்மூலங்களினால் பெறுகின்ற கற்றலையும் கற்றுக்கொடுத்தலையும் வலுவாக்கிக்கொள்கின்றனர். இளையோர்கள் வானொலியிலும் தொலைக்காட்சியிலும் அதிக அக்கறைகொண்டு தங்கள் நேரத்தை வானொலி கேட்பதிலும் தொலைக்காட்சி பார்ப்பதிலும் செலவிடுகின்றனர். இதைப்பற்றிய குறிப்புகள் அதிகாரம் 6-ல் தரப்பட்டுள்ளன. இந்நிலைமைகள் அவர்களுடைய சக்திவாய்ந்த திறன்களை உருவாக்குவதற்கும், மனப்பான்மைகளை உண்டாக்குவதற்கும் காரணமாகின்றன. பள்ளிகள் இப்படிப்பட்ட தனித்த நிகழ்ச்சிகளை மிகவும் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். இந்நிகழ்ச்சிகளைப் பள்ளித்திட்டத்தின் குறிக்கோள்களுடனும், பயன்களுடனும் நெருங்கிய உடன் தொடர்புகள் கொண்டவையாக அமைக்க இயலும்.

## அதிகாரச் சுருக்க உரை

இவ்வதிகாரம் முழுவதிலும் இளையோர்பருவத்தில் மனப்பான்மைகளின் வளர்ச்சிபற்றி விவாதிக்கப்பட்டுள்ளது. வளர்ந்து முதிர்ச்சியடையும்போது முழுத்தனியனின் பகுதியாக மனப்பான்மைகள் நன்ருக இணைக்கப்படுகின்றன. தனியன் அண்மைப் பிரச்சினைகளைப் பற்றிக் கொள்ளும் மனப்பான்மையும் அவை முழுத் தனியனது இணைக்கும் பகுதியாக மாறுகின்ற அளவும் தனியனது சமூக, மன, முதிர்ச்சிகளின் அளவுகளாக ஆகின்றன. மாற்றுப்பாலாரிடம்

கொள்ளும் மனப்பான்மை தனியனது உடலியல் முதிர்ச்சியினால் பெரிதும் பாதிக்கப்படுகிறது. இது இளையோர் பருவத்தில் மனப் பான்மைகளில் ஏற்படும் சில மாறுதல்களுக்குக் காரணமாகிறது.

சமயக் கருத்துகள், சமயப் பிரச்சினைகளில் அக்கறை, சமயக் கோட்பாடுகள், வாழ்க்கைபற்றிய நோக்கில் மாறுதல்கள் ஆகியவை பல இளையோர்களது வாழ்க்கையில் அவர்கள் முதிர்ச்சியை நோக்கி வளரும்போது தோன்றுகின்றன. இளையோர்களின் மன வளர்ச்சியும் சமூக வளர்ச்சியும், சமய எழுச்சியுடனும் மனப்பான்மை மாறுதல்களுடனும் நெருங்கிய தொடர்புகள் கொண்டுள்ளன. இளையோர் பருவத்தில் கருத்து மாற்றம் உச்ச நிலையில் உள்ளது. இதனால் பின்னிளையோர் பருவத்தில் சந்தேகத்துடன் பின்பற்றப் படுகின்றது. பரந்த சமூக அறிவுத் தொடர்புகளிலிருந்து ஐயம் தோன்றுகின்றது. இதில் இளையோன் அறிவுக்குகந்த, நம்பத்தகுந்த வழிகாட்டலைப் பெறவேண்டும். இளையோர்கள், சமயத்தில் மதிப் புள்ளவைகளைத் தேடுகிறார்கள். ஆனால், இதில் ஏமாற்றமே அடை கின்றார்கள். அவ்வாறான நிலைமை குற்றம் கூறும் மனப்பான்மைக்குக் கொண்டு செல்லலாம். சந்தேகப்படுகின்ற தன்மையும் சமய நடவடிக்கையிலிருந்து பின்வாங்குதலும் ஏற்படலாம். ஆனால், இது எப்பொழுதும் உண்மையல்ல. பல இளைஞர்கள் அவர்களது பதின் வயதுகளில் முதியோர்கள் கொண்டிராத அளவுக்குச் சமய அனுபவங்கள் கொண்டிருந்தனர். குறிக்கோள்கள் தோன்றி அவை சமய அனுபவங்களுடன் இணைந்தால், அவர்களது செயல்கள் ஓர் உந்தப்பட்ட சக்தியுடனும் அதிகமாக நிலையாயிருக்கின்ற தன்மை யுடனும் விளங்கும். குறிக்கோள்கள், நடத்தை வகைகள் பெரிய அமைப்பாக இணைந்து ஒழுக்கத்தைத் தீர்மானிப்பதில் இது முக்கிய மான சக்தியாக ஆவதைக் குறிக்கின்றது. இதைப்பற்றிய செய்திகள் அதிகாரம் 8-ல் மேலும் தரப்பட்டுள்ளன.

இளையோர்களின் மனப்பான்மைகள் அவர்களது சமூக வழக் கத்தினின்று வளர்கின்றன. அவைகளின் வளர்ச்சிபற்றிய கீழ்க் கண்ட முடிவுகள், இவ்வதிகாரத்தில் குறிக்கப்பட்டுள்ள பல்வேறு ஆய்வுகளின் ஆதரவுகளைப் பெற்றுள்ளன.

1. இளையோர்களது மனப்பான்மைகளுக்கும் அவர்களது பெற் றோர்களின் மனப்பான்மைகளுக்குமிடையே நெருங்கிய உறவு உள்ளது.

2. இளையோர்களின் மனப்பான்மைகள் அவர்களின் சமூக வகுப்பு அந்தஸ்தைப் பிரதிபலிக்கின்றன.

3. ஆழ்ந்து பதிந்துள்ள சார்பெண்ணங்கள் தனியன்களது வாழ்க்கைகளில் வெகு ஆரம்ப காலத்திலேயே தோன்றுகின்றன.

4. அறிவு வளர்ச்சி பல் நெகிழ்வான மனப்பான்மைகளின் வளர்ச்சிக்குக் காரணமாகும்.

5. இளையோன் கோயிலுடன் சார்ந்து இருத்தலும், அக்கறைகளும், அவனது மனப்பான்மைகளுக்கும் நம்பிக்கைகளுக்கும் முக்கிய காரணங்களாகின்றன.

## சிந்தனைக்குரிய பிரச்சினைகள்

1. மனப்பான்மைகள் வளர்ச்சியடைவதற்குத் தெரிவிக்கப்பட்ட முறைகளை ஆய்வுசெய்க. இம்முறையினால் வளர்ச்சியடைந்த உனது மனப்பான்மைகளைக் குறிக்க.
2. பூப்படைதலினால் மனப்பான்மைகளின் வளர்ச்சியில் ஏற்படும் விளைவுகள் யாவை? இக்கால வாழ்க்கையில் ஏதாகிலும் குறிப்பிடும்படியான மாறுதல்கள் உன் மனப்பான்மைகளில் கண்டாயா?
3. குழந்தைப் பருவத்திலிருந்து தற்பொழுதுவரை வளர்ச்சியடைந்த சொந்த சமய மனப்பான்மைகள்பற்றியும் அதனுடைய தோற்றத்தைப்பற்றியும் சரியான உண்மை விளக்கத்தைத் தருக.
4. சமயத்தை அதனுடைய மாறுபட்ட வேறான கருத்துகளிலிருந்தும் கோட்பாடுகளிலிருந்தும் பிரித்துணர முடியும் என்று கருதுகிறாயா? அவ்வாறு செய்வது சரியா? உன்னுடைய பதில்களுக்குச் சான்றுகள் அளிக்கவும்.
5. மனப்பான்மைகளில் திரைப்படங்கள் எவ்விளைவுகளை உண்டாக்குகின்றன? திரைப்படங்களின் காரணமாக மனப்பான்மைகளில் ஏதாவது மாறுதல் காட்ட முடியுமா?
6. இளையோனது வாழ்க்கையில் சமயம் ஏன் ஒரு முக்கிய பங்கைக் கொண்டுள்ளது?
7. இளையோர்களது நம்பிக்கைகளுக்கும் மனப்பான்மைகளுக்கும் தொடர்புள்ள ஏதுக்களைக் கணக்கிடுக. இவை எவ்வாறு உன்னுடைய சொந்தச் சமய, இன, அல்லது அரசியல் மனப்பான்மைகளின் தொடர்பில் செயலுறுகின்றன என்று காட்டுக.
8. இளையோர் பருவத்தில் சமய ஐயங்கள் ஏன் அதிகமாகக் காணப்படுகின்றன? சமய ஐயங்கள் அடிக்கடி தோன்றுவதை அல்லது அதன் முக்கியத்துவத்தைக் குறைப்பதற்கு என்ன செய்யவேண்டும்?

9. பல்வேறு குழுக்களைப்பற்றி உன்னுடைய மனப்பான்மைகளை அக்குழுக்களின் அனுபவங்களைப்பற்றிய அறிவின் துணைகொண்டு ஒப்பிடுக. இவ் வொப்புமையிலிருந்து எடுக்கப்படும் சில முக்கிய முடிவுகள் யாவை?

10. மற்ற இனங்கள், சமயங்கள், நாட்டினங்கள் ஆகியவற்றைப்பற்றிய உனது மனப்பான்மைகளைத் தரமிடுக. பல்வேறு குழுக்களின்மீது கொண்டுள்ள மனப்பான்மைகளில் உள்ள மாறுதல்களுக்குக் காரணம் கூற இயலுமா?

11. நீ சிறுபான்மைக்குழுவைச் சார்ந்தவராய் இருந்தால் அல்லது சிறுபான்மைக்குழு உறுப்பினராக நீ எப்பொழுதாவது கருதப்பட்டால், நீ ஒதுக்கப்பட்டவுகை உணர்ந்த சில நிகழ்ச்சிகளைக் கூறுக. இவ்வாறு ஒதுக்குதலின் போது உம்முடைய பொது எதிர்வினைகள் யாவை?

## தெரிவுசெய் நூற்பட்டியல்


1. Bettleheim, B., and M. Janowitz, 'Dynamics of Prejudice'. New York: Harper & Bros., 1950, Chaps. 2, 3, 6.

2. Cole, L., 'Psychology of Adolescence' (Fourth Edition). New York: Rinehart and Co., Inc., 1954, Chap. 13.

3. Cruze, W. W., 'Adolescent Psychology and Development.' New York: The Ronald Press Co., 1953, Chap. 9.

4. Dimock, H. S., 'Rediscovering the Adolescent'. New York: Association Press, 1937, Chap. 8.

5. Fleege, U. H., 'Self-Revelation of the Adolescent Boy.' Milwaukee: Bruce Publishing Co., 1945, Chap. 13.

6. Havighurst, R. J., and Taba, H., 'Adolescent Character and Personality.' New York: John Wiley and Sons, 1949, Chap. 8.

7. Horrocks, J. E., 'The Psychology of Adolescence.' Boston: Houghton Mifflin Co., 1951, Chap. 14.

8. Hurlock, E. B., 'Adolescent Development.' New York: McGraw-Hill Book Co., 1949, Chaps. 10 and 11.

9. Knoebber, Sister M., 'Self - Revelation of the Adolescent Girl'. Milwaukee: Bruce Publishing Co., 1936.

10. Landis, P. H., 'Adolescence and Youth' (Second Edition). New York: McGraw-Hill Book Co., 1952, Chap. 10.

11. Nelson, E., 'Student Attitudes Toward Religion', 'Genetic Psychology Monographs', 1940, Vol. 22, pp. 323-423.

12. Ross, M. G., 'Religious Beliefs of Youth.' New York: Association Press, 1950.

13. Sperry, W. L., et al., 'Religion in the Postwar World.' Cambridge: Harvard University Press, 1946.

14. Taylor, K. W., 'Do Adolescents Need Parents?' New York: Appleton-Century-Crofts, Inc., 1938, Chap. 9.

15. Weaver, P., 'Youth and Religion', The Annals of the American Academy of Political and Social Science, November 1944, pp. 145-151.

16. Williams, R. M., American Society. New York: Alfred A. Knopf, Inc., 1951, Chap. 9.

# 8. குறிக்கோள்கள், ஒழுக்கம், சமயம்

'மனிதர்களையும் நாடுகளையும் அவர்களது துவக்கக் காலத்தில்தான் சீர்திருத்த முடியும். வளர்ச்சியடைந்த பின் திருத்த முடியாதவர்களாகி விடுகின்றனர்' --ரூஸோ (Rousseau).

இளையோர்களின் வளர்ச்சிபற்றியும் முதிர்ச்சிபற்றியும் நடந்த இவ்வாய்வில், அவர்கள் முதிர்ச்சி நோக்கிச் செல்லும்பொழுது பல பிரச்சினைகளைச் சந்திக்கின்றனர் என்று இவ்வாய்வு முழுவதிலுமே குறிப்பிட்டுள்ளோம். தனியனது வளர்ச்சிபற்றிய கருதுகோள், ஒழுக்கக் கருதுகோள்களும், குறிக்கோள்களும் குழந்தைப் பருவத்திலும் இளையோர் பருவத்திலும் கற்றுக்கொள்ளப் பெறுகின்றன என்ற கருத்தினைத் தருகின்றது. குழந்தைப் பருவத்திய கருதுகோள்கள் மிக எளிதானவையாகவும், பொதுவாகத் திடமான தன்மை பெற்றவையாகவும் இருக்கின்றன. சிறு குழந்தை பெற்றோர்களது கருதுகோள்களை யோசிக்காமல் அப்படியே ஏற்றுக்கொள்கிறது. இளையோர் பருவத்தின் துவக்கத்தில் இளையோன் தனக்காகச் சிந்திக்கத் துவங்குகின்றான். இவ்வளர்ச்சி சுதந்திரம் பெறுவதற்கான வளர்ச்சி என்று குறிப்பிடப்படுகின்றது.

மூன்றாவது பகுதியில் தரப்பட்டுள்ள பொருள்கள் யாவும் இளையோர் பருவத்தில், குழந்தைப் பருவத்திலிருந்து இளையோர் பருவத்திற்கு நிலைமாறுகின்ற தன்மையுடன் தொடர்புள்ள பல பிரச்சினைகளுடன் சேர்ந்து வருகின்றன என்று காட்டுகின்றன. அதிகாரம் 17-ல் இப் பருவகாலத்தில் குற்றச்செயல்கள் மிகுதியாகக் காணப் பெறுகின்றன என்று உணர்த்துகின்ற விவரங்களை அளிக்கப்படும். தற்கால இளைஞனது, தன்னைப்பற்றிய வெளிப்படையான கருத்துக்களைப் பலர் வெறுக்கின்றனர். இளையோர்கள் இன்றையநாளின் பழக்க வழக்கங்களையும் போதனைகளையும் அப்படியே ஏற்றுக்கொள்ள மறுப்பதை வெறுக்கின்றவர்கள் உண்டு, இம்மனப்பான்மை புதிய கருத்தன்று. பல ஆண்டுகளுக்கு முன்னரே இம்மனப்பான்மை புதிய

தொன்று அன்று என வி. கே. ஃபிராவுலா (V. K. Froula) வாஷிங்டன் கல்விக்குழுவிற்கு அளித்த தலைமையுரையில் குறிப்பிடுகின்றார்.[1] அவர் சொன்னதாவது :

மலைகளின் கால அளவுக்கு இணையாகப் பழமையான ஒரு புலம் பலைச் சான்றாகத் தருவதற்கு அனுமதி அளியுங்கள். ஆனால், இது மாறா மரபேற்புக் கோட்பாட்டாளரின் (விவிலிய நூலில் கூறியுள்ளதை அவ்வாறே ஏற்றுக்கொள்ளும் கோட்பாட்டாளர்) அறிவுரையின் ஒரு பகுதி போன்று ஒலிக்கின்றது. 'நமது பூமி வரவிருக்கின்ற நாட்களில் சீர்கேடுறப் போகிறது, உலகம் ஓர் அழிவுக் காலத்தை நெருங்கு கின்றது என்பதனை உணர்த்தும் குறிகள் உள்ளன. குழந்தைகள் அவர்களது பெற்றோர்களை மதிப்பதில்லை. இதிலிருந்து உலகின் அழிவுக்காலம் நெருங்குகின்றது என்பது வெளிப்படையாகிறது.' 6,000 ஆண்டுகளுக்குமுன் களிமண் தகட்டொன்றில் இக்கூற்று எழுதப் பட்டது. புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள் மெசபொடோமியா பள்ளத்தாக்கில் இதனைக்கண்டு பிரிட்டிஷ் அரும்பொருட்காட்சி சாலையில் பழங்காலத்திய பொருள்களுடன் வைத்துள்ளனர்.

### பழக்கங்கள் நிறுவனங்கள்பற்றிய மனப்பான்மை

இளையோர்கள் பழக்கங்களைப்பற்றியும் சமூகத்திலுள்ள நிறுவனங்கள்பற்றியும் கொண்டுள்ள மனப்பான்மை, ஏற்றுக் கொள்ளுதல், அதன்படி நடத்தல், ஒன்றி இருத்தல், ஒதுக்குதல், பொருநிலை போன்ற இயல்புகளைக் கொண்டதாகக் கூறலாம். அவன் வாழ்கின்ற சமூக வாழ்க்கை, பள்ளிக்கு வெளியேயுள்ள நிலை ஆகியவைகள் இம்மனப்பான்மைகள் உருவாவதற்கு முக்கிய காரணங்களாகின்றன.[2] கீழ்வகுப்பு இளையோன் அவனது சமூக நிலையிலுள்ள நண்பர்களின் அழுத்தங்கள் காரணமாகப் பள்ளியை விட்டு நின்று விடுவான் ; இவ்வயதிலேயே பணத்தையும் அதிகமாகச் செலவிடுவான் ; பால்முறையற்ற செயல்களையும் செய்வான். இதே சமயத்தில் அவனது பெற்றோர்களிடமிருந்து பள்ளியிலேயே தங்கு வதற்கு எந்தவிதமான கட்டாயத்தையும் பெறுவதில்லை. பெற் றோர்கள், ஒரு குறிப்பிட்ட நிலைக்குமேல் அவர்கள் கல்வி பெறுவதில் யாதொரு பயனுமில்லை என்று நினைப்பதால், அவர்கள் தங்கள் பிள்ளைகளைக் கட்டாயப்படுத்துவதில்லை. இளையோன் சார்ந்திருக்கின்ற வகுப்பின் மனப்பான்மைகளும் பயன் மதிப்புகளும் அவன்மீது

[1] V. K. Froula, 'Education and Public Morals', Washington Educational Journal, November, 1927.

[2] *சான்றாக,* A. Davis and J. Dollard *எழுதிய* 'Children of Bondage' *எனும் நூலைப் பார்க்கவும்.* Washington: American Council of Education, 1940, pp. 281-282.

குறிப்பிடும்படியான அழுத்தத்தை உண்டாக்குகின்றன. அவைகள் அவனுடைய தனிப்பட்ட குறிக்கோள்களும் பயன்மதிப்புகளும் உருவாவதில் மிக முக்கியக் காரணங்களாகின்றன.

நடுத்தர வகுப்புக் குழந்தை சில பழமைக்குக் கட்டுப்பட்ட மனப்பான்மைகளை அடைய வேண்டிய கட்டாயத்திற்குள்ளாகின்றான். அவன் வைதீகக் கோட்பாடுகளைக் குறித்து அதிகமாகக் குறை காணுதல் கூடாது. சமூகத்தின் அறக்கோட்பாடுகளை மீறக்கூடாது. அவன் இவற்றை மீறிச் செல்வானேயானால், சமூகத்தால் வெறுத் தொதுக்கப்படுவதோடு, தண்டனையும் பெறலாம். நடுத்தர வகுப்பின் பழக்கங்களைக் கோயிலும் பள்ளியும் வலிமை பெறச் செய்கின்றன. இருப்பினும், பல்வேறு சமூக வகுப்புக் குழுக்களிலிருந்து வரும் தனியன்களின் சமயப் பழக்கங்களிலும் நம்பிக்கைகளிலும் மாறு பாடுகளைக் காணலாம். நமது சமூகத்தில் மனப்பான்மைகளிலும், அறக்கோட்பாடுகளிலும் பண்படாச் சமூகங்களைக் காட்டிலும் வரம்பில் அதிகமான மாறுபாடுகளை அனுமதிக்கின்றனர். இதனால் இளையோன் அதிகமாகக் குறை காண்போனாகவோ, புறச்சமயத் தினனாகவோ கருதப்படுவதில்லை. குறிப்பாகப் பள்ளியில் கீழ் வகுப்புப் பண்பாட்டிலிருந்து வரும் பல இளையோர்களது மனப் பான்மைகளையும், பயன் மதிப்புகளையும் கருதாமல் கட்டாயப் படுத்துவதனால், இச்சிறுவர்களும் சிறுமியர்களும் துயரமான பிரச்சினை களுக்கு ஆளாகின்றனர். இளைஞர்களுக்குத் தேவையான நல்ல கல்வித் திட்டத்தில் கீழ்வகுப்புக் குழந்தையின் மனப்பான்மையையும் பழக்கங்களையும்பற்றிய கவனிப்பு, அவனுடைய வழிகாட்டலுக்கும் பயிற்சிக்கும் பள்ளியிலும் வேறு துறைகளிலும் காரணமாயிருப் போர், கொள்ளவேண்டிய அவசியமானதொன்றாகும்.

### மாறுகின்ற பழக்கங்கள்

நமது பண்பாடு நிலையாயிருக்கின்ற தன்மையுடையதன்றாதலின், நடத்தை வகைகளும் பழக்கங்களும் இடைவிடாது மாறிக் கொண்டேயுள்ளன. இதனைப் பால் பழக்கங்களில் குறிப்பாகக் காணலாம். இதனைப்பற்றி விரிவாக அதிகாரம் 13-ல் விவாதிக்கப் பெற்றுள்ளது. இம்மாறுதல்கள் படிப்படியாகவும், மறைமுகமாகத் தீங்கிழைப்பனவாகவும் உள்ளன. இளையோர் தலைமுறை முதியோர் தலைமுறையிடமிருந்து நடத்தைகளுக்கான வழிகாட்டும் குறிப் பினைப் பெறுகின்றனர். ஆனால், அவற்றைத் தற்பொழுதுள்ள நிலை களுக்கு ஏற்றவாறு மாற்றி அமைத்துக் கொள்கின்றனர். அவைகளை வேண்டியவாறு மாற்றியமைக்கும்பொழுது, கேடு விளைவிக்கும் முடிவுகள் பொதுவாக விளையாமல் பார்த்துக் கொள்கின்றனர். இதனைக் காணும்போது, முதியோர் தலைமுறை கூக்குரலிட்டு அழு கின்றது. அதைப் பொருட்படுத்தாது மாற்றியமைத்துக் கொள்

கின்றனர். இதனால் புதிய பால் வகைகள் (sex patterns) தோன்றுகின்றன. மேற்கத்திய நாகரிகத்தில் இன்று வழக்கிலுள்ள பால் வகை மாறுதல்களின் முடிவான விளைவுகளைப்பற்றித் தீர்மானிக்க இயலாது. இருப்பினும், இளையோர்களுடன் பணிபுரியும் தனியன்கள் மாறுகின்ற பழக்கங்களைப்பற்றி நன்றாக உணர்கின்றனர். இவ்வாறான தனியன்கள் பெரும்பாலும் இரண்டக நிலையைச் (dilemma) சந்திக்கின்றனர். இவர்கள் இளையோர்களைப் பெரும்பாலும் அவர்களது பழக்கத்திலுள்ள வகைகளைக் காட்டி, இம்மாறுதல்களைத் தவிர்க்க முயலலாம். ஆனால், பெரும்பாலும் இதை இளையோர்கள் ஏற்றுக்கொள்வதில்லை. இவ்வகைகளின் ஆற்றல் எல்லைகளைப் பெற்றோர்களும், ஆசிரியர்களும், மற்றும் இளையோர்களுடன் தொடர்பு கொள்வோரும் அறிவார்கள். இதற்கு மாற்று, ஒவ்வொரு வழிகாட்டுவோரும், இம்மாறுதல்களை ஒரு வரம்பிற்கு உட்பட்ட வழியில் ஏற்றுக்கொண்டு, முழுமையான பால் முதிர்ச்சியை நோக்கி நன்கு அறியப்படாத வழியில் இளையோனைக் கொண்டுசெல்வதேயாகும். இவ்வாறான வழியைப் பின்பற்றுதலினால் ஏற்படும் முடிவுகள்பற்றி நாம் அறியமாட்டோம். ஆனால், சமூக மாறுதலை அனுமதிக்கத் தவறுவது இளையோர்களுக்கும், அவர்களுக்கு வழிகாட்ட முற்படுவோருக்கும் இடையே ஒரு பெரிய பிரிவினைக்குத்தான் வழிகோலும்.

அதிகமாக இங்கு தேவைப்படுவது என்னவெனில், இளையோர்களுக்கு ஆதரவான வழிகாட்டுதலைத் தந்து பால்பற்றிய குழப்பத்தைக் குறைப்பதேயாகும். இளையோனை ஒழுக்கத்தரங்களின் உணர்ச்சிக்கு வழிகாட்டுதல் அவசியமாகும். இது அவன் தனது தினசரி வாழ்க்கையில் பிரச்சினைகளைச் சந்திப்பதற்கும், தீர்வு காண்பதற்கும் வழி செய்யும். இவ்வாறான வழிகாட்டல் எதேச்சாதிகாரத் தன்மை பெற்றதன்று. அவைகள் எவ்விதமான ஆதரவின்றியும் இருக்கவியலாது. மனவெழுச்சி முதிர்ச்சி, சமூக முதிர்ச்சி ஆகியவற்றை அடைந்தவர்கள்தாம், நடைமுறைக்குகந்த சாத்தியமான வாழ்க்கை மெய்யுணர்வின் வரைச்சட்டத்திற்குள்ளாகும் இயற்கையான வழிகளினால், இவ்வழிகாட்டலை இளையோர்களுக்குத் தர இயலும்.

### கட்டுப்பாடும் ஒழுக்க நடத்தையும்

ஒரு தனிப்பட்ட குழுவின் பழக்கங்களுக்கும் வழக்கங்களுக்கும் எதிராக உள்ள ஒரு நடத்தையைக் குழு கண்டிக்கிறது என்பது முன்பே குறிப்பிடப்பட்டது. சில சமயங்களில் இந்நடத்தை குழுவின் நடத்தைக்கு எதிராக இருப்பதாகக் கருதப்படுகிறது. அதிகாரம் 11-ல் குறிப்பிடப்பட்டுள்ளது போன்ற சமுதாயப் பண்பற்ற நடத்தையே இதுவாகும். பள்ளியிலும், இல்லத்திலும், விளையாட்டு மைதானத்திலும் சமூக விரோதமான செயல்களுக்குத் தொடர்புள்ள கட்டுப்பாடுகள் பொதுவாகச் சமூகத்திற்கு எதிரான நடத்தை

வகைகள் என்று எண்ணப்பெறுகின்றன. இவ்வாறு பள்ளியில் உள்ள சில விதிகளுக்குப் புறம்பாக இருப்பது, இல்லம் அல்லது பள்ளியிலுள்ள மற்ற உறுப்பினர்களின் நல்ல இயற்றிநிலையில் தலையிடுவது, பல குறும்புச் செயல்கள் புரிவது போன்ற பலவகையான நடத்தைகள் சமூகத்திற்கு எதிரான நடத்தைகளின் வெளிக்காட்டுதல்கள் என்று கட்டாயமாகக் கருத இயலாது. ஆனால், இவை அதிகாரத்தில் இருக்கின்ற ஒருவரால் இசைவில்லாச் செய்கைகள் எனக் கருதப்பட்டு, இச்செயல்களில் ஈடுபடுவோரை ஏதாவது ஒருவழியில் கட்டுப்பாட்டிற்கு உள்ளாக்குகின்றனர். இக்கட்டுப்பாட்டுப் பிரச்சினை ஒழுக்க நடத்தை வளர்ச்சியின் தொடர்பில் இருப்பதாலும், குழுவின் பழக்க வழக்கங்களுக்கேற்ப இருப்பதாலும் எல்லா மன வெழுச்சி வகைகளும் ஏற்கப்பட்டன. தண்டனையளிக்கும் முறை காலத்திற்குக் காலம் குறிப்பிடும் வகையில் மாறுபடுகின்றது என்று கூறவேண்டிய அவசியமில்லை. ஏறத்தாழ ஒரு நூற்றாண்டிற்கு முன்னால் நமது உயர்நிலைப் பள்ளிகளில் ஓரளவு விவரமான கட்டுப்பாடு வலியுறுத்தப்பட்டது. 1848ஆம் ஆண்டில் வடகரோலினா பகுதியில் ஸ்டோக்ஸ் நாட்டில் (Stokes County) பயன்படுத்தப்பட்ட தண்டனைகளின் ஒரு பகுதி கீழே தரப்பட்டுள்ளது:[3]

| | கசையடிகள் |
|---|---|
| 1. சிறுவர்களும் சிறுமியரும் சேர்ந்து விளையாடினால் ... | 4 |
| 2. சண்டையிட்டால் ... ... ... | 4 |
| 7. பள்ளியில் சீட்டாடினால் ... ... ... | 10 |
| 9. பொய் சொன்னால் ... ... ... | 7 |
| 14. பள்ளியில் சத்தியம் செய்தால் ... ... | 8 |
| 16. சிறுமியரிடம் தவறாக நடந்துகொண்டால் ... | 10 |
| 19. பள்ளியில் மது அருந்தினால் ... ... | 8 |
| 22. நீண்ட விரல் நகங்களைக் கொண்டிருந்தால் ... | 2 |
| 31. மற்றவர் நோட்டைக் கெடுத்தால் ... ... | 2 |
| 33. பள்ளியில் குஸ்திச் சண்டையிட்டால் ... ... | 4 |
| 35. வீட்டிற்குச் செல்ல வெளியில் போகும்பொழுது தலைகுனிந்து வணக்கம் செய்யாவிடில் ... | 2 |
| 43. கேள்விக்குரிய பதிலுடன் உண்டு ஐயா அல்லது இல்லை ஐயா என்று கூறாவிடில் (அதாவது மரியாதைக்குரிய ஐயா என்னும் சொல்லைப் பயன்படுத்தாவிடில்) ... ... ... | 2 |
| 45. நூல்களைப் படிக்கச் செல்லுமுன், விளையாடிய பின் கால்களைக் கழுவாமல் இருந்தால் ... | 4 |
| 46. மில் அருகே அல்லது வழியருகே சென்று விளையாடினால் ... ... ... ... | 6 |

[3] C. L. Coon, 'North Carolina Schools and Academies: Documentary History', p. 763, (State document, 1915).

குழந்தையின் பயிற்சிபற்றிய தற்காலக் கருதுகோள்கள், நல்ல ஒழுக்கம், விதிகள், கோட்பாடுகள் அல்லது பல்வேறு குறும்புச் செயல்களுக்குக் குறிப்பிட்ட அளவு தண்டனையை நிர்ணயித்தல் ஆகியனவைகளினால் குழந்தையின் ஒழுக்கநிலை வளர்ச்சியடைவதில்லை என்ற உண்மையை வலியுறுத்துகின்றன. கட்டுப்பாடுடைய செய்கை தனியனது அந்தரங்க வாழ்க்கையையும் உணர்வுகளையும் ஆழமாகத் தாக்கினாலும், சமூகத்திற்கு எதிரான நடத்தைச் செயல்களைச் சமூகம் பொறுக்காது என்று உணர்த்தினாலும், ஒருவேளை நல்ல பயன்கள் விளையும். ஆனால், கட்டுப்பாட்டைப் பெரும்பாலும் இளையோர் சிறுவன்தான் பிடிபடுவதற்குரிய வழியாகக் கருதுகின்றான். ஆசிரியர் அல்லது பெற்றோர் தவறான நடத்தைச் செயலுக்குப் பழிவாங்கும் வகையாக இதனைக் கடைப்பிடிக்கின்றனர் என்றும் இளையோன் கருதுவதுண்டு.

சிகாகோ பல்கலைக் கழகத்தில் எட்டு ஆண்டுகளுக்குமேல் ஹேவிகர்ஸ்ட்டாலும், மற்றவர்களாலும் ஒரு குழந்தைக் குழுவின் ஒழுக்க நடத்தை வளர்ச்சிபற்றி ஆய்வு செய்யப்பட்டது.[4] இக் குழந்தைகளை அவர்கள் 9 அல்லது 10 வயதிலிருந்து 17 அல்லது 18 வயதை அடையும்வரை உற்றுநோக்கினர். இக்காலத்தின் முடிவில் ஆய்வுத்தரங்கள் இக்குழந்தைகளின் ஒழுக்க வளர்ச்சிபற்றித் தயாரிக்கப்பட்டன. இத்தரங்கள் இச்சிறுவர் சிறுமியரின் வேறு உண்மைகளுடன் ஒப்பிடப்பட்டன. நல்ல குணவியல்பு வளர்ச்சிக்கும், தொடர்ந்துள்ள கடுமையான கட்டுப்பாட்டுக்கு மிடையேயுள்ள தொடர்பு ஆய்வு செய்யப்பெற்றது. கட்டுப்பாடு கடுமையாக இருப்பதற்கும், குணவியல்பு வளர்ச்சிக்கும் எந்தவிதமான தொடர்பும் இல்லை என்பது வெளியாயிற்று. கடுமையான கட்டுப்பாட்டிற்குள்ளான குழந்தைகளில் சிலர் நல்ல குணவியல்புகளையும், மற்றவர்கள் மோசமான குணவியல்புகளையும் பெற்றிருந்தனர். இதுபோன்றே எளிதான கட்டுப்பாட்டிற்குள்ளான குழந்தைகளில் சிலர் நல்ல குணவியல்பினையும், மற்றவர்கள் மோசமான குணவியல்பினையும் பெற்றிருந்தனர்.

கட்டுப்பாடு தொடர்ந்து இருப்பதைப்பற்றிய ஆய்வில் அக் கட்டுப்பாடு குணவியல்புடன் நெருங்கிய உறவு கொண்டிருப்பதைக் கண்டனர். குணவியல்புத் தரங்களுக்கும், கட்டுப்பாடு தொடர்ந்திருப்பதற்கும் இடையே உள்ள இடைத் தொடர்பெண்ணிக்கை 62 ஆகக் கணக்கிடப்பட்டுள்ளது. இவ்வாறான கட்டுப்பாடு வெற்றியையோ அல்லது தோல்வியையோ அளிக்கலாம். இது அதனைப்

[4] R. J. Havighurst, 'The Functions of Successful Discipline', Understanding the Child, 1952, Vol. 21, pp. 35-44.

பயன்படுத்தும் உணர்வினைப் பொறுத்துள்ளது. பெற்றோர்கள் அதனைத் தொடர்ந்து பயன்படுத்துவதைப் பொறுத்தும் உள்ளது.

பெரும்பாலும் கட்டுப்பாடு குழந்தையையோ அல்லது இளையோனையோ பெற்றோர்களும் ஆசிரியர்களும் குறிப்பிட்ட வழிகளில் செயற்படுமாறு கட்டாயப்படுத்தும் தன்மையையே குறிக்கின்றது. ஆனால், அவர்கள் பயன்படுத்தும் முறையைப்பற்றியோ, அது தனியன்களிடத்து ஏற்படுத்தும் விளைவுகள் குறித்தோ சிறிதும் கவலைப்படுவதில்லை. கெட்ட பழக்கங்கள் ஒரே நாளில் தோன்றிவிடுவதில்லை. அதேபோன்று, குறுகிய காலத்தில் அவைகளைக் கைவிடுவதும் இயலாது. மற்ற நடத்தை வகைகள் போன்றே ஒழுக்கத்தில் மாறுதல்கள் கற்றலின் பொது விதிகளைப் பின்பற்றிப் படிப்படியாகத் தோன்றுகின்றன. பெற்றோர்கள் பெரும்பாலும் வளர்கின்ற சிறுவன் அல்லது சிறுமி தன் நடத்தையைத் தவறாக மாற்றி அமைத்துக்கொள்ளும் தன்மை வெளிப்படையாகத் தோன்றுவதைக் கண்டு பெரிதும் ஆச்சரியமுறுகின்றனர். ஆனால், பொதுவாக இவ்வாறு நடத்தையை மாற்றியமைத்துக் கொள்வது, அவை தோன்றுவதுபோன்று திடீரென்று ஏற்பட்டதன்று. இந்த மாற்றியமைக்க முடியாத பழக்கங்கள் இளையோரிடத்துத் தோன்றுவதற்குமுன்னரே நிலைநிறுத்தப்பட்ட பல பழக்கங்கள் இருப்பதைப் புரிந்துகொள்ளத் தவறிவிடும் பெற்றோர்களைப்பற்றிய ஒரு விளக்கம் இங்கு இருக்கிறது. கட்டுப்பாடு பயன்மதிப்பைத் தரவேண்டுமென்றால், அவை (1) குழந்தையை அவனுடைய பழைய வாழ்க்கையின் அடிப்படையில் கையாளவேண்டும். (2) மனவெழுச்சி நிலைகளின் அடிப்படையில் இல்லாது அறிந்துகொள்ளும் தன்மையின் அடிப்படையில் இருக்கவேண்டும். (3) ஆட்படுவோனால் அது உணரப்பெறுதல் வேண்டும். (4) அச்செயலைக் கையாள்பவர்களின் தன்மையின் விளைவாக இல்லாது செயல் நடத்தையின் தொடர்பில் இருக்கவேண்டும். (5) செயலுக்குப் பின்னர் உடனே கவனிக்கவேண்டும். நிலைநாட்டப்பட்ட இசைவான இயல்புகளின் பழக்கங்கள், பயனுள்ள செயல்கள் ஆகியவற்றின்மூலம், கட்டுப்பாடு ஒழுக்கத்துடன் தொடர்புடையதாகவுள்ளது. கட்டுப்பாடு அப்பொழுது, தன்னைக் கட்டுப்படுத்தலுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. இவைகளில் எல்லாம் கட்டுப்பாடு அதன் துவக்கத்தையும் முடிவையும் கொண்டிருக்க வேண்டும்.

### வழிகாட்டலின் தேவை

சிறுவர் சிறுமியரது வழிகாட்டலில் அக்கறை கொண்டுள்ளோர், சுதந்திரம் அதிகாரம் ஆகிய பிரச்சினைகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்துள்ளனர். மற்றத் துறைகள்போன்று இங்கும் தனியாள் வேறுபாடுகளைக் காணலாம். ஒருவர் ஒரு விதியையோ அல்லது

தொள்கையையோ எல்லா நிலைகளுக்கும் பொருந்துமாறு கூற இயலாது, அவையெல்லாம் பொதுவான தொடர்புகொண்டிருக்கலாம் என்றுமட்டுமே கூற இயலும். நன்ருகப் பொருந்தி அமைகின்ற சிறுவர் சிறுமியருக்கு மோசமான பொருத்தப்பாடுடையோரைக் காட்டிலும் அதிகமான சுதந்திரத்தை அளிக்கலாம். பொறுப்பேற்கின்ற வாய்ப்பு அவர்களுக்குத் தரப்படவில்லை யாதலின், இவ்வாருன சுதந்திரங்களில் வழிகாட்டல் மிகமிகத் தேவையானதாகும். தற்காலக் கல்வித் திட்டங்களின் முடிவுகளிலிருந்து மாணவர்கள் அதிகமான பொறுப்பையும் சுதந்திரத்தையும் பெறும்பொழுது, சிறந்த சொந்தப் பொருத்தப்பாடுகளும், சமூகப் பொருத்தப்பாடுகளும் விளைகின்றன.

தவருன பொருத்தப்பாடுடைய இளையோர்களைப்பற்றிய பல் வேறு ஆய்வுகள் அவர்களில் பலர் யதேச்சாதிகாரத் தன்மையில் நடத்தப்பட்டனர் என்பதைக் காட்டுகின்றன. சில நிலைகளில் இளையோன் அதனைப் பின்வாங்கும் இயக்கத்தின் மூலம் சந்திக்கின்ருன்; மற்ற நிலைகளில் வெளிப்படையான எதிர்ப்பு விளைந்துள்ளது. குழந்தைப் பருவத்திலிருந்து இளையோர் பருவத்திற்கு வளரும் சிறுவர் சிறுமியர் அவர்கள் குழந்தைப் பருவத்தில் அறிந்திருந்த பிரச்சினைகளுக்கு மாருன பிரச்சினைகளைச் சந்திக்கின்றனர். வளர்ச்சியுடனும் முதிர்ச்சியுடனும் அதிகமான சுதந்திரத்தையும், அதிகமான பொறுப்பையும் பெறுகின்ருர்கள். இவ்வாருக வழிகாட்டல் எப்பொழுதும் தேவையுள்ளது. வரம்பில்லாத சுதந்திரமும், ஏதேச்சாதிகாரக் கட்டுப்பாடும் வழிகாட்டலின் தேவையை உணர்த்துகின்றன. நமது சமூக அமைப்பில் போதிய அளவு பொருத்தப்பாட்டினை ஏற்படுத்த சமூக வளர்ச்சி மிகவும் முக்கியமானதாகும். சிறுவர்களும் சிறுமியர்களும் குழுவின் அனுமதிபெற விரும்பிஞல், சில பழக்கங்களையும் மரபு வழிகளையும் கடைப்பிடிக்க வேண்டும் என்று சொல்லித்தரல் வேண்டும். டேவிஸ் (Davis) எதிர்பார்ப்புகளும் பற்ருர்வங்களும் வெவ்வேருன வகுப்புப் பண்பாடுகளில் வெவ்வேருக உள்ளன என்று சுட்டிக் காட்டுகின்ருர். பல்வேறு மாறுபட்ட சமூக வகுப்புக் குழுக்களிலுள்ள தனியன்கள் தாங்களாகத் தங்களைப்பற்றி ஏற்படுத்திக்கொண்ட கருதுகோள் இதற்கு முக்கியக் காரணமாகும். மேலும், வெவ்வேருன வகுப்புப் பண்பாடுகளில் வாழும் இளையோர்களின் நடத்தையை இது பெரிதும் பாதிக்கின்றது. டேவிஸ் குறிப்பிடுகின்ருர்:

'நடுத்தர வகுப்பு இளையோன் உடல் வலுத்தாக்குதலுக்கும், உடல்-பால் தொடர்புகளுக்கும் தண்டிக்கப்படுகின்ருன். கீழ்வகுப்பு இளையோன் இதே நடத்தைகளுக்காகச் சமூகத்தாலும், அதன் உறுப்பினர்களாலும் அடிக்கடி பரிசளிக்கப்படுகின்ருன். பற்ருர்வம், குற்றம், மனமுறிவு ஆகியவை நடத்தையுடன் கொண்டுள்ள அளவுத்

தரம் இவ்வாறான நிலைகளிலும் வெவ்வேறாக உள்ளது. ஒருவன் நடுத்தர வகுப்பு இளையோர் பண்பாட்டில் சமூக இயல்பினனாக இருப்பதற்குப் பற்றார்வம், குற்றம் போன்ற நடத்தைகள் கட்டாயத் தேவைகளாகும் என்றுகூடக் கூறவியலும்.'[5]

## தனியனின் ஒழுக்கக் கூறு (The Moral Self)

இளையோனது ஒழுக்க வாழ்க்கையினை ஆய்கின்றபொழுது சந்திக்கின்ற முக்கியத்துவம் வாய்ந்த பல பிரச்சினைகளாவன: (1) இல்லம், பள்ளி, கோயில் போன்ற பல நிறுவனங்கள் வலியுறுத்த வேண்டிய இசைவான மனப்பான்மைகள் எவை? (2) எந்தத் தனித்த பழக்க வகைகள் இணையும்பொழுது, சில குறிக்கோள்களையும் மனப்பான்மைகளையும் உண்டாக்க முனைகின்றன? (3) எவ்வாறு இது தனித்த பழக்கங்களைப் பெற்று இணைந்து ஒரு பொது மனப்பான்மையை உருவாக்க இயலும்?

### ஒழுக்க வளர்ச்சி

பெரும்பான்மையான குழந்தைகளின் ஒழுக்க நடத்தையில் செல்வாக்குள்ள சூழ்நிலை ஏதுக்களின் பட்டியலில் மிக முக்கிய இடத்தைப் பெற்றுள்ள ஏது இல்லமாகும். அவர்கள் தம்முடைய முதல் புலனுணர்வுகளிலிருந்து அவர்களுடைய பெற்றோர்களின் கட்டளை, முன்மாதிரி ஆகியவைகளின்மூலம் வழிகாட்டலைப் பெறுவதற்கு நாடுகின்றனர். ஒரு குழந்தை அதனுடைய இல்லத்திலிருந்து முதல் கருத்துக்களைப் பெறுகின்றது. இக்கருத்து அடிப்படையான பழக்கங்களும், ஒழுக்க மனப்பான்மைகளும் உருவாகின்ற காலத்தில், தோன்றுகின்றன. ஐயத்திற்கிடமின்றி ஒரு நல்ல இல்லம் ஒருசிறந்த உடைமையாகும். ஒரு கெட்ட இல்லம் மிகப்பெருஞ் சுமையாகும். வளர்ச்சியடைவதும் விரிவடைவதுமான வாழ்க்கையின் அன்றாட வாழ்வில், பருப்பொருளான சமூகத் தொடர்புகளில் ஒழுக்க சமயப் பயன் மதிப்புகளைக் காணலாம். பொருளில்லாத் திருமறைக் கோட்பாடுகளிலோ அல்லது கதைகளிலோ அல்லது மனவெழுச்சிகள் நிறைந்த சமயச் சொற்பொழிவுகளிலோ அவற்றைக் காணமுடியாது. 'ஒழுக்கமற்ற சுற்றுப்புறத்தில் வாழும் குழந்தைகளுக்கு, அவர்களுடைய வாழ்க்கைப் போராட்டத்துடன் தூய்மைகெட்ட பழக்கங்கள் இருக்குமானால், அவர்களது அடிவானம் தீமையைக் குறித்துக் காட்டுகின்ற

[5] A. Davis, 'Socialization and Adolescent Personality,' in G. E. Swanson, et al. (eds.), 'Readings in Social Psychology' (rev. ed.). New York : Henry Holt and Co., 1952, p. 529.

நிழல்களினால் இருளடைந்து இருக்குமாயின், அங்கு நல்ல சமூக மனப்பான்மைகள் உருவாகா.'[6]

தனியனது துவக்க கால வாழ்க்கை ஒழுக்கமுடையதாகவோ, ஒழுக்கமற்றதாகவோ இல்லை. அவன் பெருமளவில் அச்சமயத்தில் ஒழுக்கத்தைப்பற்றிக் கவலை கொண்டவனாய் இருக்கின்றான். அவனது ஒழுக்கம் எவ்வாறு இருப்பினும், அது வாழ்க்கையின் துவக்க ஆண்டுகளில் அவனது நடத்தையைக் கட்டுப்படுத்துவதில் பங்குகொண்ட சில எளிய சக்திகளின் விளைவாகும். இது பின்னிளையோர் பருவத்தைப்பற்றிய உண்மையன்று. இங்கு பழக்கமாக வருகின்ற ஒழுக்கத்தின் காலம் முடிவடைந்து விடுகின்றது. அவனது செயல்கள் எவ்வாறு இருப்பினும், பல்வேறு நிகழ்ச்சிகளில் அவனது ஆளுமையின் ஓர் இணைப்புப் பகுதியாக அமைந்துள்ள குறிக்கோள்களின் அடிப்படையில் அவன் சிந்திக்கின்றான், எதிர்வினை அளிக்கின்றான் என்று உறுதியாகக் கூறலாம். அப்பொழுது அவன் புதிதாக அடைந்துள்ள திறன்களையும் அக்கறைகளையும், பரந்த செயல் வினைவையும் பொதுக் குறிக்கோள்களையும் கொண்ட பிரச்சினைகளில் திருப்புகின்ற செயல் விந்தையான செயலன்று.

இது வாஷிங்டன் அரசினைச் சார்ந்த 5,500 உயர்நிலைப் பள்ளி மாணவர்களது கருத்துகளின் மதிப்பீட்டில் தெளிவாகக் காணப்படுகின்றது.[7] அம்மாணவர்களில் பெரும்பாலோர் சீனியர் மாணவர்களாவர். ஒழுக்கங்கள், குறிக்கோள்கள், சமயம், எதிர்காலம்பற்றிய பிரச்சினைகளும், உயர்நிலைப் பள்ளி இளைஞர்கள் பொதுவாகக் கோடிட்டுச் சரிபார்க்கின்றவைகளும் அட்டவணை 8—1-ல் தரப்பட்டுள்ளன.

இம் முடிவுகள், ஒழுக்கக் கோட்பாடுகளும் பிரச்சினைகளும் இவ்வயதில் முன்னணியில் தோன்றுவதாகக் குறிக்கின்றன. முன்னர் இவையெல்லாம் உணரப்படாதவையும், ஏற்றுக்கொள்ளப்படாதவையும் ஆகும். மாணவர்கள் தங்களைப்பற்றியும், தங்களுடைய நடத்தையைப்பற்றியும், மற்றவர்களது செயல்களைப்பற்றியும் நல்ல அறிவைப்பெற விரும்புகின்றனர் என்று தோன்றுகிறது.

## கோயிலின் பங்கு

குண இயல்புகளின் வளர்ச்சியில் கோயிலின் பங்குபற்றிப் பல வேறுபட்ட கருத்துகள் தரப்பட்டுள்ளன. சில ஆய்வுகள் குண இயல்புகளின் வளர்ச்சியில் கோயிலுக்குச் செல்வதால் என்ன பயன்

[6] E. J. Chave, Personality Development in Children. Chicago: University of Chicago Press, 1937, p. 270.

[7] L. J. Elias, High School Youth Look at Their Problems. Pullman, Washington: The State College of Washington, 1949.

## அட்டவணை 8—1

உயர்நிலைப் பள்ளி இளைஞர்களுக்கு ஒழுக்கம், குறிக்கோள்கள், சமயம், எதிர்காலம்பற்றிய பிரச்சினைகளின் எதிர்வினைகள் அடிக்கடி தோன்றுதல் (எலியஸ் தந்தவை).

| பிரச்சினை | சதவீதம் | | மொத்தம் |
|---|---|---|---|
| | சிறுவர் | சிறுமியர் | |
| என்னைப் பற்றிப் பெரிதாக எண்ணுதல்... | 27·2 | 33·0 | 30·4 |
| நான் செய்த தவறுகளுக்காகக் கவலைப் படுதல் ... ... ... | 14·5 | 23·3 | 19·3 |
| நான் சிறந்த முறையில் செயலாற்றுவது எப்படி ... ... | 11·9 | 18·3 | 15·4 |
| வாழ்வையும் சாவையும் பற்றியது ... | 9·7 | 18·9 | 14·7 |
| உலகத்தில் என்ன நடக்கிறது ... | 11·4 | 16·6 | 14·2 |
| நான் அதிகமாகச் சத்தியம் செய்கிறேன் | 20·8 | 8·3 | 14·0 |
| சமயத்தைப் பற்றிய மலைப்பு ஏற்படு கிறது ... ... ... | 13·5 | 14·4 | 14·0 |
| சில கெட்ட பழக்கங்களினால் கவலையுறு கின்றனர் ... ... ... | 16·3 | 11·3 | 13·5 |
| மக்கள் செய்கின்றவற்றைப் புரிந்து கொள்ளுதல் ... ... | 6·9 | 14·9 | 11·3 |
| வாழ்க்கையை மகிழ்ச்சியுடன் கழிப்பது எப்படி என்று கற்றுக்கொள்ளல் ... | 11·5 | 10·7 | 11·0 |
| பள்ளியில் ஏமாற்றுகின்ற குழந்தைகள் இருக்கின்றனர் ... ... | 8·3 | 12·6 | 10·6 |
| உயர்ந்த குறிக்கோள்களைக் கொண் டிருத்தல் ... ... ... | 8·0 | 11·6 | 10·0 |
| என்னுடைய குழுவின் ஒழுக்கங்கள் ... | 6·0 | 11·0 | 8·7 |
| சமயத்தில் நம்பிக்கை இழத்தல் ... | 9·6 | 7 4 | 8·4 |
| சிறுவர்கள் கைக்கொள்ளும் வாழ்க்கை வகை ... ... ... | 6·2 | 10·3 | 8·4 |
| பிரச்சினைகளை நேரடியாகச் சந்திப்பதில்லை | 7·8 | 8·2 | 8·0 |
| என்னுடைய நற்பெயருக்காகக் கவலை யுறுகின்றேன் ... ... | 7·5 | 7·3 | 7·4 |
| சார்பு எண்ணமும், பொறுக்காத தன்மை யும் ... ... | 4·8 | 9·1 | 7·2 |
| கோவிலுக்குச் செல்லுதல் ... ... | 6·7 | 6·8 | 6·8 |
| நண்பர்களது செய்கையினால் திக்குமுக் காடுகின்றேன் ... ... | 4·7 | 7·6 | 6·3 |
| என்னுடைய ஒழுக்கத்தைப் பற்றிக் கவலை கொள்கிறேன் ... ... | 6·4 | 4·3 | 5·2 |
| எப்பொழுதும் பிறிதோரிடமிருப்பு வாதத் தினைக் கைக்கொள்ளுதல் ... | 4·2 | 3·4 | 3·8 |
| சமயமும், பள்ளிச் சண்டைகளும் ... | 2·7 | 4·8 | 3·8 |
| கெட்ட கதைகளில் நாட்டம் ... | 5·4 | 2·0 | 3·6 |
| மக்கள் கொடுமையாகவும், தன்னல முடையவர்களாயும் இருத்தல் ... | 2·9 | 2·2 | 2·5 |
| அதிகமான தொல்லைக்குள்ளாதல் ... | 3·4 | ·9 | 2·0 |

மதிப்புள்ளது என்றும் வினவுகின்றன். இளங்குற்றவாளிகள் குறைவாகத் தோன்றுகின்றனரா என்றும் ஆய்வுகள் வினவின. இருப்பினும், தனிப்பட்ட இளையோர் குழுக்களை வைத்துக்கொண்டு நடத்திய ஆய்வுகளிலிருந்து பரந்த பொதுமைகள் உண்டாக்குவதில் எச்சரிக்கையுடனிருக்க வேண்டும். குணவியல்புகளின் முன்னேற்றத்தில் கோயில் கொள்ளும் பங்கில் அக்கறை கொண்டோரிடம் சில முக்கியக் கேள்விகளைக் கேட்க வேண்டும்: எந்த அளவிற்குக் கோவில் இளைஞர்களிடம் செல்வாக்குக் கொண்டுள்ளது? இளைஞர்களின் வாழ்க்கையில் சமயம் கொள்ளும் பங்கு யாது? அது இளையோர்கள் பயனுள்ள நல்ல தன்மையுடைய நடத்தை வகைகளையும், ஒரு சிறந்த வாழ்க்கை மெய்யுணர்வையும் பெறுவதற்கு, எந்த அளவில் அதிகப் பயனைத் தர இயலும்?

டெட்ராய்ட் (Detroit) காவல் துறையின் இளங்குற்றவாளித் துறையும் (Juvenile Bureau), குற்றத்துறையும் அளிக்கும் புள்ளியியல் கணக்குகளிலிருந்து இம் முதல் இரண்டு கேள்விகளுக்குரிய விடைகளை நாம் அறியலாம். 2,137 சிறுவர்களிடம், அவர்கள் கோவிலுக்குச் செல்லும் பழக்கம்பற்றிச் சேகரிக்கப்பட்ட குறிப்புகள் அட்டவணை 8-2-ல் தரப்பட்டுள்ளன.[8] சிறுவர்களில் 40 சதவீதத்தினருக்கு

**அட்டவணை 8—2**

டெட்ராய்ட் காவல்துறை 1946-ல் சிறுவர்களைப்பற்றி வந்த முறையீடுகளின் காரணமாக நேரடி உரையாடல் மூலம் அவர்களின் மாதாகோவில் வருகைபற்றிச் செய்த மதிப்பீடு.

| வருகையின் அடுக்கு நிகழ்வு | சிறுவர்களின் எண்ணிக்கை | சிறுவர்களின் சதவீதம் |
|---|---|---|
| ஒழுங்காகச் செல்பவர் ... | 931 | 43·56 |
| எப்பொழுதாகிலும் ... | 546 | 25·54 |
| அரிதாய் ... ... | 339 | 15·86 |
| எப்பொழுதும் இல்லை ... | 302 | 14·15 |
| அதைப்பற்றிக் கூறுதவர் ... | 19 | ·89 |
| மொத்தம் ... | 2,137 | 100·00 |

[8] W. W. Wattenberg, 'Church Attendance and Juvenile Misconduct', Sociology and Social Research, 1950, Vol. 34, pp. 195-202.

மேல் ஒழுங்காகவே கோவிலுக்குச் சென்றார்கள் என்று அது காட்டுகின்றது. 14·15 சதவிதத்தினர்மட்டுமே கோவிலுக்கு எப்பொழுதும் செல்லுவதில்லை என்று குறிக்கின்றது. மாதாகோவிலுக்குப் போகின்ற சிறுவனே மாதாகோவிலுக்குப் போகாத சிறுவர்களைக் காட்டிலும் அதிக ஆபத்தினையுடையவன் என்று கூறுவதற்குச் சான்றுகள் உள்ளன. இருப்பினும், இதைப்பற்றிய முடிவுகளும், ஆய்வில் எடுத்துக்கொண்ட மற்ற நிலைகளின் முடிவுகளும் தெளிவில்லாமல் இருக்கின்றன. அட்டவணை 8—3-ல் ஒழுங்காகக் கோவிலுக்குச் செல்லும் சிறுவர்களின் குற்றங்களின் அடுக்கு நிகழ்வு மற்றத் தரங்களில் அறிவிக்கப்பட்டோருடன் ஒப்பிடப்பட்டது. (அதாவது, எப்போதாவது, அரிதாய் எப்பொழுதும் இல்லை போன்ற நிலையிலுள்ளவர்கள்). திருடுதலிலும், கன்னமிடுதலிலும் அதிகமான மாறுதல்கள் காணப்பட்டன. கோயில், குற்றம் செய்வதைக் குறைக்கின்றது என்று முடிவு எடுப்பதற்கு முன்னர், கோவிலுக்குப் போவோரின் இல்லப் பின்னணிபற்றிய எச்சரிக்கையான பகுத்தாய்வு செய்தல் வேண்டும். இவ்வாய்வு கோவிலுக்குச் செல்லுதல் வாழ்க்கையின் முழு அமைப்பு அல்லது சிக்கலில் ஒருவகையான நிலை என்ற கற்பிதத்தையும், அவ்வாறு செல்லுதல் குற்ற நடத்தைக்குச் செல்லும் மனப்போக்குகளைக் குறைக்கின்றது என்ற கற்பிதத்தையும் ஆதரிக்கின்றது. வெவ்வேறான சமய நிகழ்ச்சிகள் வெவ்வேறான விளைவுகளை அளிக்கின்றன என்பதில் ஐயமில்லை. ஆனால், நல்ல கல்வி, உளவியல் கொள்கைகளின் அடிப்படையில் உருவானதும், இளையோர்களது தேவைகளைப் பூர்த்திசெய்ய உருவானதுமான நிகழ்ச்சி மிகவும் பயனுடையதாய் இருக்கவேண்டும்.

## பள்ளியின் பங்கு

ஜூனியர் சீனியர் உயர்நிலைப் பள்ளிகள், அவர்களது திட்டங்களை, மாணவர்கள் அதிகமான எண்ணிக்கையில் உயர்நிலைப் பள்ளியில் நுழையும்போது அவர்களுக்கிருக்கின்ற அக்கறைகளுக்கும் திறன்களுக்கும் பொருந்தியவாறு கொள்ளத் தவறிவிடுகின்றன என்பது அவர்கள்மீது சுமத்தப்படுகின்ற பெருங் குற்றச்சாட்டாகும். இத் தோல்வி நமது ஜனநாயகக் குறிக்கோளைத் தவறான முறையில் பயன்படுத்தியதன் விளைவாகும். குழந்தைக்கு, அவன் பெற்றிருக்கின்ற திறன்கள் வளர்ச்சியடைவதற்கான வாய்ப்பினை அளிப்பதே பள்ளியின் குறிக்கோளாய் இருக்கவேண்டுமேயன்றி, எல்லாத் திறன்களுக்கும் பொருந்துமாறு இருக்கின்ற பெரிய கல்வி ஏணியை அமைப்பதைப் பள்ளியின் குறிக்கோளாகக் கொள்ளக்கூடாது. இளையோர் சிறுவன், நல்ல பொருள் உணர்ந்த நுண்ணறிவுடைய பெற்றோர்களால் அவனது திறமைக்கு அப்பால் உந்தப்பட்டால்,

பெற்ருேர்களும் பள்ளிகளும் பொதுவான தோல்வியினை அடைவதாக ஸ்லேட்டரி (Slattery) விவரிக்கின்ருர். இத் தொடர்பில்தான், தர அறிவிப்புக் கடிதங்கள், பல பெற்ருேர்களது கையில் குழப்பத்தையும் தொல்லையையும் அளிக்கும் ஏதுவாகின்றன.

### அட்டவணை 8—3

கோவிலுக்குச் செல்வதற்கும், சிறுவர்கள்மீது சாட்டப்பட்ட குற்றங்களுக்கும் இடையேயுள்ள தொடர்பு; 1946-ல் டெட்ராய்ட் காவலரிடமிருந்து வந்த முறையீடுகளின் காரணமாக நேரடி உரையாடல் மூலம் அறிந்தது:

| குற்றச்சாட்டு | மொத்தம் | ஒழுங்காக ஒருகைக. | மற்றவைகள் யாவும். | விகிதாச்சாரம் ஒழுங் கானவை | மற்றவை |
|---|---|---|---|---|---|
| திடீர் தாக்குதல்கள்... | 45 | 20 | 25 | 10 | 13 |
| பால் குற்றங்கள் ... | 48 | 24 | 24 | 10 | 10 |
| திருட்டு ... | 25 | 8 | 17 | 10 | 20 |
| கன்னமிடல் ... | 263 | 105 | 158 | 10 | 15 |
| களவு ... | 468 | 207 | 261 | 10 | 12 |
| கார் திருட்டுகள் ... | 96 | 50 | 46 | 10 | 10 |
| குடித்தல் ... | 26 | 12 | 14 | 10 | 11 |
| ஒழுங்கற்ற தன்மை ... | 90 | 33 | 57 | 10 | 18 |
| போக்குவரத்துக் குற்றங்கள் ... | 42 | 19 | 23 | 10 | 12 |
| மற்றவைகள் ... | 604 | 260 | 344 | 10 | 13 |
| மொத்தம் ... | 1,707 | 738 | 969 | 10 | 13 |

ரோட்ஜர் 80 நு.ஈ. பெற்றிருந்தான். அவன் தந்தை உயர்நிலைப் பள்ளி முதல்வராக இருந்தார். அவர் தன்து மகன் ஓர் அலுவலக உழைப்பாளியாக இருக்கவேண்டுமென விரும்பினுர். அவரது மகன் உயர்நிலைப் பள்ளியை முடிக்க முடியாது எனும் உண்மையைக் காண மறுத்தார். தந்தையின் நிலை காரணமாக, ரோட்ஜரின் தோல்வி', அவனுக்குத் தேர்வு பெறும் படிவங்களைத் தருவதன்மூலம் மறைக்கப் பட்டது. ரோட்ஜர் உயர்நிலைப் பள்ளிக்கு மேலும் மேலும் சென்றதனுல், அவன் மேலும் மேலும் தொல்லைகளுக்கு ஆளாஞன்,

ரோட்ஜர் ஓரளவு இயந்திரத்திறனைப் பெற்றிருந்தான். இயந்திரச் செய்திகளில் அதிக அக்கறையுடையவனாய் இருந்தான். கல்விப் பாடங்களைக் கண்டு மலைத்து, அவனது இயற்கையான போக்குகளைக் கூறுவதற்கு முயன்று தோல்வியுற்று, அதனால் மனமுறிவு பெற்று ரோட்ஜர் தனது அக்கறைகளை மறைமுகமான வழிகளில் வெளிக்காட்டினான்.

அவன் மிருகப் பொறிகளைத் திருடுவதற்குத் தொடங்கினான். அதை மறைப்பதற்காக அதனுடைய அடையாளத்தைப் போக்க, மற்றப் பையன்களது மிருகப் பொறிகளைத் தனித்தனியாகப் பிரித்து, வெவ்வேறு பகுதிகளை இணைத்து, அப்பகுதிகளைக் கொண்டே புதிய ஒன்றினைச் செய்வான். இவ்வழிகளில் வெற்றியடைவதானது மேலும் பல பேராசைத் திருட்டுகளைச் செய்வதற்குத் தூண்டியது. வதந்தி, தந்தையின் நிலைக்கு ஆபத்து வருகின்ற அளவுவரை, தந்தையின் காதுக்கு எட்டவில்லை. தந்தை கேள்வியுற்றதும் கோபத்துடன் மகனருகே சென்றார். பையனை ஒரு தொழிற் பள்ளிக்கு அனுப்பும்படி தந்தையிடம் சொல்வதற்கு மிக அதிகமான தூண்டுதல் தேவையாயிருந்தது. ஆனால், அவன் போனபொழுது அவனது நடத்தைத் தொல்லைகள் அவனை விட்டு விலகின.[3]

அதிகாரம் 15-ல் மாணவர்கள் உயர்நிலைப் பள்ளியை விட்டுச் செல்வதற்கு மிக முக்கியமான காரணம் பள்ளியினை விரும்பாமைதான் என்று காட்டுவதற்குச் சில ஆதாரங்கள் தரப்பட்டுள்ளன. பல மாணவர்கள் பள்ளியைவிட்டு விலகல் குற்ற நடத்தை தோன்றுவதற்கு ஒரு துவக்கநிலையாகவே உள்ளது. பள்ளிகள் இயற்கையான குற்றவாளி ஆற்றல் கொண்டோரிடம் தொடர்பு கொள்ளுவதில் பலனற்றவையாக ஆகும் ஏதுக்களின் பட்டியல் கீழே தரப்பட்டுள்ளது:

1. சில ஆசிரியர்கள் இளையோர்களின் தேவைகளை அறிவதற்குரிய திறனற்றவர்களாய் இருக்கின்றனர்.

2. சில ஆசிரியர்கள் மாணவர்களிடத்தே தோன்றுகின்ற பிரச்சினைகளைச் சந்திப்பதற்குரிய திறனற்றவராய் இருக்கின்றனர்.

3. ஆசிரியர்கள் அதிகமான வேலைப்பளு கொண்டிருப்பதனால், நல்ல கல்வித் திட்டத்திற்குத் தேவையான தனிக் கவனத்தை இளையோருக்குத் தர இயலவில்லை.

4. வகுப்புத் திட்டம் நல்ல நடத்தையை ஊக்குவிப்பதாக எப்பொழுதும் இருப்பதில்லை.

[3] R. J. Slattery, 'Spotting the Maladjusted Pupil,' The Nation's Schools, 1942, Vol. 30, pp. 45-46.

5. பாடத் திட்டப் பொருள்கள் பொருளற்றவையாகவோ அல்லது வெற்று வார்த்தைகளின் அமைப்பாகவோ மாணவர்களுக்குத் தோன்றுகின்றன.

6. வகுப்புக்குப் புறத்தேயுள்ள செயல்கள் நன்றாக அமைக்கப் படவில்லை. தனி மாணவர்களது அக்கறைகளுக்கும், தேவைகளுக் கும் ஏற்றவாறு அவை தரப்படவில்லை.

7. இயற்கையாகக் குற்றவாளிக் குணங்கள் பொருந்தியவர் களைக் கண்டுபிடிக்கவும், அவர்களிடம் தொடர்புகொள்ளவும் ஆசிரி யர்களுக்குத் தேவையான உதவியைப் பள்ளி அளிப்பதில்லை.

8. பள்ளித்திட்டம் சமுதாய வாழ்வுடன் போதிய அளவு இணைந்து நல்ல ஒழுக்கக் கருதுகோள்களையும், நடத்தையையும் வளர்ப்பதில்லை.

**சுற்றுப்புறம்**

இளையோர்களது சமூகச் சூழ்நிலை, இல்லத்திற்கும் பள்ளிக்கும் மட்டும் கட்டுப்படுத்தப்படவில்லை. சுற்றுப்புறமும் சூழ்நிலைகளைத் தீர்மானிக்கும் சக்தி வாய்ந்ததாயுள்ளது. பள்ளித்தரமும், சுற்றுப் புறமும் நண்பர்களைத் தேர்ந்தெடுப்பதில் மிக முக்கியமான தீர்மானிக் கும் ஏதுக்களாக இருப்பது முன்னைய அதிகாரத்தில் குறிப்பிடப்பட்டுள் ளது. இருப்பினும், சுற்றுப்புறம்மட்டும் விளையாடும் நண்பர்களைத் தேர்ந்தெடுக்கும் முக்கிய ஏதுவன்று. சமுதாயத் தொடர்பிலுள்ள அதன் குறிக்கோள்கள் வளர்கின்ற சிறுவர் சிறுமியரது நடத்தை மனப் பான்மைகளைப் பெருமளவு தீர்மானிக்கின்றன. குற்றவாளி வெளிநடத் தைக்கும், தனிப்பட்ட சொந்தச் சூழ்நிலை ஏதுக்களுக்கும் இடையே நெருங்கிய தொடர்பு உள்ளது. அண்மை ஆண்டுகளில் சிறுவர் களில் 'குற்றவாளிகளாக ஆக்கப்படுவோர்' என்று கருதப்படக்கூடிய சிறுவர்களுக்குத் தனித்த, நல்ல எதிர்காலக் குடிமக்களுக்குரிய பயிற்சியினை அளிக்கும் முயற்சிகள் செய்யப்பட்டு வருகின்றன. இம் முயற்சிகள் பயனற்றவையல்ல என்று சில தனியாள் வரலாறுகள் கூறுகின்றன. இருப்பினும், பெரும்பாலும் நிகழ்ச்சிபற்றிய முடிவுகள் நம்பிக்கையிலும் அல்லது அவாவுள்ள சிந்தனையின் அடிப்படை யிலுமே உள்ளன. ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட சிறுவர்களின் வரலாறுகளில், அவர்களுடைய வாழ்க்கை நல்ல பாதைகளை நோக்கி அரண் அமைக்கவும் செய்திருந்தன. அவைகளின் அடிப்படையிலேயே இம்முடிவுகள் எழுந்துள்ளன.

இளங் குற்றவாளிகளின் மனப்பான்மைகள் பெருமளவில் மற் றவர்கள் இவர்கள்மீது கொள்ளும் மனப்பான்மைகளின் விளைவுக ளாகவும், குறிப்பாகச் சமூகம் இவர்களைப்பற்றிக் கொள்ளும் எண்

ணத்தின் விளைவாகவும் ஏற்படுகின்றன என்று வலியுறுத்தல் வேண்டும். பதின்வயதுக் குற்றவாளிகளிடையே செய்யவேண்டிய வேலை, அவர்களது மனப்பான்மைகளை மாற்றுவதற்கு முதியோர் சமூகத்தின் நல்ல நம்பிக்கையையும் எண்ணங்களையும் அறிந்துகொள்ளச் செய்வதுதான். இளங் குற்றவாளிகளின் நன்மதிப்பைப் பெறும் கலையை அறிவதற்குத் தகுதியான ஆய்வு, ஹேர்லம் தெருக்குழுக்களின் திட்டமாகும் (Harlem Street Clubs Project).[10] இத்திட்டத்தின் முடிவுகள் குற்றவாளி பொதுவாகக் கடுமையானவனுகவும், தீரமுடையவனுகவும், அன்புக்குப் பதில் வெறுப்புணர்ச்சி கொண்டவனுகவும் இருப்பான் என்ற கருத்தினை மறுத்தன. இவை பள்ளியிலோ, இல்லத்திலோ, சமூக நிகழ்ச்சிகளிலோ அல்லது வாழ்க்கையில் ஏதாவது ஒரு பகுதியிலோ ஏற்பட்ட தோல்வியின் காரணமாகத் தோன்றிய முனைப்புகளின் விளைவாக உண்டான தற்காப்பு இயக்கங்களாகப் பெரும்பாலும் இருக்கின்றன.

ஹார்லம் பதின்வயதுக் குழுவினருடன் பணிபுரிந்தவர்களின் முயற்சிகளின் விளைவாக, நான்கு மிகவும் திட்டமாக அமைக்கப்பட்ட வெறுப்புணர்ச்சிகொண்ட தன்னுணர்வுள்ள குழுக்கள் மதிக்கத்தக்க திருச்சங்கங்களாக மாற்றப்பட்டன.[11] பல்வேறு பதின்வயதுச் சங்கங்கள் திட்டமிட்டு அமைக்கப்பட்டு, சென்ற பத்தாண்டுகளாக அவைகள் ஆய்வு செய்யப்பட்டன. இச்சங்கங்களில் பணிபுரிவோர் சிறுவர்களுடைய தன்மையைப்பற்றிய உணர்வினுலும், அவர்கள் அளிக்கும் உண்மையான நட்பினுலும் குற்றவாளிக் குழுக்களைச் சட்டத்திற்கு மதிப்புத் தருகின்ற இளைஞர் குழுக்களாக மாற்றமுடியும் எனக் கூறுகின்றனர். இளையோர்களது தேவைகளுக்காகவும், அவர்களை நல்ல குடிமக்களாக ஆக்கவும் அமைக்கப்பட்ட சமுதாய நிகழ்ச்சிகளைப்பற்றிக் கூறும் அதிகமான செய்திகள் அதிகாரம் 14-ல் தரப்பட்டுள்ளன.

### பொழுதுபோக்கு அல்லது குற்றநடத்தை

இளைஞர்களின் பொழுதுபோக்கிற்கும், இளங்குற்றவாளிகளுக்கும் இடையே பல ஒற்றுமைகள் இருக்கின்றன. குறிப்பாகக் குற்றவாளிகளாக ஆகின்ற துவக்க காலத்தில் இவ்வொற்றுமைகள் அதிகமாகக் காணப்படுகின்றன. குற்றம் செய்தல் பெரும்பாலும் விளையாட்டின் விளைவாக ஏற்படுகின்றது என்பதைக் கீழ்க்கண்ட செயல்களிலிருந்து அறிந்துகொள்ளலாம்.

[10] Working with Teen-Age Gangs. Welfare Council of New York City, 1950.

[11] D. A. Stott, Saving Children from Delinquency. New York: Philosophical Library, Inc., 1953, Chap. 4.

சிறுவர்கள் தங்களைக்காட்டிலும் சிறியவர்களை நகரப் பூங்காவில் ஓரளவு உடையைக் கழற்றிவிடுவதன்மூலம் தொந்தரை செய்யலாம் அல்லது துன்புறுத்தலாம்.

சிறுவர்கள் மலைப்பக்கம் நிறுத்தியுள்ள கார்களிலுள்ள பிரேக்குகளைக் கழற்றி, அவை மலைச்சரிவில் ஓடுவதையும் மற்றொரு கார்மீது மோதுவதையும் பார்ப்பார்கள்.

சிறுமியர் ஆசிரியரின் மேசைமேல் ஒட்டிக்கொள்ளும் சவ்வு மிட்டாயைப் பதித்துவைத்தல்.

சிறுமியர் ஒளிந்துகொள்ளுதல் அல்லது ஆசிரியர் தன்னுடைய மேசைக்குள் வைத்திருக்கும் தபால் வில்லைகள் அல்லது முத்திரைகளைக் கிழித்தல்.

மாணவர்கள் ஒன்று சேர்ந்து கறிவகைகள் விற்கும் வண்டியிலிருந்து கறிவகைகளைத் திருடுதல். இது எப்படி நிகழ்கிறதென்றால், ஒரு மாணவனை அந்த வண்டிக்காரனிடம் தொந்தரை கொடுக்கின்ற செயலில் ஈடுபடவைத்து, மற்றவர்கள் வண்டிக்காரன் கவனம் அங்கு இல்லாதபொழுது திருடுதலாகும்.

இல்லம் அல்லது பள்ளியிலுள்ள மரபுக்கு மேம்பட்ட நிலையில் இச்செயல்கள் அடைவுக்குள்ள தேவையைப் பூர்த்தி செய்யலாம். ஒரு பரிவு அதனுடன் இருக்கும்பொழுது, நிலைமை மிகவும் சிக்கல் வாய்ந்ததாகிவிடுகிறது. அதாவது, அதிகப் பசியுடன் இருக்கும் இளையோனுக்குச் சுவையான ஒரு கறிவகை கிடைத்தால் எப்படியோ அது போல ஆகிவிடுகின்றது.

மரபு, பொழுதுபோக்கில் செய்வதுபோன்றே குற்றம் செய்தலிலும் முக்கிய வேலையைச் செய்கின்றது. பொழுதுபோக்கும், குற்றம் புரிதலும் பெரிய அளவில் குழுச்செயல்கள் என்றாலும், சில சமயங்களில் தனியாகவும் இயங்குகின்றன. இருப்பினும், இக்குழுக்கள் சமுதாயத்தின் பழக்கங்களையும் பொதுநலத்தையும் எதிரொலிப்பதில் பெருமளவில் பிரதிபலிக்கின்றன. பொழுதுபோக்குத்தன்மை ஆக்க நிலையிலுள்ளது. ஆனால், குற்றம் செய்தல் அழிவுத்தன்மை உடையதாகும். குற்றம் செய்தல் சட்டத்திற்குப் புறம்பானதாகும். பொழுதுபோக்கு சட்ட வரம்பிற்குட்பட்டதாய் இருக்கும். எப்பொழுதாவது விளையாடுதல், குற்றம் செய்யும் வினைகளுக்கு வளர்ச்சியடையலாம் அல்லது நற்பயனை விளைவிக்கின்ற பொழுதுபோக்காக வளர்ச்சியடையலாம். சான்றாகச் சிறுவர்களும் சிறுமியர்களும் பாழடைந்த பங்களாவை ஒரு சிறு கொட்டகையாகப் பயன்படுத்தலாம். இத்திட்டத்தில் அவர்கள் குப்பை கூளங்களை அகற்றிவிட்டு, மேடையை நிர்மாணித்து, அவர்களது துவக்க நாடக ஆட்டத்திற்கு அவர்களின்

பெற்றோர்களையும் நண்பர்களையும் அழைக்கலாம். இதற்கு மாறாக இந்தப் பாழடைந்த பங்களாவை ஒழுக்கமற்ற செயல்களைச் செய்யும் இடமாகவோ திருட்டுப் பொருள்களை மறைக்கும் இடமாகவோ பயன் படுத்தலாம்.

இளையோர்களைக் கொடியவர்கள் என்றோ குற்றவாளிகள் என்றோ வகைபடுத்துவதற்கு அவர்களிடம் இயற்கையாக அல்லது வளரக்கூடியதாக ஒன்றும் இல்லை. முக்கியமான மாறுந்தன்மை யுள்ள பொருள் இச்சிறுவர்களுக்கும் சிறுமியருக்கும் இல்லத்திலும், பள்ளியிலும், கோயிலிலும், மற்றும் பல்வேறு சுற்றுப்புறங்களிலும் பெறு கின்ற கல்வியும் வழிகாட்டலுமே ஆகும். அவர்களைச் செல்வாக்குக் குள்ளாக்கும் சக்திகள் இசைவானதாய் இருந்தால் விரும்பத்தக்க செயல்களையும், இசைவில்லாது இருந்தால் விரும்பத்தகாத பழக்கங் களையும் பார்க்கலாம். சிறுவர்களும் சிறுமியர்களும் குற்றத்தன்மை யுள்ள பழக்கங்களை வளர்த்துக் கொண்டபின், இப்பிரச்சினைகள் மிகவும் துயரமானதாய் ஆகிவிடுகின்றன. புதுப் பழக்கங்கள், புது மனப்பான்மைகள், மாறுதலுக்குள்ளான குறிக்கோள்கள் உண்டாக் கப் பெறுகின்றன.

பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளின் மூலமாகக் கட்டுப்படுத்தப்பட்ட செயல்கள், இளையோர்களின் குறும்புகளையும் சேட்டைகளையும் வழி மாற்றவல்ல ஏதுக்களாக இருப்பதால், பொழுதுபோக்கு வசதிகள் அதிகமாக ஏற்படுத்தப்படுகின்றன. இக்குறும்புகளும் சேட்டைகளும் அவைகளை நோக்குமிடத்துத் தவறாகத்தோன்றுவதில்லை.எனினும், சில சமயங்களில் பெருங்கேடுகளுக்கும் அஞ்சத்தக்க முடிவுகளுக்கும் இழுத்துச்செல்லும். சில சமுதாயங்கள் சிறுவர் சிறுமியரது சத்துக்களை எவ்வழிகளில் திருப்புகின்றன என்பது ஹாலோவியன் செயல் களால் நன்றாக விளக்கப்படுகின்றன. மறை மர்ம, ஆரஞ்சு கருப்பு மரபுகளின் தொடர்பில் (mystic orange-and-black traditions) உள்ள பல குறும்புகள் சில சமயங்களில் மிகவும் கேடு பயப்பதோடு மட்டுமல்லாமல் தொந்தரையும் பயக்கின்றன. பல நகரங்கள் உடை அணிகளையும் பல்வேறுவகையான போட்டிகளையும் கட்டுப் பாடுள்ள விளையாட்டுகளையும் ஏற்பாடு செய்கின்றன. இதனை ஹாலோவியன் நிகழ்ச்சிகளின் தொடர்பில் காணலாம்.

## குறிக்கோள்களும் பயன் மதிப்புகளும்

குறிக்கோள்களும் பயன்மதிப்புகளும் மனப்பான்மைகளி லிருந்து, அவைகளில் எப்பொழுதும் இருக்கின்ற தவிர்க்க முடியாத தன்மையால் மாறுபட்டுள்ளன. இளையோன் கணக்கிலடங்காத மனப்பான்மைகளைக்கொண்டிருக்கிறான் என்றும், அவை பெரும்பாலும் முரண்பாடானவைகளாகவும் இருக்கின்றன என்றும் முன்னரே கூறப்

பெற்றது. குறிக்கோள்கள் எண்ணிக்கையில் மிகவும் சிறிய அளவிலேயே இருக்கின்றன. அவை நடத்தையின் அகன்ற, வழிகாட்டும் கொள்கைகளாக இருக்கின்றன. அவைகள் கொள்கைகளாதலின், ஒருவனது வாழ்க்கைக்கு வழியையும் நிலைத்து இருக்கும் தன்மையையும் அளிக்கின்றன.

## குறிக்கோள்களும் இளையோனும்

நடத்தைக்கூறுகள் இணைந்து ஒரு பொதுத் திட்டமாகவோ அல்லது வகையாகவோ மாறி, வளர்ச்சி மேலும் செயலுறுவதற்கு ஒரு சக்திமிக்க உந்துவாகவோ அல்லது போக்காகவோ ஆகின்றன. பழக்கங்களின் தொடர்பில் இவை நடத்தையைத் தூண்டுவனவாகக் கருதப்படுகின்றன. இவ்வாறு பழக்கங்களின் பல்வேறு கூறுகள் இணைகின்றபொழுதுதான் குறிக்கோள்கள் தோன்றுகின்றன. அது தனியனது நடத்தையைக் கட்டுப்படுத்த முயல்கிறது. வாழ்க்கையின் துவக்க ஆண்டுகளில் குறிக்கோள்கள் குழந்தையின் அகத்தேயுள்ள போக்குகளுக்கும் சூழ்நிலைச் சக்திகளுக்கும் ஏற்றவாறு உருவாகின்றன. தனியனது பட்டறிவுகள் மிகக்குறுகிய அளவில் உள்ளன. குறிக்கோள்கள் மிகவும் அடிப்படையானவைகளாக இருக்கின்றன. அவை பெரும்பாலும் தனியனது சொந்த நலத்தையும் இன்பத்தையும் பொறுத்ததாகவே உள்ளன. (சமூக இயல்பினனுக்கும் செய்கை, விளையாட்டிலும், சங்க நடவடிக்கையிலும், சமூக வாழ்க்கையிலும் இவை போன்றவைகளிலும் உள்ளவற்றை ஏற்கெனவே விவாதிக்கப் பெற்றுள்ளது.) ஆனால், நாம் சமூக இயல்பினனுக்கும் முறையை வளர்ச்சியடைவதும் முதிர்ச்சியடைவதுமான ஒரு முறை என்று கருதுவதனுல் குறிக்கோள்களின் வளர்ச்சியையும் அவ்வாறே கருதவேண்டும். குறிப்பாக 12-லிருந்து 21-வரை விரிவும், வளர்ச்சியும் அடைகின்ற வாழ்க்கைப் பருவமாதலின் அவ்வாறே கருதவேண்டும். அப்பொழுது குறிக்கோள்கள் முதிர்ச்சியையும் பட்டறிவையும் பொறுத்து அவை குறுகலாகவோ அல்லது பரந்த முழு வாழ்க்கையுடன் இணைந்து விரிவாகவோ இருக்கலாம்.

குறிக்கோள்கள், மனப்பான்மைகள் போன்றே குழந்தை வாழ்கின்ற, கற்ற சூழ்நிலையில் முழுகியுள்ளன. இல்லம், கோயில், பள்ளி போன்ற இளைஞர்களுக்கான நிறுவனங்கள், சிறுவர்களுக்கும் சிறுமியர்களுக்கும் நல்ல, இசைவான மனப்பான்மை வளர்ச்சிபெறவேண்டும் என்பதை அவைகளின் முக்கிய நோக்கங்களில் ஒன்றுகக் கொண்டுள்ளன. அந்நிறுவனங்களின் வேலைபற்றிக் குறிப்பிடும்பொழுது ஹேவிக்கர்ஸ்டும் மற்றவர்களும் கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டுள்ளனர். "............. இளைஞர்களுக்குச் சேவைசெய்யும் நிறுவனங்கள் ஆசிரியர்கள், பாதிரியார்கள், இளைஞர்குழுத் தலைவர்கள் ஆகியோர்

வாயால் சொல்லிக் கொடுப்பதன்மூலம் எவ்வளவு முடியுமோ அவ்வளவு அல்லது அதற்கு மேற்பட்ட வகையில் தங்கள் நடத்தையின் மூலமாக இளைஞர்கள் குறிக்கோள்கள் அமைத்துக் கொள்வதில் பெரும் செல்வாக்குக் கொண்டிருக்கின்றனர்.'[12]

## பயன்மதிப்புகள்—அவைகளின் பொருளும் முக்கியத்துவமும்

மனப்பான்மைகளையும், குறிக்கோள்களையும், பயன்மதிப்புகளையும் தனியாகப் பிரிக்க எடுக்கும் எந்த முயற்சியும் தவருனதாகவே முடியும். பயன்மதிப்புகள் நாம் அறிந்தவற்றைக் குறிப்பதல்லாமல் நாம் எதை முக்கியம் என்று கருதுகின்ருேமோ அதைக் குறிக்கின்றன. அவைகள் ஆளுமைக்குள் திட்டமாக அமைக்கின்ற ஏதுக்களாகும். அவை ஒழுக்கங்கள், குணவியல்பு ஆகியவற்றின் தொடர்பில் மிகவும் முக்கியமானவையாகும். ஸ்பெரேன்ஜர் (Spranger) அளிக்கும் ஆறு முக்கிய வகைகளின் சுருக்கமான விளக்கங்களிலிருந்து அவற்றைச் சிறப்பாக அறியலாம்.[13] ஆறு வகைகளாவன: (1) கோட்பாட்டு நிலை: கோட்பாடுகளையும் அறிவையும் எல்லாவற்றிற்கும் மேலான முக்கியத்துவம்வாய்ந்த பொருள்களாகத் தனியன் கருதுகின்ருன். (2) அழகு நிலை: அழகிற்கும் எழிலிற்கும் அதிக முக்கியத்துவம் தரும் தனியனை இந்நிலை குறிக்கின்றது. (3) பொருளியல் நிலை: இந்நிலையில் ஒருவன் பொருள்களது இடப்பொருள் அல்லது பொருளியல் பயன்மதிப்பினுல் அவற்றை விரும்புகின்ருன். (4) சமூக நிலை: சமூக ஏதுக்களுக்கு ஒருவன் குறிப்பிடத்தக்க முக்கியத்துவத்தை அளிக்கின்ருன். (5) அரசியல் நிலை: அதிகாரத்திற்கும் மற்றவர்களைக் கட்டுப்படுத்துவதற்கும் மிகவும் தீவிர ஆசைகொண்ட தனியனை இந்நிலை உணர்த்துகின்றது. (6) சமயநிலை: ஒருவன் அவனது வாழ்க்கைப் பட்டறிவுகளுடனும் பயன்களுடனும் கொள்ளும் உறவுகளில் திருப்தியும் மகிழ்ச்சியும் இந்நிலையில் கொள்கிருன். இப்பயன்மதிப்புகள் ஆல்போர்ட்டாலும் வெர்னனுலும் (Allport and Vernon) அளக்கக்கூடிய சோதனைத்திட்டமாக அமைக்கப்பெற்று இவைகளிலிருந்து குறிப்பிடும்படியான ஆராய்ச்சி தோன்றியுள்ளது. தனியன்களின் தேர்வுகள்பற்றி அறிவதற்கும் அளவிடுவதற்கும் பல முயற்சிகள் நடந்து வருகின்றன.

[12] R. J. Havighurst, M. Z. Robinson and M. Dorr, 'The Development of the Ideal Self in Childhood and Adolescence,' Journal of Educational Research, 1946-47, Vol. 40, p. 257.

[13] E. Spranger, 'Lebensformen' (*ஆங்கிலத்தில்* 'Types of Men' *என்னும் தலைப்பில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது*). Halle, Germany; Niemeyer, 1928.

குண இயல்புகள் உருவாவதில் பயன்மதிப்புகளின் முக்கியத்துவத்தைப் பல்வேறு ஆய்வாளர்கள் வலியுறுத்துகின்றனர். லெக்லி (Leckley) என்பவர் இப்பயன்மதிப்புகள் ஆளுமையுடன் இணைந்து அவைகளுக்கு எதிராக இருக்கக்கூடிய புதுப் பயன்மதிப்புகளை ஏற்றுக்கொள்ளாவண்ணம் தடைகளாக இயங்குகின்றன என்று கூறியுள்ளனர்.[14] ஆளுமை ஒரே மாதிரியாகவும் நிலைத்திருக்கும் வண்ணமும் இருக்கவேண்டுமானால் இது கட்டாயத் தேவையாகும். லெக்லியால் நடைமுறையில் உள்ள நான்கு விதிகள் தரப்பெற்றன: (1) ஏற்கெனவே தனியனால் ஏற்றுக்கொள்ளப்பட்ட பயன்மதிப்புளுக்கு எதிராக உள்ளவைகளைத் தள்ளிவிடுதல். (2) புதிய பயன் திப்புகள் ஏற்றுக்கொண்டுள்ளவைகளுக்கு எதிராக இல்லாத வாறு திருத்தி அமைக்கப்பெறுதல். (3) புதுப் பயன்மதிப்புகள் பழைய பயன்மதிப்புகளுக்கு எதிராக இருக்குமாயின் அவற்றைக் கவனியாது விட்டு பயன்மதிப்பு அமைப்பதில் சேர்க்காது விடுதல். (4) புது பயன்மதிப்புகள், மொத்த பயன்மதிப்பு அமைப்பில் சேர்த்துக் கொள்வதற்கு ஏற்றவாறு பழைய பயன்மதிப்புகள் திருத்தியமைக்கப் பெறுதல்.

உட்ரஃப் (Woodruff) என்பவர் கல்லூரி மாணவர்களின் பயன் மதிப்பு வகைகளுக்கும், அவர்களது பொருளாதார அந்தஸ்து, கல்வியின் அளவு, வாழும் நகரத்தின் அளவு ஆகியவற்றிற்குமிடையே உள்ள உறவினைப்பற்றிய ஆய்வினை நடத்தினர்.[15] ஒரே மாதிரியான சமூக-பொருளாதாரப் பின்னணியில் உள்ள தனியன்களின் குழுக்களும் ஒரே மாதிரியான கல்வித்தொழில் நாட்டங்களில் ஈடுபட்டுள்ளோரும் ஒரே மாதிரியான பயன்மதிப்பு வகைகளைக் கொண்டிருப்பார்கள்.

## குறிக்கோள்கள் பயன்மதிப்புகளின் வளர்ச்சி வரிசை

குறிக்கோள்களும் பயன்மதிப்புகளும் ஆரம்ப குழந்தைப் பருவத்திலிருந்து முதிர்ச்சியடையும்வரை ஒரு வளர்ச்சி வரிசையினைப் பின்பற்றுகின்றன. அவை சமூக இயல்பினளுக்கும் வழியில் செயலுறுகின்றன. 12 வயதிலிருந்து 15 வரையில் பயன்மதிப்புகளில் ஏற்படும் மாறுதல்களைப் பொதுமையாக்க டிரியான் (Tryon) முயன்ற பொழுது கூறுகின்றார்:

[14] P. Leckley, 'Self-consistency.' New York: The Island Press, 1945.

[15] A. D. Woodruff, 'A Study of the Directive Factors in Individual Behaviour', Ph.D. Thesis, University of Chicago, 1941.

'12-லிருந்து 15 வயது வரையிலுள்ள பருவத்தில் சிறுமிகளது பயன்மதிப்புகளில் சில புரட்சிகரமான மாறுதல்கள் ஏற்படுகின்றன. சிறுவர்களது பயன்மதிப்புகள் ஒப்பீட்டடிப்படையில் குறைவான மாறுதல்களுக்கே உள்ளாகியுள்ளது. அதுவும் குறிப்பாகச் சிறிதளவு மாறியுள்ள வற்புறுத்தல்களில் மட்டுமே மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. 12 வயதுச் சிறுமிக்கு அமைதியான, எழுச்சியற்ற, வலுத்தாக்குத லில்லாத குணங்கள், நட்பு, விரும்புகின்றதன்மை, நல்ல நகைச்சுவை, கவர்ச்சியான தோற்றம் ஆகியவைகளுடைய தொடர்பில் காணப் படுகின்றன. முதியோர், உலகத்தின் விதிகளுக்கும் உரிமைக் கோரிக்கைகளுக்கும் உடன்பாடாயுள்ள நடத்தையைப் பாராட்டு கின்றனர். ஆண்பிள்ளைபோல் நடக்கும் பெண்களின் குணம் அனு மதிக்கப்படுகின்றது. 15 ஆண்டு நிலையில் நாணுகின்ற, பணிவுள்ள, முறைப்படி தோற்றம்கொள்ளும் பெண்மையின் உருவாக இருக் கின்ற தன்மை மறைகின்றது. இதற்குப்பதிலாக ஒரு குறிக் கோளுடைய சிறுவனின் குணங்களான புறநோக்கு, செயல்தன்மை, விளையாட்டில் உயர்ந்த பண்பு ஆகியவை சிறுமிக்கு ஏற்ற குணங்க ளாகத் தோன்றுகின்றன. இருபாலாரும் கலந்துகொள்ளும் விருந்து களில் விளையாட்டினை ஏற்படுத்துகின்ற திறனும் அவ்வாறான செயல் களைக் கவர்ச்சிகரமாகச் செய்யும் திறனும் பாராட்டினைப் பெறு கின்றன. இதனுடன் மாற்றுப் பாலாருக்குக் கவர்ச்சிகரமாகவும் கண்ணைக் கவரும் வகையிலும் இருப்பது முக்கியத்துவம் பெறு கின்றது. ஆனால், இது ஒப்பீட்டடிப்படையில் தனிப்பட்டதாகவும் மற்ற இசைவான குணங்களுடன் தொடர்பற்றதாகவும் உள்ளது. 12ஆண்டு வயது நிலையில் குறிக்கோள்சிறுவன் திறமைசாலியாக வும் விளையாட்டுகளின் தலைவனாகவும் விளங்குகின்றான். அவனது தீரமுள்ள அச்சமற்ற தன்மை அவனது சமூகக் குழுவிற்கு அப்பால் செல்லுகின்றது. இது முதியோர்களின் விதிகளுக்கும் உரிமைக் கோரிக்கைகளுக்கும் எதிராக உள்ளது. ஒருவனது ஒப்பார்களினால் பெண்மைத்தனமானது என்று கருதப்படுகின்ற எந்த இயல்பும், அதாவது அதிகமான அழகுள்ள தன்மை அல்லது வகுப்பு அறையின் சூழலுக்கு மிக அதிகமாக ஒன்றியிருத்தல் ஆகியவை குறைபாடுடை யனவாகக் கருதப்படுகின்றன. இருப்பினும், சில தனிப்பட்ட பண்பு களும் சில அன்பான, எல்லோரும் விரும்புகின்ற குணங்களும் அதிக மாக மக்கள் விரும்புகின்ற ஆண்மைக் குணங்களின் தொடர்புகளில் தோன்றுகின்றன. 15 ஆண்டுகளில் சிறுவனது அந்தஸ்து இன்ன மும் அதிகமான அளவில் உடல் வலிமையினாலும், வலுத்தாக்குதலி னாலும், அச்சமற்ற தன்மையினாலும் தீர்மானிக்கப்படுகிறது. முதியோர் தரங்களை எதிர்த்தல் முக்கியத்துவத்தை இழந்துவிட்டது. அது இன்னமும் அவர்களுக்கு ஏற்றுக்கொள்ளப்படும் நிலையிலும் மகிழ்ச்சி யைத் தருவதாகவும் இருக்கிறது என்றாலும், அது முதிர்ச்சியடையாத

குணம் என்று கருதப்படுகின்றது. மேலும், ஒவ்வொருவரும் ஏற்றுக் கொள்வதற்கு மிக அதிகமான முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. இது வளர்கின்ற மாற்றுப்பால் அக்கறைகளின் முக்கியத்துவத்தைக் காட்டுகின்றது. உண்மையில் தரப்படுத்திய 20 குணங்களில் தோற்ற ஒழுங்கின்மை—தோற்ற ஒழுங்கு (Unkempt - Tidy) எனப் படும் குணக்கூறுக்கு மட்டுமே சிறுவர்கள் முற்றிலும் மாறுபட்ட கருத்தினை அளித்தனர்'[16]

இக் குறிப்புகளிலிருந்து அறியப்பெற்ற பால் மாறுதல்கள் பற்றிய ஆய்வில், சிறுமியர் குறிப்பிட்ட குறிக்கோள்களில், பிரதி யறிவு தன்மை அவர்களுக்கு இருப்பதைக் காணலாம். இது சிறுவர்களுடன் ஒப்பிடும்பொழுது மிகவும் குறுகிய காலமான மூன்று ஆண்டுகளில் மிகவும் அதிகமான உறுதியற்ற தன்மையைக் கொடுக்கின்றது. இக்குறிப்புகள் பெண் குழந்தையின் நடத்தை, சமயோசிதத் தன்மை, திட்டமிட்டுச் செய்தல், மன உறுதியற்ற தன்மை, மனம்போன போக்கு ஆகியவை கொண்டது என்று வரையறை செய்யப்படும் கொள்கைக்கு ஆதரவு காட்டவே முனைகின்றன. இந்நிகழ்ச்சிக்கு ஏற்றுக் கொள்ளத்தக்க விளக்கம், சிறுவர் சிறுமியரின் சமூக வளர்ச்சித்துவக்கத்தில் தோன்றுகின்றது. சமூகச் செயல்களில் கருத்துக்கு இணங்குகின்ற தன்மையும், குறிக் கோள்களை திரும்பப் பொறுத்துக்கொள்ளுகின்ற திறனும், புதுக் குறிக்கோள்களுக்கு ஏற்பத் தங்களை ஒழுங்காக அமைத்துக் கொள்கின்ற தன்மையும் சிறுமியரிடத்து சிறுவர்களைக்காட்டிலும் அதிகமாகக் காணப்படுகின்றன.

## பள்ளியின் பங்கு

உயர்நிலைப் பள்ளி மாணவரிடத்துக் காணப்படுகின்ற பயன் மதிப்புகளிலுள்ள அதிகமான மாறுதல்கள், இளையோர்களுக்கான கல்வித் திட்டத்தைப்பற்றிக் கருதும் ஆசிரியர்களுக்கும் மற்றவர் களுக்கும் துன்பமான சிக்கல்களை அளிக்கின்றன. அக்கறைகள், அவாக்கள், வெவ்வேறு சமூகவகுப்புக் குழுக்களிலிருந்து வரும் வெவ்வாறுன ஒழுக்க நடத்தை ஆகியவற்றில் உள்ள மாறுதல்கள் பல கல்வித்துறை உளவியல் மாணவர்கள் பலரால் வலியுறுத்தப் படுகின்றன. கீழான அந்தஸ்துடைய இல்லங்களிலிருந்து வரும் பெரும்பான்மையான இளையோர்கள் நல்ல தரம், உயர்நிலைப் பள்ளிப் பட்டம் ஆகியவற்றில் அக்கறை காட்டுவதில்லை. ஆனால், இவற்றைப்

[16] C. M. Tryon, 'Evaluations of Adolescent Personality by Adolescents', Monographs of the Society for Research in Child Development, 1939, Vol. 4, pp. 77-78.

பள்ளி மாணவர்கள் பள்ளியில் தங்குவதற்கும், கடினமாக உழைப்பதற்கும், பட்டம் பெறுவதற்குமான முக்கியத் தூண்டல்களாகப் பள்ளி கருதுகின்றது. இச்சிறுவர் சிறுமியரை ஊக்குவிக்கும் பிரச்சினை உயர்நிலைப் பள்ளி ஆசிரியருக்கு ஒரு சவாலாக உள்ளது.

குறிக்கோள்களும் பயன்மதிப்புகளும் கற்றுக்கொள்ளப் படுவதனால் ஆசிரியர்கள் இளையோர்களை ஊக்குவித்துப் பயன் மதிப்புகள்பற்றிய சமநிலை உணர்வு வளர்ச்சிப் பணியை மேற்கொள்ள வேண்டியதாகின்றது. குறிக்கோள்கள் சான்றுகள்மூலமாகவே உணர்த்தப்படுகின்றனவேயன்றி சொற்களின்மூலமாக அதிகமாக கற்றுத்தரப்பெறுவதில்லை. மாணவர்கள் குறிக்கோள்களையும் பயன்மதிப்புகளையும் தவிர்க்க ஆசிரியரால் இயலாது. ஆயினும், எல்லா ஆசிரியர்களாலும், மாணவர்களுக்குப் பயன் மதிப்புகளைப் பிரித்து உணர்வதற்கும் புதுப்புது பயன்மதிப்புகளை உருவாக்கிக் கொள்வதற்கும் உதவுவதில் ஒரே மாதிரியான பயன் அளிக்கும் வகையில் செயலாற்ற இயலுவதில்லை. முதற்கண், ஆசிரியர்களே தொடர்ச்சியான, நன்முகத் திட்டமிடப்பட்ட பயன் மதிப்புகளைக் கொண்டிருக்கவில்லை. இது மாணவர்களிடத்து அவர் கொள்ளும் செல்வாக்கினைப் பெருமளவு பாதிக்கின்றது. சில தவரான கருத்துகளும், இளையோரது தேவைகளைச் சரியாகப் புரிந்துகொள்ளாததும் ஆசிரியர்களது முயற்சிகளைத் தடை செய்கின்றது. ஆசிரியர்கள் இளையோர்களது பயன்மதிப்புகளை உணர்த்துவதில் பயனுள்ளவர்களாயிருக்க அவர்கள் கீழ்க்கண்ட இயல்புகளைப் பெற்றிருக்க வேண்டும்.

1. அவர்கள் தெளிவான திட்டமிடப்பட்ட பயன்மதிப்புகளைக் கொண்டிருக்கவேண்டும்.

2. பயன்மதிப்புகளில் மாறுது இருத்தல்வேண்டும்.

3. அவர்கள் சந்திக்கின்ற எல்லா மாணவர்களது பயன் மதிப்பு வகைகளுக்கும் மதிப்பு அளிக்கவேண்டும்.

4. பயன்மதிப்பு வகைகளைச் சான்றுகளின் மூலமாகத்தான் சிறப்பாகக் கற்க முடியுமேயன்றி, விதிகளாலோ அல்லது நெறியுரைகளாலோ அன்று என்பதை உணரவேண்டும்.

5. பயன்மதிப்பு வகைகளுடன்கூடிய கற்கும் நிலை எல்லா மாணவர்களுக்கும் ஒரே சமமான பயனை அளிக்காது என்று அறிய வேண்டும்.

6. பயன்மதிப்பு வகைகளின் வளர்ச்சியில் கற்றல் முறையின் செயலை அறியவேண்டும்.

7. மரபுநிலை சூழ்நிலை ஆகியவற்றின் இடைத் தொடர்பில் வளர்ந்த இளையோன் ஓர் இயக்க ஆற்றல் உடையவன் என்பதை அறியவேண்டும்.

## சமயத்தின் பங்கு

சமயம் எளிதில் வரையறுக்க இயலாத சிக்கலான ஒன்றாகும். பல அமெரிக்கர்களுக்கு அது கோயிலையே குறிக்கின்றது. ஆனால், உண்மையில் இவையாவும் சமூக நிகழ்ச்சியில் சமயம் செயலுறும் வெளித் தோற்றத்தின் குறிகளேயாகும். சமயத்தைப் புரிந்து கொள்வதற்குண்டான சிறந்த முறை அது கையாள்கின்ற தேவைகளின் பட்டியலைத் தயார் செய்வதாகவே ஒருவேளை இருக்கலாம். இயற்கையின் சக்திகளை, செயலாற்றலைப் புரிந்துகொள்ள வேண்டிய மனிதத் தேவையாலும் வாழ்க்கைக்குப் பொருளும் பயனும் அளிக்கவும் உண்மையில் சமயம் பிறந்தது. எல்லாச் சமயங்களும் தேர்ந்தெடுக்கப்பட்ட நம்பிக்கைகளுக்கும் வாழ்க்கை வகைகளுக்கும் முதன்மை அளிக்கின்றன. வெவ்வேறு சமயங்களின் தனிப்பட்ட நடத்தை வகைகளிலும் ஒற்றுமையில்லை. இது இளையோர்களுக்குத் துன்பமான பிரச்சினைகளை அளிக்கின்றது. இளையோர்கள் நமது கலாசாரத்திலுள்ள முரணான கருத்துகளைச் சந்திக்கின்றனர். இல்லத்தில் துவக்க நிலையில் பெறும் போதனை, அறிவியல் நோக்கு, மரபுவழி, சமயக் கருத்து ஆகியவைகளிடையே உள்ள முரணான கருத்துகளைக் காண்கின்றனர். இன்றைய உலகினைப்பற்றிய பல உண்மைகளை இளையோர்கள் கற்றறியலாம். ஆனால், அவர்கள் இப்பட்டறிவுகளின் பொருள்கள்பற்றியும் பயன்கள்பற்றியும் தெளிவற்ற கருத்துகளையே கொண்டிருப்பார்கள். முன்னர், வாழ்க்கையின் மெய்யுணர்வை வளர்த்துக் கொள்ளுதல் இளையோர்களது வளர்ச்சிக்குரிய பண்பு என்று குறிக்கப்பட்டுள்ளது. இது எவ்வளவு முக்கியம் என்பதுபற்றிக் கருத்து வேறுபாடுகள் உள்ளன. நுண்ணறிவுடன் வாழ்வது உலகத்தைப்பற்றிய, தெளிவான, சரியான கருத்தினை உணர உதவுகின்றது. உலகம் எவ்வாறு இயங்குகின்றது என்றும் அதில் மனிதனது பங்கினைப்பற்றிய அறிவினையும் இது தருகின்றது.

## இளையோர்களது சமயத் தேவைகள்

வாழ்க்கையின் பொருள்பற்றியும், பயன்கள்பற்றியும் பிரச்சினைகளைத் தனியன்கள் கொள்ளுகின்றனர் என்று முன்னரே கூறப்பட்டது. அவர்கள் தங்கள் வாழ்க்கையின் அனுபவங்களை ஒன்றுசேர்க்க வேண்டிய தேவையினை உணர்கின்றனர். பல்வேறுபட்ட கூறுகளிலிருந்து அன்றாட வாழ்க்கையின் பிரச்சினைகளுக்கும், பண்பாடுகளுக்கும், சிக்கல்களுக்கும் ஏதாகிலும் ஒரு திருப்தியளிக்கின்ற விளக்

கத்தினை அடைய விரும்புகின்றனர். நாட்டிலுள்ள பல்வேறு உயர் நிலைப்பள்ளி மாணவர்களைக் கொண்டு ஆய்வு நடத்தியதில், ஓர் உதாரணமாகக் கொள்ளக்கூடிய மாணவன் நாள்தோறும் தொழுதலைக் கைக்கொள்கின்றான் என்று உணர்த்தியது.[17] இந்த வயதில் தனியன்கள் கோயிலுடன் இணைகின்றனர் என்பதையும்; ஆலயம், ஒழுக்கம்பற்றிய முக்கியமான முடிவுகளைக் கைக்கொள்கின்றனர் என்பதையும் நினைவில் கொள்ளவேண்டும்.

இரண்டாவதாக, இளையோர்கள் வெவ்வேறான ஒழுக்கநிலைத் தரங்களைக் கொண்ட உலகில் வாழ்வதை உணர்கின்றனர். இவற்றைக் குடிக்கும் பழக்கம், பணம் ஈட்டும் வழிகள் போன்றவைகளின் தொடர்பில் காணலாம். இளையோனுக்குப் பயன்மதிப்புகளும், தரங்களும் அடைவதற்கும், அவனது ஒப்பார்களுடனும் மற்றவர்களுடனும் கொள்ளவேண்டிய உறவுபற்றியும், உதவியும் வழிகாட்டலும் தேவைப்படுகின்றன. எவையெல்லாம் சரியானவை? எவையெல்லாம் தவறானவை? ஒருபொருளைச் சரியானதாகவோ தவறானதாகவோ செய்பவை எவை? இவையெல்லாம் இளையோர்களது வாழ்க்கையிலுள்ள சில கேள்விகளாகும். இக்கேள்விகளுக்கு விடைகளைப் பெறுவதற்குப் பல வழிகள் இருக்கின்றன. இக்காலத்தில் நமது பண்பாட்டில் இளையோர்கள் சமயத்தைப் பெரிதும் சார்ந்துள்ளனர். அவர்கள் இக்கேள்விகளுக்கும் மற்றும் இதுபோன்ற கேள்விகளுக்கும் பதில்களைப்பெற சமயத்தைச் சார்ந்துள்ளனர்.

## அட்டவணை 8—4

இளையோராலும் பின்னிளையோராலும் கேட்கப்பட்ட கேள்விகள்
[புர்க்ஹார்ட் தந்தது.]

| கேள்வியின் தன்மை | கேட்கப்பட்ட கேள்விகளின் எண்ணிக்கை 7, 8, 9 படிவங்கள் | 10, 11, 12 படிவங்கள் | கல்லூரி |
|---|---|---|---|
| நடத்தைப் பழக்கங்கள்... ... | 619 | 367 | 247 |
| சமயம், கடவுள், கோயில் ... | 584 | 467 | 271 |
| சொந்த வளர்ச்சி ... ... | 588 | 1,298 | 369 |
| சரியானது, தவறானது ... ... | 347 | 819 | 139 |
| களவொழுக்கமும் கடிமணமும் ... | 334 | 1,457 | 1,183 |

[17] See H. H. Remmers, M. S. Myers and E. M. Bennett, 'Some Personality Aspects and Religious Values of High School Youth,' Purdue Opinion Panel, 10, No. 3.

இளையோர் ஆண்டுகளில் கோயிலுக்குச் செல்லுதல் குறைகின்றது என்றாலும், ஒழுக்க சமயப் பிரச்சினைகளில் அக்கறை மிகவும் உயர்ந்து காணப்பெறுகின்றது. வெவ்வேறு படிவ நிலைகளிலுள்ள 1,000 மாணவர்களின் ஒழுக்க சமயப் பிரச்சினைகளைப்பற்றிய ஆய்வு ஒன்றில் அது காணப்பட்டது. அட்டவணை 8—4ல் இம்முடிவு தரப்பட்டுள்ளது. அவை களவொழுக்கம், திருமணம்பற்றிய கேள்விகளில் அக்கறை வளர்ச்சியினைக் காட்டுகின்றன. சரி, தவறு, சமயம், கடவுள், கோயில் இவைகளைப்பற்றிய கேள்விகள் உயர் நிலைப்பள்ளி ஆண்டுகள் முழுவதிலுமே உயர்ந்த அளவில் இருக்கின்றன.

சமயத்தின்மூலமாக இளையோருக்குத் திருப்தியளிக்கக்கூடிய மூன்றாவது தேவை, மனவெழுச்சி இயக்கமும் கூறுணர்ச்சியும் ஆகும். வாழ்க்கைத் தரங்கள் முன்னேறிய பின்னும், கல்வி அதிகரித்த பின்னும் அதிகமான அளவில் குற்றத்தன்மை இருப்பது, கல்வி, சமய, குடிமை மனம் கொண்ட தலைவர்களுக்கு சவால் விடுகின்றது. இளையோர்களது குணவியல்பு உருவாகும் வேளையில் பெருமளவு செயற்கையாகவும் அதிகமான அமைப்புடனும் இருப்பதனால் அதிகப்பயன் விளைவதில்லை. இளையோருக்கு குணவியல்பில் சக்தியையும் நிலையாய் இருக்கும் தன்மையையும் பெறுவதற்கு ஆழ்ந்து பதிந்துள்ள திடமான நம்பிக்கைகளும் சில குறிக்கோள்கள் மீது பற்றுறுதியும் தேவைப்படுகின்றன. மனவெழுச்சிக் கல்வியின் முக்கியத்துவத்தைக் கருதாத குணவியல்பு உருவாக்கும் முயற்சி பெருமளவில் பயனற்றதாய் இருக்கும். தன்னடக்கத்திற்குத் தேவையான இயக்க ஆற்றல் இல்லாதிருக்கும், மனவெழுச்சிகளை விளக்கும்போது மிகவும் சரியாகக் கீழ்க்கண்டவாறு விளக்கியுள்ளனர். 'உயிரியல் இணைப்பு முறைகள்மூலம் நாம் சந்திக்கும் ஒப்பீட்டடிப் படையில் உள்ள நெருக்கடியான நிகழ்ச்சிகளாகும்.[18] உடனடி நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்ட குணவியல்பும் தற்செயலாக நடக்கும் தூண்டுகைகளும் தனியனது வழிகாட்டலுக்குத் தேவைப்படும் வலிவினைப் பெற்றிருக்கும். தனியன் செய்யத் தகுந்த தியாகங்களையும் அல்லது மற்றவர்களது பொது நடத்தைக்கான சில தூண்டுகைகளையும் தடை செய்யும்.

**சமயக் கல்வி**

கல்வியில் சமயம் கொள்ளும் பங்கு நமது சமூகத்தில் இன்றைய நிலையில் எவ்வாறு உள்ளது என்றால் (1) ஆன்மீகப் பயன்மதிப்புகளின் முக்கியத்துவத்தை ஏற்றுக்கொள்ளுதல் அதிகமாதலையும்

[18] D. A. Prescott, 'Emotion and the Educative Process' Washington: American Council on Education, 1938, p. 59.

இப் பயன்மதிப்புகளின் வளர்ச்சியில் சமயத்தின் பங்கையும் குறிக்கின்றன. (2) சிறுவர் சிறுமியர் வளர்ச்சிக்கான முழுத்திட்டத்தில் சமயத்தை எவ்வாறு இணைப்பது என்பதில் குழப்பம் உள்ளது. சிலர் கீழ்க்கண்ட கேள்வியை எழுப்பலாம்: 'கல்வி ஏன் சமயத்தைப் பற்றிக் கவலை கொள்ளவேண்டும்?' இக் கேள்விகளுக்குப் பதிலாக பல காரணங்கள் கொடுக்கப்படலாம். யூத—கிறிஸ்தவ சமய மெய்யுணர்வும், போதனைகளும், மரபுகளும் மேற்கத்திய நாகரிகத்தில் பொதிந்துள்ளன என்பதே போதிய காரணமாகின்றது. வான் டூசன் (Van Dusen) தருகின்ற காரணிகளில் ஒன்று இக்கேள்விக்குப் போதிய விடையை அளிக்கும். அவர் கூறுவதாவது: 'சமயம் மிக அடிப்படையான, எல்லோருக்கும் பொதுவான, முடிவில், மனித வாழ்க்கைக்கு மிக முக்கியமான பொருள்களான அதன் தோற்றம் தன்மை, பொருள், பயன், முடிவு ஆகியவைபற்றி அக்கறை கொள்கின்றது. குறிப்பாக ஒவ்வொரு மனிதனது வாழ்க்கையையும் தீர்மானிக்கின்ற கட்டாய நிகழ்ச்சிகளான பிறப்பு, காதல், பெற்றோர்நிலை, இறப்பு ஆகியவைகளைப்பற்றிக் கவலை கொள்கின்றது.[19]

கல்லூரி மாணவர்களிடமிருந்து பெற்ற அறிக்கைகள், பல மாணவர்கள் அவர்கள் வளர்கின்ற நிலையில் சமயப் பயிற்சிகள் செல்வாக்குக் கொண்டுள்ளன என்று கூறுவதற்குச் சான்றுகள் அளிக்கின்றன.[20] ஆண்களில் 6 சதவீதத்தினரும், பெண்களில் 10 சதவீதத்தினரும் அத்தகைய செல்வாக்கு முழுவதும் இல்லை எனக் கூறுகின்றனர். வளரும் தன்மையில் சமயச் செல்வாக்கின் அளவினை இன்று சமயத்தின் தேவையை உணர்வதோடு ஒப்பிட்டால், சமயத்தில் பயிற்சியடைந்த மாணவர்கள் அதிகமாக இத்தேவையை உணர்கின்றனர் என்று அறியலாம். அட்டவணை 8—5ல் தரப்பட்டுள்ள முடிவுகள், தேவை என்று கூறுபவர்களின் எண்ணிக்கை சமயச் செல்வாக்கு கொண்டுள்ளோரின் எண்ணிக்கைக்கு நேரடித் தொடர்பு கொண்டுள்ளதாய்க் காட்டுகின்றது. இக் கண்டுபிடிப்பு, மற்ற ஆய்வுகளிலிருந்து பெற்ற முடிவுகளின் ஆதரவையும் பெறுகின்றது. தனியனது பிற்காலச் சமயவாழ்வில் செல்வாக்குக் கொள்ளும் முக்கிய உளவியல் செல்வாக்காகத் துவக்க நிலையில் பெறும் சமயப் பயிற்சி இருக்கும் என்ற கருத்துக்கு ஆதரவளிக்கின்றது.

ரோமன் கத்தோலிக்க நம்பிக்கையில் வளர்க்கப்பெற்றவர்கள் அனைவரும் அவர்களது வாழ்க்கையில் ஏதோ ஒரு சமயப் பயிற்சி

[19] H. P. Van Dusen, 'What should be the Relation of Religion and Public Education?' Teachers College Record, 1954, Vol. 56, pp. 3-4.

[20] G. W. Allport, J. M. Gillespie and J. Young, 'The Religion of Post-war College Student,' Journal of Psychology, 1948, Vol. 26, pp. 3-33.

இருக்கவேண்டியது தேவை என்று அறிவித்தனர். யூத மதத்தின் ஏதாவது ஒரு வகையில் அல்லது குறுகிய நோக்கமற்ற பிராட்டஸ்டண்ட் கொள்கைப் பயிற்சி பெற்றோரில் 40 சதவீதத்தினர் சமய மெய்ப்பாடு தங்களுக்குத் தேவையானது என்று உணரவில்லை. இது பல ஆய்வுகளில் மேலும் உற்று நோக்கப்பட்ட உண்மைகளுடன் தொடர்பு கொண்டிருக்கின்றது என்பதில் ஐயமில்லை. அமெரிக்காவிலுள்ள மற்ற நம்பிக்கைகளைக் கடைப்பிடிக்கும் மாணவர்களைக் காட்டிலும் ரோமன் கத்தோலிக்க நம்பிக்கை கொண்டுள்ள மாணவர்கள் தங்கள் திருச்சபையிடம் மிக அதிக அளவில் பற்றுறுதி கொள்கின்றனர்.

## அட்டவணை 8—5

வளர்ச்சியில் சமயத்தின் தேவைக்கும், சமயச் செல்வாக்கின் அளவிற்கும் இடையே உள்ள உறவு [ஆல்போர்ட் தந்தது].

| சமயச் செல்வாக்கு | | தேவையைக் குறிக்கும் சதவீதம் ஹார்வர்ட் பல்கலைக் கழகம் | தேவையைக் குறிக்கும் சதவீதம் ராட்கிளிஃப் பல்கலைக் கழகம் |
|---|---|---|---|
| மிக அதிக அளவில் | ... | 82 | 96 |
| சுமாரான அளவில் | ... | 78 | 85 |
| ஓரளவு ... | ... | 52 | 76 |
| இல்லவே இல்லை | ... | 52 | 44 |

சமயத்தை முறையாக போதித்தால் இளைஞர்கள் வாழ்க்கையின் பொருளையும், பயன்மதிப்புகளையும் உணர்வதற்கு உண்மையிலேயே உதவி செய்யும். நமது சமயம் மெதுவாகப் படிப்படியாக வளர்கின்ற தன்மை பெற்றிருப்பதனால், அது இன்றும் உருவாகிக் கொண்டிருக்கின்றது. ஆதலின், இதை இளைஞர்களால் தெளிவாகப் புரிந்துகொள்ள முடிவதில்லை. சமயக் கருத்துகளின்மீது கொள்ளும் உண்மையான எதிர்ப்பு அறிவாளிகளிடமிருந்து வருவதில்லை. அது பாமரர்களின் அன்றாட வாழ்வின் அனுபவங்களிலிருந்து வருகின்றது. எந்த வாழ்க்கை நிகழ்ச்சிகளுடனும் தொடர்புகொள்ளுதல் சமயப் பொருளில் புதுவிதமான விளக்கம் கூறுவதில் வளர்ச்சியை ஏற்படுத்துகின்றது. வாழ்க்கைத்தரம் புதிய தரமென்றால் சமயத்தின் பொருளைப் புதிய முறையில் விரிவுபடுத்திக் காணுவதேயாகும். இதன் தொடர்பில் குஹ்லன், ஆர்னால்டு ஆகியோர் தங்கள் ஆய்வினின்று இரண்டு உண்மைகளைத் தந்துள்ளனர். சமயக் கல்வித்திட்டத்தில்

அக்கறை கொள்வோர்க்குப் பயனுள்ளதாய் இவ்வாய்வு உள்ளது. அவர்கள் கூறியதாவது :

முதலில், ஞாயிற்றுக்கிழமைப் பள்ளி வகுப்புகளிலும், இளைஞர்கள் குழுவிலும் உள்ள பதின் ஆண்டுகளில் உள்ளோருக்குப் பொருத்தமான பொருளினைத் தருவதற்கு வழிகாட்டும் குறிப்புகளாக, வயது அதிகமாகும்பொழுது அதிகமாக, ஆச்சர்யப்படுகின்ற சிக்கல்களைக் குறிக்கும் கூற்றுகள் பயன்படும். இரண்டாவதாகக் குழந்தைகள் பெரியவர்களாக வளரும்பொழுது ஒதுக்கப்படும் நம்பிக்கைகளைத் துவக்க வயதில் போதிப்பதால் ஏற்படும் பலன்கள் குறித்து அறிவதற்காக ஆய்வு செய்யலாம். குழந்தைகளது சமயம் பற்றிய கருதுகோள்கள் முதியோர்களைக்காட்டிலும் மிகவும் குறிப்பாகவும் பருப்பொருளாகவும் உள்ளன. முதியோர்கள் பொதுநிலையிலும் வெற்றுநிலையிலும் சமயம்பற்றிய கருதுகோள்களைக் கொள்கின்றனர். இம்மாறுதல் கருதுகோள்களின் சாதாரண வளர்ச்சியினைக் குறிக்கின்றது. குழந்தைகளுக்குப் போதிக்கப்படும் தனிப்பட்ட பருப்பொருளான நம்பிக்கைகள் முதியோர்களின் வெற்றுநிலைக் கருத்துகளுக்கு ஒத்தியல்வதுதான் இசைவானதாகும். ஒத்தியல்புத் தன்மையில்லாததால் பின்னால் ஒதுக்கப்படுவதைக்காட்டிலும் இது சாலச் சிறந்ததாகும்.[21]

## சில அடிப்படைக் கொள்கைகள்

இளையோனை முன்னைய அதிகாரங்களில் முழுதும் இயக்கவாற்றலுடைய தனியன் என்று விளக்கப்பெற்றுள்ளது. அவன் பல தேவைகளைச் சந்திக்கின்றான். அவைகளில் பல, பெரும்பாலும் கலாசாரத்தினால் தீர்மானிக்கப்பெற்றன. இளங்குற்றவாளிக்கும் குற்றத் தன்மையற்றவனுக்கும் ஒரே அடிப்படைத் தேவைகள்தான் இருக்கின்றன. அடைவு, தன்மதிப்பு, சமூக அனுமதி ஆகியவைகள் அவனது வாழ்வில் குற்றமற்ற தன்மையுடையவர்களின் வாழ்க்கையில் இருப்பன போன்று அதே முக்கியத்துவத்தைப் பெறுகின்றன. இதுபோன்று மனநிலையிலும் உடல்நிலையிலும் குறைபாடுடைய இளையோர்கள் அடைவு, தன்மதிப்பு, சமூக அனுமதி ஆகியவற்றின் தேவையை உணர்கின்றனர். இளையோர்களது வழிகாட்டல் பயிற்சி ஆகியவற்றில் அக்கறை கொண்டோர் ஒரு பயனுள்ள கல்வித்திட்டம் இவ்வடிப்படைத் தேவைகளைக் கவனிக்கவேண்டும் என்பதனை உணரவேண்டும். இளையோர்களை வழிகாட்டும் பொறுப்பு உடை

[21] R. G. Kuhlen and A. Arnold, 'Age Differences in Religious Beliefs and Problems during Adolescence,' Pedagogical Seminar and Journal of Genetic Psychology, 1944, Vol. 65, p. 297.

யவர்களின் மனப்பான்மை, இச்சிறுவர் சிறுமியர்களின் சொந்த, சமூகப் பொருத்தப்பாடுகளின் முக்கிய விளைவுகளாக இருக்கும். அவர்களது ஒழுக்கங்கள், குறிக்கோள்கள், பயன்மதிப்புகள் ஆகியவற்றின் விளைவுகளாகவும் மனப்பான்மை இருக்கும்.

## திருப்தியளிக்கும் செயல்கள்

ஒழுக்கத்தின் உறுதியான பகுதியின் பயன்மதிப்பினை முன்னரே வலியுறுத்தப்பட்டுள்ளது. நடத்தையில் இசைவான வகைகளை உண்டாக்க முயற்சிக்கும் பணியில் இது குறிப்பாக வலியுறுத்தப்பட்டுள்ளது. பல்வகைப்பட்ட நேரடிப் பரிசுகளையும் மறைமுகப் பரிசுகளையும் விரும்பிய செயலினைச் செய்வதனால் பெறும் திருப்தியுடன் தொடர்புபடுத்தும் முயற்சியில் பெரும்பாலும் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது. இசைவில்லாத நடத்தையின்மூலமாகத் திருப்தி அல்லது பரிசு பெறுவதற்கோ அனுமதி கொடுப்போமானால் அவ்வாறான நடத்தைவகை நிலையாய் நின்றுவிடும். இசைவான செயலைச் செய்வதற்காக இயற்கையாகப் பரிசுபெறுகின்ற நிலையினை உண்டாக்குதல் வேண்டும். இந்தப் பரிசானது இளையோர்களுக்கானதானால், அது பயனுள்ள நற்பயனை விளைவிக்கின்ற குறிக்கோள்களையும் மனப்பான்மைகளையும் பெரிதும் பொறுத்திருப்பதனால் அவை வெற்று நிலைத் தன்மையில் இருக்கும். நம்பிக்கைகள் ஆசைகளுடன் நேரடித் தொடர்பு கொண்டிருப்பதாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. ஆதலின், குறிக்கோள்களும் ஆசைகளுடன் நேரடித் தொடர்பு கொண்டிருப்பதாகக் கூறலாம். ஆசைகள் ஓரளவு இயற்கையாகத் தனியனிடத்துள்ள தூண்டுகைகளை ஆக்க நிலையிருத்தத்தினாலும், கட்டுப்படுத்துவதினாலும், குழு அமைக்கின்ற குறிக்கோள்களுடன் ஒன்றியிருக்கும் வகையில் நிலைநிறுத்தப்படுகின்றன. ஆசைகளை நல்ல வழியில் கட்டுப்படுத்த இயலும்; கட்டுப்படுத்தவும் வேண்டும். ஆனால், இவ்வழிகாட்டல் அதனுடைய பயனைச் சிறப்பாக அடைய வேண்டுமென்றால் ஆசைகள் முடிவான பரிசுகளிலோ அல்லது முடிவான திருப்தியை அளிக்கும் தொடர்பிலோ உருவாக்கப்படல் வேண்டும்.

இளையோர்கள் படிப்படியாகப் பட்டறிவின்மூலமாகக் கற்கின்றனர். சமூகத்திற்கு எதிரான நடத்தை அவர்களைத் துயரத்துக்கும் துன்ப அனுபவங்களுக்கும் கொண்டு செல்கின்றது என்றும் கற்கின்றனர். முன்னிளையோரும் இளையோர் சிறுவர்களும் சந்திக்கின்ற முக்கியத் துயர்களில் ஒன்று சிறுவர்களின் பிரச்சினைகளை உணர்ந்து அவர்களது நன்மதிப்பையும் நம்பிக்கையையும் பெற்றவர்களாகி, அவர்களைக் குறிக்கோளுடையவர்களாக ஆக்குவதற்குரிய பெரியவர்கள் இல்லாததேயாகும். ஆண் ஆசிரியர்கள், உடற்கல்வி, பொழுதுபோக்கு இயக்கு

ஞர்கள், 4H எனும் குழுவின் தலைவர்கள், விவசாயத்தொழில் ஆசிரியர், சிறுவர்களது ஆலோசகர் போன்ற சிறுவர்களுடன் நெருங்கிய தொடர்புகொண்டுள்ள மற்றவர்களும் இளையோர்களின் குறிக்கோள்களையும் மனப்பான்மைகளையும் குறிப்பிடும்படியான அளவு மாற்றத்தக்க செல்வாக்கினையும் வாய்ப்பினையும் கொண்டுள்ளனர். அவர்கள் ஆண்மைத் தொடர்புகள் மிகவும் அவசரமாக இளையோர்களுக்குத் தேவைப்படுகின்ற காலத்தில் சிறுவர்களைச் சந்திக்கின்றனர்.

## வளர்ச்சியடைகின்ற ஒழுக்கங்களும் குறிக்கோள்களும்

ஞாயிற்றுக்கிழமைப் பள்ளியும் வகுப்பறைக் கல்வியும் மிக அதிகமான அளவில் சொற்களைக்கொண்டு கல்வி புகட்டுவதில் அதிக நம்பிக்கை வைத்திருப்பதனால் தற்கால வாழ்க்கையின் ஒழுக்கத் தேவைகளைச் சந்திப்பதில் பயனற்றனவாய் இருக்கின்றன. ஒழுக்க வளர்ச்சி, சமூகப் பழக்கங்களிலும் மனப்பான்மைகளிலும் வளர்ச்சியுறுவது போன்றே வகுப்பு அறையிலும் அல்லது விளையாட்டு மைதானத்திலும் இயற்கையாகத் தோன்றுகின்ற நிகழ்ச்சிகளின் தொடர்பில் அதிகப் பயனுள்ளதாயிருக்கும். ஞாயிற்றுக்கிழமைப் பள்ளி ஒருவர் மற்றொருவரைப் பாராட்டுகின்ற நல்ல பழக்கத்தை ஏற்படுத்தும். மற்றவர்களது உரிமைக்கும் உணர்வுகளுக்கும் மதிப்புக் கொடுக்கின்ற தன்மையையும் உண்டாக்கும். ஆனால், இது ஒரு வெற்றிடத்தில் செய்யப்படுமானால், குழந்தைகள் இத்தகைய படிப்புகளுக்கும், அன்றாட வாழ்க்கையிலும், தெருவிலும், பூங்காவிலும், பள்ளியிலும் சந்திக்கின்ற பிரச்சினைகளுக்கும் யாதொரு தொடர்பையும் காணவியலாதாகையால் இப்படிப்பு குழப்பமான குழந்தைப்பேச்சின் பலனையே அடையும். ஒழுக்கக் கருத்துகளில் முரண்பாடு பெற்றோர்களிடமும் மற்ற முதியோர்களிடமும் அவனது ஒப்பாரிடத்தும் இருக்குமானால் அவை இளையோனுக்குக் குழப்பத்தையூட்டும் ஏதுவாகவும் அவனுக்குக் கவலையையும் நிலையில்லாத தன்மையையும் உண்டாக்கும் ஏதுவாகவும் அமையும். அவன் அதிகமான நம்பிக்கை வைத்துள்ளோர்கள் அவன் எதிர்பார்க்கின்ற அளவு அவர்களது நடத்தையில் சரியாக இல்லை என்பது அவனுக்குத் தெளிவாகத் தெரியுமானால், அவன் நம்பிக்கையை இழக்கிறான். இவ்வாறு இளையோர் சிறுவர்கள் சிறுமியரது வழிகாட்டலில் அக்கறை கொண்டோரது நடத்தை ஒழுக்க வளர்ச்சியில் முக்கியமான சக்தியாகும்.

ஒழுக்கப் போதனைகளின் இன்னுமொரு முக்கியமான கருத்து என்னவெனில், அப்போதனைகள் பயனுள்ள வகையில் இருக்க வேண்டுமானால், சிறுவர் சிறுமியரது ஒழுக்க வாழ்க்கையைப் பாதிக்கும் எல்லா நிறுவனங்களின் இசைவான இடைத்தொடர்பையும் பெற வேண்டும். இல்லத்திலும், விளையாட்டு மைதானத்திலும், கோயிலிலும்

தரப்படுகின்ற கருதுகோள்கள் பொதுவாக அதிகமான அளவில் தொடர்பில்லாமல் இருப்பதில் எந்தவிதமான இயக்க முக்கியத்துவத்தையும் கொண்டிருப்பதில்லை. கோவிலிலுள்ள நிகழ்ச்சி பல நிலைகளில் குழந்தைகளின் மற்ற அக்கறைகளிலிருந்து பிரிந்து இருப்பதனாலும், தரப்பட்டுள்ள செய்திகள் மிகவும் பழங்காலத்தைச் சார்ந்து இருப்பதனாலும் அவனுடைய அன்றாட வாழ்க்கையின் தொடர்பில் பொருளற்று இருக்கின்றன. ஒழுக்கங்களுக்கு ஒரு நேர் நிலை அணுகுதலே தேவையாயுள்ளது. அல்லது ஃப்ளிஜ் (Fleege) கூறுவது போன்று மிக அதிகமான முக்கியத்துவம் தூய்மையற்ற தன்மைக்குத் தரப்பட்டுள்ளதேயன்றி போதிய அளவு முக்கியத்துவம் தூய்மைக்குத் தரப்படவில்லை. நற்குணங்கள் மறைவிடத்தில் வைக்கப்பட்டுள்ளன. ஆனால், தோல்விகளும், தீயகுணங்களும் மேடையில் நடத்திக் காட்டப்படுகின்றன.[22]

இளையோன் அதிகாரக் கட்டுப்பாட்டை எதிர்க்கலாம். தன்னுணர்வு மனப்பான்மை இக்காலத்தில் மிகத்தெளிவாக வெளிக்காட்டப்படுவது அவனை ஓர் ஆர்வமுள்ள இளைஞனாக ஆக்குகின்றது. தன்னைக் குழந்தையாகக் கருதித் தங்கள் அதிகாரக் கட்டுப்பாடுகளுக்குள்ளாக்குகின்றவர்களை எதிர்நோக்கி மிகவும் எச்சரிக்கையுடன் இருக்கின்றான். அவன் மிகவும் குறிக்கோளுடைய தன்மையுடையவனாக விருக்கின்றான். ஆசிரியர் அவரது செயல்களில் மிகவும் நேர்மையுடன் இருக்கவேண்டுமென எதிர்நோக்கி இதன் காரணமாக ஆசிரியர் கடைப்பிடிக்கும் பல வழிகளையும் ஆராய்ந்து கேள்வி கேட்கின்றான். அவன் எல்லாப் பொருளும் தன்னை நோக்கியிருப்பதாகக் கருதுவது கவனிக்கவேண்டிய ஏதுவாகும். இளையோன் நேர்மையற்ற செயல்களிலும் தவறாக நடத்தப்படுவதிலும் அதிக தூண்டுகையும் உணர்வும் உடையவனாகவும், இவைகளை அதிகமாகக் கருத்தில் பதித்துக் கொள்பவனாகவு மிருக்கின்றான். அவன் தேவைகளும் ஆசைகளும் வழிகாட்டப்பட வேண்டும். ஆனால், அவனது கல்வியிலும் வழிகாட்டலிலும் அக்கறை கொண்டுள்ளோர் அவனது குண இயல்புகளைப்பற்றிய நல்லறிவும் ஒழுக்க வளர்ச்சியில் உண்மையான அக்கறையும் கொண்டிருக்கவேண்டும்.

### ஆன்மீகப் பயன்மதிப்புகள் உருவாதல்

தனியன் குழந்தைப் பருவத்திலிருந்து இளையோர் பருவத்திற்குச் செல்லும்போது புதிய புறநோக்குகளும் புதிய அறக் கருதுகோள்களுள் நிலைபெறுதலும் தோன்றுகின்றன என்பது முன்னரே கூறப்

[22] U. H. Fleege, 'Self-Revelation of the Adolescent Boy,' Milwaukee: Bruce Publishing Co., 1944, p. 286.

பெற்றது. எல்லாப் போதனைகளும் ஒதுக்கப்படுகின்றன என்று இதற்குப் பொருளல்ல. ஆனால், தனியனது சுதந்திர உணர்வு வளர்ச்சி புதுப் பொறுப்புகளையும், மற்றவர்களின் துணையை முன்புகொண்டு சந்தித்த பிரச்சினைகளையும், புதிராகத் தோன்றுகின்ற பிரச்சினைகளையும் சந்திக்கின்ற திறனைப் பெறுகின்றான் என்பதே பொருளாகும். அவன் முடிவுகள் எடுப்பதற்குத் தன்னைப் பொருத்திக்கொள்ள வேண்டும். அவன் தனது நடத்தை சரியானதா தவறானதா என்பதைத் தீர்மானிக்க நல்ல நீதிபதியாகவும்—மேலும் அவன் தன்னைக் குழு நடத்தைத் தரங்களுக்கு ஏற்றவாறும்—தன்னுடைய தரத்திற்கேற்றவாறும் பொருத்திக்கொள்ள வேண்டும். ஒழுக்கக் கருத்துகள் ஆன்மீகப் பயன்மதிப்புகளின் வளர்ச்சி ஒரு வெற்றிடத்தில் நடப்பதில்லை. இவ்வளர்ச்சிகள் இளையோனது மன, சமூக மனவெழுச்சி, உடல் வளர்ச்சிகளுடன் தொடர்புகொண்டிருப்பதில்லை; தற்காலப் பள்ளிக் குழந்தையின் முழு வளர்ச்சியை வலியுறுத்துகின்றன. முழு வளர்ச்சியைப்பற்றிக் கருதுவதனால் அதில் ஆன்மீக வளர்ச்சியும் சேர்ந்துள்ளது. பள்ளிச் சமுதாயத்தில் ஒன்றாக வாழ்வதற்கு அமைக்கப்பட்டுள்ள குறிக்கோள்களின் அடிப்படையில் அவனது ஆசிரியர்களுடனும் ஒப்பாருடனும் தொடர்பு கொள்வதனால், குழந்தை மற்றவர்களுடன் வாழ்வதற்கும், மற்றவர்களது உணர்வு, உரிமை, இன்பம் ஆகியவற்றிற்கு மதிப்புக் கொடுப்பதற்கும் கற்றுக்கொள்கிறான். தான் அடைகின்றவற்றிலும், குழு அடைகின்றவற்றிலும் இயற்கையின் ஒழுங்கான தன்மையை உணர்வதிலும் அவனது அன்றாடச் செயல்களை, வழிகாட்டும் குறிக்கோள்களை உணர்ந்து ஏற்றுக்கொண்டு திருப்தி அடைகின்றான். அவன் மற்றவர்களுக்கு உதவியாயும், மற்றவர்கள் அவனுக்கு இவ்வாறு உதவியாக இருக்கவுங்கூடும் என்று கற்றுணர்கிறான். அதன் பயன்மதிப்புகளைப்பற்றிய ஒரு பொது உணர்வுகொண்டு அதன்மூலம் அவனைப்பற்றியும், அவனது ஒப்பார்களைப்பற்றியும் முடிவுகள் கொள்கின்றான்.

பயன்மதிப்புகள், மற்றவைகள் கற்றுக்கொள்ளப்படுவது போன்று அதே தன்மையில் கற்றுக்கொள்ளப்படுகின்றன. மேலும், குழந்தை அடைகின்ற பயன்மதிப்புகளின் தன்மையைத் தற்செயலாக நிகழ்கின்ற ஒன்றாக விட்டுவிடக் கூடாது. தனிப்பட்ட மாணவன் பல தேவைகளை அவனது கீழான நிலைகளில் பொதுவாக வைத்துள்ளான். மேலும், அவனது உள்ளுணர்வுகளும், அடைவுகளும், கற்றலுக்குரிய வாய்ப்புகளும் வளர்ச்சிகளும் தெளிவான மனிதத் தன்மையுடையனவாக விருக்கின்றன. இதனால் அவனது அனுபவங்களின் காரணமாக அவன் நடத்தைத் தொடர்பில் பொறுப்பும், முன்னிற்கின்ற பண்புள்ள பழக்கங்களும் அடைகின்றான். இது அவனுக்குத் தன்னைக் கட்டுப்படுத்துகின்ற தன்மையைத் தருகின்றது.

இது வாழ்க்கையின் கீழான வகைகளில் காணப்படுவதில்லை. நேர்மை பற்றிய குறிக்கோள்கள், நேர்மையாக நடத்தல்; மற்றவர்களது உணர்வுகளுக்கு மதிப்பளித்தல் ஆகியவைகள் மற்றவர்களுடன் கொள்ளும் அனுபவங்கள்மூலமாக அடையப்பெறுகின்றன. மற்றக் குறிக்கோள்கள் வழிகாட்டும் சக்திகளாக இருக்கின்ற நிலைகளில் இவை அடையப்பெறுகின்றன. இத்தொடர்பில் சகோதரி மேரி ஃபீலன் (Sister Mary Phelan) ஒரு மாணவனிடம் கேட்டார்: 'நீ மிகச் சிறந்தவராகக் கருதுபவர் யார்? நீ மிகச் சிறந்தவராக யாரைத் தேர்ந்தெடுத்துள்ளாய்?'[23] 11-லிருந்து 18 வயது வரையுள்ளோரின் துலங்கல்களில் 60 சதவீதத்திற்குமேல் சமயப் பெரியோர்கள், வரலாற்று வீரர்கள், உடன் வாழும் பொதுப்பணியாளர்கள் ஆகியோர் பற்றியதாக இருந்தது. ஹில் (Hill) என்பவர் அரசினர் பள்ளிக் குழந்தைகளை ஆட்படுவோராகக்கொண்டு எடுத்த முடிவுகள் இதனுடன் ஒன்றியிருக்கின்றன. சமயப் பெரியோர்களைப்பற்றிக் கூறியதில்மட்டும் மாறுபாடு இருந்தது.[24] இது சகோதரி ஃபீலன் ஆய்வில் எடுத்துக்கொண்ட மாணவர்களிடம் இருந்த மாறுபாடு காரணமாகவும், இம்மாணவர்கள் கிராமப் பள்ளியிலிருந்து வந்ததாலும் ஏற்பட்டது.

இவ்வாய்வுகள் இளையோரது ஒழுக்க, குணவியல்பு வளர்ச்சிகளில் உயர்ந்த அந்தஸ்திலும் தலைமையிலும் உள்ள மக்களது செல்வாக்கினால் ஏற்படுகின்றன என்பதற்கு மிகத்தெளிவான சான்றுகள் உள்ளன. கோயில்களுக்கும், பள்ளிகளுக்கும், மற்ற இளைஞர்களுக்குப் பணிபுரியும் நிறுவனங்களுக்கும் இதில் அடங்கியுள்ள பொருள்கள் மிகவும் தெளிவாக உள்ளன. ஆசிரியர்கள், குருமார்கள், மற்ற இளையோர் குழுத்தலைவர்கள் இவர்களது இருப்பும் நடத்தையும் இளையோர்களது ஒழுக்கக் குணவியல்பு வளர்ச்சிகளிலும் குறிக்கோள்களிலும் மிக முக்கியமான செல்வாக்குக் கொண்டுள்ளன.

## அதிகாரச் சுருக்க உரை

குணவியல்பு, ஒழுக்க வளர்ச்சிக்கான நல்ல இயக்கத் திட்டம், இளையோரது சமயத் தேவைகள் ஆகியவைகளுக்கு முக்கிய கவனிப்பை அளிக்கவேண்டும். குழந்தை, இளையோர் ஆகியோரது சமய வளர்ச்சியில் சூழ்நிலை ஏதுக்கள் முக்கியப் பங்கினை வகிக்கின்றன. இவ்வாறு வெவ்வேறு இல்லங்களிலிருந்தும், வெவ்வேறு சமயப்

[23] Sister M. Phelan, 'An Experimental Study of the Ideals of Adolescent Boys and Girls,' Catholic Monograph No. 193, 1936.

[24] D. S. Hill, 'Personification of Ideals of Urban Children,' 'Journal of Social Psychology,' 1930, Vol. 1, pp. 319-393.

பின்னணியிலிருந்தும் வரும் இளையோர்களுடைய சமய மனப் பான்மைகளிலும் பயன்மதிப்புகளிலும் முக்கியமான மாறுபாடுகளைக் காணலாம். குழந்தைகள் இளையோர் ஆகியோரது ஒழுக்க வளர்ச்சி யில் சுற்றுப்புறம், பள்ளி, கோயில்போன்ற இல்லத்திற்குப் புறத்தே யுள்ள நிறுவனங்களது பங்கினை ஒப்பீட்டடிப்படையில் கணக்கிட இயலாது. ஒவ்வொன்றும் அவர்களது உலகத்தின் ஒரு பங்காகி அவர்களது ஒழுக்க வளர்ச்சியில் செல்வாக்குக் கொண்டுள்ளது. இருப்பினும், குழுச் செயல்களில் பொதுவாகக் காணப்படுகின்ற சொந்தத் தொடர்புகளும் பங்குகொள்ளுதலும், ஒழுக்கங்களின் வளர்ச்சியையும், குணவியல்பு வளர்ச்சியையும், இயக்க ஆற்ற லுடைய உண்மைத் தன்மை பொருந்திய சக்தியாக மாற்ற முனை கின்றன. இக்குழுவிலுள்ள திறன்மிக்க அறிவாற்றலுடைய தலைவர் கள்மூலம்தான் இளையோர்கள், தங்களுடைய குறிக்கோள்களைத் தேர்ந்தெடுத்துப் பயனுள்ள பயன்மதிப்புகளையும் கற்றுக் கொள் கின்றனர்.

இளையோனுக்குத் தன்னை மதிக்கவும் தன்னுடைய திறன்களை உணரவும் கற்றுத்தரவேண்டும். அவன் சமூகத்தில் சிறப்பான பங் கினை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்பதை உணர்த்தவேண்டும். அவனிடத்து உடற்குறைகள் இருக்குமாயின் அவற்றிலிருந்து மீள் வதற்குக் கற்றுக்கொள்ளவேண்டும். இவற்றிலிருந்து மீள்வதற்காக அதிகமாக ஈடுசெய்தலோ, ஏதாவது ஒருவகையான தற்காப்பு இயக் கத்தினை அதை மறைப்பதற்குப் பயன்படுத்தவோ கூடாது. அதிகாரம் 11-ல் தரப்பட்டுள்ள மனநலக் கொள்கைகளை, அவனது சமூகத் தொடர்புகளை ஒருமைப்படுத்தி இயக்குவதற்குரிய திறனை வளர்த்துக் கொள்வதற்காகப் பின்பற்றவேண்டும். தனியனகத்தே, அவனுக்கும் சமூகத்திற்கும் மிக அதிகமான அளவில் பயன்தரக்கூடிய இருப்புக் குணங்களையும் குணக்கூறுகளையும் வெளிக்கொணரத்தக்க வகையில், வழிகாட்டலும் கட்டுப்பாடும் அமையவேண்டும்.

## சிந்தனைக்குரிய பிரச்சினைகள்

1. இளையோனது நடத்தைச் செயல்களைக் கட்டுப்படுத்துதல் மனநலத்துடன் எவ்வாறு தொடர்பு கொண்டுள்ளது? அது சமய, ஒழுக்க வளர்ச்சிகளுடன் எவ்வாறு தொடர்பு கொண்டுள்ளது? சான்றுகள் கூறுக.

2. இளையோன் குற்றத்தை மிகவும் நன்றாகக் கட்டுப்படுத்து வதற்கு எல்லா நிறுவனங்களின் கூட்டுறவும் ஏன் அவசிய மாகிறது? இத்தொடர்பிலுள்ள சில நிறுவனங்கள் யாவை?

3. உன்னுடைய உற்று நோக்கலின் துணைகொண்டு இளமைக் குறும்பு, இளையோர்களின் பொழுதுபோக்குச் செயல்களின்மூலம் நல்ல பயன்தரத்தக்க வழிகளை அடையலாம் என்பதற்குச் சான்றுகள் தரவும்.

4. நல்ல பொருத்தப்பாடுகளுடைய தனியனாக வளர்வதற்குத் தானாக உணர்தல் எவ்வாறு அவசியம் எனக் காட்டுக. இளையோன் தன்னிடத்தும் மற்றவர்களிடத்தும் நற்பயன் விளைவிக்கவல்ல மனப்பான்மைகளை வளர்த்துக் கொள்வதற்கு இளையோனுக்குத் தேவையானவை யாவை?

5. ஆன்மீகப் பயன்மதிப்புகள் என்ற சொல்லுக்குப் பொருள் என்ன? ஆன்மீகப் பயன்மதிப்புகளுக்கும் சென்ற அதிகாரத்தில் குறிப்பிட்ட நிலையான, முழுமையான வாழ்க்கை மெய்யுணர்வை அடைதலுக்கும் இடையே தொடர்பினைக் காண்கின்றாயா? விளக்குக.

6. இளையோனது வாழ்க்கையில் சமயத்தின் பயன்கள் யாவை? உன்னுடைய இளையோர் பருவ வாழ்க்கையில் சிறப்பாக இருந்தவை யாவை?

7. பொழுதுபோக்கும் குற்ற நடத்தையும் ஒரே தன்மையாய் எந்தெந்த வழிகளில் உள்ளன? ஏந்தெந்த வழிகளில் அவை மாறுபட்டுள்ளன?

8. உன்னுடைய கோயில் அல்லது நீ தொடர்புகொண்டுள்ள கோயில்களும் இளைஞர்களைச் சமூக இயல்பினர்களாக ஆக்குவதற்கு என்ன வாய்ப்புகள் அளிக்கின்றன? அவை போதிய அளவு இருப்பதாக நீ நினைக்கிறாயா? இல்லையெனில் நீ வேறு என்ன வேண்டும் எனக் கூறுவாய்?

9. இவ்வதிகாரத்தில் கூறப்பட்டுள்ள ஆறு பயன்மதிப்புகளை வரிசைப்படுத்து. அவைகளின் முக்கியத்துவத்திற்கு ஏற்றவாறு தரமிடவும்.

(1) உன்னுடைய சிறந்த நண்பன்.

(2) தொழில்.

(3) கார் அல்லது ஏதோ ஒன்றை வைத்திருத்தல்.

(4) நீ தொழில் செய்ய விரும்பும் இடம்.

(5) ஓய்வு.

10. இன்றைய நாளின் பண்பாட்டில் இளையோர்கள் சந்திக்கின்ற ஒழுக்கத் தன்மையான 5 அல்லது 6 பிரச்சினைகளைக் கூறுக. இப்பிரச்சினைகளைத் தீர்ப்பதில் எந்நிலைமைகள் பாதகமாக இருக்கின்றன ?

## தெரிவுசெய் நூற்பட்டியல்


1. Baker, H. J., 'Spiritual Values Give Life Its Highest Meaning,' 'Nineteenth Yearbook of the Elementary School Principal,' 1947, Vol. 27.
2. Chave, E. J., 'A Functional Approach to Religious Education', Chicago: University of Chicago Press, 1947.
3. Cole, L., 'Psychology of Adolescence' (Fourth Edition), New York: Rinehart and Co., Inc., 1954, Chaps. 13 and 14.
4. Cruze, W. W., 'Adolescent Psychology and Development' New York: The Ronald Press Co., 1953, Chap. 9
5. Fleege, U. H., 'Self-Revelation of the Adolescent Boy', Milwaukee: Bruce Publishing Co., 1944.
6. Horrocks, J. E., 'The Psychology of Adolescence.' Boston: Houghton Mifflin Co., 1951, Chap. 14.
7. Hurlock, E. B., 'Adolescent Development'. New York: McGraw-Hill Book Co., 1949, Chaps. 10 and 11.
8. Knoebber, Sister M., 'Self-Revelation of the Adolecent Girl' Milwaukee: Bruce Publishing Co., 1936.
9. Merry, F. K., and R. V. Merry, 'The First Two Decades of Life'. New York: Harper & Bros., 1950, Chap. 12.
10. Neumeyer, M. H., 'Juvenile Delinquency in Modern Society', New York: D. Van Nostrand, 1949.
11. Schneiders, A. A., 'The Psychology of Adolescence', Milwaukee: Bruce Publishing Co., 1951, Chap. 16.

12. Sperry, W. L., et al, 'Religion in the Postwar World' Cambridge: Harvard University Press, 1946.

13. Stott, D. H., 'Saving Children From Delinquency.' New York: Philosophical Library, Inc., 1953.

14. Wattenberg, W. W., 'The Adolescent Years.' New York: Harcourt, Brace and Co., 1955, Chap. 16.

15. Williamson, E. G., 'Counseling Adolescent,' New York: McGraw-Hill Book Co., 1950.

16. Zachry, C. B., 'Emotion and Conduct in Adolescence'. New York: Appleton - Century - Crofts, Inc., 1940, Chaps. 5 and 6.

# 9. இளையோரது ஆளுமை

## ஆளுமை: அதன் தன்மையும் குணவியல்புகளும்

இவ்வதிகாரத்தின் தலைப்பு 'இளையோரது ஆளுமை' என்று இருந்தாலும் ஈண்டு இப்பருவத்தில் வாழ்க்கையின் துவக்க ஆண்டுகளிலுள்ள ஆளுமையிலிருந்து தனித்த, வேறுபட்ட ஆளுமை புகுத்தப்படுவதாகக் கருதக்கூடாது. இளையோர் பருவம் அதனுடன் கொண்டுவரும் மிகக் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் பால் வளர்ச்சியுடன் தொடர்புடையவையாகும். இங்கும் துவக்க ஆண்டுகளின் பட்டறிவுகள் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவையாகும். முன்னைய அதிகாரங்களில் வளர்ச்சிபற்றிக் கூறும்பொழுது அது ஒரு தொடர்ச்சியான நிகழ்ச்சி என்றும், அதனைத் தனிப்பட்ட பகுதிகளாகப் பிரிக்கவியலாது என்றும் கூறப்பெற்றன. வாழ்க்கையின் பல்வேறு பகுதிகளில் சில குறிப்பிட்ட, தனித்த மாறுபாடுகள்மட்டுமே ஏற்படும். இளையோர் பருவத்தில், பட்டறிவுகளுக்கிடையே சிறந்த ஒத்துணர்வு முன்னைய ஆண்டுகளில் ஏற்பட்ட மனவளர்ச்சியினாலும் கல்வி வளர்ச்சியினாலும் சாத்தியமாகின்றது. தனியனது உடலியல் பகுதிக்கும் சமூகத்தின் தேவைகளுக்கும் தொடர்ச்சியான தொடர்பு உள்ளது. மனப்பான்மைகள் உருவாகி இத்தேவைகளுடன் பொருந்துமாறு சீராக அமைக்கப் பெறுகின்றன.

இளையோனது ஆளுமையை விவரிக்கவும் (ஆனால், ஈண்டு எல்லா இளையோர்களும் ஒரு தனிப்பட்ட வகை ஆளுமையைக் கொண்டிருக்கின்றனர் என்று குறிப்பிடுவதற்கு முயற்சிகள் எடுக்கவில்லை), இளையோர்களது ஆளுமையின் வளர்ச்சியினைப் பாதிக்கின்ற ஏதுக்களைக் குறிப்பிடவும், இளையோர்களின் தனித்த தேவைகளைக் குறிப்பிடவும் இந்த அதிகாரம் இடந்தரும்.

### ஆளுமையை வரையறுத்தல்[1]

'ஆளுமை' எனும் சொல் இன்றைய நாளிலுள்ள சொல் வழக்கில் மனிதனது நடத்தையையும் குணவியல்புகளையும் குறிப்பதற்காகப்

1 ஆளுமையின் வரையறை குறித்தும் தன்மை குறித்தும் இங்கு

பெரிதும் பயன்படுத்தப் பெறுகின்றது. இச்சொல் மிகவும் பரவலாகவும் பொதுவான நிலையிலும், பாமரனாலும், ஆளுமை வல்லுனராலும், பேச்சாளராலும், உளவியலாளராலும் பயன்படுத்தப்படுகின்றது. பாமரன் ஆளுமையினை 'நல்ல', 'மகிழ்ச்சியைத் தருகின்ற,' 'புதுமையான' என்ற அடைமொழிகளின் துணைகொண்டு பார்க்கின்றான். ஆனால், ஆளுமை வல்லுநர் 5 டாலர் அல்லது அதற்கு அதிகமான விலைகொடுத்து இரு கையுறைகளையோ (gloves) அல்லது ஒரு பகட்டான தலைஅணியோ (hat) வாங்கி அதனைச் சிறப்பாக அணிவதற்கு எவ்வாறு அணியவேண்டும் என்பதில் ஒருசில குறிப்புகள் பெறுவது போன்றே ஆளுமையைக் கருதுவர். மேடைப் பேச்சாளர்களும் சில உளவியலாளர்களும் இச்சொல்லை வெற்றுநிலையில் அதனையொத்த ஆன்மா, தான், ஆவி போன்ற வெற்றுநிலைச் சொற்களைப்போன்று பயன்படுத்துவர். இவ்வாறான நிலையில் ஆளுமை தெளிவான வரையறைக்கோ அல்லது போதிய விளக்கத்திற்கோ ஆளாவதில்லை.

ஆளுமையின் மூன்று பகுதிகள் அல்லது கூறுகள், அவற்றைப்பற்றி உளவியலாளர்கள் கருத்து வேறுபாடு கொள்வதற்கு இடமளிக்கின்றன. அவை யாவும் சொந்தக் கருத்துகளேயாகும். ஒரு கூற்றினைப் பற்றிய உண்மை மற்றொரு நிலையில் உண்மையாக இருக்கலாம் அல்லது இல்லாமலும் இருக்கலாம். அவைகள் ஒரு கோப்பையின் வெளிப்புறம் உட்புறம் போன்று ஒரு பொருளின் கூறுகளேயாகும். முதலில் சமூகக் கூறுபாடு அல்லது ஒரு மனிதன் மற்றவர்கள்மீது கொள்கின்ற தூண்டல் விளைவு உள்ளது. 'ஜான் நல்ல ஆளுமையினைப் பெற்றுள்ளான்' என்றால், ஜான் மற்றவர்களிடம் இசைவான விளைவினை உண்டாக்கியுள்ளான் என்பதுதான் பொருளாகும். ஆளுமையின் இக்கூறுபாடே, மற்றவர்களைப் பாதிக்கின்ற, ஒருவனது எல்லாக் குணவியல்புகளுடைய மொத்தக் கூட்டாகவிருக்கிறது. அறிமுகத் தர அளவீடுகள் ஆளுமையின் கூறுபாட்டினை அளக்கவல்ல வழிமுறையாகும். சுருங்கக் கூறின் ஆளுமையின் சமூகக் கூறுபாடு என்றால் மற்றவர்களை, ஒருவரது ஆளுமை எந்த அளவு பாதிக்கிறது என்பதாகும்.

இரண்டாவதாக, ஆளுமையின் எதிர்வினை அல்லது துலங்கல் கூறுபாடு ஒன்று உள்ளது. அதாவது, ஒருவன் எவ்வாறு செயலுறுகிறான் என்பதுவும், என்ன செய்கிறான் என்பதுவுமாகும். சில ஆளுமைகள் எதிர்வினைகளை அளிப்பதில் மனவெழுச்சிகள் நிரம்பியனவாக இருக்கின்றன. ஆனால், சிலர் அமைதியான எதிர்வினைகளையும், அறிவு

---

அளிக்கப்பட்டுள்ள விவரம் கீழ்க்கண்ட நூலிலிருந்து எடுக்கப்பட்டது. K. C. Garrison and T. S. Gray, 'Educational Psychology' New York : Appletion-Century-Crofts, 1955, pp. 177-178.

சார்ந்த எதிர்வினைகளையும் அளிக்கின்றனர். ஆளுமையைப் பெரும்பாலும் ஒருவருடைய எதிர்வினைக் கோலங்களின் மொத்தக்கூட்டு என வரையறுக்கின்றனர். ஒரு மனிதன் பல்வேறு சூழ்நிலைகளின் இன்பமயமானதும் இன்னயம் ஆர்ந்ததுமான நடத்தையை எதிர்வினையாகக் கொண்டிருப்பானெனின், அவன் இன்பமான அல்லது மகிழ்ச்சியான ஆளுமையைப் பெற்றுள்ளான் எனலாம். சிலரிடம் ஆதிக்கம் நிரம்பிய ஆளுமை உள்ளது. இன்னும் சிலரிடம் கசப்பு மனப்பான்மை ஆளுமை உள்ளது. மற்றும் சிலர் மதிப்புமிக்க ஆளுமை பெற்றுள்ளனர். வேறு சிலர் உணர்ச்சியியல்பு ஆளுமை பெற்றுள்ளனர். இவையெல்லாம் தனியன்கள் சில சூழ்நிலைகளில் எவ்வாறு எதிர்வினை புரிகின்றனர் அல்லது நடத்தை கொள்கின்றனர் என்பதைப் பொறுத்துள்ளன. எந்த ஆளுமையையும் துலங்கல் அல்லது நடத்தை நிலையினின்று ஆய்வு செய்யலாம்.

ஆளுமையின் மூன்றாவது கூறு உள்ளார்ந்த கூறு அல்லது காரணம் அல்லது ஏன் என்று அறிய முயல்வது ஆகியவற்றைப்பற்றியதாகும். ஒருவனுடைய உளவியல் உள்ளப் பாங்குதான் அவனைச் சமூகத்தன்மை அற்றவனாக்கி அதன்மூலம் பிற மனிதர்களை விருப்பத்தகாத முறையில் பாதிக்குமாறு செய்கின்றது. பொதுவாக மக்கள் ஒருவனை விரும்பாமல் இருப்பதற்குக் (சமூகநிலை) காரணம் என்னவெனில், அவன் நட்பு முறையில் (துலங்கல் நிலை) பழகாமல் இருப்பதனால் இருக்கலாம். அதாவது, அவனிடம் எதிர்மறையான மனப்பான்மைகள் (காரணநிலை) குழந்தைப் பருவத்திலிருந்தே வளர்ந்துள்ளதால் அவ்வாறு நடந்துகொள்கிறான். வேறுவிதமாகக் கூறினால் நாம் ஜான் டோவினுடைய ஆளுமையை அவனுடைய நண்பர்கள் அவனைப்பற்றிக் கொண்டுள்ள எண்ணத்தின்மூலமாக ஆய்வு செய்யலாம். அல்லது அவன் என்ன செய்கிறான் என்பதன்மூலமாக ஆய்வு செய்யலாம்; அல்லது அவன் ஏன் தான் விரும்பியவாறெல்லாம் செயலுறுகின்றான் என்று அறிவதன்மூலமும் ஆய்வு செய்யலாம். இம்மூன்று கூறுகளும் முக்கியமானவையாகும். ஆனால், இவைகளில் ஏதேனும் ஒன்றுமட்டும் ஆளுமையை முழுமையாக விளக்குவதில்லை. ஒரு கோப்பையின் வெளிப்புறம் மட்டுமோ அல்லது உட்புறம் மட்டுமோ அல்லது அமைப்பு மட்டுமோ தனித்துக் கோப்பையாகாது. கோப்பை என்பது அதன் எல்லாக் கூறுகளையும் தன்னகத்தே கொண்டதாகும். அதுபோன்று ஜான் டோவின் ஆளுமை அவன் மற்றவர்களை எவ்வாறு பாதிக்கிறான் என்பதைப் பொறுத்து உள்ளது. அது அவனது நடத்தையையும், அவன் எவ்வாறு செயலுறுகின்றான் என்பதையும் பொறுத்து உள்ளது. அது கண்டிப்பாக அவனது மனப்பான்மைகள், அவனது உணர்வுகள், அவனது உள அமைப்பு ஆகியவற்றைப் பொறுத்துள்ளது. ஒரு கூறின் வரையறை அல்லது ஒரு கூறின் அளவிடல் ஆளுமையின் ஒருநிலையைப்பற்றிய அறிவினை

மட்டுமே தரும். நாம் பிறரை எந்த அளவு பழிக்கின்றோம், பொருள்களினாலும் சில நிகழ்ச்சிகளினாலும் நாம் எவ்வாறு பாதிக்கப்படுகின்றோம் என்பவையும், நமது ஆழ்ந்த சிந்தனைகள், உணர்ச்சிகள், மனப்பான்மைகள் ஆகியவையும் ஆளுமையின் சுவைமிக்க கூறுகளாகும். ஆனால், ஆளுமை என்பது இவற்றில் ஏதேனும் ஒரு தனித்த கூறினால் மட்டும் விளங்குவதன்று. அது எல்லாக் கூறுகளையும் —அதற்குமேலும் குறிக்கின்றது. அது முழு மனிதனைக் குறிக்கின்றது. அவன் அடைந்துள்ள நாட்டங்கள், திறன்கள், பலவகையான கற்றுணர்ந்த பழைய அனுபவங்கள் ஆகியவைகளும் இவ்வேதுக்கள் இணைந்தும் (அவாக்களும் கற்றலும்) ஒருமித்தும் நடத்தை வகைகளாக மாறி அந்தத் தனிமனிதனுக்கு மட்டுமே இயல்பாகவும் தனித்தும் உள்ளவையாகும்.

## ஆளுமைக் குணவியல்புகள் அல்லது ஏதுக்கள்

இயல்பான ஆளுமையினைப் பிறழ்வு ஆளுமையுடன் ஒப்பிட்டு ஆய்வு செய்யும்பொழுது ஆளுமைபற்றிய நல்லறிவினைப் பெறலாம். ஆளுமைக் கூறுகளை ஏதுப்பகுப்பாய்வின் அடிப்படையில் ஆய்வு நடத்தியதன் விளைவாகக் கேட்டல் (Cattell) 10-லிருந்து 16 வயதுடையாருக்குப் பொருத்தமான ஆளுமை அளவுகளைத் தருகின்றார். இவைகளை 'அடிப்படை ஆளுமை ஏதுக்கள்' எனக் குறிப்பிடுகின்றார். அவ்வேதுக்களாவன:

| *மனவெழுச்சி உணர்வு* | *எதிராக* (vs) | *கடுமையான தன்மை.* |
|---|---|---|
| நரம்பு முனைப்பு ... ... | ... | தன்னியக்கக் களைப்பாற்றம் |
| நரம்பு நோயினன், அச்சம் கொள்பவன். | ... | 'தான்' வலிவு உள்ளதாய் இருத்தல். |
| இயற்றிநிலைக் கட்டுப்பாடு ... | ... | அமைதிகொண்ட சாதாரண நிலை. |
| அமைதியின்மையின் உச்சநிலை விறுநோய் (cyclothymia). | ... | பின்வாங்குகின்ற உணர்ச்சி விண்டநிலை (schizo-thymia). |
| சமூக இயல்பினனது ஒழுக்கம்... | ... | கல்வியில் வெறுப்பு. |
| தன்னிச்சையாக இருக்கின்ற விரும்புதலின் உச்சநிலை, சத்துள்ள நிலையை வலியுறுத்தல். | ... | மிகவும் விசித்திரத்தன்மை கொண்டவர். |
| அல்லாடுதல் ... ... | ... | அல்லாடுதலில்லாமை, நுண்ணறிவு.[2] |

[2] R. B. Cattell, et al, 'Handbook for the Junior Personality Quiz' Champaign, Ill: Institute for Personality and Ability Testing, 1953, pp. 8-10.

தனியனது ஆளுமை, இப்பண்புக்கூறுகளின் வெளிக்காட்டுதலைப் பொறுத்து இருப்பதோடல்லாது, இப்பண்புக்கூறுகளின் இணைப்பினையும் பொறுத்து உள்ளது. இணைப்பு என்பது பண்புக்கூறுகள் பொதுவாக அமைக்கப்பெற்றுப் பெரிய அளவிலுள்ள நடத்தையாக இணைவதையே இங்குக் குறிக்கின்றது. இவ்வாறு இணையும்பொழுது சில பண்புக்கூறுகள் மற்றப் பண்புக்கூறுகளுக்கு அடங்கியவாறு அமைகின்றன. ஆளுமை தனியனது அங்கமாகக் கருதப்படுகின்ற ஒரு பொது உணர்வாக வளர்ச்சியடைந்துள்ளது. இதனை வுட்வொர்த் (Woodworth) வலியுறுத்துகின்றார்; அவர் ஆளுமையைப்பற்றிய ஆய்வு, நடத்தையின் முழுத்தன்மையைக் கருதுவதாகும் என வலியுறுத்துகின்றார்.[3] பலர் தனியனைப்பற்றி ஆய்வு நடத்தும்பொழுது இவ்வாளுமையின் இணைப்புத் தன்மையினைக் கவனிக்காது விட்டுவிடுகின்றனர். இது குறிப்பாக ஒரேதன்மையான கல்வி பெறுபவர்கள் ஆளுமையில் ஒரே தன்மை பெற்றிருப்பார்கள் என்று வகைப்படுத்தும் தன்மையிலேயே காணப்படுகின்றது. இத்தவற்றினைக் குற்றவாளிகள், தொழிற்குழுக்கள், ஒரே நுண்ணறிவு உடையவர்கள் ஆகியவர்களைப் பற்றிக் கருதும்பொழுதும் செய்கின்றனர். இரண்டு தனியன்கள் பெருமளவில் இணையான மரபுநிலையினையும், பயிற்சியினையும், நிலையினையும் கொண்டிருந்தால்தான் பல்வேறு ஆளுமைக் கூறுகள் இணைந்து, இணையான ஆளுமைவகை இவ்விருவரிடத்தும் இருக்கும் என எதிர்பார்க்கலாம்.

### ஆளுமையின் வளரும் தன்மை

இளையோர் பருவம், உடல், உள்ளம், மனவெழுச்சி ஆகிய நிலைகளில் குறிப்பிடும்படியான மாறுதல்களை உண்டாக்கும் பருவம் எனக் கூறப்படுவதால் இளையோனுடைய ஆளுமையிலும் இணையான மாறுதல்கள் ஏற்படும் என எதிர்பார்க்கலாம். உள்ள முதிர்ச்சி இளையோர் பருவத்தில் ஏற்படுகின்றது. அதிகாரம் 3-ல் விவாதிக்கப் பட்டுள்ள உடல் வளர்ச்சி இந்தப் பருவத்தின் முற்பகுதியில் மிகவும் துரிதமாக வளர்ச்சியுறுகின்றது. ஆனால், சில உடனடியான உடலியல் மாறுதல்களும் ஏற்படுகின்றன. தைமஸ் சுரப்பி வேலை செய்யாமல் நின்றுவிடுகின்றது. பால் சுரப்பிகள் வேலை செய்யத் துவங்குகின்றன. இவ்வாறு ஒரு புதிய எண்டோக்ரின் சமநிலை உண்டாகின்றது. குழந்தையின் தன்முனைப்புத் தன்மை இவ்வாறு ஒரு சமூக உருவினை ஏற்றுக் கொள்கின்றது. ஒரு மாறுபட்ட என்டோக்ரீன், தனியனிடத்து இடைத் தொடர்பு கொள்கின்றது. இந்த நிலையில் தனியன் செய்கின்ற வினைகளுக்கு அவனையே பொறுப்பாக்குகின்றனர். சமூகம், ஆளுமையினை

[3] See R. S. Woodworth, 'Contemporary Schools of Psychology' New York: The Ronald Press Co., 1948, pp. 251-252.

வளர்கின்ற சமூக சக்தியாகக் கருதுகின்றது. சமூகம், இப்பொழுது ஸ்மித்தின் குழந்தை என்று கருதாது, திருவாளர் ஸ்மித்தின் இளம் மகள் என்று கருதுகின்றது. வளர்கின்ற தனியன் மற்றவர்களிடத்து ஏற்படுத்துகின்ற முத்திரை மாறிக்கொண்டே இருக்கிறது. இவ்வாறு மாறுவது வளர்கின்ற பொருள்களுடன் ஏற்பட்டு ஒரு பொதுத்தன்மை யான ஆளுமையின் வெளித்தோற்றத்தை உருவாக்குகிறது.

மேலும், ஒரு தனியனது ஆளுமையைப் பல்வேறு சூழ்நிலைகளில் உற்றுநோக்குமிடத்து அது மிகவும் சுவையுள்ளதாய் இருக்கிறது. இதைக் குறிப்பிடும்பொழுது ஆசிரியர் மனத்தில் ஒரு பதினான்கு வயதுப் பெண்ணின் உருவம் நினைவிற்கு வருகிறது. அவளை எட்னு என்று நமது சவுகரியத்துக்கு அழைக்கலாம். அவள் வீட்டில் மிகவும் கீழ்ப் படியும் தன்மையற்றவளாய் இருந்தாள். குறிப்பாகத் தாயாரின் வேண்டுகோள்களுக்குத் தரும் துலங்கல்களில் இவள், இத்தன்மையை மிக அதிகமாக வெளிக்காட்டினாள். ஆனால், அவளது தாயார் அவளை 'ஓர் அறிவுக்கூர்மையுடைய சிறுமி' எனக் கருதினாள். எட்னு தனது மூத்த சகோதரியின் முன்னிலையில், சமூக நிகழ்ச்சிகளின்போது, மிகவும் பணிந்து செல்லும் தன்மை கொண்டவளாய் இருந்தாள். ஆனால், எட்னு பள்ளியில் எட்டாவது படிவ மாணவ மாணவியரிடம் நன்றாகப் பழகினாள். அதனால், அவர்கள் எல்லோரும் அவளை விரும்பினர். எட்னு மூன்று மாறுபட்ட நிலைகளில் இருக்கும்பொழுது, வெவ்வேறான நடத்தைவகைகளை நாம் காண்பதோடல்லாது, இந்த மூன்று நிலை களில் ஏதாவது ஒரு நிலையின் 'வினைமுறையில்' ஈடுபடும்பொழுதும் நாம் பற்ற ஆளுமைக் குணவியல்புகளை ஓரளவு வெளிக்காட்டுவதைக் காண்பது சாத்தியமேயாகும். ஆதலின், ஆளுமையினைப் பல்வேறு பண்புக்கூறுகளை வெளிப்படுத்துகின்ற சூழ்நிலையினின்று பிரித் துணர்வது இயலாததொன்றாகும். சில சூழ்நிலைகளில் சில பண்புக் கூறுகளைக் கொண்டதாய் இருக்கும். வேறு சூழ்நிலைகளில் வேறுவித மான பண்புக்கூறுகளைக்கொண்டு காணப்படும். ஒரு தனிப்பட்ட நிகழ்ச்சியில் பண்புக்கூறுகள் இணைந்துள்ளவகை முதிர்ச்சி, பால், பழக்கவமைப்புகள், ஆரோக்கியம், தற்பொழுதைய மனப்பான்மை, பொது சமூகவகை ஆகிய பல மாறிகளைப் (variables) பொறுத்து அமையலாம்.

## உடல் தன்முனைப்பின் கருதுகோள் (Concept of the Physical Self)

இளையோர்களைப்பற்றிய உற்றுநோக்கல்கள், மருத்துவ உள வியல் மாணவர்களின் கருத்தான, எல்லா நடத்தையிலும் உடல் ஏதுக்களும் உளவியல் ஏதுக்களும் இடைத்தொடர்புகள் கொண்டிருக் கின்றன என்பதை உறுதிப்படுத்துகின்றன. இளையோர் பருவத்திலும்

முதியோர் பருவத்திலும் 'தான்' பற்றிய கருதுகோள் உடலியல் அனுபவங்களினால் பெரிதளவு பாதிக்கப்படுகின்றது. ஏனெனில், ஆளுமையின் மற்றக் கூறுபாடுகளைக்காட்டிலும் உடல் அதிகமான உண்மை நிலையினைக் கொண்டுள்ளது.[4] இது பார்ப்பதற்குத் தெளிவாகத் தெரிகின்றது என்ற காரணத்தினால் யாரும் உண்மை என்று கூறுவதற்கில்லை. ஆனால், இது சுத்தமாக இருப்பதற்கும், பணிவான தன்மை கொள்வதற்கும் பெற்றோர் தரும் துவக்கப்பயிற்சியினால் விளைவதாகும். உடல் ஆளுமையின் உருவமாதலின் ஒரு தனித்த முக்கியத்துவம் கொண்டுள்ளது. இது உடலாக மட்டுமன்றி மனவெழுச்சி அறிவு, சமூக ஊடகமாகவும் (medium) விளங்குகின்றது.

வளர்கின்ற ஒருவன் ஈடுபட்டுள்ள இன்றியமையாத பிரச்சினைகளில் ஒன்று, ஆளுமைப் பண்புகளுக்கும் உடல் அமைப்புகள் மாறுதல்கள் ஆகிய இவற்றிற்கிடையே தொடர்ந்து நடக்கும் இணைப்பைப் பற்றியதாகும். முதல் அதிகாரத்தில் இளையோர்களது வளர்ச்சிக்குரிய பணிகளில் முக்கியமானது, தனியன் தன் உடலை ஏற்றுக்கொள்வதாகும் எனக் குறிப்பிடப்பெற்றது. அவன் தொடர்ச்சியாக உடல் மாற்றங்களுக்கேற்றவாறு தன்னைப் பொருத்திக்கொள்ள வேண்டும். உடல் மாற்றங்களின் உடனியங்குகின்ற தன்மைகளுக்கு ஏற்றவாறும் தன்னைப் பொருத்திக்கொள்ளவேண்டும். இவ்வாறு அவன் தன்னைப் பற்றிய சிந்தனைகளையும் உணர்ச்சிகளையும் இம் மாறுதல்களின் அடிப்படையில் உணரவேண்டிய கட்டாயத்திற்குள்ளாகின்றான். பல்வேறு சமூக மனவெழுச்சிப் பிரச்சினைகள் உயிரியின் வளர்ச்சித்தொடர்பில் உள்ளன. வளர்ச்சியின் வழியே, சில சமயங்களில் சிறுவனைக் கலக்கத்திற்குள்ளாக்கும், 'வெங்கலக் கடையில் யானை புகுந்தது' போன்ற உணர்வினை அவனது அதிகமான தோற்ற அளவின் காரணமாக அவன் உணர்வான். சிறுமியர், முதல் பூப்புப் போக்குக்குச் சரிவரத் தயாராக இல்லையெனில் அவர்கள் மிகவும் கலக்கமடைந்துவிடுகின்றனர்.

### வளர்ச்சிக்குரிய பணிகளின் தொடர்பு

ஒருவன் தன்னுடைய உடல்கூறுபற்றிக் கொள்ளும் கருதுகோள் ஆளுமை வளர்ச்சியின் மற்றக் கூறுகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. வெவ்வேறான வளர்ச்சிக்குரிய பணிகளின் உறவு பற்றி அறிந்துகொள்ளும் முயற்சியில் 80 இளையோர்கள் கீழ்க்கண்ட பணிகளைப்பற்றி மிகவும் செறிவுடன் ஆய்வு செய்யப்பெற்றனர்.

[4] See C. B. Zachry and M. Lighty, 'Changing Body and Changing Self,' 'Emotions and Conduct in Adolescence.' New York: Appleton-Century-Crofts, Inc., 1940, Chap. 2.

1. ஒரு பொருத்தமான பால்பங்கினைக் கற்றுக்கொள்ளுதல்.

2. பெற்றோர்களிடமிருந்தும் மற்றோரிடமிருந்தும் மனவெழுச்சிச் சுதந்திரம் பெறுதல்.

3. மனச்சாட்சி, ஒழுக்கம், பயன்மதிப்புகளை வளர்த்துக் கொள்ளுதல்.

4. ஒத்த வயதினருடன் நன்றாகப் பழகுதல்.

5. அறிவுத்திறன்களை வளர்த்துக்கொள்ளுதல்.[5]

ஒவ்வோர் ஆட்படுவோனைப்பற்றியும் 32 கருவிகளைக்கொண்ட முடிவுகளுடன் தனியாள் வரலாற்றுப் பொருள்கள்கொண்ட முழுச் சுற்றறிக்கை மடிப்புத் தயாரிக்கப்பெற்றது. இந்தக் குறிப்புகளின் அடிப்படையில் எட்டுக்குமேற்பட்ட ஆராய்ச்சித்துறை ஆய்வாளர்கள் ஒவ்வொரு தனியனையும் 10 புள்ளி அடிப்படையில் முதல் நான்கு வளர்ச்சிக்குரிய பணிகள்பற்றித் தரமிட்டனர். ஐந்தாவது பணியைப் பற்றிய தரமிடல்கள் கல்வி அளவிடல்களின் பதின்மானத் (decile) தரமிடல்களினால் தீர்மானிக்கப்படுகின்றன. இத்தரமிடல்கள் குழுவின் உறுப்பினர்கள் தங்களின் வளர்ச்சிக்குரிய பணிகள், அடைவுகளில் சராசரி நிலையில் இருந்தனர் எனக் காட்டுகின்றன. இதன் பரப்புகள் தரமிடும் அளவில் ஓர் உச்சநிலையிலிருந்து மற்றோர் உச்சநிலைவரை சேர்த்துள்ளன எனக் குறிக்கின்றன. ஒவ்வொரு பணியைப்பற்றியும் ஒவ்வொரு வயது நிலையிலும் உள்ள இடைத்தொடர்புபற்றிய தரமிடல்கள் பெறப்பட்டன. ஒவ்வொரு பணியையும்பற்றிய 10, 13, 16-வயது நிலைகளின் தொடர்பிலுள்ள நீள்வெட்டுப் படிப்பு, வளர்ச்சிக்குரிய பணியில் நல்ல அடைவினை ஒரு வயதில் பெறுதல், அதைப் போன்ற பணிகளில் பின்னால் வருகின்ற ஆண்டுகளில் நல்ல அடைவினைத் தருகின்றது எனக் காட்டியது. இவ் ஆய்விலிருந்து பெறப்பட்ட முக்கியமுடிவு என்னவெனில் 13-லிருந்து 16 வயதுவரை இருந்ததைக் காட்டிலும் 10-லிருந்து 13 வயதுவரை இருந்த கீழான இடைத்தொடர்புகள் இருக்கின்றன எனக்காட்டியது. 13-ல் இருந்து 16 வயதுவரை இருக்கும் உயர்ந்த இடைத்தொடர்புகள் இத்தனிப்பட்ட பணிகளில் பெரும் அடைவுநிலை முடிவாக 13 வயது நிலையில் இருக்கின்றன என்றும் காட்டியது. இவ்வாறு 10-லிருந்து 13 வயதுவரை உள்ள பருவம் இசைவான ஆளுமையும், சமூக இயல்பினதான வழிகளும் வளர்ச்சியுறுவதற்கும் மாறுதல் ஏற்படுவதற்கும் மிக ஏற்ற பருவமாகும். அட்டவணை 9-1 ல் தரப்பட்டுள்ள இடைத்தொடர்புகளில் தொடர்

[5] A. Schoeppe and R. Havighurst, 'A Validation of Development and Adjustment Hypotheses of Adolescence,' Journal of Educational Psychology, 1952, Vol. 43, pp. 339-353.

பிணைப்பற்றிய ஆய்வு, ஒப்பாருடன் கொள்ளும் திருப்தியான தொடர்புகள், மற்றப்பணிகளை அடைவதுடன் மிகவும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது எனக் காட்டுகின்றது. இதற்கு அடுத்தாற்போல் முக்கியப் பங்கினைக் கொள்வது பொருத்தமான பால்பங்கினை அடைவதே

## அட்டவணை 9—1

வெவ்வேறு வயது நிலையிலுள்ள வளர்ச்சிக்குரிய ஐந்து பணிகளின் இடைத்தொடர்புகள் (ஸ்கோப்பேயும் ஹேவிக்கர்ஸ்டும் தந்தவை).

| | வயது 10 | 13 | 16 |
|---|---|---|---|
| வயதுக்கு வயது தொடர்ச்சியாக அதிகமாகின்ற இடைத்தொடர்புகள்— | | | |
| பால்பங்குப் (வெளி) பணி மனவெழுச்சிச் சுதந்திரத்துடன் (வெளி) கூடிய பணி ... ... ... | ·68 | ·83 | ·79 |
| பால்பங்குப் (வெளி) பணி ஒத்த வயதினருடன் பணிபுரிதல் ... | ·83 | ·82 | ·73 |
| மனவெழுச்சிச் சுதந்திரப் (வெளி) பணி ஒத்த வயதினரின் பணியுடன் கூடியது ... | ·57 | ·64 | ·63 |
| மனச்சாட்சி, ஒழுக்கங்கள், பயன்மதிப்புப்பணி ஒத்த வயதினரின் பணியுடன் கூடியது ... | ·80 | ·68 | ·78 |
| அறிவுத் திறன்களின் பணி ஒத்தவயதினரது பணியுடன் கூடியது ... | ·62 | ·68 | ·69 |
| வயதுக்கு வயது கீழ்நோக்கித் தொடர்ச்சியாகச் செல்லும் இடைத்தொடர்புகள்— | | | |
| பால்பங்குப் (வெளி) பணி அறிவுத்திறன்களின் பணியுடன் கூடியது ... | ·45 | ·49 | ·42 |
| மனவெழுச்சிச் சுதந்திரப் (வெளி) பணி மனச்சாட்சி, ஒழுக்கங்கள், பயன்மதிப்புகள் பணி ஆகியவற்றுடன் கூடியது ... | ·43 | ·38 | ·51 |
| மனவெழுச்சிச் சுதந்திரப் (வெளி) பணி அறிவுத்திறன்களின் பணியுடன் கூடியது ... | ·37 | ·45 | ·49 |
| வயதுக்கு வயது தொடர்ச்சியற்ற இடைத்தொடர்புகள்— | | | |
| பால்பங்குப் (வெளி) பணி மனச்சாட்சி, ஒழுக்கங்கள், பயன்மதிப்புகள் பணி ... ... ... | ·70 | ·58 | ·58 |
| மனச்சாட்சி, ஒழுக்கங்கள், பயன்மதிப்புகள்பணி அறிவுத்திறன்களின் பணியுடன் கூடியது ... | ·57 | ·78 | ·78 |

யாகும். வெவ்வேறான வயது நிலைகளில் இப்பணியை அடைவதில் மற்றப் பணிகளை அடைவதைக் காட்டிலும் அதிகமான முன்னேற்றம் காணப்பெற்றது. இது முன்னிளையோர் ஆண்டுகளிலும் இளையோர் ஆண்டுகளிலும் இதன் தொடர்பில் வழிகாட்டலுக்கு ஒரு முக்கியத் தேவையினைக் குறிக்கின்றது.

## ஆளுமை வகைகள் (Personality types)

மனிதன் தனியன்களைத் தனித்த வகையினராகப் பாகுபடுத்துவதில் எப்பொழுதும் அக்கறைகாட்டி வந்துள்ளான். இவ்வாறு வகைப்படுத்தப்பட்ட தனியன்கள் பட்டியலைத் தயாரித்து, மிக எளிமையாக விளக்கலாம். ஆளுமையிலுள்ள தனியாள் மாறுபாடுகளை இவ்வாறு எளிய முறையில் இரு வகைகளில் கீழ்க்கண்ட குழுக்களாகப் பிரிக்கலாம்.

அக நோக்கினர் — புறநோக்கினர்
ஆதிக்கம் செலுத்துவோர் — ஏற்றுக்கொள்ளும் பண்பினர்
கொள்கை நிலையினர் — செயல் முறையினர்

இருப்பினும், எச்சரிக்கையுடன் நடத்தப்பட்ட ஆய்வுகள் பலர் இக்குணவியல்புகளின் கலவையாக இருப்பதைக் காட்டுகின்றன. ஆதலின், இவ்வாறு இரு வழிகளில் குழுக்களாகப் பிரிப்பது சரியன்று. வகைகளில் குறிப்பதுபோன்று தொடர்ச்சியற்ற தன்மை கொண்டு இல்லாமல், மாறுபாடுகள் ஒருமுனையிலிருந்து மற்றொரு முனைக்குத் தொடர்ந்து செல்லுந்தன்மையைக் கொண்டிருக்கின்றன.

உடலமைப்பிற்கும் மனப்பாங்கிற்கும் உள்ள தொடர்பையும் ஆளுமையில் காணப்படும் மற்றைய மாறுபாடுகளையும் அறிவதற்குப் பல முயற்சிகள் கைக்கொள்ளப்பட்டன. கிரெஸ்மரின் (Kretschmer) வகைப்படுத்துதல், ஆளுமையைக் கீழ்க்கண்ட வகைகளாக உடலமைப்பின் அடிப்படையில் பிரிப்பதற்கு ஓர் ஆதாரத்தினை அளிக்கின்றது.[6]

| உடலமைப்பு | ஆளுமைக் குணவியல்புகள் |
|---|---|
| ஒற்றைநாடி அல்லது ஒல்லியான உடலமைப்பு. | பின்வாங்குகின்ற மனப்போக்குகள். |
| தடித்தவர் அல்லது அகன்ற உடலமைப்பு. | எளிதில் மாறுகின்ற, வெளியேறுகின்ற, தன் கருத்தினை வலியுறுத்துகின்ற மனப்போக்குகள். |

[6] E. Kretschmer, 'Physique and Character.' New York: Harcourt, Brace & Co., 1925.

ஷெல்டனின் (Sheldon) ஆய்வுகள் கிரெஸ்மரின் ஆய்வுகளைப் பின்பற்றின. அவரது ஆய்வுகளின் முக்கிய நோக்கங்களில் ஒன்று உடலமைப்பிற்கும் மனப்பாங்கிற்குமிடையே உள்ள உறவின் வகையைத் தீர்மானிப்பதாகும். அவர் மூன்று முக்கிய வகைகளைத் தந்தார். இருப்பினும், அவர், பெரும்பான்மையான தனியன்கள் தெளிவான உடல் வகைகளைக்கொள்ளாது இவ்வகைகளின் கலவையையே கொண்டுள்ளனர் என்ற கருத்தினை ஏற்றுக்கொண்டார்.[7] ஷெல்டனும், அவரைப் பின்பற்றியவர்களாலும் வரிசைப்படுத்தப் பட்ட மூன்று கூறுகள் ; என்டோமார்ஃப்ஸ் (endomorphs), மெசோமார்ஃப்ஸ் (mesomorphs), எக்டோமார்ஃப்ஸ் (ectomorphs) ஆகியவைகளாகும். என்டோமார்ஃப்ஸ் என்று வகைப்படுத்தப்பட்ட தனியன்கள் நன்கு வளர்ச்சியடைந்த உள்ளுறுப்புகளையும், புறவுடலமைப்புகள் அவ்வாறு வளர்ச்சியடையாத நிலையினையும் பெற்றிருப்பர். அவர்கள் குண்டாக (தடித்து) இருந்தாலும், கட்டாயமாக எலும்பு-தசை வகையினரைச் சார்ந்து இருக்கமாட்டார்கள். மெசோமார்ஃப்ஸ் தசைகள், எலும்புகள் இணைப்புத் திசு ஆகியவற்றில் சிறந்த வளர்ச்சியினைக் கொண்டிருப்பார்கள். எக்டோமார்ஃப்ஸ் எனும் வகையினர் தன்மையில் மிகவும் வலுவற்றவர்களாகவும் மென்மையானவர்களாகவும் இருப்பார்கள்.

ஷெல்டன் இம்மூன்று குழுக்களைச் சார்ந்த உடற்கட்டு வகைகளுக்கும் இணையானதொரு மூன்றுநிலை வகைப்படுத்தலைக் கொண்டு வந்தார். அவரது முதற்குழுவான விச்ரோடோனியா (viscerotonia) என்னும் நிலையில் மிகவும் கோடிநிலையில் இருப்பவர்கள், பொதுவாகக் களைப்பாகக் காணப்படுபவர்களாகவும், பழகுந்தன்மையுடையவர்களாகவும், வசதிகளுக்கு ஆசைப்படுபவர்களாகவும், உணவை அதிகமாக விரும்புபவர்களாகவும், மக்களது இன்பத்தினை நாடுபவர்களாகவும் கருதப்பட்டனர். இரண்டாவது குழுவினரான சோமாடோடோனியா (somatotonia) அடிப்படையில் தசைவகையினரைச் சார்ந்தவர்களாவர். அவர்கள் உடல் சுறுசுறுப்பிலும், தசைச்செயல் ஈடுபாட்டிலும், வலிவிலும் உணரப்படுபவர்களாவர். மூன்றாவது வகையான செரிபரோடோனியா (cerebrotonia) என்பது அதனுடைய கட்டுப்படுத்துகின்ற தன்மையினால் உணரப்படுகின்றது. இங்குத் தனியன் இரகசிய மனிதனாகவும் தன்னடக்கம் உள்ளவனாகவும் இருக்கிறான். இவ்வாறான அடிப்படை உடற்கூறுகள் ஒவ்வொன்றிற்கும் 7 புள்ளி அளவீடுகளினாலும் தனியனைத் தரப்படுத்துகின்றனர். தரப்படுத்தப்பட்ட மாறிகளோடு நுண்ணறிவு, பால் உணர்வு போன்ற பிறவும் உண்டு.

[7] W. H. Sheldon, S. S. Stevens, W. B. Lucker, The Varieties of Human Physique.' New York ; Harper & Bros., 1942.

ஷெல்டனும் ஸ்டீவன்ஸும் (Sheldon and Stevens) நுண்ணறிவுச் சோதனை அளவுகளுக்கும் எக்டோமார்பிக்குமிடையே சிறிய அளவில் உடன்பாட்டுத் தொடர்புநிலை உள்ளது என்று அறிவித்துள்ளனர். அதே சமயத்தில் நுண்ணறிவுச் சோதனை அளவுகளுக்கும் மெசோமார்ஃபிக்குமிடையே ஒருசிறிது எதிர்மறைத் தொடர்பு உள்ளது என்றும் அறிவித்துள்ளனர்.[8] அவ்வாறான தொடர்பு, மற்ற ஆய்வுகளினால் உண்மையென்று ஆதரிக்கப்பட்டாலும், அது வெவ்வேறான உடலமைப்புக்கொண்ட தனியன்கள் கைக்கொள்ளும் வெவ்வேறான அக்கறைகள், செயல்கள் ஆகியவைகளின் காரணமாக ஒருவேளை இருக்கலாம். சிறுவர்கள் அதிகமான வலிவுடையவர்களாகவும் நல்ல இயக்க இணைப்புக்கொண்டவர்களாகவும் இருப்பார்களானால், உடலியக்கத் திறன்களைக்கொண்ட விளையாட்டுகளில் குறைவான வலிவும் இயக்க இணைப்பும்கொண்ட சிறுவர் சிறுமியரைக்காட்டிலும் அதிக அக்கறை கொண்டிருப்பார்கள்.

ஆளுமையினை ஆய்வு செய்வதற்காகத் தயாரிக்கப்பட்ட அளவீடுகள், சில பண்புகள் ஒன்றாகச் சேர்ந்து ஒரேசமயத்தில் தோன்றுவதாகக் காட்டுகின்றன. ஹேவிக்கர்ஸ்ட்டாலும் டாபாவினாலும் தயாரிக்கப்பட்டதும் சிகாகோ பல்கலைக் கழகத்தின் மனித வளர்ச்சிக் குழுவினரால் வளர்க்கப்பட்டதுமான ஆளுமை வகைகளின் வகைப்படுத்தலே மிகுதியும் பழக்கத்திலுள்ள வகைப்படுத்தலாகும்.[9] பதினாறு வயதுடையவர்களாகக் குழுக்களில் இணைப்பது செய்முறையில் சாத்தியமானது. இவ்வாய்வில் பயன்படுத்தப்பட்ட மருத்துவ, நேரடி உரையாடல் முறைகளில், குறிப்புகளைப் பகுத்தாய்தல், அவர்களது ஆய்விலுள்ள குறிப்பிட்ட சில ஆட்படுவோரிடத்துக் காணப்படுகின்ற ஒற்றுமைகள், ஒரே தன்மையுடைய ஆட்படுவோரைக் குழுவாகச் சேர்த்தல் ஆகியவைகள் இருந்தன. ஒவ்வொரு குழுவையும் தனியாகக் காட்டக்கூடிய ஆளுமையின் வடிவ உருவத்தையும், குணவியல்பு ஏதுக்களையும் வளர்த்தனர். அட்டவணை 9–2-ல் இப்பகுத்தாய்வில் வளர்க்கப்பட்ட ஐந்து வகைகளுக்கு இது காட்டப்பட்டுள்ளது. இவ்வாய்வில் 31 சதவீதத்தினரை அவ்வைந்து வகைகளில் எதிலும் சேர்க்க இயலவில்லை என்பது, தனியன்கள் வரையறை செய்யப்படும் வகைகளில் அமைவதில்லை என்று கூறுவதற்குச் சான்றாக அமைகின்றது.

[8] W. H. Sheldon and S. S. Stevens, 'The Varieties of Temperament: A Psychology of Constitutional Differences. New York: Harper & Bros., 1942.

[9] *அட்டவணை 9–2-ல் உள்ள செய்திகள் கீழ்க்கண்ட நூலிலிருந்து, அனுமதியுடன் அளிக்கப்படுகின்றது:* 'Adolescent Character and Personality' by B. J. Havighurst and H. Taba, published by John Wiley & Sons, Inc., 1949, Chap. 11.

அட்டவணை 9—2-ல் உள்ள பொருள்கள் இளையோர்களை உற்று நோக்குவதற்குப் பயன்படுத்தப்படுகின்றன. சில குணவியல்பு ஆளுமைக் குணங்களுடன் தொடர்புள்ள ஏதுக்களைக் குறிப்பதற்கும் உதவுகின்றது. இவ்வட்டவணையிலுள்ள குறிப்புகள் ஒப்பாருடைய குடும்ப, சமூக அந்தஸ்து, சமுதாயச் சக்திகள், இளையோர்களின் ஆளுமை, குணவியல்பு ஆகியவற்றின் விளைவுகளைப்பற்றிய சுருக்க உரையை அளிக்கின்றன.

## இளையோர்களது சில ஆளுமைக் குணவியல்புகள்

இன்றைய இளையோன் 50 ஆண்டுகளுக்கு முன்னர் இருந்த இளையோனைக்காட்டிலும் தற்காலப் பிரச்சினைகளிலும் ஆளுமை வகைகளிலும் மிகுதியாக ஈடுபட்டிருக்கின்றான். இது ஆவிரில் (Averill) நடத்திய ஆய்விலிருந்து அறியப்பெற்றது.[10] இன்றையநாளின் இளையோனது கருத்துநிலைப் பண்பாளர்கள் 50 ஆண்டுகளுக்குமுன் இருந்த இளையோருள் கருத்துநிலைப் பண்பாளருடன் (ideals) ஒப்பிடப்பட்டனர். அன்றைய இளையோர்களில் 78 சதவீதத்தினர் வரலாற்றுச் சிறப்புள்ளோர்களையே கருத்துநிலைத் தலைவர்களாகக் கொண்டனர். இன்றையநாளில் வரலாற்றுச் சிறப்புடையோரை 33 சதவீதத்தினர் மட்டுமே அவ்வாறு கொண்டனர். மேலும், இன்றைய இளையோர்கள் தங்களை இலக்கியத்தில் உள்ளோருடனும், வரலாற்றில் இருந்தோருடனும் ஒருமைப்படுத்திப் பார்க்கத் தவறுகின்றனர். இஃது ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த இளையோரிடத்து வெகுவாகக் காணப்பட்டது. இன்றைய இளையோன், தன் காலத்தில் வாழ்கின்றவர்களையே கருத்துநிலைத் தலைவர்களாகக் கொள்கின்றான். விளையாட்டில் சிறந்தவர்கள், வானொலி, தொலைக்காட்சி, திரைப்படம் ஆகியவற்றில் பங்கு பெறுபவர்கள், தொழில்துறைத் தலைவர்கள், அரசியல் தலைவர்கள் இன்னும் இவைபோன்ற உடன் வாழ்கின்றவர்கள் தாம் தற்கால இளையோனுக்குக் கருத்துநிலைத் தலைவர்களாக விளங்குகின்றனர். இளையோர்கள் சமயத் தலைவர்களைக் கருததுநிலைத் தலைவர்களாகக் கொள்வது குறைந்துகொண்டே வருகின்றது. தற்கால இளையோன் தேர்ந்தெடுப்பது செயல்முறையுள்ள ஆளுமையேயாகும். அவனது கருத்துநிலைத் தலைவர்களைப் பலவகைப்பட்ட தொழில்களில் இருந்து அவன் தேர்ந்தெடுக்கின்றான். இவைகளில் பல 50 ஆண்டுகளுக்கு முன்னர் இல்லை.

[10] L. A. Averill, 'The Impact of a Changing Culture upon Adolescent Ideals,' School and Society, 1950, Vol. 72, pp. 49-53.

## வளர்ச்சிப் போக்குகள்

முன்னிளையோர்களை இரண்டு தனித்த வளர்ச்சிப் போக்குகள் குறிக்கின்றன. அவைகளைத் (1) துவக்கநிலையில் அதாவது, குழந்தைப்

அட்டவணை 9—2

இளையோர்களின் ஆளுமைத் தோற்றங்கள்
(ஹேவிக்கர்ஸ்ட், டாபா தந்தவை)

| ஆளுமை வகைகள் | சமூக ஆளுமை | ஒத்த வயதினருடன் கொள்ளும் சமூகப் பொருத்தப்பாடுகள் | சொந்தப் பொருத்தப்பாடுகள் |
|---|---|---|---|
| தானாக இயங்குதல் | பேரவாக்கொள்ளுதல் | தலைவர் | தன்னை ஐயமுறுதல் |
| | மனச்சான்றுக்குக் கட்டுப்படுதல் | பள்ளிச் செயல்களில் மிகவும் சுறுசுறுப்பு | தன்திறனாய்வு கொள்ளுதல். |
| | ஒழுங்கான தன்மை | சமூகத்திறன்களில் ஒழுங்கற்றநிலை | சிறிதளவு பற்றார்வம் இருப்பினும் கட்டுப்படுத்தப் படுகின்றது |
| | ஒரே தன்மை கொண்டிருத்தல் | | ஒழுக்கக் கருத்துகளைப்பற்றிய கவலை |
| | அகநோக்குடையவர் | | மக்களினிடமிருந்து வெளியே செல்லுதல் |
| | | | மனிதத்தொடர்புகளில் நெருக்கமின்மை |
| | | | வெற்றிகள்மூலம் தற்காப்புப் பெறுதல் |
| தக அமைத்துக் கொள்ளல். | வெளிச்செல்லல் | மிகவும் புகழ் பெற்றவர் | பொருத்தப்பாடு முறைகள் எல்லாவற்றிலும் உயர்ந்த அளவினைப் பெற்றிருத்தல் |
| | நம்பிக்கை கொள்ளுதல் | பள்ளிச் செயல்களில் சுறுசுறுப்பானவர், | தன்னுறுதி |

| ஆளுமை வகைகள் | சமூக ஆளுமை | ஒத்த வயதினருடன் கொள்ளும் சமூகப் பொருத்தப் பாடுகள் | சொந்தப் பொருத்தப் பாடுகள் |
|---|---|---|---|
| | சூழ்நிலைக்கு உடன்பாட்டு நிலையிலும் இசைவான எதிர்வினையை அளித்தல் | சமூகத்திறன்கள் நன்றாய் வளர்ந்துள்ளன<br>மாற்றுப்பாலாரிடம் புகழ்பெற்று விளங்குதல் | பற்றார்வமில்லாமை<br>ஆதிக்கமின்மை<br>மக்களை நோக்கிச் செல்லுதல் |
| ஏற்றுக் கொள்ளும் தன்மை | உரமற்றதன்மை | பின்பற்றுபவர் | தன்னைப்பற்றி ஐயங்கள் |
| | செயல்களை முன்னின்று செய்வதில்லை | மதிப்பு ஏதும் இல்லாதவர் | தன்திறனாய்வு<br>அதிகாரத்திற்குப் பணிவு |
| | போராட்டங்களைத் தவிர்ப்பது | ஒழுங்கற்றநிலை | ஆதிக்கமின்மை |
| எதிர்க்கும் தன்மை | வெளிப்படையாக எதிர்த்தல் | புகழற்றவர் | அதிகாரத்திற்குப் பணியாமை |
| | தற்காப்புக் கொள்ளுதல் | பள்ளிச் செயல்களில் எதிர்ப்பவர் | தூண்டுகைகளினால் உந்தப்படுபவர் |
| | தோல்விக்குச் சமூகத்தினர் குறை கூறல் | | சமூகமயமாதல், போதிய அளவின்மை<br>மக்களை எதிர்த்து நடத்தல் |
| பொருத்தப் பாடின்மை | திருப்தியின்மை | புகழற்றவர் | ஆதிக்கமுடைய தூண்டுகைகள் |
| | குற்றங் கூறும் மனப்பான்மை<br>வெளிப்படையாக எதிர்ப்பதில்லை | சமூக நிகழ்ச்சிகளுக்கு எதிரான அல்லது அலட்சியமான மனப்பான்மை | தற்காப்பில்லாத உணர்வுகள் |

பருவத்தில் தோன்றிய ஆளுமை அமைப்புக் கலைக்கப்படும் நிலை என்றும் (2) முதியோர் அதிகாரத்தினையும் கட்டுப்பாட்டினையும் எதிர்க்கின்ற ஒப்பாரிடத்து மிகவும் அதிகமான கவர்ச்சி ஏற்படும் நிலை என்றும் குறிக்கலாம்.[11] இந்த வளர்ச்சிப் போக்குகள் எந்த அளவு காணப்படுகின்றன என்பது குழந்தைப் பருவத்தில் பெறுகின்ற வழிகாட்டலையும் நடத்தை முறையையும் பெரிதும் பொறுத்துள்ளது. இப்போக்குகள் யாவும் தாற்காலிகமான தன்மைகொண்டவையாகும். இப்போக்குகளைக் கையாளும் குழந்தையினைக் குற்றமனப்பான்மை கொண்ட அல்லது இன்னமும் தவறான பொருத்தப்பாட்டினைக் கொள்வதாகக் கருதுதல் கூடாது. இருப்பினும், இவ்வாறான செயல்கள் சில சமயங்களில் இளைஞனை நீதிமன்றத்தின் கவனத்திற்குக் கொண்டுவரும்.

மற்றொரு வளர்ச்சி, முக்கியத்துவம் வாய்ந்த பண்புக் கூறுகள் வெளிப்படுத்தும் இயல்பினைக் கொண்டதாய் உள்ளது. விரைவிலும் பின்தங்கியும் முதிர்ச்சியடைபவர்களின் 'உயிர்ப்பிக்கின்ற' தன்மையிலும் 'ஆர்வ' குணத்திலும் உள்ள தரமிடல்கள் படம் 9—1-ல் தரப்பட்டுள்ளன.[12] பின்தங்கி முதிர்ச்சியடைவோர் குழுவினுடைய சராசரியைக்காட்டிலும் இப்பண்புக் கூறுகளிலும் ஆற்றல், பேசும் அளவு, சிரிப்பு ஆகியவற்றிலும் அதிகமான அளவினைப் பெற்றுள்ளனர். பின்தங்கி முதிர்ச்சியடைவோரது மாறுபட்ட தன்மையினை விளக்க இரு காரணங்கள் தரப்பட்டன. முதல் காரணம் குழந்தைப்பருவ மனப்போக்குகள் இருப்பது ஆகும். கத்துதல், சிரிப்பு, சத்தமிட்டுக் காரியங்கள் செய்தல் ஆகியவைகள் பொதுவாகக் குழந்தைகளுக்கும் முன்னிளையோருக்கும் உரியதேயன்றி, இளையோர்களுக்கும் முதியோர்களுக்கும் உரிய இயல்புகளல்ல. இரண்டாவது காரணம் முதிர்ச்சியடையாத காரணத்தினால் தோன்றுகின்ற தாழ்வு உணர்ச்சிகளுக்கு அவர் தரும் எதிர்வினைகளாகும். 14 வயதுடைய முதிர்ச்சியடையாத சிறுவன், தன்னுடைய அதிகப்படியான செயல்களின் வெளிக்காட்டுதலினால் தனது குழந்தைத் தன்மையை மட்டுமன்றி, மற்றவர்களது கவனத்தைப் பெறவும் பயன்படுத்துவான். இவ்வாறு செய்வதன்மூலம் அவனுடைய இசைவில்லா உடல் அந்தஸ்தினை இழந்ததற்கு ஈடுசெய்யவும் முயல்வான். அதிகாரம் 17-ல் இளங்குற்ற

*குறிப்பாகக் கீழ்க்கண்ட நூலைப் பார்க்கவும்:*

A. W. Blair and W. H. Burton, 'Growth and Development of the Preadolescent.' New York: Appleton-Century-Crofts, Inc. 1951.

[12] M. C. Jones and N. Bayley, 'Physical Maturing among Boys as Related to Behaviour' Journal of Educational Psychology, 1950, Vol. 41, pp. 129-148.

வாளித் தன்மையின் தொடர்பில் இது ஒரு முக்கிய காரணம் என்று குறிப்பிட்டுள்ளது.




*படம் 9-1*

*விரைவில் பின்தங்கி முதிர்ச்சியடைகின்ற குழுக்கள் வெளிப்படுத்துகின்ற குண இயல்புகளின் சராசரித் தர அளவீடுகள் [ஜோன்ஸ-ம் பெய்லியும்].*

அதிகாரம் 5-ல் குறிப்பிடப்பெற்றுள்ள கலிஃபோர்னியா பல்கலைக் கழகத்தின் இளையோரது வளர்ச்சி ஆய்வு முடிவுகள், ஆளுமையின் தன்மைகளும் மனவெழுச்சித் துலங்கல்களும் தொடர்புகொண்டுள்ளன எனக் காட்டுகின்றன. இளையோர் வளர்ச்சி ஆய்வில் கலந்துகொண்ட இளையோர்கள் வெளிக்காட்டிய மனப்போக்கில் நிலையான தன்மையைக் கொண்டிருந்தனர். ஆனால், இவர்கள் செறிவான மனவெழுச்சி நிரம்பிய சூழ்நிலைகளுக்குச் செறிவான அகவயமான் துலங்கல்களையே வெளிக்காட்டினர். சில பண்புக் கூறுகளைப்பற்றி உடன்படிப்போர் தரமிடல்கள்பற்றிய உள்வியல் சோதனைகளில் உயர்ந்த, தாழ்ந்த, எதிர்வினைக் குழுக்களின் ஒப்புமைகள் படம் 9—2-ல் தரப்பட்டுள்ளன.[18] தாழ்ந்த எதிர்வினைக்குழு, உயர்ந்த எதிர்வினைக் குழுவைக்காட்டிலும் வெளிப்புறத் துலங்கல்களிலும்,

[18] H. E. Jones, "The Study of Patterns of Emotional Expressions," in Reyment. E. L. (ed.), 'Feelings and Emotions.' New York: McGraw-Hill Book Co., 1950, pp. 166-167.

சமூகத் துலங்கல்களிலும் தீவிரமான வெளிக்காட்டுதல்களைக் கொண்டிருந்தது. அவர்கள் தங்களுடன் படிப்போரிடம் குறைவான புகழையே பெற்றிருந்தனர். தாழ்ந்த எதிர்வினைக் குழுவின் வெளிப்படையான, உடன்வெளிவரும் புறவயமான நடத்தை, நல்ல சொந்தப் பொருத்தப்பாடுகளைக் கொள்வதற்கு உதவுகின்றது என்று கூறலாம். வெளிப்புறத் துலங்கல்களின் சமூகத் தன்மையான தடைகள் அகவயமான மனவெழுச்சி முனைப்புகளுக்குக் கொண்டுசெல்கின்றன. மருத்துவத்துறைக் கண்டுபிடிப்புகள் இவ்வகையான மனவெழுச்சி அமைப்புகளுக்குச் சான்றுகள் தருகின்றன.

அளவு மதிப்பெண்கள்

40 45 50 55 60

கவனத்தை நாடுதல்



அதிகம் பேசும் தன்மை



அமைதியின்மை



அதிகாரம் செய்யும் தன்மை



உயர்வான எதிர்வினைகள் 

தாழ்வான எதிர்வினைகள் 

*படம் 9-2*

தன்மதிப்புப் பண்புக்கூறுகளின் உயர்ந்த, தாழ்வான எதிர்வினைகளின் ஒப்புமை (Feelings and Emotions, E. L. Reymert, Editior; copyright 1950 by McGraw-Hill Book Co., Inc.) இந்நூலின் அனுமதியின்பேரில் இவ்வரைபடம் அளிக்கப்பட்டது.

## தனியனது கருத்துநிலை

தனியனது கருத்துநிலை அவாக்களின் அடிப்படையிலும், அவர்தம் ஒன்றுதல்களின் அடிப்படையிலும் கருதப்படுகின்றது. மேற்கூறிய இருவகைகளிலும் இக்கருதுகோள் குணவியல்பு வளர்ச்சியினையும் ஆளுமை வளர்ச்சியினையும்பற்றிய ஆய்வில் பயனுள்ளதாய்க் காணப்படுகின்றது. ஃபிராய்டு (Freud) கொள்கையினர் 'தான்' என்னும் குறிக்கோளின் தோற்றம், குழந்தை, தான் அன்பு பாராட்டு

கின்ற, வியக்கின்ற அல்லது அச்சமுறுகின்ற தனியன்களிடத்து ஒன்றுதலின் விளைவாகும் எனக் கருதுகின்றனர். குழந்தை இவ்வாறனவர்களுடைய குணங்களைப் பெறுதல், அவர்களுடன் ஒன்றும் செயலில் ஈடுபடுதலாலாகும். இதற்கு மாறாகச் சமூக உளவியலாளர்கள் தனியனது கருத்து நிலையைத் தனியனது வாழ்க்கையைத் தொடர்ச்சியாகப் பாதிக்கின்ற அவாக்கள் அல்லது பங்குகளைக் குறிக்கும் சொல் என்று கருதுகின்றனர். ஹேவிக்கர்ஸ்டாலும் மற்றவர்களாலும் நடத்தப்பட்ட ஆய்வில் குழந்தைப் பருவத்திலும் இளையோர் பருவத்திலும் வளர்ச்சியுறுகின்ற தனியனது கருத்துநிலைபற்றி ஆய்வு செய்தனர்.[14]

8-ல் இருந்து 18 வயதுவரை உள்ள சிறுவர் சிறுமியர்கள், தாங்கள் வளர்ந்த பின்னர், சிறப்பாக யாரைப்போல் தாங்கள் ஆக நினைக்கின்றனர் என்பதுபற்றிக் கட்டுரை எழுதுமாறு கூறப்பட்டனர். இது ஓர் உண்மையான பாத்திரமாக இருக்கவேண்டும் என்பது அவசியமில்லை. ஆனால், அவர்களை அவ்வாறான ஒருவரது குணவியல்பினையும், தோற்றத்தினையும், செயல்களையும் விளக்குமாறு கேட்டனர். 1147 பேர்களுடைய கட்டுரைகள் சேகரிக்கப்பட்டன. இஃது ஒன்பது சிறுவர் சிறுமியர் குழுக்களிடமிருந்து பெறப்பட்டது. சிறுவர் சிறுமியர்களது துலங்கல்களை நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம்; பெற்றோர்கள், கவர்ச்சிமிக்க முதியோர்கள், கவர்ச்சியுள்ள பழக்கமுள்ள இளைஞர்கள், கற்பனை உருவங்கள் ஆகியவைகளாகும். பெற்றோர்களுக்கு பதிலாட்கள், அதாவது ஆசிரியர்கள், வயது முதிர்ந்த இளையோர்கள் ஆகியோர்களைக் குறைவானவர்களே குறிப்பிட்டனர். வயது தொடர்ச்சி காணப்பட்டது. தனியனிடத்தும் குடும்பச் சூழலிலிருந்து கற்பனை உருவத்தினை நோக்கி வெளியே செல்லுகின்ற மனப்போக்கு காணப்பட்டது.

முடிவான, முதிர்ச்சியடைந்த, நிலையான, அடங்கிய, இசைவான குணவியல்புகளைக்கொண்ட 'தான்' என்னும் குறிக்கோள், தனியன் குழந்தைப் பருவத்திலும் இளையோர் பருவத்திலும் தான் ஒன்றியவர்களிடமிருந்து பெறப்பட்டது.[15]

சமூகச் சூழ்நிலையின் விளைவுகள் கீழான சமூகப் பொருளாதார அந்தஸ்தினின்று வருகின்ற குழந்தைகளிடத்தும் இளையோரிடத்

[14] R. J. Havighurst, M. Z. Robinson and M. Dorr, "The Development of the Ideal Self in Childhood and Adolescence," 'Journal of Educational Research,' 1946-47, Vol. 40, pp. 241-257.

[15] Ibid., p. 248.

தும் காணப்பட்டன. அவர்கள் நடுத்தர சமூகப் பொருளாதார அந்தஸ்தினின்று வருகின்றவர்களைக்காட்டிலும் ஒரு குழுவாகத் தனியனது கருத்துநிலை தேர்ந்தெடுத்தலில் கவர்ச்சிமிக்க முதியோனைத் தேர்ந்தெடுக்கின்ற நிலையினுக்கு முன்னேறுவதில் பின்தங்கி உள்ளனர். கரோல் (Carroll) என்பவர் முன்னர் நடத்திய ஆய்வுகளின் முடிவுகளையொட்டி இம்முடிவுகளும் இருக்கின்றன.[16] நடுத்தர வகுப்பு நீக்ரோச் சிறுவர் சிறுமியரது கருத்துநிலைத் தன்மையினைக் கீழ்வகுப்பு நீக்ரோக் குழுவினருடன் ஒப்பிட்டுப்பார்த்ததில் கீழ் வகுப்பில் முக்கால் பங்கு துலங்கல்கள் கவர்ச்சிமிக்க முதியோர் பிரிவைச் சார்ந்துள்ளன. பாதிப்பங்கு நடுத்தர வகுப்புத் துலங்கல்கள் மட்டுமே இப்பிரிவைச் சார்ந்ததாய் இருந்தது.

பர்டூ கருத்துத் தேர்வு அமெரிக்க ஐக்கிய நாடுகளின் பல பிரிவுகளைச் சேர்ந்த 15,000 உயர்நிலைப்பள்ளி மாணவர்களின் தேர்வில், எல்லாப் பகுதியினரது மாதிரியாகவும் அமைந்துள்ள, 2,500 மாணவர்களது அவாக்களை எடுத்துக்கொண்டு குறிப்புகளை ஒப்பீட்டடிப்படையில் தந்துள்ளது.[17] இக்குழு ஓரளவு தேர்ந்தெடுத்தலைக் கொண்டுள்ளது. ஏனெனில், கீழான வகுப்பிலிருந்து வருபவர்களில் பெரும்பான்மையோர் நடுத்தர வகுப்பினரைக்காட்டிலும் அதிகமாகப் பள்ளியைவிட்டுச் சென்றுவிடுகின்றனர். இருப்பினும், முடிவுகளைப் பற்றிய எச்சரிக்கையான ஆய்வில் சுவைமிக்க போக்குகளையும் குணவியல்புகளையும் காட்டுகின்றது. நடுத்தர வகுப்பில் இருந்து வரும் மாணவர்கள் கீழ்வகுப்பிலிருந்து வருபவர்களைக்காட்டிலும் தேவைகளை அடைவதில் குறிப்பிடும்படியான அளவில் மனநிறைவு கொண்டிருந்தனர். இஃது அவர்களது கல்வியைப்பற்றிய பெரும் ஆர்வத்திலும், திருமணத்தைத் தள்ளிப்போட ஒத்துக்கொள்வதிலும், பணத்தைச் சேமிக்கும் திறனிலும் வெளிக்காட்டப்படுகின்றது. அட்டவணை 9—8 ல் உள்ள பொருள்கள், சிறுவர்கள் மிகச் சிறப்பான வினைத்திறம்கொண்ட உயர்நிலைப்பள்ளி விளையாட்டு வீரர்களுக்கு முன்னுரிமை அளிப்பதனைக் காட்டுகின்றன. ஆனால், பெண்கள் உயர் தரங்கள் பெற்றவர்களுக்கே முன்னுரிமை அளிக்கின்றனர். சிறுவர்களும் சிறுமியர்களும் பணம் இருக்குமானால், கல்வியைத் தொடர்ந்து கைக்கொள்ளவே அக்கறை காட்டினர். அவர்கள்,

[16] R. E. Carroll, 'Relation of Social Environment to the Moral Ideology and the Personality Aspirations of Negro Boys and Girls,' 'School Review,' 1945, Vol. 53, pp. 30-48.

[17] H. H. Remmers, R. E. Horton and S. Lysgaard, "Teen Age Personality in Our Culture" 'The Purdue Opinion Poll.' Division of Educational Reference, Pudue University, No. 32.

தங்களுடைய பொதுவகுப்பு அல்லது நிலையிலுள்ள குடும்பங்களி லிருந்து வந்த நண்பர்களை அதிகமாக விரும்பினர். இவ்வாய்வு, பால், சமூக வகுப்புநிலை, தங்குமிடம் ஆகியவை இளையோர்களது மனப்பான்மைகளிலும் அவர்களுடைய ஆர்வங்களிலும் முக்கியப் பங்கு வகிக்கின்றன என்பதைக் காட்டுகின்றது.

## இளையோர் ஆளுமையில் மாறுபாடு உள்ள பகுதிகள்

இளையோர்களது ஆளுமையின் சில குணவியல்புகள் தனியனை நிலையற்ற தன்மை கொள்ளச் செய்கின்றன. இப்பொருள்கள் 'மாறு பாடுள்ள பகுதிகளாக' இங்குக் குறிப்பிடப்படுகின்றன. ஆளுமை யின் வளர்ச்சியில் மனவெழுச்சிப் பொருள்களின் முக்கியத்துவம் முன்பே கருதப்பட்டுள்ளது. மேலும், நாம் மனவெழுச்சிப் பழக்கங் களை ஏதுக்களாக வைத்துக்கொண்டு, நாம் நன்ருக அறிந்த நெருங்கி யவர்களுடைய ஆளுமையினையும் சிறப்பாக மதிப்பிடுகிருேம். இப் பொருள்கள் சில தனியன்களிடம் மற்றவர்களைவிட மிகத் தெளிவாகத் தோன்றுகின்றன.

இளையோர் பருவகாலத்தில் சில தனித்த மனவெழுச்சி இயல்பு கள் வெளிப்படையாகத் தோன்றுகின்றன. இயல்பூக்கத் தன்மை அல்லது உயிரியல் தன்மையுடைய பல உந்துகள் இளையோர் பருவ காலத்தில் தடை செய்து வைக்கப்படுகின்றன. பல பழக்கங்களி ஞலும் மனிதனது சூழ்நிலையில் பல சக்திகள் இருப்பதாலும், இவை தனியனது வாழ்க்கையில் மிகவும் அதிகமாக வெறுக்கப்படுவதாலும் தடை செய்யப்படுகின்றன. ஜி. ஸ்டான்லி ஹால், இளையோர் வாழ்க் கையில் மனவெழுச்சியின் முக்கியத்துவத்தை உணர்த்துகின்ருர். 'இளமை செறிவான மனநிலைகளை விரும்புகின்றது. மேலும், அது கிளர்ந்தெழுவதை மிகவும் ஆசையுடன் எதிர்பார்க்கின்றது.'[18] இங்கு இளையோர்களின் தனித்த தன்மையான மாறுபட்ட நிலைகளான உயிர்ச்சக்தியும் களைப்பும்பற்றிய உண்மையான நம்பத்தகுந்த கூற்றினைக் காண்கிருேம். கவலையற்ற தனியன்களது மனப்பான்மை யான இன்பத்தை நாடுவது, மனவெழுச்சிபெற மற்றவர்களது கூட்டை விரும்புதல் ஆகியவை அவர்களது விளையாட்டு, சமூக அக்கறைகள், செயல்கள் இவற்றில் தெளிவாகக் காணப்படுகின்றன. உண்மைச் சிறுகுழுவும் குழுப்பற்றுறுதியும் இப்பருவத்தினரது இயல்பு கள் என முன்னரே விளக்கப்பட்டுள்ளன.

[18] G. S. Hall, 'Adolescence' New York : Appleton-Century Crofts, Inc., 1904, Vol. 2, Chap. 10.

## அட்டவணை 9—3

உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் பார்டு கருத்துத் தேர்வில் தங்களது தேர்ந்தெடுத்தல்கள், அவர்கள் ஆகிய இனங்களுக்குத் தந்த துலங்கல்களின் சதவிதம்.

| | மொத்தம் | சிறுவர் | சிறுமியர் | கிராமம் | நகரம் |
|---|---|---|---|---|---|
| நான் பள்ளியில் சிறந்து விளங்கினல் என்னுடைய சிறப்புக் கீழ்க்கண்ட துறையில்தான் இருக்க விரும்புகிறேன். | | | | | |
| உயர்ந்த தரங்கள் ... ... | 44 | 38 | 50 | 44 | 45 |
| விளையாட்டுப் பந்தயங்கள் ... | 28 | 45 | 12 | 31 | 25 |
| மிகவும் புகழ்பெற்ற சிறுவன் அல்லது சிறுமி ... ... | 28 | 17 | 38 | 25 | 30 |
| நீ பெரிய பரிசினைப் பெற்ருல், சான்ருக 2,000 டாலர் பெற்ருல் என்ன செய்வாய்? | | | | | |
| நானும், என் குடும்பமும் விரும்பும் பொருள்களை வாங்க எல்லாவற்றையும் அப்பொழுதே செலவிட்டு விடுவேன் ... ... | 29 | 29 | 29 | 30 | 28 |
| அதில் பெரும்பகுதியைக் கல்விக்கோ தொழிலுக்கோ செலவுசெய்யச் சேர்த்து வைப்பேன் ... | 71 | 71 | 71 | 70 | 72 |
| நான் பள்ளியைவிட்டுச் சென்றபின் தனித்து நிற்க இயலும்பொழுது: | | | | | |
| நான் ஒரு தொழிலியல் சங்கம் அல்லது ஒரு நல்ல தொழிலாளர் சங்கம் அல்லது ஒரு சமூகக் கழகம் (social club) ஆகிய நிறுவனங்களில் சேருவேன் ... | 71 | 68 | 74 | 67 | 75 |
| இவ்வாருன அமைப்புகளை ஒதுக்குவேன்; ஏனெனில், அவற்றை நான் விரும்புவதில்லை ... | 29 | 33 | 26 | 33 | 25 |
| பெரும்பாலும் நான் என் குடும்பத்தைப் போன்றே நல்ல வெற்றியடைந்துள்ள குடும்பங்களைச் சார்ந்த நண்பர்களுடன் இருப்பதில் மகிழ்ச்சி கொள்கின்றேன். யாருடைய குழுவிலும் இருக்க விரும்பவில்லை. | | | | | |
| இதனை ஒப்புக்கொள்கிறேன் ... | 62 | 59 | 65 | 63 | 62 |
| இதனை ஒப்புக்கொள்ளவில்லை ... | 38 | 41 | 35 | 37 | 38 |

இன்பமும் துன்பமும் சில வேளைகளில் மிகுதியும் நெருங்கியிருக்கின்றன; கண்ணீரும் சிரிப்பொலியும் சில வேளைகளில் ஒன்றையொன்று மிகவும் நெருங்கியவாறு தொடரலாம்; மகிழ்ச்சிகொள்ளுதலும் சோர்வடைதலும் இப்பருவ வாழ்க்கையில் இயல்புகளாகக் கருதப்படுகின்றன. தன்முனைப்பு, சமூகத்தன்மை, ஆதிக்கநிலை, ஏற்றுக்கொள்ளும் தன்மை, சுயநல மனப்பான்மை, பொதுநலப் பண்பு, அடிப்படையையே மாற்றியமைக்க விரும்பும் கோட்பாடு, பழமையைப் பேணுதல், உயர்வான பேரவாக்கள், அக்கறையின்மை ஆகியவை யாவும் இப்பருவத்தினைக் குறிக்கின்ற தன்மைகளாகும். இவை யாவும் சேர்ந்து எதிரெதிரான மனப்போக்குகளை இப்பருவத்தில் தோற்றுவிக்கின்றன. ஒரே தனியனால் வெவ்வேறான நிகழ்ச்சிகளில் இத்தனைவகை மனப்போக்குகளும் காண்பிக்கப்படுகின்றன. இம்மாறுபட்ட மனப்போக்குகள் இருப்பதனால் ஒரு தனியனின் நடத்தையைப்பற்றி வருமுன்கூறல் வேறு எந்தப் பருவத்தைக் காட்டிலும் இளையோர் பருவத்தில் சாத்தியமில்லாமல் இருக்கின்றது. இளையோர் பருவத்தில் வாழ்க்கையின் பிற்பகுதிகளைக்காட்டிலும் தனியனது எதிர்வினைகள் நிலைமாறும் தன்மையையும் நிலையற்ற தன்மையையும் கொண்டிருக்கின்றன. வெவ்வேறான பண்புக்கூறுகள் வெவ்வேறான மாறுபட்ட நிலைகளில் முன்னிற்கும். அவைகளில் ஏற்படும் மாறுதல்கள் மிகவும் குறிப்பிடும்படியாக இருப்பவை. தனியன் மேலும் மேலும் அதிகமான சமூக அனுபவங்கள் பெறுவதனால் அவனது எதிர்வினைத் தன்மைகள் மாறுபாடு கொண்டிருக்கும். அவனது ஆளுமைக் குணவியல்புகள் அதிகமான மாறுதலுக்குள்ளாகி நிலையான தன்மையைப்பெற ஏதுவாகின்றது.

இளைஞர்களின் பிரச்சினைகளை ஆய்வுசெய்யும் எவரும், நடத்தையின் பொதுவான இவ்வெளிப்படுத்தல்களைக் காண்கின்றனர். இங்குத் தனியனிடத்து நடத்தைக் கோலங்கள் முழு வளர்ச்சியைக் கொண்டிருக்கவில்லை. அவன் முழுவளர்ச்சியடையாததனால் அவனைச் சில வேளைகளில் சண்டையிடும் தன்மை பெற்றவன் என்றும் விவரிக்கின்றனர். பள்ளியில் அவன் செய்யும் வேலையும் ஒரேதன்மையாய் இல்லை. அவனது விளையாட்டு மைதானச் செயல்களும் காலத்திற்குக் காலம் மாறுபடுகின்றன. பள்ளிமீது கொள்ளும் பொதுமனப்பான்மை வெகு எளிதாக மாறுதலுக்கு உள்ளாகின்றது. உடையில் பெருமை என்பது அதனைப்பற்றிய கவலையின்மையால் தொடரப்படுகின்றது. இவ்வாறான தனிப்பட்ட திடீர் மாறுதல்கள் ஓரளவு விதிவிலக்குகள் என்று கொண்டாலும், சராசரி இளையோனும் இம்மாற்றங்களில் ஓரளவினைக் கொண்டிருக்கிறான். பிரோன்னர் (Bronner) கீழ் வருமாறு கூறுகிறார்.

“இன்றைய ஆர்வங்கள் வெகுசீக்கிரமே சோர்வடையச் செய்யும் பொருள்களாக மாறலாம், ஒரு நாள் மிஷனரியில் சேரவேண்டும்

என்ற ஆசை ஏற்படலாம். இவ்விருப்பம் வெகுவிரைவிலேயே முழுதும் மறக்கப்பட்டு வாழ்க்கையின் குறிக்கோள் ஒரு நடனமாடுபவனாக ஆகவேண்டும் என்பதில் செல்லுகின்றது. பல இளையோர்கள் 'நான் என்னவாகவேண்டும் என்று விரும்புகிறேன் என்பது எனக்குத் தெரியாது. ஒரு நாள் நான் ஒரு துறையில் செல்ல விரும்புகின்றேன். அடுத்த நாள் வேறொன்றில் நாட்டம் கொள்கிறேன். ஆனால், ஒன்று மட்டும் நிச்சயம். நான் ஒரு சிறந்தவனாக வளர ஆசைப்படுகிறேன்' என்று கூறுகிறார்கள்.''[19]

இம் மாற்றங்களுக்குரிய காரணத்தைப் பகுத்தாய்வு செய்தல், சிறுவர் சிறுமியர் முதிர்ச்சிப் பருவத்தினை அடையும்பொழுதும், சமூக உண்மைகளுடன் தொடர்புகொள்ளும்பொழுதும் அவர்களுடைய பொதுநோக்கு விரிவடைந்து புது அக்கறைகள் வளர்கின்றன என்று காணலாம். இப் பொதுநோக்கில் மாறுதல்கள் மிக விரைவாக ஏற்படுகின்றன. பழக்க அமைப்புகள் மாற்றங்கொண்டு வளர்ந்து முழு ஆளுமையில் இணைந்துகொள்வதற்கும் விரைவாக இம்மாற்றங்கள் ஏற்படுகின்றன. ஆதலின், நாம் மனப்பான்மைகள், நம்பிக்கைகள், பொதுநோக்குகள் மனவெழுச்சிகள் ஆகியவற்றில் ஒரு நிலையற்ற தன்மைகொண்ட தனியன்களைப் பார்ப்பதோடன்றி ஓரளவே வேறுபட்ட சூழ்நிலைகளில் மாறுபட்ட மனப்போக்குகளையும் மனப்பான்மைகளையும் உடையவர்களாய் இருப்பதையும் காண்கிறோம். இவ்வாறான எல்லா நிலையில்லாத் தன்மைகளும், மாறுபட்ட வாழ்க்கை நிலைகளும் முழுவதும் மறைவதில்லை. ஆனால், ஆளுமை ஒரு பொது அமைப்பில் மேலும்மேலும் இணையும்பொழுது இவைகளில் பல தள்ளிவிடப்படுகின்றன.

### இளையோனின் நிலையாத் தன்மை

இளையோன் நிலையற்ற தன்மையின் தூண்டுகைகளினால் உந்தப்படுகின்றவன் என்று கூறப்பெற்றது. மனவெழுச்சி வெளிக்காட்டுதல் பெருமளவில் ஒரு வழக்கச் செயலாகும். இவ்வாறான பழக்கங்களிலிருந்து நடத்தைக் கோலங்கள் வளர்கின்றன. இவ்வாறு வளர்ந்து அவை அகமுக, புறமுக இயல்புகளை உண்டாக்குகின்றன. காரணமின்றி நகைத்தல், தூண்டுகைகளினால் உந்தப்படுதல், கத்துதல், சத்தமிட்டுப் பேசுதல் போன்ற நிலையில்லாத் தன்மையின் குறிகளுடன் புறமுகம் தோன்றுகின்றது; புறமுகம் அகமுகத்தைக்காட்டிலும் அதிகமாகக் காணப்படுகின்றது. சமூகவியல்புகள், புதிய நிகழ்ச்சிகளுக்கேற்ப வெளிப்பட்டு, சமூகத் தன்மையில் புதிதாக

[19] A. F. Bronner, ''Emotional Problems of Adolescence'' 'The Child's Emotions'. Chicago : University of Chicago Press, 1930, p. 220.

உருவாகும் பழக்கங்களின் மூலமாகச் செறிவாக்கப்படுகின்றன. அகமுகப் பழக்கங்கள், மிகத் தாழ்ந்த நிலையிலுள்ள சமூக மனவெழுச்சிப் பழக்கங்களுடன் முதிர்ச்சியடைகின்ற தனியன்களிடத்து அதிகமாகக் காணப்படுகின்றன. சமூக உணர்வு எழுச்சியுறுவதனாலும், புதிய உடலியல் தன்மையும், விரிவடைந்த சமூகத் தொடர்புகளும் ஏற்படுவதனாலும் இத்தொந்தரைகளுக்கு நல்ல காரணங்கள் ஏற்படுகின்றன.

இளையோரின் நிலையாத்தன்மை என்பது ஆளுமைகளில் மாறுபட்ட தன்மை, செறிவுள்ள மனவெழுச்சி நடத்தை, சமய ஆர்வம், இளைஞர்கள் நடத்தைப் பிரச்சினைகள் ஆகியவற்றால் வெளியாகின்றது. பயிற்சியின் காரணமாக இவ்விளைவுகள் ஏற்படுகின்றன என்பது, பல இளையோர்கள் மாறுபட்ட பின்னணியிலிருந்து வந்தாலும் சமூகத்தில் நல்ல பொருத்தப்பாட்டுடனும், நன்மை பயக்கும் மனப்பான்மையுடனும், பழக்க வகைகளில் மிகவும் அன்புடனும், பலவகையான பழக்க அமைப்புகளில் நிலையான தன்மையை வெளிக்காட்டுதலாலும் தெளிவாகத் தெரிகின்றது. பல குழந்தைகள், இளையோர் பருவத்தை அடையும்பொழுது குருட்டுத்தனமாகப் பின்பற்றும் அளவிலுள்ள பயிற்சியோடு முதியோர்களுடைய இடத்தைப் பெறும்படி எதிர்பார்க்கப்படுகிறார்கள். இத்தனியன்கள் தாங்களாகப் பழக்கங்களை வளர்த்துக்கொள்ள வாய்ப்புகள் அளிக்கப்படவில்லை. முதியோர் வாழ்க்கையின் சாதாரண குறிக்கோள்களை ஏற்றுக்கொள்ளும் பொறுப்பினை அடைவதற்குப் பயிற்சியும் பெறவில்லை. அவர்கள் முதியோர் செயல்களைச் செய்வதற்கு இயலாத அளவுக்கு 'மிகவும் இளைஞர்களாய்' இருந்தனர். குழந்தைகளாக விளையாடுவதற்கு முடியாமல் அவர்கள் 'மிகவும் முதியவர்களாய்' இருந்தனர். இந்நிலை பல இளையோர்களுக்குச் செய்வதறியாது தத்தளிக்கும் காலமாக உள்ளது. தனியன் குழந்தைபோன்று ஓடி ஆடி விளையாட விரும்பினால், அவனைப் பார்த்து எள்ளி நகையாடுவர். முதியோர் குழுவுக்கு அவன் புத்திமதியும் நல்லுரையும் தருவானானால், அவன் இன்னும் குழந்தை என்று நினைவுறுத்தப்படுகின்றான். பலர் இந் நிலைமாற்றத்தை வெகு சீக்கிரம் அடைந்து, அவர்கள் சமூக வரிசையில் நல்ல இடத்தைப் பிடித்துக்கொள்கின்றனர். உண்மையில் தனியனுக்கு, முதியோர் குழுவுக்கு ஏற்றவாறு தன்னுடைய முந்தைய நிலைப் பழக்கவழக்கங்களைப் பொறுத்துக்கொள்ளவும், இசைவான சமூகப் பழக்கங்களையும் மனப்பான்மைகளையும் வளர்த்துக்கொள்ளவும் ஒருவகையான பயிற்சி இருக்குமானால், அவனது பொருத்தப்பாடு பயனுள்ளதாகின்றது. இளையோர் ஆளுமையின் தனிப்பட்ட கூறுகள் இசைவான வகையில் வளரவில்லையெனில், நாம் அதற்குக் காரணங்களை அவனது இறந்த கால அல்லது நிகழ்கால அனுபவங்களில் தேடவேண்டும்.

கீழ்க்கண்ட கேள்வி எழலாம்: எந்த அளவு இளையோருடைய கவலைகள், ஐயங்கள், அச்சங்கள் ஆகியவை மனப்போக்குடன் தொடர்பு கொண்டுள்ளன? இப்பிரச்சினையை ஃப்லீஜ் (Fleege) என்பவர்

## அட்டவணை 9—4

2,000 உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் கவலை கொள்வதற்கும் சோர்வடைவதற்கும் கூறப்பட்ட காரணங்கள் (ஃப்லீஜ் தந்தவை).

| காரணம் | சிறுவர் எண்ணிக்கை | சத வீதம் |
|---|---|---|
| 1. படிப்பிலும் பள்ளியிலும் தொந்தரவுகள், கீழான மதிப்பீடு, தோல்வி ... | 298 | 14·9 |
| 2. வீட்டில் தொல்லைகள், வாக்குவாதங்கள், கடன், பெற்றோர் மனப்பான்மை ... | 192 | 9·6 |
| 3. ஏமாற்றமடைதல், பொருள்கள் தவறான முடிவினைத் தருதல் ... ... | 179 | 9·0 |
| 4. பாவங்கள், பால், தன்னையே நொந்து கொள்ளல், குற்ற மனச்சாட்சி, தவறுகள், தவறான நடத்தை ... ... | 163 | 8·2 |
| 5. பயனடையாமல் செய்வது, சமூக வாய்ப்புகள் இன்மை, சுதந்திர உரிமைகளைக் குறைத்தல் ... ... ... | 106 | 5·3 |
| 6. நோய், இறப்பு, இடையூறு ... ... | 103 | 5·2 |
| 7. உணர்ச்சிகளுக்கு ஊறு விளைவித்தல்: ஒருவரது கூற்றோ, நான் மற்றவர்களது உணர்வுகளுக்கு ஊறு விளைவிப்பேன் எனும் நினைப்போ ... ... | 102 | 5·1 |
| 8. தவறாகப் புரிந்துகொள்ளுதல், நண்பரிடத்து சண்டைகள் ... ... | 102 | 5·1 |
| 9. ஆளுமைத் தொல்லைகள், தாழ்வுச் சிக்கல், சொந்தக் குறைபாடுகள், திறனின்மை | 80 | 4·0 |
| 10. பெண் தோழித் தொல்லைகள் ... | 65 | 3·2 |
| 11. மற்றவை: ஏதும் செய்வதற்கில்லை, கவலைகள், அச்சங்கள், தூக்கமின்மை ... | 117 | 5·8 |
| 12. பதிலில்லை அல்லது 'எனக்குத் தெரியாது' என்னும் கூற்று ... ... ... | 451 | 22·6 |

2,000 கத்தோலிக்க உயர்நிலைப் பள்ளி மாணவர்களைக்கொண்டு கீழ்க் கண்ட கேள்வியைக் கேட்டு ஆராய்ந்தார்: 'நீ எப்பொழுதாகிலும் மகிழ்ச்சியுடன் இல்லை என்றால், உன்னைக் காப்பாற்றிக்கொள்ள நீ மனப்போக்கினைக் கைக்கொள்கின்றாயா ?'[20] இக் கேள்விக்குப் பதிலாக 7·5 சதவீத மாணவர்கள் 'ஆம்' என்று பதிலளித்தனர். இஃது உயர்நிலைப் பள்ளிச் சிறுவர்கள் அனுபவிக்கும் மனப்போக்கினை அளப்பதற்குரிய கருவியாக ஆகின்றது. முன்னைய அதிகாரங்களில் தரப்பட்ட செய்திகளிலிருந்து இளையோர் சிறுமியரது அச்சங்கள், கவலைகள், பற்றார்வங்கள், இவற்றினடிப்படையில் உயர்நிலைப் பள்ளிச் சிறுவர் அனுபவிப்பதைக்காட்டிலும் அதிகமான அளவு மனப்போக்கினை இச்சிறுமியர் கைக்கொள்கின்றனர் என்பதைக் காணலாம்.

அட்டவணை 9 – 4-ல் சிறுவர் அனுபவிக்கும் மனப்போக்கின் காரணங்கள் தரப்பட்டுள்ளன. இளையோர் பருவத்தில் ஏற்படும் மனப்போக்கின் முக்கியக் காரணம் தவறுகள், வலுவின்மைகள், தோல்விகள் போன்றவைகளைப்பற்றிய தன்னுணர்வேயாகும். அதிகாரம் 3-ல் சிறுவர்களின் உடல் இயக்க வளர்ச்சிபற்றிக் கருதும்பொழுது, இவை உற்று நோக்கப்பட்டன. இவை அட்டவணை 9—4-லிலும் பிரதிபலிக்கின்றன. இருப்பினும், ஏழு சிறுவர்களில் ஒரே ஒரு சிறுவன்மட்டும் தான் அடிக்கடி சோர்விற்குள்ளாவதாகக் குறிப்பிட்டான். இளையோர்களின் இயற்கையான குணவியல்பான தன்னுணர்வியல்புடன் சேர்ந்து, ஏமாற்றமடைதல், பயனடையாமல் இருத்தல், குற்றவுணர்வுகள் ஆகியவை துயரம் அளிப்பதற்கும், சோர்வடைந்த நிலையினை அடைவதற்கும் நெருங்கிய தொடர்புள்ள ஏதுக்களாக இருக்கின்றன.

### பால் மாறுதல்கள்

சில சுவையான பால் மாறுதல்கள், சிறுவர் குழு ஒன்றின் கருத்து நிலையினை வேறொரு பெண்கள் குழுவுடன் ஒப்பிட்டபொழுது காணப்பட்டன (குழுவின் வயது 8 – 18 சிறுவர்கள்). ஹேவிகர்ஸ்டாலும், மற்றவர்களாலும் நடத்தப்பட்ட ஆய்வில், சிறுவர்களும் சிறுமியர்களும் அவர்கள் கருத்துநிலைத் தலைவர்களாகக் கொண்டவர்களின் குணவியல்புபற்றியும், தோற்றம்பற்றியும், செயல்கள்பற்றியும் கூறுமாறு வேண்டிக்கொள்ளப்பட்டனர்.[21] அட்டவணை 9—5-ல் அவர்கள் குறிப்பிட்ட குணவியல்பு, ஆளுமைப் பண்புக்கூறுகள் தரப்பட்டுள்ளன. சிறுவர்கள் பொருள்களுக்கு அதிக முக்கியத்துவம் தந்தனர். சிறுமியர்கள் நல்ல தோற்றம், ஒத்துழைப்பு, உதவியாய் இருத்தல் ஆகியவைகளையே இசைவான குணவியல்புகளாகக் கருதினர்.

[20] U. H. Fleege, 'Self-Revelation of the Adolescent Boy.' Milwaukee: Bruce Publishing Co., 1945, p. 321.

[21] Havighurst, Robinson, and Dorr, op. cit., p. 253,

அட்டவணை 9—5

சிறுவர் சிறுமியர் குறிப்பிட்ட குணவியல்பு, ஆளுமைப் பண்புக் கூறுகள் ஆகியவற்றை ஒப்பிடுதல் (ஹேவிகர்ஸ்ட் அளித்தது).

| | சிறுவர் மொ. எ. = 158 | சிறுமியர் மொ. எ. = 168 |
|---|---|---|
| பொருள்களுக்கான மதிப்புகள் — பணம் துணி, சொத்து ... ... | 34 | 8 |
| சிறந்த பார்வை, நல்ல தோற்றம், சுத்தமாகவும் அழகாகவும் இருத்தல் ... | 21 | 51 |
| நல்ல ஆளுமை, ஒரேவகையில் உள்ளது, புகழ் வாய்ந்தது ... ... | 21 | 20 |
| நட்புடன் மிகுந்த நண்பர்கள், பண்பமைதி, அடக்கம், கேலியாக எடுத்துக்கொள்ளக்கூடியவர்கள் ... ... | 31 | 22 |
| நேர்மை, பொறுப்பு, உழைப்பு, கோயிலுக்குச் செல்பவர், இரக்கமுடையவர் | 42 | 51 |
| ஒத்துழைப்பு, உதவி செய்பவர், பொறுமை | 5 | 18 |
| தன்னைத் தியாகம் செய்தல், சமூக நிதிக்கு உழைத்தல், மனித சகோதரத்துவம், பொதுநலப் பண்பு ... ... | 4 | 8 |

மொ. எ. = மொத்த எண்ணிக்கை.

பாலாஸ்டிரா (**Balastra**) நடத்திய ஓர் ஆய்வு இளையோர் சிறுவர் சிறுமியர் மாற்றுப் பாலாரிடத்து விரும்பிய, வெறுத்த ஆளுமைப் பண்புக்கூறுகளைப்பற்றிக் கருதியது.[22] உயர்நிலைப் பள்ளிச் சிறுவர் சிறுமியரிடம் வினாத்தாள் ஒன்று தரப்பட்டு, அதில் மாற்றுப் பால் உறுப்பினர்களிடம் அவர்கள் விரும்புகின்ற, வெறுக்கின்ற நான்கு நடத்தைக் குணங்களைத் தருமாறு கேட்கப்பட்டது. அட்டவணை 9—6-ல் மிக விரும்புகின்ற 10 பண்புகள் தரப்பட்டுள்ளன. இம் முடிவுகள், சிறுவர்கள் சொந்தத் தோற்றத்தையும், சுத்தமாக இருத்தலையும், நல்ல உடையையும், நல்ல பார்வைகளையும் விரும்புகின்றனர்

[22] V. R. Balastra, 'Personality Traits of the Opposite Sex Admired and Disliked by Adolescent Boys and Girls', Master of Education Thesis, University of Cincinnati, 1951.

என்ற பொதுக் கருத்தினைத் தருகின்றன. சிறுமியர்கள் நல்ல பழக்கங்கள், அமைதியாகப் பழகுதல், விருப்பத்தகுந்த ஆளுமை, பரிந்து கவனித்தல், மதிப்பு ஆகியவற்றைப் பெரும்பாலும் விரும்புகின்றனர்.

### ஆளுமை வகையினை நிலைத்திருக்கச் செய்தல்

குழந்தைகள் வாழ்க்கையின் தொடக்கத்திலிருந்து ஆளுமைக் குணவியல்புகளில் மாறுதல்களை வெளியிடுதலென்பது ஒரு குழந்தையினின்று மற்றொன்று மாறுபடுவதால் மட்டுமன்று; ஒவ்வொரு குழந்தையினிடத்தும் சிறப்பாக இருக்கின்ற சில குணவியல்புகள் வளர்ச்சிக் காலத்தில் தொடர்ந்து இருந்து, இளையோர் பருவத்திலும் முதியோர் பருவத்திலும் இருப்பதனாலுமாகும். மேலும், ஆய்வுகள், துவக்கநிலைக் குழந்தைப் பருவ அனுபவங்கள், இளையோர் பருவத்திலும் முதியோர் பருவத்திலும் ஒருவர் கொள்ளும் ஆளுமையில்

### அட்டவணை 9—6

12ஆம் படிவச் சிறுவர்கள் சிறுமியரிடம் விரும்பிய பத்துக் குணங்களும், 12ஆம் படிவச் சிறுமியர் சிறுவர்களிடம் விரும்பிய பத்துக் குணங்களும் அடிக்கடி தோன்றியவாறு வரிசைப்படுத்தப்பட்டுள்ளன (பாலாஸ்டிரா அளித்தது).

| *சிறுவர் வரிசைப்படுத்திய பண்புக்கூறுகள்* | *சிறுமியர் வரிசைப்படுத்திய பண்புக்கூறுகள்* |
|---|---|
| நல்ல ஆளுமை | நல்ல பழக்க வகைகள் |
| சுத்தமான தோற்றம் | சுத்தம் |
| நல்ல உடை | பணிவும் அமைதியும் |
| நட்புக் குணம் | விரும்பத்தக்க ஆளுமை |
| நல்ல உரையாடலைக் கொண்டவர் | மரியாதை |
| நல்ல ஒழுக்கங்கள் | நகைச்சுவை உணர்வுள்ளவர் |
| அறிவுத்திறன் | நன்றாகத் தலை வாரிவிடப்பட்ட நல்ல தோற்றம் கொண்டவர் |
| பார்ப்பதற்கு நன்றாக உள்ளவர் | தூய்மை |
| நகைச்சுவை உணர்வுடையவர் | பரிந்து கவனித்தல் |
| தூய்மையானவர் | நேர்மை |

[28] W. Goldfarb, 'Effects of Early Institutional Care on Adolescent Personality: Rorschach Data', American Journal of Orthopsychiatry, 1944, Vol. 14, pp. 441-447.

முக்கியமான பங்கினைக் கொள்வதாகத் தெரிவிக்கின்றன. கோல்டு ஃபார்ப் (Goldfarb) ரோர்சாச் குறிப்பினை (Rorschach Data) அளித் தார்.[23] அவர் இதனை ஒரு சோதனைக் குழுவிலும், கட்டுப்பாட்டுக் குழுவிலுமுள்ள சிறுவர் சிறுமியர்களிடமிருந்து பெற்றார். அவ்வாட் படுவோர்கள் 10-லிருந்து 14 வயதுவரை இருந்தனர். சோதனைக் குழு வினர் அந்த நிறுவனத்தில் சராசரி வயது 4'5 மாதத்தில் நுழைந் தனர். அவர்கள் அந்த நிறுவனத்தில் சராசரி 3 ஆண்டு 3 மாதங்கள் தங்கினர். இந்நிறுவனத்தில் மூன்று ஆண்டுகளுக்குமேல் தங்கிய பின்னர், வளர்ப்பு இல்லங்களுக்கு மாற்றப்பட்டனர். கட்டுப்படுத்தப் பட்ட குழு, சோதனைக் குழுவுடன் வயது, பால் அடிப்படையில் சரி பார்க்கப்பட்டது. இக்குழுக்களின் தாயார்கள் தேசியப் பின்னணி யிலும் கல்வி அந்தஸ்திலும் ஒரே மாதிரி இருந்தனர்.

இக் கண்டுபிடிப்பு, குறிப்பிடும்படியான மாறுதல்களை ஆளுமை யில் இவ்விரு குழுக்களிடையே வெளிப்படுத்தியது:

'வளர்ப்பு இல்லக் குழந்தைகளுக்கு மாறாக நிறுவனத்தில் இருந்த குழந்தைகள் கீழ்க்கண்ட குணங்களைப் பெற்றிருந்தனர்: (1) முதிர்ச்சிக் குறைவையும், குறைவான கட்டுப்படுத்தலையும், குறை வான மாறுபாட்டினையும், அதிகமான வலுக்குறைவினையும் பெற்றிருந் தனர். (2) அதிகமான மந்தமுடையவர்களாயும், உணர்ச்சியற்ற தன்மையைக் கொண்டவர்களாயும் இருந்தனர். குறைவான பேர வாக்களையும், குறிக்கோள் அல்லது உணர்வுள்ள உள்நோக்கத் தொடர்புகளில் குறைவான பொருத்தப்பாட்டுத் திறனையும் பெற் றிருந்தனர்.'[24]

துவக்கக் குழந்தைப் பருவத்தில் நிறுவனத்தில் இருந்த இளை யோனது ஆளுமை சமூகத் தொடர்புகளில் உணர்ச்சி மிகுதி இல்லா மல் இருக்கின்றது. நெருங்கிய நட்பு உருவாவதற்கு இந்நிலை தொல்லையாகவும் இருக்கிறது.

வளர்கின்ற குழந்தை, மனப்போக்கு, ஆளுமை, குணவியல்பு களில் நிலையாய் இருக்கின்ற தன்மை, அவன் வளர்ச்சியடையும் பொழுதும் இருப்பது பல ஆய்வாளர்களால் உற்றுநோக்கப்பட்டது. கேட்டல் (Cattell) என்பவராலும், மற்றவர்களாலும் ஆராய்ச்சி நடத்தப்பட்ட ஜூனியர் ஆளுமை வினாக்களில் (Junior Personality Quiz) இருக்கின்ற இனங்கள், வயது மாறுதல்கள் 10-லிருந்து 16 வயதுவரை குறிப்பிடத்தக்கவாறு இல்லை எனக் காட்டுகின்றன.[25]

[24] Ibid., p. 446.
[25] R. B. Cattell, et al., Handbook for the Junior Personality Quiz. Champaign, Ill,: Institute for Personality and Ability Testing, 1935, p. 12.

தனியன்கள் வளர்ச்சியடையும்பொழுது, உணர்வுக்குரிய தன்மையில் ஓரளவு குறைந்த போக்கினைக் கண்டனர். இளையோர் பருவத்திற்கு வளர்கின்றபொழுது, கீழான மனவுறுதிக் கட்டுப்பாட்டினை நோக்கிப் போகின்ற ஓரளவு குறைந்த போக்கினைக் கண்டனர். இப் பருவத்தில் குழுவின் தரங்களுக்கு ஏற்றவாறு இருக்கவேண்டும் என்ற உணர்வு இருப்பதையும் இங்கு நினைவில் கொள்ளவேண்டும். ஆளுமை நிலையாயுள்ள தன்மையினைப்பற்றி, பல முதிர்ச்சியுள்ள ஆட்படுவோர்களைக் கொண்டு நடத்தப்பட்ட தனியாள் ஆய்வுகள் மேலும் ஆதரவினைத் தருகின்றன. ராபர்ட்ஸும் ஃபிளமிங்கும் (Roberts and Fleming) ஆய்வு நடத்தியதில், 100 நிகழ்ச்சியிலிருந்து 25 கல்லூரிப் பெண்களைத் தேர்ந்தெடுத்தனர்.[26] தனியாள் ஆய்வுகளும் குழுக்குறிப்புகளும், புள்ளியியல் அடிப்படையில் ஆய்வு நடத்தியபொழுது, இல்லத் தொடர்புகள் ஆளுமைப் பண்புக் கூறுகளின் வளர்ச்சியில் அதிகமான முக்கியத்துவம் கொண்டுள்ளதைக் காட்டின. பண்புக்கூறுகள் ஓரளவு மாறுந்தன்மை கொண்டிருந்தாலும், பொதுவாக நிலையாய் இருப்பது மாறுதல் அடைவதைக் காட்டிலும் அதிகமாகக் காணப்பட்டது.

## இளையோனின் தேவைகள்

இவ்வாய்வு முழுவதும் இளையோன் ஓர் இயக்க ஆற்றலுடைய தனியன் என்றும், அவன் தனது சூழ்நிலையிலுள்ள சக்திகள், நிலைகளின் இடைத்தொடர்புகள் ஆகியவை மூலமாக வளர்ச்சியையும், முதிர்ச்சியையும் பெறுகின்ருன் என்றும் விவரித்தது. மனித உயிரியின் இயக்க ஆற்றல் சில அடிப்படைத் தேவைகளின் அடிப்படையில் விளக்கப்பெற்றது. இத்தேவைகள் தனியன் சந்திக்கின்ற பொருத்தப்பாட்டின் அடிப்படைகளாகும். இவ்வடிப்படைத் தேவைகள்பற்றி அவர்கள் எல்லோரும் ஒத்துக்கொள்ளக்கூடிய கருத்தினை அடையவில்லை. உயிரித் தேவைகள் சிறப்பாக அறியப்பட்டு, நன்ருகத் தெளிவாக வரையறுக்கப்படுகின்றன. இவை, உணவு, ஓய்வு, தூக்கம், கழிவகற்றல், இசைவான தட்பவெப்ப நிலைகள், காற்று, நீர் ஆகியவற்றிற்கான தேவைகளைக்கொண்டு விளங்குகின்றன. பால் உந்துக்கு உடலியல் அடிப்படையும் நன்ருக உணர்ந்ததொரு தேவையாகும். இளையோர்களது ஆளுமைத் தேவைகளைக் கீழ்க்கண்டவாறு வரிசைப்படுத்தலாம் :

[26] K. E. Roberts and V. Fleming, 'Persistence and Change in Personality Patterns,' Monographs of the Society for Research in Child Development, National Research Council, 1943, Vol. 8, No. 3.

(1) ***பாசத்திற்கான தேவை:*** வாழ்க்கையின் துவக்கத்திலேயே தோன்றுகிறது. இஃது இளையோர் பருவத்தில் பலதரப்பட்ட வெளிப்பாடுகளைக் கொள்கிறது.

(2) ***உடைமையாயிருக்கின்ற தேவை:*** இளையோர்களுக்குக் குறிப்பாக முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ஏனெனில், அவர்கள் இப்பருவத்தில் இல்லத்தின் நெருக்கமான உறவுகளைப் பிரித்துக்கொண்டு செல்ல முயல்கின்றனர். மாற்றுப் பால் தொடர்புகளும் இப்பருவத்தில்தான் ஏற்படுகின்றன.

(3) ***சுதந்திரமாயிருக்கின்ற தேவை:*** வாழ்க்கையின் துவக்கத்திலேயே ஏற்படுகின்றது. இஃது இளையோர் பருவத்தில் முக்கியத்துவம் பெறுகின்றது. தனியன் பல தேர்ந்தெடுத்தல்களும், முடிவுகளும் எடுக்கவேண்டிய அவசியமேற்படுவதால், இது மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகிறது.

(4) ***அடைவுத் தேவை:*** தனியன் முதிர்ச்சியை நோக்கி வளரும்போது மிகவும் தெளிவாகத் தோன்றுகிறது.

(5) ***ஏற்றுக்கொள்ளுதலுக்கான தேவை:*** குறிப்பாக, இளையோர்களுக்கு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ஏனெனில், அவை நல்ல ஒப்பார் தொடர்புகளையும், ஒப்பார் அனுமதியையும் பெரிதும் பொறுத்திருப்பதனால், இது முக்கியத்துவம் பெறுகிறது.

(6) ***தன்மதிப்பிற்கான தேவை:*** முதிர்ச்சி அதிகமாகும்பொழுது தனது நடத்தை, தனது சொந்தத் தரத்திற்கு ஏற்றவாறு தகுதி பெறுகின்றதா என்று பார்க்கும்பொழுது முக்கியத்துவம் பெறுகிறது.

(7) ***வாழ்க்கையின் ஓர் இணைந்த மெய்யுணர்வுத் தேவை:*** முதிர்ச்சி அதிகமாகும்பொழுது தோன்றுகிறது. இளையோன் தொடர்ச்சியாக ஏதாவது ஒருவகையான வழி காட்டலின் தேவையை உணர்கிறான். அது அவனுக்குத் தரமாக விளங்கி, முடிவுகள் எடுப்பதற்கு அடிப்படையாகிறது.

இவ்வாளுமைத் தேவைகள் எல்லா இளையோர் குழுக்களிலும் ஒரே மாதிரியான மாறுபாடுகளைக் கொள்ளவில்லை என்பதற்குச் சான்றுகள் உள்ளன. இருப்பினும், இவைகள் முதிர்ச்சியடைந்துள்ள இயக்க ஆற்றலுள்ள தனியனது உயிரியல் தன்மையுடன் உடன் தொடர்பு கொள்கின்ற அளவிற்கு எல்லா இளையோர் குழுக்களிலும் ஏதாவது ஒருவகையில் தோன்றுகின்றன. இதைப்பற்றிக் குறிப்பிடும்பொழுது லீவின் கூறுகின்றார்:

'தனியனது தேவைகள் உயர்ந்த அளவில் சமூக ஏதுக்களினால் தீர்மானிக்கப்படுகின்றன. வளர்கின்ற குழந்தையின் தேவைகள்

மாறுதலுக்கு உள்ளாகின்றன. புதிய தேவைகள் தூண்டப்படுவது அவன் சார்ந்திருக்கிற பல சிறிய, பெரிய சமூகக் குழுக்களின் விளைவாலாகும். அவன் சார்ந்திருக்கிற குழுக்களின் குறிக்கோள் ஒழுக்கம் இவற்றை ஏற்றுக்கொள்ளல், அன்றி விடுத்தல் என்ற அவனது நடத்தையினாலும் அவனது தேவைகள் பாதிக்கப்படுகின்றன தாயாரின் புத்திமதியின் விளைவுகள், உடன் விளையாடும் குழந்தையின் தேவைகள் அல்லது உளப்பகுப்பாளன் குறிப்பிடுகின்ற 'உயர்ந்த தான்' (Super Ego) ஆகிய அனைத்தும் சமூகத்தால் தூண்டப்படும் தேவைகளுடன் பின்னிப் பிணைந்துள்ளன. நாம் அவர்கள் கொள்கின்ற நிலை, சமூக உண்மைகளுடன் தொடர்புகொண்டிருப்பதைக் கண்டோம். நாம் பொதுவாகக் கூறுமிடத்து, குழந்தை வளர்கின்ற பண்பாடு ஒவ்வொரு தேவையையும், அதன் எல்லாவகை நடத்தைகளையும் பாதிக்கின்றது எனலாம். சமூக மயமாகும் பிரச்சினையும் குழந்தை உளவியலின் முக்கியப் பிரச்சினைகளில் ஒன்றாகும்.

சமூகத் தொடர்புகளைச் சார்ந்த தேவைகளைச் மூன்று வகைகளாகப் பிரிக்கலாம்: (1) தனியனின் செயல் யாருடைய நன்மைக்காகவாவது செயற்படலாம் (பொது நற்பணி குறித்தது); (2) மற்றோர் ஆள் அல்லது குழுவினால் உந்தப்பட்டுக் காரியங்கள் செய்யலாம் (மெலிந்த ஆள் வலிவானவனுக்குக் கீழ்ப்படிதல்); (3) ஒரு குழுவைச் சார்ந்திருப்பதனாலோ அல்லது அதன் குறிக்கோள்களைக் கைக்கொள்வதனாலோ தேவைகள் ஏற்படலாம். உண்மையில் இம்மூன்று வகைகளும் ஒன்றுக்கொன்று மிக நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன.'[27]

இளையோனது தேவைகளும் நிலைகளும்பற்றிய பகுத்தாய்வு, தனியன் உடலியல் முதிர்ச்சி நிலையினை அடைந்திருந்தாலும், அவனது அன்றாடச் செயல்களில் பெரிய பங்கினை வளர்க்கின்ற உந்துக்களின் இயற்கையான வெளிக்காட்டுதலை அடைவதில் தாமதம் ஏற்படுகின்ற கட்டாயத்திற்குள்ளாகின்றான் என்று காட்டுகின்றது. இப்பயிற்சிக் கால வாழ்க்கை நீடிப்பதை நாகரிகம் கட்டாயமாக ஆக்கியுள்ளது. ஆனால், மனித உயிரியல் வளர்ச்சி முன்னைய காலங்களின் விகிதத்தில் தான் தொடர்ந்து வளர்கின்றது. இளையோர் பருவத்தில் தனியன் சமூகத்தின் நிலையான உறுப்பினனாக ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. அவனது பழக்க அமைப்புகள் முன்பு குறிப்பிட்டதுபோன்று உருவாகின்ற நிலையிலேயே உள்ளன. அவற்றில் பல இன்னும் தொடர்பற்று இருக்கின்றன. பொறுமையாக்கும் வழி இன்னமும் அகன்ற

[27] Kurt Lewin 'Behaviour and Development as a Function of the Total Situation,' Manual of Child Psychology, 2nd ed. (D.L. Carmichael ed.), published by John Wiley and Sons, Inc., 195 , p. 959. *இவர்களின் அனுமதியுடன் அளிக்கப்பெறுகின்றது.*

சமூகப்பாட்டறிவுக்குள் கொண்டு செல்லப்படவில்லை. அவனது இயற்கையான உந்துகள் இதுநாள்வரை கட்டுப்பாடு ஏதுமின்றி வெளிப்பட்டன; ஆனால், இப்போதோ அவை யாவும் அவன் சார்ந்துள்ள பெரிய சமூக அமைப்பினால் சரிபார்க்கப்பட்டும், மாற்றியமைக்கப்பட்டும் வருகின்றன. ஆதலின், அவன் பொருத்தப்பாடுகளைக் கொள்ளவேண்டிய பொதுவான குழப்பமும் போராட்டமும் மிகுந்த சூழ்நிலைகள், பெரும்பாலும் அவனை நிலையாத்தன்மைக்குக் கொண்டு செல்கின்றன. இருப்பினும், நாம் இதற்காக இளையோரைக் குறைசொல்லிப் பயனில்லை. ஏனெனில், இத்தகைய சூழ்நிலைகளின் குழப்பத்திலும் கட்டுப்பாடுகளிலுமிருந்து இளமைக்கும் முதியோர் பருவத்திற்கும் அவன் வளர்கின்றான். தாம்ப்ஸன் இதனைப்பற்றிக் குறிப்பிடுவதாவது:

'சமூகத்தினால் வளர்க்கப்படுகின்ற இளைஞன், அதன் சிறப்பான நடத்தையினைப் பின்பற்றும் முறையில் கடைப்பிடிக்க வேண்டும் எனச் சமூகம் எதிர்பார்க்கின்றது. மென்மைத்தன்மை, பாசம், வணக்கமான நடத்தை, கொடுமை, உள்ள நிறைவின்மை, வெறுப்பு, மனவெழுச்சி உறவு, தற்காப்பு நிலையிலேயே கிளர்ச்சி செய்கின்ற மனப்பாங்கு, சுதந்திரமாக இருந்தாலும் குழுவிற்காகத் தியாகம் செய்யும் விருப்பம், மாற்றுப்பாலாரிடத்து அதிகமான அக்கறை, தடைசெய்யப்பட்ட பழக்கங்களைப்பற்றிக் கவலையற்றிருத்தல், திருமணம் செய்வதால் முதிர்ச்சியடைதல், தனியனது பொருளாதார வெற்றியினை வலியுறுத்துதல்—இவைகளும், இவைகளைப்போன்ற பல நடத்தைகளும் முதிர்ச்சியடைகின்ற தனியனிடத்துத் தோன்றுகின்ற தொடர்ச்சியான அதிர்ச்சியால் விளையக்கூடிய அனுபவங்களைத் தாக்குகின்றன. இதிலிருந்து தனியன் சமூகத்தில் ஓர் இடத்தினைப் பெறுவதற்காக எவ்வளவு பிரச்சினைகளை எடுத்துக்கொள்ள முடியுமோ அவ்வளவையும் ஏற்றுக்கொண்டு, அவ்வாறு செய்வதன் மூலம் முதியோர் பருவத்திற்குள் ஓர் இணைப்புள்ள ஆளுமையுடன் நுழைகின்றான்.'[28]

## அதிகாரச் சுருக்க உரை

ஆளுமையினுடைய பல்வேறு வரையறைகளில் முதலாவதாகத் தோன்றுவது, பொருள்களின் மொத்தக் கூட்டு எனும் கருத்தேயாகும். இரண்டாவது, இப் பல்வேறு பொருள்களிடையே ஏற்படும் இடைத்தொடர்பினால் உண்டாகும் முழுமையான கோலத்தைப் பொதுவாக ஏற்றுக்கொள்வதாகும். மேலும், இப்பொருள்களிடையே தனி மனிதனுக்கும் மற்றவர்களுக்குமிடையே உள்ள உறவின் அடிப்

[28] C. E. Thompson, 'The Personality of the Teacher as it Affects the Child', The Educational Forum, 1942, Vol, 6, p. 264.

படையில் ஏற்படும் இடைத்தொடர்புகளின் முக்கியத்துவத்தையும் இது வலியுறுத்துகின்றது. சில பண்புக்கூறுகள் அதிகமாகக் கொண்டும், சில பண்புக்கூறுகள் குறைவாகக் கொண்டும், இது முழுமை அடையப்பெறுகின்றது. மேலும், பண்புக்கூறுகளிடையே சீரான இடைத்தொடர்பும் இல்லாமலிருக்கலாம். முரண்பாடான பயன் மதிப்புகளும் அல்லது உண்மையாகவே முரண்பாடுள்ள பண்புக்கூறுகளும் இருக்கலாம்; அல்லது தனியனது ஆளுமைப் பண்புகளுக்கும், மற்றவர்களது குணவியல்புகளுக்கும் இசைவான இடைத்தொடர்பு ஏற்படாது நின்றுவிடலாம். பின்னுல் கூறப்பட்டதனைச் சில சமயங்களில் 'ஆளுமைத் தாக்குதல்கள்' என்றும் குறிப்பிடுவதுண்டு.

இளையோர் பருவத்தில் ஆளுமைப் பண்புக்கூறுகள் வளர்ச்சியடைந்து பல்வேறு வழிகளில் வெளிப்படுத்தப்படுவதினுல், அது பல்வேறு பிரச்சினைகளையும் தொல்லைகளையும்கொண்ட காலமாகி விட்டது. அதன் அடிப்படைக் கொள்கையை நாம் இவ்வாறு கூறலாம்: 'வாழ்க்கையின் எந்தப் பருவத்திலாவது பொருத்தமில்லாத வகையில் உடல்—சமூக மனவெழுச்சி அழுத்தம், தனியன் அதற்குத் தயாராக இல்லாதபொழுது ஏற்படுமாயின், அப்பருவத்தில் மனப் பிறழ்வுநிலைகள் ஏற்படலாம்; ஏற்படவும் செய்கின்றது; அல்லது ஏற்கெனவே இருக்கின்ற சில நிலைகள் சமூக முக்கியத்துவம் பெறுகின்றன.'

இளையோன் மாறுகின்ற உடற்கூற்றினைக் காண்கிருன். அதை அவன் இப்போது ஏற்றுக்கொள்ள வேண்டிய கட்டாயத்திற்குள்ளாகின்றுன். அவனுடைய வரம்புகளையும், பேறுகளையும், ஏற்றுக்கொள்ள வேண்டிய முதிர்ச்சிப் பருவத்தினையும் அவன் அடைந்துகொண்டிருக்கின்றுன். இசைவான ஆளுமை, சமூகத்தன்மையான கோலங்கள் இவற்றின் வளர்ச்சிக்குரியதொரு காலமாக 10லிருந்து 13 ஆண்டுகள் இருக்கின்றன. இக்காலத்தில்தான் முந்தைய ஆளுமைநிலை அமைப்புகள் மறைந்து, ஒப்பார் கவர்ச்சி பெருமளவு ஏற்படுகின்றது.

அவாக்கள், குறிக்கோள்கள், இளையோரது நடத்தை, சமூகச் சூழ்நிலை ஆகியவற்றின் விளைவுகள் இவ்வதிகாரத்தில் வலியுறுத்தப் படுகின்றன. சிறுவர்கள் பொருள்களுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கின்றனர். சிறுமியர் மிகுதியும் சமூக மனப்பான்மையினைக் கைக்கொள்ளுகின்றனர். குழந்தைப் பருவப் பொது ஆளுமை அமைப்புத் தொடர்ந்து இருக்கும் போக்குக் காணப்படுகின்றது. இளையோர், பருவத் துவக்கத்தில் தளர்ந்தாலும், புதுமுகப் பயிற்சி பெற்றுலும் இப்போக்குப் பொதுவாகக் காணப்படுகின்றது. இளையோர்களது தேவைகள் முன்னிளையோர் தேவைகளிலிருந்து முழுதும்

மாறுபட்டவையல்ல. பால் உந்துவின் தொடர்பில்மட்டும் இத்தகைய வேற்றுமை இருப்பதில்லை எனலாம். சில ஆளுமைத் தேவைகளை எல்லா இளையோர்களும் வெளிக்காட்டுகின்றனர். ஆனால், அவைகளின் சரியான தன்மையிலும் அளவிலும் ஒருவருக்கொருவர் மாறுபட்டு இருப்பர்.

## சிந்தனைக்குரிய பிரச்சினைகள்

1. இவ்வதிகாரத்தில் தரப்படாத மற்ற, பல்வேறு ஆளுமை பற்றிய வரையறைகளை நோக்குக. இப்பொருளில் ஒருவரது வரையறை எவ்வாறு அவரது பொதுவான கையாளுமுறையை பாதிக்கும்?

2. ஆளுமைப் பண்புக்கூறுகளை அளவிடுதல் எவ்வாறு மிகவும் கடினமானதாகும்? ஆளுமைக் கணக்கீடுகளில் உமக்கு ஏதாவது அனுபவம் உண்டா? அக்கணக்கீடுகளின் முடிவுகளினால் விளையும் பயன்கள் யாவை? எவ்வெச்சரிக்கைகளைக் கவனிக்கவேண்டும்?

3. அட்டவணை 9—2-ல் தரப்பட்டுள்ள திட்டத்தின்படி நீர் அறிந்த பல்வேறு இளையோர்களுடைய ஆளுமைகளைக் கணக்கிடுக. இவ்வாறான கணக்கீடுகளில் நீவிர் சந்திக்கும் தொல்லைகள் யாவை?

4. அடிப்படை ஆளுமைக் குணவியல்புகள் நிலையாயிருக்க முனைகின்ற தன்மைக்குச் சான்றாக உனது வாழ்க்கையையோ, நீவிர் அறிந்த ஒருவரது வாழ்க்கையையோ அமைக்க இயலுமா? ஏற்படுகின்ற பல குறிப்பிட்ட மாறுதல்களுக்கு நீவிர் கூறும் காரணம் என்ன?

5. சமூகத் தூண்டுதல் துவக்கக் குழந்தைப் பருவத்தில் போதிய அளவு ஏற்படாததனால், இளையோர் பருவத்தில் ஆளுமையில் ஏற்படக்கூடிய விளைவுகள் யாவை?

6. நீவிர் சந்தித்துள்ள ஆளுமை வகைகள் யாவை? மக்கள், ஏன் எல்லோரையும் புறக்கூண்டு போன்று வகைகளாகப் பிரித்துணர விரும்புகின்றனர்?

7 உமக்குத் தெரிந்த முதியோர் ஆளுமையுடையவர்களில் நல்ல பொருத்தப்பாடுகளைக் காட்டுபவர் யார்? கீழான சமூகப் பொருத்தப்பாடுகளைக் காட்டுபவர் யார்?

8. தனியனது கருத்துநிலைபற்றிய கருதுகோள்களில் உள்ள பால் வேற்றுமைகளை ஒப்பிடுக.

9. கீழான, நடுத்தர வகுப்புக் குழுக்களிலிருந்து வரும் உயர் நிலைப் பள்ளி மாணவர்களது அவாக்களை ஒப்பிடுக. அடிக் கடி காணப்படுகின்ற விதி விலக்குகளை எவ்வாறு விளக்கு வாய் ?

10. உன்னுடைய ஆளுமையை எந்த வகையைச் சார்ந்தது என்று வகைப்படுத்துவாய்? நீ உன்னை (1) சமூக வகை, (2) மனவெழுச்சி வகை, (3) குழுவின் தரத்தைப் பின் பற்றுகின்ற வகை, (4) ஆர்வத்துடன் விழைகின்ற வகை, (5) தன்மதிப்புள்ள வகை ஆகிய வகைகளில் எதைச் சார்ந்தவனாகக் கருதுகின்றாய்? இவ்வாறு வகைப்படுத்து வதில் நீ காணும் இடர்ப்பாடுகள் எவை?

11. ஒத்த வயதினரும் பள்ளியில் ஒரே தரத்தைப் பெற்றவரு மான சரிளையோர்களைத் தேர்ந்தெடுத்து, அவர்களு டைய ஆளுமை வேறுபாடுகள் வெவ்வேறான சமூகக்குழு உறுப்பினர்களை எவ்வாறு பாதித்தன என்று காட்டுக.

## தெரிவுசெய் நூற்பட்டியல்

1. Blos, P., 'The Adolescent Personality.' New York : Appleton-Century-Crofts, Inc., 1941.

2. Frank, L. K., et al., 'Personality Development in Adolescent Girls.' Monographs of the Society for Research in Child Development, 1951, Vol. 16, No. 53.

3. Havighurst, R. J., and H. Taba, 'Adolescent Character and Personality.' New York: John Wiley and Sons, 1949, Chaps. 9 and 24.

4. Hurlock, E., 'Adolescent Development.' New York : McGraw-Hill Book Co., 1949, Chap. 14.

5. Kluckhohn, C., and H. A., Murray (Editors), 'Personality in Nature, Society and Culture.' New York : Alfred A. Knopf, Inc., 1953.

6. Linton, R., 'The Cultural Background of Personality.' New York : Appleton-Century-Crofts, Inc., 1945.

7. Meek, L. H., and others, 'Personal—Social Development of Boys and Girls.' New York : Progressive Education Association, 1940.

8. Milner, E., 'Effects of Sex Role and Social Status on the Early Adolescent Personality,' Genetic Psychology Monographs, 1949, Vol. 40, pp. 231-325.

9. Murphy, G., 'Personality.' New York: Harper & Bros., 1947.

10. Patty, W. L., 'Personality and Adjustment.' New York: McGraw-Hill Book Co., 1953.

11. Sadler, W. S., 'Adolescent Problems.' St. Louis: C. V. Mosby Co., 1949, Chap. 6.

12. Schneiders, A. A., 'The Psychology of Adolescence.' Milwaukee: Bruce Publishing Co., 1951, Chap. 11.

13. Whiting, J. W., and I. L., Child, 'Child Training and Personality:' A Cross-Cultural Study. New Haven: Yale University Press, 1953.

14. Wilmer, H. L., and R. Kotinsky, 'Personality in the Making.' New York: Harper & Bros., 1952.

15. Zachry, C. B., 'Customary Stresses and Strains of Adolescence,' The Annals of the American Academy of Political and Social Scienee, November, 1944.

# 10. சொந்த, சமூகப் பொருத்தப்பாடுகள்

## இளையோர்களின் பிரச்சினைகள்

முன்னைய அதிகாரங்கள், வளர்ச்சியும் முதிர்ச்சியும் எவ்வாறு வளர் இளம்பருவச் சிறுவர்களுக்கும் சிறுமியர்களுக்கும் தனித்த பிரச்சினைகளை அளிக்கின்றன என்று காட்டின. எந்தப் பண்பாட்டிலும் வளர்கின்ற இளைஞன் கற்கவேண்டிய சில வளர்ச்சிக்குரிய பணிகளைச் சந்திக்கின்றான். முதிர்ச்சியடைகின்ற தனியனுக்கும், ஒருவனது சமூக, உடற் சூழ்நிலைகளின் அழுத்தங்களுக்கும் இடையே ஏற்படுகின்ற தொடர்ச்சியான இடைத்தொடர்பினால் இக் கற்றல் அவசியமாகிறது. இவ்வாறு எல்லா வயது நிலைகளிலும் தனியன்கள் தனித்த தொல்லைகளுக்கும் பிரச்சினைகளுக்கும் உள்ளாகின்றனர்.

### இளையோர் பிரச்சினைகளைப்பற்றிய ஆய்வின் முடிவுகள்

லூயிஸ் (Lewis) 701 ஜூனியர் உயர்நிலைப் பள்ளிமாணவர்களின் பிரச்சினைகளை ஒவ்வொரு மாணவனது சொந்தப் பிரச்சினைப் பட்டியலின் துணைகொண்டும் ஆய்வு நடத்தினார்.[1] 1,402 பிரச்சினைகள் அறிவிக்கப்பெற்றன. அவை வெவ்வேறான 195 வகைகளில் இருந்தன. சிறுவர்களும் சிறுமியர்களும் அறிவித்த பிரச்சினைகளின் ஒப்புமைப் படம் 10–1 ல் தரப்பட்டுள்ளது. இப்படம் சிறுவர்களைக் காட்டிலும் இரண்டு மடங்குச் சிறுமியர்கள் குடும்ப வாழ்க்கைப் பிரச்சினைகளையும், சமூகப் பிரச்சினைகளையும் தந்தனர் எனக் காட்டுகின்றது. ஆரோக்கியப் பிரச்சினைகளும், வளர்ச்சிப் பிரச்சினைகளும், எதிர்காலப் பிரச்சினைகளும் சிறுவர்களுக்குச் சிறுமியர்களைக் காட்டிலும் அதிகமாய் இருந்தன. 28 சிறுவர், 'பள்ளி எங்களது பணத்தில்

[1] O. Y. Lewis, 'Problems of the Adolescent,' California Journal of Secondary Education, 1949, Vol. 24. pp. 215-221.

மிக அதிகமான அளவு எடுத்துக் கொள்கிறது' என்ற பிரச்சினையை அறிவித்தனர். அவர்கள் செஞ்சிலுவைச் சங்கம், சமுதாயப் பணிக் குழுமம், புற்றுநோய் ஆராய்ச்சி போன்றவற்றிற்காகப் பள்ளி பணம் திரட்டும் ஏற்பாடுகளை வெறுக்கின்றனர். ஹோம்ரூம் குழுக்களின் (Homeroom Groups) கொள்கையான இம்மாதிரியான பணம் திரட்டல்களில் முழுப் பங்கு கொள்ளவேண்டும் என்பது பல சமயங்களில் சிறுவன் அல்லது சிறுமிக்கு ஓர் இக்கட்டான நிலையை உண்டாக்குகிறது. அவனிடத்துச் செலவிடுவதற்குப் பணம் சிறிதளவே இருக்குமாயின், அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்வதே கடினமாக இருக்கும்.




படம் 10-1

சிறுவர் சிறுமியர் அறிவித்த பல்வேறு பிரச்சினைகளின் ஒப்புமை
(ஹாயிஸ் தந்தது)

உயர்நிலைப் பள்ளி மாணவர்களை எதிர்நோக்கியுள்ள பிரச்சினைகளை அறிவதற்கு வில்லியம்ஸ் (Williams) ஓர் உயர்நிலைப் பள்ளிச் சிறுவர் சிறுமியர் குழுவிடம் 10 பிரச்சினைகள்கொண்ட பகுதிகளை ஒரு கேள்வி நிரல்மூலம் தந்தார்.[2] இப்பத்துப் பெரிய அளவு பிரச்சினைப் பகுதிகள்

## அட்டவணை 10—1

இரண்டாம், நான்காம் ஆண்டுச் சிறுவர் சிறுமியர்கள் கோடிட்டுச் சரிபார்த்த முக்கியப் பிரச்சினைகளின் முக்கியப் பரப்புகள் (வில்லியம்ஸ்).

| பிரச்சினைப் பகுதிகள் | இரண்டாவது ஆண்டு | | | | நான்காவது ஆண்டு | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | சிறுவர் | | சிறுமியர் | | சிறுவர் | | சிறுமியர் | |
| | எண்ணிக்கை | சதவீதம் | எண்ணிக்கை | சதவீதம் | எண்ணிக்கை | சதவீதம் | எண்ணிக்கை | சதவீதம் |
| பள்ளி வாழ்க்கை ... | 82 | 20 | 96 | 24 | 193 | 38 | 124 | 25 |
| சிறுவன்—சிறுமி ... | 50 | 12 | 48 | 12 | 46 | 9 | 68 | 14 |
| தொழில் ... ... | 48 | 12 | 44 | 11 | 84 | 16 | 88 | 18 |
| ஆளுமை வளர்ச்சி ... | 46 | 11 | 42 | 10 | 49 | 10 | 44 | 9 |
| ஆரோக்கியம் ... | 38 | 10 | 41 | 10 | 15 | 3 | 34 | 7 |
| சமயம் ... ... | 33 | 8 | 40 | 10 | 3 | ·5 | 12 | 2 |
| பொருளாதாரம் ... | 33 | 8 | 35 | 9 | 75 | 15 | 45 | 9 |
| இல்லம்—குடும்பம் ... | 26 | 7 | 33 | 8 | 22 | 4 | 46 | 10 |
| பொழுதுபோக்கு ... | 23 | 6 | 24 | 6 | 19 | 4 | 28 | 6 |
| குடிமை அக்கறை ... | 23 | 6 | 5 | 1 | 6 | 1 | 2 | ... |

[2] L. H. Williams, 'Problems of California High School Seniors,' California Journal of Secondary Education, 1949, Vol. 24, pp. 73-78;...... 'Their Problems Came with Them,' ibid., pp. 422-427.

அட்டவணை 10—1 ல் தரப்பட்டுள்ளன. இதில் ஒவ்வொரு பிரச்சினை யையும் கோடிட்டுச் சரி பார்த்த மாணவர்களின் எண்ணிக்கையும் சதவீதமும் தரப்பட்டுள்ளன. 'பள்ளி வாழ்வு'ப் பிரச்சினைகள் கல்லூரி யில் மூன்றும் நான்காம் ஆண்டுகளில் படிக்கின்ற சிறுவர் சிறுமி யர்களுக்கு மிக அதிகமான எண்ணிக்கையில் இருந்தன. இப்பிரச்சினை கள் நான்காம் ஆண்டு மாணவர்களைக் காட்டிலும் மூன்றும் ஆண்டு மாணவர்களுக்குக் கடுமையாக இருப்பதாகத் தோன்று கின்றன. இவ்விரு கல்வி நிலைகளின் சிறுமியரது பிரச்சினைகளில் மாறுபாடு மிகவும் குறைவான அளவிலேயே இருக்கிறது. அட்ட வணை 10—1-ன் முடிவுகளை நன்ருகப் பகுத்தாய்ந்தால், சுவையான பால் மாறுபாடுகளையும், வளர்ச்சி மாறுபாடுகளையும் காணலாம்.

'பள்ளி வாழ்வு'ப் பிரச்சினைகள் மிக அதிகமாக இளையோர்களது ஆய்வுகளில் காணப்படுவது ஓரளவு இவ்வாய்வுகள் நடத்தப்பட்ட சூழ்நிலைகளின் காரணமாகவும் இருக்கலாம். பெரும்பான்மையான ஆய்வுகள் பள்ளி நிலைகளிலேயே நடத்தப்பட்டன. இவை பள்ளித் தொடர்புடைய பிரச்சினைகளை மாணவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவருகின்ற ஏதுவாகின்றன. பல்வேறு ஆய்வுகளில் காணப் படுகின்ற பால் மாறுதல்கள் அமெரிக்கப் பண்பாட்டு வகையின் தன்மையிலிருந்து பெரும்பாலும் தோன்றுகின்றன. தற்கால வளர் பருவச் சிறுவனுக்குப் பணம் வைத்துக்கொள்வது, குறிப்பாக அவன் உயர்நிலைப் பள்ளியின் சினியர் ஆண்டை அடையும்பொழுது முக்கியத் தேவையாகிறது. இல்லையெனில், அவனால் அவனுடைய ஒப்பாருடன் அன்றாடச் செயல்களில் பங்குபெற முடிவதில்லை; விளையாடவும், ஆண் மைச் செயலான நாளிடலிலும் ஈடுபட முடிவதில்லை. இந்நிலை இளையோர் பருவத்திலும், பின்னிளையோர் பருவத்திலும் 'பள்ளிவாழ் வு'ப் பிரச்சினைகளை ஓரளவு பாதிக்கின்றது.

### பிரச்சினைகளைக் கோடிட்டுச் சரிபார்க்கும் பட்டியல்களின் பயன்கள்

இளையோர்களின் பிரச்சினைகளை ஆய்வதற்குப் பல்வேறு பிரச்சினை களைக் கோடிட்டுச் சரிபார்க்கும் பட்டியல்கள் பயன்படுத்தப்பட்டன. விஞ்ஞான ஆராய்ச்சிக் குழுவினரின் (Science Research Associates) இளையோர் ஆய்வு, இளைஞர்களுக்கான பர்டூ பல்கலைக்கழகக் கருத் துத் தேர்வின் ஆதரவில் நடந்தது. இதற்குப் பல உயர்நிலைப் பள்ளி களும், அமெரிக்க நாட்டின் பல்வேறு பகுதிகளைச் சார்ந்த 15,000 பதின்வயதினரும் ஒத்துழைத்தனர்.[8] இவ்வாய்வினை உருவாக்கு கின்ற 298 கேள்விகள், நூற்றுக்கணக்கான மாணவர்கள் தங்களை

[8] The SRA Youth Inventory and the Examiner Manual are published by Science Research Associates. These are copyrighted by Purdue Research Foundation.

அதிகத் தொல்லைப்படுத்தும் பிரச்சினைகளைக் குறிப்பிட்டு எழுதிய கட்டுரைகளிலிருந்து தோன்றியவையாகும். இவ்வாய்வில் கலந்து கொண்ட சிறுவர் சிறுமியர்களது தேவைகளும் சிக்கல்களும் எட்டுப் பெரிய பகுதிகளாக வகைபடுத்தப்பட்டன. சிறுவர் சிறுமியர்களது மீக்கோள்கள் எல்லாப் பகுதிகளையும் குறிக்கின்ற தேசீய மாதிரிகளான 2,500 பேர்களிடமிருந்து பெறப்பட்டன. ஒவ்வொரு பிரிவிலும் உள்ள இனங்களின் எண்ணிக்கை, சராசரி மொத்த மதிப்பீடுகளிலிருந்து பிரிந்திருக்கும் தரம் ஆகியவை அட்டவணை 10—2-ல் தரப்பட்டுள்ளன.

மூனி (Mooney) என்பவரால் தரப்பட்ட பிரச்சினையைக் கோடிட்டுச் சரிபார்க்கும் பட்டியல் உயர்நிலைப் பள்ளி, கல்லூரி மாணவர்களிடையே பெரிதும் பயன்படுத்தப்பெறுகின்றது.[4] உயர்நிலைப் பள்ளி மாணவர்களுக்குக் கோடிட்டுச் சரிபார்க்கும் இனங்களாக இருப்பவை 11 பகுதிகளில் வகைபடுத்தப்பட்டுள்ளன. ஒவ்வொரு பகுதியும் 30 இனங்களைக் கொண்டுள்ளது. அப்பதினொரு பகுதிகளாவன :

ஆரோக்கிய வளர்ச்சியும் உடல் வளர்ச்சியும்
செல்வம், வாழ்க்கைத்தரங்கள், தொழில்
சமூக, பொழுதுபோக்குச் செயல்கள்
காதல், பால், திருமணம்
சமூக—உளவியல் தொடர்புகள்
ஒழுக்கங்களும் சமயமும்
இல்லமும் குடும்பமும்
எதிர்காலம் : தொழிலும் கல்வியும்
பள்ளி வேலைக்குப் பொருந்துதல்
பாடத்திட்டமும் போதனை முறைகளும்

## கல்விப் பொருத்தப்பாடுகள்

இளையோரான சிறுவர் சிறுமியர்களால் எல்லாப் படிவநிலைகளிலும் 'பள்ளி வாழ்வு'ப் பிரச்சினைகள் அடிக்கடி அறிவிக்கப்பட்டன. தனியன் 7லிருந்து 9, 10, 11 படிவங்களுக்கு முன்னேறுகையில், இப் பிரச்சினைகள் செறிவுடன் வளர்வதாகத் தோன்றுகின்றது. போதிய அளவு இல்லாததும், இசைவில்லாததுமான கல்வி வழிகாட்டுதல் இப்பிரச்சினைகளில் பலவற்றைத் தோற்றுவிக்கின்றது. கனெக்டிகட்

[4] R. L. Mooney, 'Surveying High-School Students' Problems by Means of a Problem Check List', Educational Research Bulletin, March 18, 1942.

(Connecticut) எனும் இடத்திலுள்ள பல உயர்நிலைப் பள்ளிகளிலுள்ள 9ஆம் 10ஆம், படிவச் சிறுவர் சிறுமியர்களை வைத்து நடத்திய ஆய்வு, இவை அடிக்கடி நிகழ்கின்ற தொன்று எனக் காட்டுகின்றது.[5] கோடிட்டுச் சரிபார்க்கும் பட்டியலில் உள்ள மற்றப் பிரச்சினைகளைக் காட்டிலும் கல்விப் பிரச்சினைகளையே சிறுவர் சிறுமியர்களில் பெரும் பான்மையோர் கோடிட்டுக் குறித்தனர். அவர்கள் அதிகமாகக் கோடிட்டுக் குறித்த பிரச்சினைகளை அவைகளின் செறிவுக்கு ஏற்ற வாறு வரிசைப்படுத்திக் கூறினால், 'படிக்க விரும்பவில்லை', 'பள்ளி யினது சராசரித் தரத்திற்குங்கீழ் இருக்கிறேன்', 'பள்ளி வேலையில் தோல்வியுறுவேன் என்ற அச்சம்', 'வகுப்பில் அடிக்கடி அமைதியற்ற நிலைமையைக் கொள்கிறேன்', 'பள்ளியில் கீழான தரங்களைப் பெறு கிறேன்', 'வகுப்பில் எழுந்து நின்று பேச அச்சங்கொள்கிறேன்', 'போதிய அளவு சுறுசுறுப்பின்மை', 'ஆசிரியர்கள் அதிகமான வேலை யினை எதிர்பார்க்கின்றனர்', 'இந்தப் பள்ளி எனக்குப் பிடிக்கவில்லை' என்றுகும்.

### அட்டவணை 10—2

SRA இளைஞர் ஆய்வில் 2,500 தேசிய மாதிரிகளின் ஒவ்வொரு பகுதியிலுமுள்ள இனங்களின் எண்ணிக்கை, சராசரி, மாறுபடும் தரம்

| பகுதி | இனங்களின் எண்ணிக்கை | சராசரி | மாறுபடும் தரம் |
|---|---|---|---|
| என் பள்ளி ... ... | 33 | 7·38 | 4·49 |
| உயர்நிலைப் பள்ளிக்குப் பின்னர் | 37 | 12·05 | 7·09 |
| என்னைப்பற்றியது... ... | 44 | 9·42 | 6·10 |
| மற்றவர்களுடன் பழகுதல் ... | 40 | 10·40 | 6·32 |
| என் இல்லமும் குடும்பமும் ... | 53 | 5·76 | 6·59 |
| சிறுவன் சிறுமியைச் சந்தித்தல் | 32 | 6·64 | 4·98 |
| ஆரோக்கியம் ... ... | 25 | 3·94 | 2·77 |
| பொதுவாக உள்ள பொருள்கள் | 34 | 6·36 | 5·06 |

இம்முடிவுகள் வடக்குக் கலிபோர்னியாவில் ஆஷ்வில்லி (Asheville) பகுதியைச் சார்ந்த ஸ்டீபன்ஸ்-லீ உயர்நிலைப் பள்ளி மாணவரது

[5] K. C Garrison—*வெளியிடப்படாத ஆய்வு, 1945. இவ்வாய்வில் மூனி அவர்களால் தரப்பட்ட பிரச்சினையைக் கோடிட்டுச் சரிபார்க்கும் பட்டியல் 400-க்கு அதிகமான சிறுவர் சிறுமியர்களுக்குத் தரப்பட்டது. கனெக்டிகட்டின் குறுக்குவெட்டு மாதிரியாக அச்சிறுவர் சிறுமியர் அமைந்தனர்.*

பிரச்சினைகளைப்பற்றி மூனி (Mooney) நடத்திய ஆய்வில் கிடைத்த முடிவுகளுக்கேற்ப அமைந்திருக்கின்றன.[6] இவ்வுயர்நிலைப் பள்ளி மாணவர்களில் 87 சதவீதத்தினர் பள்ளி வேலைக்குப் பொருத்தப்பாடு என்னும் பகுதியிலுள்ள பிரச்சினைகளில் அதிகமான கவலை கொள்ள வில்லை. பல இனங்களைக் குழுவிலுள்ள இருபது சதவீதத்தினருக்கு மேல் குறித்தனர். அவைகளாவன: 'பள்ளியின் தரத்துக்குப் பின் னிருந்தேன்'; 'தரங்களைப்பற்றிக் கவலைகொள்கிறேன்'; 'கணக்கிலும் பௌதிகத்திலும் தொல்லையுறுகிறேன்'; 'படிப்பதற்குப் போதிய அளவு நேரமில்லை'. கோடிட்டுச் சரிபார்க்கும் பட்டியல் ஒன்றிலுள்ள தனிப் பட்ட நிலைகளை ஆய்ந்து பார்த்ததில், வெவ்வேறான கூட்டுகள் கொண்ட பிரச்சினைகள் காணப்பட்டன. இருப்பினும், 'பள்ளியின் தரத்துக்குப் பின்னிருந்தேன்' என்பதுபோன்ற சில பிரச்சினைகளைக் கோடிட்டவர்களின் சதவீதம், உயர்நிலைப் பள்ளி மாணவர்களில் பெரும்பகுதியினருக்குச் சில பிரச்சினைகள் பொதுவாக இருப்பதைக் காட்டுகின்றது. இப்பிரச்சினைகள் அவைகளுடைய முக்கியத்துவத் தைக் குறித்து இளையோராலும் முதியோராலும் ஒரே அளவில் மதிக் கப்படுவதில்லை. ஆனால், இளையோர்களுக்கு அதிகக் கவலைதருகின்ற ஒரு பிரச்சினைக்கு, அவர்களை வழிகாட்டும் பணியிலுள்ளோர், முக்கி யக் கவனிப்பை அளிக்கவேண்டும். அது ஆசிரியருக்கோ பெற்றோ ருக்கோ அல்லது வழிகாட்டும் பணியிலுள்ளோருக்கோ முக்கியமல்ல என்றாலும், அதில் இளையோர்கள் அக்கறை காட்டுவதால், அதனை முக்கியமாகக் கவனிக்கவேண்டும்.

## இல்லப் பொருத்தப்பாடுகள்

இளையோர்களது பிரச்சினைகளைப்பற்றி ஆய்வுகள் நடத்தியவர் களில் பலர் கல்வித் திட்டத்தில் ஈடுபட்டுள்ளோர் அல்லது அக்கறை கொண்டுள்ளோராதலின், இல்லத்தைப்பற்றிய பிரச்சினைகளைப் பெரும்பாலும் உளவியல் மருத்துவக்கூடங்களில் கண்டுபிடிக்கின்றார் கள். நியூயார்க்கு நகரக் கல்லூரியின் (City College) கல்வி-மருத்து வக் கூடத்தில் இருந்த சிறுவர்கள் சிறுமியர்கள் வெளிப்படுத்திய அறி குறிகளின் பட்டியலில் 'பெற்றோர் தொல்லைகள்' என்னும் இயல்பு முதலிடம் பெறுகின்றது.

'இவை மிகவும் உச்சநிலை வகையான மனவெழுச்சி நிலையில், குழந்தையைப் பெற்றோரில் ஒருவரால் அல்லது இருவரால் ஒதுக் கப்படுகின்ற நிலையினை அடையலாம். அல்லது வெவ்வேறான சமயங் களில் ஒரே பெற்றோரால் மாறுபட்ட நிலைகளையும் மேற்கொள்ள லாம். சில சமயங்களில் பெற்றோர் அதிகமாகக் காப்பாற்ற நினைக்கும்

[6] R. L. Mooney, op. cit.

மனப்பான்மையும் தொல்லையைத் தரலாம். குழந்தைக்கும், பெற்றோரில் ஒருவருக்கும் அல்லது இருவருக்குமிடையே ஒரு நல்ல உறவு ஏற்படுவதில் காணப்படுகின்ற தொல்லை, இவ்வகைகளை இணைக்கின்ற வேலையாகும்.'[7]

SRA இளைஞர் ஆய்வின் முடிவுகள், பதின்வயதினர் அவர்களுடைய பெற்றோர்கள்மீது கொள்ளும் அதிகமான எதிர்ப்பு உணர்வு மாணவர்களிலும் சிறுபான்மையினர்தாம் கொள்கின்றனர் என்று காட்டுகின்றது. ஆனால், 10லிருந்து 20 சதவீதத்தினர் இல்லக் குடும்பப் பிரச்சினைகளைக் காட்டினர். குறிக்கப்பட்ட மூன்று வகையான பிரச்சினைகள்: (1) பெற்றோர்களுக்கும் இளையோர்களுக்குமிடையே ஒருவரை ஒருவர் போதிய அளவு புரிந்துகொள்ளாமை; (2) அவர்களுடைய சுதந்திரத்திற்கு வரம்பு விதிப்பதால் வருவன; (3) பணம், மற்றும் நிதிநிலைமைகளினால் பிரச்சினைகள் தோன்றுபவை. இதுவரை குறிக்கப்பட்ட ஆய்வுகளின் முடிவுகளுக்கிணங்க, பணத்தைப்பற்றிய பிரச்சினைகள் சிறுவர்களுக்குக் கவலையைத் தருவனவாக இருந்தன. மற்றப் பிரச்சினைகள் சிறுமியர்களுக்கு மிகவும் அதிக முக்கியமானவைகளாக இருந்தன.

### பணப் பிரச்சினை

இளையோர்களது இல்லப் பிரச்சினைகளின் தொடர்பில் பணப் பிரச்சினைகளும் தோன்றுகின்றன என்று முன்னரே குறிப்பிட்டுள்ளோம். SRA இளைஞர் ஆய்வில் உள்ள பதின்வயதினரில் பன்னிரண்டு சதவீதத்தினர், தாங்கள் பெறும் செலவுப் பணம் மிகவும் குறைவாக இருப்பதாய்க் குறைபட்டனர். பதினொரு சதவீதத்தினர், தங்கள் பெற்றோர் தலையீடின்றிச் சம்பாதிக்கின்ற பணத்தைச் செலவிட முடியவில்லை என்று குறித்தனர். சில பள்ளிக் கொள்கைகளும் பழக்கங்களும் சில மாணவர்களிடையே பணப் பிரச்சினைகளைப் பெரியவையாக்கும் என்று குறிப்பிடப்பட்டது.

ஸ்டீபன்ஸ்-லீ உயர்நிலைப் பள்ளி முழுவதிலும் பணப் பிரச்சினைகள் பெரிய அளவில் இருந்தன. மாணவர்களில் 90 சதவீதத்தினருக்கு மேல் இப்பகுதியில் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட இனங்களைக் குறித்தனர். மாணவர் குழுவில் பத்து சதவீதத்தினர் அல்லது அதற்குமேல் 13 இனங்களைக் குறித்தனர். அதிகமாகக் குறிப்பிட்ட இனங்களும், குறிக்கப்பட்ட இனங்களின் அளவுகளும் பக்கம் 373-ல் கண்டவாறு இருந்தன.

[7] H. H. Abelson, Annual Report of the City College Educational Clinic Thirtieth Year, 1942-1943, The School of Education, College of the City of New York, p. 13.

| | |
|---|---|
| பணம் சம்பாதிக்கத் தேவையாய் இருந்தது ... | 288 |
| பணத்தை நேர்மையாகச் செலவிடக் கற்றுக் கொள்ளுதல் ... ... ... | 168 |
| பெற்றோர்களிடம் பணம் கேட்கவேண்டிய அவசியம் | 164 |
| பணத்தைச் சேமிக்கக் கற்றுக்கொள்ளுதல் ... | 158 |
| முறைப்படி செலவுப் பணமோ, முறையான ஊதியமோ இல்லாமை ... ... ... | 108 |
| குடும்பத்தில் கார் இல்லாத நிலை ... ... | 97 |
| விடுமுறையில் வேலை தேவையாய் உள்ளது ... | 94 |
| நண்பர்களிடம் உள்ள பணத்தைக் காட்டிலும் குறைவான அளவே பணம் கொண்டிருத்தல் ... | 85 |
| நல்ல துணிகள் குறைவாகப் பெற்றிருத்தல் ... | 75 |
| பள்ளிக்கு வெகு தூரத்தில் வாழ்தல் ... ... | 74 |
| ஓய்வுநேரத்தில் தொழில் தேடுதலுக்கான தேவை ... | 67 |
| பள்ளியில் மதிய உணவுக்குப் போதிய பணமின்மை | 66 |
| உயர்நிலைப் பள்ளிக்குமேல் கல்விபெறப் பணம் சேகரித்தல் ... ... ... ... | 65 |

இன்றைய நாளின் சமூக அமைப்பில் இளைஞர்கள் சாதாரணச் சமூக வாழ்வினை மேற்கொள்ள ஓரளவு பணம் செலவழிக்காமலிருக்க முடியாது. இது அவர்களது பெற்றோர்கள் இளையோர்களாக இருந்த பொழுது செலவு செய்ததைக் காட்டிலும் மிக அதிகமாக இருப்பது சாத்தியமேயாகும். பொருளாதாரத் தரத்திலுள்ள இம்மாற்றத்தினை உணரப் பெற்றோர்கள் மறுத்து, அவர்கள் இளையோரான சிறுவர் சிறுமியர்களைத் திட்டும்பொழுது, 'நான் உங்கள் வயதில் பணமே செலவழிக்கவில்லை' என்று கூறுவர். இம்மனப்பான்மை இல்லத்தில் சிக்கலைத் தோற்றுவிப்பதற்கு முக்கியமான ஏதுவாகும். இச்செலவுகளுக்கு அவர்கள் பணம் பெறுகின்ற மூன்று ஏதுக்களாவன: (1) பெற்றோர், உறவினர் அல்லது நண்பர்கள், (2) தொழில், (3) தவறான அல்லது சட்டத்திற்குப் புறம்பான ஏதுக்கள்.

### ஆரோக்கியப் பொருத்தப்பாடுகள்

பல இளையோர்களிடத்து ஆரோக்கியப் பிரச்சினைகள் குறித்து உணர்வின்மையைக் காணலாம். இவ்வுற்றுநோக்கல் பெரிய அளவில் நமது சமூக அமைப்பில் பரவலாக இருக்கின்ற பல மனப்பான்மைகளின் பிரதிபலிப்பாகும். நல்ல ஆரோக்கியப் பழக்கங்களைக் கைக்

கொள்ளவேண்டும் என்ற கட்டாயத்தைச் சிறுமியர்களைக் காட்டிலும் சிறுவர்கள் நன்கு உணர்ந்தனர். சிறுவர்கள் மிக அதிகமாக உடலியல் செயல்களிலும், விளையாட்டுப் போட்டிகளிலும் பங்குபெறுவதனால், ஆரோக்கியப் பிரச்சினைகளில் அதிக அக்கறை காட்டுகின்றனர். உயர்ந்த படிவங்களிலுள்ள மாணவர்கள் உயர்நிலைப் பள்ளியின் முதலாண்டிலுள்ள மாணவர்களைக் காட்டிலும் அதிகமாக இப்பிரச்சினையில் கவலை கொள்கின்றனர்.

ரெம்மெர்ஸ் (Remmers) என்பவராலும், ஷிம்பெர்க் (Shimberg) என்பவராலும் அறிவிக்கப்பட்ட இளையோர்களது ஆரோக்கியப் பிரச்சினைகளின் மதிப்பீடு, இளையோர்களில் 50 சதவீதத்தினர் போதிய அளவு பால் உடற்கட்டு வேண்டியதன் அவசியத்தை உணர்ந்து, அதன் தொடர்பில் உள்ள ஆரோக்கிய, உடற்கட்டுப் பிரச்சினைகளில் அதிக அக்கறை கொண்டனர் என்று கூறுகின்றது.[8] அட்டவணை 10—3-ல் தரப்பட்டுள்ள குறிப்புகள் பல இளையோர்கள் எடை இழப்பதில் அல்லது பெறுவதில் அதிகக் கவலைகொள்வதாகக் காட்டுகின்றன. இருப்பினும், 25 சதவீதத்தினரே அவர்களுக்கு நன்மை பயக்கவல்ல உணவைத் தேர்ந்தெடுப்பதற்குக் கற்றுக்கொள்ள ஆவலைத் தெரிவித்தனர். அடிக்கடி சளிபிடிப்பதாகவும், தலைவலி உண்டாவதாகவும் இளையோர்களில் 12 சதவீதத்தினர் குறித்தனர். முன்னைய அதிகாரங்களில் குறித்த மூனி (Mooney) என்பவர் நடத்திய ஆய்வில், மாணவர்களில் 10 சதவீதத்தினர் அல்லது அவர்களுக்குமேல் குறித்த பிரச்சினைகளை அவைகளின் வரிசைப்படி கீழ்க்கண்டவாறு கூறலாம்: 'குறையுள்ள கண்கள்,' 'நான் இருக்க வேண்டிய அளவு வலிவுடனும் ஆரோக்கியத்துடனும் இல்லை,' 'அடிக்கடி தலைவலி பெறுதல்,' 'எடை குறைவாக இருத்தல்,' 'பற்கள் நன்கு இல்லாமை,' 'மிகவும் குள்ளமாக இருத்தல்,' 'அடிக்கடி தொண்டைவலி,' 'எளிதில் களைப்படைதல்,' 'உடல்தோற்றம் மோசமாயிருத்தல்,' 'அடிக்கடி சளிபிடித்தல்,' 'போதிய அளவு உடற்பயிற்சி இன்மை'.

## தொழில் பொருத்தப்பாடுகள்

போப் (Pope) என்பவர் நடத்திய ஆய்வில் கலந்துகொண்ட மாணவர்களில் நான்கில் ஒரு பங்கினருக்குச் சிறிது குறைவானவர்கள் அவர்களுடைய எதிர்காலத் தொழில்களைப்பற்றிக் கவலை கொண்டதாகக் காட்டினர். ஆனால், இவ்வாறான அக்கறை அதிகமான அளவில்

[8] H. H. Remmers and B. Shimberg, Examiner Manual for the SRA Youth Inventory, Chicago; Science Research Associates, Inc., 1949.

11, 12ஆவது படிவ மாணவர்களிடையே காணப்பட்டது. இப்பகுதியினைச் சார்ந்த பிரச்சினைகளாவன: அவைகள் தோன்றுகின்ற அளவின் விகிதத்தினை வரிசைப்படுத்தினால், தொழிலினைத் தேர்ந்தெடுத்தல், தொழிலுக்கு முன்னுரிமை அளித்தல், தொழிலுக்குத் தயார் செய்துகொள்ளல், ஓய்வுநேரத் தொழிலின் அவசியம், தொழிலில் மோதல் ஆகியவைகள் ஆகும்.

ஸ்டீபன்ஸ்-லீ உயர்நிலைப் பள்ளி மாணவர்களில் 288 பேர் (48 சதவீதம்) சொந்தமாகப் பணம் சம்பாதிக்க ஆசைப்பட்டனர் என்ற உண்மை இளையோர்களுக்கு இது ஒரு முக்கியப் பிரச்சினை என்பதைக் காட்டுகிறது. இக்கருத்து, 'பெற்றோர்களிடம் பணம் கேட்க வேண்டிய அவசியமுள்ளது,' 'ஒழுங்காகச் செலவுக்குப் பணம் கிடைப்பதில்லை' என்பனவற்றைக் கோடிட்டுச் சரிபார்க்கும் அளவுக்கு ஆதரவு பெறுகின்றது. மாறிய சமூகநிலைகளின் காரணமாகப் பல பணப் பிரச்சினைகள் இளையோர்களது வாழ்க்கைகளிலும் செயல்களிலும் இருக்கின்றன. இது முந்திய தலைமுறை அல்லது அதற்கு முன்னைய தலைமுறையினரைக் காட்டிலும் அதிகமாய் உள்ளது. இப்புது ஏதுவுக்கு இளையோர்களின் பொருத்தப்பாடுகளை அதிகரிக்க மேற்கொள்ளும் எந்தத் திட்டத்திலும் அதிக முக்கியத்துவம் அளிக்க வேண்டும். ஆசிரியர் அறிந்த ஒரு மாணவனது வரலாற்றில் இது நன்றாக விளக்கப்பட்டுள்ளது. அச்சிறுவனை நேரடி உரையாடல் மூலம் அறிந்து, கோடிட்டுச் சரிபார்க்கும் பட்டியலைப் பூர்த்திசெய்ய அவனிடம் கூறப்பட்டது. J. W. எனக் குறிக்கப்பட்ட இச்சிறுவன் 38 பிரச்சினைகளைக் கோடிட்டான். அவனது பிரச்சினைகள் பெரும்பாலும் பணம், வாழ்க்கைநிலைகள், தொழில் ஆகிய பகுதிகளில் இருந்தன. இப்பகுதிகளுக்குள் குறிக்கப்பட்ட பிரச்சினைகளாவன:

சொந்தமாகப் பணம் சம்பாதிக்க வேண்டுமென்ற ஆவல்
பெற்றோரிடம் பணம் கேட்கவேண்டிய நிலை
குடும்பத்தில் கார் இல்லாத நிலை
விடுமுறைக் காலங்களில் தொழில் செய்யவேண்டிய தேவை
நண்பர்கள் வைத்திருப்பதைக் காட்டிலும் குறைவான பணமே வைத்திருத்தல்
செலவிடும் ஒவ்வொரு காசுபற்றியும் கவனமாயிருக்கவேண்டிய நிலை
பள்ளி மதிய உணவுக்குத் தேவையான பணம் இல்லாமை
உயர்நிலைப் பள்ளிக்குமேல் கல்விபெறப் பணம் சேகரித்தல்
வேலைக்குப் போவதற்காகப் பள்ளியிலிருந்து நின்றுவிட வேண்டிய நிலை
இப்பொழுது ஓய்வுநேரத் தொழில் பார்க்கவேண்டிய தேவை
நல்ல ஆடைகள் குறைவாக இருத்தல்

**சொந்த, சமூகப் பிரச்சினைகள்**

பல்வேறு ஆய்வுகளிலிருந்து பெற்ற முடிவுகள், ஒரு மாதிரி உயர் நிலைப் பள்ளியில் உள்ள மாணவர்களில் பத்து சதவிதத்தினர் மிகவும் உச்சநிலையில் உள்ள சொந்தத் தொல்லைகளைக் கொண்டுள்ளார்கள் எனக் கூறுகின்றன. இது ஒப்பீட்டடிப்படையில் சிறிய சதவீதத்தினையே குறிக்கின்றது என்றாலும், இளையோர்களது வழிகாட்டலில் அக்கறை கொண்டுள்ளோருக்கு இது ஒரு பிரச்சினையாகவும் சவாலாகவும்

**அட்டவணை 10—3**

இளையோர்களால் குறிக்கப்பட்ட முக்கியமான ஆரோக்கியப் பிரச்சினைகள் (ரெம்மெர்ஸனும் ஷிம்பெர்க்கும் குறித்தவை)

| பிரச்சினை | சதவீதம் |
|---|---|
| எடை குறைவது அல்லது கூடுவதுபற்றிக் கவலை ... | 52 |
| நன்மை பயக்கும் உணவுகளைத் தேர்ந்தெடுக்கக் கற்றுக் கொள்ள ஆவல் ... ... ... ... | 25 |
| தோற்றத்தை (சிறுமியர்) அழகாக்கிக்கொள்ளவும், உடலமைப்பினையும் உடற்கட்டையும் (சிறுவர்கள்) சிறந்தவையாக்கிக்கொள்ளவும் விரும்புதல் ... ... | 50 |
| தோலைப்பற்றிய அக்கறை ... ... ... | 33 |
| பற்களைப்பற்றிய கவனம் ... ... ... | 16 |
| அடிக்கடி தலைவலி உண்டாதல் ... ... ... | 12 |
| அடிக்கடி சளிபிடித்தல் ... ... ... | 12 |

உள்ளது. SRA இளைஞர் மதிப்பீட்டில் உள்ள பதின்வயதினர் குறித்த சில சொந்தப் பிரச்சினைகளாவன:[a]

35 சதவிதத்தினர் தாங்கள் 'சிறு காரியங்களுக்காக'க் கவலை கொள்வதாகக் கூறினர்.

35 சதவீதத்தினர் பகற்கனவு காண்பதைத் தவிர்க்க முடியாது எனக் கூறினர்.

29 சதவீதத்தினர் தாங்கள் எப்பொழுதும் எதையாவது அடைவதில் விருப்பங் கொள்வதாய் அறிவித்தனர்.

[a] The materials here quoted from the survey are taken from the Examiner Manual for the SRA Youth Inventory, Form A, 1949, p. 3.

27 சதவீதத்தினர் தாங்கள் நடுக்கம் கொள்வதாய் அறிவித்தனர்.

26 சதவீதத்தினர் தாங்கள் செய்த காரியங்களுக்காகக் குற்றவுணர்வுடன் இருப்பதாய்க் கூறிலர்.

25 சதவீதத்தினர் சமூகச் செயல்களில் சாதாரணமாக இயங்கமுடியவில்லை எனக் கூறினர்.

24 சதவீத மாணவர்கள், 'நான் எனது சொந்தப் பிரச்சினைகளை யாருடனுவது விவாதிக்க விரும்புகிறேன்' என்று அறிவித்தனர்.

இளையோர்களைப்பற்றிக் கவனிப்போர் அடிக்கடி சந்திக்கின்றதொரு பிரச்சினை என்னவெனில், சமூகத்தில் தவருன பொருத்தப்பாடுகளைக் கொண்டுள்ள இளையோர்கள் நண்பர்கள் இல்லாது இருக்கின்ற நிலையினைக் காணலாம். 20 உயர்நிலைப் பள்ளிகளிலுள்ள சிறுவர்களுக்குத் தரப்பட்ட கேள்வி நிரலின் முடிவுகள் மாணவர்களில் குறைந்தது 30 சதவீதத்தினர் நண்பர்களை உண்டாக்குவதற்கும், மற்றவர்களுடன் பழகுவதற்கும் தொல்லைகளைச் சில சமயங்களிலாவது அனுபவிப்பதாகக் குறிப்பிட்டனர். 7 சதவீதத்தினரது நிலையில் இப்பொருத்தப்பாடு மிகவும் உச்சநிலைத் தன்மையைக் கொண்டிருந்தது.[10] பல மாணவர்கள் தங்களது பகற்கனவுகளில் செல்வத்தையோ புகழையோ விரும்புவதைக்காட்டிலும் தங்களிடம் அன்பாக யாராவது இருக்கவேண்டும் என்றுதான் விரும்பிஞர்கள். SRA இளைஞர் ஆய்வு மதிப்பீட்டில் குறிப்பிட்ட மிக முக்கியமான அவசரப் பிரச்சினைகள் என்று குறிப்பிடப்பட்டவை கீழ்க்கண்டவையாம்.

54 சதவீதத்தினர் தங்களை மற்றவர்கள் அதிகமாக விரும்ப வேண்டும் என்றனர்.

50 சதவீதத்தினர் புது நண்பர்களை உண்டாக்கிக்கொள்ள விரும்பினர்.

42 சதவீதத்தினர் தாங்கள் இன்னும் புகழுடன் இருக்கவேண்டும் என்று விரும்பினர்.

அட்டவணை 10—4-ல் மூனி (Mooney) என்பவர் பல உயர்நிலைப் பள்ளி மாணவர்களிடம் கண்ட பிரச்சினைகள் தரப்பட்டுள்ளன. இக் குறிப்புகளிலிருந்து உயர்நிலைப் பள்ளி மாணவர்கள் தங்களுடைய எதிர்காலம்பற்றிக் கவலைகொள்கின்றனர் என்று அறிகின்ருேம். குறிப்பாகச் சீனியர் உயர்நிலைப் பள்ளிச் சிறுவர் சிறுமியர் இதில் கவலை கொள்கின்றனர் என்றும் அறிகின்ருேம்.

[10] U. H. Fleege, 'Self-Revelation of the Adolescent Boy.' Milwaukee: Bruce Publishing Co., 1944, p. 172.

## அட்டவணை 10—4

உயர்நிலைப் பள்ளி மாணவர்களில் பத்து சதவீதம் அல்லது அதற்கு அதிகமானவர்கள் சொந்த, சமூக, மற்றப் பகுதிகளில் குறித்த இனங்கள் (மூனி தந்தது)

| பிரச்சினைகள் | குறித்த எண்ணிக்கை |
|---|---|
| ***சொந்த உளவியல் தொடர்புகள்*** | |
| பொருள்களை மறத்தல் ... ... ... | 176 |
| சிலவற்றை அதிகக் கவனத்துடன் எடுத்துக் கொள்ளாமை ... ... ... | 174 |
| என்னுடைய மனத்திட்பச் சமநிலையை இழக்கின்றேன் | 143 |
| தவறு செய்வோமோவெனும் அச்சம் ... ... | 132 |
| சிலவற்றை மிகவும் முக்கியமாக எடுத்துக்கொள்கிறேன் ... ... ... ... | 131 |
| நடுக்கம் கொள்கிறேன் ... ... ... | 104 |
| கவலையுறுகிறேன் ... ... ... | 85 |
| சில சமயங்களில் நான் பிறந்திருக்கவே கூடாது என எண்ணுகின்றேன் ... ... ... | 83 |
| சிலவற்றைப்பற்றி என்னால் ஒரு முடிவும் செய்ய முடிவதில்லை... ... ... ... | 79 |
| பகற்கனவு காண்கிறேன் ... ... ... | 73 |
| ***சமூகப் பொழுதுபோக்குச் செயல்கள்*** | |
| இரவில் அடிக்கடி வெளியே போவதைத் தடுக்கின்றனர் ... ... ... ... | 139 |
| துணிகளையும் மற்ற உடைமைகளையும்பற்றி அக்கறை கொள்ளவேண்டும் ... ... ... | 107 |
| நடனம் ஆடக் கற்றுக்கொள்ள ஆவல் ... ... | 87 |
| எப்படி மற்றவர்களை வரவேற்று உபசரிப்பது என்று கற்றுக்கொள்ள ஆவல் ... ... ... | 80 |
| மிகச் சிறிதளவேயுள்ள சமூக வாழ்க்கை ... | 68 |
| திரைப்படங்களுக்குப் போக மிகக் குறைந்த அளவு வாய்ப்புகள் ... ... ... ... | 65 |
| நான் செய்ய விரும்பியதைச் செய்யக் குறைந்த அளவே வாய்ப்புகள் ... ... ... | 65 |
| பள்ளிச் செயல்களில் மிகக் குறைந்த அளவில்தான் ஈடுபாடு ... ... ... ... | 64 |

| பிரச்சினைகள் | குறித்த எண்ணிக்கை |
| --- | --- |
| ***காதல், பால், திருமணம்*** | |
| நான் எப்பொழுதாவது தகுதியான துணையைக் காண்பேனா என்னும் ஐயம் ... ... | 104 |
| நான் எப்பொழுதாவது திருமணம் செய்துகொள் வேனா என்னும் ஐயம் ... ... ... | 72 |
| நாளிடல்கள் கொள்ள அனுமதியில்லை ... ... | 70 |
| தோழி ... ... ... ... | 69 |
| நான் காதல் கொண்டுள்ளேனா என்று தீர்மானிப்பது | 68 |
| ***சமூக-உளவியல் தொடர்புகள்*** | |
| மேலும் இசைவான ஆளுமையை விரும்புதல் ... | 113 |
| சிலரால் வெறுக்கப்படுவது ... ... | 87 |
| சிலரை வெறுப்பது ... ... ... | 84 |
| உணர்வுகள் மிக எளிதாகப் புண்படுத்தப்படுதல் ... | 80 |
| தலைமைக்குரிய திறனின்மை ... ... | 61 |
| ***ஒழுக்கங்களும் சமயமும்*** | |
| நான் செய்த சில தவறுகளை மறக்க முடியவில்லை ... | 148 |
| இறந்தபின் என்ன ஆகின்றனர் என்பதுபற்றிய வியப்பு | 103 |
| நான் செய்யாததற்காகத் தண்டனை பெறுதல் ... | 96 |
| ஒரு கெட்ட பழக்கத்தை நிறுத்த முயற்சி செய்தல் ... | 84 |
| ***எதிர்காலம்: தொழிலும் கல்வியும்*** | |
| இன்றிலிருந்து பத்து ஆண்டுக் காலத்தில் என்னவா யிருப்பேன் என்று ஆச்சரியமுறுதல் ... ... | 312 |
| நான் வாழ்க்கையில் வெற்றி பெறுவேனா என்று ஆச் சரியமுறுதல் ... ... ... | 192 |
| கல்லூரிக்குப் போவதா, வேண்டாமா எனத் தீர்மா னித்தல் ... ... ... ... | 140 |
| உயர்நிலைப் பள்ளிக்குப் பின்னர் என்ன செய்வது என் பதில் புத்திமதி பெற ஆவல் ... ... | 138 |
| கல்லூரிக்கு ஆயத்தம்செய்ய நல்ல பாடங்களைத் தேர்ந்தெடுத்தல் ... ... ... | 114 |
| எனக்கு என்ன வேண்டும் என்றே அறியாத நிலை ... | 108 |
| தொழில்களைப்பற்றிய செய்திகளை அறியவேண்டிய தேவை ... ... ... ... | 76 |
| என்னுடைய தொழில் திறமைகளை அறியத் தேவை ... | 66 |
| ஒரு வேலைக்குத் தயாராகச் சிறந்த பாடங்களைத்தேர்ந் தெடுத்தல் ... ... ... ... | 66 |
| எதிர்காலத்தில் முன்னேற ஒரு திட்டத்தினை அமைத் துக் கொள்ளல் ... ... ... | 62 |

## மாற்றுப் பால் உணர்வு

இளையோர் பருவத் துவக்கத்தில் சிறுவன் சிறுமி உறவுகளின் தொடர்புகளில் பல பிரச்சினைகள் தோன்றுகின்றன. அடுத்த அதிகாரத்தில் அவைகளைப்பற்றி விரிவாக விவாதிக்கப்படுகிறது. இளையோர் பருவத் துவக்க காலத்தில் தொந்தரைசெய்து விளையாடல், நாணமடைதல், ஒரு சிறுமியை நாளிடக் கேட்க ஆவல் அல்லது பெற்றோர்கள் தனியன் அதிகமாக நாளிடுதலை விரும்பாமை ஆகிய பிரச்சினைகள் தோன்றுகின்றன. 'எப்படி நாளிடுவது,' 'எப்பொழுது நான் காதல் கொண்டுள்ளேன் என்று உணர்வது' போன்ற பிரச்சினைகளை 9, 10ஆம் படிவ மாணவர்கள் கனெக்டிகட் ஆய்வில் பெரும்பான்மையாகக் குறித்தனர்.[11] 9ஆம் படிவத்திலுள்ள 14 வயது சிறுவன் கீழ்க்கண்டவாறு கூறினன் :

'சிறுமியர் எனக்கு ஒரு பிரச்சினையாய் இருக்கின்றனர். நான் ஒரு பெண்ணை விரும்புகிறேன். ஆனல், அவள் என்னை விரும்புகிருளா இல்லையா' என்பதும், இன்னொரு சிறுவனை அல்லது என் நண்பனை விரும்புகிருளா என்பதும் எனக்குத் தெரியவில்லை.

நான் இந்தச் சிறுமியிடம் நாளிட விரும்புகின்றேன். ஆனல், என் தாயார் அதை அனுமதிக்கவில்லை.'

இளையோர் பருவத்தின் பிற்பகுதியில் 'தொடர்ந்து நாளிடல்', 'எனக்கு எப்பொழுதாவது திருமணம் ஆகுமோ என்று ஆச்சரியப்படுதல்', 'போதிய அளவு நாளிடல்கள் இல்லை' ஆகிய பிரச்சினைகள் பரவலாக இருக்கின்றன. இந்நூலாசிரியர், கல்லூரி மாணவிகளிடம் 'எனக்கு எப்பொழுதுதாவது திருமணம் ஆகுமோ என்று ஆச்சரியப்படுகின்றேன்' என்ற பிரச்சினை மூனியின் (Mooney) பிரச்சினைகள் பட்டியலில் உள்ள எந்தப் பிரச்சினையைக்காட்டிலும் அதிகமாகக் குறிக்கப்படுவதைக் கண்டார். இக்கருத்து மூனியால் ஆஷ்வில்லியில் (Asheville) உள்ள சீனியர் உயர்நிலைப் பள்ளி மாணவர்களிடம் பெற்ற முடிவுகளுக்கு ஒத்து இருக்கின்றது. SRA இளைஞர் ஆய்வு மதிப்பீடு, பதின்வயதினரிடம் உள்ள பிரச்சினைகளையும் குழப்பங்களையும் குறிப்பிட்டது. இப்பிரச்சினைகளில் பல சிறுவன்-சிறுமி உறவுகளினல் ஏற்படுவனவாக இருந்தன. இளைஞர்களால் தரப்பட்ட நாளிடும் பிரச்சினைகளில் சில இங்குத் தரப்பட்டுள்ளன.[12]

இளைஞர்கள் பெரியவர்களாக ஆகும்பொழுது, இப்பிரச்சினைகள் அதன் முக்கியத்துவத்தினின்று குறைகின்றன. ஆனல்,

[11] *ஆசிரியரிடம் உள்ள வெளியிடப்படாத ஆய்விலிருந்து எடுக்கப்பட்டது.*

[12] **Examiner Manual for the SRA Youth Inventory Form A, 1949, p. 4.**

சிறுவர்கள்

48 சதவீதம் நாளிடல்கள் எப்பொழுதாவது இருக்கிறது.

41 ,, தோழி இல்லை.

34 ,, சிறுமியர்களை நாளிடக் கூச்சம் கொள்கின்றனர்.

26 ,, எப்படி நாளிடுவது என்பது தெரியவில்லை.

25 ,, தங்களிடம் சிறுமியர்களை எவ்வாறு அக்கறை கொள்ளச் செய்வது என்பது தெரியவில்லை.

23 ,, பெண்களுடன் வெளி இடங்களுக்குச் செல்லுதல் தவரு என ஆச்சரியப்படுதல்.

சிறுமியர்கள்

39 ,, எப்பொழுதாவது நாளிடல் இருந்தது.

30 ,, தோழன் இல்லை.

23 ,, சிறுவர்களிடம் தாங்கள் புகழ்பெற்றவர்களாய் இல்லை என்று வருந்துபவர்கள்.

33 ,, தங்களிடம் சிறுவர்களை அக்கறை கொள்ளுமாறு செய்வது எப்படி என்பது தெரியவில்லை.

36 ,, ஒரு நாளிடலை எப்படிப் பண்புடன் மறுப்பது என்று அறிய விரும்பினுர்கள்.

29 ,, பழகாத ஒருவரிடம் நாளிடல்களை ஏற்றுக்கொள்வது முறையா என்று ஆச்சரியமுற்றனர்.

22 ,, கெட்ட மனவுணர்வுகள் தோன்ருதவாறு எப்படி ஓர் உறவினை முறித்துக்கொள்வது என்று அறிந்து கொள்ள முடியவில்லை.

20 ,, முதல் தடவை நாளிடலில் ஒன்ருக வெளியே செல்லும்பொழுது முத்தமிடல் சரியா என்று ஆச்சரியப்பட்டனர்.

நாளிடல், காதல், திருமணம் ஆகிய பிரச்சினைகள் அதிக முக்கியத்துவம் பெறுகின்றன. ஆய்வு செய்ததில், நான்கில் ஒரு பங்கினர் இவ்வளவு அதிகமாகத் திருமணத் தொல்லைகளை உண்டாக்கும் காரணங்களை அறிய விரும்பினர். தங்களுக்கு எதிர்காலத்தில் திருமணமாக இருக்கின்றது என்பதனை உணர்ந்த மற்ருெரு நான்கில் ஒரு பகுதியினர் துணையைத் தேர்ந்தெடுப்பது எவ்வாறு என்பதை அறிய விரும்பினர். திருமணத்திற்கும், குடும்ப வாழ்விற்கும் எப்படித் தம்மைத் தயார்செய்துகொள்வது என்றும் அறிய விரும்பினர்.

## வாழ்க்கை மெய்யுணர்வு

இளையோர் பருவத்துடன் ஏற்படும் வளர்ச்சி அகன்ற சமூகத் தொடர்புகளுடனும், அதிகமான அறிவுத் திறமையுடனும், அறிந்து கொள்வதுடனும், மாறிய உடலியல் தன்மையுடனும் தொடர்பு கொண்டிருக்கிறது. இவ்வாறு ஒழுக்கங்கள், சமய - சமூகப் பிரச்சினைகள், பொருளாதாரப் பிரச்சினைகள், எதிர்காலம் ஆகியவை களை, முன்பு கருதிய வகையினின்று மாறுபட்ட நிலையில் எண்ண வேண்டிய அவசியம் ஏற்படுகின்றது. தனியனது மனப்பான்மைகளும் நடத்தைகளும் அவனது உணர்வுத் தூண்டுதல்களைவிடக் குறிக் கோள்களால் கட்டுப்படுத்தப்படுகின்ற அளவு, அவன் முதிர்ச்சியை அளவிட நல்ல அடிப்படையாக அமைகின்றன. வரவிருக்கின்ற 11, 18ஆம் அதிகாரங்களில் இசைவான வாழ்க்கை மெய்யுணர்வைப் பெற வேண்டிய அவசியம் வலியுறுத்தப்படுகின்றது. இவ்வாறு அடைதல் மற்றத் துறைகளின் வளர்ச்சியியல்புகளைப்போலவே வளர்ச்சியடை யும் முறைகளைப் பின்பற்றியமைகின்றது என்பதை இங்குக் குறிப்பிட வேண்டும். இளையோர் பருவத்தில் ஏற்படுகின்ற இப்பகுதியினைச் சார்ந்த பிரச்சினைகளுக்கு ஒரு திருப்திகரமான தீர்வினைத் துவக்கக் குழந்தைப் பருவத்திலிருந்தே தொடங்கவேண்டும்.

## இளையோர் மனமுறிவுகளின் ஏதுக்கள்

தனியன் முதிர்ச்சி அடையும்பொழுதும், அவனது தேவை களும் ஆசைகளும் அதிகமாகும்பொழுதும், மனமுறிவுக்குரிய வாய்ப்புகள் அதிகமாகிக்கொண்டே போகின்றன. இளையோர் களது வளர்ச்சிக்குரிய முக்கியப்பணிகள் அதிகாரம் 1-ல் கொடுக்கப் பட்டுள்ளன. இவ்வளர்ச்சிக்குரிய பணிகளின் தொடர்பில் இளையோர் களிடம் பல்வேறு பொருத்தப்பாட்டுப் பிரச்சினைகளும் சிக்கல்களும் தோன்றுகின்றன. லேகாக் (Laycock) என்பவர் எல்லாக் குழந்தை களும் தங்களது தேவைகளை வெளிப்படுத்துவதற்குக் கீழ்க் கண்ட மனிதச் செயற்பாடுகளில் ஏதாகிலும் ஒன்றில் ஈடுபாடு கொள்ளவேண்டும் என்று கூறினார்: (1) உறவுகள், (2) வேலை, (3) பொழுதுபோக்கு, (4) சமுதாய சேவை, (5) தவறான நடத்தை அல்லது குற்ற நடத்தை, (6) நரம்புப் பிணி, பண்புக் கூறுகளும் நோய்வாய்ப்படலும்.[13] ஒருவனுடைய தேவைகளை அடைவதற்கு எந்த ஒரு நிலையாவது தடையாய் இருக்குமாயின், அது மனமுறிவிற்கு ஓர் ஏதுவாக அமைகின்றது. இளையோர்களது

[13] S. R. Laycock, 'Towards Mental Health for Exceptional Children,' Journal of Exceptional Children, 1950, Vol. 16, pp. 136-138, 151,

மனமுறிவுகளுக்கு முக்கியக் காரணங்களாகச் செயலுறுகின்ற ஏதுக்கள் இவ்வதிகாரத்தின் கடைசியில் அதிகமான விவரங்களுடன் விரிவாக விளக்கப்பெறும்,

டியூட்ஸ்சே (Deutsche) இளையோர் பருவத்தில் உயிரியல் வளர்ச்சியின் முக்கியத்துவத்தை வலியுறுத்தியுள்ளார்.[14] இதனுடன் சேர்ந்துவருகின்ற உளவியல் குணமான சுதந்திரமடைய விரும்புகின்ற உணர்வு அதிகமாக உந்தப்படுவதன் முக்கியத்துவத்தையும் உணர்த்தினர். முதிர்ச்சியடையும் குழந்தை, தனது பெற்றோர்கள் ஆபத்தினின்று தன்னைக் காப்பாற்றுவார்கள் என்றும், தனது உடல் தேவைகளுக்கு வேண்டியவைகளை அளிப்பார்கள் என்றும் எதிர்பார்க்கிறான். இது அவன் பிறந்த நாளிலிருந்து உண்மையாகவே நடந்து வருகிறது. இளையோன் தனது உடலியல் அமைப்பின் காரணமாகத் தோன்றியுள்ள அல்லது செறிவாக உள்ள உந்துகளையும் ஆவல்களையும் பயன்படுத்தவேண்டிய அவசியத்தையும் உணர்கின்றான். அவன், மேலும் தனது நிறுவன சக்திகளால் ஆதரிக்கப்படுகின்றான். அவனது நிறுவன சக்திகள் இவ்வுந்துகளைச் சமூக இயல்பு வகையில் வெளிப்படுத்துவதற்கு வாய்ப்புகள் அளிக்கின்றன.

இவ்வாறான ஆவல்களைத் தூண்டுவன இளையோனைத் தனது பெற்றோர்களது காப்புக்குப் புறத்தேயுள்ள உலகிற்குக் கொண்டு செல்கின்றன. இப்பொழுது அவன் பெற்றோர்களின் இடைவிடா வழிகாட்டலின்றித் தானகவே இயங்குகிறான். இதைப்பற்றி ஜோசலியன் (Josselyn) கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார் :

'சுதந்திரமாக இருக்கவேண்டும் என்னும் தனது 'உந்து' வினால், இளையோன் புது நிலைகளுக்கும், மாறுபட்ட நிலைகளுக்குந் தன்னைக் காட்டிக்கொள்கின்றான். அவனது ஒத்தமைகின்ற தன்மைகளுக்கு அப்பாற்பட்டவையாக அவை அமைகின்றன. ஆனால், அதே சமயத்தில் அவன் இயல்பாக ஏற்றுக்கொள்ளக்கூடிய பெற்றோர் உதவியினைச் சாதாரண அனுபவத்தைச் சந்திக்கும்பொழுதும் ஒதுக்கி வைக்கிறான். இதன் காரணமாக, அவன் தோல்வி வரும் என்னும் அச்சத்திற்கு உள்ளாகித் தன்னம்பிக்கையை இழக்கிறான்''[15]

## பண்பாட்டுத் தேவைகள் (Cultural demands)

அமெரிக்கப் பண்பாடு, இளையோர்களிடம் சிக்கலானவையும், தொல்லை தரத்தக்க ஏதுவாகவும் உள்ள சமூகத் தேவைகளை

[14] H. Deutsche, 'The Psychology of women,' Vol. 1. New York: Grune and Stratton, 1944.

[15] I. Josselyn, 'The Ego in Adolescence,' American Journal of Orthopsychiatry, 1954, Vol. 24, p 228.

எதிர்பார்க்கிறது என்று அதிகாரம் 1-ல் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனைப் பால்பற்றி எதிர்பார்க்கப்படும் விதிமுறைகளில் காணலாம். இவ்விதிமுறைகள் வெவ்வேறு பாலருக்கு வெவ்வேறு வகைகளில் உள்ளன. ஆனால், பல தலைமுறைகளுக்கு முன்னால் அனுசரிக்கப்பட்டு வந்த அளவில், இன்று இரண்டு பாலருக்கும் இரண்டு தர அளவு அனுசரிக்கப்படுவதில்லை. சமூக விதிமுறை, சிறுமி ஒரு பெண்தன்மை வாய்ந்த பால்பங்கினைக் கொள்ளவேண்டும் என்று எதிர்பார்க்கின்றது. அதே சமயத்தில் அவள் அவ்வாறு பால்பங்கினைக் கொள்வதைச் சில சமயங்களில் கடினமாக்குகின்ற வகையில் சில தடைகளையும் விதிக்கின்றது. இது இளையோர் சிறுமிக்குப் பால்பங்கினை உள்ளத்தில் ஏற்றுக்கொள்வதில் மனமுறிவு ஏற்படக் கூடியதாகவும் சிக்கலுடன் கூடியதாகவும், அமைகின்றது.

நமது பண்பாடு இளையோர் சிறுவர்களுக்குத் தங்களது மனவெழுச்சிகளைச் சிறுமியர்களைக்காட்டிலும் அதிக அளவில் வெளிப்படுத்துவதற்கு வாய்ப்பினை அளிக்கின்றது.[16] ஆனால், சிறுமியர்கள் அழுகை எனும் இயல்பில் மட்டும்தான் விதிவிலக்காய் இருக்கின்றனர். இளையோர் சிறுவன் அழுகையைக் கைக்கொள்வானேயானால், அது ஒரு குறைபாட்டுக்குரிய அறிகுறி என்றுதான் கருதப்படுகின்றது. குழுக்குறி, சிறுமியர்கள் அதிக அளவு விதிமுறைகளுடன் ஒன்றியிருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறது. பெற்றோர்கள் 'துடுக்கான' 11 வயது சிறுவனைப் பையனுக்குரிய இயல்புடையவன் என்று கருதுகின்றனர். ஆனால், 'துடுக்கான' 11 வயது சிறுமியைக் கெட்டுப்போன குழந்தை என்றே கருதுகின்றார்கள். இதன் விளைவாகச் சிறுமியர், வளர்ச்சிப் பிரச்சினைகளைச் சிந்தனையுடனும் எச்சரிக்கையுடனும் அணுகுகின்றனர். அவர்கள் பெருமளவு சூழ்வினைத் திறத்தில் நம்பிக்கை வைக்கின்றனர்.

## இல்லத்தின் விளைவுகள்

போடர் (Boder), பீச் (Beach) ஆகியோர், வரிசையாக கட்டப்பட்டுள்ள வாடகை இல்லங்களில் வாழ்கின்ற குழந்தைகளின் சமூகப் பொருத்தப்பாடுகள் குறித்து ஆய்வு நடத்தினார்கள்.[17] அவர்களது ஆய்வின் நோக்கம் என்னவெனில், ஒரு குறிப்பிட்ட தெருவில் வாழ்கின்ற குழந்தைகள் எந்த அளவு மாறுபட்ட பொருத்தப்பாடுகளைக்

[16] A. Schoeppe, ' Sex Differences in Adolescent Socialization ', Journal of Social Psychology, 1953, Vol. 38, pp. 175-185.

[17] D. B. Boder and E. V. Beach, 'Wants of Adolescents: I. A Preliminary Study,' Journal of Psychology, 1937, Vol. 3, pp. 505-511,

கற்கின்றன என்பதை அறிவதேயாகும். அவர்களிடையே மாறுபாடுகள் ஏற்படுவதற்குக் காரணமாயிருந்த ஏதுக்களை அறிவதும் நோக்கமாகும். ஓரளவு ஒரே தன்மையுடைய வாழும் நிலைகளைக் கொண்டிருக்கும் ஒரு சிறு தெருவினைத் தேர்ந்தெடுப்பதால், சில இசைவில்லாச் சமூகப் பொருளாதார ஏதுக்களை மாறுத்தன்மையுடையனவாகக் கொள்கின்றோம். ஆய்வில் அப்பகுதியில் வாழும் எல்லாக் குழந்தைகளையும் எடுத்துக்கொள்வதால், சில ஏதுக்களுக்குக் காரண முக்கியத்துவம் தருகின்ற சில தொல்லைகளைத் தவிர்க்கலாம். ஒரே தெருவில் வாழ்கின்ற குழந்தைகள் வெளிப்படுத்துகின்ற சமூகப் பொருத்தப்பாடுகளிலுள்ள மாறுபாடுகளுக்குரிய காரணங்கள் என்று சில ஏதுக்களை இவ்வாய்வின் சிறந்த முடிவுகளாக நாம் பெறுகின்றோம். குழந்தைகளிடத்துப் பெற்றோர் கொள்ளும் மனப்பான்மையில் அதிகச் செல்வாக்கை இவ்வேதுக்கள்தாம் பெற்றிருக்கின்றன. மேலும், இவ்வேதுக்கள் நல்ல பெற்றோர் மனப்பான்மைகளுக்கும், குழந்தைகளின் நல்ல சமூகப் பொருத்தப்பாடுகளுக்கும் இடையே உள்ள தொடர்பிற்கான காரணங்களைக் கூறுகின்றன. பெற்றோர் கொள்ளும் மனப்பான்மைகளில் தவறான பொருத்தப்பாடுகள் தோன்றுவதால், குழந்தைகளிடத்துத் தனிப்பட்ட எதிர்வினை வகைகளைத் தோற்றுவிக்கின்றன. நாணமுடனும், பின்வாங்குகின்ற தன்மையுடனும் அல்லது பொதுவாகச் சமூகத் தொடர்புகளில் போதிய அளவு வளர்ச்சியுறும் தன்மையுடனும் உள்ள குழந்தைகள் வாழ்கின்ற குடும்பங்களில் பெரும்பாலும் எந்த ஒரு வகையிலாவது அக்குடும்ப அமைப்பின் முழுமையான கட்டுப்பாடு தாயார்களிடத்து இருக்கும். இத்தாயார்கள் ஆதிக்கத்தினை உளப்பிணியினாலோ, அல்லது நரம்புப் பிணியினாலோ அல்லது இயற்கையாக உள்ள திறனாலோ அல்லது குடும்பத்திற்குப் பொருளாதார உதவியை அளிப்பதனாலோ பெறலாம். இவர்கள் பெரும்பாலும் குழந்தைகளை அதிகமாகப் பாதுகாக்கின்றனர். இவ்வதிகப் பாதுகாப்பு, அதிகப்படியான பரிவு அளிப்பதனாலோ அல்லது அவர்களது செயல்களில் அதிகமான கட்டுப்பாடுகளை ஏற்படுத்துவதனாலோ உண்டாகலாம். தந்தையர்கள் கவலையற்ற வாழ்க்கை உடையவர்களாகவும், அமைதியானவர்களாகவும், எதையும் ஏற்றுக்கொள்பவர்களாகவும் அல்லது இல்லத்தில் உடன் வசிப்பவர்களாகவும் இருப்பார்கள். ஆனால், இதற்கு மாறாகத் தாயாரின் அக்கறையின்மையினால் மேற்பார்வை செய்யப்படாத, கவனிக்கப்படாத குழந்தைகள் அல்லது தந்தையினுடைய கொடூரமான கோபத்திற்கு ஆளாகின்ற குழந்தைகள், சண்டையிடுகின்ற முனைப்புமிக்க அவர்களது இல்லச் சூழ்நிலைகளினின்று தப்பிச் சுற்றுப்புறத்தில் குறும்பு செய்கின்றவர்களாக ஆகின்றார்கள்.

குழந்தைகளின் பெரும்பங்கினர் வாய்ப்புக் குறைவான இல்லச் சூழ்நிலைகளில் இருந்துவருகின்றனர். கீழான வாழ்க்கைநிலைத் தரங்க

ளுடன் கூடிய இல்ல நிலைகளில் வாழ்கின்றனர். அவ்வாறான நிலைகள் இசைவான வளர்ச்சிக்கும் கல்விக்கும் ஏற்றதொரு சூழ்நிலையன்று என்பதைக் கல்வியில் பின்தங்கியோர், பள்ளியிலிருந்து நின்றவர்கள், ஊர்சுற்றும் மாணவர்கள், குற்ற நடத்தை யுடையோர் ஆகியோரிட மிருந்து அறியலாம். கல்வித் தொல்லைகளையுடைய குழந்தைகள் பற்றிய தனியாள் வரலாறுகள் இவ்வாறான தொல்லைகளுக்கு இல்ல நிலைகள் முக்கிய ஏதுக்களாகும் என்று குறிப்பிடுகின்றன. இல்லத் திலும் பொழுதுபோக்குச் சங்கங்களிலும் அல்லது ஏதாவது சில சமுதாயச் செயல்களிலும் வளர்க்கப்படுகின்ற பற்றார்வங்கள், அடை வுக்கு அப்பாற்பட்டவையாகவோ, நிறைவேற்ற இயலாதவையாகவோ இருக்கின்றபோது, மனமுறிவுகள் அதிகமாகின்றன. பெரும்பாலும் உயர்ந்த கீழான வகுப்புக் குழந்தை, தனது குறிக்கோள்களை கல்வித் தொடர்பில்தான் கொள்கின்றது. இவை எதிர்காலத்தைப்பற்றிக் கொள்கின்ற குறிக்கோள்களும் பெரும்பாலும் அடைவதற்கு நடை முறையில் சாத்தியமில்லாத வகையில் இருக்கின்றன. சில சமயங் களில் நடுத்தர வகுப்பினின்று வருகின்ற சிறுவன் அல்லது சிறுமி சராசரித் திறனையே கொண்டிருக்கலாம். ஆனால், அவர்களது குடும்பத்தார் அல்லது நண்பர்கள் எதிர்பார்ப்பதன் காரணமாக அவர் களது மூத்த சகோதரன் அல்லது சகோதரி அடைந்த நிலைக்குச் சமமான நிலையினை அடையவேண்டும் என்றதொரு பற்றார்வத்தை அவர்கள் வளர்த்துக்கொள்வார்கள். ஒருவரது அவாக்களை அடை கின்ற வகையில் குறுக்கிடுகின்ற எந்தத் தொல்லையும் தவறான பொருத்தப் பாடுகளை அவரது சொந்த ஆளுமையில் ஏற்படுத்துகின்ற முக்கிய ஏதுவாகின்றது.

இளையோர்களிடத்து மனமுறிவு ஏற்படுவதற்கு மற்றோர் ஏது, இல்லத்தினின்றும் குடும்ப உறவுகளினின்றும் மனவெழுச்சிச் சுதந் திரம் பெற முயல்வதாகும். இப்பிரச்சினை சிறுவர், சிறுமியர் வளர் கின்றனர் என்ற உண்மையை உணரத் தவறுகின்ற பெற்றோர்களால் மேலும் கடினமாக்கப்படுகின்றது. மோஹர் (Mohr) என்பவரால் விவரிக்கப்பட்ட 13 வயது சிறுவனின் வரலாற்றில் பெற்றோர் ஆதிக் கத்தின் விளைவுகளை உற்று நோக்கலாம்:

“13 வயது சிறுவன் ஒருவனது பெற்றோர்கள், அவன் பொறுப் பில்லாமல் இருக்கிறான் என்று முறையிட்டனர். அவன் வாதிடும் தன்மையுடையவனாய் இருந்தான். பெற்றோர் கூறுவது எதையும் அப்படியே ஏற்றுக்கொள்ளமாட்டான். அவனது இளைய சகோதர னிடமும், அவனது நண்பர்களிடமும் எப்பொழுதும் வாதிட்டுக் கொண்டே இருப்பான். அவனது நண்பர்கள் அவன் என்ன செய்ய விரும்புகின்றானோ அதனைச் செய்யாவிடில், பொறுமை யிழப்பான். அவனது பள்ளி வேலையில் அவன் மிகவும் மோசமாய் இருந்தான்,

அவன் படிப்பில் கவனம் செலுத்தாது 'சுற்றிக்கொண்டு' இருந்தான். அவன் ஒல்லியாக இருந்தான்; அதனால் விளையாட்டுகளிலும் மோசமாக இருந்தான். அவன் ஆண்மையற்றுச் சிணுங்கி அழுவான். அவன் சிறுபிள்ளைத்தனமாகவும் நடந்துகொண்டான். அதுவும் குறிப்பாக அவனது தாயாரை யாராவது வந்து காண்போர் இருப்பாரானால், அவனைக் குறித்துத் தாயார் அவமானப்படும்படி நடந்துகொள்வான். ஆதலின், அவன் அவ்வமயங்களில் அவனது அறைக்குப் போகும்படி பணிக்கப்படுவான். பொதுவாக அவன் மகிழ்ச்சியற்றுக் காணப்பட்டான். அதிக நேரம் வாசிப்பதில் செலவிட்டான். குடும்பம் வெளியே போவதைப்பற்றி மிகவும் வெறுப்படைந்தான். அவனது தந்தை, அவனைத் தன்னுடனும், அவனது இளைய சகோதரனுடனும் திரைப்படத்துக்கு வரும்படி அழைக்கும்போதுகூட, அதை ஏற்றுக்கொள்ள அவன் விரும்பவில்லை. எப்பொழுதும் மற்றவர்கள் அவனைத் திட்டுவதுபோலவும், அவன் என்றும் தன்னைத் தோல்வியடைந்தவன் போலவும் உணர்வான்.

ஆனால், இவனது நிலையை அவனது கருத்துப்படி பார்க்கும் பொழுது, மிகவும் சுவையாக இருக்கின்றது. அவனுக்குப் பதின்மூன்று வயதாகியும், அவன் தனியாக நகருக்கு வர என்றும் அனுமதி யளிக்கப்படவில்லை. அலுவலகத்திற்கு அவனது தாயார் அவன் வழியைக் கற்றுக்கொள்ளும்வரை கூட்டிக்கொண்டு வந்தாள். சிறுவன் தனது தாயாருடன் அதிகமாக வாதிக்க நேரிடுவதாகவும், அவ்வமயங்களில் தந்தை தாயாருடன் ஒத்துப் பாடுவதாகவும் முறையிட்டான். அவனது தந்தை அவனைத் திரைப்படங்களுக்குக் கூட்டிக்கொண்டு செல்லுவதாக வற்புறுத்துவதாகவும், அவன் பார்க்கவிரும்புகின்ற படமாக இல்லாமலிருந்தும் அவன் கட்டாயப்படுத்தப்படுவதாகவும் குறைப்பட்டான். கடைசியில் அவனது தந்தை கோபமுறுவார் அல்லது அவரது மனத்தைப் புண்படுத்த வேண்டாம் என்று கருதி அவன் உடன்செல்வான். அவனது தாயார் அவனது நண்பர்கள், வந்து காண்போர் ஆகியோர் வரும்பொழுது, அவர்களைக் கண்டு வணக்கம் செலுத்தவேண்டும் என்று வற்புறுத்தினாள். ஆனால், அவ்வமயங்களில் அவன் எவ்வாறு நடந்துகொள்கிறான் என்று எப்பொழுதுமே அவனைக் கண்காணித்து வருவாள். அவன் அதிக நேரம் அங்குத் தங்குவதையும் அவள் விரும்பவில்லை. அவன் ஒரு விருந்து அளிக்க விரும்புவதாகத் தீர்மானித்தபொழுது, அவன் தாயார் எல்லாக் குழந்தைகளும் அவனது அறையிலேயே இருக்கவேண்டும் என்று வற்புறுத்தினாள். அவனுக்குத் தன் தாயாரிடம் நிறைய விருந்தினர்கள் வருவதால் அவ்விடம் போதாது என்று கூறி அவளைத் திருப்திபடுத்துவதற்கு இரண்டு நாட்கள் ஆயின. அவனது தாயார் அவளுடைய நண்பர்களது குழந்தைகளை விருந்துக்கு அழைக்க விரும்பினாள். ஆனால், அவர்கள்

வந்தால், விருந்துக்கு உகந்தவர்களாக அவர்கள் இருக்கமாட்டார்கள் என்று அவன் உணர்ந்தான். ஏனெனில், அவர்கள் வேறு பள்ளிக்குச் செல்பவர்களாகவோ அவனை அறியாதவர்களாகவோ இருந்தனர். முடிவில் அவனது தாயார் விரும்பிய ஒரே ஒரு பெண்ணைமட்டும் அவன் ஏற்றுக்கொண்டான். அவனுடைய நண்பர்கள் அவளை விரும்பமாட்டார்கள் என்பதையும், விருந்தை அவள் நன்ருக அனுபவிக்க இயலாது என்பதையும் அவன் உணர்ந்திருந்தும், தாயாரின் கட்டாயத்திற்காக அப்பெண்ணை அழைத்தான்."[18]

## வகுப்புப் பண்பாடு (Class Culture)

சமூக வகுப்புப் பண்பாட்டிலுள்ள சிக்கல், இளையோர்களுக்கிடையே ஏற்படும் மனமுறிவிற்கும் ஆளுமைத் தொல்லைகளுக்கும் முக்கிய ஏதுவாக இப்பொழுது ஏற்றுக்கொள்ளப்படுகின்றது. குழந்தையினுடைய குடும்பத்தின் சமூக வகுப்பு, அவன் வாழ்கின்ற சுற்றுப்புறத்தைத் தீர்மானிப்பதோடல்லாது அவன் விளையாடுகின்ற சுற்றுப்புறக் குழுவினையும் தீர்மானிக்கின்றது; மேலும், குழந்தை, இளையோன் ஆகியோர்களது குறிக்கோள்கள், அடைவுகள், சமூகத்திறன்கள் ஆகியவற்றையும் அது தீர்மானிக்கின்றது. எல்லாப் பொருளாதாரக் குழுக்களினின்றும் வருகின்ற தனியன்களிடத்து மனமுறிவுகள் இருக்கின்றன என்ருலும், வறுமை உள்ள இல்லங்களிலிருந்து வரும் இளையோரிடத்து மனமுறிவுகளுக்கு அதிகமாகச் சமூக முக்கியத்துவம் உள்ளது. ஏனெனில், அது அவர்களை பலாத்காரச் செயல்களில் ஈடுபடுத்தி, அவர்களை நீதிமன்றங்களுக்கும் கொண்டு செல்கின்றது. கீழான பொருளாதாரக் குழுவிலிருந்து வரும் இளையோர்கள் தங்களது மனமுறிவுகளைப் பொருத்தமுற அமைக்கத் திருடுதலிலும் ஒழுக்கமற்ற செயல்களிலும் ஈடுபடுகின்றனர். நல்ல சூழ்நிலைகளில் வாழ்வோர் சமூகம் ஏற்றுக்கொள்ளக்கூடிய வெளிப்படுத்தல்களில் தங்களது மனமுறிவுகளைத் திருப்புகின்றனர். ஹெயின்ஸ் (Heinz) என்பவர் நடத்திய ஆய்வு ஜூனியர் உயர்நிலைப் பள்ளி மாணவர்களது வகுப்பு அந்தஸ்து பொருத்தப்பாட்டுப் பிரச்சினைகளைப் பற்றியதாய் இருந்தது.[19] அவர் மாணவனது பொருத்தப்பாட்டுப் பகுதிகளான பாடத்திட்டம், பள்ளி ஆட்சியமைப்புடன் கொள்ளும் தொடர்புகள், சிறுமியர்களது பள்ளி வாழ்வு ஆகியவற்றில் வகுப்பு அந்தஸ்து மிகவும் முக்கியத்துவம் கொண்டுள்ளதாய்க் கண்டார்.

[18] G. J. Mohr, 'Psychiatric Problems of Adolescence,' Journal of the American Medical Association, Vol. 137, pt. 2, p. 1590.

[19] E. Heinz, 'Adjustment Problems of Class Status,' Phi Delka Kappan, 1949, Vol. 30, pp. 290-293.




முதல் பருவம்-மாணவன் பொருள்களைக் கற்றுக்கொள்கிறான்




இரண்டாம் பருவம்-மதிப்பெண்கள் தந்த ஒரு வாரத்திற்குப் பின்னர்




மூன்றும் பருவம்-பின்னர்

படம் 10-2

இளைஞன், கற்றலை உடனடியாகத் தனது வளர்ச்சிக்காக ஏற்றுக்கொள்கின்றானேயன்றி அடிப்படையான, அதிக கால உணர்வுடன் கூடிய தனது வளர்ச்சிக்காக ஏற்றுக்கொள்வதில்லை என்பதைக் குறிக்கின்ற அமைப்புப் படம்.

இந்தக் காலத்தில்தான் சிறுமியர்களிடத்து, தனித்து நிற்பவர்கள் (isolates) அதிகமான அளவில் தோன்றுகிறார்கள்.

### பள்ளிப் பொருத்தப்பாடுகள்

உயர்நிலைப் பள்ளியின் கல்வித் திட்டம் பெரும்பாலும் அடைவின் தேவைக்கோ, தனி மாணவனது தனித்த வளர்ச்சிக்கோ ஆவன செய்வதில்லை. இவ்வாறான நிலையின் மோசமான தன்மை, மாணவனை அவனுக்கு விருப்பமில்லாத சில பாடங்களை எடுக்கும்படி கட்டாயப் படுத்தும்பொழுது ஏற்படுகின்றது. அதில் தேறுவதற்கான மதிப் பெண்களும், பட்டம் பெறுவதற்குரிய மதிப்பும் பெறுவதில் அவனுக்கு ஆர்வமில்லாததால், இந்நிலை மேலும் மோசமான நிலையினை அடை கின்றது. மாணவனுடைய தேவையின் அடிப்படையையோ நீண்ட காலக் குறிக்கோளையோ கருதாது, உடனடியான குறிக்கோளான மதிப்பெண்கள் கொடுப்பது பள்ளியின் பொதுவான நிலையாகும். படம் 10-2-ல் அவ்வாறான நிலை காட்டப்பட்டுள்ளது.[20]

அதிகாரம் 7-ல் அளிக்கப்பட்டுள்ள கலிஃபோர்னியா இளையோர் வளர்ச்சி ஆய்வில் உள்ள பொருள்கள், முன்னிளையோர், இளையோர், பின்னிளையோர் ஆகியோரில் பெரும்பகுதியினர் பள்ளி நிகழ்ச்சியி லுள்ள பல பொருள்களை வெறுக்கின்றனர் என்பதைக் காட்டுகின்றன. ஆசிரியர்கள் கைக்கொள்கின்ற தவறான பழக்கங்கள், உடன் படிப் போர் கொள்கின்ற பகட்டான வெளித்தோற்றம், அதிகமான பலாத் காரம், ஆதிக்க மனப்பான்மை ஆகியவைகளை அவர்கள் வெறுக்கின் றனர். பரும்பான்மையான சிறுவர்களும் சிறுமியர்களும் பாடத் திட்டத்திலும், பள்ளி நிகழ்ச்சியிலும் வெறுத்த இயல்புகளைக் காட்டும் கலிஃபோர்னியா ஆய்வின் முடிவுகள் அட்டவணை 10-5-ல் தரப்பட் டுள்ளன.[21]

எலியாஸ் (Elias) என்பவர் தயாரித்த கேள்வி நிரலின் முடிவு களைப் பயன்படுத்தி, மாண்டேகு (Montague) வெவ்வேறான சமூக அந்தஸ்துக் குழுக்களின் துலங்கல்களை ஆய்வு செய்தார்.[22] அவன் பள்ளியில் கொள்ளவேண்டிய பொருத்தப்பாடுகளையே அவர் ஆய்ந்

[20] D. Segel, 'Frustration in Adolescent Youth,' Federal Security Agency, Bulletin No. 1, 1951.

[21] C. M. Tryon, U. C. Inventory I: Social and Emotional Adjustment. Revised form for presentation of cumulative record of individual and group norms for a seven-year period. Berkeley: University of California, 1939.

[22] J. B. Montague, 'Social Status and Adjustment in School', Clearing House, 1952, Vol. 27, pp. 19-24.

தார். வாஷிங்டன் பகுதி உயர்நிலைப் பள்ளிச் சீனியர்களில் மூன்றில் ஒரு பகுதியினருக்குச் சமமான 4,400 உயர்நிலைப் பள்ளிச் சீனியர்களிடம் துலங்கல்கள் பெறப்பட்டன. அட்டவணை 10—6-ல் அவ்வாய்வின் முடிவுகள் அளிக்கப்பட்டுள்ளன. இளையோர் சிறுவர் சிறுமியர்களை

## அட்டவணை 10—5

இளையோர்களால் வெறுக்கப்பட்ட உயர்நிலைப் பள்ளிப் பாடத்திட்டம் அல்லது நிகழ்ச்சியிலுள்ள சில இயல்புகள்

| இயல்புகள் | H5L6 | | H8L9 | | H11 L12 | |
|---|---|---|---|---|---|---|
| | சிறுவர் | சிறுமியர் | சிறுவர் | சிறுமியர் | சிறுவர் | சிறுமியர் |
| அதிகமான பாடவேலையினை வீட்டில் செய்து வரும்படி பணிக்கிறார்கள்... | 18 | 4 | 45 | 29 | 45 | 36 |
| நீண்ட பணியிட்டினைத் தருகின்றனர் | 32 | 18 | 51 | 32 | 42 | 39 |
| பல பாடங்கள் சுவையின்றியும், சோர்வினை அளிப்பனவாயும் உள்ளன ... | 55 | 32 | 63 | 56 | 63 | 58 |
| ஒருவர் விரும்புகின்ற பாடங்களைத் தேர்ந்தெடுக்க வாய்ப்பில்லை ... | 48 | 25 | 44 | 25 | 20 | 6 |
| ஒருவர் வெறுக்கின்ற பாடங்களை எடுத்துக்கொள்ள வேண்டியனவாய் உள்ளன ... | 63 | 31 | 61 | 57 | 48 | 42 |
| பள்ளி வேலை சுவையின்றி ஒரே தன்மையில் உள்ளது ... | 28 | 10 | 46 | 28 | 28 | 21 |
| ஒருவன் வளர்ந்த பின்பு எவ்விதப் பயனும் இல்லாத பாடங்களை எடுத்துக்கொள்ள வேண்டியனவாய் உள்ளன | 52 | 28 | 68 | 60 | 55 | 58 |

ஊக்கப்படுத்துவதுடன் தொடர்புடைய பிரச்சினைகளை நல்ல முறையில் அணுகி, பள்ளி நிகழ்ச்சிகள் மிகவும் உண்மையான தன்மையுடையனவாகவும், அவர்களுக்கு அவை ஓர் அறைகூவலாக இருக்குமாறும் செய்யவேண்டும். அப்பொழுதுதான் தவறான பொருத்தப்பாடுகளையும், இளங் குற்றவாளித்தன்மையையும் பெருமளவு குறைக்க இயலும்.

## அட்டவணை 10—6

**சமூக-நிலைக் குழுவினர் சரிபார்க்கும் பட்டியலில் குறிப்பிட்ட இனங்களுக்குத் தந்த துலங்கல்களின் பங்கீடு (மாண்டேகு தந்தது)**

| *பிரச்சினையைச் சரிபார்க்கும் பட்டியலில் தேர்ந்தெடுக்கப்பட்ட கூற்றுகள்* | உயர்ந்த சமூக அந்தஸ்தின் சதவீதம் | நடுத்தர சமூக அந்தஸ்தின் சதவீதம் | கீழான சமூக அந்தஸ்தின் சதவீதம் |
|---|---|---|---|
| **பள்ளியில் திருப்தியின்மை:** | | | |
| 1. பள்ளி கவர்ச்சியுடையதாயில்லை | 5·0 | 7·0 | 12·5 |
| 2. பாடங்கள் மிகவும் கடுமையாய் இருந்தன ... ... | 1·9 | 1·3 | 6·2 |
| 3. படிக்கும் பாடங்களில் விருப்பமில்லை ... ... | 3·7 | 4·1 | 9·8 |
| பள்ளி நிகழ்ச்சிகளில் ஒருவருக்கொருவர் கொள்ளும் சொந்தத் தொடர்புகளின் தொல்லைகள் : | | | |
| 4. புகழுடையவராய் இல்லை ... | 9·0 | 9·4 | 16·1 |
| 5. பொருள்களால் விட்டுவிடப்பட்டவர்கள் ... ... | 13·5 | 11·0 | 21·4 |
| 6. மிகக் குறைந்த சமூகத் தொடர்புகள் ... ... | 13·2 | 9·1 | 25·0 |
| 7. மிக அதிகமான சமூகச் செயல்கள் ... ... | 8·9 | 4·5 | 1·8 |
| 8. நண்பர்களை உண்டாக்குவது எப்படி ... ... | 10·8 | 13·9 | 15·9 |
| பள்ளி நிகழ்ச்சிகளில் தன் கருத்தைத் திறம்படக் கூற முடியாமை : | | | |
| 9. என்னால் நன்ருகக் கருத்துகளைக் கூற முடியவில்லை ... | 18·5 | 28·8 | 40·2 |
| 10. ஒப்பிக்க விரும்பவில்லை ... | 14·0 | 17·7 | 19·6 |
| 11. வகுப்புக்கு முன் ஒப்பிக்க விரும்பவில்லை ... ... | 14·0 | 18·2 | 19·6 |
| **தன் திறனாய்வு:** | | | |
| 12. என்னால் கவனத்தை ஒருமுகப்படுத்த முடியவில்லை ... | 26·5 | 27·2 | 35·7 |
| 13. படிப்பதற்குப் போதிய அளவு நேரமில்லை ... ... | 15 0 | 12·5 | 21·4 |
| 14. தேறமாட்டேன் என்னும் அச்சம் | 3·1 | 3·8 | 8·0 |

திருப்திகரமான பள்ளி அடைவு, எப்பொழுதும் நல்ல சொந்தப் பொருத்தப்பாட்டினையோ அல்லது சமூகப் பொருத்தப்பாட்டினையோ குறிப்பதில்லை. ஓர் ஆய்வின் முடிவுகள், இழப்பீடு உள்ள சிறுவன் அல்லது சிறுமியின் அடைவுகள், வெவ்வேறு ஏதுக்களிலிருந்து கிளம்பி ஒரே வகையான கோலங்களை உருவாக்கும் என்று குறிக்கின்றன.[23] ஒரு பெண்ணின் இழப்பீட்டின் ஏது குழுவினுடைய தொடர்பில் அவளுடைய பால்பங்கினைப் பெற முடியாததில் இருக்கலாம். உடல் வளர்ச்சி (முதிர்ச்சி யடையாமை, வலிவும் திறனும் இன்மை) பெரும் பாலும் சிறுவனது இழப்பீட்டின் ஏதுவாகவும் இருக்கும்.

## மனத்திறத்தில் தாழ்ந்த நிலையும் பொருத்தப்பாடும்

குழந்தை பள்ளி வேலையைத் திருப்திகரமாகச் செய்ய முடியவில்லை என்பது ஓர் உள்ளியல்புடைய பிரச்சினை கொண்ட வரலாறு என்று முன்னரே கூறப்பட்டது. அறிவு நாட்டம் அல்லது நுண்ணறிவுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்படுகின்ற சூழ்நிலையில் இதனை எதிர்பார்க்கலாம். மனத்திறத்தில் தாழ்ந்த நிலையுடைய மாணவர்களைச் சமூகம் ஏற்றுக்கொள்ளும் தன்மையினைப்பற்றிய ஆய்வுக்கு 5,6,7,8 ஆம் படிவங்களில் பயின்ற 561 சிறுவர்களும், 605 சிறுமியர்களும் ஆட்படுவோர்களாக எடுத்துக்கொள்ளப்பட்டனர்.[24] இரு கேள்விகள் ஏற்றுக்கொள்கின்ற, தனித்து நிற்கின்ற அளவினைத் தீர்மானிப்பதைப்பற்றி இருந்தன. மேலும் இரு கேள்விகள் ஒதுக்குகின்ற அளவினைக் குறிப்பனவாக இருந்தன. சமூகம் ஏற்றுக்கொள்ளுவதுபற்றிய கேள்விகளுக்குக் கிடைத்த கருத்துகளை மதிப்பிட்டு, ஒவ்வொரு மாணவனுக்கும், சமூகம் ஏற்றுக்கொள்ளும் அளவீடு பெறப்பட்டது. இது போன்று ஒதுக்கப்படும் அளவீடும், இரு ஒதுக்கப்படுதல் பற்றிய கேள்விகளுக்குக் கிடைத்த பதில்களிலுள்ள கருத்துகளை இணைத்துப் பெறப்பட்டது.

வெவ்வேறான நுண்ணறிவு நிலைகளில் மாணவர்கள் அளித்த மொத்த, ஏற்றுக்கொள்ளப்படுதல் பற்றிய அளவீடுகள் அட்டவணை 107-ல் தரப்பட்டுள்ளன.

முடிவுகள், நுண்ணறிவு குறைகின்றபொழுது, ஏற்றுக்கொள்ளும் மதிப்பீடும் தொடர்ந்து குறைவதைக் காட்டுகின்றன. இது குழந்தை

[23] A. Schoeppe and R. J. Havighurst, 'A Validation of Development and Adjustment Hypotheses of Adolescence', Journal of Educational Psychology, 1952, Vol. 43, pp. 339-353.

[24] Sister M. A. Martin, 'Social Acceptance and Attitude toward School of Mentally Retarded Pupils in Regular Classes,' Ed. D. Dissertation, University of Southern California, 1953.

## அட்டவணை 10—7

வெவ்வேறு நுண்ணறிவு நிலைகளில் மாணவர்கள் அளித்த மொத்த, ஏற்றுக்கொள்ளும் மதிப்பீடுகள் (மார்ட்டின் தந்தவை)

| நுண்ணறிவு நிலைகள் | | எண்ணிக்கை | சதவீதம் | சராசரி |
|---|---|---|---|---|
| 110க்கு மேல் | ... | 49 | 17 | ·9 |
| 100-109 | ... | 48 | 16 | ·6 |
| 90-99 | ... | 33 | 12 | ·4 |
| 80-89 | ... | 13 | 5 | —·4 |
| 70-79 | ... | 85 | 29 | —1·1 |
| 60-69 | ... | 56 | 19 | —1·3 |
| 50-59 | ... | 6 | 2 | —1·6 |

கள் வகுப்புகளில் சமூக ஏற்றுக் கொள்ளுதலைப் பெறுவதற்கு நுண்ணறிவு முக்கியமானதாகும் எனக் குறிக்கின்றது. அட்டவணை 10—8-ல் தரப்பட்டுள்ள முடிவுகள், சமூகப் பொருளாதார அந்தஸ்துகள் கட்டுப்படுத்தப்பட்டாலும், குழந்தையினை ஏற்றுக்கொள்ள நுண்ணறிவு முக்கியம் எனக் காட்டுகின்றது. இம்முடிவுகளிலிருந்து பரவலான பொதுமைகளை உண்டாக்குதல் தவறாகும் என்று கூறத் தேவையில்லை. ஏனெனில், வெவ்வேறான குழுக்களிலும் நிகழ்ச்சிகளிலும் வெவ்வேறான அந்தஸ்து ஏதுக்கள் வேலைசெய்வது சாத்தியமாகும். சில இளையோர் குழுக்களில் விளையாட்டுகள், நாடகம், இசை அல்லது சில தனிப்பட்ட திறன்களில் சிறப்புப் பெறுவது சமூக ஏற்றுக்கொள்ளுதலைப் பெறுவதற்கு மிகவும் முக்கியமான ஏதுவாகக் கருதப்படலாம். ஆனால், மற்றக் குழுக்களில் இவைகள் குறைவான முக்கியத்துவத்தையே பெற்றிருக்கலாம்.

கல்வியில் தோல்வியடைதல் உயர்நிலைப் பள்ளியிலுள்ள பல மாணவர்கள் மனமுறிவு பெறுவதற்கு ஏதுவாக அமைகின்றது. இதன் தொடர்பில் இல்லத்திற்கு மாணவர்கள் கொண்டு செல்கின்ற மதிப்பெண் அறிவிக்கும் பட்டியல்கள் மிகவும் முக்கியமானவையாகும். இதனை, இந்நூலாசிரியரின் கவனத்துக்கு வந்த, 7 ஆம் படிவ மாணவியான, ஆன் என்னும் ஒரு சிறுமியின் வரலாற்றில் காணலாம்.

ஆன் தன்னுடைய கல்வி வளர்ச்சியை அறிவிக்கும் பட்டியலை இல்லத்திற்குக் கொண்டு வந்தாள். அதில் அவளுடைய மிகவும் மோசமான தரம் குறிப்பிடப்பட்டிருந்தது. அதைக் கண்ட தந்தை கணிதத்திலும் சமூகப் பாடத்திலும் மோசமாயிருப்பதைக் கண்டு எரிச்சல்கொண்டு பலமாக மிரட்டினார். சிறுமிக்கு வார இறுதி

யில் தரப்படுகின்ற சில தனிச் சலுகைகள் மறுக்கப்பட்டன. அவள் பாடங்களில் அதிக நேரம் செலவிடும்படி கட்டாயப் படுத்தப் பட்டாள். சிறுமி தனது உடன்படிப்போரிடமிருந்து அதிகமாக விலகிப் பகற் கனவில் ஈடுபட்டாள். அவளது தரங்களில் குறைந்த அளவு முன்னேற்றமே காணப்பட்டது. தந்தை இதைக் கண்டு கவலையுற்று, முன்னர் மிரட்டியதுபோன்றே, அவளது பள்ளி முதல்வரிடம் இதைப் பற்றிக் கேட்கச் சென்ருர். முதல்வர் அவளது அறிக்கையைப் பார்த்தார். ஒன்றுதிரட்டப்பட்ட அறிக்கைகளைப் பார்த்ததில், அவள் எப்பொழுதும் நல்ல தரங்களைப் பெற்றதில்லை எனக் கண்டார். அவர், நுண்ணறிவுச் சோதனையில் அவள் முதலில் 86-ம், பின்னர் நடந்த சோதனையில் நுண்ணறிவு ஈவு 82-ம் பெற்றதாகக் கண்டார். முதல்வர் அவளது தந்தையிடம் அவளது பழைய பள்ளி வேலை சிறந்ததாக இல்லை என்று கூறினர். அவளது தந்தை அவளிடமிருந்து மிக அதிகமாக எதிர்பார்க்கிருர் என்றும் குறிப்பிட்டார். தாயார் அப்பிரச்சினையைத் தந்தையைக் காட்டிலும் சிறப்பாக உணர்ந்தார். ஆனின் நிலையை அவளது தாயார் உளவியலாரின் கவனத்திற்குக் கொண்டு வந்தார். சாதாரணத் தரத்திற்கும் கீழான தரத்தில் நுண்ணறிவு இருப்பதை, சிறுமிக்கு ஸ்டான்ஃபோர்டால் (Stanford) திருத்தி யமைக்கப்பட்ட பீனே சோதனைகளைத் தந்து, சரிபார்த்தார். வாசிக்கும் திறன் பற்றிய சோதனைகள் கீழான புரிந்துகொள்ளும் திறனைப் பெற்றிருப் பதைக் காட்டின. தாயாரிடம், அவள் கல்வி ஆற்றலுக்குகந்த பெண்ணல்ல என்பதும், பள்ளியில் உயர்ந்த அல்லது நல்ல தரங்களை எதிர்பார்ப்பது தவருகும் என்பதும் கூறப்பட்டன. தாயார், தந்தையுடன் சென்று இரண்டாம் முறை உளவியாலரைக் கண்டார். அவ்வமயம், பெற்ருேர்களுக்கு அனுப்பப்பட்ட கல்வி வளர்ச்சி அறிவிப்புப் பட்டியலினுல் ஏற்பட்ட சில குழப்பங்கள் தீர்க்கப் பட்டன.[25]

## சமயத் தொடர்பில் உள்ள இளையோர் பிரச்சினைகள்

சில நிலைகளில் இளையோர் மிக உயர்ந்த கடமை உணர்ச்சி கொண்ட நிலையினை வளர்த்துக்கொள்கின்றனர். மனச் சான்று ஒரு நட்புடன் கூடிய புத்திமதியைத் தருவதாக இல்லாது ஆர்வத் துடன் குற்றம் காண்பதாக மாறுகின்றது. தீவிரமான ஐயங்களின் மூலம் குற்ற உணர்வினை அதிகப்படுத்துகின்ற வேலையினைச் செய்வதற் குத் தன்னைப் பணித்துக்கொண்டதுபோல் அது செயற்படுகின்றது. குஹ்லன் (Kuhlen) என்பவராலும், ஆர்னல்டு (Arnold) என்பவராலும்

[25] K. C. Garrison, 'Growth and Development,' (New York: Longmans, Green and Co., 1952), p. 424.

## அட்டவணை 10—8

கீழான, நடுத்தர, உயர்ந்த சமூகப் பொருளாதாரக் குழுக்களில் பின்தங்கிய, கட்டுப்படுத்திய மாணவர் குழுக்களது மொத்த ஏற்றுக் கொள்ளும், ஒதுக்கும் அளவீடுகள்.

| நிலை | குழு | எண்ணிக்கை | சராசரி ஏற்றுக் கொள்ளுதல் | சராசரி ஒதுக்குதல் |
|---|---|---|---|---|
| கீழான | பின்தங்கிய | 86 | 1·1 | 1·5 |
| | கட்டுப்படுத்திய | 86 | ·6 | —·5 |
| நடுத்தர | பின்தங்கிய | 26 | —1·5 | 1·9 |
| | கட்டுப்படுத்திய | 26 | ·5 | —·3 |
| உயர்ந்த | பின்தங்கிய | 33 | —1·1 | 1·4 |
| | கட்டுப்படுத்திய | 33 | ·4 | —·3 |

ஆய்வு செய்யப்பட்ட பகுதிகளில் ஒன்று சமயத்தைப் பற்றிய சிக்கல்களை ஆய்வு செய்தது.[26] ஒவ்வொரு மாணவனும் 18 பிரச்சினைகளுக்குத் துலங்கல்கள் தருமாறு கூறப்பட்டது. ஒவ்வொரு பிரச்சினைக்கும் எதிராக 'எ' என்றும், 'சி' என்றும், 'பெ' என்றும் குறிப்பிட்டுச் சொன்னார்கள். அது, தனிப்பட்ட பிரச்சினை எப்பொழுதும் தன்னைத் தொல்லைப்படுத்தவில்லையெனில், 'எ' என்று குறிப்பிடச் சொன்னார்கள். சில சமயங்களில் அவனைத் தொல்லைப் படுத்தினால், 'சி' என்று குறிப்பிடச் சொன்னார்கள். பெரும்பாலும் தொல்லைப்படுத்தியதைக் குறிக்க, 'பெ' என்று குறிக்கச் சொன்னார்கள். மூன்று வயது குழுவினருக்குரிய முடிவுகள் அட்டவணை 10—9-ல் தரப்பட்டுள்ளன. மூன்று குழுக்கள் சரிபார்த்த பிரிவினைகளின் சராசரி எண்ணிக்கையில் மாறுதல்கள் இல்லை.

இக் கண்டுபிடிப்புகள் பொதுவாகக் கூறப்படுகின்ற கற்பிதமான 'இளையோர் வயதில் அதிகமான சமயப் பிரச்சினைகள் உள்ளன' என்னும் கருத்தினை ஆதரிப்பதில்லை. இருப்பினும், சில தனிப்பட்ட பிரச்சினைகள் குறித்துச் சில வயதுக்குரிய போக்குகள் காணப்பட்டன. கத்தோலிக்கக் குழுக்களைப்பற்றிய சராசரி பிரச்சினைகளது அளவுகள்பற்றிய ஆய்வு, கத்தோலிக்கச் சிறுவர், சிறுமியர்கள், கத்தோலிக்கர் அல்லா

[26] R. G. Kuhlen and M. Arnold, 'Age Differences in Religious Beliefs and Problems during Adolescence,' Pedagogical Seminary and Journal of Genetic Psychology, 1944, Vol. 65, pp. 291—360.

## அட்டவணை 10—9

இளையோர் பருவத்தின் வெவ்வேறு வயது நிலைகளில் இருக்கின்ற தனித்த சமயப் பிரச்சினைகள் தோன்றுகின்ற அளவினை, வெவ்வேறு வயது குழு ஒவ்வொரு பிரச்சினையும் சில சமயங்களில் அல்லது பெரும்பாலும் இருக்கின்றது என்று சரிபார்த்த சதவீதம்

| | சிக்கலான வயது 12 | 15 | 18 |
|---|---|---|---|
| மற்றவர்கள் கொண்டுள்ள சமயத்தினின்று மாறுபட்ட சமயத்தைக் கொண்டிருப்பது ... | 34 | 25 | 27 |
| கோயிலில் செய்யப்படும் சேவையினை வெறுத்தல் | 35 | 47 | 60* |
| கோவிலுக்குப் போகக் கட்டாயப்படுத்துதல் ... | 30 | 31 | 27 |
| பெற்றோர்கள் பின்பற்றும் சமயத்தை வெறுத்தல் | 11 | 8 | 12 |
| கோவிலுக்குப் போக முடியாமை ... ... | 67 | 67 | 67 |
| கடவுள்பற்றிய தனது எண்ணத்தை மாற்றிக் கொள்ளுதல் ... ... ... | 27 | 32 | 31 |
| சமயத்தில் நம்பிக்கை இழத்தல் ... ... | 37 | 44 | 35 |
| வழிபாடு நல்லதை விளைவிக்கும் என்பதில் ஐயம் | 37 | 44 | 35 |
| சமயப் பிரச்சினைகளில் உதவியினைப் பெறுதல் ... | 53 | 54 | 56 |
| சமயத்தினைத் தேர்ந்தெடுத்தல் ... ... | 21 | 20 | 15 |
| சமயத்தின் உறுப்பினருதலைப் பெற்றோர்கள் மறுத்தல் ... ... ... | 23 | 14 | 11* |
| சமயத்தின் பொருளினை உணர ஆவல் ... | 53 | 48 | 60 |
| கடவுளுடன் ஆன்மீக நெறியில் ஒன்றுபட விழைதல் ... ... ... | 59 | 47 | 57 |
| மோட்சமும் நரகமும் ... ... ... | 53 | 53 | 66* |
| பாவம் ... ... ... ... | 71 | 62 | 72 |
| சமயத்திற்கும் விஞ்ஞானத்திற்கும் இடையேயுள்ள சிக்கல்கள் ... ... ... | 42 | 50 | 57* |
| எனது சமய உணர்ச்சிகளைக் குத்திக்காட்டுதல் | 26 | 22 | 18 |
| மக்கள் இறந்தபின்னர் என்ன ஆகின்றனர் என்று ஆச்சரியப்படுதல் ... ... | 67 | 56 | 80* |
| ஆட்படுவோரின் எண்ணிக்கை ... ... | 174 | 248 | 130 |

தவர்களைக்காட்டிலும் கீழான அளவுகளை 'ஆச்சரியங்களிலும்' பிரச்சினைகளிலும் கொண்டிருந்தனர் எனக் காட்டியது.

அட்டவணை 10—9-ஐ மேலும் ஆய்ந்தால், சில வயதுக்குரிய போக்குகளை உற்றுநோக்கலாம். பதினெட்டு வயது குழுவில் 50 சதவீதத்தினருக்குமேல் அவர்களைப் பெரும்பாலும் அல்லது சில சமயங்களில் கீழ்க்கண்ட பிரச்சினைகள் தொல்லைபடுத்துவதாகக் குறிப்பிட்டனர். கோயிலில் நடக்கும் சேவையினை வெறுத்தனர், கோவிலுக்குப் போக முடியாமை, சமயப் பிரச்சினைகளில் உதவியினைப் பெறுதல், கடவுளுடன் ஆன்மீக ஒன்றுபடுதலுக்கு ஆசைப்படுதல், சமயத்தின் பொருளை அறிய விருப்பம், மோட்சம், நரகம், பாவம் ஆகியவற்றின் பொருளை அறிய விருப்பம், சமயத்துக்கும் விஞ்ஞானத்திற்கும் இடையேயுள்ள சிக்கல்கள்பற்றி அறிய ஆவல், மக்கள் இறந்த பின்னர் என்ன ஆகின்றனர் என்ற ஆச்சரியம் ஆகியவையே தொல்லைபடுத்திய பிரச்சினைகள். அட்டவணையில் விண்மீன் குறியிட்டுக் குறிக்கப்பட்ட பிரச்சினைகளில் குறிப்பிடும்படியான மாறுதல் காணப்பட்டது. வயதுடன் மிக முக்கியமான மாறுதல் கோயில் சேவைகளில் உள்ள வெறுப்புப்பற்றியபிரச்சினைகளின் எதிர்வினையில் காணப்பட்டது. இளமை இயற்கையாகவே எதனையும் எளிதில் நம்புவதில்லை. சில சமயங்களில் அதன் ஐயங்கள் மிகவும் கலக்குகின்ற தன்மையும் கொண்டுள்ளன. விஞ்ஞானத்திற்கும் சமயத்திற்கும் இடையே வெளிப்படையாகத் தோன்றுகின்ற சிக்கல் இக்குழப்பம் அதிகப்படியாக ஆவதற்குக் காரணமாக அமையலாம். சில சமயங்களில் உள்ளடங்கிய தொல்லை குறிப்பிடத்தக்க நிலைமாற்றத்திற்குக் கொண்டுசெல்லலாம். இது இளைஞனது உளவியல், சமூக, சமயத் தொல்லைகளைத் தீர்ப்பதற்குத் தவறிவிட்டது. இன்னும் சிலரது நிலைகளில் இக்குழப்பம் பால் உந்துகளுக்கும், உயர்ந்த ஆன்மீகக் குறிக்கோள்களுக்குமிடையே உள்ள சிக்கலினாலும் உண்டாக்கப்படலாம்.

உள்நோக்குக் கொண்ட இளைஞன் இயற்கையாகவே அகக்காட்சியினை நோக்கிச் செல்கின்றான். அகக்காட்சியும் அதிகப்படியான சமயச் சிந்தனையும் ஒன்றுசேரும்பொழுது, உளச்சோர்வு அல்லது வியாகுலம் கொண்டவனாக இளையோனை ஆக்குகின்றன. இது பெற்றோரும், ஆசிரியர்களும், உளமருத்துவர்களும் மிகுந்த கவனத்தைச் செலுத்தவேண்டிய ஒரு நிலையாகும். வியாகுலம் பின்னால் தானாகவே சரியாகப் பொருந்தி அமையும் என்று இளையோர் பருவத்தில் கவனிக்காது விட்டுவிடக்கூடாது. அது பெரும்பாலும் அவ்வாறு திருந்திப் பொருந்தி அமையலாம். ஆனால், அதில் அடங்கியுள்ள அபாயம் கருதி அதனை எளிதாக எடுத்துக்கொள்ளக்கூடாது,

சமயப் பொருளில் இளையோர்கள் அகக்காட்சி கொண்டவர்களாக ஆகும்பொழுது, அவர்கள் சமய ஆலோசகரிடம் உதவி பெறவேண்டும் என்று உடனடியாக அவர்களுக்குப் புத்திமதி தரல் வேண்டும். தன்னைப்பற்றி வேவு பார்க்கின்ற எல்லா நிலைகளைக்காட்டிலும் சமயத்தன்மையில் வேவு பார்த்தல் மிகவும் அபாயத்தை விளைவிக்கக்கூடியதாகும். இளைஞன் அகக் காட்சியினைக் கைக்கொள்ளும்போது, தன்னிடம் மிகவும் அபாயகரமான ஆபத்தான உடல் வியாதி உள்ளது என்று அது கற்பனை செய்யத் தூண்டுவதோடு பூமியில் வாழ்கின்ற மிகவும் மோசமான பாவிகளில் ஒருவன் என்றும் அவனைக் கருதவைக்கும். இவ்வாறான இக்கட்டான நிலையில் உள்ள இளைஞனுக்கு ஒரு நல்ல உடல் ஆரோக்கியத் திட்டத்தின் உதவியையும், மனமருத்துவத்தையும் நாம் கொடுக்கவேண்டும். நல்ல குறிக்கோள்களை அடைவதற்கும், இசைவான வாழ்க்கை மெய்யுணர்வைக் கைக்கொள்வதற்கும் அவன் வழிகாட்டப்படவேண்டும்.

மேலும், இளையோர்களது பால் வாழ்க்கையிலும் இயக்கத்திலும் கோயில் முக்கியமான பங்கு கொண்டுள்ளது. பால் உந்துவினைபற்றிப் பரவலான தவறான கருத்துகள் பல சமயத்தில் ஆர்வமுடையோரால் பரப்பப்பட்டன. பால் உந்து பாவப் பொருளாகவும், வெட்கப்படக்கூடிய ஒன்றாகவும் கருதப்பட்டது. இதனால், பல தனியன்கள் இந்த உந்து தோன்றியபொழுது அவர்களிடம் தீய ஆவி தோன்றியதாகவும், அதைப்பற்றி நன்மை பயக்காத பல கருத்துகளையும் கொண்டிருந்தனர். மார்க்கரட் மீட் என்பவர் சமோவா ஆண்கள்பற்றி நடத்திய படிப்பில், இவர்கள் இவ்வுந்துவினை மிகவும் வெளிப்படையாகவும் பாசாங்கின்றியும் கையாண்டனர் என்று கண்டார். இச்சமோவா ஆண்கள் பண்படா ஆதிக் குழுக்களின் பண்பாட்டிற்கும், தற்பொழுதைய மேனாட்டு நாகரிகத்திற்குமிடையே ஒரு பண்பாட்டினைக் கொண்டிருந்தனர். அவர்களிடையே குறைவான சிக்கல்களே இருந்தன. அவர்களது இளையோர்களுக்கு 'அழுத்தங்களும் போராட்டங்களும்' கொண்ட பருவம் என்று குறிக்கப்படுகின்ற வாழ்க்கையின் துயரமான பகுதியைக் கடக்கவேண்டிய அவசியமும் இருக்கவில்லை. ஒரு போராட்டம் தோன்றினால், அது பால் உந்துவின் இயற்கையான வெளிப்படுத்தலுக்கு அவர்கள் தயாராக இல்லை என்பதனாலேயேயாகும். இன்றைய இளைஞர்கள் தமது நாகரிகத்தில் முன்னர் வாழ்ந்த எவரைக்காட்டிலும் வெளிப்படையான தன்மையில் இப்பால் உந்துவினைச் சந்திக்கின்றனர் என்று கூறுவதற்குச் சான்று உள்ளது. இச்சிந்தனைகளில் முதியோர் காதல், கூடல், திருமணம் ஆகியவற்றின் தொடர்பில் உள்ள சில பிரச்சினைகள் இவ்விளையோர்களைப்பற்றிய ஆய்வின் கடைசி அத்தியாயத்தில் விவாதிக்கப்படும்,

## குலைத்தல் அல்லது மனமுறிவுக்கு எதிர்வினை
## (Reaction to Thwarting or Frustration)

ஒரு குறிக்கோளினை அடைவதற்குத் தடையினை ஒரு தனியன் சந்தித்தால், நாம் அவன் குலைத்தலைச் சந்திக்கின்றான் என்று கூறுகின்றோம். அப்பொழுது மன அல்லது வெளிப்படையான பொருத்தப்பாடு கட்டாயத் தேவையாகிறது. குலைத்தல்கொண்ட தனியன் ஒன்று (1) தொடர்ந்து குறிக்கோளினை அடைய முயல்கின்றான் அல்லது (2) குறிக்கோளுடன் ஒன்றுபடுகின்றான் அல்லது (3) மூலக்குறிக்கோளுடன் உருமாறுகின்றான் அல்லது (4) குறிக்கோளிலிருந்து பின்வாங்குகின்றான். இவ்வெதிர்வினைகள் வெவ்வேறு பெயர்களும் பல்வேறு உருவங்களைக் கொள்கின்றன. குலைத்தலுக்கு எதிர்வினையளிக்கின்ற இவ்வகைகளின் சுருக்கமான விளக்கம் பின்வரும் விவாதங்களில் அளிக்கப்படும்.

### குறிக்கோளினை அடைவதற்குத் தொடர்ந்து செயற்படுதல்

வளர் பருவச் சிறுவனது குறிக்கோள், பள்ளி பேஸ் பந்து விளையாட்டுக் குழுவில் இடம்பெறுவது ஆகும். உயர்நிலைப் பள்ளியில் முதல் ஆண்டில் அவன் குழுவில் இடம்பெற முடியவில்லை யெனில், அவன் தனது முயற்சியில் தொடர்ந்து ஈடுபடுகின்றான். நாம் அவன் தனது குறிக்கோளில் தயங்கவில்லை என்று கூறுகிறோம். வளர் பருவச் சிறுமி பள்ளியிலுள்ள யாராவது ஒரு சிறுவனது ஒப்புறுதியைப் பெறத்தொடர்ந்து முயற்சி செய்வாள். அவன்மீது அவள் கொண்டுள்ள மெச்சுதலை வெளிப்படுத்திக் குறிப்புகள் எழுதி அனுப்புவாள். மூலத்துலங்கலைத் தொடர்ந்து அளிப்பது தொடர்ச்சியான முயற்சியினால் விளைகின்றது என்பதற்குரிய மற்றொரு சான்றாக அமைகின்றது. வளர் பருவச் சிறுவனுக்கும் சிறுமிக்கும் அவர்களது துலங்கல்களில் சில குறிப்பிடத்தக்க மாறுதல்கள் இருக்கும் எனக் குறிப்பிடவேண்டிய அவசியமில்லை. இம்மாறுதல்கள் அடுத்து வருகின்ற முயற்சியில் வெற்றியினை அளிக்கும். விடாமுயற்சியுடைய சிறுவன் அல்லது சிறுமியை நாம் போற்றுகின்றோம். ஆனால், நாம் ஒரு நிகழ்ச்சிக்குப் பயனற்ற துலங்கலினைத் தருகின்ற இளயோனைப்பற்றிக் குறைகாணாமல் இல்லை. ஒரு நிகழ்ச்சியினைப்பற்றிய தீவிரமான ஆய்வை விளக்கிப் பொருள் கூறல் அல்லது மாறுதலை அனுமதிக்காத நிலைநிறுத்தல் இசைவானதோர் இயல்பன்று. நடத்தையை நிலைநிறுத்தம் செய்கின்ற அல்லது எளிதாக மாற்றவைக்கின்ற ஏதுக்கள் எவை? ராபின்சன் (Robinson) என்பவரால் குறிக்கப்பட்ட இரண்டு ஏதுக்களாவன:[27]

[27] E. E. Robinson, 'An Experimental Investigation of Two Factors which Produce Stereotyped Behavior in Problem Situations,' Journal of Experimental Psychology, 1940, Vol. 27, pp. 394-410.

1. ஒரு பிரச்சினையைத் தீர்ப்பதற்குச் செலவிடப்படும் காலத்தின் அளவு தனியன் கடைசியில் வெற்றி பெறுவான் எனும் உறுதியின் அளவோடு நேரடியாக மாறும் தொடர்பு கொண்டுள்ளது.

2. ஒரு குறிப்பிட்ட செயலுக்காகச் செலவிடப்படும் கால அளவு, தனியனுக்கு வாய்ப்பு அளிக்கின்ற மாற்றுச் செயல்களின் எண்ணிக்கையுடன் எதிர்மறைத் தொடர்பு கொண்டுள்ளது.

நடத்தையினது நிலைநிறுத்தம் அல்லது எளிதாக மாறுந்தன்மை தலைவின்போது பாதிக்கின்ற நிலைகளாவன:

3. தனியனுக்கு அக்குறிக்கோள் எந்த அளவு முக்கியத்துவம் வாய்ந்தது? செலவிடப்படும் காலம், குறிக்கோளுக்குத் தனியன் அளிக்கும் முக்கியத்துவத்தோடு நேரடி விகிதத் தொடர்பு கொண்டுள்ளதாக இருக்கிறது.

4. ஒரு செயலுக்காகச் செலவிடப்படும் காலத்தின் அளவு, மற்ற சாத்தியமான துலங்கல்களைக் கண்டுபிடிக்கும் தனியனது திறனுடைய நேரடித்தொடர்பில் மாறுபடும்.

5. ஒரு சிக்கலினைத் தீர்ப்பதற்குச் செய்யப்படும் முயற்சியில் செலவிடப்படும் காலம், அத்தனியன், தனது முயற்சிகளில் எந்த அளவு தொடர்ந்து ஈடுபடவேண்டும் என்பதோடு நேரடித் தொடர்பு கொண்டுள்ளது அல்லது அவனது மனச்சாட்சி உறுத்துவதோடும், மற்றவர்களிடம் தன் முகத்தைக் காட்ட இயலாது என்பதோடும் நேரடித் தொடர்பு கொண்டுள்ளது.

தொடர்ச்சியான செயலில் இரண்டாவது வகை, துலங்கலை மாற்றுகின்ற செயலாகும். இளையோர் சிறுமி அவளது தொடர்ச்சியான முயற்சிமூலம் ஒரு சிறுவனது அனுமதியைக் குறிப்புகள் எழுதுவதன் வாயிலாகப் பெறமுடியாவிடில், அவள் வேறு வகையான நடத்தையினை, சான்றாக அலட்சிய மனப்பான்மையினைக் கொள்வாள். இது இச்சிறுமி முதல் முறையில் தோல்வியின் காரணமாக நம்பிக்கையினை இழந்துவிட்டாள் என்று அறிவிக்கின்றது. இம்மாற்றங்கொண்ட துலங்கலை அவள் தொடர்ந்து கைக்கொள்வாள் என்றும் கூறுவதற்கில்லை. அதுவும் தோல்வியுறுமானால், முதல் துலங்கலினைக் கைக்கொண்ட காலம்வரைதான் அதனைக் கைக்கொள்வாள். ஏனெனில், அவள் ஏற்கனவே குறிக்கோளினை அடைவதில் உள்ள நம்பிக்கையை இழக்கத் துவங்கிவிட்டாள். தனியன் நிகழ்ச்சியில் நல்ல உட்காட்சியினைப் பெறாதபொழுது, தற்செயலான துலங்கல்கள் தோன்றத் துவங்குகின்றன. பிரச்சினையினை அறிந்துகொள்ளாதபொழுது அல்லது இளையோன் தன்னைத் திறனற்றவனாக உணர்கின்றபொழுது, முயன்று தவறுகின்ற நடத்தையே பொதுவாக விளையும்.

## குறிக்கோளினைப் பதிலீடு செய்தல்

இளையோர் சிறுவன் பேஸ்-பந்து குழுவில் இடம் பெற முடியவில்லை யெனில், அவன் தனது முயற்சிகளைக் கைவிடத் தீர்மானித்து ஒரு சாரணனாக இருந்து வெற்றிபெறவோ, பள்ளியில் பேஸ்-பந்தினைத் தவிர மற்றத் தனித்த சில செயல்களில் வெற்றிபெறவோ முயல்வான். இவ்வாறு ஒரு குறிக்கோள் தடைப்படும்பொழுது, குறிக்கோளினைப் பதிலிடு செய்யும் முறையினைச் சில சமயங்களில் 'ஈடுசெய்தல்' என்று குறிப்பிடுவதுண்டு. இது சிறிய அளவு தன்மையுடைய குறிக்கோள்களின் தொடர்பிலும், பெரிய அளவு முக்கியத்துவம் வாய்ந்த குறிக்கோள்களின் தொடர்புகளிலும் ஏற்படுகிறது. இருப்பினும், ஒரு குறிக்கோளின் முக்கியத்துவத்தை அதைப் பின்பற்றுகிற தனியனது தொடர்பில்தான் தீர்ப்புக் கூற இயலும்.

ஈடுசெய்தலை மனவுணர்வுடனே குறிக்கோளினைப் பதிலீடு செய்வதன்மூலம் திருப்தியடைகின்ற பிரச்சினையை அணுகுவதற்குக் கைக்கொள்ளலாம். இந்நிலையில் அடிப்படைத் தேவை மாறுபடுவதில்லை. ஆனால், இது வேறு ஒரு செயல்மூலம் பூர்த்தி செய்யப்படுகின்றது. தூய்மை செய்தல் நடத்தையின் மாறுபட்ட வகையாகும். இதனையும் ஈடுசெய்தலில் ஒரு முறை என்று வகைபடுத்தலாம். இது மனவுணர்வின்றிச் செய்யப்பட்ட எதிர்வினைகளின் தொடர்பில் அமையலாம் அல்லது எந்த விதமான தனித்த திட்டமுமின்றித் தனியன் ஒரு தேவை அல்லது ஆசையினைப் பூர்த்தி செய்வதற்கான வாய்ப்புகளைப் பயன்படுத்துகின்ற தொடர்பிலும் அமையலாம். தனியனது தீரச்செயல்களில் உள்ள ஆசை, தீரச்செயல்கள் கொண்ட பயணத்தைப்பற்றியதொரு கருத்தினை வளர்த்துக்கொள்வதற்குக் காரணமாகலாம் அல்லது இலக்கியங்களில் சிலவற்றின் மீது அக்கறை கொள்வதற்கு அது காரணமாகலாம். தூய்மை செய்வதற்குரிய சாத்தியக் கூறுகள் பெரும்பாலும் இளையோனது சூழ்நிலையையும், அவ்வாறான தொல்லைமிக்க நிகழ்ச்சிகளைச் சந்திக்கின்ற அனுபவங்களையும் பெரிய அளவில் பொறுத்துள்ளன. நடத்தை இயக்கத்தில் இக்குறைபாடு, அது உட்காட்சியின் அடிப்படையில் தோன்றாத காரணத்தினால் ஏற்படுகின்றது. இது பெரும்பாலும் சூழ்நிலைத் தூண்டுதலினாலும், இளையோரது மனமுறிவுகளைச் சந்திக்கின்ற பழைய அனுபவங்களினாலும் ஏற்படுகின்றது.

ஒரு குறிக்கோளிலிருந்து இன்னொரு குறிக்கோளுக்குப் பதிலீடு செய்வதில் சில தனித்த நற்பயன்கள் இருக்கின்றன. அத்தகைய பதிலீடு போதிய அளவு செய்தியினாலும், நல்ல கொள்கையின் அடிப்படையினாலும் இருக்குமானால், நல்ல பயன்களை விளைவிக்கும். இளையோர் சிறுமி ஆசிரியர் பயிற்சி நுழைவுக்குரிய தரங்களைப் பெரு

விடில், குறிக்கோளைப் பதிலீடு செய்யக் கைக்கொள்ளுவதுதான் பயன்தரவல்ல, சாத்தியமான எதிர்வினையாகும். இவ்வாறு குறிக்கோளினைப் பதிலீடு செய்தல், மூலக்குறிக்கோளுடன் செய்துகொள்ளும் சமரசமாகவும் உருவாகலாம். இளையோர் சிறுமிக்கு உரிய பதிலீட்டு நடத்தை குழந்தைகளுக்கான பொழுதுபோக்குச் செயல்களில் உதவியளித்தல் அல்லது அன்றாடக் குடும்ப வேலைகளில் உதவியளித்தல் போன்றவைகளாகும். குடும்ப வேலைகளில் உதவியளித்தல் என்பதில் முக்கியமான பணி, ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட குழந்தைகளைப் பேணுதலாகும். சில சமயங்களில் பதிலீட்டு நடத்தை அல்லது சமரசம் செய்துகொள்ளுதல் ஒன்றுதலின் (identification) உருவினைக் கைக்கொள்ளலாம். இங்கிலையில் தனியனது அவாக்களும், தன்னைப்பற்றிய கருதுகோள்களும் சிலர் அல்லது சில நிறுவனங்களுடன் ஒன்றியிருக்கின்றன. இளையோர் சிறுவர் பேஸ்-பந்து குழுவில் இடம்பெறுவிட்டாலும்; மிகவும் இலேசாக 'நமது குழு' என்றும், 'நாம்' எப்படிப் போட்டியில் வெற்றியடையப்போகிறோம் என்றும் பேசுகின்றான். சிறுமி அவளது உடைகள்மூலம் சிலருடனோ அல்லது தான் போற்றுகின்ற சில குழுவினருடனோ தன்னை ஒருமைப்படுத்திக்கொள்கிறாள். இவ்வாறு ஒன்றுபடுதலின்மூலம் அவர்களது கருத்துநிலைத் தன்மை ஓரளவு பூர்த்தியாகின்றது.

ஒருவகையான பதிலீட்டு நடத்தை அல்லது சமரசம் ஒருவரது அடிப்படைத் தேவையை மற்றவருக்காக அடைவதைத் தள்ளிப் போடுகின்ற செயலில் முடிகின்றது. ஓர் இளையோர் சிறுமி சிறுவர்களின் அனுமதியினைப் பெறுகின்ற ஆவலினைப் பூர்த்தி செய்துகொள்ள முடியாதபொழுது, நூல்களிலும் இசையிலும் அவாக்களை அடைகிறாள். இவ்வாறான பதிலீடு மோசமான நிலையினை உடைய ஆளுமையினைத் தருகின்றது. ஏனெனில், சில வளர்ச்சிக்குரிய பணிகள் பூர்த்தியாகின்றன. ஆனால், சில பூர்த்தியாவதில்லை. இப்பிரச்சினைகளின் தொடர்பில்தான் இளையோர்களுக்கு வழிகாட்டலும் உதவியும் தேவைப்படுகின்றன. சில பகுதிகளில் பின் வாங்குதல்மூலம் பதிலீடுகளைத் தொடர்ச்சியாகச் செய்கின்ற இளையோன், தன் மதிப்பினை அப்பகுதிகளில் வளர்த்துக்கொண்டு, மற்றப் பகுதிகளில் மிகத் தீவிரமான அளவில் பின்தங்கியும் இருப்பான்.

## குறிக்கோளினைப் பொய்மையாக்குதல்

குறிக்கோளினைப் பொய்மைப்படுத்துவதற்குப் பயன்படுத்துகின்ற மிகவும் பரவலாக உள்ள முறை காரணங்கற்பித்தலாகும். இளையோர்கள் அடிக்கடி தாங்கள் நல்ல தரங்களைப் பெறத் தோல்வியுறுவதற்குத் தருகின்ற விளக்கங்களில் இதனைக் காணலாம். அவர்களது படிப்புக்கு அதிகமான அளவு தேவையான

காலத்தைத் தருவதற்கு மனமில்லாது அல்லது கீழான தரங்களைப் பெறுவதற்குக் காரணமாக இருக்கின்ற வேறு காரணத்தைக் கூறுது, மாணவன், தான் ஒரு புத்தகப் புழுவாக இருக்க விரும்பாது எல்லா நிலைகளிலும் சிறந்து விளங்குபவனாக இருக்க விரும்புவதாகக் காரணங் கற்பிப்பான். பேஸ்-பந்து குழுவில் இடம்பெற முயன்றதில் வெற்றி காணாத சிறுவன் தான் விளையாட்டு வீரனாக விரும்பவில்லை என்று காரணங் கூறுவான். விளையாட்டில் வீரனாக இருப்போர் பேசத் தெரியாத 'ஊமைகளாக' இருப்பார்கள் என்றும் காரணங் கற்பிப்பான். அது ஓரளவு 'சீ! சீ! இந்தப் பழம் புளிக்கும்' என்ற கொள்கையினைப் பிரதிபலிக்கிறது. காரணங் கற்பித்தல் அவனுக்குத் திருப்தியளிக்கின்ற முறையில் பயன்படுவதோடு, 'தன்முனைப்பினை' நிலைபெறச் செய்யவும் ஓரளவு காரணமாகின்றது.

சாதாரணமாகக் காரணங் கற்பிக்கின்ற வகையினை, ஒரு சிறுமி 'மே மாத அழகு இராணி' யாகத் தேர்ந்தெடுக்கப்படுவதில் தோல்வியடைந்த நிலையில் அறியலாம். அவள் இத் தோல்விக்குக் காரணமாகத் தனது தந்தை ஒரு சாதாரணக் குமாஸ்தா என்றும், தேர்ந்தெடுக்கப்பட்ட பெண்ணுக்குரிய 'சிபாரிசுகள்' (pull) தனக்கில்லை என்றும் காரணங் கற்பிப்பாள். இவ்வாறு குற்றத்தை யார்மீதாவது அல்லது சூழ்நிலையின் ஏதாவது ஒரு நிலையின்மீது செலுத்துவதைப் 'புறத்தோற்றம்' என்று கூறுவர். இல்லமும் பள்ளியும் புறத்தோற்றத்திற்கு ஆதரவு அளிக்கக்கூடாது. ஏனெனில், அதன் விளைவுகள் பொதுவாக இசைவானவையாக இல்லை. இவை எதிர்நோக்கியுள்ள பிரச்சினையைத் தீர்க்கின்ற வகையில் அமைவதில்லை. இதனைத் தனது தொல்லைகளுக்கு மற்றவைகளைக் காரணமாகக் காட்டுகின்ற இளையோன் அல்லது முதியோனது நிலையில் காணலாம். அவன் பல்வேறு குழுக்கள் தன்னை எப்பொழுதும் எதிர்ப்பதாக எண்ணுகிறான். மற்றவர்களது செயல்களிலும் கருத்துகளிலும் சந்தேகப்படுகிறான். அவனது சொந்த வரம்புகளை அவன் உணரத் தவறுகின்றான்.

## மழுப்புதல் அல்லது பின்வாங்குதல்

தொல்லையினைச் சந்திப்பதிலிருந்தோ, மனமுறிவுகள் சிக்கல்கள் ஆகியவற்றின் தொடர்பிலுள்ள மகிழ்ச்சியின்மையிலிருந்தோ தன்னைக் காப்பாற்றிக்கொள்வதற்காக மழுப்புதலைத் தனியன் கைக்கொள்கிறான். 'அடக்குதல்' என்பது ஒருவகையான மறதியாகும். அது மழுப்புதலை அடைவதற்கு மிகவும் எளிதான வழிகளில் ஒன்றாகும். இம்முறையின்மூலமாகத் தனியன், தன்னை ஏதாவது ஒரு தேவை அல்லது ஆவலோடு தொடர்புள்ள குலைத்தலினால்

ஏற்படுகின்ற மகிழ்ச்சியற்ற அனுபவத்தின் சிந்தனைகளிலிருந்து காப்பாற்றிக்கொள்கிறான். இது பொதுவாக மனவுணர்வின்றிச் செய்யப்பட்டுப் பழக்கத்தினால் வழக்கமாகக் கைக்கொள்ளப் படுகின்றது. உயர்நிலைப் பள்ளி மாணவன் துன்பம் தருகின்றதொரு பணியீட்டினை (assignment) மிகவும் எளிதாக மறந்துவிடுகின்றான். மகிழ்ச்சியற்ற அனுபவங்கள் மகிழ்ச்சியுள்ளவற்றைக்காட்டிலும் எளிதாக மறக்கப்படுகின்றன என்று கூறுவதற்குரிய சான்றுகளைப் பல ஏதுக்களினின்று நாம் பெறுகிறோம்.

உயர்நிலைப் பள்ளிச் சிறுமி மிகவும் வெறியுடன் நாளிடலுக்கு ஆசைப்படலாம். ஆனால், ஒரு சிறுவன் அவளை நடனமாட அழைக்கும் பொழுது, அவள் நன்றாக நடனமாட இயலாது என்று அச்சங்கொண்டு அல்லது நடனம் ஆடுவதில் புகழ்பெறமாட்டோம் என்ற அச்சத்தினால் மறுக்கலாம். அப்பிரச்சினையைச் சந்தித்து, ஒருவேளை தோல்வியடைதலைக்காட்டிலும் நாளிடலை வேண்டாம் என்பதே அவளுக்குச் சிறந்ததாகத் தோன்றுகிறது. அமெரிக்கப் பண்பாடு விடாமுயற்சியிலும், போட்டியிலும், வெற்றியிலும் அதிகப்படியான முக்கியத்துவம் கொண்டுள்ளது. ஆதலின், தோல்வியடைதல் இளையோர் சிறுவனுக்கும் சிறுமிக்கும் தீவிரமான பிரச்சினையாகும். சமூக அழுத்தங்கள் பெரும்பாலும் சிறுவனை அல்லது சிறுமியை முயற்சிகளை இடைவிடாது கைக்கொண்டு தடைகளைக் கடக்கும்படி உந்துகின்றன. அவர்களைப் பின்வாங்கும்படி வழிகாட்டவேண்டிய சமயத்திலும், உண்மையான தன்மையுடைய செயல்களில் ஈடுபட வேண்டும் என்று உணர்த்தவேண்டிய காலத்திலும், அவர்களது திறமைக்கும் இயல்புகளுக்கும் அதிகமான இணக்கத்தினைப் பெறுகின்றவாறு செயல்கள் இருக்கும்பொழுதும், சமூக அழுத்தங்கள் அவனைத் தடைகளைக் கடக்கும்படி உந்துகின்றன. இருப்பினும், பின்வாங்குதல்மட்டுமே பதிலீட்டினைக் கண்டுபிடிக்க வழிகாட்டாமல் இருப்பது அதற்குரிய பதிலன்று.

இளையோர்களிடத்தும் முன்னிளையோர்களிடத்தும் அடிக்கடி காணப்படுகின்ற ஒருவகை மழுப்பல் பகற்கனவு காண்பதாகும். பல சிறுவர் சிறுமியர் பள்ளி அல்லது தங்கள் சமூக வாழ்வில் தோல்வியுறுதல், அவர்களைக் 'கனவு உலகத்தில்' அடைக்கலம் காணச் செய்கின்றது. அக் 'கனவு உலகம்' கனவுருவப் புனைவாற்றல் உலகமாகும் (a world of fantasy). லீவின் (Lewin) ஆளுமைகளை உண்மை, பொய் ஆகியவற்றின் விளிம்பில் மாறிமாறிச் செல்கின்றவைகளாக விளக்குகின்றார்.[28] இவ்வாறு உண்மைக்கும் புனைவாற்றலுக்கும் உள்ள மாறுபாடு சிறு குழந்தைக்கு எப்பொழுதும் தெளி

[28] K. Lewin, 'Field Theory in Social Science'. New York: Harper & Bros., 1950.

வாக இருப்பதில்லை. மனமுதிர்ச்சி அதிகமாகும்பொழுதும், கல்வி விரிவடைகின்றபொழுதும் குழந்தையும், முன்னிளையோனும் உண்மையினின்று புனைவாற்றலைப் பிரித்துணர முடிகின்றது. இருப்பினும், அவன் பல கலைகளில் தனது கனவு உலகம் உண்மை உலகத்தைக் காட்டிலும் மகிழ்ச்சிகரமாக இருப்பதனைக் காண்பான். புனைவாற்றல் மூலம் அவனால் உலகத்தை உருவாக்கவும், அவனது விருப்பத்துக் கேற்றவாறு நிகழ்ச்சிகளின் இயல்பினை அமைக்கவும் முடிகின்றது. மேலும், புனைவாற்றல் உலகில் கருத்து நிலைத்தன்மை அடைவது ஒப்பீட்டடிப்படையில் மிக எளிதானதாய் இருக்கும். மேரி என்ற பெண்ணின் சமூக அனுமதிக்கான தேவை, மோசமான பழக்கங்களை அவள் வளர்த்துக்கொண்டதனால் மிகவும் தீவிரமான பிரச்சினையாகி விட்டது. இது அவளைப் புனைவாற்றலுடைய உலகிற்குக் கொண்டு சென்று, அதில் அவள் தனது ஒப்பாரிடம் மிகவும் புகழ் பெற்றவளாக வும் அல்லது ஏதாவது ஒரு போட்டியில் வெற்றிபெற்றவளாகவும் காண வழி செய்கின்றது.

சில குழந்தைகள் வெறுப்புக் காரணமாக முகத்தைச் சுளித்துக் கொண்டிருத்தல் அல்லது வெறுப்புக் காரணமாக உதட்டைப் பிதுக்குதல் போன்றவைகளைக் கைக்கொள்ளுதல் துவக்க ஆண்டுகளில் கையாளுகின்ற ஒதுங்கிச் செல்லும் இயக்கமாகும். இவைகளில் சில தொடர்ந்து கையாளப்பட்டு, இளையோர் ஆண்டுகளுக்குப் பின்னரும் காணப்படுகின்றன. குலைத்தலுக்குத் துலங்குகின்ற இம்முறையில், வளர்ச்சியிலுள்ள முக்கிய அபாயங்களில் ஒன்று, இம்முறை மன முறிவுகளுக்கு எதிர்வினையளிக்கின்ற பழக்கமாகச் செல்லுகின்ற குறியாகவுமாகலாம் என்பதே. இவ்வாறான முறைகள் சமூகத்தன்மையில் இசைவில்லாதனவாகவும், உண்மையாகப் பிரச்சினைகளைத் தீர்ப்பதில் பொதுவாகப் பயனற்றனவாகவும் காணப்படுகின்றன. ஒடுக்குதல் தனியன் மனமுறிவினின்று ஒதுங்கிப் பின்வாங்குகின்ற ஒரு வகையாகும். இம்மனமுறிவு குழந்தைத்தன்மையில் அவனது தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக இருக்கின்றது. இளையோர் சிறுமியின் அழுகையும், குழந்தைத்தனமான குறும்பும் அல்லது சிறுவனது 'மற்றவர்கள் கவனிக்க நடந்துகொள்ளும்' நடத்தையும் இவ்வாறு ஒடுக்குதலைப் பயன்படுத்துகின்ற நிலைகளுக்குத் தக்க சான்றுகளாகும். இளையோர் பருவத்தில் அதிகமாகக் காப்பாற்றுதல்மூலம், குழந்தைகளை வளரவிடாது தடுக்கின்ற பெற்றோர்கள், இவ்வாறான நடத்தை வளர்வதற்கு முக்கிய ஏதுவாக அமைகின்றனர்.

## அறிவுத்தன்மையில் அணுகுதல் (Rational Approach)

அதிகாரம் பதினொன்றில் அளிக்கப்பட்ட அடிப்படை மன-ஆரோக்கியக் கருத்துகளில் ஒன்று, தனியன் உண்மையைச்

சந்திக்க விருப்பமும் திறனும் உடையவனுக இருப்பதும், அவனது மனச்சாட்சிக்கு நேர்மையாக இருப்பதும் ஆகும். ஒருவன் ஒரு மனமுறிவு நிகழ்ச்சியினை வெற்றிகரமாகத் தீர்ப்பதற்கு அதனை ஒரு பிரச்சினையாக ஏற்றுக்கொண்டு அதனை அறிவுத்தன்மையில் தீர்வு காணவேண்டுமேயன்றி, மனவெழுச்சி அணுகுதல்முறையில் தீர்வு காணக்கூடாது. சில சமயங்களில் தனியன் பின்வாங்குதலை, பின் பற்றுதற்குரிய சரியானதொரு முறையாகக் காண்பான். இசை பயிலும் மாணவன் தனது திறமைக்குறைவினுல் அவனுல் அதைப் பயிலமுடியாது என்று உணர்வான். ஆதலின், அவன் ஒரு சமரசம் அல்லது பின்வாங்குதலைக் கைக்கொள்ள வேண்டியதாகின்றது. அவன் ஏற்றுக்கொள்ளும் முடிவுகள் கீழ்க்கண்ட ஏதுக்களைப் பொறுத்து இருக்கின்றன: (1) ஊக்கியின் வலிவு அல்லது இசையின்மீதுள்ள குறிக்கோள்; (2) மற்றக் குறிக்கோள்கள் அல்லது ஊக்கிகளின் வலிவு; (3) பல்வேறு குறிக்கோள்களுள் பணம், மற்றும் பல நிலைகள் கொள்ளும் தொடர்புகள்; (4) இவ்வாருன பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு முன்னர் வெற்றிகரமாகப் பயன்படுத்தப்பட்ட முடிவுகள். இளையோன் உண்மையினைச் சந்திக்க வழிகாட்டப்படல் வேண்டும். அவன் எதிர்பார்க்கின்றவாறு இல்லாதபொழுது, நிலைகளை இருக்கின்ற வாறு ஏற்றுக்கொள்வதற்கு வழிகாட்டப்படல்வேண்டும். அவனிடம் ஏதாவது சில மனமுறிவு நிலைகள் தோன்றியவுடன், அவன் தான் கைக் கொள்ளும் குறிக்கோளினை விட்டுவிடவேண்டும் என்று இது பொருள் படாது. இதற்கு மாருக, நிலையினை நன்ருக உணர்ந்து, பிரச்சினையின் தொடர்பில் தன்னைப்பற்றிய அறிவுத்தன்மையான கருத்தினைப் புரிந்து கொண்டு, அதன் அடிப்படையில் அவன் முடிவினை எடுக்கவேண்டும்.

அறிவுத்தன்மையான அணுகுதல், தனியன் தன்னை அறிந்து கொள்வதற்கும், அவனை எதிர்நோக்கியுள்ள நிகழ்ச்சியினை அறிவதற்கும் உள்ள தேவையினை வலியுறுத்தும். ஒரு தொல்லையினைத் தீர்க்க வலுத்தாக்குதலைக் கைக்கொள்ளுதல், வெற்றியளிப்பதற்கு வாய்ப்பு அளிக்குமாஞல், ஆதரவினைத் தரவேண்டும். மனவெழுச்சி அடிப் படையில் உள்ள மாறுபாடுகொண்டு வலுத்தாக்குதலை ஆதரிக்கக் கூடாது. பிரச்சினையைத் தீர்க்கும் வினைமுறைகளைப் பயன்படுத்தித் தனியன்களது பிரச்சினைகளைத் தீர்ப்பதே கல்வியின் இயக்கவாற்ற லாகும். இதன் பொருள் என்னவெனில், குழந்தைத் தன்மையான மனவெழுச்சி வெடிப்புகள், அறிவுத்தன்மையில் மழுப்புதல்கள், மற்றவர்கள்மீது கொள்ளும் வலுத்தாக்குதல்கள், தொடர்ச்சியாகப் பகற்கனவு காணுதல் ஆகியவற்றைப் புரிந்துகொள்ளுதல், பிரச் சினை தீர்க்கும் வினைமுறைகள், தன்னடக்கம், தன்மதிப்பீடு, துன்ப மான நிகழ்ச்சிகளை உண்மையான தன்மையில் சந்திப்பதற்கு விருப் பம் ஆகியவற்றில் ஈடுசெய்தலாகும். மேலும், இதைப்பற்றிய செய்திகள் அதிகாரங்கள் 11-லும் 17-லும் தரப்படும்.

## அதிகாரச் சுருக்கவுரையும் முடிவுகளும்

நமது சமூக அமைப்பின் அதிகமான சிக்கல் வாய்ந்த தன்மை, வழிகாட்டலுக்கும் பயிற்சிக்கும் அதிகமான அளவு தேவையினைக் கொண்டு வந்துள்ளது. வளர்கின்ற சிறுவர்களும் சிறுமியர்களும் அந்நிலைகளைத் திருப்திகரமான வழியில் சந்தித்தால், எதிர்காலத்தை அவர்களால் சந்திக்க இயலும். இருப்பினும், வளர்ச்சியடைவதே பல பிரச்சினைகளுடன் வருகின்றது. இவை இளையோனது வாழ்க்கையின் பல்வேறு இயல்புகளுடன் தொடர்பு கொண்டுள்ளன. அவை மிகவும் உண்மையானவையாகவும், தனிச் சிறுவனுக்கோ அல்லது சிறுமிக்கோ முக்கியத்துவம் வாய்ந்தவையாகவும் உள்ளன. அவை ஒரு முதிர்ந்த முதியவனுக்கு மிகவும் சிறு காரியமாகத் தோன்றலாம். இளையோர் நடத்தையினை ஆய்வுசெய்யும் மாணவர்கள் இளையோர்களது பிரச்சினைகளில் அக்கறை காட்டுகின்றனர். ஆய்வுகள், இல்லப் பிரச்சினைகளும் பள்ளிப் பிரச்சினைகளும் வளர்கின்ற சிறுவர் சிறுமியரது வாழ்க்கையில் பெரிய அளவில் தோன்றுவதாகக் காட்டுகின்றன. இப்பிரச்சினையின் விளைவுகள் இளையோர்களது சொந்த, சமூகப் பொருத்தப்பாடுகளில் போதிய அளவு இருக்கவேண்டிய தொடர்பில் மிக முக்கியம் வாய்ந்தவையாகும்.

இளையோர் பிரச்சினைகளின் தன்மை சமூக நிலைகளிலும், வாழும் நிலைகளிலும் மாறுபட்ட தன்மையுடையதாய் இருக்கின்றது. முன்னிளையோரிடையே உள்ள பிரச்சினைகள் பெரிய அளவில் அவர்களது சொந்தத் தேவைகளோடு தொடர்புடையனவாயிருக்கும். ஆனால், வளர்ந்த சிறுவர் சிறுமியர்களது பிரச்சினைகள் சமூகத் தேவைகளின் தொடர்பில் இருக்கும். மனமுறிவுக்குரிய வாய்ப்புகள் முதிர்ச்சி யடைவதுடன் அதிகமாகின்றன. இளையோர்களது தேவைகளும் ஆசைகளும் விரிவடைகின்றன. இவ்வதிகாரத்தில் குறிக்கப்பட்டுள்ள மனமுறிவுக்குரிய காரணங்கள் கலாசாரத் தேவைகள், இல்லச் சூழ்நிலை, சமூக—வகுப்பு அந்தஸ்து, பள்ளி ஆகியவைகளாகும். இவ்வேதுக்கள் தனித்தியங்குவதில்லை. இளையோனது சூழ்நிலையில் இவைகளின் இணைந்த செல்வாக்கும் மற்றச் சக்திகளும் செயற்பட்டு, நல்ல பொருத்தப்பாடுடைய அல்லது மோசமான பொருத்தப்பாடுடைய ஆளுமையினை உண்டாக்குகின்றன. இளையோனைப்பற்றிய இவ்வாய்வு முழுவதிலும், ஆளுமை, மரபுவழி ஏதுக்களுக்கும், உள்ளடங்கிய திறமைகளுக்கும், பல சூழ்நிலை ஏதுக்களுக்குமிடையே உள்ள தொடர்புகளின் விளைவாகும் என்பது வலியுறுத்தப் பெற்றது.

இவ்வதிகாரம் இளையோர் ஆண்டுகளில் வெற்றிகரமான சமூகப் பொருத்தப்பாட்டின் முக்கியத்துவத்தை வலியுறுத்துகின்றது. சமூக

இயல்பினனுவதில் தோல்வி ஏற்படுமாயின், தவருன பொருத்தப் பாட்டுக்குரிய பல்வேறு அறிகுறிகள் தோன்றுகின்றன. இவ்வறிகுறி கள் தோன்றுவதைக்காட்டிலும் தொடர்ந்து இருப்பதே அதிகமான முக்கியத்துவம் வாய்ந்ததாகும். நடத்தை இயக்கங்கள், பல சமயங் களில் முயன்று தவறுகின்ற அனுபவங்களின் விளைவாக ஏற்படு கின்றன. அவைகள் மனமுறிவுகளுக்கும் அல்லது சிக்கல்களுக்கும் பொருந்தி அமையக் கைக்கொள்ளப்படும் முயற்சியைக் குறிக்கும் வகையில் தனியனுல் வெளியிடப்பெறுகின்றன. இவ்வதிகாரத்தில் விளக்கப்பட்டுள்ள இயக்க அமைப்புகள் பொதுவான நடத்தை வகைகளாகும். பல நிலைகளில் அவை நடத்தையின் கட்டாய வகை கள் என்பதில் ஐயமில்லை. அவைகள் நிலையான, நிலையில்லாத நரம்புப் பிணிகொண்ட அனைவராலும் பயன்படுத்தப்படுகின்றன. அவை தனியனது வாழ்க்கையில் திடீரென்று தோன்றியவை அல்ல. அவை முறையற்றும் தோன்றவில்லை. இதனைப்பற்றி வார்ட்டர்ஸ் என்பவர் (Warters) கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகின்ருர்:[29] 'அவை கள் சமூக இடைத்தொடர்பினுல், ஒரு குறிப்பிட்ட காலத்தில், கற்ற தனுல் பெற்ற பழக்கங்களாகும். தனியன், அவற்றை, மற்றவர்களைப் பின்பற்றும் முறையின்மூலமாகக் கற்கிருன். மற்றவர்கள் அவனுக்கு அளிக்கின்ற நேரடியான, மறைமுகமான வழிகாட்டலினுலும் கல்வி யின்மூலமாகவும் அவன் கற்கின்ருன். அவன் பெரும்பாலும் அவற்றை மற்றப் பழக்கங்களை அடைவது போன்றே முயன்று தவறிக் கற்கும் முறைமூலம் பெறுகின்ருன். குலைத்தலுடன் பொருந்தி அமைவதற்கு ஒரு தனித்த இயக்கமுறை பயனுடையதாய் இருக்கின்றது என்று அறிவானுனல், அவன் அடுத்துக் குலைத்தலைச் சந்திக்கும்பொழுது அதனைப் பயன்படுத்தலாம். மறுமுறை அது வெற்றியளிக்காவிடில், அதனை மாற்றியமைக்க முதலில் முயற்சிசெய்து, பின்பு அவசியமானுல் அதனை முழுமையாக மாற்ற முற்படலாம்.'

## சிந்தனைக்குரிய பிரச்சினைகள்

1. சிறுவர் சிறுமியர்களது பொருத்தப்பாட்டுப் பிரச்சினைகளை ஒப்பிடுக. மாறுதல்களுக்குக் காரணம் என்னவென்று நீ நினைக்கிருய்?

2. பள்ளியிலுள்ள ஒரு குழந்தையைப் பல தடவை உற்று நோக்கி, தவருன பொருத்தப்பாடுகளுக்குண்டான அறி குறிகள் இருந்தால், குறிக்கவும். இவ்வறிகுறிகள் எல்லாக் குழந்தைகளிடத்தும் காணப்படுகின்றவையா? இக்கருத்

[29] J. Warters, 'Achieving Maturity.' New York: McGraw-Hill Book Co., 1949, p. 209.

தைப்பற்றிய முக்கியத்துவம்கொண்ட உற்றுநோக்கல் இருக்குமாயின், விளக்குக.

3 உன்னுடைய வாழ்க்கையில் கவனித்த ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட குற்ற நடத்தை உடையவர்களைப் பற்றிக் கருதுக. அவர்களை நீ சமூக இயல்புள்ள குற்ற நடத்தை வகையினர் என்று கருதுவாயா அல்லது சமூக இயல்பில்லாத வலுத்தாக்குதல் வகையினர் என்று கருது வாயா? முக்கிய மாறுதல்கள் எவை?

4. சமூக இயல்பினவுவதில் தோல்வியடைவதற்குரிய முக்கியக் காரணங்கள் எவை? அவைகளது முக்கியத்துவத்திற்கு ஏற்றவாறு வரிசைப்படுத்துக. சமூக இயல்பினவுவதில் தோல்வியடைந்த ஒரு தனியனைப்பற்றி விளக்குக. இத் தோல்விக்கு நீ காரணமாகக் கருதுபவைகளைக் கூறுக.

5. இல்ல வாழ்க்கைப் பகுதியில் இளையோர்களின் குறிப்பிடத் தக்க பொருத்தப்பாட்டுப் பிரச்சினைகளை வரிசைப்படுத் துக. இப்பிரச்சினைகளைப் பெரிதாக்குகின்ற ஏதுக்கள் அல்லது நிலைகள் யாவை?

6. ஒவ்வொருவரும் ஏதாவது ஒருவகையான தாழ்வு மனப் பான்மை கொண்டிருக்கலாம். அது உண்மையின் அடிப் படையில் எழுந்ததாயும், எழாததாயும் இருக்கலாம். உனக்குத் தெரிந்தவர்களில் இம்மனப்பான்மை கொண்ட வர்களைப்பற்றி எழுதுக. இவ்வாறான தாழ்வு மனப்பான் மைக்கு முக்கிய ஏதுக்களாக இருப்பவை எவை? எந்த விதப் பால் மாறுதல்கள் இருக்கின்றன என்று ஒருவர் எதிர்பார்க்கலாம்?

7. குழந்தைத்தன்மை இளையோர்களிடம் இருப்பதற்குச் சான்றுகள் தருக. கீழ்க்கண்ட குழந்தைத்தன்மை நடத்தை வகைகளை வெளிப்படுத்துவதைத் தரமிடுக. (ஒவ்வொரு பொருளையும் ஐந்து புள்ளி அளவில் தரமிடுக. 1. அரிதாக, 2. எப்பொழுதாகிலும், 3. பாதிநேரங் களில், 4. அடிக்கடி, 5. பெரும்பாலும்):

(i) பிறர் கவனிக்கவேண்டும் என்று நடந்துகொள்ளுதல் அல்லது இயல்பில்லாத நடத்தை வகைமூலமாக மற்றவர்களது கவனத்தைக் கவருதல்.

(ii) நடத்தைச் செயல்கள் ஒரே தன்மை வாய்ந்தனவா யில்லை.

(iii) உண்மையைச் சந்திக்க மறுப்பு,

(iv) சுயநலத்தை மிக அதிகமான அளவில் வெளிப்படுத்துதல்.

(v) எளிதில் எதற்கும் அழுதல்.

(vi) கோபவெளிக்காட்டல் மிக எளிதாகத் தோன்றுதல்.

(vii) பொறுமையின்மை வெளிப்படுத்துதல்.

(viii) குழந்தைப் பருவ மன்னிப்புகள்.

(ix) துன்பமான செயல்களைத் தவிர்த்தல்.

## தெரிவுசெய் நூற்பட்டியல்

1. Anderson, J. E., 'The Psychology of Development and Personal Adjustment.' New York : Henry Holt and Co., 1949, Chaps. 17 and 18.

2. Blos, P., 'The Adolescent Personality': A Study of Individual Behaviour. New York : Appleton-Century-Crofts, Inc., 1941, Pt. III.

3. Cole, L., 'Psychology of Adolescence' (Fourth Edition). New York: Rinehart and Co., Inc., 1954, Chap. 7.

4. Cruze, W. W., 'Adolescent Psychology and Development.' New York : The Ronald Press Co., 1953, Chap. 17.

5. Garrison, K. C., 'The Psychology of Exceptional Children,' (Revised Edition). New York : The Ronald Press Co., 1950, Chap. 19.

6. Kuhlen, R. G., 'The Psychology of Adolescent Development.' New York : Harper & Bros., 1952, Chap. 8.

7. Malm, M., and O. G. Jamison, 'Adolescence.' New York : McGraw-Hill Book Co., 1952, Chaps. 7, 8, and 9.

8. O'Kelly, L. I., 'Introduction to Psychopathology.' New York : Prentice-Hall, Inc., 1949, Chap. 9.

9. Patty, W. L., 'Personality and Adjustment.' New York: McGraw-Hill Book Co., 1953.

10. Pearson, G. H. J., 'Emotional Disorders of Children.' New York: W. W. Norton & Co., 1949, Chap. 4.

11. Sappenfield, B. R., 'Personality Dynamics; An Integrative Psychology of Adjustment,' New York: Knopf, 1954.

12. Steckle, L. C., 'Problems in Human Adjustment'. New York: Harper & Bros., 1949, Chaps. 6 and 13.

13. Stone, C. P., 'Case Studies in Abnormal Psychology', Stanford, Calif.: Stanford University Press, 1943.

14. Thorpe, L. P., 'Child Psychology and Development'. New York: The Ronald Press Co., 1946, Chap. 15.

15. Travis, L. E., and D. W., Baruch, 'Personal Problems of Everyday Life'. New York: Appleton-Century-Crofts, Inc., 1941.

16. Warters, J., 'Achieving Maturity'. New York: McGraw-Hill Book Co., 1949, Chaps. 7, 8, 9 and 10.

17. Wattenberg, W. W., 'The Adolescent Years'. New York: Harcourt, Brace and Co., 1955, Chap. 20.

# 11. இளையோர் பருவத்தின் நலவியல்

பல்வேறு விஞ்ஞானங்களில் பெறுகின்ற சீரிய அறிவு, மனிதனிடத்து அதிகமான அக்கறையினை உண்டாக்குகிறது. அவனது வாழ்க்கையின் வெவ்வேறு காலங்களிலுள்ள நடத்தையினை அறிந்து கொள்வதற்கும் அது அதிகமான ஆவலினை ஏற்படுத்துகிறது. சிறுவர் சிறுமியர்களது வளர்ச்சியினைப் பாதிக்கின்ற பல்வேறு சக்திகளைப் பற்றிப் பெற்ற அறிவு, இளையோர்களின் உடல்நலத்தையும் மன நலத்தையும் வெகுவாகப் பாதிக்கின்ற பல்வேறு நிலைகளுடன் போராட அதிகமான ஊக்கத்தினை அளிக்கின்றது. இன்று, 'நலவியல்' எனும் சொல் எல்லோரும் அறிந்த ஒரு பொருளினைக் கொண்டதாக ஆகி, ஆசிரியர், மருத்துவர், இளங் குற்றவாளி, நீதிமன்றத்தின் நீதிபதி, சமூகப் பணியாளர், நர்ஸ் ஆகியோரது உதடுகளில் எப்பொழுதும் ஒலித்துக் கொண்டுள்ளது. இச்சொல் ஆன்மீகத் தேவைகளையும், பயன்மதிப்புகளையும் அளிக்க முயல்கின்றவர்களாலும் பயன்படுத்தப் படுகின்றது.

இளையோர்களது ஆரோக்கியப் பிரச்சினைகளைக் குறித்து இவ்வதிகாரம் அக்கறைகொள்கின்றது. உடல்-ஆரோக்கியம் இளையோர் பருவத்தில் முக்கியத்துவம் வாய்ந்தது எனினும், மன நலந்தான் அதிகமாக வலியுறுத்தப்பட்டுள்ளது.

## மனநலம்

### மனநலத்தின் முக்கியத்துவம்[1]

இந்த நூற்றுண்டின் முதல் ஐம்பது ஆண்டுகளில் உடல்-ஆரோக்கியத்தின் முக்கிய வளர்ச்சிகளைக் கண்டோம். மருந்துகளும்

[1] A major source of information about films relating to mental health in education is the National Association of Mental Health, 1790 Broadway, New York 19, N. Y.

தடுப்பு முறைகளும் தொத்து வியாதிகளைத் தடுப்பதற்குக் கண்டு பிடிக்கப்பட்டன. முன்னொரு காலத்தில் உயிர்களைக் கொல்வதில் முதலிடம் கொண்டிருந்த நிமோனியாவின் அச்சம் இன்று அநேக மாக மறைந்து விட்டது. சிறு குழந்தைகளின் இறப்பு விகிதமும் மிகவும் குறிப்பிடத்தக்க அளவில் குறைந்து விட்டது. சராசரி வாழ்க்கையின் அளவும் நீண்டுவிட்டது. மோசமான நோய்களின் கெட்ட விளைவுகள் குறைந்து வருகின்றன. இக்காலத்தில் குழந்தை யின் பயிற்சியில் அக்கறை கொண்டுள்ள சமூகப் பணியாளர்களும், ஆசிரியர்களும், மற்றவர்களும் குழந்தைகளுடைய உடல் நலப் பிரச்சினைகளின் முக்கியத்துவத்தை உணர்ந்துள்ளனர். மன நலத்தின் பொதுப் பகுதி வளர்ச்சி வேகம், உடல் வளர்ச்சி கொள் கின்ற வேகத்துக்கு ஈடாகாது. மனநலத்தின் நோக்கத்தினைப்பற்றி அண்மையில் கீழ்க்கண்டவாறு குறிப்பிடப்பட்டுள்ளது:

'மனநலம் அடிப்படையில் உடல்-ஆரோக்கியத்தைப் பொறுத் துள்ளது. ஆரோக்கியமான மனவெழுச்சியுடைய வாழ்க்கை, உளப் பிணி நோய்த் தடுப்பினைப்பற்றிய அக்கறை ஆகியவைதாம் மனநலமே யன்றி, ஏற்கெனவே நோய்வாய்ப்பட்டுள்ளவர்களைப்பற்றியதொரு நோய் தீர்க்கும் மருத்துவ முறையன்று.'[2]

உள மருத்துவவியல், அதனுடைய துவக்க நாட்களில் பொறுப் பினையும் இயக்கக் கட்டுப்பாட்டினையும் அதிகமாக வலியுறுத்தியது என்றாலும், முதலில் முழுமையாக மனநோய்களைப்பற்றிக் கருதியது. படிப்படியாக இவ்வாறான நோய்களைத் தடுப்பதில் அதிகமான கவனத்தைச் செலுத்தியது. ஆளுமையினைப்பற்றி அதிகமான அறிவு பெற்றாலும், அதன் வளர்ச்சியினையும் முதிர்ச்சியினையும்பற்றி அதிகமாகப் புரிந்துகொண்டாலும், குறிப்பாக மனவெழுச்சிப் பகுதியினை நன்றாக அறிந்தாலும், நல்ல வளர்ச்சியுள்ள ஆளுமையினைப் பெறுவதற்கு, ஆளுமை, நோயினின்று தவறான பொருத்தப் பாட்டு நிலையினைப் பெறுவதைத் தடுப்பதே சிறந்த தடுப்புமுறை என்று ஏற்றுக்கொள்ளப்படுகின்றது.

## மனப்போராட்டங்களும் பொருத்தப்பாடுகளும்

குழந்தைப் பருவத்தின் மனவெழுச்சிப் போராட்டங்கள் திருப்தி யளிக்கின்ற வகையில் தீர்வினைப் பெறுவிட்டால், நரம்பு நோய்களின் அறிகுறிகளுக்குக் கொண்டுசெல்லுகின்றன. இளையோர்களாலும்

[2] P. V. Lemkan, B. Pasamanick and M. Cooper, 'The Implications of the Psychogenetic Hypothesis for Mental Hygiene,' American Journal of Psychiatry, 1953—54, Vol. 110, p. 437.

பின்னிளையோர்களாலும் அனுபவிக்கப்படுகின்ற தொல்லைகளில் பல, அவர்களது குழந்தைப் பருவத் தீர்வுகாணாது தொடர்ந்து இருக்கின்ற பிரச்சினைகளின் காரணமாக ஏற்படுவனவாகும். பல நிலைகளில் அவை மாறுதலுக்குட்பட்ட சமூக நிலைகளாலும், உடலியல் முதிர்ச்சியினாலும் ஏற்படுவனவாகும். இளையோர் பருவ காலத்தில் அனுபவிக்கின்ற பல பிரச்சினைகளை 'இளையோர் பிரச்சினைகள்' என்று குறிப்பிடுவதுண்டு. அவ்வாறு குறிப்பிடுதல் ஓரளவு சரியானதுமாகும். ஏனெனில், அவைகளின் தோற்றம் பால்-உந்துவின் வளர்ச்சியோடும் முதிர்ச்சியோடும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. பூப்படைகின்ற காலத்தில் தோன்றுகின்ற அதிகப்படியான பால்-உந்து சமூக இயல்பினருக்கும் சக்திகளுக்கும், இயக்கத் தனியனுக்கும் இடையே இசைவான ஒற்றுமையை உண்டாக்குவதைத் தீவிரமாகப் பாதிக்கும். இவ்வாறு இச் சக்திகளுக்கும் குறிக்கோளுக்கும் இடையே போராட்டங்கள் தோன்றலாம். வளர்ச்சிக் கால ஆண்டுகளில் வளர்த்துக்கொண்ட தனியனது தொடர்பில் உள்ள கருதுகோள்களுக்கும், இச் சக்திகளுக்குமிடையேயும் போராட்டங்கள் தோன்றலாம். இவ்வாறு போராட்டங்கள் குற்ற உணர்வுகள், மனம் அழுந்திய நிலைகள், பற்றுர்வங்கள் போன்ற உணர்வு வகைகளில் தோன்றலாம். இப் போராட்டங்களைத் தீர்ப்பதற்கு இளையோன் பல்வேறு வகையான நடத்தையினைக் கைக்கொள்ளலாம். தனியனது வாழ்க்கையில் முதல் முறையாகப் பெற்றோர் கட்டுப்பாடுகளுக்கு எதிராக வெளிப்படையான போராட்டம் தோன்றும். இது சாத்தியமில்லாதபொழுது, சில மனமுறிவு நிகழ்ச்சி அல்லது நிலையினைத் தீர்க்கத் தனியன் பொய் சொல்லுதல், ஏமாற்றுதல் போன்ற முறைகளைக் கையாளுவான். பின்வாங்கும் நடத்தை, பின்னேக்கம், முன்னைய நடத்தைக்குத் திரும்பிப்போதல் போன்ற தற்காப்பு வகையான முயற்சிகளும், இப் போராட்டங்களைத் தீர்ப்பதற்குக் கையாளப்படலாம்.

முல்லன் (Mullen) இரண்டு உயர்நிலைப் பள்ளி இளைஞர் குழுக்களது வெளிப்படையாகத் தோன்றுகின்ற மனமுறிவுகளைப் பகுத்தாராய்ந்தார். பள்ளியிலிருந்து ஊர்சுற்றிய காரணத்தினால் நின்றுவிட்டவர்கள் ; பள்ளியில் இருக்கின்றவர்கள், ஆனால், வகுப்பறையில் ஒழுங்கற்ற நடத்தையினைக் கைக்கொண்டதனால் நகரக் குழந்தை ஆய்வுக் கழகத்திடம் அனுப்பப்பட்டவர்கள்.[3] அட்டவணை 11-ல் தரப்பட்டுள்ள குறிப்புகள், இளையோர் பள்ளியில் ஊர்சுற்றும் வரலாற்றினைப் பெற்றிருந்தாலும் அல்லது வகுப்பறையில் தவறான நடத்தையினைக் கைக்கொள்பவராக இருந்தாலும், மற்ற ஏதுக்களும்

[3] F. A. Mullen, 'Truancy and Class-room Disorders as Symptoms of Personality Problems,' Journal of Educational Pschology, 1950, Vol, 41, pp. 97—109,

நிலைகளும் அதிகமாகக் கொண்டவராய் இருப்பதாகக் காட்டுகின்றன. அவர்கள் உடற்குறைபாடுகள் கொண்டவர்களாயும் இருக்கலாம். அவர்களில் சிலர் அதிகமான சமூகக் குடும்பப் பிரச்சினைகளைக் கொண்ட இல்லங்களிலிருந்து வருபவர்களாகவும் இருக்கிறார்கள். பெரும்பாலும் அவர்கள் தங்களுடைய ஒப்பாருடன் மோசமான பொருத்தப்பாட்டினை உடையவர்களாகவும் இருக்கின்றனர். இரண்டு வகையான இளையோர்களும் கல்வியில் பின்தங்கியிருப்பவர்களாகவும், கீழான தரத்தினைப் பெற்றவர்களாகவும் இருக்கின்றனர். பள்ளியைச் சார்ந்த ஊர்சுற்றுபவர்களுக்கும், வகுப்பறையில் தவறான நடத்தை கொண்டிருப்பவர்களுக்கும் இடையே உள்ள ஏதுக்களை ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, இவ்வாய்வில் ஒரு சுவையான இயல்பு தோன்றுகிறது. பொதுவாக, பள்ளியில் ஊர்சுற்றுபவர்கள் அதிகமான இல்லப் பிரச்சினைகளைக் கொண்டிருக்கின்றனர். ஆனால், தரத்தில் பின்தங்கியிருத்தலும், வாசிக்கும் திறனில்லாமையும் வகுப்பறையில் தவறான நடத்தை உடையோரிடம் அதிகமாகக் காணப்படுகின்றன. குடும்பத்தில் பெறுகின்ற அந்தஸ்துநிலையின் செல்வாக்கு, இளையோர்களிடத்து முன்னிளையோர்களைக்காட்டிலும் குறைவாகவே உள்ளது.

சிலரது நிலைபற்றிய ஆய்வுகள், தவறான பொருத்தப்பாடுகள் ஆழமாகப் பதிகின்ற மனவெழுச்சித் தொல்லைகளை உண்டாக்குவதாய்க் குறிப்பிடுகின்றன. இத் தொல்லைகள் வெவ்வேறான பாதைகளில் திரும்புகின்றன. அவற்றில் சில சமூகமயமாகாத, வலுத்தாக்குதலிலுள்ள போக்குகளை நோக்கிச் செல்லுகின்றன. அவைகளை நையாண்டி செய்தல், சண்டையிடல், அதிகாரத்தினை எதிர்த்தல் போன்றவைகளில் காணலாம். இவற்றில் சில சமூகமயமாக்கப் பட்ட குற்ற நடத்தை என்றும் கூறப்படுகின்றன. இவை அமைக்கப் பட்டுள்ள விதிகளுக்குப் புறம்பான குழுச்செயல்களாகக் குறிக்கப்படுகின்றன. அதாவது குழுவாகத் திருடுதல், பள்ளிக்குச் செல்லாது ஊர்சுற்றுதல், குறும்புச் செயல்கள், பொதுவாக நன்மை பயக்காத குழுச்செயல்கள் ஆகியவை போன்ற செயல்களினால் குறிக்கப்படுகின்றன. மற்றவை அதிகமான உள்தடைகொண்ட போக்குகளை நோக்கிச் செல்கின்றன. அவை நாணமடைதல், தனித்து இருத்தல், பகற்கனவு காணுதல், பொறாமை போன்ற செயல்களில் காணப்படுகின்றன. தவறான பொருத்தப்பாடுகொள்ளும் பாதை, ஒருவரது சூழ்நிலையிலுள்ள சமூகச் சக்திகளைப் பெருமளவில் பொறுத்துள்ளது. அதன் பொது வகை, தனியன் சமூகத் தொடர்பினைக் கொண்டிருக்கின்றவர்களைப் பொறுத்து அமையும். ஹீவிட், ஜென்கின்ஸ் (**Hewitt and Jenkins**) என்பவர்கள் இவ்வகைகளைப்பற்றிய ஆய்வில் கொள்ளும் முடிவு என்னவெனில்,

## அட்டவணை 11—1

இளையோர்களில் இரண்டு தேர்ந்தெடுத்த குழுக்களில் உள்ளோரின் தனியாள் வரலாறுகளில் உள்ள சில ஏதுக்கள் தோன்றுகின்ற சதவீதம் (மூல்லன் தந்தது).

| | ஊர் சுற்றுபவர் | வகுப்பறையில் கட்டுப்பாட்டுப் பிரச்சினைகள் |
|---|---|---|
| **கல்வி ஏதுக்கள்** | | |
| திரும்பத்திரும்பப் பெற்ற தரம் அல்லது தரங்கள் ... | 53·0 | 55·0 |
| பள்ளிக்கு வருவதில் தடை ... | 26·7 | 19·9 |
| வாசிக்கும் திறனின்மை ... | 9·8 | 20·8 |
| தரம் பெறுவதில் ஓர் ஆண்டுக்கு மேல் அதிக வயது பெற்றிருத்தல் | 35·4 | 42·4 |
| **உடல் ஏதுக்கள்** | | |
| கெட்ட பற்கள் ... ... | 48·4 | 35·5 |
| குறையுடைய பார்வை ... | 34·9 | 29·4 |
| காது, மூக்கு, தொண்டை நிலை ... | 17·8 | 16·0 |
| குறைவான ஊட்டம் அல்லது பொது ஆரோக்கியம் ... | 8·6 | 10·0 |
| **நடத்தை ஆளுமை ஏதுக்கள்** | | |
| வேலைசெய்வதில் கெட்ட பழக்கங்கள் | 25·1 | 51·9 |
| தன்னம்பிக்கையின்மை ... ... | 19·6 | 13·4 |
| நடுங்குதல், மிக அதிகமான வேலை | 7·6 | 19·5 |
| வலுத்தாக்குதல், சமூகத்திற்கு எதிரான நடத்தை ... ... | 5·0 | 27·7 |
| கவனத்தை ஈர்க்கின்ற வழிகள் ... | 3·6 | 19·0 |
| பொய் சொல்லுகின்ற, திருடுகின்ற பழக்கங்கள் ... ... | 9·7 | 4·8 |
| பின்வாங்குதல், சமூகத்திற்கு ஒவ்வாத தன்மை ... ... | 5·6 | 4·8 |
| பிடிவாதப் போக்கு ... ... | 1·8 | 6·1 |
| **குடும்ப ஏதுக்கள்** | | |
| உடைந்த இல்லம் ... ... | 48·5 | 37·7 |
| இப்பொழுதும் முன்னரும் வீட்டில் இருக்கின்ற சொந்த பெற்றோர் அல்லாதார் ... ... | 16·3 | 13·0 |
| அதிகமானபேர்கள் வசிக்கின்ற இல்லம் ... ... ... | 10·0 | 7·4 |
| புத்தியில்லாத பெற்றோர்களது வழி காட்டல் ... ... ... | 27·9 | 27·7 |
| போதிய அளவு பயனில்லாத பெற்றோர் ... ... ... | 12·7 | 14·7 |
| பெற்றோர் அல்லது உடன்பிறந்தோர் குற்ற நடத்தை கொண்டவராகவோ, குற்றவாளியாகவோ இருத்தல் ... ... ... | 6·2 | 2·6 |

நடத்தை நிகழ்ச்சி வகை உறவுகளின் மூன்று வகைகள் ஒவ்வொன்றிலும், எடுத்துக்கொள்ளப்பட்ட நடத்தை ஒரு தனித்த வகையைச் சார்ந்த மனமுறிவினுல் 'தூண்டப்படுகின்றது' என்று கூறுவதற்கு ஓரளவு சான்றுகள் உள்ளன. இதுவன்றி நடத்தையின் பொது வகை, குழந்தையுடன் நெருங்கிய தொடர்புகொண்டுள்ளவர்களால் இயக்கப்படுவதைக் காணலாம். இவ்வாறு இதனுல் விளைகின்ற தவருன பொருத்தப்பாடு, இரண்டு வகையிலும் குழந்தையின் உருமாறிய சூழ்நிலைக்குத்தக்க பொருத்தமான எதிர்வினை என்று தோன்றும்.

இந்தப் பொருளில் நடத்தை பொருத்தமானது என்பது இனவுறுதி செய்யக்கூடிய சூழ்நிலை வகைகளிலிருந்து தோன்றுகின்றது. அது, குழந்தையின் ஆளுமை ஒரு தனிப்பட்ட துறையில், அடிப்படையில் உருமாறியதைக் குறிக்கின்றது. மருத்துவ உட்குறிப்புகள் தவருன பொருத்தப்பாட்டு வகைகளிலிருந்து கட்டாயமாக மாறியிருக்க வேண்டும். அதாவது, இப் பகுத்தாய்வில் எடுத்துக்கொண்ட மூன்று வகையான நடத்தைகளுக்கு, மூன்று வெவ்வேறு விதமான மருத்துவ உதவிமுறைகள் தேவைப்படுகின்றன. சமூக இயல்பற்ற வலுத்தாக்குதல் நடத்தையும், அதிகமான கட்டுப்பாடுடைய நடத்தையும் அதிகமான மனவெழுச்சித் தொல்லைகள்கொண்டவையாய்த் தோன்றுகின்றன. ஆனுல், இவை வெவ்வேறு காரணங்களினுலும், வெவ்வேறு துறைகளினுலும் மனவெழுச்சித் தொல்லைகளைக் கொண்டிருக்கும். இதற்கு மாருக, சமூகக் குற்றங்கள் பற்றுர்வங்களை இனவுறுதி செய்வனவாகவும், குழந்தையின் சூழ்நிலையில் காட்டப்படுகின்ற பல்வேறு வழிமாறுகின்ற அழுத்தவகைகளுக்கு உடன்பாடான துலங்கலைத் தருவனவாகவும் தோன்றுகின்றன.[4]

### சமூக இயல்பற்ற வலுத்தாக்குதல் நடத்தை

சமூக இயல்பற்ற வலுத்தாக்குதல் நடத்தை வகை சிறுமியரிடத்து அதிகமாகக் காணப்படுவதில்லை. ஏனெனில், அவர்களது பெற்ருேர்களிடமிருந்தும் ஒப்பாரிடமிருந்தும் பழைய வகைகளை அனுசரிக்குமாறு அதிகமான கட்டாயத்திற்கு ஆளாகின்றனர். இந்நடத்தை வகைகள் சிறுவர்களிடத்துக் காணப்படுகின்றன.

ஜெர்ரி பதினுன்கு வயதுடையவன். அவன் நுண்ணறிவிலும் அடைவிலும் சராசரித் தரத்திற்குக் கீழாக இருந்தான். மனமுதிர்ச்சிக்கான கலிஃபோர்னியா சோதனையின்படி அவனது நுண்ணறிவு 82 ஆக

[4] L. E. Hewitt and R. L. Jenkins, 'Fundamental Patterns of Maladjustment, The Dynamics of Their Origin'. Springfield: State of Illinois, 1946, p. 91.

இருந்தது. ஜெர்ரியால் மிக மெதுவாகத்தான் படிக்கவியலும். அவன் சித்திர நூல்களையும், மேற்கத்தியக் (Western) கதைகளையும் வாசிப்பதில் மகிழ்ச்சியடைந்தான். அவன் அமெரிக்க மாட்டுப் பண்ணையைக் காப்போர்பற்றியுள்ள திரைப்படங்களையும், தொலைக்காட்சியில் மேற்கத்தியக் கதைகளையும் பார்ப்பதற்கு முன்னுரிமை அளித்தான். அவனது வயதுக் குழுவிற்கு ஜெர்ரி ஒரு சிறுவனாகவே இருந்தான். அவனைக்காட்டிலும் இளையவர்கள், சிறுவர்கள் குழுவில் அவன் பெரும்பாலும் காணப்பட்டான். அவர்களை நையாண்டி செய்வதிலும், அவர்களுடன் திருப்திகரமான பொருத்தப்பாட்டை அவனுடைய தீரச்செயல்களைத் தம்பட்டம் அடிப்பதன்மூலமும் ஏற்படுத்திக்கொண்டான். ஒரு சமயம் ஒரு குழுவிடம் ஃபிளாரிடாவில் (Florida) அவனது மாமன் ஒரு மாட்டுப் பண்ணை வைத்திருக்கிறுரென்றும், அவரைப் போய்ப் பார்ப்பதுபற்றியும், அங்கு ஒரு முரட்டுக் குதிரையை ஓட்டியதுபற்றியும் அவன் கூறினன்.

அவனது வயதுச் சிறுவர்களும் அவனது வகுப்பிலுள்ளவர்களும், அவனுடன் விளையாடுவதற்கும் அவனை அவர்களது விளையாட்டுக் குழுவில் தேர்ந்தெடுப்பதற்கும் தயங்கினர்கள். ஏனெனில், அவன் குழுவிற்குப் பயனுள்ள விளையாட்டுக்காரனுக இல்லை. அவர்களிடம், அவன் தன்னைப்பற்றித் தம்பட்டம் அடிக்கவில்லை. அவன் அவ்வாறு தம்பட்டம் அடித்தால், அவனைப் பார்த்து எள்ளி நகையாடிக் கேலி செய்வார்கள். அவனது ஆசிரியர்கள் அவன் மற்றவர்களது கவனத்தைக் கவர்வதற்கான நடத்தையைக் கொண்டுள்ளான் என்று எண்ணினர்கள். அவன் பெண்களிடத்து அக்கறையின்றி இருந்தான். மற்றப் பெண்களைக்காட்டிலும் அவன் போற்றிய ஒரு பெண்ணின் முடியை இழுத்ததாகக் குற்றம் சாட்டப்பட்டான். பொதுவாக, ஜெர்ரி எல்லாச் சமூகச் செயற்பாடுகளையும், அதுவும் குறிப்பாகப் பெண்கள் கலந்துகொள்பவைகளைத் தவிர்த்தான். அவன் வகுப்பில் கவனத்தை ஈர்க்கின்ற முறைகளைப் பயன்படுத்தினன். அதில் அதிகமாகப் பயன்படுத்திய முறை, அவனுக்குச் சரியான விடை தெரியாதிருந்தபொழுதும், கேள்விகளுக்குப் பதில் சொல்லித் தன் ஆர்வத்தைக் காட்டியதே. அவன் தன்னுடைய 'நடிக்கின்ற' நடத்தையின் காரணமாக, முடிவில்லாத தொல்லையாக விளங்கினன்.

ஜெர்ரி சில ஆண்டுகளுக்கு முன்னுல் ஆரம்பித்த சேகரிப்பில் இன்று 100 சிவப்பிந்திய (Red Indian) அம்புத்தலைகளைச் சேகரித்துள்ளான். இவ்விருப்பத் தொழிலினை உயர்ந்த பயன்மதிப்பாகக் கருதினன். தனது சமுதாயத்திலும் பள்ளியிலும் தனது சேகரிப்பு மிகச் சிறந்ததும் அதிகமானதுமாகும் என்று எல்லோரும் அறியவேண்டும் என்று அவன் விரும்பினன். அது பல நூற்றுக்கணக்கான டாலர் மதிப்புள்ளது என்று எல்லோரிடமும் உரிமை கொண்டாடினன்.

**அதிகமான கட்டுப்பாடுடைய போக்குகள்**

இளையோர் சிறுமியர் விலக்கலுக்குத் தருகின்ற பொதுவான துலங்கல் சமூக நிகழ்ச்சிகளிலிருந்து பின்வாங்குதலாகும். இத் துலங்கல் சில சமயங்களில் சிறுவரிடத்தும் காணப்படுகிறது. ஆனால், அவர்கள் போரிடுகின்ற நடத்தையினை அடிக்கடி இதனுடன் காட்டுகின்றனர். பின்வாங்குதல் அல்லது தனித்திருத்தல் பல்வேறு உருவங்களைக் கொள்கிறது. தனித்திருத்தலின் உளவியல் வகை, மற்றவகை நடத்தைகள் தோன்றுவதுபோன்றே ஓர் ஊக்கிக்கு அல்லது தூண்டுதலுக்குத் துலங்கலாகத் தோன்றியது. பல நிகழ்ச்சிகளில் திருப்தியளிக்கின்ற துலங்கல் அல்லது வினை, தனித்து இருத்தலிலும் நாணமுறும் தன்மையிலும் காணப்படுகின்றது. பின்வரும் அதிகாரத்தில், பின்வாங்கும் நடத்தையின் உருவங்கள் விவரிக்கப்படும். முன்னிளையோர்களிலும் இளையோர்களிலும் பெரும்பான்மையோரது இயல்பு கூச்சங்கொள்ளுதலாகும்.

முன்னிளையோர் சிறுமி நாணமடைதலை ரிவிலின் என்பவர் (Rivlin) ஒரு சிறுமியின் வரலாற்றைக்கொண்டு நன்ருக விளக்குகின்ருர்.[5] பல ஆசிரியர்கள் இந்நிலையைச் செயல்களில் பங்குபெறுவதன்மூலம் தவிர்க்க முயன்று வெற்றியும் கண்டிருக்கின்ருர்கள்.

ஸ்டெல்லா எனும் பத்து வயது நிறைந்த நான்காம் படிவ மாணவி, பள்ளி மனநலவியல் குழுவிடம் அனுப்பப்பட்டாள். ஏனெனில், அவள் 'மிகவும் களைப்படைபவளாகவும், மிக அதிகமாக அமைதியைக் கடைப்பிடிப்பவளாகவும் இருந்தாள். அவள் வகுப்பில் பதில்களைக் கூறத் தாளுக முன்வரவில்லை. மற்றக் குழந்தைகளுடன் விளையாடவில்லை.' அவளது குடும்பப் பின்னணி நன்ருக இருந்தது. அவளது வேலை, ஒழுக்கம், மதிப்பெண்கள் முதலியன மிகச் சிறந்தனவாய் இருந்தன. அவளது நுண்ணறிவு ஈவு 111 ஆக இருந்தது. ஆசிரியர், ஸ்டெல்லாவை விளையாட்டு மைதான ஆட்டங்களுக்குத் தலைவியாக நியமித்தார். அவள் எல்லோருடனும் கூச்சமின்றிப் பேசுவதற்கு ஒரு நல்ல முயற்சி இவ்வாருக எடுக்கப்பட்டது.

பாடங்களுக்கிடையே ஆசிரியர் அவளை ஒரு கேள்வி கேட்டார். எந்த ஒரு பதிலும் அதற்கு ஏற்றுக்கொள்ளக்கூடியதாய் இருந்தது. ஒரு பூகோள வகுப்பின்பொழுது அவளிடம் கேட்கப்பட்ட கேள்வி, 'நீ ஆப்பிரிக்காவில் வசிக்கவேண்டிய நிலை ஏற்பட்டால், மகிழ்ச்சியுடன் இருக்கலாம் என நினைக்கிருயா?' என்பதாகும். இது மிகவும் எளிதில் அஞ்சுகிற குழந்தைக்குக்கூட இக்கட்டான நிலையை ஏற்

[5] H. N. Rivlin, 'Educating for Adjustment.' New York: Appleton-Century-Crofts, Inc., 1936, p. 375.

படுத்தமுடியாத ஒரு கேள்வியாகும்; எந்த ஒரு பதிலைத் தந்தாலும் அது மிகவும் நன்றாக இருப்பதாக ஆசிரியர் குறிப்பிடக்கூடிய கேள்வியாகும். 'நாம் ஆப்பிரிக்காவில் வாழக் கற்றுக்கொள்வது கடினமாகும்' அல்லது நாம் அதனை எவ்வாறு விரும்புவோம் என்பதனை இங்கிருந்து கூற இயலாது' என்று கூறுவது ஏற்றுக்கொள்ளத் தக்கதாகும். ஸ்டெல்லா தன் தோள்களைக் குலுக்கிக்கொண்டு பதிலளித்தாள். பின்பு ஆப்பிரிக்காவில் வாழ்க்கை இன்பகரமானதாகவோ, துன்பகரமானதாகவோ இருக்கும் என்று ஏன் கூறவியலாதெனக் குழந்தைகளிடம் கேட்கப்பட்டது. அவளது பள்ளி வாழ்க்கையில் முதன்முறையாக அவள் கூறிய பதிலைத் தனது வகுப்பிலுள்ளோர் ஏற்றுக்கொண்டு மேலும் ஆய்ந்தனர் என்ற ஒரு நிகழ்ச்சியைக் கண்ணுற்றபோது, அவள் மிகவும் மகிழ்ச்சியடைந்தாள். இது அவளுக்கு மிகவும் புகழைத்தரும் ஒரு நிகழ்ச்சியாகும். ஸ்டெல்லா தனது கருத்தைத் தரும்பொழுது மனத்தில் இருந்த காரணங்களில் எது முன்னணியில் இருந்தது எனக் கேட்கப்பட்டது. மற்ற மாணவர்கள் தந்த பதில்கள் யாவும் கரும்பலகையில் இருந்ததால், அவளுக்கு ஒரு நல்ல பதிலைத் தர எவ்விதத் துன்பமும் இருக்கவில்லை. முதன்முதலாக ஆசிரியரது கேள்விக்குப் பதிலளித்தபொழுது, எவ்வித உறுதியான எண்ணமும் அவள் மனத்தில் இல்லாமலிருந்திருக்கக்கூடும்.

இந்த முறையானது ஸ்டெல்லா வகுப்பில் பேசிப் பழகிக்கொள்ளும்வரை, பல நாட்களுக்குக் கையாளப்பட்டது. ஆசிரியர்களாலும் மாணவர்களாலும் இவளது பதில் கூர்ந்து கவனிக்கப்படும்வரை, இம்முறையையே யாவரும் விரும்பினர். ஒரு வாரத்திற்குப் பின்னர், ஓர் எளிய கேள்வி அவளிடம் கேட்கப்பட்டது. இவ்வமயம், மற்றவர்களுக்குப் பயனளிக்கக்கூடிய பதிலைத் தருவாள் என்ற ஆசிரியரின் நம்பிக்கையை ஸ்டெல்லா உணருமாறு, ஆசிரியர் அவளுக்கு ஆதரவும் எதிர்பார்ப்பும் உள்ள வகையில் அன்பாகப் பார்த்தார்.

### சமூக இயல்புடையதாக்கப்பட்ட குற்ற நடத்தை

பின்வாங்குகின்றபொழுது, மனநல அடிப்படையில் பின்னிடுகின்ற ஆளுமைப் பண்புக்கூறுகள் முக்கியமானவையாகும். பொருத்தப்பாடுகளை ஏற்படுத்துகின்ற இளையோனுக்குச் சில வலுத்தாக்குதல் நடத்தை வகைகள் மிகவும் தடையாக இருக்கும் என்று உணர வேண்டும். எல்லிஸும் (Ellis), மில்லரும் (Miller) இதைப்பற்றிக் குறிப்பிடும்பொழுது கீழ்க்கண்டவாறு கூறுகின்றனர்:

'இன்றைய சமூகத்தின் தரங்கள், சில நடத்தை வகைகளில் சில தேவைகளைச் சுமத்தும். அவை சட்டத்தை மீறுகின்றவர்களைப் பழிவாங்குகின்ற வகையாகவும் அமையும். திருடுகின்ற குற்றவாளிகள் பிடிபட்டால், மிகவும் தொல்லைக்குள்ளாகின்றனர். சமூக நடத்தை

யின் தரங்களை மீறுகின்றவன், சமூகக் குழுவில் பொருத்தப்பாடுகளை ஏற்படுத்தி வெற்றியடைவதில் கட்டாயமாகத் தடைகளால் அவதியுறுகின்றான். ஆணவத்தன்மையையும், துடுக்குத்தனத்தையும், மனநிலை வெடிப்புகளையும் முதியோர் சமூகத்தில் வெறுத்து ஒதுக்குகின்றார்கள். இக்குணங்களைப் பழக்கமாக வெளியிடுகின்றவன், அவனுடைய கூட்டாளிகளிடம் புகழற்று வாழ்கின்றான். மேலும், அவன் சமூகத்திடம் கொள்ளும் தொடர்புகளில் இன்பமான பொருத்தப்பாடுகளை ஏற்படுத்துவதில் தோல்வியுறுகின்றான்.[6]

இளையோர் பருவத்திற்கு வளர்ச்சியுறும்பொழுது, பழக்க அமைப்புகளின் வளர்ச்சியில் முதல்நிலை தோன்றுகின்றது. அது ஒரு முடிந்த நிலைக்குப் போகும்பொழுது, தனியனைச் சமூகக் குழு சுமத்துகின்ற விதிகளுக்கும் முறைகளுக்குமாக நேரடிப் போராட்டத்திற்குக் கொண்டு செல்கிறது. இவ்வாறான சமூகப் போராட்டங்கள் வருகின்றபொழுது, நமக்கு ஒரு மனநலவியல் வரலாறு அல்லது குற்ற நடத்தை வரலாறு கிடைக்கின்றது. ஓர் இசைவில்லா நடத்தை சமூகப் பொருத்தப்பாட்டில் தோன்றிய ஆரம்பத் தோல்விகளிலிருந்து வளர்வதைக் காணலாம். ஆரம்பத் தோல்விகள் பல்வேறுபட்ட காரணங்களினாலும், தனியனுடைய குணவியல்புகளாலும் தோன்றலாம். நிகழ்ச்சியின் தனித்தன்மை துவக்க வாழ்க்கையில் ஏற்பட்ட பழக்க அமைப்புகள் காரணமாகவும் தோன்றலாம். மேலும், வளர்ச்சி படிப்படியாக ஏற்படுவதாலும், தொடர்ச்சியாக இருப்பதாலும், பழக்க அமைப்புகள் பெரிய இனங்களில் இணைகின்றன. இவ்வாறு ஒரு தனித்த மனப்பாங்கு வகையாகவோ அல்லது மனப்பான்மை வகையாகவோ அவை மாறுகின்றன. ஆதலின், வாழ்க்கையின் எந்தப் பகுதியில் இளையோனிடம் தவறான பொருள்கள் வளர்ந்து பெரிய அமைப்பில் இணைகின்றன என்று கூறுவது கடினமாகும்.

## இளையோர் பருவத்தில் உடல்நலம்

இளையோர் பருவத்தில் நோயினால் இறத்தல் மிகவும் குறைந்த அளவே உள்ளது. புற்றுநோய், லியூக்மியா (leukemia) போன்ற நோய்கள் இப்பருவத்தில் இறப்போருக்கு முக்கிய நோய்க் காரணங்களாக அமைகின்றன. காசநோய், பதின்வயதினர் இறப்பதற்கு விக்தாச்சார அடிப்படையில் முக்கியக் காரணமன்று. வாழ்க்கைத் தரங்கள் உயர்கின்ற காரணத்தினால், அதற்கு ஏற்ப, புற்றுநோயினால் இறப்பவர்களது எண்ணிக்கையும் குறைந்துள்ளது. நிமோனியாவும் இளம்பிள்ளைவாதமும், நோயினால் இறப்பவர்களின் எண்ணிக்கையில்

[6] D. B. Ellis and L. W. Miller, 'Teachers' Attitudes and Child Behavior Problems,' Journal of Educational Psychology, 1936, Vol. 27, p. 508.

அடுத்த இடம்பெறுகின்றன. இளையோர்களது வாழ்க்கைச் செயற்பாடுகளின் தன்மை காரணமாக, அவர்களது வாழ்க்கைப் பருவத்தில் உடலில் தவருன வகையில் உருவங்கள் அமைவதும், பல்வேறு தவருன மனப்பொருத்தப்பாடுகள் ஏற்படுவதும் சாத்தியமாகிறது. உருண்டையான தோள்கள், எலும்பு வளைவுகள் ஆகியவை இச் சமயத்தில் வளரும். மேலும், அபாயகரமான சூழ்நிலை நிகழ்ச்சிகளுக்குத் தன்னை அடிக்கடி ஆளாக்குவதனுல், உருமாறுகின்ற ஆபத்துகளும் ஏற்படக்கூடும்.

தலைவலி, கண்தொல்லைகள், அசீரணம், மூச்சுவிடுவதில் உள்ள தொல்லைகள், எலும்புகள் உருமாறி அமைவது, தொத்து வியாதிகள் ஆகியவை இளையோர்களிடத்துப் பரவலாக இருக்கின்றன. இந் நிலைகள் பெரிய அளவில் மரபு வழக்கங்களினுலும், நிறுவனங்களினுல் சுமத்தப்படுகின்ற விதிமுறைகளினுலும், செயல்களினுலும் உண்டாகின்றன. முகப்பரு, இளையோர்களிடத்து நல்ல உருவ அமைப்புக்கு மிகப் பெரிய தடையாகத் தோன்றுகிறது. இது பூப்பு வளர்ச்சியின் பொழுது ஓரளவு தோன்றுகிறது. இளையோர்களில் முக்கால் பங்கினருக்கு இச் சமயத்தில் முகப்பரு தோன்றுகிறது. பூப்படைகின்ற பொழுது செபாஷஸ் சுரப்பிகள் அதிக வேலை செய்வதுடன் இது நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளதாகக் காணப்பட்டது.

பள்ளி மாணவர்களிடத்து இருக்கும் ஊட்டப் பிரச்சினைகளைப் பற்றிய ஐயோவா (Iowa) ஆய்வு, குறைபாடுடைய பற்களே மிக அதிகமாகக் காணப்படுகின்ற உடற்குறை என்று கூறியது.[7] கிளின்ஸ்மிட் (Kleinschmidt) என்பவரின் கருத்துப்படி இரண்டாவது உலகப்போரில் படைத்தளத்தில் சேர விரும்பிய இளைஞர்களில் தகுதியற்றவர் என்று தள்ளப்பட்டவர்களது குறைபாடுகள் பற்குறைகளும் கண்குறைகளுமேயாகும்.[8] அட்டவணை 11-2-ல் இக்குறைகளும், கார்டியோவாஸ்குலர் (Cardiovascular) நோய்களும், ஹெர்னியா நோயும் ஒன்றுசேர்ந்து மொத்தம் தள்ளப்பட்டவர்களது எண்ணிக்கையில் சரிபாதியினருக்குக் காரணமாகின்றன. சிறுவன் 17 அல்லது 18 வயதினை அடையும்பொழுது இந் நிலைகள் திடீரென்று வளர்ச்சியடைவதல்ல என்பது எல்லோரும் அறிந்ததொன்ருகும். இந் நிலைகள் உணவோடும், இல்லத்திலும் பள்ளியிலும் கண்களைப் பற்றிக்கொள்ளும் அக்கறையோடும், நெருங்கிய தொடர்பு கொண்

[7] 'School Children in Iowa Lack Calcium Vitamin C,' Public Health Reports, 1955, Vol. 70, p. 177.

[8] E. E. Kleinschmidt, 'Meeting Today's Health Problems,' Phi Delta Kappan, 1943, Vol. 26, p. 12. (Data for Table 11-2 are taken from materials presented in this article.)

டுள்ளன என்பதில் ஐயமில்லை. பல கல்வித்துறையாளர்கள், குழந்தைகள் இளையோர்கள் ஆகியோரிடம் மிகவும் குறைபாடுடைய உடல் நிலையைக் கண்டு, உடற் பொருதியாற்றல், வலிவு, தாங்குதல், சுறு சுறுப்பு ஆகியவற்றினை வளர்க்கத் திட்டமிட்டு உடல் தகுதித் திட்டத்தினை அளித்தனர். அதன் காரணமாகத்தான் விளையாட்டுப் போட்டி நிகழ்ச்சிகளில் அதிகமான அக்கறை தோன்றியது. அவ்வாறுன திட்டம் தேவையான அளவுக்கும் குறைவாக இருக்கிறது என்று கூறப் போதிய சான்றுள்ளது. அது தனியாள் மாறுபாடுகளையும், இயக்க ஆரோக்கியத் தேவைகளையும் கவனிக்கத் தவறுகின்றது என்று கூறுவதற்கும் சான்றுகள் உள்ளன.

### அட்டவணை 11—2

இரண்டாவது உலகப் போரின்பொழுது படைத்தளத்தில் சேர விரும்பியவர்கள் தள்ளப்பட்டதன் காரணங்கள் (கிளீன்ஸ்மிட் தந்தது).

| காரணங்கள் | சதவீதம் |
|---|---|
| பற்குறைபாடுகள் | 20·9 |
| கண்குறைகள் | 13·7 |
| கார்டியோவாஸ்குலர் நோய்கள் | 10·6 |
| ஹெர்னியா | 7·1 |
| மன, நரம்பு நோய்கள் | 6·3 |
| மேகநோய்கள் | 6·3 |
| காதுக்குறைகள் | 4·6 |
| உணவுக்குறைகள் | 4·0 |
| உயிர்ப்புப் பைக் குறைகள், காசநோய் | 2·9 |
| மற்றவைகள் | 24·5 |

### இளையோர்களின் ஆரோக்கியப் பிரச்சினைகள்

நல்ல ஆரோக்கியம் அதனுடைய பரந்த இயல்பில் நல்ல சமநிலை உள்ள ஆளுமைக்கு மிகவும் அவசியமானதாகும். ஏனெனில் சத்து, இயக்கம், குறிக்கோள்கள், இன்பம் ஆகியவை அதனைச் சார்ந்து இருக்கின்றன. மோசமான ஆரோக்கியம் உடையவர்கள், அதிகப்படியான சத்தைக் குறைவாகக் கொண்டுள்ளனர். அவர்கள் தம்மைக் கட்டுப்படுத்துதலின்றியும், வாழ்க்கையைப்பற்றித் துயர முடிவையே எண்ணுகின்ற தன்மையும் கொண்டுள்ளனர். பல இளையோர்கள் ஆரோக்கியத்தைப்பற்றி உணர்வற்று இருக்கின்றனர். அவர்கள்

ஆரோக்கிய உணர்வு கொண்டிருந்தாலும், நல்ல ஆரோக்கியப் பழக்கங்களைக் கைக்கொள்ளவேண்டும் என்ற ஊக்கியினைக் கொண்டிருக்கவில்லை. இவ்வாறு பள்ளியில் ஆரோக்கியப் படிப்புகளைப் புகுத்துவதனால்மட்டுமே இளையோர்களிடத்துச் செல்வாக்குக் கொள்ளுதல் இயலாது.

இளையோர் பருவத் துவக்கம்வரை, குழந்தை ஓரளவு இசைவான வழிகாட்டுதலையும் கட்டுப்பாட்டினையும் பெற்றுவந்தான். அவன் தூங்குகின்ற நேரமும், உண்கின்ற நேரமும், அவனது உணவுப் பழக்கங்களும் கவனிக்கப்பட்டு, தேவையானவைகள் அளிக்கப்பட்டு வந்தன. ஆனால், இளையோர் பருவம் துவங்கிய பின்பு குழு நிகழ்ச்சிகள் மிக முக்கியமான பங்கினை வகிக்கத் துவங்கிய பின்னர், குழு ஆசைகளுக்கும் செயல்களுக்கும் ஏற்றவாறு வாழ்கின்ற மனப்போக்கு ஏற்படுகிறது. இது, பொதுவாகப் புகைபிடிப்பதிலும், குடிப்பழக்கத்தைக் கைக்கொள்வதிலும், உண்பதிலும், உறங்குவதிலும், வழக்கமான நேரங்களைக் கைக்கொள்ளாமல் இருப்பதிலும், குளிருக்கும் அலைச்சலுக்கும் தன்னை ஆளாக்கிக்கொள்வதிலும் காணப்படுகின்றது. இளையோனது அன்றாடக் கலோரித் தேவைகளில் மிக அதிகப்படியான கூடுதல் அவன் முதிர்ச்சியை நோக்கிச் செல்லும் பொழுது ஏற்படுகின்றது. முன்னர் குறிப்பிட்டது போன்று, ஐயோவாவில் 5 ஆண்டுகள் தொடர்ந்து அந்த நாடுமுழுதும் நடத்தப்பட்ட ஆய்வு, குழந்தைகள், ஆட்டிறைச்சி, உருளைக் கிழங்கு, கொழுப்புப் பொருள்கள், ரொட்டி, தானிய வகைகள் ஆகியவைகளை அதிகமாக உண்பதாகக் காட்டியது; ஆனால், அவர்கள் போதிய அளவு பால், பழங்கள், காய்கறிகள் ஆகியவைகளை உட்கொள்ளுவதில்லை என்றும் காட்டியது; பதின் வயதுச் சிறுமியர்கள் மிகவும் குறைந்த உணவையே உண்கின்றனர் என்றும் கூறியது. அதிக எடையுள்ள சிறுமியர்கள், குறைந்த உணவு கொள்வதில் குறிப்பாக இருந்தனர். ஊட்டம், உடற் பயிற்சி ஆகியவற்றின் முக்கியத்துவத்தை உணர்த்தும் பொருள்கள் உடல் வளர்ச்சியின் தொடர்பில் அதிகாரம் 3-ல் தரப்பட்டுள்ளன.

இளையோர்களது வாழ்க்கைக்கும், ஆரோக்கியத்திற்கும் நேரும் தனித்த, அதிகமான அபாயம் விபத்துகளாகும். இறப்புப்பற்றிய ஆய்வுகள், பதின் வயதினர் இறக்கும் எண்ணிக்கையில் ஏறத்தாழ சரி பாதியினர் விபத்துகளின் காரணமாக இறக்கின்றனர் எனக் காட்டுகின்றன. கார் விபத்துகளினால் இறப்பவர்கள் இப்பட்டியலில் அதிகமான எண்ணிக்கையைக் கொண்டிருக்கின்றனர். விபத்து விகிதம், சிறுமியர்களைக்காட்டிலும் சிறுவர்களிடத்து அதிகமாகக் காணப்படுகின்றது. இந்த உயர்ந்த விபத்து விகிதம் இளையோர்களிடத்து

இருப்பதனால், சில சமுதாயங்களில் தற்காப்பு நிகழ்ச்சிகளுக்கும், கார் ஓட்டுபவர் பயிற்சித் திட்டம் உட்படப் பல நிகழ்ச்சிகளுக்கும் அதிகப்படியான கவனம் அளிக்கப்படுகின்றது.

## ஆரோக்கிய இயக்கத் திட்டத்தின் தேவை

பள்ளிகள் நாட்டின் நலத்திற்குச் செய்யக்கூடிய உதவியில், வளர்கின்ற சிறுவர் சிறுமியரது ஆளுமைப் பொருத்தப்பாடுகளுக்கும் மனநலத்திற்கும் ஓரளவு பொறுப்பேற்கின்றதைக்காட்டிலும், சிறந்த உதவி ஏதும் இருக்க முடியாது. தனியன்களுக்கு நன்மை பயக்கத் தக்க ஆளுமையினையும், நல்ல பொருத்தப்பாடுகளையும் வளர்ப்பதற்குப் பள்ளியே சிறந்த இடம். பள்ளிகள் பழைய கிரேக்கக் கூற்றான 'நல்ல ஆரோக்கியமுள்ள உடலில்தான் நல்ல மனம் இருக்கும்' என்பதற்கு நெருங்கிய இணைப்புக் கொள்ளவேண்டும். மறுமலர்ச்சி இயக்கம், சமய சீர்திருத்தம் ஆகியவைகளுக்குப்பின் கல்வியில் அக்கறை, அறிவுத்திறன் இவைகளுக்கு அதிக முக்கியத்துவம் அளித்து, மாணவர்களது உடல்-மன ஆரோக்கியத்தைப்பற்றிக் குறைவான அக்கறையே காட்டப்பட்டது என்று கூறுவது பொருத்தமாகும். அண்மை ஆண்டுகளில், முக்கியத்துவம் மாறி, வளர்கின்ற சிறுவர் சிறுமியரது உடல்நலத்தைப் பார்க்க முயற்சிகள் எடுக்கப் பெற்றன.

ஒரு கல்வித் திட்டம் தன்னுடைய முக்கியக் கவனிப்பாகத் தனியனது வளர்ச்சியில் அக்கறை காட்டவேண்டும். இம்முறையைச் சில சமயங்களில் சொந்த வளர்ச்சி என்று குறிப்பிடுவதுமுண்டு. பள்ளிகள் இவ்வாறான இயக்க, ஆரோக்கிய வளர்ச்சிக்கு ஆவன செய்யவேண்டும் என்ற தேவைகள் எழுந்துள்ளன. பல ஏதுக்களிலிருந்து பள்ளிகள் ஆரோக்கியக் கல்வியை ஒதுக்கிவிட்டன அல்லது மாணவர்களுக்கு வாழ்க்கையில் பயனளிக்குமாறு அவை அமைக்கப்பட்டு அளிக்கப்படவில்லை என்று கூறுவதற்குச் சான்றுகள் உள்ளன. ஆரோக்கியத் திட்டம், பருவம் தவறாது உடல் தேர்வினையும், உடல் நலப் படிப்பையும், உடற் கல்விச் செயற்பாடுகளையும் அளித்து, உயர்நிலைப் பள்ளி மாணவர்களில் ஒரு சிறு சதவீதத்தினருக்கே பயன்படுகின்ற நிகழ்ச்சிகளைக்காட்டிலும் அதிகமான அளவு மாணவர்களுக்குப் பயன்படுகிற நிகழ்ச்சிகளைக் கொள்ளவேண்டும். அது பள்ளிச் செயல்கள் முழுவதிலும் இயங்கவேண்டும். அதனுடைய குறிக்கோள் மாணவர்களை ஆரோக்கியத் தனியன்களாக வளர்ப்பதற்கும், இசைவான ஆரோக்கிய மனப்பான்மைகளையும் பழக்கங்களையும் வளர்ப்பதற்கும் ஏற்றவாறு இருக்கவேண்டும். மாணவர்கள் வாழ்க்கைக்கான நல ஏற்பாடுகள், சமுதாய நலத் திட்டங்கள் ஆகியவற்றின் முக்கியத்துவத்தையும் தன்மையையும் உணரும்படி செய்யவேண்டும்.

பள்ளி ஆரோக்கியத் திட்டத்தின் குறிக்கோள்களையும் பொறுப்புகளையும் கீழ்க்கண்டவாறு தொகுத்துக் கூறலாம்:

1. மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் ஆரோக்கியத்தைத் தரும் சூழ்நிலை அளிக்கவேண்டும். இச்சூழ்நிலை பள்ளித் திட்டத்துடனும், பள்ளி ஏற்படுத்தும் மனவெழுச்சித் தன்மையுடனும், நலவாழ்க்கைக்கான நல ஏற்பாடுகளுடனும் தொடர்பு கொண்டதாகும்.

2. பள்ளியில் ஏற்படும் விபத்துகளுக்கு ஆளானவர்களை நன்ருகக் கவனித்துக் கொள்வதற்கும், திடீரென்று நோய்வாய்ப்படுவோரைக் கவனிக்கவும், திட்டமும் வசதியும் இருக்க வேண்டும்.

3. கார் ஓட்டுவதற்குக் கல்வியும் படிப்பும் தந்து, உயர்நிலைப் பள்ளி மாணவரிடத்து, நல்ல கார் ஓட்டும் பழக்கத்தினையும், தற்காப்புத் திட்டம், போக்குவரத்து விதிகள், தற்காப்புத் தொடர்பிலுள்ள மற்றப் பொருள்கள் ஆகியவற்றுடன் இசைவான மனப்பான்மையினையும் கொள்ளும்படி செய்யவேண்டும்.

4. மற்ற நிறுவனங்களுடன் ஒத்துழைத்து, நீந்துவதற்குத் தற்காப்புமுறைகளையும், முதலுதவி அளித்தலையும் கற்றுத்தரல் வேண்டும்.

5. நோய்களுக்குரிய காரணங்களையும், அவைகள் பரவும் வகைகளையும், அவற்றைத் தடுக்கும் முறைகளையும் மாணவர்களுக்குச் சொல்லித்தரல்வேண்டும்.

6. மாணவர்களையும் ஆசிரியர்களையும் பருவம் தவருது உடற் சோதனை செய்யவேண்டும். அதன் முடிவுகள், புத்திமதிகள் ஆகியவற்றைப்பற்றித் தொடர்ந்து குறிப்புகள் வைத்தல்வேண்டும்.

7. மருத்துவ உதவியும், தற்காப்பும் தேவைப்படுவோருக்கு முக்கியக் கவனத்தை அளிக்கவேண்டும். இத்தேவைகளைப் பெறப் பணவசதியற்ரேருக்குச் சமுதாயம் அதனுடைய இருப்புகளிலிருந்து அத்தேவையினைப் பூர்த்திசெய்தல் வேண்டும்.

8. குறைபாடுடையவர்களது தேவைகளுக்கு ஏற்ற தனித்த கல்வித் திட்டங்களை அமைக்கவேண்டும்.

9. சமுதாயத்துடன் ஆரோக்கியத் திட்டத்திலும், தொத்து நோய் பரவாவண்ணம் கட்டுப்படுத்துவதிலும் ஒத்துழைக்கவேண்டும்.

10. ஆசிரியர்களுடைய சேவையினைப் பெற்று, ஒவ்வோர் ஆசிரியரும் நல்ல ஆரோக்கியத்தைக் கைக்கொள்ளவேண்டிய பொறுப்பினையும், மாணவர்களிடையே நல்ல ஆரோக்கியப் பழக்கங்களை உண்டாக்கவேண்டிய பொறுப்பினையும் உணர்த்தவேண்டும். இருப்

பினும், சில படிப்புகளையும், எல்லாப் பள்ளி ஆரோக்கிய வசதிகளையும் இணைப்பதற்கும், இதனைச் சமுதாய ஆரோக்கியத் திட்டத்துடன் சேர்ப்பதற்கும் தனிப்பட்ட பயிற்சிபெற்ற ஆசிரியர் அவசியம் வேண்டும்.[9]

**இளையோரிடம் மனநலப் பிரச்சினைகள் தோன்றுகின்ற அளவு**

முன்னைய அதிகாரங்கள் முழுவதிலும் இளையோர் பருவம், குறிப்பிடும் அளவு முனைப்பினையும், மிகுந்த தொல்லையினையும் கொண்ட வாழ்க்கையின் ஒரு பகுதியாக விளக்கப்பட்டது. சில இளையோர்களால் இவ்வழுத்தங்களையும் மிகுந்த தொல்லைகளையும் திருப்திகரமாகச் சமாளிக்க முடியாததனால், தவறான பொருத்தப்பாடுகளும் நரம்புக் கோளாறுகளும் தோன்றுகின்றன. பொருத்தப்பாட்டிற்கும், தவறான பொருத்தப்பாட்டிற்கும் தெளிவானதொரு பிரிவினை உணர்த்த முடியாது. அல்லது ஒரு குழுவிலுள்ள இளையோர்களிடம் ஏற்படுகின்ற தவறான பொருத்தப்பாடுகளின் அளவினைத் தீர்மானிப்பதற்குக் குறையில்லாததொரு முறையும் இல்லை.

மனத்தாலும் மனவெழுச்சி நிலையாலும் நோயுறுகின்ற மக்களின் எண்ணிக்கையினை மதிப்பிடப் பல்வேறு முயற்சிகள் நடந்துள்ளன. இம்முயற்சிகள், சாதாரண வாழ்க்கையில் இம் மனநிலைகளினால் பாதிக்கப்படுவோரின் எண்ணிக்கையைத்தான் கணக்கிட்டன. குறைந்த அளவு மதிப்பீடுகள், மக்கள் சமுதாயத்தில் இவ்வெண்ணிக்கையை 10 சதவிதம் என்று குறிக்கின்றன.[10] இரண்டாம் உலக யுத்தத்தில் படைச்சேவைக்குத் தகுதியற்றவர்கள் என ஒதுக்கப்பட்டவர்களும் விலக்கப்பட்டவர்களுமான நான்கிலிருந்து ஐந்து மிலியன் பேர்களில் மூன்றில் ஒரு பங்கினருக்கு மேலும், விலக்கப்பட்டவர்களில் 40 சதவீதத்தினருக்கு மேலும், நரம்பு உளவியல் காரணங்களினால் விலக்கப்பட்டோரே.[11] பள்ளிக் குழந்தைகளிடத்தும் இளையோர்களிடத்தும் தவறான பொருத்தப்பாடுகள் ஏற்படுகின்றன என்பதை மூன்றாவது ஆறாவது படிவச் சிறுவர் சிறுமியர்களை ஆட்படுவோர்களாகக்

[9] For a good presentation of the need for a functional approach to this problem, see A. W. Hurd, 'Post War Health Education,' Education, 1945, Vol. 65, pp. 445-448.

[10] W. C. Menninger, Psychiatry: Its Evolution and Present Status. Ithaca: Cornell University Press, 1948, p. 98.

[11] F. A. Weiss, 'Physical Complaints of Neurotic Origin, An Outline of Abnormal Psychology (G. Murphy and A. J. Bachrach, Editors). New York: The Modern Library, 1954, p. 267.

கொண்டு நடத்திய ஓர் ஆய்விலிருந்து நாம் அறிகிறோம்.[12] இங்கு ஆய்வு செய்யப்பட்ட 1,499 குழந்தைகளுள் 287 பேர், அதாவது 19·1 சதவீதத்தினர் மிகவும் அதிகமான தவறான பொருத்தப்பாடுகளை உடையவர்கள் என்று கணக்கிடப்பட்டது. தவறான பொருத்தப்பாடு ஆறாவது படிவக் குழந்தைகளிடம் மூன்றாவது படிவக் குழந்தைகளை விட அதிகமாகக் காணப்பட்டது. ஆறாவது படிவச் சிறுவர் 100 பேர்களுக்குள் 29 பேர் மோசமான பொருத்தப்பாடுகளைக் கொண்டிருந்தனர். ஆனால், ஆறாவது படிவச் சிறுமியர் 100 பேர்களுக்குள் 13 பேர்மட்டுமே மோசமான பொருத்தப்பாட்டினைக் கொண்டிருந்தனர். ஒருவேளை துவக்கப் பயிற்சியில் சமூகப் பழக்கத்துடன் இணைந்து ஒன்றி வாழவேண்டும் என்று சிறுமியரைக் கட்டாயப்படுத்துவதனால், அவர்கள் பள்ளி அமைப்புடன் பொருந்தி அமைகின்றனர் எனக் கூறலாம்.

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உள்ள மருத்துவமனைகளில் உள்ள நோயாளிப் படுக்கைகளில் இருக்கின்றவர்களில் பாதிக்கு மேல் மனக்கோளாறுகளினாலும் நரம்புக்கோளாறுகளினாலும் அவதியுறுவோர் என்று மதிப்பிடப்பட்டுள்ளது. தற்கால மருத்துவம், உடல் நோயினால் அவதியுறுவதாகக் குறைப்படுவோர் பலரது அடிப்படைத் தொல்லைகள், மனநிலைகளிலும் மனவெழுச்சி நிலைகளிலும் இருப்பதாகக் கூறுகின்றது. உளமருத்துவர்கள், உடற்குறையினால் அவதியுறுவோரில் 40-லிருந்து 60 சதவீதத்தினர் அவர்களது தீர்க்கப்படாத மனவெழுச்சிப் போராட்டங்களினால் துன்பப்படுவதாக மதிப்பிடுகின்றனர்.[13] மருத்துவத்துறையில் முன்னேற்றங்கள் ஏற்பட்டும், வாழ்க்கைத்தரங்கள் உயர்ந்தும், மனவெழுச்சிநிலை மக்களைப் பாதிக்கின்ற அளவில் கூடுதலாகிக்கொண்டே இருக்கின்றன. இதற்கு நோயினை ஆய்ந்து உணர்தலில் பெருக்கம், மக்கள்தொகைப் பெருக்கம், நாகரிகத் தேவைகளின் விளைவாக ஏற்படுகின்ற கூடுதலான முனைப்பு ஆகியவை காரணங்களாகக் கூறப்படுகின்றன.

பள்ளியில் சேர்ந்துள்ள இளையோர்களிடையே இருக்கின்ற தவறான பொருத்தப்பாடுகளின் அளவு, ஓர் ஆசிரியர் எதிர்பார்க்கின்ற அளவிற்கு அதிகமாகவே இருக்கின்றது. ஆசிரியர் ஓர் உளமருத்துவர் என்றோ உளநோய் மருத்துவர் என்றோ எதிர்பார்த்து, வகுப்பு அறையில் நடக்கின்ற ஒவ்வொரு பிரச்சினையையும் கூர்ந்து

[12] A. R. Mangus and J. R. Seeley, 'Mental Health Problems among School Children in an Ohio County,' Understanding the Child, 1949, Vol. 18, pp. 74-79.

[13] The Mental Health Programs of the Forty-eight States: A Report to the Governor's Conference, Chicago: Council of State Governments, 1950, p. 216.

ஆய்ந்து, அதைத் தீர்க்கின்ற மருந்தினைத் தருகின்ற பொறுப்பை அவரிடமிருந்து எதிர்பார்ப்பதற்கில்லை. அவர் ஒரு குழந்தையின் நடத்தைப் பிரச்சினையை மருத்துவ அடிப்படையில் நோக்கி, அது ஒரு முடிவான பிரச்சினை என்று கருதாது, அது ஒரு பூர்த்தியாகாத தேவையினைக் குறிக்கின்ற பிரச்சினை என்று கருதுவார்.[14] மாறுகின்ற மனப்பாங்கினைக்கொண்ட குழந்தை, வலுத்தாக்குதலுள்ள குழந்தை, சமூகத்தில் நன்றாகப் பழகாத குழந்தை ஆகிய குழந்தைகள் சில வாழ்க்கை நிலையினைச் சந்திப்பதற்கு, இந் நடத்தை முறைகளைக் கைக்கொண்டு அவ்வாறு நடப்பதுதான் சரி என்று கருதுகின்றன. பரிவும் பிரச்சிலையை உணர்கின்ற அறிவும்கொண்ட ஆசிரியர், தனியனது சில தேவைகளைத் தீர்மானித்து, அவன் பிரச்சினைகளைச் சரியான வழியில் சந்திப்பதற்கு உதவி, அவனுடைய முயற்சிகள் உடன்பாட்டு நிலையிலும் பயன்படும் வகையிலும் செயலுறுமாறு வழிகாட்டுவார். அநேகமாக எல்லாப் பள்ளி நிகழ்ச்சிகளிலும் சில, பள்ளி உளவியலார் அல்லது உளமருத்துவரால் (இருந்தால்) கவனிக்கப்பட வேண்டியனவாய் அமையும். ஆசிரியர் தவறான பொருத்தப்பாடுகள் இருப்பதன் அறிகுறிகளை உணரத் தவறிவிட்டால், குழந்தையைக் கற்பழித்துக் கொல்லுதல், ஒழுக்கங்களில் கீழான தன்மை அல்லது தற்கொலை ஆகிய தீவிரமான விளைவுகள் ஏற்படலாம்.

## மனநலத்தைப் பாதிக்கும் நிலைகள்

பல ஆண்டுகளாகவே உடல்நலத்திற்கும் மனநலத்திற்கும் இடையே நெருங்கிய தொடர்பு இருப்பதாக உணர்ந்துள்ளார்கள். போதிய வளர்ச்சியற்ற உடலும், போதிய ஊட்டமின்மையும் குழந்தையின் மனவெழுச்சிச் சமநிலையைப் பெரிய அளவில் பாதிக்கும் என்று காட்டப் பல்வேறு ஆய்வுகள் உள்ளன. இதற்கு மறுதலையாகக் குழந்தையின் மனப்பான்மையும், மனவெழுச்சி இயல்புகளும் அதன் உடல்நலத்தைப் பெரிதும் பாதிக்கும்.

### மனநலவியல் குழந்தைப் பருவத்திலிருந்து துவங்கவேண்டும்

இளையோன் தனது துவக்கம் அனுபவங்களின் விளைவு என்பதையும், தனது வளர்ச்சி படிப்படியாகவும் தொடர்ச்சியாகவும் ஏற்படுகிறது என்பதையும் நினைவில் கொள்ளவேண்டும். இவ்வாறு இளையோர்களது மனநலவியலைப் புரிந்துகொள்ள வேண்டுமென்றால், அவர்களை இவ்வளவு காலம் பாதித்த செல்வாக்குகளையும் ஆய்வு

[14] See Mary C. Roland, 'Help for Problem Children,' The Nation's Schools, 1945, Vol. 36, p. 25.

செய்யவேண்டியது கட்டாயமானதாகும். இளையோர்களது மனநல வியல் பிரச்சினைகள் பல நிலைகளில், அவர்களது குழந்தைப் பருவத்தி லிருந்து துவங்கியவையாகும். குழந்தையின் தேவைகளை, அதன் பிடிவாதப் போக்கினால் பெருகும்படி அனுமதிக்கின்ற தாயாரும் அல்லது குழந்தையைப் பின்வாங்கும்படி கட்டாயப்படுத்துகின்ற ஆதிக்கப் போக்கினைக்கொண்ட தாயாரும், தானாக இயங்குதலும் தன்னைக் கட்டுப்படுத்தலுமான நிலைகள் வளர்ச்சியடைவதற்கு ஒரு வழிகாட்டியாக அமையத் தவறிவிட்டார்கள். இவ்வாறான துவக்கப் பழக்கங்கள் குழந்தையின் வளர்கின்ற ஆளுமையின் பகுதியாக ஆகின் றன. இதன் காரணமாகப் பின்னர் அவனது தேவைகள் பூர்த்தி யாகாதபொழுது, கோபத்தில் கொந்தளிப்பதையும், பலமாகக் கத்து வதையும் கைக்கொள்ளுவான். இவ்வாறான குழந்தை, அவன் மற்றக் குழந்தைகளுடன் பெறுகின்ற பட்டறிவுகளின் காரணமாகத் தன் நடத்தையைத் திருத்தியமைத்துக் கொண்டாலொழிய, அவற்றை சமூக உலகில் பொருந்தி அமைவதற்குத் தன்னை மிகக் குறைவாகவே தயார்செய்துகொண்டு வளர்வான். இச்சமூக உலகத்தில் பொறுப் பேற்றலும் தன்னைக் கட்டுப்படுத்தலும் மிக அவசியமானவைகளாகும். இவைகளின்றி வளரும் அவன், போதிய அளவு பொருந்தி அமைய மாட்டான்.

நிகழக்கூடியவை என்று நாம் எதிர்பார்ப்பவைகளே நமக்கு வழி காட்டிகளாகப் பயன்படும் என்பதனை நினைவில் கொள்ளவேண்டும். இளையோர் பருவத்தில் நாம் அனுபவிக்கின்ற தொல்லைகளை உணர இயலும். அவைகளில் ஒரு பகுதியாவது குழந்தைப் பருவ அனுபவங் களினால் விளைவதாகும் என்றாலும், குழந்தைப் பருவத் தொல்லைகள் அனைத்துமே இளையோர் பருவத் தொல்லைகளுக்குக் கொண்டுசெல் கின்றன என்று முடிவு செய்வது தவறாகும். ஒரு தனியனது வாழ்க்கை வளர்ச்சியினை அவ்வளவு எளிதாகக் காரணகாரியக் குறி யீட்டினால் வருமுன் உரைக்க இயலாது. பலர், தங்களது இசை வில்லாக் குழந்தைப் பருவ அனுபவங்களுக்குப்பின்னர், இளையோர் பருவத்தினைத் தொல்லைகளின்றிக் கடக்கின்றனர். ஆனால், அதே சமயத்தில் குழந்தைப் பருவத்தில் தொல்லைகளின்றி இருந்த தனி யன்கள், குழந்தைப் பருவத்தினின்று இளையோர் பருவத்திற்கு நிலை மாறும்பொழுது, சொல்லொணாத தொல்லைகளை அனுபவிக்கின்றனர். பிளோஸ் (Blos) என்பவர் இதனைக் கீழ்க்கண்டவாறு குறிப்பிடு கின்றார்:

'இப் பருவத்தில் ஏற்படும் குமுறல்கள் தனித்த காரணங்களினால் விளைபவையல்ல. அவை காலத்தோடு ஒன்றாகத் தோன்றுகின்ற பல்வேறு அழுத்தங்களினால் தோன்றுபவைகளாகும். சான்றாக, மிக அதிகமான வளர்ச்சியுடைய உடலைக்கொண்ட பதினான்கு வயதுச்

சிறுவன், துரித வளர்ச்சி பெறுகின்ற இவ் இளையோர் பருவத்தினைத் தொல்லையின்றி உறுதியுடன் தாங்கலாம்; இதே சமயத்தில் அவனது குடும்ப முறிவு காரணமாக அதிகமான தொல்லையினை அனுபவிக்கவும் நேரலாம். ஆனால், இதற்கு மாறாக, மிகத் திருப்திகரமாகவும் சாதாரண நிலையிலும் உடல் வளர்ச்சி பெறுகின்ற ஒரு சிறுமி, அவளுடன் பல்லாண்டுகளாக இருக்கின்ற உறவுப் பிரச்சினைகளை எளிதாகத் தீர்க்க நல்ல இசைவான நிலையில் இருக்கிறாள்.'[15]

## பள்ளியும் மனநலவியலும்

வளர்கின்ற சிறுவர் சிறுமியர்பற்றிய இவ் வாய்வு முழுவதிலுமே, குழந்தையின் வளர்ச்சியில் பள்ளியினுடைய பங்கினை வலியுறுத்தியே கூறப்பட்டுள்ளது. வளர்ச்சிப் பிரச்சினைகள்பற்றிக் கருதுகின்ற நிறுவனங்கள் யாவுமே இதனை முக்கியமாக உணர்கின்றன. அநேகமாக எல்லா மனநலவியல் கழகங்களுமே அவர்களுடைய வேலையினைத் தொடர்ந்து செய்யப் பள்ளிகளைப் பகராட்களாகப் பயன்படுத்தி வருகின்றன. உண்மையில், மனநலவியல் வேலைத்தொடர்பில் தரப்படுகின்ற யோசனைகள் யாவும் பள்ளித்திட்டத்தின் பயனைச் சேர்த்துத்தான் கூறப்படுகின்றன. மேலும், ஆரோக்கிய மருத்துவமனைகள் குழந்தையினுடைய ஆளுமைப் பகுதிகளைப் பொருத்தி அமைக்க உதவி செய்வதற்கே நிறுவப்பட்டுள்ளனவேயன்றி, இதன் தொடர்பில் உள்ள சூழ்நிலை நிகழ்ச்சிகளில் உள்ள நடத்தைப் பிரச்சினைகளைப் படிப்பதற்கு மட்டுமன்று. இருப்பினும், இவ் ஆரோக்கிய மருத்துவமனைகள் பள்ளிகளில் தொடர்ந்து வைக்கப்பட்டு இளைஞர்களுடைய ஆரோக்கியத்துக்கும் வாழ்க்கை நலத்துக்கும் உதவுமாறு பணிபுரிகின்றன.

மன நலவியல் மருத்துவமுறையினைத் தேவையாகக் கொண்டுள்ள பலருடைய செய்திகள், குழந்தை வழிகாட்டி மருத்துவமனை, உள மருத்துவர் அல்லது இப்பிரச்சினைகளில் அக்கறை கொண்டுள்ளவர் அல்லது அக்கறை கொண்டுள்ள அமைப்பு ஆகியோர்களின் கவனத்திற்குள் வரா என்பதில் ஐயமில்லை. ஆனால், இவை மிக அதிகமான அளவில் அவர்களின் உண்மையான உணர்வின்றிப் பள்ளியிலும் இல்லத்திலும் முயன்று தவறுதல்முறையின் வாயிலாகவே செயலுறுகின்றன. குழந்தை தனது காலத்தின் பெரும் பங்கினை இல்லத்திலும் பள்ளியிலும் செலவிடுகின்றான். அவ்விடங்களில் இப்பிரச்சினைகளை இயல்பாகவோ, மாற்றுருக்கொண்டோ கட்டாயமாகச் சந்திக்கின்ற வாய்ப்பு அவனுக்கு ஏற்படும். இதனைப்பற்றி ரியான்ஸ் (Ryans) பின்வருமாறு குறிப்பிடுகின்றார்:

[15] P. Blos, 'Adolescence, Its Stimulations and Patterns,' Childhood Education, 1941, Vol. 18, p. 83.

"மனநலம் கல்வியின்மூலமாக மிகவும் முன்னேற்றமடையும். ஆனால், இதற்குப் பள்ளி, சமுதாய வாழ்க்கையில் அதனுடைய உண்மையான செயல் தன்மையை உணரவேண்டும். பள்ளி, மற்ற நிறுவனங்களுடன் ஒழுங்காகத் தொடர்புகொள்ள வேண்டும். கோயில்கள், 'குணவியல்பு வளர்க்கின்ற நிறுவனங்கள்,' 'சமூகப் பணியாளர்கள்', குழுக்கல்விப் பணியாளர்கள், ஆரோக்கியச் சக்திகள்போன்ற நிறுவனங்கள் ஆகியவற்றுடன் சேர்ந்து பணியாற்றவேண்டும். தனியன்களைச் சமுதாயத்தில் உறுப்பினர்களாகவும், நன்மை பயக்கின்ற வாழ்க்கையினைப் பெற முயல்பவர்களாகவும் கருதி, பள்ளி மற்ற நிறுவனங்களுடன் ஒத்துழைக்கவேண்டும். மரபுவழியில் வந்துள்ள பழக்கமான பள்ளி, தனித்து நிற்கின்ற குணம் மாறி, சமுதாயத்திலுள்ள மற்ற வளர்ச்சிபற்றி அக்கறைகொள்ளும் நிறுவனங்களுடன் தொடர்புகொண்டு, எல்லாச் சக்திகளையும் ஒன்றுதிரட்டுவதனை வரவேற்று, மனநலத்திற்காக ஏதாவது ஒரு வழியில் பாடுபடவேண்டும்".[16]

ஒவ்வொரு பள்ளியிலும், ஒழுங்காகத் திட்டமிடப்பட்ட அல்லது அவ்வாறு திட்டமிடப்படாத ஏதாவதொரு மனநலவியல் திட்டம் அவசியம் வேண்டும். எந்தத் திட்டமும் கீழ்க்கண்ட பொருள்களைக் கொண்டதாக இருக்கவேண்டும்:

1. குழந்தை உளவியல், இளையோர் உளவியல், மனநலம் ஆகியவைகளில் பயிற்சிபெற்ற ஆசிரியர்கள்.

2. படிக்கத் துவங்கும் ஒவ்வொரு மாணவனையும் அவனது உளவியல்—உடலியல் நோக்கில் ஆய்வு செய்தல்.

3. குழந்தைகளின் தன்மையுடனும் அக்கறைகளுடனும் இசைவுடன் இருக்குமாறும், நன்ருகத் திட்டமிடப்பட்ட எச்சரிக்கையான உற்றுநோக்கலுக்கு வாய்ப்பு அளிக்குமாறும் துவக்கப் பள்ளிகளைத் திருத்தியமைத்தல்.

4. குழந்தைகளின் வளர்ச்சியையும் பயிற்சியையும்பற்றி ஆய்கின்ற பல்வேறு நிறுவனங்களின் இணைப்புத்தன்மையைக் கருதுதல்.

5. குறையுடையோரையும் குற்றம் செய்வோரையும்பற்றி அக்கறைகொள்கின்ற பள்ளிகளையும் வகுப்புகளையும் விரிவடையச் செய்தல்.

6. நடத்தைக் குறைகளைக் கவனிக்காது, அதற்குக் காரணமாயிருக்கின்ற தவருன பொருத்தப்பாடுகளில் கவனத்தைச் செலுத்துதல்.

[16] C. W. Ryan, 'Mental Health through Education.' New york: The Commonwealth Fund, 1938, p. 304.

குழந்தையின் உள்ளார்ந்த திறன்களை வளர்க்கின்றதும், அவனைச் சிறந்த குடிமகனுக்குகின்றதுமான கல்வியையே, மனநலவியலைக் கருதுகின்ற கல்வி எனக் கொள்ளவியலும். ஆதலின், கல்வித் துறையாளர்கள், அவர்களது மாணவர்களின் சமநிலையுள்ள நல்ல ஆளுமைகளை வளர்ப்பதன்மூலம், நாட்டின் முடிவான மனத்திண்மையிலும் ஆரோக்கியத்திலும் அதிகச் செல்வாக்குக்கொள்ள முடியும். பள்ளியின் கவன மையத்தைப் பாடத்திட்டத்தினின்று மாணவர்களிடம், அதாவது மனிதர்களிடத்துத் திருப்புகின்றவரை எந்தவிதமான முன்னேற்றமும் ஏற்படாது.

## ஆசிரியரது மனநலவியல்

வெற்றிகரமான ஆசிரியரைப்பற்றியும் ஆசிரியர்களின் ஆளுமைப் பொருத்தப்பாடுகளைப்பற்றியும் அக்கறைகொள்கின்ற பல் வேறு ஆய்வுகள், சிறுவர் சிறுமியரது வளர்ச்சியில் ஆசிரியர் கொள்கின்ற செல்வாக்கின் முக்கியத்துவத்தை வலியுறுத்துகின்றன. ஆசிரியரின் இசைவான குணவியல்புகளை அறிய முயல்கின்ற பிரச்சினையின் சிக்கலான தன்மை, ஆசிரியரது மனநலவியலைத் தீர்மானிப்பதில் அதிகத் தொல்லையினை உண்டாக்கியுள்ளது. ரியான்ஸ் (Ryans) என்பவரது அறிக்கை, ஆசிரியர் இயல்புகள்பற்றி ஆய்வாளர்கள் எடுத்துக்கொண்ட முயற்சிகளினால் கிடைத்துள்ளது.[17] கற்பித்தலில் 'திறனாய்வுக்குரிய நிகழ்ச்சிகள்' என்பதிலிருந்து, நல்ல வெற்றியடைகின்ற ஆசிரியரது இயல்புகளைத் தெளிவாக விளக்கும் நடத்தை மாதிரிகள் கிடைத்தன. இவ் ஆய்வில் கீழ்க்கண்ட விளக்கச் சொற்கள் காணப்பட்டன:

1. சுறு சுறுப்பாய் இருப்பார். ஆர்வம் உடையவராகவும், மாணவர்களிடமும் வகுப்புச் செயல்களிலும் அக்கறை கொண்டவராகவும் இருப்பார்.

2. எப்பொழுதும் முகமலர்ந்தும், வெற்றியே கிட்டும் எனும் மனப்பான்மையினைக் கொண்டவராயும் இருப்பார்.

3. தன்னடக்கமும், எளிதில் கலங்காத தன்மையும், நன்ருகத் திட்டமிட்ட அமைப்பும் கொண்டிருப்பார்.

4. கேளிக்கையை விரும்புவார். நகைச்சுவை உணர்வினைக் கொண்டுள்ளார்.

[17] D. G. Ryans, 'The Investigation of Teacher Characteristics,' Educational Record, 1953, Vol. 34, p. 383.

5. தனது தவறுகளை உணர்ந்து ஏற்றுக்கொள்ளுவார்.

6. மாணவர்களை நடத்துவதில் நேர்மையுடனும், பாரபட்சமின்றியும், புறவயமாகவும் நடந்துகொள்வார்.

.....................................

8. மாணவர்களுடன் வேலைசெய்யும்பொழுது, அறிந்துகொள்ளுதலையும் பரிவையும் காட்டுவார்.

குழந்தைகள் சிறப்பான பொருத்தப்பாட்டுப் பழக்கங்களை முதியோரிடமிருந்து கற்றுக்கொள்ள இயலாது; ஏனெனில், அம்முதியோர்களே சிறப்பான பொருத்தப்பாட்டுப் பழக்கங்களைக் கொண்டிருக்கமாட்டார்கள். ஆசிரியர்கள் எளிதில் உணர்ச்சிவசப்பட்டு எரிச்சலடைகின்றவர்களாய் இருந்தாலும், மனிதத் தன்மைக்கு எந்த விதமான போற்றுதலையும் அளிக்காதவர்களாய் இருந்தாலும், பாடத் திட்டத்தில்மட்டுமே அக்கறை கொண்டிருந்தாலும், பிரச்சினை வரலாற்றைப் படிக்க நேரமில்லாதவர்களாய் இருந்தாலும், தாங்களே நன்குகப் பொருந்தி அமையாதவர்களாய் இருந்தாலும், மனநலவியலின் கொள்கைகளைத் தங்களது பள்ளி வேலையில் புகுத்தித் தவறுன பொருத்தப்பாடுடையவர்களுக்கு உதவியாக இருக்கவும் மற்றவர்கள் தவறுன பொருத்தப்பாட்டினைக் கொள்ளாதவாறு தடுக்கவும் இயலாது. இது பாய்ன்டனும் (Boynton), மற்றவர்களும் நடத்திய ஆய்வில் காட்டப்பட்டது.[18] மனவெழுச்சிச் சமநிலையில்லாத ஆசிரியர் குழுவின் விளைவுகளை, மனவெழுச்சிச் சமநிலையுள்ள ஆசிரியர் குழுவுடன் ஒப்பிடப்பட்டது. நாஷ்வெல்லி (Nashville)யிலுள்ள 5, 6ஆவது படிவ ஆசிரியர்களிடம் திருத்தியமைக்கப்பட்ட உட்வொர்த்-மெத்யூஸ் சொந்தக் குறிப்புத்தாள் (Woodworth-Mathews Personal Data Sheet) தரப்பட்டது. அவர்களுடைய மதிப்பெண்களின் தரத்தின்படி அது வகைப்படுத்தப்பட்டது. நல்ல பொருத்தப்பாடுடைய ஆசிரியர்களின் மாணவர்களுக்கும், நல்ல பொருத்தப்பாடில்லாத ஆசிரியர்களின் மாணவர்களுக்கும் அதே சோதனை தரப்பட்டு, முடிவுகள் ஒப்பிட்டுப் பார்க்கப்பட்டன. அட்டவணை 11—3-ல் முடிவுகள் காட்டப்பட்டுள்ளன. இவ்வாய்வின் ஆசிரியர் கூறுவதாவது: 'ஓர் ஆசிரியர் மிக அதிகமான மனவெழுச்சிநிலையில் இருப்பாராஞல், அவர் மாணவர்களுக்கு மனவெழுச்சிநிலையில் தொல்லை தருவார். ஆனுல், அவர் மனவெழுச்சிச் சமநிலை உள்ளவராயின், மாணவர்களிடத்து மனவெழுச்சிச் சமநிலையை உண்டாக்க முனைவார்.

[18] P. L. Boynton, et al., 'The Emotional Stability of Teachers and Pupils,' Journal of Juvenile Research, 1934, Vol. 28, pp. 223-232.

## அட்டவணை 11—3

சமநிலையுள்ள, சமநிலையில்லாத ஆசிரியர்களது வகுப்புகளிலுள்ள மாணவர்களது மனவெழுச்சிச் சமநிலையில் உள்ள மாறுதல்கள்.

| | சிறுவர் சராசரி | சிறுமியர் சராசரி |
|---|---|---|
| மனவெழுச்சிச் சமநிலையில்லாத ஆசிரியர்கள் ... ... ... | 15·33 | 18·75 |
| மனவெழுச்சிச் சமநிலையுள்ள ஆசிரியர்கள் ... ... ... | 13·75 | 16·63 |
| சமநிலையுள்ள ஆசிரியர்களை விரும்புவதில் உள்ள மாறுதல் ... ... | 1·58 | 2·12 |
| நம்பிக்கை கொள்ளும் அளவு ... | 3·59 | 3·59 |

ஆசிரியர்களது நிலையில் இப் பிரச்சினை, பெரிய வகுப்புகள், கற்பிக்கப் பயன்படுத்துகின்ற கருவிகள் போதிய அளவு இல்லாமை, பொழுதுபோக்கிற்குக் காலமோ வாய்ப்போ இல்லாமை, மாணவர்களுக்கு உதவி செய்யவேண்டும் எனும் ஆர்வத்திற்கும் கட்டுப்பாட்டுத் தேவைக்கும் இடையே போராட்டம் ஆகிய காரணங்களால் மிகச் சிக்கலுடையதாகின்றது. லூட்டிட் (Louttit), மனப்பான்மையின் விளிம்புகளையும், நடத்தைத் தரங்களையும் அளித்துள்ளார். இது ஆசிரியர்கள் வகுப்பறையில் மாணவர்களுடன் மன-ஆரோக்கியத் தொடர்புகளை ஏற்படுத்துவதற்கு உதவியாய் இருக்கும். அவைகளாவன:

1. குழந்தைகள் எவ்வாறு இருக்கின்றனரோ அவ்வாறே ஏற்றுக்கொள்ளப்படவேண்டும். ஏழை, பணக்காரன், புத்திகூர்மையுள்ளவன், புத்திகூர்மையற்றவன்; ஆரோக்கியமுடையவன், நோயுள்ளவன், சுத்தமானவன், அழுக்கானவன் ஆகியோரை அவ்வாறே ஏற்றுக்கொள்ள வேண்டும். அவர்கள் எவ்வாறு இருப்பினும், அவர்கள் எல்லோரும் மனிதர்களாகவே வளருகின்றவர்களாவர். அவர்களுக்குப் பயிற்சி அளிக்கவேண்டும்; மதிப்புத் தரல்வேண்டும்; வகுப்பில் ஒவ்வொருவரும் பயனடையும் வகையில் வாய்ப்பினை அளிக்கவேண்டும்.

2. இதிலிருந்து பெறுகின்ற கொள்கை, எல்லோரையும் சமமாக நடத்தவேண்டும் என்பதே. ஒவ்வொரு குழந்தையும் தான்

குழுவில் உள்ள ஒரு முக்கிய உறுப்பினன் என்பதை உணரும்படி செய்யவேண்டும். ஆசிரியர் எல்லாக் குழந்தைகளையும் ஏற்றுக் கொள்ளாவிடில், ஒருவரிடம் ஆதரவு காட்டி மற்றவர்களை ஒதுக்கு வார்.

3. குழந்தைகளாலும் உடனுழைப்பவர்களாலும் அச்சுறுத்தப் படும் எந்த உணர்வுகளிலிருந்தும் விடுதலைபெறுதல் அவசியம். உடன் பணியாற்றுபவர்மீது பொறாமையோ ஐயமோ கொள்ளும் போதும், குழந்தைகளின் செயல்களால் தன்னுடைய அந்தஸ்தும் மதிப்பும் குறைந்துவிடும் என்று அச்சமுறுகின்றபோதும், ஆசிரியர் நல்ல பொருத்தப்பாடுடைய ஆளுமையைப் பெற்றிருக்கவில்லை என்று கொள்ளலாம்.

4. ஆசிரியர் நகைச்சுவை உணர்வு கொண்டிருக்கவேண்டும். அதாவது மிகவும் திறமை வாய்ந்த நகைச்சுவையைப் பெற்றிருக்க வேண்டும் என்பது அவசியமில்லை. தன்னைப்பற்றியும் தனது வேலை யைப்பற்றியும் அவ்வாறான மனப்பான்மை கொண்டிருப்பவர்களால், உலகத்துடன் நல்ல தொடர்புகளை வைத்துக்கொள்ள முடிகின்றது. ஒருவர் தன்னைப்பற்றி மிகவும் தீவிரமாக எண்ணிக்கொண்டிருந்தால், அது தற்காப்பின்மைக்கு மிக முக்கியமான அறிகுறியாகும். துர திர்ஷ்டவசமாக நகைச்சுவை உணர்வினைக் கொள்ளாதவகையில் உள்ள மனப்பான்மை, மற்றவர்களிடத்து, குறிப்பாகக் குழந்தைக ளிடம் அந் நடத்தை உண்டாவதற்கு ஏதுவாகின்றது. தற்காப்பு உணர்வு பெறுவதற்கு இது மேலும் தடையாகின்றது.

5. நாம் ஏற்றுக்கொள்ளாத கருத்துகளையும் நடத்தையையும் கொண்டோரை அனுமதித்தல் இசைவானதொரு கொள்கையாகும். சொந்தக் கருத்துகளை விடாப்பிடியாகக் கடைபிடித்தலானது, வகுப் பறையில் மற்றக் கொள்கைகளுக்கு மதிப்புத் தருதல், தனது கருத் திற்கு ஏற்றவாறு அமையாத குழந்தையை ஏற்றுக்கொள்ளுதல் ஆகிய வற்றிற்குத் தடையாய் இருக்கின்றது.

6. ஆசிரியர் தனது வேலையில் கொள்ளும் மனப்பான்மை அவர் குழந்தைகளிடத்துக் கொள்ளும் செல்வாக்கினைப் பெரிதளவு பாதிக் கும். ஆசிரியர் பதவி, மற்றப் பதவிகளைப் பெறுவதற்கு ஒரு வாயிற் படியாகவோ, பொருளாதாரத் தற்காப்பிற்குமட்டுமோ இருக்கு மானால், அதனால் குழந்தைகள் தொல்லையுறுவார்கள். ஆசிரியரது மனப்பான்மை, குழந்தைகளிடத்துச் செல்வாக்கினை உண்டாக்கு மானால், அது குழந்தைகளிடத்து அதிகமான, இசைவான விளைவுகளை உண்டாக்கும். அம் மனப்பான்மையானது பணியில் முக்கிய அக்கறை கொண்டதாய் இருக்கவேண்டும். குழந்தைகள் குழு அளிக்கின்ற பல்லாயிரக்கணக்கான பொருத்தப்பாட்டுப் பிரச்சினை

களில் உற்சாகத்துடன் அக்கறை கொள்கின்ற மனப்பான்மை வேண்டும்.

7. இவ்வாருன சக்திக்குத் தொழில் வளர்ச்சியில் இடைவிடாத முயற்சியினைக் கைக்கொள்ள வேண்டும். ஆசிரியர், மதகுருவைப் போன்று, டாக்டரைப் போன்று அல்லது வேறு தொழிலைக் கைக் கொள்ளுபவர் போன்று, இடைவிடாது பணியாற்றியும், ஆசிரியர் துறையில் ஏற்பட்டுள்ள புதிய வளர்ச்சிகளை உணர்ந்தவாறும் இருத்தல் வேண்டும்

8. ஆசிரியர் பொதுமக்களது ஊழியராக இருப்பதோடன்றி, குழந்தைகளுக்கு அறிவுரை வழங்குபவராயும் இருத்தல்வேண்டும். அவர் சமுதாயத்தின் உறுப்பினராதலின், மற்றக் குடிமக்கள்போன்றே பொறுப்புகளும் அவருக்கு உண்டு. இப் பொறுப்புகளை உணர்ந்து செயல்களில் ஈடுபடுதலும் பங்குபெறுதலும், நன்மை பயக்கத்தக்க சமூக முதிர்ச்சியினை விளைவிக்கின்றன. அவை குழந்தைகளிடத்து நல்ல எண்ணத்தையும் உண்டாக்குகின்றன. ஆசிரியர் சுதந்திரமாக இருத்தல்வேண்டும். ஒவ்வொரு கூட்டத்திற்கும், இசைக் கச்சேரிக் கும் செல்லவேண்டிய கட்டாயம் இருக்கக்கூடாது. டாக்டர், வியா பாரி ஆகியோருக்குக் காலம் எவ்வாறு அருமையானதோ, அது போன்றே ஆசிரியரது காலத்தையும் மிகவும் மதிப்புள்ளதாக்க வேண்டும்.

9. சொந்தத் தோற்றம் ஆசிரியரது ஆளுமையினைப்பற்றிக் கணக்கிடுவதற்குப் பயன்படுகின்ற முக்கிய ஏதுக்களில் ஒன்ருகும். நன்ருகப் பொருந்துகின்ற உடையினையும், நாகரிகமான உடையினை யும் அவர் அணியவேண்டும். சுத்தமாய் இருக்கவேண்டும். ஒழுங் காக வாரிவிடப்பட்ட தலைமயிரையும், சுத்தமான கைகளையும் கொண் டிருக்க வேண்டும். இவையெல்லாம் அவர் உலகத்துடன் பொருந்தி யிருக்கின்ருர் என்று காட்ட உதவும். உடை பழங்கால வகையைச் சார்ந்ததாகவும், பழைய நாகரிக அமைப்பில் இருந்தாலும், அவர்களது ஆளுமை இயல்புகள் மிகுந்த குறுகிய நோக்கம் உடையனவாகவும், மாற்றமில்லாத தன்மையுடையனவாகவும், நிலைத்தில்லாமை அல்லது தற்காப்பு இன்மை ஆகியவற்றைக் கொண்டனவாகவும் இருப்பதைக் குறிக்கும்.

10. கடைசியாக, நாம் உடல் நலத்தைப்பற்றியும் குறிப்பிட வேண்டும். இது சொந்தத் தோற்றத்துடன் உடனடித் தொடர்பு கொண்டுள்ளது. ஆசிரியரது மனப்பான்மைகள் உருவாகவும் இது முக்கியத்துவம் கொண்டுள்ளது. உண்மையில், நோயுற்றுள்ள ஆசிரியர், அறை முழுதும் உள்ள குழந்தைகளின் அன்ருடத் தேவை களைப் பூர்த்திசெய்யும் நிலையில் இரார். நரம்புப் பிணியில் அவதி யுறுவோர், எப்பொழுதும் குற்றம் சாட்டுவோர் ஆகியோர், குழந்தை

களுக்கு, அவர்கள் ஆசிரியரிடமிருந்து பெறவேண்டிய பொருள்களைத் தரக்கூடிய ஆளுமையினைப் பெற்றவரல்லர்.[19]

## சமுதாயத்தின் முக்கியத்துவம்

இவ்வதிகாரத்தின் முற்பகுதியில் சமுதாயத்தில் பல்வேறு இடங்களிலுள்ள பொழுதுபோக்கு, இளையோர்களது மனநலத்திலும் உடல் நலத்திலும் முக்கியச் செல்வாக்குக் கொண்டுள்ளது என்று குறிப்பிடப் பட்டுள்ளது. பல சமுதாயங்களிலும் நகரங்களிலும் இளையோர் களால் சட்டத்திற்குட்பட்ட ஏதுக்களின்மூலமாகவும், சட்டத்திற்கு விரோதமான ஏதுக்களின்மூலமாகவும் சிகரட்டுகளைப் பெற முடி கின்றது. வளர்கின்ற சிறுவர் சிறுமியருக்கு சிகரட்டு குடிப்பது கேடு விளைவிக்கக்கூடியதா என்பது இங்குள்ள கேள்வியன்று. ஆனால், அதன் தீய விளைவுகளைப்பற்றிச் சான்றுகள் பேசுகின்றன. ஆயினும், இங்கு நம்முன் உள்ள பிரச்சினை, அதனைப் பயன்படுத்துவதுபற்றி நல்ல முடிவினை எடுப்பதற்கு ஏற்ற அல்லது போதிய அளவு முதிர்ச்சி யில்லாத காலத்திலேயே அவைகள் அவர்களுக்குக் கிடைக்கின்றன என்பதேயாகும். மேலும், சிகரட்டு, விஸ்கி (whiskey) போன்ற போதைப்பொருள்களை அடையக் கைக்கொள்ளும் முறையும், அவை களைப் பயன்படுத்துகின்ற வகையும் இளையோர்களுக்கு அப்பொருள் கள் இசைவற்றன என்ற கருத்தினுக்கு ஊக்கமளிக்கின்றன.

பள்ளி ஒரு நாள் அல்லது அதற்கு மேலும் மூடப்பட்டால், குற்ற மும் குறும்பும் அதிகரிக்கின்றன என்று பொதுவாகக் கருதப்படுகிறது. பெரும்பான்மையான உயர்நிலைப்பள்ளிச் சிறுவர் சிறுமியர், செல வழிப்பதற்கு மிகவும் குறைந்த அளவுப் பணமே வைத்திருக்கிறார்கள் என்றாலும், அதில் பெரும்பகுதி நேர்மையற்ற இடங்களில்தான் செல வழிக்கப்படுகின்றது. அதுவும், அவ்வாறான இடங்கள் சமுதாயத்தில் இருக்குமானால், அங்குதான் செலவிடப்படும். டாக்டர்கள், இளங் குற்றவாளி நீதிமன்றத்தினர், காவல் துறையினர் ஆகியோர்களால் இளையோர்களைச் சந்திக்கின்ற பிரச்சினைகள்பற்றிக் கூற இயலும். நேர்மையற்ற இடங்கள் பரவலாக இருக்கும்பொழுது இளையோருக் குப் போதைப் பொருள்கள் அதிகமாகக் கிடைக்கின்றன. கஞ்சா விற்கின்ற சிறு கடைக்காரர்களும் இளையோர் சிறுவர் சிறுமியரது குறைகளைப் பயன்படுத்திக்கொள்ளத் தயாராக இருக்கின்றனர். இளமையில் போதைப் பொருள்களைக் குடித்தலும், போதை மருந்து குடித்துப் பழக்கங்கொண்டு அதற்காக ஏங்குதலும் (drug addiction) கிராமப் பகுதிகளில் அதிகப்படியான முக்கியத்துவத்தைக்

[19] C. M. Louttit, 'The School as a Mental-Hygiene Factor,' Mental Hygiene, 1947, Vol. 31, pp. 58-60.

கொண்டுள்ளன.[20] இங்கிலேயானது ஒரு தேசிய முக்கியத்துவம் வாய்ந்த பிரச்சினையாகியுள்ளது. பல ஆண்டுகளாகப் போதைப் பொருள்களைக் குடித்தல், புகை பிடித்தல், பால் வெளிப்படை நடத்தைகள் ஆகியவை மறைக்கப்பட்ட செயல்களாகவும், முன்னிளை யோர் கண்களுக்குப் படாதனவாகவும் இருந்தன. இருப்பினும், விரிவாகிய சமூகத் தொடர்புகள், வாழ்க்கைத் தரங்களின் முன்னேற்றம், அதிகப்படியான கல்விக்குரிய வாய்ப்புகள், இளையோரது அனுபவங்கள் இச்செயல்களைச் செய்வதற்கு அனுமதியளிக்கின்ற வகையில் குறியீடுகளாக விளங்குகின்றன. இவ்வனுமதியின் அளவு பகுதிக்குப் பகுதி மாறுபடுகின்றது. ஆனல், இளையோன் அவனது புதுச் சுதந்திரங்களை வெகுவாகக் காக்கிருன். ஊரிலுள்ள முதியோர்களது வாழ்க்கையை எளிதாக ஏற்றுக்கொள்கின்ருன். அவன் தனது ஒப்பார் பண்பாட்டுக்கு ஏற்றவாறு அதனை மாற்றியமைத்துக்கொள்கிருன். இவ்வாறு இளையோர் சிறுவன், 14 அல்லது 15 வயது அடைந்தவுடன், அவ்வயதில் சிகரட்டு பிடிப்பது தன் உரிமை என்று நினைக்கிருன். அவன் 15 அல்லது 16 வயதில் காரோட்டுவது தனது உரிமை என்று எண்ணுகிருன். 16 அல்லது 17 வயதில் குடிக்கும் பழக்கத்தைக் கைக்கொள்வதும், 18ஆவது வயதில் புத்தாண்டு விருந்தில் அதிகச் சுதந்திரம் கிடைத்தற்கு அறிகுறியாக நன்ருக அதிகமாகக் குடிக்கவேண்டும் என்பதும் தனது உரிமைகள் என்று எண்ணுகின்ருன். இக்குறிப்புகள் ஒருதலைப்பட்சமான தன்மையுடையவையாயினும், குழுவுக்குக் குழு அவை கட்டாயமாக மாறுதலுக்குள்ளாகின்றன. குடிக்கும் பழக்கத்தில் இளையோர்கள் தங்களது முதியோரைப்போன்று அவ்வளவு மோசமான நிலையில் இருக்கமாட்டார்களென்ருலும், அவர்கள் அனுபவமற்றவர்களாதலின், சில சமயங்களில் தங்களது பகுத்துணர்வைப் பயன்படுத்தமாட்டார்கள்.

போதை மருந்தினைக் குடித்தல் இளையோர்களிடத்து மிகவும் அதிகரித்துவிட்டதால், அதனுடைய வேகத்தைத் தணிக்க தேசியச் சட்டம் ஒன்றை நிறைவேற்றியுள்ளனர். ஃபால்ஸ்டீன் (Falstein) என்பவர் கூறுகின்ருர்:

'செலிஜர் (Seliger) என்பவர் 1951-ல் கென்டகி (Kentucky) எனும் பகுதியைச் சார்ந்த லெக்ஸிங்டன் (Lexington) எனும் ஊரில் உள்ள தேசிய மருந்து போதையினுல் அவதியுறுவோர் பண்ணையில் (Federal Narcotics Farm) சேர்த்த, போதை மருந்திஞல் அவதியுறுவோரில் 20 சதவிதத்தினர் 21 வயதுக்குக் கீழானவராய் இருக்

[20] E. I. Falstein, 'Juvenile Alcholism: A Psychodynamic Case Study of Addiction,' American Journal of Orthopsychiatry, 1953, Vol. 23, pp. 530-551.

கின்றனர். ஆனால், ஆறு ஆண்டுகளுக்கு முன்னால் இவ்விகிதம் 3 சத வீதமாய்த்தான் இருந்தது.'[21]

இவ்வாறு ஈடுபடுதலைத் தடுக்கின்றபொழுது, அவற்றின்மீது குறைவான ஆசையையே கொள்ளச் செய்கின்றது. இளையோர்கள், இத்தவறான பொருள்களையெல்லாம் எளிதில் பெறுகின்ற வகையில் சமுதாயம் அவற்றை விட்டுவைக்கக்கூடாது. உண்மையில் குடிப்பழக்கத்தைக் கொண்டு அதனைக் கைவிட முடியாது தவிக்கின்றவர்களாக இருப்பவர்கள், இளையோர் பருவத்தில் அதிகமாக இல்லை. அதிகாரம் 16-ல் சமுதாய நிறுவனங்கள் பொழுது போக்கு வழிகள் அளிக்க வேண்டியதன் அவசியத்தைப்பற்றியும், இளையோர்களது தேவைகள் குறித்தும் விவரமாக விவாதிக்கப்பட்டுள்ளன. இளையோர்களது ஆரோக்கியத்திற்கும் நலத்திற்கும் சமுதாயத்திற்குள்ள பொறுப்பு நல்ல பள்ளிகளை அமைப்பதிலும், சமுதாய நிறுவனங்களை ஏற்படுத்துவதிலும், சிறுவர்களுக்கும் சிறுமியருக்கும் ஏற்ற பயனுள்ள செயல்களைப் புரிவதிலும் காட்டப்பட வேண்டும். இதன் தொடர்பில், இல்லங்களும் திருச்சபைகளும் முக்கியப் பங்கினை வகிக்கவேண்டும்.

## ஆரோக்கியமுள்ள சொந்த வாழ்க்கை

திருப்திகரமான சொந்த சமூகப் பொருத்தப்பாடுகளின் வளர்ச்சியானது, அடிப்படைத் தேவைகளைத் திருப்திப்படுத்துவதற்காகப் பயன்படுத்துகின்ற, இசைவான, சமூகத்தால் ஏற்றுக்கொள்ளக்கூடிய முறைகளின் வளர்ச்சியுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. அதிகாரம் 7-ல் குறிப்பிடப்பட்டுள்ள இத்தேவைகள் அதிகாரம் 1-ல் தரப்பட்டுள்ள வளர்ச்சிக்குரிய பணிகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன. வளர்கின்ற நிலையின் தொடர்பில் உள்ள பல்வேறுபட்ட பிரச்சினைகளைத் திருப்திகரமாகத் தீர்த்த இளையோன், இவ்வாரோக்கியமுள்ள சொந்த வாழ்க்கைப் பிரச்சினையைச் சமாளிக்க இயலும். இருப்பினும், ஆரோக்கியமுள்ள சொந்த வாழ்க்கையினைக் கைக்கொள்வதற்கு எளிதான குறியீடு எதுவும் இல்லை. ஒவ்வோர் இளையோனும் அவனுடைய தனித்த மரபுநிலையிலும், உடற்கட்டிலும், மனவியல்பிலும், மனவெழுச்சி இயல்பிலும், வாழ்க்கை வரலாற்றிலும் மாறுபட்டு இருக்கின்றான். சைமண்ட்ஸ் (Symonds) என்பவர் 40 இளையோர்களிடமிருந்து பெறப்பட்ட 1,680 தலைப்புகள்மூலம் ஓர் ஆய்வு நடத்தினார்.[22] அவர் கண்டது என்னவெனில், ஒரு தலைப்பு

[21] Ibid. p. 550.

[22] P. M. Symonds, 'Adolescent Fantasy.' New York: Columbia University Press, 1949, p. 321.

கதைகளில் விரிவாக்கப்படும்பொழுது, அத் தனிப்பட்ட இளையோ னது வெளிநடத்தையில் அப்போக்குக் காணப்படுவதில்லை என்பதே யாகும். இதற்கு மறுதலையாக, குறிப்பிடும்படியான ஆளுமைப் போக்குகள், தலைப்புகளில் வெளிப்படுத்தப்படும் என்று எதிர்பார்ப்ப தற்கில்லை. ஆதலின், ஒரு தனியன் அன்றாட வாழ்க்கையில் தனது தேவைக்காக உழைக்கும்போது, அத் தேவையைக் கற்பனையான தலைப்புகளில் வெளியிட வேண்டியதில்லை என்று கொள்ளலாம்.

இப்பருவ வாழ்க்கையில், தனித்த தன்மை பெற்றிருப்பதும், அதே சமயத்தில் அதற்கு மாறுபட்ட இயல்பான குழுவுடன் ஒன்றி யிருத்தலும் இயல்பான நடத்தையேயாகும். ஆதலின், சில போக்கு கள் தடைசெய்யப்படுகின்றன; வேறு சில போக்குகள் வளர்க்கப்படு கின்றன. தனித்த சிறுமி, நாகரிகத்தின் அடிமையாகி, அவள் சார்ந் திருக்கின்ற குழுவில் மறைகின்றாள். யாராவது ஒருவரைச் சார்ந் திருக்கின்றோம் என்ற உணர்வு அவளுக்குத் தேவையாக இருக்கிறது என்பதனை உணர்கிறாள். அவள் குழுவின் நடத்தைவகைக் குட்பட் டுத் தன்னை மதிக்குமாறு நடந்துகொள்கிறாள். தனியாள் மாறுபாடு களை அவள் வெளிப்படுத்தினால், தனது தனித்தன்மையையும் நிலை நிறுத்துகின்றாள்.

### தற்காப்பு உணர்வின் வளர்ச்சி

இளையோர் பருவகால உந்துவில், சுதந்திரத்திற்கும் தற்காப் பிற்குமுள்ள தேவையின் முரணை கட்டத்தைக் காணலாம். தனி யன்கள் இவ் வயதில் தங்களது குழந்தைப் பருவத்தை முழுவதுமாக ஒதுக்கிவிடுவதில்லை. அதே சமயத்தில் அவர்கள் வளராமலுமிருப்ப தில்லை. இளையோன் தன் முடிவுகளைத் தானே எடுத்துக்கொள்ள விரும்புகின்றான். அவன் செலவிடுவதற்குச் சொந்தமாகப் பணம் வைத்துக்கொள்ளவும் விரும்புகின்றான். தானே நண்பர்களைத் தேர்ந் தெடுக்கவும் விரும்புகின்றான். இருப்பினும், இப்புதுப் பொறுப்புகள் தவறான முடிவுகளைச் செய்துவிடுவோமா எனும் அச்சத்தினையும் உண்டாக்குகின்றன. தவறான நண்பர்களைத் தேர்ந்தெடுத்து விடுவோமோ என்ற அச்சத்தையும், குறிப்பிட்ட அடைவுநிலைகளை அல்லது குறிக்கோள்களை அடையத் தவறிவிடுவோமோ என்ற அச்சத்தினையும் உண்டாக்குகின்றன. இந்நிலை, இளையோர் பருவத் தினை முடிவெடுக்கவியலாத பிரச்சினைகளையும் தொல்லைகளையும் கொண்ட பருவமாக ஆக்குகின்றது.

இளையோன், தனது ஒப்பாருடன் தற்காப்புடனிருக்கும் உணர் வினைப் பெறவேண்டிய தேவையினை உணர்கின்றான். தற்காப்பின்மை உணர்வுகள், குழந்தைப் பருவத்திலேயே தோன்றுகின்றன என்று கூறுவதற்குப் போதிய சான்றுகள் இருக்கின்றன. இத் தேவை பசி,

வாழ்க்கையைத் தொடர்ந்து நடத்தவேண்டிய அவசியம் ஆகியவற்றுடன் தொடர்புடைய உடலியல் உந்துவினின்று கிளையாகத் தோன்றுகின்றது. இத் தேவைக்கு ஆபத்து ஏற்படும்பொழுதெல்லாம், குழந்தை பற்றார்வங்கொண்டு பல்வேறு தடுமாற்றங்களை வெளிப்படுத்துகின்றது. அவன் சாப்பிடுகின்ற அல்லது தூங்குகின்ற செயல்களில் தடைகள்போன்ற குறியீடுகளை வளர்த்துக்கொண்டு பொதுநலக் குறைபாட்டினைக் கொள்வான். அவன் வளர்ந்து அதிக வயதினனாகும்பொழுது, கூடுதலான வலுத்தாக்குதலையும் பிடிவாதத்தையும் கைக்கொள்ளுவான். இளையோனுக்குத் தற்காப்பு, சமூகத்தில் பங்குபெறுவதாலும் வெற்றிகரமான அடைவினாலும் அதிகமாகின்றது. இப்பருவத்தில் அது ஒருவனுடைய ஒப்பாரின் ஏற்றுக்கொள்ளுதலுக்கு மிக நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. இதற்காக இளையோர் தம் பருவத்தில் வெகுவாக ஆசைப்படுகின்றனர்; தேவை கொள்கின்றனர்.

## வாழ்தொடர்புகொள்ளத் தேவை (Need for belongingness)

தற்காப்பு உணர்விற்கு மிகவும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ள உணர்வு வாழ்தொடர்புகொள்ளும் உணர்வாகும். இளையோன் ஒப்பார் குழுவின் இணைப்பகுதியாகவும், குடும்பக் குழுவின் உறுப்பினனாகவும் தன்னைக் கருதவேண்டிய தேவையினை உணர்கின்றான். அவனது பெற்றோர்கள் மற்றப் பெற்றோர்கள்போல் நோக்கி வினை செய்யாமல் இருக்கலாம். ஆனாலும், அவர்கள் அவனது பெற்றோர்களாவர். அவன் அக் குடும்பக் குழுவுடன் வாழ்தொடர்பு கொண்டுள்ளான். அவன் செய்கின்ற அல்லது செய்யாதிருக்கின்ற வினையால் இவ் வாழ்தொடர்பு கொள்ளவில்லை. அவன் அக் குடும்பத்தைச் சார்ந்தவனாக இருப்பதனாலேயே வாழ்தொடர்பு கொள்கின்றான். வாழ்தொடர்பு கொள்கின்ற உணர்வு அவனுக்கு நல்ல மனநலத்திற்குத் தேவையான தற்காப்பு உணர்வினை அளிக்கின்றது. பாசம், வாழ்தொடர்புடன் உள்ள ஓர் உணர்வாகும். குழந்தை தனது குடும்பச் சூழலிலிருந்து பிரிந்து வெளியே தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்ளும்பொழுது, பாசத்தின் தேவையை இல்லத்திற்கு வெளியே யுள்ள நெருங்கிய நட்புகளில் பெற்றுத் திருப்தி யடைகின்றான். இளையோன் சுதந்திரம்பெற்று முடிவாகக் குடும்பச் சூழலிலிருந்து பிரிந்து செல்லவேண்டியவனாவான். இவ்வாறு குடும்பத்தினின்று பிரிதலைச் சுதந்திரம் அடைதல் அல்லது இல்லத்தினின்று விடுதலை பெறுதல் என்று குறிப்பிடப்படுகின்றது. அவன் பெரியவனாக வளர்கின்றபொழுது, அவன் இன்னமும் அதிகமாக ஒப்பார் குழுவின் உறுப்பினன் என்று உணர்வான். மேலும்மேலும் ஒப்பார் குழுவின் அனுமதிக்கும் பாசத்திற்கும் ஏங்குவான். இது அவன் இல்லத்தினின்று முழுதும் பிரிந்து வந்துவிடவேண்டும் என்று பொருள்படவில்லை.

ஆனால், அவன் தனது அக்கறைகளையும் செயற்பாடுகளையும் விரிவாக்கிக்கொண்டு, தன்னைத் துவக்க ஆண்டுகளில் மிகவும் முக்கியமாகக் கட்டுப்படுத்திய நெருக்கமான குடும்ப உறவுகளினின்று பிரிந்து, வீட்டினின்று படிப்படியாக விடுதலைபெற முயலவேண்டும் என்றுதான் பொருள்படுகிறது. குழந்தைகளில் பலரது நிலைகளில் அதிக உண்மை அல்லது உடல் வயது மாறுபாடுடையவர்கள் நெருக்கமான நட்புறவினைக்கொள்வது நல்லது என்று கூறுவதற்கில்லை. இது வேறு எந்தப் பருவகாலத்தையும்விட இளையோர் ஆண்டுகளைப்பற்றிய சிறப்பான உண்மையாகும். ஏனெனில், இப்பருவத்தில்தான் பின்னால் வருகின்ற பருவங்களைக்காட்டிலும் அதிகமாக மாறுதல்கள் தெளிவாகத் தனித்துக் காட்டப்படுகின்றன. ஆனால், ஒரே தன்மையுடைய அக்கறைகள் கொண்டோருடன் கொள்ளும் தொடர்புகள், புரிந்துகொள்ளுதல்கள், பிரச்சினைகள் ஆகியவை நல்ல பொருத்தமுள்ள நல்ல சமநிலையுள்ள ஆளுமைகளை வளர்ப்பதற்கு மிகவும் முக்கியமானவையாகும்.

### சொந்தத் தகுதியுணர்வினை வளர்த்தல்

தானாக இயங்குகின்ற பழக்கங்களும் பொறுப்பும் தனியனுக்குத் தன்னம்பிக்கையையும் சொந்தத் தகுதியுணர்வினையும் அளிக்கின்றன. இவ்வாறான பழக்கங்கள், படிப்படியாகப் பழக்கத்திலுள்ள செயல்களினால் வளர்ச்சியுற்றுத் தாமாக இயங்குவதற்கும் பொறுப்புள்ளவனாகப் பயன்படுவதற்கும் வாய்ப்பு அளித்து வளர்கின்றன. இளையோனிடத்து உள்ள திறன்களைக் கண்டுபிடித்தலும் வளர்ச்சியடைதலும், பிறழ்வு நடத்தைப் போக்குகளை உணர்வதைக்காட்டிலும் முக்கியமான செயலினைக் கொண்டுள்ளன. இவ்வாறான அடிப்படையில்தான் சொந்தத் தகுதி யுணர்வினைப் பெறமுடிகின்றது. குழந்தையினை அடிக்கடி 'உதவாக்கறை' என்று குறிப்பிட்டால், அவன் அவ்வுதவாக்கறை நிலையை அடைய மெதுவாக முயல்வான். வெற்றிகரமான அடைவின் விளைவாகப் பெறுகின்ற திருப்தியினால், குழந்தை தான் ஓரளவு பயனுடையவன் என்று உணர்கின்றான். குழந்தை வளர்ச்சியுறும்பொழுது, அவன் தன் திறன்களைச் சிறப்பாக உணர்வதற்குக் கற்றுக்கொள்ளவேண்டும். தன்னிடம் நம்பிக்கையும், தனது திறன்களில் நம்பிக்கையும் கொள்ளவேண்டும். இதுதான் 'தன்னம்பிக்கை' என்று சில சமயங்களில் கூறப்படுகின்றது. கூடிவாழ்தலுக்கு உதவுகின்ற திட்டத்தினைக்கொண்ட நிகழ்ச்சிகள் அவனுக்கு அளிக்கப்படல்வேண்டும். அவ்வாறு கூடிவாழ்தல் எல்லா உறுப்பினர்களும் இணைந்து பங்குகொள்வதாக அமையவேண்டும். அவன் தனது சொந்தப் பங்கினை அளித்து, அது ஏற்றுக்கொள்ளப்பட்டு அனுமதிக்கப்பட்ட பின்னர், அவன் குழுவினால்

ஏற்றுக்கொள்ளப்படும் உறுப்பினனுகத் தன்னை உணர்ந்து கொள் கின்ருன்.

தன்னம்பிக்கை, தனியன் பட்டறிவுமூலமாகக் கற்பதனுல் வளர் கின்றது. சிலவற்றை அவனுல் திருப்திகரமாகச் செய்ய இயலும் என்பதும் பட்டறிவின்மூலமாக வளர்கின்றது. அவனது அடைவின் தரங்களுக்குத் திருப்தியளிக்கின்ற வகையில் அவனுல் செயலாற்ற முடிகின்றது. இத்தரங்கள் அவனிடமிருந்து மற்றவர்கள் எதிர்பார்க் கின்ற அளவின் அடிப்படையில் எழுந்தனவாகும். இவ்வாறு தனிய னது திறமைக்கேற்பப் பொறுப்புகளை அளிக்கவேண்டும். குழந்தை தன்னுடைய திறன்களுக்கு ஏற்றவாறு அமையாத ஒரு பாடத்திட்டத் தினை ஏற்றுக்கொள்ளுமாறு தூண்டப்பட்டால், அவனுல் கல்வியில் பொருந்தி அமைய இயலாது. இவ்வாருன நிலைகள் குழந்தையின் மோசமான ஆரோக்கியத்திற்கு வழிகோலும். ஒவ்வொருவருக்கும் முயற்சியினையும், தானுக இயங்குகின்ற தன்மையினையும் உண்டாக்கு கின்ற பணிகள் அளிக்கப்படல் வேண்டும். ஆனுல், அம் முயற்சிகள் வெற்றியின் வாயிலாகப் பயனளிக்கவேண்டும். பல்வேறு பணிகளில் வெற்றிபெறுதல், அதே வழியில் மேலும் முயற்சி எடுக்க அதிகமாக ஊக்குவிக்கும். புத்திகூர்மையற்ற குழந்தையினை அவன் வேலை யினைப் புரிந்துகொள்ளத் திறனற்று இருப்பதனுல், அதிகமாக வேலை யில் ஈடுபட வைத்தாலும், புத்திகூர்மையுள்ள குழந்தையினை அவனது திறன் காரணமாக அதிகமாக வேலையில் ஈடுபடாமல் வைத் தாலும், அவை செயலாற்றலுள்ள பிரச்சினை வரலாறுகளாகும். இவ் வேதுக்களினின்று பல கட்டுப்பாட்டுப் பிரச்சினைகள் தோன்றுகின்றன. ஷெர்மன் (Sherman) என்பவர் உயர்நிலைப் பள்ளி மாணவன் சேகரித் தலிலுள்ள அக்கறையின்மூலமாக அந்தஸ்தினையும், நல்ல பொருத்தப் பாட்டினையும் பெற்றதை விளக்குகின்ருர்: 'அவன் அறிவியல் திறனில் வகுப்பின் சராசரிக்குப் பின்தங்கி இருந்தான். இரண்டு பாடங்களில் தவறியும் இருந்தான். அவன் பல தாழ்வுச் சிக்கல்களால் அவதியுறுகின்ருன் என்பது தெள்ளெனத் தெரிந்தது. அவனிடம் ஆசிரியர்கள் குறைந்த கவனத்தையே செலுத்தினர் என்று முறை யிட்டான். பள்ளியில் புகழுடையவனுய் விளங்கவில்லை என்றும் முறையிட்டான். அவனது பெற்ருேர்கள், தர அடிப்படைக்குக் கீழான தரங்களை அவன் பெற்றிருந்ததனுல், அதற்குக் காரணம் அவ னுடைய சோம்பல் என்று குறைப்பட்டனர். அவனிடம் மற்றவர்களைக் காட்டிலும் சிறந்து விளங்குகின்ற குணங்கள் இருக்கின்றனவா என்று கேட்கப்பட்டபோது, முகம் மலர்ந்தான். அவனிடம் சில மாணவர்கள் அக்கறைகொள்ளத் துவங்கியதன் காரணம் அவனிடம் பழங்கலைப் பொருள்கள் (antiques) இருப்பதனுல் என்று கூறினுன். கடந்த ஆறு மாதங்களாக அவனுடைய செலவுப் பணத்தையெல்லாம் பழங்

கலைப்பொருள்கள் வாங்குவதில் செலவிட்டு வந்தான். சிறு உருவங்கள் (miniatures), கத்திகள், நாணயங்கள், தபால் வில்லைகள் ஆகிய பழங்கலைப் பொருள்களைப் பெற்முன். அவன் அவற்றின் வரலாற்றினைப் படிப்பதாகவும், அவ்வாருன வேலையில் வல்லுநனுகப் போவதாகவும் குறிப்பிட்டான்.

பழங்கலைப் பொருள்களைப் பெற்றிருந்ததனுல், இச்சிறுவன் மற்ற வகைகளில் அடையமுடியாத அந்தஸ்தினைப் பெற்முன். மற்ற மாணவர்களின் கவனம், அவன் பழங்கலைப் பொருள்களில் அக்கறை கொள்வதற்கு ஊக்கம் அளித்தது. அவன் சகமாணவர்களிடமிருந்து பெற்ற கவனத்தினுல், அவனுடைய அறிவாற்றலைப்பற்றி ஏற்பட்ட தாழ்வு மனப்பான்மை குறைந்தது.[28]

### சிறந்த அளவு உடல்நலத்தினைக் காப்பாற்றுதல்

உடல் நிலைகள் மனவெழுச்சி நலத்தில் கொள்ளும் விளைவு அண்மை ஆண்டுகளில் வலியுறுத்தப்பட்டுள்ளது. மனநோய்களைப் பற்றிய பௌதிக-வேதியியல் கொள்கைக்கு ஆதரவு பெருகுகின்றது. இருப்பினும், சூழ்நிலைச் சக்திகள், கற்றல் ஆகியவற்றின் செல்வாக்குகளைப் புறக்கணிக்கக்கூடாது. சில சுரப்பிகளின் செயல்களுக்கும் மனநோய்களுக்கும் இடையேயுள்ள நெருங்கிய தொடர்பு தெளிவாகக் காட்டப்பட்டுள்ளது. நாம் அனைவருமே களைப்பாக இருக்கும் பொழுது அல்லது வேறு உடலியல் தொல்லையினுல் அவதியுறும் பொழுது மிக விரைவில் எரிச்சல்கொள்ளுகிருேம் என்பதனைக் கண்டிருக்கிருேம். மேலும், விழிப்பான மருத்துவர்கள், நன்மை பயக்கத் தக்க மனநோக்கினைக் கொண்டிருத்தல் சிறப்பான உடல்நிலைகளை விளைவிக்கின்றது என்பதன் முக்கியத்துவத்தை உணரத் துவங்கி விட்டனர். ஆரோக்கியமுள்ள தனியனைக்காட்டிலும் நோயுற்ற தனியன் மனத்தொல்லைகளுக்கு மிக எளிதில் ஏதுவாகின்ருன். மனித உடல் என்பது ஒரு முழுமையாகும். அது நடத்தை வகையை முழுமையாக இணைத்துக்கொண்டு இருக்கிறது. ஆதலின், ஒரு பகுதியின் செயலில் சமநிலையை இழந்தால், மற்ற எல்லாப் பகுதிகளின் செயல்களிலும் விளைவுகளை உண்டாக்கலாம்.

தனியனை ஒரு முழுமையாகக் கருதவேண்டியிருப்பதால், அவனுடைய முழு வகையில் ஏதாவது ஒரு தவற்றின் காரணமாக அவனுடைய முழுமையான ஆளுமை பாதிக்கப்படுவதால், ஒருவருடைய ஆளுமையை ஆய்ந்துணர்வதற்கு ஆரோக்கியத் தேர்வினையோ அல்லது உடல் தேர்வினையோ நடத்தாது இருக்கக்கூடாது. நடத்

[28] M. Sherman, 'Mental Hygiene and Education.' New York: Longmans, Green and Co., 1934, p. 173.

தைக் கோளாறுகள், பள்ளி வேலையில் தோல்வி, சக மாணவர்களுடன் பொருந்துவதில் தோல்வி ஆகியவற்றை உணர்ந்துகொள்வதற்கு அவர்களின் உடல்நிலைகளின் பிறழ்வுநிலைகளையும், உடல்நிலைக் குறை பாடுகளையும் கண்டறியவேண்டும். ஒரு சிறுவன் மற்றவர்களுடன் பழகாமலும், பள்ளியிலுள்ள பல்வேறு பாடத்திட்டத்திற்கு வெளியே யுள்ள செயல்களில் ஈடுபடாமலும் இருந்தான். அவனை நன்றாக உடல் தேர்வு செய்ததில், அவனுடைய முழு ஆளுமையைப் பாதிக் கின்ற ஏதோ ஓர் உள்ளார்ந்த தொந்தரை இருந்தது. மற்றொரு சிறுவன் அவனுடைய பள்ளி வேலையில் எல்லாம் தோல்வியே அடைந்துவந்தான். அவனுடைய ஆசிரியரால் அவனுடைய சோம்பல் தன்மைக்கும் தோல்வி யடைந்ததற்குமுரிய காரணத்தினை அறிந்து கொள்ள முடியவில்லை. அவனைச் சோதித்ததில், அவனுக்குப் போதிய அளவு தூக்கமும் ஓய்வும் இல்லாததனால் செறிவான களைப்பினைக் கொண்டிருந்தான் என்று காட்டியது. மாணவர்கள் உணர்ச்சியடை கின்ற இயல்புடையவர்களாயும், சோம்பல் உடையவர்களாயும், சுத்தமாய் இல்லாதவர்களாயும், தலைமயிர் சீவாதவர்களாயும் இருந் தால், அவர்களது உடல்நிலையை நன்கு அறிந்துகொண்டால், அவர் களுடைய குணங்களுக்குரிய காரணத்தை அறியலாம்.

## தன்னைப் புரிந்துகொள்ளுதலும் ஏற்றுக்கொள்ளுதலும்

தன்னைப் புரிந்துகொள்ளுதலும் ஏற்றுக்கொள்ளுதலுமான பிரச் சினை, உண்மையைச் சந்திப்பதற்கு நெருங்கிய தொடர்பு கொண் டுள்ளது. இளையோன் தன்னைப் புரிந்துகொள்ளவேண்டும்; தன்னை ஏற்றுக்கொள்ளவும் வேண்டும்; அவனுடைய வரம்புகளை உணர்ந்து அவனுடைய திறமைகளைப்பற்றிய மதிப்பீட்டினையும் கொள்ளவேண் டும். இது தன்னைப்பற்றி மதிப்பிடுகின்ற விருப்பம், தப்பெண்ணம், வெறுப்பு, இசைவான இசைவில்லாத மனப்பான்மைகள் ஆகியவற்றி லிருந்து மீண்டு இருத்தல் வேண்டும். அவ்வாறான புறவயமான மனப்பான்மை, பாரபட்சமற்ற இயல்பு, உண்மைக்கு மனவெழுச்சி கலக்காத மதிப்புத் தருதல், சார்பு எண்ணமில்லாத முடிவுகள் ஆகிய வைகளைக் கொண்டிருக்க வேண்டும். இது தன்னைப்பற்றிய அறி வியல் மனப்பான்மையினால்தான் கிடைக்கப்பெறும். இது ஒருவேளை இளையோனிடமிருந்து மிக அதிகமாக எதிர்பார்க்கின்ற ஒன்றாய் இருக் கலாம். இருப்பினும், வளர்கின்ற தனியன் குற்றமற்ற அறிவுள்ள வழிகாட்டலைப் பெற்றால், உண்மைகளை அவைகள் எவ்வாறு இருக்க வேண்டும் என்று நினைக்கின்றானோ அவ்வாறின்றி, அவைகள் இருக் கின்ற நிலையிலேயே அவற்றின் தரத்தினை உணர்வான். முடிவாக அதன் பொருள் அவன் தன்னிடம் நேர்மையாக இருப்பான் என்பதே யாகும். 'நீ உன்னிடம் உண்மையாய் இருப்பாயானால், இரவுக்குப்

பின் பகல் தோன்றுவதுபோல், நீ எந்த மனிதனிடமும் உண்மை யற்று இருக்கமாட்டாய்', என்று ஒரு கூற்று இருக்கிறது.[24]

இவ்வாறான புறவயமான மனப்பான்மை குழந்தை இயற்கை யாகப் பெறுகின்ற குணமன்று. இது அவனது அனுபவங்களின் வாயி லாக வளர்ச்சியுறுவதேயாகும். குழந்தை தன்னுடைய தகுதியைப் பற்றி நியாயமான, சார்பெண்ணமற்ற மதிப்பீட்டினைக் கொள்ள வேண்டும் என்பதற்கு வழிகாட்டுதல் மிகவும் முக்கியமானதாகும். குழந்தையிடத்துப் புறவய நோக்கை உண்டாக்குவதற்குரிய முதல் படிகளில் ஒன்று, அவனுக்குப் புறத்தே பல நன்மை பயக்கத்தக்க அக்கறைகளை வளர்ப்பதேயாகும். அவன் தன்னுடைய சொந்தத் தகுதிக்கு ஏற்பத் தன்னை ஏற்றுக்கொள்வானேயானால், தேவையற்ற மனவெழுச்சிச் சிக்கல்களைத் தவிர்த்து இன்பமாயிருப்பான்.

## ஒருவருடைய பால்பங்கினைப் புரிந்துகொள்ளுதல்

குழந்தையின் பால் வாழ்க்கை பிறந்தவுடனேயே துவங்கிவிடு கின்றது. குழந்தைக்கு அவனது வயதுக்கும் தேவைகளுக்கும் ஏற்ற வாறு அறிவுறுத்துதல் பெற்றோர்களுடைய பொறுப்பாகும். குழந் தைக்கு நல்ல பழக்கங்கள் ஏற்படுவதற்குப் பயிற்சியளித்தலும் வேண் டும். தேவையான செய்திகளைப் படிப்படியாக அளிக்க வேண்டும். அது குழந்தையின் அறிவார்வத்திற்கும், அதனைப் புரிந்து கொள்வ தற்கு உள்ள திறனுக்கும் ஏற்ப உள்ள விகித அமைப்பில் இருக்க வேண் டும். 5 அல்லது 6 வயதுக் குழந்தைக்குத் தருகின்ற செய்தி, 12 வய துக் குழந்தைக்குத் தருகின்ற செய்தியினின்று தன்னுடைய அமைப்பி லும் உள்ளீட்டிலும் மாறுபட்டிருக்கும். ஆனால், ஒன்று மற்றொன்றுடன் இசைவான தொடர்பு கொண்டிருக்க வேண்டும். குழந்தை தன் னுடைய பெற்றோர்களிடத்துச் செய்திகளைக் கேட்பதற்குரிய சுதந் திரம் அளிக்கப்பட வேண்டும். குழந்தை தன்னிடம் உண்மையான பதிலையே அளிப்பார்கள் என்ற உணர்வையும் பெறுமாறு செய்ய வேண்டும். அவனுடைய விசாரணைகளை நேர்மையானவையாய்க் கருத வேண்டும். ஏனெனில், அவைகள் யாவும் இயற்கையான, மனவெழுச்சியற்ற அறிவார்வத்தினால் ஊக்குவிக்கப்பட்டவையாகும். இவ் வழியில் குழந்தை பால் பற்றிய சரியான மனப்பான்மையை உருவாக்கிக் கொண்டு பூப்படைதலுக்குத் தன்னைத் தயார் செய்து கொள்ளவியலும்.

இளையோர் பருவத்தில்தான் பால் பங்கு வளர்ச்சி யுறுகின்றது. அக் காலத்தில்தான் மாற்றுப் பாலாருடன் ஒரு திருப்தியான உற வினைப் பெறுதல் வேண்டும். அக் காலத்தில் தோன்றுகின்ற பிரச்

[24] Quoted from Shakespeare's 'Hamlet.'

சினைகளை உறுதியாகவும் ஆக்க வழியிலும் பயன்படுத்தினால், நல்ல ஆரோக்கியமான மனப்பான்மை உருவாகும்.

**சமூக உணர்வினை வளர்த்தல்**

குழந்தை சமூக இயல்பினனாகவோ அல்லது சமூகத்திற்கு எதிரானவனாகவோ பிறக்கவில்லை. அவன் இல்லம், பள்ளி, கோவில், தெருக்கள் ஆகிய இடங்களில் காணப்படுகின்ற பண்பாட்டு வகைகளைக் கொண்ட ஒரு சமுதாயத்தில் பிறந்து இருக்கிறான். முதலில் அவனைச் சுற்றியுள்ள பண்பாட்டினைக் கவனிக்காதவனாக இருக்கின்றான். இருப்பினும், அவனுடைய வாழ்க்கைத் துவக்கத்திலிருந்து அருகிலுள்ளவற்றுடன் அவன் முடிந்த அளவில் எதிர்வினை அளிக்கின்றான். அவனுடைய நடத்தை அவனுடைய அடிப்படைத் தேவைகளான உண்ணுதல், உறங்குதல், உடற்பயிற்சி போன்றவைகளை இயன்ற அளவு பெறுவதற்குக் கவனம் கொள்கின்றது. சமூக உணர்வு வாழ்க்கையின் இத் துவக்கப் பருவத்தில் அதிகமாய் அல்லது முழுமையாய் இல்லை. ஆரம்பப் பள்ளி ஆண்டுகளில் குழந்தைகள் குழு விளையாட்டுகளில் ஈடுபடும்போதுதான் சமூக உணர்வின் உண்மையான துவக்கம் ஏற்படுகின்றது. அவர்கள் வளர்ச்சியுறும்பொழுது, குழு அவர்களிடமிருந்து என்ன எதிர்பார்க்கிறது என்பதனை உணரத் துவங்குகின்றனர். அவர்கள் குழுவின் பல்வேறு உறுப்பினர்களிடம் எவ்வாறு நடந்துகொள்ளவேண்டும் என்பதைப்பற்றியும் உணர்ந்து கொள்கின்றனர்.

இளையோர் பருவம் வளர்ச்சியுற்ற சமூக உணர்வு தோன்றுகின்ற காலம் என்று விளக்கப்பட்டுள்ளது; இவ் வளர்ச்சியுற்ற சமூக உணர்வு முன்னிளையோர் பருவத்தில் குழுக்கள், சிறு குழுக்கள், சங்கங்கள் ஆகியவற்றைத் தோற்றுவிப்பதில் வெளிப்படுத்தப்படுகின்றது. இளையோர் பருவ காலத்தில் இது செறிவானதாகவும், விரிவடைந்தும் காணப்படுகின்றது. இளையோன் நல்ல பொருத்தப்பாடுடைய ஆளுமையினைப் பெற்று நிலைநிறுத்த வேண்டுமென்றால் அவன் துவக்கத் தன்முனைப்புள்ள தன்மையிலிருந்து மாறி, மற்றவர்களுடைய ஆளுமைகளை உணர்ந்து, பாராட்டக்கூடிய சமூக இயல்பினனாக வேண்டும்; அவனுடைய ஒப்பார் குழுவில் ஒரு பகுதியாக மாறுவதற்குரிய பற்றார்வத்தினைப் பெறுதல் வேண்டும்.

**வாழ்க்கையைப் பற்றி நிலையாயும் முழுமையாயும் இருக்கின்ற மெய்யுணர்வைப் பெறுதல்**

தனியன் வளர்ச்சியுற்று இளையோர் பருவத்தை அடையும் பொழுது, அவன் வாழ்கின்ற உலகத்தின் தன்மையைப்பற்றிய சில கருதுகோள்களைப் பெறுவதற்கான முயற்சியினைத் துவங்கியிருக்க

வேண்டும். வாழ்க்கையின் சில பயன்களைப்பற்றிய கருதுகோள்களை உணரத் துவங்கியிருத்தல் வேண்டும். இங்குதான் உண்மையான வாழ்க்கைக்குத் தொடர்புள்ள நம்பிக்கைகளும், உண்மைகளும் திறம் பட வேலைசெய்ய வேண்டும். இளையோன் வாழ்க்கைக்குப் பொருள் தரக்கூடிய சில நிலைத்திருக்கின்ற மனப்பான்மைகளை வளர்த்துக் கொள்வதற்கு உதவி தேவைப்படும். வாழ்க்கையிலுள்ள சில பொருள்கள் பல்வேறு மாறுபட்ட கருத்துகளைக் கொண்ட மத போதனைகளிலிருந்து முழுமையான கருத்தினைக் கொள்வதற்குத் தடையாயிருக்கும். இளையோன் மரபுவழி வந்த சமயக் கருதுகோள் களை ஏற்றுக்கொள்ளா வண்ணம் தடை செய்யக்கூடிய அளவு விஞ்ஞானத்தை அறிந்திருப்பான். ஆனால், அவை இரண்டையும் இணைக்கவல்ல அளவு விஞ்ஞானத்தைக் கற்றிருக்க மாட்டான். இவை இரண்டையும் ஒருமைப்படுத்த முயலுவதில் மூன்றுவது ஒன்றைச் சந்திக்கிறான். இப் பல்வேறு கருதுகோள்கள் குழப்பங்களையும் சிக்கல் களையும் உண்டாக்குகின்றன.

மெய்யுணர்வினைப் பயன் மதிப்புகளும், கருதுகோள்களும் கொண்ட தொகுதி எனக் கருதலாம். அது தனியனுக்கு ஒரு தரத் தினை அளிப்பதனால், அதன்மூலம் அவன் தெளிவாகப் புரிந்து கொள்ளவும் முக்கிய முடிவுகளைச் செய்யவும் முடிகின்றது.

அது முடிவுகளை உண்டாக்குவதற்கும், மதிப்பீடுகளைச் செய்வ தற்கும் அடிப்படையை அளிக்கின்றது. அவ்வாறான தரங்களைப் பெற் றிருப்பதனால், ஒருவனுடைய குறிக்கோள்களும் செயல்களும் வலு வானவையாகவும், மாறாத்தன்மையுடையவையாகவும் இருக்கின்றன. அதிகாரம் ஏழில் உள்ள பொருள்கள், இளையோர் பருவம் மனப் பான்மைகளையும் நம்பிக்கைகளையும் இணைக்கின்றன என்றும், வலு வாக்குகின்றன என்றும் குறிப்பிட்டன. ஒரு முழுமையான வாழ்க்கை மெய்யுணர்வு வளர்ச்சியுறுவதற்கு அது ஒரு பகுதியாகும். இளையோர் பருவ சிறுவர் சிறுமியர்கள் ஆரோக்கியமான, நல்ல பொருத்தப்பாட் டுடைய ஆளுமைகளைப் பெறுவதற்கு இவ் வாழ்க்கைபற்றிய மெய் யுணர்வு மிகவும் அவசியமாகும்.

## அதிகாரச் சுருக்கம்

வாழ்க்கை என்பது மாற்றத்தையும் பொருத்தப்பாட்டினையும் கொண்ட தொடர்ச்சியான செய்முறை என்று விளக்கப்பட்டுள்ளது. பிறந்த குழந்தை தாயினுடைய அடைக்கலத்திற்குட்பட்ட வாழ்க்கையி லிருந்து விரிவடைந்த சமூக, உலகச் சூழ்நிலையில் பல பொருத்தப் பாட்டுப் பிரச்சினைகளைச் சந்திக்கிறது. குழந்தைப் பருவத்தினின்று வளரும்பொழுது, புதிய பிரச்சினைகள் தோன்றி, அதிகமான தேவை களும் ஆசைகளும் தோன்றுகின்றன. குழந்தை மனமுறிவுகளைச்

சந்திக்கக் கற்றுக்கொள்கின்ற வகையானது இளையோர் பருவத்தி லுள்ள பொருத்தப்பாடுகளின் தொடர்பில் மிகவும் முக்கியமான தாகும்.

நமது பண்பாட்டில் இளையோர் பருவத்திற்கு வளர்ச்சியடைதல் தனியனிடம் சில உரிமைக் கோரிக்கைகளுடன் வருகின்றது. முத லாவதாக, அவன் அதிகமான பொறுப்பினை ஏற்றுக்கொள்ளவேண் டும். இவ்வாறு அதிகமான சுதந்திரத்தினையும் பெறுகிறான். இரண் டாவதாக, குழு நடத்தைகளில் இருக்கின்ற அக்கறை மாறி, மாற்றுப் பாலாரிடம் அக்கறை ஏற்படவேண்டும். மூன்றாவதாக, அவனுடைய சொந்தத் திறமைகளும் வரம்புகளும் பொருந்தி அமையவேண்டும். நான்காவதாக, அவன் உண்மையைச் சந்திக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்.

இளையோர் பருவம் மன-உடல் ஆரோக்கியத்திற்கு ஆபத்து விளைவிக்கின்ற பருவம் என்று விளக்கப்பட்டுள்ளது. பல ஆரோக்கிய இடையூறுகள் இவ் வயதில் தோன்றுகின்றன. இளையோன் இவற் றினைச் சந்திப்பதற்கு வழிகாட்டல் தேவைப்படுகின்றது. மன-ஆரோக்கியத்திற்குரிய சிறப்பான காலம் என்று குழந்தைப் பருவத் தினைக் கருதுகின்றார்கள். இக் காலத்தில் இசைவான பொருத்தப் பாடுகள் ஏற்படுவதற்குத் தேவையான மனப்பான்மைகள் உருவா கின்ற நிலையில் இருக்கின்றன. இவற்றில் பல போதிய அளவு உருவாகி, பிற்காலத்தில் சிறப்பான பொருத்தப்படுகள் உண்டா வதற்கு உதவியோ ஊறோ செய்கின்றன.

இளையோர் பருவத்தில் புதிய உணர்வுகள் தோன்றுவதற்குரிய அடிப்படையை உடலிலுள்ள சில உள்ளுறுப்புகளின் வளர்ச்சி, குறிப் பாகப் பால் தொடர்புள்ள சுரப்பிகளின் வளர்ச்சி அளிக்கின்றது. இவ்வளர்ச்சி இளையோனுக்கு மற்றவர்களுடன் கொள்ளக்கூடிய தொடர்பினைப்பற்றிச் சிறப்பானதும் முழுமையானதுமான புரிந்து கொள்ளுதலை அளிக்கின்றது என்பதில் ஐயமில்லை. இவ் வளர்ச்சி மாற்றுப் பாலாரை வியந்து பாராட்டுதலையும் அளிக்கின்றது. உண் மையில் அவன், "அவனது சொந்த சமூகச் சூழ்நிலையிலுள்ள எல்லா நிலைகளிலும் புதிய வளர்ச்சியுற்ற உணர்வினை அனுபவிக்கின்றான். முன்னைய அதிகாரங்களில் குறிப்பிட்டபடி அவன் இப்பொழுது அவனைப்பற்றி மற்றவர்கள் தருகின்ற பொதுவான அனுமதிக்கேற்ப நடந்துகொள்கிறான். அவனுடைய சொந்தக் குணங்களைப்பற்றி இப் பொழுது மிகவும் எச்சரிக்கையான ஆய்வினை நடத்தத் துவங்குகிறான். அவன் அடைவினைப் பெறுவதற்குத் தோல்வியை எண்ணி அஞ்சி, சமூக அனுமதியின்மை, மற்றவர் நையாண்டி ஆகியவற்றைக் கருதி, மிகவும் பரவலான முயற்சியினை எடுக்கின்றான். இவ்வாறு முதிர்ச்சி யடைகின்ற, தன்னைப் பொருத்தி அமைப்பதற்கு எடுத்துக்கொள்ளு

கின்ற முயற்சி, இளையோர்களுக்குச் சில முக்கியப் பிரச்சினைகளை அளிக்கின்றது. இசைவான சொந்த, சமூகப் பொருத்தப்பாடு, (1) தன்னை ஏற்றுக்கொள்ளுகின்ற விருப்பமும் திறமையும், (2) நன்ருய் இருக்கின்றன என்ற உணர்வு (தான் எனும் உணர்வின் கலப்பு), (3) தற்காப்பு, சுதந்திரம், சமூக அனுமதி ஆகிய தேவைகள் பூர்த்தியாதல்—ஆகியவற்றைப் பெரிதும் பொறுத்துள்ளது.

## சிந்தனைக்குரிய பிரச்சினைகள்

1. மன-ஆரோக்கியம் என்னும் சொல்லுக்குரிய பொருளினை அறிக. மன-ஆரோக்கியத்தை உடல்-ஆரோக்கியத்தினின்று ஏன் பிரித்துணர முடியாது?

2. தற்கால வாழ்க்கையின் அழுத்தமும் களைப்பும் இளையோர்களது உடல், மன ஆரோக்கியத்தை எவ்வாறு பாதிக்கும் என்று காட்டுக.

3. இளையோர் ஆரோக்கியத்திலுள்ள சில முக்கியப் பிரச்சினைகள் யாவை? வாழ்க்கையின் இத்தனித்த பருவத்திற்குரிய சிறப்பான பிரச்சினைகளாக இவற்றில் ஏதாகிலும் சிலவற்றைக் கருதலாமா?

4. நீ அறிந்த பல ஆசிரியர்களை எண்ணி, அவர்கள் வகுப்பறையில் கொள்ளும் தொடர்புகளினுல் ஏற்படுகின்ற மன-ஆரோக்கிய உறவுகளை மதிப்பிடுக. இவ்வாசிரியர்களிடம் அடிக்கடி தோன்றுகின்ற பிரச்சினைகள் அல்லது தொல்லைகள் யாவை?

5. ஆரோக்கியமான சொந்த வாழ்க்கையில் தொடர்புகொண்டுள்ள தேவைகளும் கருத்துகளும் எவ்வாறு இடைத்தொடர்புகள் கொண்டிருக்கின்றன என்று காட்டுக.

6. இளையோன் தன்னைப் புரிந்துகொள்ளுதலிலும், தன்னை ஏற்றுக்கொள்ளுதலிலும் சந்திக்கின்ற தடைகள் யாவை?

7. நிலையாய் இருக்கின்ற முழுமையான வாழ்க்கை மெய்யுணர்வு வளர்ச்சியின் முக்கியமான தேவைகள் என்ன? அவ்வாருன வாழ்க்கை மெய்யுணர்வு உன்னிடம் ஏற்படுவதற்கு மிகவும் உதவியாயிருந்த பாராட்டுகளும் அல்லது சக்திகளும் யாவை? உமக்கு இவை என்ன பயன்மதிப்புகளை அளித்தன?

8. 'மருத்துவர் கண்ணோட்டத்தில்' என்ற கூற்றிற்குரிய பொருளினைத் தருக. ஆசிரியர்கள் இவ்வாறான கண்ணோட்டத்தினைக் கொள்வது எவ்வாறு இசைவானதொன்றாகும்?

9. இந்நூல் முழுதும் அளிக்கப்பட்டுள்ள வளர்ச்சிக் கருத்து எவ்வாறு மன-ஆரோக்கியப் பிரச்சினைகளினால் உண்டானது என்று காட்டுக.

10. உனது சமுதாயத்திலுள்ள பண்பாட்டுச் சூழ்நிலைக்கு ஏற்றவாறு நல்ல மன-ஆரோக்கியத்தினை அமைக்கக்கூடிய வழிகளைக் கூறுக.

11. இளையோர்களுடைய மனநலத்தைப் பாதிக்கவல்ல சில நல்ல, பள்ளி அழுத்தங்களை வரிசைப்படுத்துக.

12. இவ்வதிகாரத்தில் தரப்பட்டுள்ள ஸ்டெல்லா என்ற சிறுமியின் வரலாற்றினை நன்றாகப் படிக்கவும். ஸ்டெல்லா போன்ற பத்து வயது சிறுமியினைப் பயந்த தன்மையுடையவளாக ஆக்கக்கூடிய நிலைகள் யாவை? ஆசிரியர் ஸ்டெல்லாவுக்கு உதவிசெய்யப் பயன்படுத்திய முறைகளை மதிப்பிடுக.

13. நீ அறிந்த சில சமுதாய வகுப்பினைக் கருதுக. இச் சமுதாயத்தின் சில முக்கிய ஆரோக்கிய இடையூறுகளும் பிரச்சினைகளும் எவை? இந்நூலில் தொகுக்கப்பட்டுள்ள இனங்களின் அடிப்படையில் பள்ளி ஆரோக்கியத் திட்டத்தினை மதிப்பிடுக.

## தெரிவுசெய் நூற்பட்டியல்


1. Bernard, W. H., 'Mental Hygiene for Class-room Teachers.' New York: McGraw-Hill Book Co., 1952.

2. Chenoweth, L. B. and T. K. Selkirk, 'School Health Problems' (Fourth Edition). New York: Appleton - Century - Crofts, Inc., 1953.

3. Cole, L., 'Psychology of Adolescence' (Fourth Edition). New York; Rinehart and Co., Inc., 1954, Chap. 4.

4. Cruze, W. W., 'Adolescent Psychology and Development.' New York: The Ronald Press Co., 1953, Chap. 17.

5. 'Fostering Mental Health in Our Schools'. Yearbook of the Association for Supervision and Curriculum Developmet, 1950.

6. Joint Commission on Health Problems of the National Education Association and the American Medical Association, 'School Health Services'. Washington: National Education Association, 1953.

7. Malm, M. and O. G. Jamison, 'Adolescence.' New York: McGraw-Hill Book Co., 1952, Chap. 9.

8. 'Mental Health in Modern Education.' The Fifty-fourth Yearbook of the National Society for the Study of Education, Part II, 1955.

9. Lindgren, H. C., 'Mental Health in Education.' New York: Henry Holt and Co., 1954.

10. Redl, F., and W. Watterberg, 'Mental Hygiene in Teaching.' New York: Harcourt, Brace and Co., 1952.

11. Steckle, L. C., 'Problems of Human Adjustment.' New York: Harper and Bros., 1949.

12. Symonds, P. M., 'Adolescent Fantasy.' New York: Columbia University Press, 1949.

13. Thorpe, L. P., 'Child Psychology and Development,' (Second Edition). New York: The Ronald Press Co., 1955, Chap. 15.

14. Turner, C. E., 'School Health and Health Education' (Second Edition). St. Louis: C. V. Mosby Co., 1952.

15. Witty, P. A. and C. E. Skinner, 'Mental Hygiene in Modern Education.' New York: Farrar and Rinehart, 1939.